சிவமயம்.

# மதுரைக்காண்டப் படல அகராதி.



| பக்கம். | படலம். | | செய்யுட்டொகை |
|---|---|---|---|
| ௧ | காப்பு | ... | ௧ |
| ௪ | பாயிரம் | ... | ௩௦ |
| ௩௨ | பாண்டித் திருநாட்டுப்படலம் | ... | ௬௦ |
| ௬௧ | திருநகரப்படலம் | ... | ௧௦௬ |
| ௧௦௭ | திருக்கைலாயப்புகழ்ச்சி | ... | ௭ |
| ௧௧௦ | புராணவரலாறு | ... | ௨௫ |
| ௧௨௦ | தலவிசேடம் | ... | ௨௩ |
| ௧௨௮ | தீர்த்தவிசேடம் | ... | ௩௬ |
| ௧௩௯ | மூர்த்திவிசேடம் | ... | ௩௭ |
| ௧௫௨ | பதிகம் | ... | ௧௫ |
| ௧௫௭ | இந்திரன்பழிதீர்த்தபடலம் | ... | ௯௭ |
| ௧௮௫ | வெள்ளையானைச்சாபந்தீர்த்தபடலம் | ... | ௩௧ |
| ௧௯௫ | திருநகரங்கண்டபடலம் | ... | ௪௭ |
| ௨௧௩ | தடாதகைப்பிராட்டியார்திருவவதாரப்படலம் | ... | ௮௧ |
| ௨௪௩ | திருமணப்படலம் | ... | ௧௯௯ |
| ௩௧௬ | வெள்ளியம்பலத்திருக்கூத்தாடியபடலம் | ... | ௨௮ |
| ௩௨௬ | குண்டோதரனுக்கு அன்னமிட்டபடலம் | ... | ௨௨ |
| ௩௩௧ | அன்னக்குழியும் வைகையுமழைத்தபடலம் | ... | ௨௭ |
| ௩௩௮ | எழுகடலழைத்தபடலம் | ... | ௧௫ |
| ௩௪௨ | மலயத்துவசனையழைத்தபடலம் | ... | ௩௧ |
| ௩௫௨ | உக்கிரபாண்டியர் திருவவதாரப்படலம் | ... | ௪௫ |
| ௩௬௬ | வேல்வளைசெண்டுகொடுத்தபடலம் | ... | ௬௬ |
| ௩௮௫ | கடல்சுவற வேல்விட்டபடலம் | ... | ௨௦ |
| ௩௯௧ | இந்திரன்முடிமேல்வளையெறிந்தபடலம் | ... | ௫௯ |
| ௪௦௮ | மேருவைச்செண்டாலடித்தபடலம் | ... | ௪௧ |
| ௪௨௦ | வேதத்துக்குப்பொருளருளிச்செய்தபடலம் | ... | ௪௨ |
| ௪௩௬ | மாணிக்கம்விற்றபடலம் | ... | ௯௩ |
| ௪௬௭ | வருணன்விட்ட கடலைவற்றச்செய்தபடலம் | ... | ௧௯ |

சிவமயம்.

சுத்தசைவராகிய

# ஸ்ரீ பரஞ்சோதிமாமுனிவர்

## சரித்திர சங்கிரகம்.



காவிரிநதியானது பல்வளங்களையும் பரவச்செய்யும் சோழவளநாட்டில், வேதாரண்ணியமென்னுந் திருமறைக்காட்டில், சுமார் இருநூற்றறுபதுவருடங்கட்குமுன், பரம்பரைச் சைவவேளாளர்மரபிலே, சைவாசாரியராய் மீனாக்ஷிஸுந்தரதேசிகர் என்றொருவரிருந்தார். அவரது அருந்தவப்பயனால் புத்திரராக அவதரித்த பரஞ்சோதிமுனிவர் இளம்பருவத்திலேயே கல்வி அறிவு ஒழுக்கங்களாற் சிறந்து, தன் தந்தையாரிடத்தே சமய விசேட நிருவாண தீக்ஷைகள் பெற்று, சிவாகமங்களையும், அவற்றின் சாரமாகிய சித்தாந்த சாஸ்திரங்களையும், தேவாரமுதலிய அருட்பாக்களையும் ஓதியுணர்ந்து, சிவபக்தி முதிர்ச்சியுற்று, தமது ஜனன க்ஷேத்திரமாகிய வேதாரண்ணியத்திலேயே வாசஞ்செய்துகொண்டிருந்தபொழுது, வேதபுருஷனாற் பூசிக்கப்பட்டதாகிய அந்த வேதாரணியத்தலபுராணத்தை மொழிபெயர்த்தருளினர்.

முனிவர் சிறிதுகாலம் பொறுத்து சிவஸ்தலயாத்திரைசெய்யப்புறப்பட்டு, பஞ்சபூதஸ்தலங்களாகிய விராட்புருஷனுக்கு மூலாதார ஸ்தானமாகிய திருவாரூரையும், ஸ்வாதிஷ்டானதானமாகிய திருவானைக்காவையும், மணிபூரகஸ்தானமாகிய திருவண்ணாமலையையும், அநாகதஸ்தானமாகிய ஸ்ரீசிதம்பரத்தையும், விசுத்தி ஸ்தானமாகிய திருக்காளத்தியையும், மற்றும் சில தெய்வீகஸ்தலங்களையும் சேவித்துப் பிறகு, விராட்புருடனுக்குத் துவாதசாந்தத்தலமும், மூர்த்தி ஸ்தலம் தீர்த்தமென்னும் மூன்றுசிறப்புகளுமுற்றதும், எத்தலத்தையுஞ்சிருட்டிக்குமுன் சிவபெருமானால் திருவிளையாடல் செய்தற்பொருட்டு முதலிலேயே சிருட்டிக்கப்பட்டதும், மேருமலை - மந்தரமுதலியவிடங்களில் சிவலிங்கப்பெருமான் முளைப்பதற்குமுன் மூலலிங்கமூர்த்தி முளைத்தருளியிருப்பதும், உமாபிராட்டியார் சிவபெருமான் இவர்கள் குமாரர் என்னு மூவரால் அரசுசெய்யப்பெற்றதும், எல்லாத்தீர்த்தங்கட்கும் மேலான பொற்றாமரைத் தீர்த்தத்தை யுடையதும், திருஞானசம்பந்தமூர்த்திசுவாமிகளும், "முளைத்தானை யெல்லார்க்கு முன்னே தோன்றி முதிருஞ்சடை முடிமேன் முகிழ்வெண் டிங்கள் - வளைத்தானை வல்லசுரர் புரங்கண் மூன்றும் வரைசிலையா வாசுகிமா நாணுக் கோத்து - துளைத்தானை சுடுசரத்தாற் றுவள நீறுத் தூமுத்த வெண்முறுவ லுமையோ டாடி - திளைத்தா

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

ஸ்ரீ மீநாக்ஷிஸுந்தரேஸாயநம:

---

# திருவிளையாடற்புராணம்

## மூலமும் - உரையும்.



## மதுரைக்காண்டம்.

### காப்பு.

#### கலிவிருத்தம்.

சத்தி யாய்ச்சிவ மாகித் தனிப்பர
முத்தி யான முதலைத் துதிசெயச்
சுத்தி யாகிய சொற்பொரு ணல்குவ
சித்தி யானைதன் செய்யபொற் பாதமே.

(இதன்பொருள்.) சத்தியுமாகிச் சிவமுமாகி ஒப்பற்ற மேன்மை தங்கிய முத்தியுமாகி விளங்கிய முழுமுதற்கடவுளாகிய பரசிவத்தைத் தோத்திரஞ்செய்ய, (பெயர் வினைமுதலிய நால்வகைச்) சொல்லையும், (அகம் புற மென்னு மிருவகைப்) பொருளையும், சித்திவிநாயகக்கடவுளது செவந்த பொன்போன்ற திருவடிகள் பிரசாதிக்கும். என்றவாறு.

"சேடு தாங்குமூ வுலகினிற் சிறந்தன சத்தி - பீட மூவிரு பத்துநான் கவற்றின்முற் பீட - மாட மோங்கிய மதுரை" என இந் நூலிலேயே பின்னர் வருவதற்கேற்ப இத்தலம் சத்திபீடங்கள் அறுபத்துநான்கனுள் முதற்பீடமாய்ச் சத்தியாதிக்கமுடையதெனச் சுட்டிச் சத்தி யென்பதையே மங்கலமொழியாகக்கொண்டு "சத்தியாய்" எனவும், திருவருட்சத்தியினாலேயே சிவத்தி னிலைமை யுணரவேண்டுதலின், சத்தியாய் என்றதன் பின்னர் "சிவமாகி" எனவும், பரசிவத்தின் நிலைமை யுணர்ந்த பின்னரே முத்திபெற இயலுமாதலின் அதன்பின்னர் "முத்தியான" எனவும், அவ்வாறு சத்தி சிவம் முத்தியாய் விளங்கும் பரமசிவன் தனக்கெனச் சுதந்தரவிலக்கணமாக நாமரூபாதிகளை யுடையனல்லனாயினும், ஆன்மாக்களின் வினைக்கீடாகத் தநுகரண புவன போகங்களைப் புசிப்பித்தல் காரணமாக லீலாமாத்திரையாய் நிற்றலானும், அல்லலாந் தொழில்படைத்தே யடிக்கடி யுருவெ டுத்தே மல்லன்மா ஞாலங் காக்க வருந் திருமால் பிரம இந்திராதி சிலதேவர்போலாது, அகிலாண்டகோடிகளிலுமுள்ள சர்வான்மாக்கட்குந் தாயகமாதலானும் "முதல்" எனவும், அவ் விறைவனைத் தோத்திரஞ்செய்தற்கு அவன் வடிவாகிய சொல்லும் பொருளும் இன்றியமையாத உபகரணங்களாக வேண்டுதலின் "துதிசெயச் சுத்தியாகிய சொற்பொருள்" எனவும், அவற்றை முட்டின்றித் தொடுத்து முடித்துப் பயன்பெறுதற்கு ஒரு காரணப்பொருள்

வேண்டுதலின் "சித்தி யானைதன் செய்யபொற் பாதம்" எனவும், அவ்விநாயகரது திருவடிகள் எண்ணியவற்றை எண்ணியாங்களிக்கும் வல்லபமுடைமையின் "நல்குவ" எனவுங் கூறினார்.

பூர்வம் அங்கயற்கண்ணம்மையார் விச்சாவதி யென்பவ ளியற்றிய அருந்தவத் திற் கிரங்கிக் காட்சிகொடுத்தருள, அவள் அம்மையின் மூவாண்டைக் குழந்தைவடிவிற் களிகூர்ந்து "அன்னையே! இம் மகவுருவாகச் சிறந்துவந் தென்பால் வளர்ந்து இனி திருப்பத்திருவுளஞ்செய்" என வேண்ட, தேவியார் "தென்னவர் மன்னனும் மலயத்துவசனென் றொருவன் வருமவன் கற்பின் றுணைவியாய் வருதி யப்போ துன் தவ மகவாகவருவல்" என வரமளித்து அவ்வாறே தடாதகைப்பிராட்டியாராகத் திருவவதாரஞ் செய்து கன்னிப்பருவத்திலே தென்னனாட் டரசுபுரிந்து திக்குவிசயஞ்செய்து இறைவனை மணந்து தன்னரசுதந்தமையும், அவ்வெம்பெருமான் ஸ்ரீ சோமசுந்தர பாண்டியனெனத் திருக்கோலங்கொண்டு பின்னர் அரசுசெய்து, உக்கிரபாண்டியனைத் தந்து பல்வகைத்திருவிளையாடல் புரிந்தமையுந்தோன்ற "சத்தி யாய்ச்சிவ மாகித் தனிப்பர முத்தி யான முதல்" எனக்கூறினாரெனினும் பொருந்தும்.

"வழிபடு தெய்வ வணக்கங் கூறி - மங்கல மொழிமுதல் வகுத்தெடுத்துக் கொண்ட - இலக்கண விலக்கிய மிடுக்க ணின்றி - இனிது முடியு மென்மனார் புலவர்." என்பது சூத்திரமாகலின், இத்தலைச்செய்யுள் வழிபடு தெய்வவணக்கக் கூறியதெனக் கொள்க.

எல்லாக் காரியமுஞ் செய்யத் தொடங்குவோர் அஃது நிர்விக்கினமாக நிறைவேறற்பொருட்டு விநாயகனை வணங்குதல் மரபாதலின் இந் நூலாசிரியரும் தாமெடுத்துக்கொண்ட **ஆலாஸ்ய மான்மிய மொழிபெயர்ப்பு** முட்டின்றி முடிதற் பொருட்டு முதற்கண் விநாயக வணக்கங் கூறினர்.

## அதன் வரலாறு.

பூர்வத்திற் கயமுகாசுரன் தான் பெற்றுள்ள வரத்தி னிறுமாப்பாற் பிரமாதி தேவர்கட்கெல்லாம் விபத்துசெய்துவர, தேவர்களதனைச் சகியாதவர்களாகி ஒருங்குகூடித் திருக்கைலாயமலையை யடைந்து திருநந்திதேவர் கட்டளை பெற்றுத் திருச்சந்நிதானத்தினுட் சென்று சிவபெருமானைத் தரிசித்துத் தமக்கு நேர்ந்த குறைகளை விண்ணப்பஞ்செய்து முறையிட, சிவபெருமான் "அவன் எம்மை நோக்கி அரிய தவஞ்செய்து தேவர் - அசுரர் - மனிதர் - மிருகங்கள் முதலியோரால் இறவாதிருக்க வரம்பெற்றனன். ஆனால் தன துருவாகி வருவோனு லிறவாதிருக்க வரங் கேட்டானில்லன். நாம் மாறுபட்ட திருமேனியாக யானைமுகத்தொடு சென்று அவனை யடக்குவோம்" என் றவர்கட்கு விடைகொடுத் தனுப்பி, பார்வதிதேவியாருடன் அப் பர்வதத் தருகிலுள்ள சித்திரச்சாலையை யடைந்து அங்கு விச்சுவகன்மனால் எழுதப்பட்டுள்ள மந்திர வடிவமாகிய சித்திரங்களைப் பார்வதிதேவியாருக்குக் காட்டி "பெண்ணே! முதலிலுள்ள பிரணவாகாரமாகிய இரண்டு யானைகளில், முற்பட்டது திரிமூர்த்திகளையுந் தந்தது. அஃது தெம் வடிவம். அடுத்தது சத்திகள் மூவரையுந் தந்தது. அஃது துன்வடிவம். ஆதலின் யாம் அப்பிரணவச்சித்திரங்களின் வடிவமாகுதும்" என்று திருவாய்மலர்ந்தருள, உமாதேவியாரும் அக்கருத்துக் கிசைந்தனர். அப்பொழுது இறைவர் ஆங்கோர் திருவிளையாடலைச் செய்ய, அதனா லப் பிரணவ வடிவத்தினின்றும் விநாயகர் திருவவதாரஞ்செய்தனர். பிறகு விநாயகனைக் கைலைமலையிற் கொடுவந்து மகுடஞ் சூட்டி "உன்னை வணங்கி யுன தருள்கொண்டு செய்யுங் கருமங்களை நிறைவேற்றவும், வணங்காது செய்யுங் கருமங்களைத் தவிர்க்கவும், உனக்கு விக்

னைவிநாயக னெனப் பெயர்தந்தோம்" என்று திருவாய்மலர்ந்தருளி, தேவர்களைப் பார்த்து "இவன் நமது மூத்தபிள்ளை இவனை எம்மைப்போன் றுபசரியுங்கள்" எனக் கட்டளையிட் டருளினர். பிறகு தேவர்கள் கயமுகனது கொடுந்துயர்பொறாது விநாயகக்கடவுளை யுபாசிக்க, அவர் அவ்வசுரனோடு போர்செய்து அவ னெவ்வகை யாயுதங்களாலு மிறவாதவனாதலின் தமது கொம்பை யொடித் தெறிய அவன் பெருச்சாளிவடிவாயினன். அதனை விநாயகர் வாகனமாகக்கொண்டனர் என்பது. இதனை,

விநாயகபுராணம் - கயமுக னுற்பத்திபடலம்.

"வானி நாட்டுறை யும்பரான் மன்னுமா னிடராற்
றான வர்குலத் தவர்களான் மற்றுளோர் தம்மாற்
கான கத்துறு விலங்கினாற் கருதுயி ரிறந்தே
யீன முற்றிடா வகையுமெற் கீந்தரு ளென்றான்."

"மும்ம தம்பொழி கறையடிக் கைம்மலை முகமுடை யசுரன்றான்
றம்மு ருத்தனில் விளிந்திடா வரமெமைக் கேட்டில னதுதனாற்
றெம்மு னைக்கடி னின்னையா தியர்களாற் றீர்கிலாத் தீயோனைச்
செம்மை மிக்குயர் கரிமுகத் திறைவனாய்ச் சென்றடு கிற்பேமால்."—எனவும்,

ஷை-திருவவதாரப்படலம்.

"முராரி யாதிய தேவர்கண் முதலுறு முழுதுல கினிலுள்ளோர்
விராவி யாதொரு காரிய மாயினும் விளங்குறச் செயவென்றே
பராவி யுன்னருச் சனைசெய்வோர் மனத்துறு பான்மைதந் தருளுன்னன்
பிராது செய்பவர் காரிய மூறுசெய் திடுதியென் றிவைசொன்னான்."—

எனவும்,

ஷை-கயமுகனுற்பத்திபடலம்.

"நின்றவன் றன்னை நோக்கி நெடியபல் படைக ளேவிற்
சென்றிவன் றன்னைக் கொல்லா சிவனருள் வரத்தின் சீரா
லின்றினிச் செய்வ தென்னென் றிறைவனா யுன்னி யெந்தை
தன்றிருக் கோட்டி லொன்று தடக்கையின் முரித்துக் கொண்டான்."
தடக்கையி லேந்துங் கோட்டைத் தந்தியா மவுணன் மீது
விடுத்தலு மனையன் மார்பை வெய்தெனக் கீண்டு போகி
யுடற்படி மிசையே வீழ்த்தி யொல்லையி லோடித் தெண்ணீர்க்
கடற்படிந் தமலன் மைந்தன் கரத்தில்வந் திருந்த தன்றே."—எனவும்

வருவனவற்றா னுணர்க.

உருவத்திற் சிறந்த உறுப்பு முகமாகலின் விநாயகரை யானையென்றார். சித்திவிநாயகர் என்பது விநாயகக்கடவுளுக்கு அத்தலத்தில் வழங்குந் திருநாமம். இஷ்டசித்திகளை யருள்செய்வோ ரெனவும் பொருள்படும்.

இச் செய்யுளிற் பாதம் என்னும் எழுவாய் நல்குவ வென்னும் பயனிலை கொண்டது. சொல்பொருள் என்பன செயப்படுபொருள். (க)

# பாயிரம்.

## வாழ்த்து.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

மல்குக வேத வேள்வி வழங்குக சுரந்து வானம்
பல்குக வளங்க ளெங்கும் பரவுக வறங்க ளின்ப
நல்குக வுயிர்கட் கெல்லா நான்மறைச் சைவ மோங்கிப்
புல்குக வுலக மெல்லாம் புரவலன் செங்கோல் வாழ்க.

(இ-ள்.) வேத முறையாற் செய்யும் யாக கருமங்கள் (குறைபாடின்றி) நிறைக. (அவ் யாகங்களால்) மேகங்கள் சூல்கொண்டு மழை பொழிக. (அந்நீர்ப்பெருக்கினால்) எல்லாவிடத்திலும் பல்வகைப்பட்ட வளங்களும் பெருகுக. (அவ் வளப்பங்களால்) தருமங்கள் (முப்பத்திரண்டும்) அபிவிருத்தியாகுக. (அவ்வகையான தருமங்களால்) ஆன்மாக்கட்கெல்லாம் சுகம் உண்டாகுக. (இருக்கு - யசுர் சாமம் - அதர்வண மென்னும்) நான்கு வேதங்களிலுங் கூறப்பட்டுள்ள சைவசமயமானது மேம்பட்டு உலக முழுவதும் நிலைபெறுக. (இவ்வகையான கருமங்கள் நிகழும்படி நீதியோடு அரசு செய்யும்) மன்னவனது செங்கோல் வாழ்க. எ-று.

இச்செய்யுளை "வேதவேள்விமல்குக. வானம் சுரந்து வழங்குக. வளங்களெங்கும் பல்குக. அறங்கள் பரவுக. உயிர்கட்கெல்லாம் இன்பம் நல்குக. நான்மறைச் சைவமோங்கி உலகமெல்லாம் புல்குக. புரவலன் செங்கோல் வாழ்க." என அந்வயங் கொள்க.

வானம் இடவாகுபெயராய் மேகத்தை யுணர்த்திற்று.

அறம் முப்பத்திரண்டுவகைப்படும். அவையாவன :— ஆதுலர்க்குச்சாலை - ஓதுவார்க்குணவு-அறுசமயத்தார்க்குண்டி - பசுவுக்குவாயுறை-சிறைச்சோறு - ஐயம் - தின்பண்டநல்கல் - அறவைச்சோறு - மகப்பெறுவித்தல் - மகவுவளர்த்தல் - மகப்பால்வார்த்தல் - அறவைப்பிணஞ்சுடுதல் - அறவைத்தூரியம் - சுண்ணம் - நோய்மருந்து - வண்ணான் - நாவிதன் - கண்ணாடி - காதோலை-கண்மருந்து-தலைக்கெண்ணெய் - பெண்போகம் - பிறர்துயர்காத்தல் - தண்ணீர்ப்பந்தல் - மடம்-தடம் - சோலை-ஆவுரிஞ்சுதறி - விலங்கிற்குணவு - ஏறுவிடுத்தல் - விலைகொடுத் துயிர்காத்தல் - கன்னிகாதானம்,—என்பனவாம்.

"நான்மறை சைவம்" எனப் பாடமாயின், நான்கு வேதங்களும் சைவமுமென்றுபொருள்படும். வேதம் வேறு சைவம் வேறெனக் கொள்ளாது "வேதமொடாகம மெய்யா மிறைவனூல் - ஓதுஞ் சிறப்பும் பொதுவுமென் றுள்ளன - நாதனுரையவை நாடிலிரண் டந்தம் - பேதம தென்பர் பெரியோர்க்க பேதமே" எனவரும் திருமந்திரத்தானும், "வேதநெறிதழைத்தோங்க மிகுசைவத் துறைவிளங்க" எனக் கூறும் திருத்தொண்டர் புராணத்தாலும், "ஒரும்வே தாந்தமென் றுச்சியிற்பழுத்த - ஆரா வின்ப வருங்கனி பிழிந்ததின்-சாரங் கொண்ட சைவசித் தாந்தம்"என்னும் குமரகுருபரசுவாமிகள் திருவாக்கானும், "வைதிகசைவம்" என வழங்குவதானும், அறிக.()



## நூற்பயன்.

### எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

திங்களணி திருவால வாயெம் மண்ண றிருவிளையாட் டிவையன்பு செய்து கேட்போர், சங்கநிதி பதுமநிதிச் செல்வ மோங்கித் தகைமைதரு மகப்பெறுவர் பகையை வெல்வர், மங்கலநன் மணம்பெறுவர் பிணிவந் தெய்தார் வாழ்நாளு நனிபெறுவர் வானு டெய்திப், புங்கவரா யங்குள்ள போக மூழ்கிப் புண்ணியராய்ச் சிவனடிக்கீழ் நண்ணி வாழ்வார்.

(இ-ள்.) சந்திரனை (சிரோமாலையாகத்) தரித்த திருவாலவாயில் வீற்றிருக்கின்ற எமது தலைவராகிய சோமசுந்தரக்கடவுளது (அறுபத்துநான்கு) திருவிளையாடல்களாகிய (இந்நூலுட் கூறப்படும்) இவற்றைப் பக்திசெய்து கேட்கின்றவர்கள், சங்கநிதியைப்போலும் பதுமநிதியைப்போலுஞ் செல்வத்தினுல் மேம்பட்டு, நல்லொழுக்கமமைந்த மைந்தர்களைப் பெறுவார்கள் ; சத்துருக்களைச் செயிப்பார்கள் ; மங்கலகரமாகிய நல்ல விவாகம்பெறுவார்கள் ; நோய்ச்சம்பந்த மடையார்கள் ; மிகத் தீர்க்காயுவையும்பெறுவார்கள் ; (பிறகு) தேவருலகடைந்து தேவர்களாய் அங்குள்ள போகங்களை யனுபவித்துச் சிவபுண்ணிய மேலிட்டவர்களாய்ச் சிவபெருமானது திருவடிநீழலிற் பொருந்தி வாழ்வார்கள். எ-று.

சந்திரன் தக்ஷப்பிரசாபதி பெற்ற அச்சுவினி முதலிய இருபத்தேழு மாதரையு மணந்து அவர்களில் அதிரூபமுள்ள கிருத்திகை உரோகிணிப் பெண்கள்பால் அன்புமிக்கு ஏனையோரை முகநோக்காமையின் அவர்கள் தந்தைபால் முறையிட்டனர். அவன் மருகனை யழைத்து மதிகூறிவிடுத்தும், அவற்றை மதியாதிருந்தமையின் "நின் கலைகள் குறைக" எனச் சாபந் தந்தனன். சோடச கலைகளுள் பதினைந்தினை யிழந்து ஒருகலையும் இழப்பதன்முன் பிரமன்பாலோடி முறையிட்டனன். பதுமன் "பிள்ளாய்! தக்கனுந் தந்தையாகிய என்சொல்லைக் கேளான். யானும் மகனென்றவன்பாற் செல்லேன் ஆதலின், கருணாநிதியாகிய சிவன்பாற் சென்று முறையிடின் நின் குறை யகலும்" என, சந்திரன் விரைந்து வெள்ளிமலையை யடைந்து திருநந்தி தேவர்பால் விடைபெற்றுத் திருச்சந்நிதானத்தினுட் சென்று சிவபிரானுக்கு விண்ணப்பஞ்செய்து பணிய, இறைவர் மனமுருகி எஞ்சிய ஒரு கலையைச் சடைமேலணிந்து "உனது கலைகளிலொன்று என் முடிமீதிருத்தலால் நாளுக்கொரு கலையாக வளர்ந்தும், தக்கன் சாபத்தால் நாளுக்கொரு கலையாகக் குறைந்தும் இருக்க ஒரு கலை யென்றுமகலாது" என அனுக்கிரகித்தனர் என்பது. இதனை,

கந்தபுராணம் - தக்ஷகாண்டம்.

"தீர்ந்தன வன்றியே திங்க டன்னிடை<br>
யார்ந்திடு கலையினை யங்கை யிற்கொளா<br>
வார்ந்திடு முடிமிசை வயங்கச் சேர்த்தினன்<br>
சார்ந்தில தவ்வழித் தக்கன் சாபமே."—என்பதனுனறிக.

திருவாலவா யென்பது இம் மதுரைநகருக் கொருதிருநாமம். திருவிளையாட்டு என்பது தன்னை யுணர்த்துதற்குத் தானமாய் நிற்றலின் தானியாகுபெயர்.

தக்ஷயாகத்திற் சென்றிருந்த சந்திரன் வீரபத்திரமூர்த்தியால், சிவாபராதியாய் மதிக்கப்பட்டு நிலமிசை வீழ்த்தித் திருவடியால் தரையோடு தேய்க்கப்பட்டவனுயினும் தக்ஷசாபத்தால் நிலைமாறி அபயமெனவந் தடைந்தபொழுது இறைவர் கருணாமூர்த்தியாய் அநுக்கிரகஞ் செய்தமைபோல, அடியவர்கள் அறியாமையாற் செய்த குற்றத்தையு மன்னித்தருள்வாரென்னுங் கருத்துத் தோன்ற "திங்களணி" என விசேடித்தனர்.

சங்கநிதி பதுமநிதி யென்பவை முறையே சங்கவடிவும் பதுமவடிவும் பெற்றுள்ளவை. இவ் விரண்டுநிதிகளும் க்ஷீராப்தி மர்த்தனஞ்செய்கையில் தோற்றிக் குபேரனுக்குக் கொடுக்கப்பட்டவை.

இத்திருவிளையாடற் புராணங் கேட்போர் இம்மை மறுமைப் பலன்களைப் பெற்றுச் சிவன்முத்தி யடைவரென்பது கருத்து. "ஒருமொழி யொழி தன்னினங் கொளற் குரித்தே" என்றபடி கேட்டவரைக் கூறியதனாற் சொன்னவர்-படித்தவர்-வெளியிட்டவர்-முதலானவரையுங் கொள்க. (உ)

---

# கடவுள் வணக்கம்.

## சிவபெருமான்.

**அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.**

வென்றுளே புலன்க ளைந்தார் மெய்யுண ருள்ளந் தோறுஞ்
சென்றுளே யமுத மூற்றுந் திருவருள் போற்றி யேற்றுக்
குன்றுளே யிருந்து காட்சி கொடுத்தருள் கோலம் போற்றி
மன்றுளே மாறி யாடு மறைச்சிலம் படிகள் போற்றி.

(இ-ள்.) ஐந்து உட் புலன்களையும் வென் றொழித்தவருடைய உண்மையையறிந்த உள்ளங்களிலெல்லாஞ் சென்று, அவருள்ளத்திலே (சிவானந்தமாகிய) அமுதத்தைப் பொழிகின்ற திருவருட்செயல் (அடியேனைக்) காக்க. (வெள்ளி) மலை போலும் இடபவாகனத்தின்மீது ஆரோகணித்துக் காட்சியளித்தருளுந் திருவருட் கோலம் காக்க. அம்பலத்தினிடத்திலே மாறி யாடியருளும் வேதங்களாகிய சிலம்பணிந்த திருவடிகள் காக்க. எ-று.

"வென்றுளே புலன் களைந்தார்" என்பதை "உள்ளே புலன் வென்று களைந்தார்" எனவும், "ஏற்றுக் குன்றுளே" என்பதை "குன்று ஏற்றுள்ளே" எனவும் ஓட்டுக.

இச் செய்யுள் விஞ்ஞானகலர் - பிரளயாகலர் - சகலர் என்னு மூவர்க்கும் அநுக்கிரகிக்கு முறைமை தோன்றத் துதிசெய்தது. அதாவது:—மலமொன்றினையேயுடைய விஞ்ஞானகலர்க்கு இதயத்தில் அறிவுக்கறிவாயிருந்து ஒளிவடிவமாய்ச் சிவாநந்தத்தேனைப் பொழிகின்றமையின் "வென்றுளே புலன்க ளைந்தார் மெய்யுண ருள்ளந்தோறுஞ் - சென்றுளே யமுத மூற்றுந் திருவருள் போற்றி" எனவும், இரண்டுமலங்களையுடைய பிரளயாகலர்க்கு மான்மழு சதுர்ப்புய மால்விடை யூர்தியாய் அவ் விருமலங்களையு மகற்றுகின்றமை தோன்ற "ஏற்றுக் குன்றுளே யிருந்து காட்சி கொடுத்தருள்கோலம் போற்றி" எனவும், மும்மலங்களையுடைய சகலர்க்கு ஸ்ரீ பஞ்சாக்கரத் திருநடத்தால் மும்மலத்தையு மொழித்துத் திருவடிசூட்டி யனுக்கிரகித்தல் தோன்ற "மன்றுளேமாறி யாடு மறைச்சிலம் படிகள் போற்றி" எனவுங் கூறினார் என்பதாம். இதனை "நன்னெறிவிஞ் ஞானகலர் நாமல மொன்றினையு - மங்கிலையே யுண்ணின் றறுத்தருளிப் - பின்னன்பு - மேவாவிளங்கும் பிரளயாகலருக்குத் தேவரீ மலகன்மந் தீர்த்தருளிப் - பூவலயந் - தன்னின்று நீங்காச் சகலர்க்கவர் போல - முன்னின்று மும்மலந்தீர்த் தாட்கொள்கை - யன்னவனுக் - கார்திருண மானதினு லாடுந் திருத்தொழிலும்" எனவரும் போற்றிப் பஃறொடையானுணர்க.

"கடல்விட னுகர்ந்த காசினி யிலிங்கங் காஞ்சிமா நகருறை யிலிங்கங்
காவிரி வடபால் வருதிரு வானைக் காவினி லப்புலிங் கமதாம்
வடதிசை யண்ணு மலையினி லிலிங்கம் வன்னியின் வடிவுகா ளத்தி
வாயுலிங் கமதாஞ் சிதம்பர விலிங்க மாசிலா காயலிங் கமதாங்
குடதிசை யதனின் மருவுகுற் றாலங் கோதறு சித்திர சபையாங்
குற்றமில் குணக்கில் பழயனூர் மன்றங் குலநவ ரத்னமன் றென்பா
ரடல்விடைப் பாக னெல்லையம் பதியி லம்பலந் தாமிர சபையாம்
ஆலவாய் மதுரை வெள்ளியம் பலமே யணிதில்லைச் செம்பொனம் பலமே."

என்ற இரட்டைப்புலவர் சொற்படி, சிவபெருமான் நிருத்தஞ்செய்த திருவாலங்காடு-இரத்தினஸபை, திருத்தில்லை - கனகஸபை, திருவாலவாய் - வெள்ளிஸபை, திருநெல்வேலி - தாமிரஸபை, திருக்குற்றாலம் - சித்திரஸபை ஆகையால் "மன்றுளே மாறி யாடும்" என்பதற்கு வெள்ளியம்பலத்தில் நடித்த வெனக் கூறலு மொன்று. "மாறியாடும்" என்பதனால் கான்மாறி யாடிய திருவிளையாடற் சரிதையைக் கூறுதல் பொருந்ாது. ஏனெனில் அஃது ஊன்றிய திருவடியைத் தூக்கியும் தூக்கிய திருவடியை யூன்றியு நடித்தமையா னென்க.

போற்றிய வென்பது வியங்கோள் வினைமுற்று அது ஈறுகெட்டுப் போற்றி என நின்றதெனக் கொள்க. இனி "வியங்கோள் ஏவல் கண்ணியதெனவும், ஏவல் கண்ணாதெனவு மிருவகைத்து" எனக்கொண்டு அவற்றுள் "முன்னது உயர்ந்தான் இழிந்தானை யின்னது செய்கவென விதித்தற்பொருளிலும் பின்னது இழிந்தான் உயர்ந்தானை யின்னது செய்யப் பெறவேண்டுமென வேண்டுகோடற் பொருளிலும் வரும்" என "தன்மை முன்னிலை யாயீ ரிடத்தொடு - மன்னா தாகும் வியங்கோட் கிளவி" என்னுஞ் சூத்திரத்திற்குக் கல்லாடருரையானு மறிக. (௬)

## சிவசத்தி.

### மேற்படி - வேறு.

சுரும்புமுரல் கடிமலர்ப்பூங் குழல்போற்றி யுத்தரியத் தொடித் தோள் போற்றி, கரும்புருவச் சிலைபோற்றி கவுணியர்க்குப் பால்சுரந்த கலசம் போற்றி, இரும்புமனங் குழைத்தென்னை யெடுத்தாண்ட வங்கயற்க ணம்பி ராட்டி, யரும்புமிள நகைபோற்றி யாரணநூ புரஞ்சிலம்பு மடிகள் போற்றி.

(இ-ள்.) இரும்பை நிகர்த்த எனது மனதைக் குழையச்செய்து (மலபந்த முற்றிருந்த) அடியேனை யெடுத்து ஆட்கொண்ட அங்கயற்கணம்மையாராகிய எமது பிராட்டியாருடைய வண்டுகள் பண்பாடும் வாசனைதங்கிய மலர்மாலையணிந்த அழகிய அளகபாரம் (அடியேனைக்) காக்க. மேற்போர்வையையும் தொடியையுமணிந்த திருத்தோள்கள் காக்க. வில்லையொத்த கரிய புருவம் காக்க. கவுணிய கோத்திரத்தில் திருவவதாரஞ்செய்த ஆளுடைய பிள்ளையாருக்குச் சிவஞானப்பால் சுரந்தருளிய பொற்கலசம்*போன்ற திருத்தனங்கள் காக்க. அரும்புகின்ற திருப் புன்சிரிப்பு காக்க. வேதமாகிய சிலம்புகள் ஒலிக்கின்ற திருவடிகள் காக்க. எ-று.

இச்செய்யுள் கேசாதிபாதமுறையாகத் துதிசெய்தது.

ஆளுடைய பிள்ளையார் மூன்றுவயதில் தந்தையாராகிய சிவபாதவிதயர் நீராடச்செல்லுகையில், தமக்குச் சிவபிரானது திருவருள்கூடத் தந்தையாரைத் தொடர்ந் தழுதுகொண்டு பின்சென்றனர், தந்தையாரும் உடன்கொண்டு சென்று ஆலயத்

துள்ளிருக்குந் தீர்த்தத்தைக் குறுகி, பிள்ளையாரைக் கரையிலேயிருக்கச்செய்து தாம் தீர்த்தத்திலிறங்கிநின்று சங்கற்ப அகமருஷண சூக்தபடன முதலியவை செய்ய, பிள்ளையார் அச்செயல்களைப் பார்த்துக்கொண்டிருந்தனர். பிறகு ஸ்நானஞ்செய்கையில், பிள்ளையார் தந்தையாரைக் காணாமல், சிவபெருமானை வழிபட்ட பண்டைய வுணர்வு மூளக் கண்ணீர் ததும்பக் கண்களைக் கைகளாற் பிசைந்து உதடு துடிக்கும்படி உலகின்கணுள்ள ஆன்மாக்களெல்லாங் கடைத்தேறும்விதம் விம்மி யழுதனர். தமது பண்டைய வுணர்ச்சியாலோ அல்லது பிள்ளைப்பருவத் தியற்கையாலோ சிவபெருமான் வீற்றிருக்குந் திருத்தோணியாலயத்தின் சிகரத்தைப் பார்த்து "அம்மே அப்பா" என்றழைத்தழுதனர். அப்பொழுது தோணியப்பர் அவருக்குத் திருவருள்செய்யத் திருவுள்ளங்கொண்டு திருநிலைநாயகி யம்மையாரோடும் இடபாரூடராய்த் தீர்த்தக்கரைக் கெழுந்தருளி அம்மையாரைப்பார்த்து "உனது முலைப்பாலைப் பொன்வள்ளத்திற் கறந்து இவனுக்கூட்டுக" எனத் திருவருள் செய்தனர். தேவியார் அவ்வாறே கறந்து அதனோடு சிவஞானத்தையுங் கலந்து பிள்ளையாரது கண்ணீரைத் துடைத்து வள்ளத்தைக் கையிற்கொடுத்து அமுதூட்டி அழுகைநீக்கி அநுக்கிரகஞ்செய்தருளினர். உலகுக்கெல்லாம் பரம பிதா மாதாக்களாகிய இவர்களால் ஆட்கொள்ளப்பட்டபடியால் ஆளுடையபிள்ளையாரெனவும், தேவர் முனிவர் முதலானோர்க்குங் கிடைத்தற்கரிய சிவஞானத்தோடு சம்பந்தப்பட்டதால், திருஞானசம்பந்தரெனவும் பெயர் பெற்றனர். பிறகு தமது நியம முடித்துக் கரையேறிய சிவபாதவிதயர் பிள்ளையாரைப் பார்த்து "எச்சின்மயங்கும்படி யுனக்குப் பால் கொடுத்தாரைக் காட்டு" என அச்சுறுத்த, பிள்ளையார் உச்சியின்மேல் திருக்கையைத் தூக்கித் திருவிரலாற் சுட்டி ஆகாயத்தில் உமாதேவியாரோடு இடபாரூடராய் விளங்கிய சிவபெருமானைக் காண்பித்து "தோடுடைய செவியன்" என்னும் முதலையுடைய திருப்பதிக மோதினர். அதுமுதலாகப் பல சிவஸ்தலங்களிற் பல திருப்பதிகங்களை யோதி அநேக அற்புதங்களை யியற்றினர். என்பதாம் இதனை,

திருத்தொண்டர்புராணம்.

"அழுகின்ற பிள்ளையார் தமைநோக்கி யருட்கருணை
யெழுகின்ற திருவுள்ளத் திறையவர்தா மெவ்வுலகுந்
தொழுகின்ற மலைக்கொடியைப் பார்த்துனது துணைமுலைகள்
பொழிகின்ற பாலடிசில் பொன்வள்ளத் தூட்டென்ன.

ஆரணமு முலகேழு மீன்றருளி யனைத்தினுக்குங்
காரணமாய் வளம்பெருகு கருணைதிரு வடிவான
சீரிணங்கு சிவபெருமா னருளுதலுஞ் சென்றணைந்து
வாரிணங்கு திருமுலைபொன் வள்ளத்திற் கறந்தருளி.

எண்ணரிய சிவஞானத் தின்னமுதங் குழைத்தருளி
யுண்ணடிசி லெனவூட்ட வுமையம்மை யெதிர்நோக்குங்
கண்மலர்நீர் துடைத்தருளிக் கையிற்பொற் கிண்ணமளித்
தண்ணலையங் கழுகைதீர்த் தங்கணா ரருள்புரிந்தார்.

யாவர்க்குந் தந்தைதா யெனுமிவரிப் படியளித்தா
ராவதனா லாளுடைய பிள்ளையா ராயகில
தேவருக்கு முனிவருக்குந் தெரிவரிய பொருளாகுந்
தாவிறனிச் சிவஞான சம்பந்த ராயினார்."—எனவருவனவற்றானுணர்க. (௩)

## பரசிவம்.

### கலிநிலைத்துறை.

பூவண்ணம் பூவின் மணம்போலமெய்ப் போத வின்ப
மாவண்ண மெய்கொண் டவன்றன்வலி யாணை தாங்கி
மூவண்ண றன்சந் நிதிமுத்தொழில் செய்ய வாளா
மேவண்ண லன்றான் விளையாட்டின் வினையை வெல்வாம்.

(இ-ள்.) பூவும், பூவினிறமும், பூவின்மணமும் (அபேதமாயிருத்தல்)போல, சத்து - சித்து - ஆனந்தமே தமது திருமேனியாகக் கொண்டருளிய சிவபெருமான் தனது சத்திபேதங்களைத் தாங்கிப் பிரமன் - விண்டு - உருத்திரன் என்னுந் திரிமூர்த்திகளும் தனது திருமுன்னர் சிருட்டி - திதி - சங்கார மென்னும் மூன்று தொழில்களையு மியற்ற, சலனமின்றி விளங்குங் கடவுள் (ஆதலின்) அப்பெருமானது திருவிளையாடல்களாற் பிறவியாகிய வினையை யொழிப்பாம். எ-று.

"பூவண்ணம் பூவின் மணம்" என்பதில் பூவின் என இடைநிலைத் தீவகமாகக்கூறியதால் பூ-பூவின் வண்ணம்-(பூவின்) மணம் எனக்கொள்க. மெய்=சத்து, போதம்=சித்து, இன்பம்=ஆனந்தம். எனவே மெய்ப்போதவின்பம் என்பது சச்சிதானந்தம்.

"உருவருள் குணங்க ளோடு முணர்வரு ளுருவிற் றோன்றுங்
கருமமு மருள்ப ரன்றன் கரசர ணாதி சாங்கந்
தருமரு ளுபாங்க மெல்லாந் தானரு டனக்கொன் றின்றி
யருளுரு வுயிருக் கென்றே யாக்குவ னசிந்த னன்றே." சிவஞானசித்தியார்-

என்றபடி, அங்கம் சத்திரூபமும் அறிவித்தல் சத்திவியாபாரமும் கரம் சிரம் உர முதலிய உபாங்கங்கள் அருளுமாம். சிந்தனையற்ற பரசிவன் தற்பிரயோசனங் குறியாது உயிர்கட்கென்றே சமஸ்த தேவர் முதலியோரைத் தன்னிடத் துற்பவிப்பித்து, அவர்களால் முத்தொழி லியற்றுவிக்கின்றான்.

சிவஞானசித்தியார்.

"தோற்றுவித் தளித்துப் பின்னுந் துடைத்தரு டொழில்கண் மூன்றும்
போற்றவே யுடைய னீசன் புகுந்தது விகார மென்னிற்
சாற்றிய கதிரோ னிற்கத் தாமரை யலருங் காந்தங்
காற்றிடுங் கனலை நீருங் கரந்திடுங் காசி னிக்கே."—என்பதனாலும்,

காஞ்சிப்புராணம்.

"சங்கேந்து மலர்க்குடங்கைப் புத்தேளு மறைக்கோவுந் தழல்கால் சூல
மங்கேந்து மம்மானுந் தத்தமது தொழிறலைநின் றாற்றச் செய்தோர்
பங்கேந்து பெருமாட்டி விழிகளிப்ப விருமுனிவர் பணிந்து போற்றக்
கொங்கேந்து மணிமன்றுட் குனித்தருளும் பெருவாழ்வைக் குறித்து வாழ்வாம்."

என்பதனாலும், சிவசந்நிதியிற் பிரம விஷ்ணு ருத்திரர் சிருட்டி திதி சங்காரங்களை அவனருளாற் செய்வரென்பது தோன்ற "மூவண்ண றன்சந்நிதி முத்தொழில் செய்ய வாளா மேவண்ணல்" என்றார்.

அவன்றன் வலியாணை தாங்கி என்றது இறைவன் குறிப்பின்படி அக்கினிக் குஷ்ணம்போல அபின்னுபாவமாயிருக்குஞ் சத்தியே பஞ்சகிருத்திய நிமித்தமாகக் கிருத்தியபேதத்தால் ஐவகைப்படும். அவை முறையே பரை - ஆதி - இச்சை - ஞானம் - கிரியை யென்பனவாம். அவற்றுள் பராசத்தி பரமசிவத்தி லாயிரத்தொருகூறுகொண்டது. ஆதிசத்தி பராசத்தியி லாயிரத்தொருகூறு கொண்டது. இச்சா

சத்தி ஆதிசத்தியி லாயிரத்தொருகூறுகொண்டது. ஞானசத்தி இச்சாசத்தியி லாயிரத்தொருகூறுகொண்டது. கிரியாசத்தி ஞானசத்தியி லாயிரத்தொருகூறு கொண்டது. இவற்றுள் ஆதிசத்தி ஆன்மாக்கட்கு விஷயசுகத்தைப் பொருத்தும். இச்சாசத்தி சிருட்டியைச் செய்யும். ஞானசத்தி சர்வான்மாக்களுடைய கன்மங்களையும், அவற்றிற் கீடாகத் தநு கரண புவன போகங்களையும் உபாதானத்திரயங்களினின்றும் உண்டாக்கும். கிரியாசத்தி சிருட்டியாதி கிருத்தியங்களைச்செய்யும். பராசத்தி பக்குவமலராகிய ஆன்மாக்களைக் கருணையால் அநுக்கிரகிக்கும். ஆதிசத்தியானது ஆணவமலம் பக்குவமாகும்படி செலுத்தும். ஞானசத்தி சத்தர்க்கு ஞானவொளியாகிய தேஜோரூபமாம். இப் பஞ்சசத்திகளின் தஶாம்சபேதத்தாற் சகளநிஷ்கள மாகிய சதாசிவரூபமாம். தஶாம்சம்=பத்திலொன்று, அதாவது அகளமாகிய சாதாக்கியம். விரிப்பிற் பெருகும். இச்செய்யுள்இவ்வகையாகக் கிருத்தியபேதங்கள் அவன் சத்திபேத மாதலை விளக்கியதாம். (கூ)

## சிற்சத்தி.

அண்டங்க ளெல்லா மணுவாக வணுக்க ளெல்லா
மண்டங்க ளாகப் பெரிதாய்ச்சிறி தாயி னானு
மண்டங்க ளுள்ளும் புறம்புங்கரி யாயி னானு
மண்டங்க ளீன்ற துணையென்ப ரறிந்த நல்லோர்.

(இ-ள்.) (தனதுருவத்தைக் கணிக்கையில்) பல்லாயிரகோடி யண்டங்களும் அணுவாகும்படி பெரிதானவனும், அணுக்களெல்லாம் அண்டங்களாகும்படி சிறிதானவனும், அண்டங்களின் உள்ளும் புறமுஞ் சாக்ஷியாயுள்ளவனுமாகிய பரசிவன் சர்வாண்டங்களையுமீன்ற சிற்சத்தி துணை (ஆகக்கொண்டு கிருத்தியங்களை யியற்றுவன்) என்று, (வேதாகம நூல்களைஐயம்-திரிபு-அறியாமையகலக்) கற்றமேலோர் கூறுவார்.

இறைவர் சர்வசங்காரகாலத்தில் தேவர்முனிவர் முதலானோருமிறப்ப எஞ்சிநின்றபொருளாக யாவுந் தாமேயாய்ப் பேருருக்கொடு நிற்றலின் "அண்டங்களெல்லா மணுவாகப் பெரிதாயினானும்" எனவும், சர்வவியாபியாகிய பகவான் அந்தர்யாமியாய் யாண்டும் வியாபித்து விளங்குகையில் அவற்றினுட் சூட்சுமரூபமாக நிற்றலின் "அணுக்களெல்லா மண்டங்களாகச் சிறிதாயினானும்" எனவும், அண்டாண்ட பகிரண்டங்களையும் அவற்றிலுள்ள ஆன்மகோடிகளோடு படைத்தளித் தழித்துநிற்கையில் இரணியகர்ப்ப பிபீலிகாபர்யந்தம் சாக்ஷிரூபமாக நிற்றலின், "அண்டங்களுள்ளும் புறம்புங்கரியாயினானும்" எனவும்,அண்டங்களை யெல்லாம் தன் வழியாகத் தோற்றுவித்த அச்சிற்சத்தி அக்கினியிற்சூடும், நீரிற் றண்மையும்போலச் சிவத்தோடு அபேதமாயிருப்பினும், சௌந்தரியலகரி "சிவமெ னும்பொருளு மாதி சத்தியொடு சேரி னெத்தொழிலும் வல்லதா-மவள்பி ரிந்திடி னியங்கு தற்குமரி தரிதெ னுமறை யியம்புமால்" எனவும், சுருதி "ஸர்வம்ஶக்தி மயம்ஜகத்"எனவும், "கும்பாதி காரிய மெனத்தமை நிமித்தமாக் கொண்டவகி லாண்டங்களின் - குழுவுக்கு மற்றுந்த மிருவர்குறி யுங்குறிக் கூடினும் தான்றனக்குச்- சொம்பாதி யன்மைக் கனைத்துந்தன் மயமெனுஞ் சுருதிகரி யாகவைத்தும்."என்று குமரகுருபர சுவாமிகளுங் கூறியபடி, அச்சிற்சத்தியையின்றிப் பரசிவத்திற்கு ஒரு தொழிலுமின்றாகலின், பிரபஞ்ச நிகழ்ச்சிக்குச் சிற்சத்தியே முதலெனவும் விளக்கி "அண்டங்க ளீன்றதுணை" எனவும், பதிநூலை வாசித் துணர்ந்த புண்ணியரேயன்றிப் பசுநூல்களைப் பயின்றவர் இவ்விரகசியார்த்தத்தை யறியற் பாலரன்றாகலின் இதனையுணியத் தக்க அதிகாரிகள் இவரென விளக்குவான் கருதி "அறிந்த நல்லோரென்பர்" எனவுங் கூறினர்.

இச் செய்யுளிறுதியில் அச் சிற்சத்தியின் திருவடிகளை யாம் வணங்குவாம் என்பது இசையெச்சமாகக் கொள்க.

துணையென்பதற்குக்கணவனென ஒரு சாரார் பொருள்கூறுவர். அங்ஙனம் பொருள்கூறப்புகின், இஃது சிவஸ்துதியாமன்றி, சத்தியைத்துதித்ததாகாமல், அவர் கருத்து நூலாசிரியர் கருத்தொடு மாறுபடு மென்க. (சு)

## சொக்கலிங்க மூர்த்தி

கலிவிருத்தம்.

பூவி னாயகன் பூமக ணாயகன்
காவி னாயக னாதிக் கடவுளர்க்
காவி நாயக னங்கயற் கண்ணிமா
தேவி நாயகன் சேவடி யேத்துவாம்.

(இ-ள்.) தாமரைமலரில் வீற்றிருக்கின்ற தலைவனாகிய பிரமதேவன் - பூமி தேவிக்குக் கணவனாகிய திருமால் - கற்பகச்சோலைக்கு அதிபனாகிய இந்திரன்முதலிய தேவர்கட்கெல்லாம் உயிராகவிளங்கும் மகாதேவனும், அழகிய கயற்கெண்டை போலுந் திருவிழியையுடைய மீனாக்ஷியம்மையாகிய மகா தேவியாருக்குப் பர்த்தாவு மான சொக்கலிங்கப்பெருமானது செவந்த திருவடியைத் துதிசெய்வாம். எ-று.

பூமகள் = பூமிதேவி அல்லது செந்தாமரைமலரில் வசிக்குந் திருமகள்.

பண்டொருபதுமகற்பத்தில் பிரமன் தனதுபடைத்தற்றொழில்மாறி,விண்டு வின்பால் முறையிட,விண்டு பிரமனையும் அவன் படைப்பாகிய நான்கு புதல்வரையு முடன் கொண்டு வெள்ளிமலை யடைந்து விடையூர்திபால் முறையிட்டு அஃதுகை கூடும்வண்ணம் வேண்ட, இறைவர் அவ்வறுவரையுந் தமது லலாடநேத்திரத்தாற் பொடிசெய்து, தமது வாமபாகத்தணிந்தனர். ஆண்டோர் சத்தி தோன்றினள். பின்னர் அவர்களை யெழுப்பி அவர்கள் விருப்பின்படி வரங்கொடுத்தனுப்பினர். இதனை

கந்தபுராணச்சுருக்கம் - தக்ஷகாண்டம்.

"ஆதி நின்னரு ளால்வி திக்கும யன்றொ ழில்சிதை வாயதா
வீதி யென்றிட மால யன்றனை யெங்க ணாயக னேக்கியப்
போது நீறது கண்டி டங்கொள்பு யந்த ரித்தன னவ்விடை
மாது தோன்றினள் பின்பெ ழுப்பி வரங்கொ டுத்துவி டுத்தனன்."—என்ப தனானுணர்க.

இதுவேயன்றி யித்தகைய பல வேதுக்களாலும்,

வாதுளாகமம்.

"கர்மேமஸ்ய ஸஹஸ்ராம்மாந் மஹேமஸ்ய ஸமுத்பவ:
மஹேமஸ்ய ஸஹஸ்ராம்மாந் ருத்ரதேவ ஸமுத்பவ:
ஏதம்மஹேமஸ கோட்யம்மாத் ப்ரஹ்ம விஷ்ணு ஸமுத்பவ:
தக்ஷிணாங்க பவோப்ரஹ்மா ஹரிர்வா மாங்க ஸம்பவ:
ஹ்ருதயாந் நீலருத்ரஸ்து மிவஸ்ய மிவஸம்ஜ்ஞக:
நேத்ரோஷ்டு ஸவ்யவாமோர்த்வே ஸூர்யஸோ மாக்நிஸம்பவ:"—என்ற படி சமஸ்ததேவர்களும் பரசிவத்தினிடமாகத்தோன்றியொடுங்குவதாலும், "பூவினா யகன் பூமகணாயகன் காவினாயகனாதிக்கடவுளர்க் காவிநாயகன்" என்றார்.

தேவர்கட்காவிநாயக னென்றமையின் மாதேவன் என்னுந் திருநாமத்தைக் குறிப்பித்து, மீண்டும் அங்கயற்கண்ணி மாதேவிநாயகனென்று அதனை நிரூபித்தனர் என்க. (எ)

## அங்கயற்கண்ணம்மை.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

பங்கயற்கண் ணரியபரம் பரனுருவே தனக்குரிய படிவ மாகி, யிங்
கயற்க ணகனுலக மெண்ணிறந்த சராசரங்க ளீன்றுந் தாழாக், கொங்
கயற்கண் மலர்க்கூந்தற் குமரிபாண் டியன்மகள்போற் கோலங் கொண்ட,
வங்கயற்க ணம்மையிரு பாதப்போ தெப்போது மகத்துள் வைப்பாம்.

(இ-ள்.) கமலாசனத்தில் வீற்றிருக்கும் பிரமதேவனுக்குங் கிடைத்தற்கரிய சிவபெருமானது திருவடிவமே தனக்குரிய திருவடிவமாகவும், இவ்வண்டத்தையும் அயலிடமாகிய இடம்பரந்த பகிரண்டத்தையும் (அவற்றிலுள்ள) அளவில்லாத சராசரப்பொருள்களையும் (பெருது) பெற்றருளியும், தலைவணங்காத திருத்தனங்களையும் இருள்போன்ற தேன்சொரியும் அளகபாரத்தையுமுடைய கன்னிகையாய், மலயத்துவச பாண்டியனது திருமகள்போலத் திருவுருக்கொண்டருளிய அங்கயற்கண்ணம்மையாரது திருவடித்தாமரையை எப்பொழுதும் மனதிலிருக்கச்செய்வாம். எ-று.

பங்கயன் என்பதனீற்றில் இறந்தது தழீஇய எச்சவும்மை விகாரத்தால் தொக்கது. விரியின், பங்கயனுந் திருமாலு மெனவரும்.

"இங்கயற்க ணகனுலகம்" என்பதை "இங்கு அகன் உலகம் - அயற்கண் அகன் உலகம்" எனக்கொள்க. இங்கு = இவ்வண்டம்; அயல் = பகிரண்டம்.

சரம் = அசைவன. அசரம் = அசையாதன.

கொங்கை என்பது கொங்கய் எனப் போலியாயிற்று. (அ)

## சபாபதி.

உண்மையறி வானந்த வுருவாகி யெவ்வுயிர்க்கு முயிராய் நீரின்,
றண்மையனல் வெம்மையெனத் தனையகலா திருந்துசரா சரங்க ளீன்ற,
பெண்மையுரு வாகியதன் னானந்தக் கொடிமகிழ்ச்சி பெருக யார்க்கு,
ம்ண்மையதா யம்பலத்து ளாடியொளிர் பேரொளியை யகத்துள் வைப்பாம்.

(இ-ள்.) சத்து சித்து ஆனந்தமே திருமேனியாகக் கொண்டு எல்லாச் சீவான்மாக்கட்கும் பரமான்மாவாகிச் சலத்திற் றட்பமும் அக்கினியில் வெப்பமும் போலத் தன்னை நீங்காமலுடனின்று சகலகோடி சீவராசிகளையும்பெற்றருளிய பெண்வடிவேற்ற தனது (ஆனந்தக்கொடியாகிய) சிவகாமவல்லி யம்மையார் களிகூரும்படி எல்லோரும் தரிசித்தற்கெளிதாய் பொற்சபையினிடத்தே ஸ்ரீ பஞ்சாக்கரத் திருநடனம்புரிந்தருளும் பேரொளிப்பிழம்பாகிய நடராஜப்பெருமானை யாம் உள்ளத்தில் தியானிப்பாம். எ-று.

உண்மை-அறிவு-ஆனந்தம் = சச்சிதானந்தம். தன்னானந்தக்கொடி = சிவகாமசுந்தரி. தான் - சிவம், ஆனந்தம் - காமம், கொடி - வல்லி.

இறைவர் பஞ்சாக்கரத் திருநடம்புரிவது என்பது- சிவபிரான் திருத்தகோலங்கொண்ட பொழுது திருவடியில் நகாரமும், திருவயிற்றில் மகாரமும், திருத்தோளிற் சிகாரமும், திருமுகத்தில் வாகாரமும், திருமுடியில் யகாரமுமாக ஸ்ரீ பஞ்சாக்ஷரமே திருவுருவாக நின்று ஆன்மாக்களின்மீதுள்ள கருணையால் ஐவகையவான கிருத்தியங்களை யியற்றுகிற்பர். இனி இந்நடனம் ஊனநடனம் ஞானநடனமென விருவகைப்படும். இவ்வகைய திருநடனத்தாற் பயனென்னையோ வெனின், பஞ்சகிருத்திய நிகழ்வேயாம். தமருகமேந்திய கரத்தினுற் சிருட்டியும் அமைத்த அத்தத்தினுல்

திதியும், மழுவேந்தியகரத்தாற் சங்காரமும், முயலகன் முதுகிலூன்றிய திருவடியால் திரோபவமும், எடுத்த திருவடியால் அநுக்கிரகமும் புரிவர் என்பது. இதனை,

உண்மைவிளக்கம்.

"ஆடும் படிகேணல் லம்பத்தி லையனே
நாடுந் திருவடியி லேநகரம் - கூடும்
மகர முதரம் வளர்தோள் சிகரம்
பகருமுகம் வாமுடியப் பார்."—எனவும்,

"தோற்றந் துடியதனிற் றோயுந் திதியமைப்பிற்
சாற்றியிடு மங்கியிலே சங்காரம் - ஊற்றமா
ஊன்று மலர்ப்பதத்தி லுற்ற திரோதமுத்தி
நான்ற மலர்ப்பதத்தே நாடு."—எனவும், வருவனவற்றானுணர்க.

"தன்னுனந்தக் கொடி மகிழ்ச்சி பெருக" என்றது இறைவரது திருநடனத்தை அவரது வாமபாகத்திலுள்ள அம்மையார் கண்களிகூரத் தரிசித்து நிற்பராதலால். இதுபற்றியே "மானை நோக்கிய மாணிடங் கண்டு மகிழ மன்றினில் மாநடம் புரிவோய்" எனப் பிறருங் கூறினர். அத்தகைய திருநடன தரிசனம் யாவர்க்கும் எளிதாகப் பிறப்பினை யொழிக்கவல்ல தாதலின்,

உண்மை விளக்கம்.

"பரையிடமாய் நின்றுமிகு பஞ்சாக் கரத்தால்
உரையுணர்வுக் கெட்டா வொருவன்—வரைமகடான்
காணும் படியே கருணையுருக் கொண்டாடல்
பேணுமவர்க் குண்டோ பிறப்பு" — என்றபடியே, விஞ்ஞானகலர்-

பிரளயாகலர்-சகலரென்னும் யாவர்க்கும் எளிது தோன்ற "யார்க்கு மண்மையதாயம் பலத்து ளாடியொளிர் பேரொளி" என்றார். (௧)

## சோமசுந்தரக்கடவுள்.

சடைமறைத்துக் கதிர்மகுடந் தரித்துநறுங் கொன்றையந்தார் தணந்து வேப்பந், தொடைமுடித்து விடநாகக் கலனகற்றி மாணிக்கச் சுடர்ப்பூ ணேந்தி, விடைநிறுத்திக் கயலெடுத்து வழுதிமரு மகனாகி மீனநோக்கின், மடவரலை மணந்துலக முழுதாண்ட சுந்தரனை வணக்கஞ் செய்வாம்.

(இ-ள்.) சடைமுடியை மறைத்து ஒளி வீசும் (நவரத்தின) கிரீடமணிந்து, வாசனை தங்கிய அழகிய கொன்றைமாலையை நீக்கி வேப்பமலர்மாலைசூடி, விஷம்பொருந்திய நாகாபரணத்தை விலக்கி மாணிக்கமிழைத்த பிரகாசந்தங்கிய பொற்பூணணிந்து, இடபக்கொடியை விடுத்து மீனக்கொடி தாங்கி, மலயத்துவச பாண்டியனுக்கு மருகனாகத் திருக்கோலங் கொண்டு சேற்கெண்டைபோலுந் திருவிழியையுடைய தடாதகைப் பிராட்டியாரைத் திருமணம்புரிந்து உலகமுழுவதையும் அரசுபுரிந்த சோமசுந்தரக்கடவுளைத் துதிசெய்வாம். எ-று.

சிவபெருமான் சோமசுந்தரபாண்டியரெனப் பெயர்கொண்டு இராசகோலமேற்றமையின், அதற்கு வேண்டிய திருஅங்கங்களைப் புனைவாராய்ச் சடை மறைத்து முடிதரித்தும், கொன்றைமாலை தணந்து பாண்டியர் மரபிற்குரிய வேப்பமாலை முடித்தும், சர்ப்பாபரணமகற்றி இரத்தினாபரணமணிந்தும், விடைக்கொடியை விலக்கி அக்குலத்திற்கேற்ப மீனக்கொடி யேற்றும், தமக்கு முன்னே அந்நாடு கன்னிநாடெனப் பெயரெய்த அரசுபுரிந்த தடாதகைப்பிராட்டியை மணந்து மலயத்துவசனுக்கு மருக

ராகியும், உலகமுழுவதிலும் யாவர்க்கும் பயன்பெறத் தம்மால் வேதாகம முதலியவற்றில் திருவாய்மலர்ந்தருளப்பட்ட இராசநீதியாகிய இலக்கணத்திற்குத் தாமே இலக்கியமாய் நின்று அரசுபுரிந்து அவர்கட்கு அநுக்கிரகித்தும் லீலாமாத்திரையாக நடித்தருளினர். என்பதாம்.

கல்லாடம் "கடுக்கைமலர் மாற்றி வேப்பலர் சூடி - யைவாய்க் காப்புவிட்டணிபூ ணணிந்து - விரிச்சடை மறைத்து மணிமுடி கவித்து-விடைக்கொடி நிறுத்திக் கயற்கொடியெடுத்து-வழுதியாகி" எனவும், "மூலைமூன்றணைந்த சிலைநுதற் றிருவினையருமறை விதிக்கத் திருமணம் புணர்ந்து-மதிக்குலம் வாய்த்த மன்னவ னாகி"—எனவும் வருவனவற்றின் சொல்லும் பொருளும் இதனுளமைத்து ஆசிரியவசனமாகக்கூறினர்.

ஆசிரியவசனமாவது,

"முன்னோர் மொழிபொருளே யன்றி யவர்மொழியும்
பொன்னேபோற் போற்றுவ மென்பதற்கு—முன்னோரின்
வேறுநூல் செய்துமெனு மேற்கோளில லென்பதற்குங்
கூறுபழஞ் சூத்திரத்தின் கோள்"—என்பதாம். (௧௦)

## தடாதகைப்பிராட்டியார்

செழியர்பிரான் றிருமகளாய்க் கலைபயின்று முடிபுனைந்து செங்கோ லோச்சி, முழுதுலகுஞ் செயங்கொண்டு திறைகொண்டு நந்திகணமுனைப்போர் சாய்த்துத்,தொழுகணவற் கணிமணமா லிகைசூட்டித் தன் மகுடஞ் சூட்டிச் செல்வந், தழைவுறுதன் னரசளித்த பெண்ணரசி யடிக்கமலந் தலைமேல் வைப்பாம்.

(இ ள்.) பாண்டியர் பெருமானாகிய மலயத்துவசனது தவப்புதல்வியாய்த் திருவவதாரஞ்செய்து (வேதாகம முதலிய அறுபத்துநான்கு) கலைகளைக் கற்றறிந்து, கிரீடமணியப்பெற்று, மனுமுறைப்படி அரசுபுரிந்து, உலகின்கண்ணுள்ள எல்லாரையுந் தன்னடிப்படுத்தி, (அவர்கள்பாற்) கப்பமும்பெற்று, (திக்குவிசயஞ்செய்து இந்திராதி திசைக்காவலர்களைச் செயித்து அவரவர் வளங்களையுங் கொண்டு திருக்கயிலைமலையிற் றம்மையெதிர்த்த) திருநந்தி கணத்தவரையும் போர்செய்து திருப்பி, (பிரமேந்திராதியரால்) வணங்கத்தக்க நாயகராகிய சிவபெருமானுக்குத் திருமணமாலை தரித்துத் தமது கிரீடத்தையுமணிவித்துச் செல்வந் தழைத்தோங்குந் தனதரசுரிமையையுங் கொடுத்தருளிய பெண்ணரசியாகிய தடாதகைப் பிராட்டியாரது திருவடித்தாமரையைச் சிரமேலணிந்துகொள்வாம். எ-று.

மலயத்துவச பாண்டியன் மற்றைய பாண்டியர் போலன்றித் தொண்ணூற்றொன்பது அசுவமேத யாகங்கள்செய்து நூறாவது யாகஞ்செய்ய எத்தனிக்கையில், இந்திரனது பட்டத்திற்குக் கெடுதிவருமென்பது கேட்டு விலக்கிப் புத்திரகாமேஷ்டியாகஞ்செய்த சிறப்பினனாகலின், அவனை "செழியர்பிரான்" எனவும், அவன் மனைவி காஞ்சனமாலை பண்டைப்பிறப்பில் விச்சாவதி யென்னும் பெயரொடு அம்மையாரை நோக்கி யருந்தவஞ்செய்து பெற்றவரத்தின்படி, மலயத்துவசனது யாககுண்டத்தில் மூவாண்டைக் குழந்தையாய் ஈசுவரி தோன்றினமையின் "திருமகளாய்" எனவும், அவன் புத்திரனைப்பெறத் தவஞ்செய்து பெண்மகவு பெற்றதுடன் அக்குழந்தையும் முலைமூன்றுற்று மாற்றார் நகைக்கப் பிறந்ததே யென வருந்துகையில், சிவபெருமான் அசரீரியாய் "மன்னவநின் றிருமகட்கு மைந்தர்போற் சடங்கனைத்தும் வழாது வேதஞ்- சொன்முறை செய்து பெயர் தடாதகை யென் றிட்டு முடிசூட்டுவாயிப்- பொன்னனையா டனக்கிறைவன் வரும்பொழுதோர் முலைமறையும்" எனத் திருவாய் மலர்ந்தருளினபடி கவலைதீர்ந்து அரசகுமாரருக்கு அப்பியசிப்பிக்க வேண்டிய கல்வி

அஸ்திர சஸ்திரப்பிரயோகம் கஜ துரக ரதாரூடமுதலியவை பயிற்றுவிக்கப் பயின்று முடிசூடச் சூட்டி அரசளிக்கப்பெற்று, பாண்டிநாடு கன்னிநாடெனப் பெயரெய்த அம்மையார் நீதிமுறையே அரசுசெய்தனராதலின், "கலைபயின்று முடிபுனைந்துசெங்கோலோச்சி" எனவும், அவ்வாறு அரசுசெய்கையில் ஐம்பத்தாறு தேசத்தவர்களுங் கப்ப மனுப்பவீற்றிருந்து, தமக்கு மணப்பருவமெய்தியது கண்ட தாய் வருந்திய துணர்ந்து பரிவாரங்களுடன் திசைமேற்சென்று இந்திரன் முதலிய திக்குப்பாலகரைச் செயித்து அவரவர் நாட்டுவளங்களையுங்கொண்டு வடதிசைத்திசையில் திருக்கைலைசார, ஆண்டுள்ள திருநந்திகணங்கள் போர்க்குவர அவர்களைச் சாடினமையின் "முழுதுலகுஞ் செயங்கொண்டு திறைகொண்டு நந்திகண முனைப்போர் சாய்த்து" எனவும், அவ்வாறு புறமுதுகிட்டுச்சென்ற கணநாதர் விண்ணப்பிக்கச் சிவபிரான் புன்சிரிப்பு கொண்டெழுந்து யுத்தபூமியைக்குறுகி அம்மையாரை நோக்க, அம்மையாரும் அவரை நோக்க, அப்பொழுது தடாதகைப் பிராட்டியாருக்கு இடையிலுள்ள திருத்தனமறைய நாணமுற்று நின்றமையின், பூர்வவிருத்தாந்தமறிந்த சுமதி சொற்படி கணவனெனத்தெரிந்து, அவ்வெம்பிரான் கட்டளைப்படி தன்னகரடைய, அடுத்த சோமவாரத்திற் சிவபிரான் மானிடச்சட்டைசாத்தி, சர்வதேவர் முனிவர் முதலானோருடன் மதுராபுரியையணுகி மணஞ்செய்ய, தனதுகிரீடத்தை யவருக்கணிவித்து அரசுரிமையுமளித்தமையின் "கணவற்கணி * * * பெண்ணரசி" எனவுங் கூறினர். (கக)

## வெள்ளியம்பலவாணர்.

பொருமாறிற் கிளர்தடந்தோ ளொருமாறன் மனங்கிடந்த புழுக்க மாற
வருமாறிற் கண்ணருவி மாறாது களிப்படைய மண்ணும் விண்ணு
முருமாறிப் பவக்கடல்வீழ் நூசலெனத் தடுமாறி யுழலு மாக்கள்
கருமாறிக் கதியடையக் கான்மாறி நடித்தவனைக் கருத்துள் வைப்பாம்.

(இ-ள்.) போர்புரியுந் தொழிலிற் கிளர்ச்சிபொருந்திய பூரித்த தோளையுடைய ஒப்பற்ற இராஜசேகரபாண்டியனது மனதில் நிலைத்திருந்த துன்பமொழியவும், பெருக்கெடுக்கும் ஆற்றுநீர்போலக் கண்களிலிருந்து ஆனந்தபாட்பம் இடையறாதொழுக்கிச் சந்தோஷிக்கவும், பிறவிச்சாரத்திலகப்பட்டு விண்ணுலகத்தும் மண்ணுலகத்தும் தமது வடிவமாறி ஊசலாடுதல்போல மேல்போவதும் கீழ்வருவதுமாகத் தடுமாற்றமுற் றலையும் ஆன்மாக்கள் அப்பிறவிக்கடலை யொழித்து மோக்ஷமாகிய கரையைச் சேரவும், கால்மாறிநடித்த சிவபெருமானை மனதில்தியானிப்போம். எ-று.

கிளர்தல் = எழுச்சி.

போர்க்களத்திற் சத்துருவைக் கண்டவுடன் பூரிக்குந் தோளையுடையவனும் தனக்குத்தானே சமானமானவனுமாகிய, இராஜசேகரபாண்டியனை "பொருமாறிற் கிளர்தடந்தோ ளொருமாறன்" எனவும், அவன்கற்ற பரதநூலினால் இறைவர் திருவடிநோமெனத் தீராவருத்தமுற் றமையின் "மனங் கிடந்த புழுக்கம்" எனவும், எம்பெருமான் அவனது விருப்பிற்கிணங்கிக் கால்மாறி நடிக்கக்கண்டு வருத்தநீங்கி ஆற்றுப்பெருக்குபோல் ஆநந்தக்கண்ணீர் சொரிந்து களித்தமையின் "புழுக்க நீங்கி வருமாறிற் கண்ணருவி மாறாது களிப்படைய" எனவும், ஆன்மாக்கள் தமது இருவினைக்கீடாகத் தேவர்முதலிய எழுவகைத்தோற்றத்து எண்பத்து நான்குலட்சம் யோனிபேதமாகிய பிராணிகளாய்ச் சுவர்க்கநரகங்களை யனுபவித்து மண்ணுலகும் விண்ணுலகும் உழன்று ஊசலாடுதல்போல் பிறவிக்கடலில் வருந்துகின்றமையின் "மண்ணும் விண்ணும் உருமாறிப் பவக்கடல்வீழ் நூசலெனத் தடுமாறி யுழலுமாக்கள்" எனவும், பிறவியாகிய கடலைக் கடந்தே முத்தியாகிய கரையைச் சேரவேண்டுதலின் "கருமாறிக்கதியடைய" எனவும், மேற்கூறிய இவையனைத்து நிகழ இறை

வர் திருவடிபெயர்த்தாடி னமையின் "கால்மாறிநடித்தவர்" எனவும், அத்தகைய பெருமானைத் தியானஞ்செய்வதால் நமது பிறவி யொழியுமாதலின் "கருத்துள் வைப்பாம்" எனவுங் கூறினர்.

பரதசாத்திரத்தைப் பழகிய இராஜசேகரபாண்டியன் எம்பெருமானியற்றுகின்ற நடனத்தைப்போல் நடிக்க எத்தனிக்கையில், கால்தளர்ந்து வேசற்று வருந்தி என்னான்றும் நடித்துக்கொண்டிருக்கும் இறைவரது குஞ்சிதபாதமும் இவ்வாறே வேசற்று வருந்துமேயென்று மாறாதுவருந்தி ஒருநாள் இறைவனைப் பிரார்த்தித்து "எம்மாண்டவரே! தேவரீரது திருவடிவருந்த ஒரேதிருவடியில் நடிப்பதேன்? கால்மாறி நடனஞ்செய்து அவ்வருத்தத்தை யகற்றி யெனதுமனதைச் சந்தோஷிப்பிக்க லாகாதா" என்று பலவகையாகப் பிரார்த்திக்க, பெருமான் அப்பாண்டியனது வேண்டுகோளுக்கிரங்கி ஊன்றியதிருவடியைத் தூக்கியுந் தூக்கிய திருவடியையூன்றியுப் கால்மாறி நடித்தருளினர். அதனால் அப்பாண்டியன் தனது கண்களில் ஆனந்தபாட்பஞ் சிந்தி அகமகிழ்ந்து ஆனந்தக்கூத்தாடி அனந்தவகையாகப் பாடிப் பரவசனாயினன் என்பது சரிதம். இதனைப் பின்வரும் கான்மாறியாடிய படலத்துட் காண்க. (௩௨)

## தக்ஷிணாமூர்த்தி.

கல்லாலின் புடையமர்ந்து நான்மறையா றங்கமுதற் கற்ற கேள்வி,
வல்லார்க ணால்வருக்கும் வாக்கிறந்த பூரணமாய் மறைக்கப் பாலா,யெல்
லாமா யல்லவுமா யிருந்ததனை யிருந்தபடி யிருந்து காட்டிச், சொல்லா
மற் சொன்னவரை நினையாம னினைந்துபவத் தொடக்கை வெல்வாம்.

(இ-ள்.) கல்லால விருக்ஷத்தின் கீழ் வீற்றிருந்து, வேதம் - வேதாங்கமுதலிய எல்லாக்கலைகளையுங் கற்றறிந்த நூற்கேள்வியையுடைய முனிவர்களாகிய சனகன் சனந்தனன் சனாதனன் சனற்குமாரனென்னும் நால்வருக்கும், மனோவாக்குக் காயங்கட்கெட்டாத பரிபூரணப் பொருளாயும், வேதங்கட்கதீதப்பட்டதாயும், தானேயெல்லாப்பொருளுமாய் அப்பொருள்கள் தானல்லதுமாய் இருந்த உண்மைப்பொருளை,அஃதசைவற நிற்குமாபோல், தாமு மசைவறவிருந்து சின்முத்திரையாற்காட்டி (வாக்காற்) சொல்லாமற் (குறிப்பாற்)கூறிய தக்ஷிணாமூர்த்தியைத் (தற்போதமாகத்) தியானியாமல் (அருள்வழியாகத்) தியானித்துப் பிறவிப்பாசத்தை யொழிப்பாம்.

வேதாங்கம் ஆறு. அவையாவன:—மந்திரம் - வியாகரணம் - நிகண்டு - சந்தோபிசிதம் - நிருத்தம் - சோதிடம் என்பனவாம்.

இறைவன் கண்டப்பொருளன்றி அகண்டமாய்ச் சர்வவியாபியாயினும், "உணர்ந்தார்க் குணர்வறியோன்' என்றபடி அத்துவிதமாக அறிந்துள்ள சிவஞானிகட்கு அனுபவித் துணர்தற் கியலுமேயன்றி முன்னிலையாகச் சுட்டுணர்தற்கும்,பசுகரணத்துடன்காண முயலும் ஆன்மகோடிகளின் மனோவாக்குக் காயங்கட்கும் அதீதப்பட்டவனுமாதலின் "வாக்கிறந்த பூரணமாய்" என்றார். "ஒருமொழி யொழி தன்னினங்கொளற்குரித்தே" என்றதனால்வாக்கு என்பதனுடன் மனம் காயம் என்பவற்றையும் உடன்கொள்க. பரம்பொருள் மேல்விரித்த அத்தன்மைத்தாதலின் "அஃது இருந்தபடியிருந்து காட்டிச் சொல்லாமற் சொன்னவர்" எனவுங் கூறினர்.

"மறைக்கப்பாலாய்" என்பதனை "வேதங்க ளையா வெனவோங்கி யாழ்ந்தகன்ற நுண்ணியனே" என்னுந் திருவாசகத்தானும், "அல்லையீதல்லை யீதெனமறைகளு மன்மைச்சொல்லினாற் றுதித்திளைக்கும்" எனவும், "சுளாமணைச் சென்னியுந் தொடத்தொட நீண்ட நீளனீ" எனவும் வரும் இக்நூற்கவிகளானு முணர்க. "ஒன்று நீயல்லை யன்றி யொன்றில்லை" என்றாற்போலச், சிற்சடப் பிரபஞ்சங்களனைத்துந்

தன்னையின்றி வேறாக இயலாதாதலாலும், தாம் எல்லாப்பொருளுள்ளும் பாலுநீரும், உடலு முயிரும்போல ஒன்றி நிற்றலாலும், "எல்லாமாய்" எனவும், பாலும் உயிரும் ஒன்றாகாது பொருட்டன்மையால் வேறாதல்போல, தாம் எல்லாவற்றுள்ளுங் கலந்து நின்றும் வேறாக விளங்குதலின் "அல்லவுமாய்" எனவுங் கூறினர். "வாக்கிறந்த பூரணமாய், மறைக்கப்பாலாய், எல்லாமா யல்லவுமா யிருந்தது" என்பதனை—காஞ் சிபுராணம். "எழுதரு மறைகட் கெய்தா தெங்குமாய் நின்றாய்போற்றி - மொழியுடன் மனதுக் கெட்டா முழுப்பரம் பொருளே போற்றி" என்பதனுணர்க.

நினைத்தலு மறத்தலு மின்றி யெச்சமயத்துந் தியானிக்கவேண்டுமென் பது தோன்ற "நினையாமனினைந்து" எனப்பட்டது. தக்ஷிணாமூர்த்தி=தென்றிசை நோக்கியுள்ள சிவமூர்த்தி. தக்ஷிணம்=தெற்கு. இது வடசொல்.

உமாதேவியார் தமக்குற்ற தாக்ஷாயணி யென்னும் பெயரை மாற்றிக்கொள்ள விரும்பிச் சிவபெருமான்பால் விண்ணப்பஞ்செய்து அவர் கட்டளைப்படி இமாசலமன்னனுக்கு தவப்புதல்வியாகத் திருக்கோலங்கொண்டு இளங்குழந்தை வடிவேற்றுச் சென்று வளர்ந்துவருகையில், பிரமபுத்திரர்களாகிய சனகன் சனந்தன் சனாதனன் சனற்குமாரனென்னும் முனிவர் நால்வரும் வேதாகமங்களை யறிந்து பலவகைத் தவஞ்செய்து வெள்ளிமலையடைந்து திருநந்திதேவர் விடைபெற்றுத் திருச்சந்நிதானத்தினுட்சென்று சிவபெருமானைத் தரிசித்து "அருள்வெள்ளமே! வேதப்பொருளை யாராய்ந்தும் அடியேங்கள் மனம் அலைந்துகொண் டிருக்கின்றது. அஃதடங்கி யாங்கள் கடைத்தேறும்படி அவ்வேதத்தின் உட்கிடையாகவுள்ள பொருளை யுபதேசித்தருளவேண்டும்" எனப்பிரார்த்தித்தனர். இறைவர் "இருத்திர்" என, அவர்கள் நால்வரும் பெருமானது திருவடியின்கீ ழிருந்தனர். அப்பொழுது கல்லாலவிருக்ஷத் தின்கீழ் வீற்றிருந்த சிவபெருமான் முனிவர் விருப்பின்படி சிவாகமங்களிற் கூறப்பட்ட பதி-பசு-பாச லக்ஷணங்களை விளக்கிக்கூற, அவர்கள் அடியேங்கட்கு மனமொடுங்கும் வண்ணந் திருவருள்புரிக" என, விமலர் வேறொன்றுங் கூறாது "அப்பொருள் இவ்வாறிருக்கும்" எனத் திருக்கரமொன்றைத் திருமார்பிற்சேர்த்து * சின்முத்திரைகாட்டி முனிவர்போல யோகத்திருந்தனர். அதனால் அவர்கள் நால்வரும் மனமொடுங்கி ஞானநிலை யுணர்ந்து இறைவர் கட்டளைபெற்றுத் தமதிச்சைப்படி சென்றனர் என்பது. இவ்யோகநிஷ்டை மதனனாற் கலைக்கப்பட்டது. இவ்விபரம் வந்துழிக் கூறுவாம். (கக)

## சித்திவிநாயகக்கடவுள்.

உள்ளமெனுங் கூடத்தி லூக்கமெனுந் தறிநிறுவி யுண்மை யாகத்
தள்ளரிய வன்பென்னுந் தொடர்பூட்டி யிடைப்படுத்தித் தறுகட் பாசக்
கள்ளவினைப் பசுபோதக் கவளமிடக் களித்துண்டு கருணை யென்னும்
வெள்ளமதம் பொழிசித்தி வேழத்தை நினைந்துவரு வினைக டீர்ப்பாம்.

(இ-ள்.) மனமென்று சொல்லுங்கூடத்திலே, மனவுறுதியென்னுங்கட்டுத் தறியை நட்டு,ஒழித்தற்கரிய உண்மையன்பென்னுஞ் சங்கிலியை அக்கட்டுத் தறியிற் பூட்டி, அதனில் அகப்படுத்தி, (தீமைசெய்தலில்) அஞ்சுதலில்லாத ஆணவமலத்தோடொன்றாகிய வஞ்சவினைகளையுடைய சீவபோதமாகிய கவளங்களை யுண்பிக்கச் சந்தோஷித்துப்புசித்து,கிருபையென்னும் மதவெள்ளத்தைப்பொழிகின்ற யானையாகிய சித்தி விநாயகக்கடவுளைத் தியானித்து, வருகின்ற தீவினைகளை விலக்குவாம். ஏ-று.

கூடம்=யானை கட்டுமிடம். தறி=யானைகட்டுந் தம்பம். கவளம்—யானை யுண்ணும் வாய்கொண்டவுணவு. கூடத்தில் தறி நிறுவிச் சங்கிலிபூட்டி யானையை

* சின்முத்திரை = ஞானமுத்திரை. சித்+முத்திரை = சின்முத்திரை. இது வடமொழிச் சந்தி.

அதனைகப்படுத்திக் கவளமிடவுண்மெதம்பொழிதல் இயற்கையாதலின் ஈண்டுவிநாயகரை யானையாகக்கொண்டு அதற்கியைய முற்றுருவகப்படுத்தினர். இச்செய்யுள் உருவகவணி.

விநாயகர் பரஞானம்-அபரஞானமென இருவகைமதம் பொழிவதாக நூல்வல்லோர் கூறுவர்.

விநாயகர்வணக்கம் இருகாற்கூறிய தென்னெனில், முட்டின்றி முடிதற் பொருட்டு முதலிலும், சிவபெருமானையும் உமாதேவியாரையும் வணங்கிய பின்னர், அவர்கள் புத்திரரில் மூத்தோராதலால், முருகக்கடவுளுக்கு முன்னுமாக மீண்டுந் துதிசெய்யலாயிற்று. (கரு)

## சுப்பிரமணியக்கடவுள்.

கறங்குதிரைக் கருங்கடலுங் காரவுணப் பெருங்கடலுங் கலங்கக் கார்வந், துறங்குசிகைப் பொருப்புஞ்சூ ருரப்பொருப்பும் பிளப்பமறை யுணர்ந்தோ ராற்று, மறங்குலவு மகத்தழலு மவுணமட வார்வயிற்றி னழலு மூள,மறங்குலவு வேலெடுத்த குமரவேள் சேவடிகள் வணக்கஞ் செய்வாம்.

(இ-ள்.) சுழலுகின்ற அலைகளையுடைய கரிய சமுத்திரமும் கரிய உடல் பொருந்திய அசுரராகிய பெரியகடலுங் கலங்கவும், மேகங்கள்வந்து இளைப்பாறுகின்ற உச்சியையுடைய கிரௌஞ்சபர்வதமும், சூரபன்மனது மார்பகமாகிய மலையும் பிளக்கவும், வேதமுணர்ந்த அந்தணர்செய்கின்ற புண்ணியஸ்வரூபமாகிய யாகாக்கினியும் அசுரமாதர்களது வயிற்றில் துன்பமாகிய அக்கினியும் மூண்டெரியவும், வீரத்தன்மை பொருந்திய வேற்படையைத்தாங்கிய வேள் என்று சொல்லப்படும் முருகக்கடவுளது செவ்விய திருவடியைத் தொழுவோம். எ-று.

சூரபன்மன் கடலிலொளித்தபோது முருகக்கடவுள் தமது வேற்படையைச் செலுத்தி அதனைக் கலக்கினமையானும், சிங்கன் - தாருகன்முதலிய எண்ணில்லாத அசுரர்கள் பெரிய கரிய உருவுடையோரும் அவர்கள் திரள்கடல்போன்றதுமாக விளங்கியதை நிலைகலங்க வழித்தமையானும் "கறங்குதிரைக் கருங்கடலுங் காரவுணப் பெருங்கடலுங் கலங்க" எனவும், சூரபன்மனுக் கிளையசகோதரனாகிய தாரகன், கிரவுஞ்சமென்னும் அசுரனது மாயாவடிவமாகிய மலையில் வசித்திருந்தபோது தமது சத்தியைச் செலுத்தித் தாரகனைச்சங்கரித்துக் கிரவுஞ்சகிரியைப் பிளவுபடுத்தியதனாலும், சூரபன்மனது சைனியங்களை முற்றுமழித்து அவன் மார்பைப் பிளந்தமையானும் "கார்வந்துறங்கு சிகைப்பொருப்புஞ் சூருரப்பொருப்பும் பிளக்க" எனவும், யாககருமங்கள் வேதமுணர்ந்தாரால் அறநெறியாற் செய்யப்படுதலின் "மறையுணர்ந்தோராற்றும் அறங்குலவுமகம்" எனவும், சூரபன்மனாதி தீயோர் தேவர் முனிவர்கட்குத் தொலையாவிடர்செய்தவ ராதலின், அவர்களை யொழித்த பின்னரே யாகாக்கினி யெரியுமாதலானும், அவர்களைச் சங்கரித்தமையின் அவ்வசுரரது உறவினராகிய மாயைமுதலிய மாதர் வயிறுவருந்தி யெரியுமாதலாலும் "மகத்தழலும் அவுணமடவார் வயிற்றினழலு மூள" எனவும், இத்யாதி கருமங்களையும் நிகழச்செய்தது வேற்படையாதலாலும் அவ்வேற்படையேந்தியவர் விசாகப்பெருமானாதலும் "வேலெடுத்தகுமரவேள்" எனவுங் கூறினர்.

முருகக்கடவுள் போர்க்கோலங்கொண்டபொழுது சிவபெருமான் ஏகாதசருத்திரர்களைப் பதினொருபடையாகவும், உமாதேவியார் தமதுசத்தியை வேற்படையாகவுங் கொடுத்தனுப்பின ராதலின் வேல் சத்தியெனப்பட்டது. சத்தி தான்றோன்றிய விடங்களெனக் கருதாது மலையையுங் கடலையும் பிளவுபடவுங் கலங்கவுஞ் செய்தமைநோக்கி "மறங்குலவுவேல்" என்றார்.

குமரன் + வேள் = குமரவேள். சிலவிகாரமா முயர்திணை என்றபடி. வேள் என்பது முருகக்கடவுளுக்கு மதனனுக்கும் பொதுவாக விளங்குதலின் குமரவேள் என விளங்கக் கூறியதாம்.

இச்செய்யுளின்கருத்தை, கந்தபுராணம்-தாருகன்வதைப்படலம்.

"தாருகன் மார்ப மென்னுந் தடம்பெரு வரையைக் கீண்டு
சீரிய கிரவுஞ் சத்திற் சேர்ந்துபட் டுருவிச் சென்று
வீரமும் புகழுங் கொண்டு விளங்கிய தென்ன வங்கட்
சோரியுந் துகளு மாடித் துண்ணென மீண்ட தன்றே." எனவும்,

கந்தபுராணச்சுருக்கம் - யுத்தகாண்டம்.

"தங்கும்பல வடிவங்கொடு சமராடலு முருகன்
றனிவேலை விடுத்தானது தருவர்க்கிறை கண்டே
சங்குந்திய வேலைப்புடை தடமாமர மாகிச்
சாரக்கதிர் வேல்சென்று தடிந்திட்டது மாதோ."
"சங்கத்தியின் மேனின்றிடு மாவைக்கதிர் வேல்போய்ச்
சாயும்படி செய்திட்டுழி தருவர்க்கிறை கண்டே
துங்கத்தன துருவங்கொடு பொரவேவரை மார்பைத்
துண்ணென்று பிளந்தண்டர்க ளெள்ளும்படி தள்ளி
மங்குற்பொலி வானத்துறு கங்கைப்புன லாடி
வந்தேகும ரன்பாணி புகுந்தேகதிர் வைவே
லங்குற்றது வெஞ்சூரனி ரண்டான பிளப்பு
மடன்மாமயி லொடுகுக்குட மாகிப்பொர வந்தான்." — எனவும் வருவனவற்றா னுணர்க. (கரு)

## சரஸ்வதியம்மை.

பழுதகன்ற நால்வகைச்சொன் மலரொடுத்துப் பத்திபடப் பரப்பித் திக்கு, முழுதகன்று மணந்துசுவை யொழுகியணி பெறமுக்கண் மூர்த்தி தாளிற், றொழுதகன்ற வன்பெனுநார் தொடுத்தலங்கல் சூட்டவரிச் சுரும்புந் தேனுங், கொழுதகன்ற வெண்டோட்டு முண்டகத்தா ளடிமுடிமேற் கொண்டு வாழ்வாம்.

(இ-ள்.) குற்றமற்ற (பெயர்வினை இடைஉரியென்னும்) நால்வகைச்சொற்களாகிய (நால்வகை) மலர்களையுமெடுத்துப் பத்தியுண்டாகப் பரப்பி, அஷ்டதிக்குகளிலும் பரந்து மணம்வீசி மதுரமொழுகி, பரந்த அன்பாகிய நாரால்தொடுத்த பாமாலையை அலங்காரம்பெற, திரிநேத்திரங்களையுடைய சிவபெருமானது திருவடியில் வணங்கிச் சாத்த, கீற்றுகளையுடைய ஆண்வண்டுகளும் பெண்வண்டுகளுங் கிண்டுதலால் விதசித்த வெள்ளிய இதழ்களையுடைய தாமரைமலரில் வீற்றிருக்குஞ் சரஸ்வதியம்மையின் திருவடியை முடிமேலணிந்து வாழ்வாம். எ-று.

பூமாலை தொடுப்பவன் நான்குவகையினவாகிய மலர்களையு மெடுத்து வரிசைபடப் பரப்பி அலங்காரம்பொருந்த நாராற்றொடுக்கவேண்டுவதுபோல, பாமாலை தொடுப்பவன் நால்வகையினவாகிய சொற்களையுமெடுத்துப் பத்தியுண்டாகப்பரப்பி, பொருள்சொல்முதலிய அலங்காரம்பொருந்த அன்பாற்றொடுக்கவேண்டுவது. அன்றியும் மலர்மாலை திக்கெங்கும் பரவி மணம்வீசித் தேனொழுகுதல்போல, கவிமாலை, திக்கெங்கும் பரந்து புகழுண்டாக்கிச் சுவையொழுக்கும் என்றார்.

திருமகளும் நாமகளும் முறையே செந்தாமரை வெண்டாமரை மலர்களில் வசித்தலின் முண்டகத்தாளெனப் பொதுப்படக் கூறுது ஐய மகற்ற "வெண்டோட்டு முண்டகத்தாள்" என்றார்.

பத்தி=வரிசை; பக்தி. அணி=அழகு; சொற்பொருளணிகள். நார்=கயிறு; அன்பு. அலங்கல்=பூமாலை; நூல். சுவை=தேன்; வீரமுதலிய சுவை என இவற்றைச் சிலேடையாகக் கொள்க.

நால்வகைமலர்கள்.—கோட்டுப்பூ - கொடிப்பூ- நிலப்பூ- நீர்ப்பூ வென்பன. அவற்றுட் பாதிரிமுதலியன கோட்டுப்பூ - முல்லை முதலியன கொடிப்பூ-செவ்வந்தி முதலியன நிலப்பூ-தாமரைமுதலியன நீர்ப்பூ - இவற்றுடன் புதற்பூவென வொன்று கூட்டி ஐந்தென்பாருமுளர்.

மலர்கட்குப்பழுதாவது புழுக்கடி இடபேதமுதலியவை-விரிவு புஷ்பவிதியிற் காண்க. செய்யுட்குச் சுவை எண்வகை. அவை வீரம்- அச்சம்-இழிப்பு-வியப்பு-காமம் - அவலம் - உருத்திரம் - நகை என்பன. இதனை "உண்ணிகழ் தன்மை புறம்பொழிந்தோங்க-வெண்மெய்ப் பாட்டி னியல்வது சுவையே. அவைதாம்- வீர மச்ச மிழிப்பொடு வியப்பே- காம மவல முருத்திர நகையே" என்றார் தண்டியாசிரியர்.

சொன்மலர்=பண்புத்தொகை. (கசு)

## திருநந்திதேவர்.

### மேற்படி-வேறு.

வந்திறை யடியிற் றாழும் வானவர் மகுட கோடி
பந்தியின் மணிகள் சிந்த வேத்திரப் படையாற் றாக்கி
யந்தியும் பகலுந் தொண்ட ரலகிடுங் குப்பை யாக்கு
நந்தியெம் பெருமான் பாத நகைமலர் முடிமேல் வைப்பாம்.

(இ-ள்.) (திருக்கைலாயகிரியில்) வந்து சிவபெருமானது திருவடியில் வணங்குகின்ற (திருமால்முதலிய) கணக்கில்லாத தேவர்களது கிரீடங்களிற் பதித்துள்ள வரிசையிலிருந்து இரத்தினங்கள் சிந்தும்படி பிரம்பாயுதத்தினு லடித்து அந்திக்காலத்திலும் பகற்காலத்திலும் அடியார்கள் திருவலகிடுங் குப்பையாகச்செய்யுந் திருநந்திதேவராகிய எமது பெருமானது திருவடியாகிய தாமரைமலரைச் சிரமேல் அணிந்துகொள்வாம். எ-று.

நகைமலர்=விகசித்தபுட்பம்.

தேவர் சிவதரிசனார்த்தமாகத் திருக்கைலாய மலையிற் கூட்டங்கொண்டு நிற்றலின் அவர்களது நெருக்கமொழியும் வகையாகப் பொற்பிரம்புகொண்டோச்சி அவர்களை விலக்கித் தொண்டர் அடிக்கடித் திருவலகிடுங் குப்பையாக்குதலானும், தாம் பலவாற்றானும் பெருமானுக்கு அடிமையாதலை விளக்கி நிற்றலானும் "நங் குருமரபிற் கெல்லா முதற்குரு நாதனாகி" என்றபடி எல்லாக் குருமரபிற்கும் முதற்குருநாதனுமாகி நிற்றலானும் "தொண்டரலகிடுங் குப்பையாக்கு நந்தியெம்பெருமான்" என்றார். (கஎ)

## ஸ்ரீ ஞானசம்பந்தமூர்த்தி நாயனார்.

கடியவிழ் கடுக்கை வேணித் தாதைபோற் கனற்கண் மீனக்
கொடியனை வேவ நோக்கிக் குறையிரந் தனையான் கற்பிற்
பிடியன நடையாள் வேண்டப் பின்னுயி ரளித்துக் காத்த
முடியணி மாடக் காழி முனிவனை வணக்கஞ் செய்வாம்.

(இ-ள்.) தீவிழியால், மீனகேதனனாகிய மன்மதனைச் சாம்பராகும்படி பார்த்து, கற்பின் வழிநிற்கும் அவனது மனைவியாகிய பெண்யானைபோலும் நடையையுடைய இரதிதேவி தனது குறைகளை விண்ணப்பித்து யாசிக்க, பிறகு உயிர்தந்து காத்த மணத்துடன் விகசித்த கொன்றைமாலையணிந்த சடாபாரத்தையுடைய தந்தையாராகிய சிவபெருமானைப்போல, (தாம் மதுரைமாநகரத்திற் சைவத் திருமடத்தில் வீற்றிருக்கையில், பாண்டியனேவலால் சமணர் திருமடத்தில் தீயிட) அவர்கள்கொளுவிய தீ மீனக்கொடியேந்திய கூன்பாண்டியனை (சுரநோயாகப்பற்றித்) துன்புறுத்தும்படி திருக்கண்ணோக்கஞ்செய்து, அவனது கற்பினையுடைய மனைவியாரும் பிடிபோலு நடையுடைய வருமாகிய மங்கையர்க்கரசியம்மையார் வேண்டிக்கொள்ள, (அவர் வேண்டுகோளுக் கிரங்கி) பிறகு (சுரநோய் தீர்த்து) உயிர்காத்தளித்த சிகரங்கள்பதித்த மாளிகைகளையுடைய சீகாழிப்பதியில் திருவவதாரஞ்செய்த திருஞானசம்பந்தமூர்த்திநாயனாரைப் பணிவாம். எ-று.

உமாதேவியார் பர்வதராஜ புத்திரியாராக வளர்ந்துவருகையில், சிவபெருமான் சதுர்வித புருஷார்த்தங்களைச் சனகாதிமுனிவர்கட் கருளி யோகிருந்தனர். அது சமயம் சூரபன்மனால்துன்புற்ற தேவர் வேண்டுகோளின்படி பிரமன் மன்மதனை நினைக்க, அவன் வந்து வணங்கி "என்னை நினைத்ததென்" என, பிரமன் "சிவபிரான் மீது மலர்க்கணைதொடுத்து, அவர் யோகுநீங்கி உமையை மணம்புரியச் செய்" என, மதனன் கேட்டு "சிவசிவ" என்று செவியை மூடிக்கொண்டு "உடன்படேன்" என, பிரமன் "தடுத்தாற்சபிப்பேன்" என, மன்மதன் "நின்சாபம் பெறுவதினும் சிவபிரான்முன் சென்று இறப்பதே நலம்" என்று விடைகொண்டு தனதுலகடைந்து மனைவியாகிய இரதிக்குக் கூறிப் புறப்படுகையில், அவள் தடுப்ப அவளைத் தேற்றி, அம்பறாத்தூணிகட்டி, தாமரை - மா - அசோகு - முல்லை - நீலமாகிய ஐந்துமலர்க் கணைகளும், கரும்புவில்லும், மாந்தளிராகிய வாளும், குயிலாகிய எக்காளமும், முரசமாகிய கடலொலியும், சந்திரனாகிய குடையும், மீனக்கொடியுங்கொண்டு கிளியாகிய குதிரைகள்பூட்டிய தென்றற்றேர்மீது இரதியுடனேறித் திருக்கைலாய மலையையடைந்து, தேரினின்றிறங்கிப் பணிந்து தனது பரிவாரங்களை நிறுத்திவிட்டு, இரதியுடன் வில்லும் வாளியுங்கொண்டு திருநந்திதேவரை வணங்கி "பெருமான்பாற் செல்ல விடையருள்க" என, திருநந்திதேவர் எம்பெருமான் முன் கட்டளைசெய் துள்ளபடி "மேற்புறவாயிலாற் செல்க" என விடையளிக்க, அவ்வாறே சென்று சிவபெருமான் யோகத்திருத்தலைக் கண்டு நடுநடுங்கி மூர்ச்சித்து வீழ்ந்தனன். இரதி அவனையுபசரிக்க மதனன்மூர்ச்சைதெளிந்து இறக்கத்துணிந்து கரும்புவில்லைவளைத்து, சுரும்பு நாணேறிட்டுப் பஞ்சபாணங்களைச் சிவபெருமான்மீது விடுத்தனன். அம் மலர்க்கணை அண்ணலது திருமேனியிற்படச் சிறிது விழித்தலால் மதனன் சாம்பராயினன். இரதி பலவகையாகப் புலம்பிப் பெருமானைத் துதிக்க, சிவபெருமான் "உமையைமணந்த பின்னர் மதனனை யெழுப்புவோம்" என் றனுக்கிரகித்து விடுத்து, சத்தருஷிகளால் உமையை மணம்பேசி மணந்தனர். அப்பொழுது இரதி சிவபெருமானை வேண்ட, அவளுக்குமாத்திரம் தோன்றவும் உலகில் அரூபியாகவிருந்து தன்றொழிலைப் புரியவும் மதனனை யனுக்கிரகித்தனர். இதனை,

கந்தபுராணம் – காமதகனப்படலம்.

"விட்டவெம் பகழி யைந்தும் வியத்தகு விமலன் மெய்யிற்
பட்டலுஞ் சிறிதே வேளைப் பார்த்தனன் பார்த்தலோடுங்
கட்டழல் பொதிந்த நெற்றிக் கண்ணது கடிதே காமற்
சுட்டது கயிலை முற்றுஞ் சூழ்புகை பரவிற் றன்றே."

கந்தபுராணம்-மோனநீங்குபடலம்.

"இனைய கூறின ளிரதிவேண் டிடுதலு மிணைதீர்ந்த
புனித நல்லரு ளெய்தியே மங்கைநீ புலம்பாய்கேள்
வனைக ருங்குழற் கவுரியை மேவியாம் வரைபோதி
லுனது கேள்வனை யளிக்குதும் போதியென் றுரைசெய்தான்."

ஷை திருக்கல்யாணப்படலம்.

"எரிபுரை நமது நோக்கா லிறந்தநின் னுடல நீறாய்
விரைவொடு போயிற் றன்றே வேண்டின ளிரதி யன்னாட்
குருவமா யிருத்தி யேனை யும்பரோ டிம்பர்க் கெல்லா
மருவிலை யாகி யுன்ற னரசியல் புரிதி யென்றான்." என வருவதனாலறிக.

பாண்டிநாடு முழுவதுஞ் சமணசமய மேலிட்டு, அரசனாகிய கூனபாண்டியனும் அந்நெறியினிற்றலை யுணர்ந்து அந்தரங்க சிவபக்தியுடைய மங்கையர்க்கரசியம்மையாரும், மந்திரியாகிய குலச்சிறைநாயனாருஞ் சிந்தித்திருக்கையில், திருஞானசம்பந்தமூர்த்தி நாயனாரது பிரபாவங்களைக் கேள்வியுற்று, அவரை வருவிக்கவேண்டுமென்று யோசித்துத் தீர்மானிக்க, குலச்சிறைநாயனார் "தேவரீரிங் கெழுந்தருளிச் சமணக்களை களைந்து பாண்டிநாடுமுழுவதுஞ் சைவப் பயிர் தழையச் செய்து, பாண்டியனுக்கும் விபூதிதாரணஞ் செய்வித்து அடியேங்களைக் காக்கவேண்டும்" என்று ஓர் திருமுகமனுப்பத் திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார் உடனே புறப்பட்டு மதுரை நகரை யடைய, குலச்சிறைநாயனார் எதிர்வந்து பணிந்து ஓர் திருமடத்தி லிருத்தினர். அவரது வருகையைப்பொறாத சமணர்கள் பாண்டியனனுமதிப்படி ஆளுடையபிள்ளையார் அடியவரோடு வீற்றிருக்குந் திருமடத்தில் தமது மந்திரப்பிரயோகத்தால் தீயூட்ட முடியாது கையினால் தீவைத்துக் கொளுத்தினர். அதுகண்ட பிள்ளையார் அடியவர்கட்குத் தீமைநேரிடாதவண்ணம் "இத் தீ பாண்டியனைப் பற்றுக" எனத் திருவாய் மலர்ந்தருள, அஃது வெப்புநோயாக அவனைவருத்த, அரசன் சமணமதமேற்கொண்டவனாதலின் அச்சமயத்தாசிரியராகிய அடிகண்மாரை வருவித்துக் கூறி அவரது மருந்து மந்திரமுதலிய பிரயோகங்களாலுந் தீராது துன்புறுவது கண்ட பாண்டிமாதேவியார் ஸ்ரீஞானசம்பந்தப்பெருமானது பிரதாபங்களைக்கூறி அவரைவருவிக்க, பிள்ளையார் திருவெண்ணீ றளித்துச் சுரநோயை நீக்கிப் பாண்டியனைச் சைவசமயத்தை மேற்கொள்ளச் செய்தனர். என்பது,

திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார் தேவாரம்.

திருவாலவாய்.

பண் - கௌசிகம்.

"செய்ய னேதிரு வாலவாய் மேவிய
ஐய னேயஞ்ச லென்றருள் செய்யெனை
பொய்ய ராமம ணர்கொளு வுஞ்சுடர்
பைய வேசென்று பாண்டியற் காகவே."

திருநீற்றுப்பதிகம்.

"மந்திர மாவது நீறு வானவர் மேலது நீறு
சுந்தர மாவது நீறு துதிக்கப் படுவது நீறு
தந்திர மாவது நீறு சமயத்தி லுள்ளது நீறு
செந்துவர் வாயுமை பங்கன் திரு வாலவா யான்திரு நீறே.(கூ)

## ஸ்ரீ வாகீசமூர்த்தி நாயனார்.

அறப்பெருஞ் செல்வி பாகத் தண்ணலஞ் செழுத்தா லஞ்சா
மறப்பெருஞ் செய்கை மாறா வஞ்சக ரிட்டகல்
நிறப்பெருங் கடலும் யார்க்கு நீந்துதற் கரிய வேழு
பிறப்பெனுங் கடலுநீத்த பிரானடி வணக்கஞ் செய்வாம்.

(இ-ள்) (முப்பத்திரண்டு) தருமங்களையும் (இறைவர் பிரசாதித்த ஈராழி நெல்லைக்கொண்டு) நடத்திய பெருஞ்செல்வியாகிய உமாதேவியாரை இடப்பாகமாகக் கொண்ட சிவபெருமானது ஸ்ரீ பஞ்சாக்ஷர மந்திரமாகிய புணையினால், அஞ்சாமற் பெரும்பாவச் செயல்களை யொழியாத வஞ்சகராகிய சமணர்கள் (கருங்கல்லோடு பிணித்து) விடுத்த நீல நிறம்பொருந்திய பெரிய சமுத்திரத்தையும், எவ்வகையினருக்கும் நீந்திக் கரைகாண்டற்கரிய எழுவகைப் பிறவியென்று சொல்லப்படுங் கடலையும் நீந்தி யொழித்த தலைவராகிய திருநாவுக்கரசு நாயனாரது திருவடிகளைப் பணிவாம்.

இறைவர் எட்டுழக்காகிய ஈராழிநெல்லைக் கொடுத்தபோது உமாதேவியார் அதனைத் தமது திருக்கரங்களா லேற்று, அதனைக்கொண்டு திருக்காஞ்சியில் முப்பத்திரண்டு தருமங்களையும் இயற்றினராகலின் "அறப்பெருஞ்செல்வி" எனப்பட்டனர்.

இச் சரிதையை "இமயமலை யரயன்மக டழுவக் கச்சி யேகம்பர் திருமேனி குழைந்த ஞான்று-சமயமவை யாறினுக்குந் தலைவிக் கீசர் தந்தபடி யெட்டுழக்கீராழி நெல்லு - முமைதிருச்சூ டகக்கையாற் கொடுக்க வாங்கி" என்னுந் திருத்தொண்டர் புராண வரலாற்றா னறிக.

திருநாவுக்கரசுசுவாமிகள் தனது இளமைப்பருவத்தே தாய்தந்தையர்வீட்டு நெறிச் செல்ல, தன் தமக்கையா ருதவியால் வாழ்கின்றவர் முன்னைய வினைப்பயனாற் சைவசமயத்தை விடுத்து ஆருகத மதப்பிரவேசஞ்செய்து தருமசேனரெனப் பட்டம் பெற்றனர். இஃதறிந்த இவர் தமக்கையாராகிய திலதவதியார் தாம்கைத்தொண்டு செய்து வரும் திருவதிகை வீரட்டானேசருக்கு விண்ணப்பஞ்செய்ய, சிவபெருமான் அவருக்குச் சூலைநோய்கொடுத்து அதன்மூலமாகத் திருவதிகைக்கு வருவித்து அதனை விலக்கி ஆட்கொண்டருளினர். அதனைப் பாடலிபுத்திரத்திலிருக்குஞ் சமணர்கேள்வியுற்று அரசன் அறிந்தால் நம்மீது மனம்வெறுப்பான் என்றெண்ணி அப்பல்லவராசனையடைந்து "நமது சமயத்திருந்த தருமசேனர் சூலைநோய்கொண்டதாகக் காட்டி எம்மாற் றீரவில்லையென்று மோசஞ்செய்து பழையபடி சைவராகித் தன் தமக்கையோடு கூடியிருக்கின்றனர்" என, அவன் கோபித்து ஏவலாளரையனுப்பி அழைத்துவரவுத்திரவளிப்ப, அவர்கள் அவ்வாறே யழைத்தனர். ஆளுடைய வரசு "நாமார்க்குங் குடியல்லோம்" என்று தடுத்து, மந்திரிகள் பிரார்த்திக்க, அவர்களோடு சென்றனர். அரசன் "நம்மையிகழ்ந்தோனை யாது செய்வோம்" என, சமணர் "நீற்றறையிலிடவேண்டும்" என, அரசன் அனுமதிகொடுப்ப நீற்றறையிலிட்டனர். நாயனார் சிந்தனையற்று "மாசில்வீணையும்" என்னுந் திருப்பதிகமோதிக் குளிர்ச்சியாக விருந்தனர். ஏழாநாள் நீற்றறைதிறந்து அவர் நன்குவிளங்குவது கண்டு "இனி நஞ்சூட்டுவது தகும்" என, அவ்வாறே நஞ்சுகலந்தபாற் சோறிட, அதனை யுண்டும் உயிர்வாழ்ந்திருக்க, "இனிப் பட்டத்துயானையை விடுவது தகும்" என்று, அரசன் யானையை அவர்முன்நிறுத்த அவர் அஞ்சாமல் "சுண்ணவெண் சந்தனச்சாந்து" என்னும் பதிகமோத, யானை அவரை வலஞ்செய்துபோயிற்று. அவர் ஒருவகையிலு மிறவாமையால் அரசன் கட்டளைப்படி கற்றூணோடு பிணித்துப் படகிலேற்றிப்போய்க் கடலிற் றள்ளிவிட, திருநாவுக்கரசுநாயனார் "சொற்றுணைவேதியன்" என்னும் நமச்சிவாயத் திருப்பதிகமோதியருள, சிவகடாக்ஷத்தால் அஃது மிதந்தது. கயிறு அறுந்தது. வரு

ணன்கல்லையே சிவிகையாகத் தாங்கிக்கொண்டு திருப்பாதிரிப்புலியூரின் பக்கத்தில் விடக்கரையேறினர். அதுகண்ட பல்லவராசன் சைவனானான் என்பது.

திருநாவுக்கரசுநாயனார் தேவாரம்.

தனித்திருக் குறுந்தொகை.

"மாசில் வீணையு மாலை மதியமும்
வீசு தென்றலும் வீங்கிள வேனிலும்
மூசு வண்டறை பொய்கையும் போன்றதே
ஈச னெந்தை யிணையடி நீழலே."

பண் - காந்தாரம்.

"சுண்ணவெண் சந்தனச் சாந்துஞ் சுடர்த்திங்கட் சூளா மணியும்
வண்ண வுரிவை யுடையும் வளரும் பவள நிறமும்
அண்ண லரண்முர ணேறும் அகலம் வளாய வரவும்
திண்ணன் கெடிலப் புனலு முடையா ரொருவர் தமர்நாம்.
அஞ்சுவ தியாதொன் றுமில்லை யஞ்சவருவது மில்லை."

நமச்சிவாயத் திருப்பதிகம் பண்-காந்தாரம்.

"சொற்றுணை வேதியன் சோதி வானவன்
பொற்றுணை திருந்தடி பொருந்தக் கைதொழக்
கற்றுணைப் பூட்டியோர் கடலிற் பாய்ச்சினும்
நற்றுணை யாவது நமச்சி வாயவே." (கக)

## ஸ்ரீமத் சுந்தரமூர்த்திநாயனார்.

அரவக லல்கு லார்பா லாசைநீத் தவர்க்கே வீடு
தருவமென் றளவில் வேதஞ் சாற்றிய தலைவன் றன்னைப்
பரவைதன் புலவி தீர்ப்பான் கழுதுகண் படுக்கும் பானு
ளிரவினிற் றூது கொண்டோ னிணையடி முடிமேல் வைப்பாம்.

(இ-ள்.) பாம்பின் படம்போலும் பரந்த கடிதடமுடைய மாதரிடத்தில் ஆசையை அகற்றினவர்களுக்கே மோக்ஷங்கொடுப்போமென்று கணக்கில்லாத வேத வாக்கியங்களில் திருவாய்மலர்ந்தருளிய சிவபெருமானை, பரவைநாச்சியார் கொண்ட ஊடலைத் தவிர்க்கும்படி பேய்களுந் துயில்புரியும் நடுராத்திரியில் தூதாகக்கொண்டருளிய ஸ்ரீ சுந்தரமூர்த்தி நாயனாரது உபயபாதங்களை எமது முடிமேல் அணிந்து கொள்வாம். எ-று.

சுந்தரமூர்த்திசுவாமிகள் தலயாத்திரை செய்துவருவதாகத் திருவாரூரினின்று பரவைநாச்சியார்பால் விடைபெற்றுவந்தவர் தொண்டைநாட்டிலுள்ள சிவஸ்தலங்களைத் தரிசித்துக்கொண்டு வருகையில், திருவொற்றியூரையடைந்து அச்சந்நிதானத்திற் புட்பத்திருத்தொண்டு செய்துகொண்டு கன்னிமாடத்தில் வாழ்ந்திருந்த சங்கிலிநாச்சியாரைக்கண்டு பூர்வவினைச்சம்பந்தத்தாற் காமுற்றனர். சங்கிலியாரும் சுந்தரமூர்த்திசுவாமிகள்மீது பண்டைய அன்பால் ஆசையுற்றனர். அவ்விருவர் வேட்கையையுங் கண்ட படம்பக்கநாதர் இருவரையு மணஞ்செய்வித்தனர். அதுகாலத்தில் நாயனார் சங்கிலியாரைப் பிரியேனென்று திருமகிழ விருக்ஷத்தின்கீழ் சபதஞ் செய்து கொடுத்தனர். சிறிதுகாலம் அவ்வம்மையாருடன் நம்பியாரூரர் அத் திருவொற்றியூரிலேயே வாழ்ந்திருந்தனர். ஒருநாள் திருவாரூரில் வன்மீகப்பெருமானது வசந்தோற்சவ தரிசனத்தில் அவாக்கொண்ட ஆரூரர் அத் திருவாரூரைத் தரிசிப்பான் கருதி, தான்செய்த சூளுரையை மறந்து திருவொற்றியூரின் திருவெல்லையைக் கடக்க, உடனே

அவரது இரண்டு திருவிழிகளு மறைந்து உடலிலோர் வியாதி தோன்றியது. வன்றொண்டர் மனவருத்தத்துடன் திருவெண்பாக்க மடைந்து "இங்கிருக்கின்றீரா" என்று திருப்பதிகமோத, பெருமான் "இருக்கின்றோம். நீ செல்" என்று ஓர் ஊன்றுகோல் கொடுக்கப் பெற்று, காஞ்சிமாநகரடைந்து ஏகாம்பரீச்சுரரால் இடதுவிழியும், திருவாரூரடைந்து வன்மீகநாதரால் வலதுவிழியுங் கொடுக்கப் பெற்றனர்.

இவரது வருகையையும் நடந்த விர்த்தாந்தங்களையுங் கேட்ட பரவைநாச்சியார் "அவ்வாரூரர் தனது மாளிகை யடைந்தால் உயிரொழிவேன்" எனக் கூறிய விஷயத்தைச் சில அடியார் மூலமாக அறிந்த சுந்தரமூர்த்தி சுவாமிகள் மிக்க வருத்த முற்று அருள்வள்ளலாகிய அண்ணலைப் பிரார்த்திக்க, சிவபெருமான் அவர் தமது தோழராகலின் அவருக்கிரங்கி, கோயில் அர்ச்சகரது ரூபமாக நடுராத்திரியிற் சங்கிலியாரது திருமாளிகை யடைந்து திருக்கதவைத் தட்டி யெழுப்ப, பரவையார் இவனைக் கோயிற்பூசைசெய்யும் ஆதிசைவனொன்று கருதி, "ஸ்வாமி! தேவரீர் அடியேன் குடிலுக்கு இவ்விரவில் வந்த காரணம் யாது" என வினவ, குருக்கள் வேடங்கொண்டு வந்த பெருமான் "யான் சொல்வது ஒப்புக்கொள்ளக்கூடுமாயின் வந்தகாரணத்தைக்கூறுவேன்" என, பரவையார் "இசையுமாகிற் சரி" என, சிவபெருமான் "நம்பியாரூரர் ஈண்டு வரவேண்டும்" என, பரவையார் மிகவும் வெகுண்டு "தாங்கள் நடுராத்திரியில் வந்து சொல்லிய சங்கதி சாலவும் அழகிது. போம் போம்" என மறுப்ப, இறைவர் ஓர் திருவிளையாடல் புரிவாராய் ஆரூரரிடம் வந்து மறுத்ததையே உத்திரவாகக்கூறி அவர் வேண்டுகோளுக்குத் தடைசொல்ல முடியாதவராய் மீண்டும் பரவையார் திருமாளிகை யடைந்து ஸ்ரீ கைலாயத் திருக்கோலங் காட்டி "நமது சுந்தரன் ஈண்டு வரவேண்டும்" என, பரவையார் யாதொன்றுஞ் சொல்லமாட்டாமல், தேவரீருக்குத் திருவுளம் இவ்வாறிருப்பின், யான் என்னசெய்வதென் றியைய, சிவபெருமான் நம்பியாரூரருக் கறிவித்து அந்தர்த்தான மாயினர். சுந்தரமூர்த்திசுவாமிகள் பரவையார் திருமாளிகை சேர்ந்து வாழ்ந்திருந்தனர். என்பது. இதனை,

திருத்தொண்டர் புராணம்.

"பங்குனித் திருநா ளுக்குப் பண்டுபோல் வருவா ராகி
யிங்கெனைப் பிரிந்து போகி யொற்றியூ ரெய்தி யங்கே
சங்கிலித் தொடக்குண் டாருக் கிங்கொரு சார்வுண் டோநீர்
கங்குலின் வந்து சொன்ன காரிய மழகி தென்றார்.

அருமறை முனிவ ரான வையனாத் தைய லார்தங்
கருமமீ தாக நீரிக் கடைத்தலை வருகை மற்றும்
பெருமைக்குத் தகுவ தன்றா லொற்றியூ ருறுதி பெற்றார்
வருவதற் கிசையே னீரும் போமென மறுத்துச் சொன்னார்."

"பெருந்தடங் கண்ணி னாரும் பிரான்முன்பு மிகவு மஞ்சி
வருந்திய வுள்ளத் தோடு மலர்க்கரங் குழன்மேற் கொண்டே
யருந்திரு மறையோ ராகி யணைந்தீர்முன் னடியேன் செய்த
விருந்தவப் பயனா மென்ன வெய்திய நீரோ வென்பார்.

துளிவளர் கண்ணீர் வாரத் தொழுதுவிண் ணப்பஞ் செய்வா
ரொளிவளர் செய்ய பாதம் வருந்தவோ விரவு மாறா
தளிவரு மன்பர்க் காகவங்கொடிங் குழல்வீ ராகி
யெளிவரு வீரு மானா லென்செய்கே னிசையா தென்றார்." (௨௦)

## ஸ்ரீமந் மாணிக்கவாசகமூர்த்தி.

எழுதரு மறைக டேறு மிறைவனை யெல்லிற் கங்குற்
பொழுதறு காலத் தென்றும் பூசனை விடாது செய்து
தொழுதகை தலைமே லேறத் துளும்புகண் ணீருண் மூழ்கி
யழுதடி யடைந்த வன்ப னடியவர்க் கடிமை செய்வாம்.

(இ-ள்.) எழுதுதற்கரிய வேதங்கள் கண்டறியாத தலைவராகிய சிவபெருமானைப் பகலும் இரவுமாகிய அறுவகைக் காலத்திலும் எந்நாளும் இடைவிடாமற் பூசைசெய்து பணிந்த கரங்கள் சிரசின்மேலேற அரும்புகின்ற ஆனந்த பாஷ்பத்திற் குளித்து (பிரிவாற்றாமையால்) அழுது, திருவடியையடைந்த அன்பராகிய ஸ்ரீமந் மாணிக்கவாசகப்பெருமானது அடியவர்கட்கு அடிமைத்திறஞ் செய்வோம். எ-று.

உதாத்தம் - அநுதாத்தம் - சொரிதமுதலிய ஒலிவடிவாகவுள்ள வேதங்களனைத்தும் எழுதாக்கிளவியே யென்பார் "எழுதருமறைகள்" என்றார். இவற்றை எடுத்தல் - படுத்தல் - நலிதல் எனத் தமிழ்நூலார் கூறுப.

"வேதங்க ளையாவெனவோங்கி யாழ்ந்தகன்ற நுண்ணியனே" என்னுந் திருவாசகத்தின்படி வேதங்கள் பல்லூழிகாலம் வருந்தித் தேடினும் அவற்றிற் கெட்டாப் பரம்பொருளாதலின் "மறைகடேறு" என்றுங் கூறினர்.

அறுகாலம்—மாலை - யாமம் - வைகறை - காலை - உச்சி - எற்பாடு.

அரிமர்த்தனபாண்டியன் குதிரைகொள்ளும்படி கொடுத்தனுப்பிய அளவில்லாத பொருளுடன் மணிவாசகப்பெருமான் திருப்பெருந்துறையை யடைகையில், சிவபிரான் ஆண்டோர் குருந்தமர நீழலில் ஆசிரியத் திருக்கோலந்தாங்கி, திருநந்தி முனிகணங்கள் மாணாக்கராய்த் தம்மைப் புடைசூழ வீற்றிருந்தனர். அவ்விடத்தை யடைகையிலேயே வாதவூரையருக்கு அன்பும் ஆறாமையும் அதிகரிக்க, ஆசிரியர் பெருமானைத் தரிசித்து ஆநந்தசாகரத்தில் மூழ்கிப் பரவசராய், உடல்பொருளாவி மூன்றனையும் ஒப்புக்கொடுத்து உபதேசம்பெற்றனர். அருள்வடிவாகிய ஆசிரியர் அஸ்தமஸ்தகசையோகஞ் செய்து ஐந்தெழுத்துண்மையை அவர் மனதில் அசைவறநாட்டியருளினர். சிறிதுநாள் கழிந்தபின்னர் "மாணிக்கவாசக! இங்கிருக்க" என்று திருவாய்மலர்ந்து திருநந்தி முனிகணங்களுடன் அந்தர்த்தானமாயினர். அதுபொழுது பிரிவாற்றாமையின் அழுதழுது தமிழ்மாலை சூட்டினமையின் "அழுதடியடைந்தவன்பன்" என்றார். இவரது மற்றையசரிதமும் பின்வரும் வாதவூரடிகளுக் குபதேசித்த படலமுதல், நான்குபடலங்களா னறிக. (௨௧)

## சண்டேசுரநாயனார்முதலிய நாயன்மார்.

### மேற்படி - வேறு.

தந்தைதா ளொடும்பிறவித் தாளெறிந்து நிருத்தரிரு தாளைச் சேர்ந்த, மைந்தர்தாள் வேதநெறி சைவநெறி பத்திநெறி வழாது வாய்மெய், சிந்தைதா னரனடிக்கே செலுத்தினராய்ச் சிவானுபவச் செல்வ ராகிப், பந்தமாந் தொடக்கறுத்த திருத்தொண்டர் தாள்பரவிப் பணிதல் செய்வாம்.

(இ-ள்.) பிதாவாகிய (எச்சதத்தனது) தாளுடனே பிறவியினது தளையுந் தறித்து, ஆனந்தக்கூத்தராகிய சிவபெருமானது உபயதிருவடியை யடைந்த சண்டேசுரநாயனாரது திருப்பதங்களையும், வைதிகமார்க்கத்திலும், சைவமார்க்கத்திலும், பத்திமார்க்கத்திலும் (முறைசிறிதும்) தவறாமல், வாக்கு-காயம் - மனங்களாலாகிய திருத்

தொண்டினைச் சிவபெருமானது திருவடிக்கே செலுத்தி, அவற்றாலுண்டாகுஞ் சிவானுபவப் பெரும்பேறுடையராய், ஆணவமலத்தொடக்கையறுத்த மற்றைய நாயன்மார்களது திருப்பதங்களையுந் துதித்து வணங்குதல் செய்வோம். எ-று.

சோழநாட்டிலுள்ள திருச்சேய்ஞலூரிற் காசிபகோத்திரத்திற் பிறந்த எச்சதத்தன் என்னும் வேதியனுக்குத் திருக்குமாரராகிய விசாரசருமரென்பவர் வேதாகமமுதலிய கலைகளில் வல்லவராயிருந்தனர். ஓரிற்றுப் பசுவொன்றை அதனை மேய்ப்போன் கோலினாற்புடைத்தமை கண்டு மனம்பொறாது, பசுக்களின் பிரபாவத்தைச் சிந்தித்து அவ்வாயனை யகற்றி அப்பசுநிரையை அதுமுதல் தாமே மேய்ப்பாராய் அப்பசுநிரைக்குக் காலநியதி தவறாமல், புல் நீர் நிழல்முதலியவை குறைபாடின்றி நடத்திவந்தனர். அதனாற் பசுக்கள் அதிகமாகப் பால்பெருகி அவரைக்கண்டவுடன் அன்பின் மிகுதியால் மடிசுரந்து பாலைப்பொழிவதாயின. அப்படியிருக்கையில் அவருக்குச் சிவார்ச்சனையில் அன்புபெருகி, மண்ணியாற்றங்கரையிலுள்ள ஒரு மணற்றிட்டையில் ஆத்திமரத்தின்கீழ் மணலினாலே சிவலிங்கமுருவித்து, கோயில் கோபுர முதலியவை வகுத்து, பத்திரபுஷ்பங்களால் அருச்சித்து, புதுக்குடங்கள் கொண்டுபோய்ப் பசுக்களின் மடியைத் தீண்ட அவைகளைத்தும் பாலைப்பொழியும். அதனை யபிடேகஞ்செய்வர். தனக்குக்கிடையாத பூஜாவுபகரணங்களை மானஸீகமாகச் செய்வர். இப் பூசையைப் பெருமான் அன்போடங்கீகரிப்பர். பசுக்கள் இதனாலும் பால்குறையாது வீட்டிற்குங் கொடுத்துவந்தன. விசாரசருமர் இதுபோலவே நெடுநாள் பூசைசெய்துவருகையில், ஒருநாள் ஒருவன்கண்டு ஊராருடன்சொல்ல, அவர்கள் சபையார்மூலமாக, எச்சதத்தனுக் கறிவிக்க, அவன் "யானறியேன்; அவ்வாறு நடப்பின் குற்றம் என்பதே" என்று வீடுசென்று மறுநாளுதயத்தில் அதைச் சோதிக்கக் கருதி விசாரசருமர் பசுமேய்க்கச் செல்லுகையில் அவரறியாது பின்சென்று மணற்றிட்டையேறியது கண்டு, குராமரமொன்றிலேறி யொளித்திருந்தான். விசாரசருமர் வழக்கம்போலப் பூசைமுடித்துப் பசுவின்மடியைத் தீண்டி, அவைபொழிந்த பாலை யபிடேகித்தனர். எச்சதத்தன் அதுகண்டு விரைந்தோடிவந்து மைந்தனை வைது முதுகில் தண்டொன்றாலடித்தனன். அவர் மனம் சிவார்ச்சனையி லிருந்தமையின் அவருக்குப் புலப்படவில்லை. அதனையறியாத எச்சதத்தன் கோபமிக்குப் பாற்குடங்களைக் காலா லிடறிச் சிந்த, விசாரசருமர் அதுகண்டு செய்தவன் பிதா - குரு - பிராமணன் என்பதறிந்தும் அவன்செய்தது சிவாபராதமாதலின் அவன்காலைத் துணிக்கருதி அருகிருந்த ஒரு கோலையெடுக்க அது மழுவாக அதனாலவன் கால்களைவெட்டிச் சிவபூசையின் சேடத்தையுமுடித்தனர். சிவபெருமான் உமாதேவியாருடன் இடபாரூடராய்த் தோன்றித் தமது திருக்கரங்களாலெடுத்து "நம்பொருட்டுப் பிதாவை வெட்டினாய்! உனக்கு நாமே பிதா." என்று திருவாய்மலர்ந்து உடலைத்தடவி உச்சிமோந்து "நம்முடைய தொண்டர்களுக்கெல்லாம் உன்னைத் தலைவனாக்கி நாம் ஏற்றுக்கொண்ட அமுதும் பரிவட்டமும் புஷ்பமும் உனக்கே தந்தோம்" என்று தமது சடையிலிருந்த கொன்றைமாலையை அவருக்குச் சூட்டிச் சண்டேசுரபதவி தந்தருளினர். எச்சதத்தனு முத்தியடைந்தான். என்பது - இதனை.

திருத்தொண்டர் புராணம்.

"தொடுத்த விதழி சூழ்சடையார் துணைத்தா ணிழற்கீழ் விழுந்தவரை
யெடுத்து நோக்கி நம்பொருட்டா லீன்ற தாதை விழவெறிந்தா
யடுத்த தாதை யினியுனக்கு நாமென் றருள்செய் தணைத்தருளி
மடுத்த கருணை யாற்றடவி யுச்சி மோந்து மகிழ்ந்தருள.

அண்டர் பிரானுந் தொண்டர்தமக் கதிப னாக்கி யனைத்துநா
முண்ட கலமு முடுப்பனவுஞ் சூடு வனவு முனக்காகச்
சண்டே சனுமாம் பதந்தந்தோ மென்றங் கவர்பொற் றடமுடிக்குத்
துண்ட மதிசேர் சடைக்கொன்றை மாலை வாங்கிச் சூட்டினார்." என வரு
வனவற்றானறிக. (உஉ)

## மு த னூ ல் வ ழி.

### மேற்படி - வேறு.

அண்ணல்பாற் றெளிந்த நந்தி யடிகள்பாற் சனற்கு மார
னுண்ணிறை யன்பி னாய்ந்து வியாதனுக் குணர்த்த வந்தப்
புண்ணிய முனிவன் சூதற் கோதிய புராண மூவா
றெண்ணிய விவற்றுட் காந்தத் தீசசங் கிதையின் மாதோ.

(இ-ள்.) சிவபெருமானிடத்தில் (வேதநூற்பொருள்களை) உணர்ந்த திரு நந்திதேவரிடத்தில், சனற்குமாரமுனிவர் மனதில் பூரணமாகிய அன்புடன் ஆராய்ந் தறிந்து வியாதமுனிவருக் குபதேசிக்க, புண்ணியஸ்வரூபியாகிய அந்த வியாதமுனி வர் சூதமுனிவருக்குத் திருவாய்மலர்ந்தருளிய புராணங்கள் பதினெட்டு. இவற்றுள் மகா ஸ்காந்தபுராணத்திற் சங்கரசங்கிதையில் (சொல்லப்பட்டுளது இந்த ஆலாஸ்ய மகாத்தியம்.) எ-று.

இதுமுதல் மூன்றுசெய்யுள்கள் ஒருதொடர்.

கந்தபுராணம்.

"நாதனா ரருள்பெறு நந்தி தந்திடக்
கோதிலா துணர்சனற் குமரன் கூறிட
வாதரா யணமுனி வகுப்ப வோர்ந்துணர்
சூதனே தியதுமூ வாறு தொல்கதை."—என்னுஞ் செய்யுளினு மாறு
படாது கூறியது காண்க.

"புராணமூவாறு" என்பதனை - கந்தபுராணம்.

"எதிரில் சைவமே பௌடிய மார்க்கண்ட மிலிங்க
மதிகொள் காந்தநல் வராகமே வாமன மச்சம்
புதிய கூர்மமே பிரமாண்ட மிவைசிவ புராணம்
பதும மேலவன் புராணமாம் பிரமமே பதுமம்.

கருது காருட நாரதம் விண்டுபா கவத
மரிக டைப்பெய ராக்கினே யம்மழற் கதையா
மிரவி தன்கதை பிரமகை வர்த்தமா மிவைதாந்
தெரியு மொன்பதிற் றிருவகைப் புராணமாந் திறனே." என வருவனவற்றா
னறிக. (உ௩)

## நூல்செய்ததற்குக் காரணம்.

அறைந்திடப் பட்ட தாகு மாலவாய்ப் புகழ்மை யந்தச்
சிறந்திடும் வடநூ றன்னைத் தென்சொலாற் செய்தி யென்றிங்
குறைந்திடும் பெரியோர் கூறக் கடைப்பிடித் துறுதி யிந்தப்
பிறந்திடும் பிறப்பி லெய்தப் பெறுதுமென் றுள்ளந் தேறா.

(இ-ள்.) திருவாலவாயின் புகழ்ச்சிசொல்லப்பட்டதாம். அவ்வகைச் சிறப் புடைய வடநூலைத் தென்மொழியாற் செய்வாயென்று, இந்தத் தலத்தில் வாசஞ்

செய்யும் பெரியவர்கள் மனவிருப்போடு கேட்க, அச்சொல்லை உறுதியாகக் கொண்டு ஆன்மலாபத்தை இந்த மானுடப்பிறவியிலேயே யடையப் பெறுவோமென்று மனோதிடங்கொண்டு. எ-று.

நூல்செய்தாராகிய பரஞ்சோதிமுனிவர் இந்நூலைக் கேட்போர் அவாவினோர் முதலானோரையும் உடன்கூட்டி உறுதிபெறுதும் என உளப்பாட்டுத் தன்மைப் பன்மையாகக் கூறினர் என்க. (உச)

## மொழிபெயர்த்த விதம்.

திருநகர் தீர்த்த மூர்த்திச் சிறப்புமுன் றந்த மூர்த்தி
யருள்விளை யாட லெட்டெட் டருச்சனை வினையொன் றாக
வரன்முறை யறுபத் தெட்டா மற்றவை படல மாக
விரிமுறை விருத்தச் செய்யுள் வகைமையால் விளம்ப லுற்றேன்.

(இ-ள்.) தலவிசேடம் - தீர்த்தவிசேடம் - மூர்த்திவிசேட என மூன்று. அந்தச் சோமசுந்தரக்கடவுள் தமது திருவருளால் (முற்காலத்தில்) இயற்றியருளிய திருவிளையாடல்கள் அறுபத்துநான்கு. அருச்சனைச்செயல் ஒன்று ஆக வரன்முறையே அறுபத்தெட்டாகும். அவற்றை (அறுபத்தெட்டு)ப்படலங்களாக அமைத்து விரிவகையாகப் பல சந்தம்பெற்ற விருத்தப்பாக்களால் மொழிபெயர்க்கத் தொடங்கினேன். எ-று. (உரு)

## அவையடக்கம்.

நாயகன் கவிக்குங் குற்ற நாட்டிய கழக மாந்தர்
மேயவத் தலத்தி னோர்க்கென் வெள்ளறி வுரையிற் குற்ற
மாயுமா றரிதன் றேனு நீர்பிரித் தன்ன முண்ணுந்
தூயதீம் பால்போற் கொள்க சுந்தரன் சரிதந் தன்னை.

(இ-ள்.) எமது தலைவராகிய சோமசுந்தரக்கடவுள் திருவாய்மலர்ந்தருளிய திருப்பாசுரத்திற்குங் குற்றங்கூறித் தாபித்த சங்கப்புலவர்கள் பொருந்திய அத் திருவாலவாயிலிருக்கும் ஏனைப் புலவர்கட்கு வெளிற்றறிவினையுடைய எனது சொற்களிற் குற்றங் கண்டுபிடிக்கும் விதம் அருமையல்லவாயினும், (நீரோடுகூடிய பாலில்) நீரைப்பிரித்து அன்னப்பறவையானது பரிசுத்தமாகிய இனிய பாலைப் பருகுதல் போல, (சொற்-பொருட்குற்றங்களோடு கூடிய எனது நூலிலுள்ள குற்றங்களைவிலக்கி) சோமசுந்தரக்கடவுளது சரித்திரமாகிய திருவிளையாடல்களைக் கைக்கொள்ளக் கடவர். எ-று.

நாயகன் கவிக்குங் குற்றநாட்டிய தென்பது:—
"கொங்குதேர் வாழ்க்கை யஞ்சிறைத் தும்பி
காமஞ்செப் பாது கண்டது மொழிமோ
பயிலியது கெழீஇய நட்பின்
மயிலியற் செறியெயிற் றரிவை கூந்தலின்
நறியவு முளவோ வறியும் பூவே"—என்னும் திருப்பாசுரத்தைச் சோமசுந்தரப் பெருமான் தம்மை வழிப்பட்டுவந்த தருமியென்னும் வேதியன் நிமித்தமாகப் பிரசாதித்து அனுப்ப, அவன் அரசனவைக்களத்துச் சென்று திருப்பாசுரத்தை வெளியிட அதனைக்கண்ட நக்கீரர் அது குற்றமெனக் கூறினர். இதன் விபரம் பின்வரும் தருமிக்குப் பொற்கிழியளித்த படலமுதல் மூன்றுபடலங்களா லறிக.

கவிக்கும் என்பதிலுள்ள உம்மை உயர்வு சிறப்பு.

அவையடக்கம் என்பதற்கு அவையை யடக்கலென்று பொருள்கொண்டால், அதற்கேற்ப "வெள்ளறிவு' என்பதைத்" தூய அறிவு" என்றும், "குற்றம்

மாயுமாறு அரிதன்று" என்பதை "குற்றம் ஒழிந்த தன்மை எளிது" என்றும், "ஏனு நீர் பிரித்து" என்பதை அன்னத்திற்கு அடையாக்கி, "அன்னம் உண்ணும் பால்போற் கொள்க" என்றும் பொருள்படும். (உசு)

கலிநிலைத்துறை.

கனைக்கொ ழுந்தழ லுசசுவை கண்டவூ னிமையோர்
சுவைக்க வின்னமு தாயின துளக்கமில் சான்றோ
ரவைக்க ளம்புகுந் தினியவா யாலவா யுடையார்
செவிக்க ளம்புகுந் தேறுவ சிறியனேன் பனுவல்.

(இ-ள்.) ஒளவுபடுதல் பொருந்திய கொழுந்துவிட்டெரியும் அக்கினிபகவானது நாவினால் ருசிபார்க்கப்பட்ட மாமிசமானது, தேவர்கள் புசிக்க இனிய அவிசானதுபோல, (கல்வி கேள்விகளிற்) சிறியேன் கூறிய இந்நூல் களங்கமில்லாத பெரியோர்களது சபையினிடத்தேசென்று (குற்றநீங்கி) மதுரமுடையதாய், திருவாலவாயில்வீற்றிருக்கும் எம்மை யாளாகவுடைய சோமசுந்தரக்கடவுளது திருச்செவியினிடத்தே புகுந்து அடையாநிற்கும். எ-று.

இமையோர் என்பதற்குக் கண்ணிமையாதவர்கள் என்பது பொருள்.

அவைக்களம், செவிக்களம் என்புழி நின்ற களம் என்பவை இடப்பொருள் பயக்கும் ஏழனுருபுகள்.

ஆலவாயுடையார் என்பதற்குத் திருவாலவாயைத் தமது இராஜதானியாகக் கொண்டு அரசுபுரிந்த சோமசுந்தரபாண்டியனெனப் பொருள்கூறினும் பிழையாது. பனுவல் - ஆகுபெயர். (உஎ)

பாய வாரியுண் டுவர்கெடுத் துலகெலாம் பருகத்
தூய வாக்கிய காரெனச் சொற்பொரு டெளிந்தோ
ராய கேள்வியர் துகளறுத் தாலவா யுடைய
நாய னார்க்கினி தாக்குப நலமிலேன் புன்சொல்.

(இ-ள்.) பரவிய சமுத்திரசலத்தைப் பானஞ்செய்து (அதனிடத்தியற்கையாகவுள்ள) உவர்த்தன்மையை யொழித்து உலகிலுள்ள ஆன்மாக்களெல்லாம் பருகும்படி பரிசுத்தப்படுத்திய மேகத்தைப்போல, சொல்லும்பொருளும் (ஆகிய இவற்றின் லக்ஷணங்களை) உணர்ந்தோராகிய ஆராய்ந்த நூற்கேள்வியையுடையவர்கள் நல்லறிவில்லாத எளியேனது புன்சொல்லையும் (அதனகத்துள்ள) குற்றத்தை யொழித்துத் திருவாலவாயைத் தமதிடமாகக்கொண்ட சிவபெருமானுக்கு இனிதாகச் செய்வார்கள். எ-று.

"சொற்பொரு டெளிந்தோர்" என்பதற்கு வாசகவாச்சிய சம்பந்தமறிந்தோர் எனவும் பொருள். சொல் = வாசகம். பொருள் = வாக்கியம் ஆதலின் வஸ்துவின் பெயரும் வஸ்துவுமென்க. கைம்மாறு கருதாது உலகினர்க் குதவிசெய்யும் மேகத்தை, ஆய்ந்த கேள்வியர்க்கு உவமிக்கப்பட்டது. (உஅ)

அல்லை யீதல்லை யீதென மறைகளு மன்மைச்
சொல்லி னற்றுதித் திளைக்குமிச் சுந்தர னடற்
கெல்லை யாகுமோ வென்னுரை யென்செய்கோ விதனைச்
சொல்லு வேனெனு மாசையென் சொல்வழி கேளா.

(இ-ள்.) (இத்தகையினனென்று சுட்டறிவுறுத்தற்கு இயலாமல்) இதுவுமல்லை இதுவுமல்லையென்று வேதங்களும் அன்மைமொழியாற் புகழ்ந்து (காணமுடியாமல்) மெலிகின்ற இச்சுந்தரேசப் பெருமானது திருவிளையாடல்களைக் கூறுவதற்கு

எனது சொல் அளவுபடுமோ. (அளவுபடாதெனக்கருதிவாளாவிடப்பினும்) இதனைக் கூறுவேனென்று மனத்திலெழும் விருப்பமானது யான் சொல்லுமார்க்கத்தைக்கேளாது. (ஆதலின்) யான் என்னசெய்குவேன். எ-று.

அவையடக்கமென்பது சபைக்களத் துற்ற புலவர் பலர்க்கும் வழிபடு மொழியாக அடங்கிக் கூறல். ஆகலின் கடவுளது கவிக்குங் குற்றங்கூறிய சங்கப்புலவரிருக்குந் தலமாகலின், அங்குள்ள இதரமாகிய புலவர்களால் என்கவிக்குக் குற்றங் கூறுவதெளிதென்றும், வல்லோராகலின் அவர் சபையிடம் புக்கு எனது சொல் குற்றமகன்று பயன்படுமென்றும், அவர் வண்மையுடையராகலின் என்னூலைக் கைக்கொண்டு அதிற் பொதிந்த குற்றங்களை யகற்றிப் பயன்படுத்துவரென்றும், என்னால் இந்நூல் சொல்லமுடியாதென் றிருப்பினும் எனதாசை யென்னைக் குற்றத்தின் வழிப்படுத்திய தென்றும் அவையடக்கம் நான்கு செய்யுள்களாற் கூறினார். அவையடக்கங் கூறவேண்டுமென்பதை "அவையடக் கியலே யரில்தபத் தெரியின் வல்லார் கூறினும் வகுத்தனர் கொண்மினென் றெல்லா மாந்தர்க்கும் வழிமொழிந் தன்றே" என்னுந் தொல்காப்பியச் சூத்திரத்தானறிக.

இகரச்சுட்டு உயர்வு குறித்தன்மேனின்றது. இ = உயர்ந்த. (௨௫)

## சிறப்புப்பாயிரம்·

### அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

அறுகாற்பீ டத்துயர்மா லாழிகடை தமுதையமரர்க் கேற்று மாபோ
லறுகாற்பே டிசைபாடுங் கூடன்மான் மியத்தையருந் தமிழாற் பாடி
யறுகாற்பீ டுயாமுடியார் சொக்கேசர் சந்நிதியி லமரர் சூழு
மறுகாற்பீ டத்திருந்து பரஞ்சோதி முனிவனரங் கேற்றி னானே.

(இ-ள்.) காலிலியாகிய சேடசயனத்தில (யோகநித்திரை செய்யும்) உயர்ந்த திருமால் க்ஷீராப்தியை மர்த்தனஞ் செய்து (அதிற்றோன்றிய) அமிர்தத்தை அமரர்கட்குப் பகுத்தளித்த பானமைபோல், பரஞ்சோதிமுனிவர் ஆறுகால்களையுடைய பெண்வண்டுகள் பண்பாடும் (சோலைகளையுடைய) ஆலவாயின் மகாத்மியத்தை அரிய தமிழ்ச்செய்யுளாக மொழிபெயர்த்து (அடியவர் அருச்சித்த) அறுகுடன் பெருமை பெற்று விளங்குஞ் சடைமுடிதரித்த சொக்கலிங்கப் பெருமானது திருச்சந்நிதானத்தில், தேவர் கூட்டங்கள்சூழ்ந்து விளங்கும் அறுகாற்பீடத்தில் வீற்றிருந்து அரங்கேற்றினார். எ-று.

அறுகாற்பீடம் = அற்ற கால்களையுடைய பீடம்.

இஃது சிறப்புப்பாயிரமாதலின் "ஆக்கியோன் பெயரே வழியே யெல்லை - நூற்பெயர் யாப்பே நுதலிய பொருளே - கேட்போர் பயனொ டாயெண் பொருளும் - வாய்ப்பக் காட்டல் பாயிரத் தியல்பே." என்னுஞ் சூத்திரத்திற் கிணங்க, பரஞ்சோதி முனிவன் என ஆக்கியோன் பெயரும், கூடன்மான்மியம் என நூலின் வழியும், தமிழ் என அப்பாஷை வழங்குங் குணகடற் குமரி குடகம் வேங்கடம் எனு நான்கெல்லையும், பாடி என திருவிளையாடற்புராணமெனனும் நூற்பெயரும், அருந்தமிழாற் பாடி எனச் செந்தமிழ் நடையிற் றேர்ந்த வல்லுநரே கேட்கத்தக்கயாப்பும், அத்தகையினரோ கேட்கத்தக்கவரும், மான்மியம் என நுதலிய பொருளும், பயனுந் தோன்றக் கூறியதாம். இவையேயன்றி இச்செய்யுளில் அறுகாற்பீடம் என "காலங் களனே காரண மென்றிம் - மூவகை யேற்றி மொழிநரு முளரே" என்றபடி அரங்கேற்றிய களனுங் கூறப்பட்டன. (௩௦)

பாயிரம் - முற்றிற்று.

ஆ திருவிருத்தம்-௩௧.

உ

சிவமயம்.

# பாண்டித்திருநாட்டுப்படலம்.

'கலிநிலைத்துறை.

கறைநிறுத்திய கந்தர சுந்தரக் கடவு
ளுறைநிறுத்திய வாளினாற் பகையிரு ளொதுக்கி
மறைநிறுத்திய வழியினால் வழுதியாய்ச செங்கோன்
முறைநிறுத்திய பாண்டி நாட் டணியது மொழிவாம்.

(இ-ள்.) ஆலாலவிஷயத்தை நிலைத்திருக்கச்செய்த ஸ்ரீகண்டத்தையுடைய சுந்தரேசப்பெருமான் சோமசுந்தரபாண்டியராகி உறைநீட்டிய வாளாயுதத்தினாலே சத்துருக்களாகிய அந்தகாரத்தை யகற்றி, (தம்மா லருளிச்செய்யப்பட்டுள்ள) வேதங்களிற் கூறிய நீதிவழிமுறையே செங்கோல் நடாத்தி நிலைநிறுத்திய பாண்டித்திருநாட்டின் சிறப்பைப் பகர்வாம். எ-று.

கறைநிறுத்திய கந்தரச் சுந்தரக் கடவுள் என்பது.

முற்காலத்தில் தேவர்க்கும் அவுணர்க்கும் நேரிட்ட போரிற் பலர் மடிதலால், இருதிறத்தாரும் பிரமாவை யடைந்து "நாங்க ளிறவாமல் நெடுநாள் போர்செய்யக் கருதினோமாதலின் பாற்கடலைக் கடைந்து அமுதளிக்கவேண்டும்" என, பிரமன் திருமாலிடம் அவர்களோடு சென்று அவர்கள் கருத்தை யறிவிப்ப, விண்டு அதற்கிசைந்து, மந்தரகிரியை மத்தாக நட்டு, சந்திரனை அடைதூணாக்கி, வாசுகி யென்னும் பாம்பைக் கயிறாகப் பூட்டி, தேவர்கள் ஒருபுறமும் அவுணர்கள் மறுபுறமும் ஈர்க்கும்படி கட்டளையிட்டு, தாம் கூர்மவடிவேற்று மலையினது அடியையும் முடியையும் முதுகினாலுங் கைகளாலும் பற்றி நிற்க, தேவரும் அவுணரும் இளைப்பெய்தும்படி பலகாலங் கடைந்தமையால், நாம்பாகிய வாசுகி சகிக்கமாட்டாமல் உடல் பதைத்து நா துடித்துத் தனது ஆயிரம் வாய்களாலும விஷங் கக்கியது. அவ்விஷம் எங்கும் இருண்டுபோம்படி மூலமெனப் பரவ, தேவர் முனிவர் முதலாயினோர் பயந்தோடினர். அது கண்ட திருமால நாமியாங்களைக் காப்போமென்று அவர்கள்பேரிற் செல்லும் விஷத்தைத் தாமெதிர்த்தனர். அவ்விஷம் அவர் திருமேனியைக் கருநிறமாக்க அவரும் நிற்றற்கு ஆற்றாதோடெடுத்தனர். யாவரும் ஒருங்குசேர்ந்து திருக்கைலாயகிரியை யடைந்து திருநந்திதேவர் கட்டளைபெற்று உட்சென்று சிவபெருமானைத் தரிசிக்க, இறைவர் "விஷ்ணுவே! உருவம வேறுபட்டு இவர்களுடன்கூடி வந்ததென்னை" என்று தெரியாதவர்போன்று வினவ, விஷ்ணு நிகழ்ந்தவற்றைச் சொல்லி எம்மைப் பாதுகாக்கவேண்டுமெனப் பிரார்த்திக்க, சிவபெருமான் உமாதேவியாரை நோக்க, தேவியார் "இவர்களைக் காக்கவேண்டும்" என, பெருமான் சுந்தரரைப் பார்த்து, "சுந்தரா! அவ்விஷத்தைக் கொணர்க" என, அவ்வாணையின்படி அவர் தமது உள்ளங்கையிற் றாங்கிப் பெருமானிடந் தர, அதைத் திருக்கரத்தில் வைத்துக்கொண்டு "தேவர்களே! இதனை யுண்ணவா விட்டுவிடவா" என, தேவர்கள் "இது தேவரீரது திருக்கரத்தில் வரவே உருவஞ் சிறுத்தது. அதனை விட்டால் உலகமழியும். எவ்வெவற்றிற்கும் முதற்பாகம் தேவரீரதே யாதலால் விஷமாயிருப்பினும், அதனைக் கொள்ளவேண்டுமென்று பிரார்த்திக்க, சிவபெருமான் அவ்வாறே சம்மதித்துத் திருவமுதுசெய்கையில், அது கண்டத்தளவு செல்ல, அதனை அமரர் யாவருங் கண்டு "எம்மை உயிர் காத்தற்குச் சாட்சியாக இவ்விஷம் கண்டத்திலேயே யிருக்கச்செய்ய

வேண்டும்" என்று பிரார்த்திக்க, பெருமான் அதனை அங்கேயே ஒரு நீலமணிபோன்று நிறுத்தி ஸ்ரீகண்டரெனத் திருநாமம் பெற்றனர். பிறகு இறைவர் கட்டளைப்படி மீட்டும் பாற்கடல் கடையப் பல பொருள்களும் அமுதமும் பிறந்தன என்பது. இதனை

கந்தபுராணம் - ததீசியுத்தரப்படலம்.

"ஐயநீ யன்றி யாரிவ் வனல்விட மாற்று நீரார்
செய்யகைக் கொண்ட வாற்றாற் சிறிதெனக் காட்டிற் றன்றே
வெய்யதோ ரிதனை யின்னே விட்டனை யென்னிற் பின்னை
யுய்வரோ யாரு மின்னே யொருங்குடன் முடிந்திடாரோ.
முடிவிலா வுனக்கே யன்றோ முன்னுறு பாக மெல்லாம்
விடமதே யெனினு மாக வேண்டுது மிதனை வல்லே
யடியரோ முய்யு மாற்றா லருந்தினை யருண்மோ வென்னக்
கடிகம ழிதழி வேய்ந்தோன் கலங்கலீ ரினிநீ ரொன்றான்.
என்றனன் விரைவிற் றன்கை யேந்திய விடமுட் கொள்ளச்
சென்றது மிடற்றி லன்ன திறத்தினை யாரு நோக்கி
யின்றெம துயிர்நீ காத்தற் கிங்கிது சான்றா யங்க
ணின்றிட வருடி யென்றே நிமலனைப் போற்ற லுற்றார்." என்பதனு னறிக.

"கறைநிறுத்திய கந்தரம்" எனக்கூறியதனானே, விடவேகத்தால் தமது நிற மாறிய திருமால் முதலிய சில தேவர்போலாது, இயற்கையழகு நீங்காதவரெனக் குறிப்பிக்க "சுந்தரக்கடவுள்" என உடன்கூட்டி யுரைத்தனர். "உறைநிறுத்திய வாளினாற் பகையிருளொதுக்கி" என்றதனானே, இறைவர் சோமசுந்தர பாண்டியராகத் தென்னாட்டை யரசுசெய்த காலத்தில், மன்னவர் யாவரும் அவரது கட்டளை கடவாராய்ப் பகைமை விலகி அடிமைபோல நின்றனரெனப் புலப்படுத்துகின்றனர். (க)

தெய்வ நாயக னீறணி மேனிபோற் சென்று
பௌவ மேய்ந்துமை மேனிபோற் பசந்துபல் லுயிர்க்கு
மெவ்வ மாற்றுவான் சுரந்திடு மின்னரு ளென்னக்
கௌவை நீர்சுரந் தெழுந்தன கனைகுரன் மேகம்.

(இ-ள்.) ஒலிக்கின்ற ஆரவாரத்தையுடைய மேகங்கள், மகாதேவராகிய சிவபெருமானது திருவெண்ணீற்றினையணிந்த திருமேனிபோல (வெள்ளிய சரீரமுடையனவாய்)ச் சென்று, கடல்நீரைப்பருகி, உமாதேவியாரது திருமேனிபோலப் பசிய நிறமடைந்து (பல பிராணிகளுக்குமுண்டாகிய பிறவித்துன்பத்தை யொழிக்கும்படி ஊற்றெடுக்கின்ற இனிய திருவருட்டன்மைபோல) உலகின்கணுள்ள சராசரங்கட்கெல்லாம் உண்டாகிய சூரிய வெப்பத்தை யொழிக்க, முழக்கமுடைய நீர் சுரந்து மேலெழுந்தன. எ-று.

சிவபெருமான் அண்டாண்டங்களிலுள்ள சமஸ்தகோடி தேவர்கட்குந் தலைவராதலாலும், சர்வசங்கார காலத்தில் யாவரு மழியும்பொழுது பெருந்தேவர்களாயுள்ள திருமால்-பிரமன் முதலானோரைத் தமது நுதல்விழியாற் பொடிசெய்து அந்தப் பஸ்மத்தைத் தமது திருமேனியிலணிந்து தாமே தேவர் நாயகனெனக் குறிப்பித்து, அவ்வாறணிவதாலேயே அவர்கள் நற்கதியடையச் செய்வோராதலாலும், "தெய்வ நாயக னீறணிமேனி" எனப்பட்டது.

மேகம் வெண்மைநிறமாகச்சென்று கடல்நீரைப் பருகிப் பசுமைநிறமாய் ஆன்மாக்களைக் காக்கும்பொருட்டு ஆரவாரித்து ஆகாயத்திற் கிளம்பியது என்பது கருத்து.

நாட்டுச்சிறப்புக் கூறுவோர் அதற்கு முதற்கருவியாகிய மேகத்தை முன்ன ர்க்கூறுதல் வழக்கென்றறிக. (௨)

இடித்து வாய்திறந் தொல்லென வெல்லொளி மழுங்கத்
தடித்து வாள்புடை விதிர்த்துநின் றிந்திர சாபம்
பிடித்து நீளம்பு கோடைமேற் பெய்துவெம் பெரும்போர்
முடித்து நாமென வருதலபோன் மொய்த்தன கொண்மூ.

(இ-ள்.) மேகங்கள் தமது வாயைத்திறந்து ஒல்லென் றிடித்து, சூரியப்பிர காசமும் மழுங்கும்படி மின்னலாகிய வாளை நாற்பக்கத்திலுமசைத்து நின்று, இந்திர தனுசைக் கையிற்பிடித்து, நெடிய அம்புகளைக் கோடையாகிய பகைஞன்பேரிற் பொ ழிந்து, கொடிய பெரும்போர்செய்து முடிப்போமென்று கருதி வருவதுபோல (ஆகா யத்தில்) நெருங்கின. எ-று.

ஒல்லென = ஓசையாக ; விரைவாக. வாள் = வாட்படை ; ஒளி. அம்பு = பா ணம் ; நீர்த்தாரை. எனச் சிலேடையாக்குக. தடித்து என்பது மின்னல். (௩)

முனித னீள்வரை யுச்சிமேன் முழங்கிவா னிவந்து
தனித நீர்மழை பொழிவன தடஞ்சிலை யிராமன்
கனித னீாமையா லாலவாயக் கண்ணுதன் முடிமேற்
புனித நீர்த்திரு மஞ்சன மாட்டுவான் போலும்.

(இ-ள்.) மேகங்கள் ஆகாயத்திலுயர்ந்து முழங்கி அகஸ்தியமுனிவரது நெ டிய பொதியமலையின் முகட்டில் நீர்மழையை வருஷித்தல், நெடிய கோதண்டமேந் திய இராமமூர்த்தி கனிந்த தனது அன்புடன், திருவாலவாயில் வீற்றிருக்கும் நெற் றிக் கண்ணையுடைய சோமசுந்தரக்கடவுளது திருமுடியின்பேரில், பரிசுத்தமாகிய சலத்தினால் அபிடேகஞ்செய்தலை யொக்கும். எ-று.

தனிதம் - மேகத்தினொலி.

மேகங்கள் மணி - நீர - பொன் - பூ - மண் - கல்-தீயாகிய எழுவகை மழை பொழியு மாகலின், நீர்மழை யென விதந்துரைத்தனர். அவ்வகைய சத்தமேகங்கள் முறையே சம்வர்த்தம் - ஆவர்த்தம் - புட்கலாவர்த்தம் - சங்காரித்தம்-துரோணம் - காளமுகி - நீலவருணம் என்பனவாம்.

அயோத்திநகரத் தரசுபுரிந்த தசரதசக்ரவர்த்தியின் புதல்வராகிய இராம மூர்த்தி, பிதாவின் கட்டளைப்படி வனசஞ்சாரஞ் செய்கையில், தன் மனைவியாகிய சானகியை இராவணனென்னு மரக்கன் வௌவி அவனது இலங்கைநகரிற் சிறைவை த்ததைத் தூதுவரா லறிந்து அவனை யெதிர்க்கச் செல்கையில், திருவாலவாயில்வீற்றி ருந்த சோமசுந்தரப்பெருமானையருச்சித்து அவரது திருவருள்பெற்று இலங்கை மன் னனைச்செயித்து மனைவியைச்சிறைமீட்டு உடன்கொண்டு அயோத்தியடைந்து அரசு செய்திருந்தனரென்பது புராணவரலாறு. இதனை,

மாயப்பசுவை வதைத்தபடலம்.

"அடிய னேனெனுங் கருமமுஞ் சரதமே யாக
முடியு மாவரி தச்செயன் முடியுமெப் படியப்
படிபு ரிந்தருள் கடிதெனப் பணிந்தனன் பரனு
நெடிய வான்படு மமுதென வெதிர்மொழி நிகழ்த்தும்."

"இரவிதன் மரபின் வந்த விராமகே ளமக்குத் தென்கீழ்
விரவிய திசையிற் போகி விரிகடற் சேது கட்டிக்
கரவிய வுள்ளக் கள்வன் கதிர்முடி பத்துஞ் சிந்தி
யரவமே கலையி னாளை யருஞ்சிறை யமுவ நீக்கி."

மீண்டுகின் னயோத்தி யெய்தி விரிகட லுலகம் பன்னா
ளாண்டினி திருந்து மேனாள் வைகுண்ட மடைவா யாக
வீண்டுநீ கவலை கொள்ளே லெனுமச ரீரி கேட்டு
நீண்டவன் மகிழ்ந்து தாழ்ந்து நிருத்தனை விடைகொண் டேகி"—என வரு வனவற்றா னறிக. (௬)

சுந்த ரன்றிரு முடிமிசைத் தூயநீ ராட்டு
மிந்தி ரன்றனை யொத்தகா ரொழிலிதென் மலைமேல்
வந்து பெய்வவத் தனிமுதன் மௌலிமேல் வலாரி
சிந்து கின்றகைப் போதெனப் பன்மணி தெறிப்ப.

(இ-ள்.) பொதியமலையின் மேல் வந்து மழைபொழிவனவாகிய கருநிற முடைய மேகங்கள் சுந்தரேசப்பெருமானது திருமுடியின்பேரிற் பரிசுத்தமாகிய ஆகாய கங்கையால் அபிடேகிக்கும் தேவேந்திரனை யொத்திருந்தன. அம்மேகங்கள் சிதறுகின்ற பல இரத்தினங்கள் அவ்வொப்பற்ற முதற்கடவுளாகிய இறைவரதுகிரீடத்தின் பேரில் தேவேந்திரன் தனது கையால் அருச்சிக்கும் (கற்பகமுதலிய) பல மலர்களைப் போன்றிருந்தன. எ-று.

இந்திரன் கருமைநிறமுடையனாதலின் மேகத்திற்கு உவமித்துரைக்கப்பட்டனன். கடனீர் பருகும்போது உடனாக வுட்கொண்ட பல மணிகளை மீண்டு தெறிப்ப வென்றார். (௭)

உடுத்த தெண்கடன் மேகலை யுடையபார் மகட
னிடத்து தித்தபல் லுயிர்க்கெலா மிரங்கித்தன் கொங்கைத்
தடத்து நின்றிழி பாலெனத் தடவரை முகடு
தொடுத்து வீழ்வன விழுமெனத் தூங்குவெள் ளருவி.

(இ-ள்.) புடைசூழ்ந்த தெள்ளிய கடலாகிய மேகலையணிந்த பூமிதேவியானவள் தன்னிடத்துற்பவித்த பல்வகைப்பட்ட சீவராசிகளுக்கு மனமிரங்கித் தனது கொங்கையாகிய உயர்விடத்தினின்றுஞ் சொரியும் பாலைப்போல, இழுமென்னும் ஓசையுடன் அசைந்து வராநின்ற வெண்மைதங்கிய அருவியாறுகள் பெரிய பொதியாசலத்தின் உச்சியிலிருந்து அடிவரையில் வீழாநின்றன. எ-று.

மேகலை என்பதற்கு "எண்கோவை மேகலை" என்றபடி ஓர் ஆபரண மெனப் பொருள்கொள்ளாது "உடுத்த" என்னும் அடைவிசேடத்தாற் சேலையெனக் கொள்ளுதல் உசிதம். (௮)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

கருநிற மேக மென்னுங் கச்சணி சிகரக் கொங்கை
யருவியாந் தீம்பால் சோர வகன்சுனை யென்னுங் கொப்பூழ்ப்
பொருவில்வே யென்னு மென்றோட் பொதியமாஞ் சைலப் பாவை
பெருகுதண் பொருநை யென்னும் பெண்மகப் பெற்றா ளன்றே.

(இ-ள்) கருமைநிறந்தங்கிய மேகமாகிய கச்சினைப்பூட்டிய சிகரமாகிய தனத்திலிருந்து, அருவியாறாகிய மதுரந்தங்கிய பாலொழுகும்படி, அகன்ற சுனையாகிய நாபியும் சமானமில்லாத மூங்கிலாகிய மெல்லிய தோளுமுடைய பொதியமலையாகிய பெண்ணானவள் பெருகாநின்ற தண்ணிய தாமிரபர்ணிநதியென்னும் பெண்குழந்தையைப் பெற்றாள். எ-று.

மலயாசலமே ஒருமாதாகவும், அவ்வசலச் சிகரமே கொங்கை யாகவும், அதன்பாற் படிந்த மேகமே கச்சாகவும், இழிகின்ற அருவியே முலைப்பாலாகவும்,

ஆண்பெள்ள் சுனையே கொப்பூழாகவும், மூங்கிலே தோளாகவும் அவயவங்களுவமித்து அதனகத் துற்பவிக்குந் தாமிரபர்ணியைப் பெண்மகளென அதற்கேற்பக்கூறினர். ()

கல்லெனக் கரைந்து வீழுங் கடும்புனற் குழவி கானத்
தொல்லெனத் தவழ்ந்து தீம்பா லுண்டொரீஇத் திண்டோண் மள்ளர்
செல்லெனத் தெழிக்கும் பம்பைத் தீங்குரல் செவிவாய்த் தேக்கி
மெல்லெனக் காலிற் போகிப் பணைதொறும் விளையாட் டெய்தி.

(இ-ள்.) கல்லென்று சத்தித்துக்கொண்டு (பொதியாசலத்திலிருந்து) வேகமாகவருகின்ற நீரினையுடைய தாமிரபர்ணியென்னும் பெண்குழந்தை, முல்லைநிலத்தில் ஓல்லென்னுஞ் சத்தத்துடன் தவழ்ந்து இனிய பாலையுண்டு (அவ்விடம்பெயர்ந்து) நீங்கி, திண்ணியதோளையுடைய பள்ளர்கள் மேகம்போல முழக்கும் பம்பையினது மதுரமாகிய வோசையைக் காதிலேநிரப்பி, காலினால் மெல்லெனச் சென்று வயல்கடோறும் விளையாடுதலைப் பொருந்தி. எ-று.

கல் - ஓல் என்பவை ஒலிக்குறிப்புகள் இவற்றை அநுகரணமென்பர் வடநூலார்.

"கல்லெனக்கரைந்துவீழுங் கடும்புனற்குழவி" என்பதனோடு மூன்றாவது செய்யுளிலுள்ள "பொருநையாங்கன்னி" என்பதையுங்கூட்டி "கடும்புனற்பொருநையாங் கன்னிக்குழவி" என வொட்டுக.

பாலுண்டு - பாற்குடங்களைத் தள்ளி. செவிவாய்த்தேக்கி - அழகைத் தன்னிடத்து நிரப்பி. காலிற்போகி - கால்வாய்வழியே போய். பணைதொறும் விளையாட்டெய்தி - வயல்களிற்பாய்ந்து எனப் பொருள்கொண்டு நதியின் பரமாக்குக. இப்பொருட்குச் செவ்வி செவியெனத் தொக்கு நின்று அழகாயிற்று.

இச்செய்யுளில் தாமிரபர்ணியானது குறிஞ்சி நிலத்திற்றோன்றி, முல்லை நிலத்தைக் கடந்து, மருதநிலத்திற் பாய்ந்த தென்றார்.

இதுமுதல் மூன்றுபாடல்கள் குளகம். (௨)

அரம்பைமென் குறங்கா மாவி னவிர்தளிர் நிறமாத் தெங்கின்
குரும்பைவெம் முலையா வஞ்சிக் கொடியிறு நுசுப்பாக் கூந்தல்
சுரும்பவிழ் குழலாக் கஞ்சஞ் சுடர்மதி முகமாக் கொண்டு
நிரம்பிநீள் கைதை வேலி நெய்தல்சூழ் காவில் வைகி.

(இ-ள்.) வாழைமரமானது மெல்லிய தொடையாகவும், மாமரத்தின் பிரகாசிக்கின்ற தளிரானது நிறமாகவும், தென்னங்குரும்பையானது விருப்பந்தருந் தனமாகவும், வஞ்சிக்கொடியானது ஒசிகின்ற இடையாகவும், கூந்தற்பனையானது வண்டுகள்மொய்க்கும் அளகமாகவும், தாமரைமலரானது பிரகாசத்தையுடையமதிக்கத்தக்க முகமாகவுங்கொண்டு (மங்கைப்பருவம்) நிரம்பி, நெடிய தாழையாகிய வேலியையுடைய நெய்தனிலத்தைச் சூழ்ந்த சோலையிலே தங்கி. எ-று.

கூந்தலென்றது அதன்பாளையை. கூந்தல்-கஞ்சம் — முதலாகுபெயர்கள்.

மங்கைப்பருவமே மாதர்கட்குரிய ஏழுபருவத்திலுஞ் சிறந்தது. அவையாவன:—பேதை பெதும்பை - மங்கை - மடந்தை - அரிவை - தெரிவை - பேரிளம்பெண் என்பன. அவை முறையே. ஐந்துவயதுமுதல் ஏழளவும் பேதை - எட்டுமுதற் பதினொன்றளவும் பெதும்பை. பன்னிரண்டுமுதற் பதின்மூன்றளவு மங்கை. பதினான்குமுதற் பத்தொன்பதளவு மடந்தை. இருபதுமுதலிருபத்தைந்தளவும் அரிவை. இருபத்தாறுமுதல் முப்பத்தொன்றளவுந் தெரிவை. முப்பத்திரண்டுமுதல் நாற்பதளவும் பேரிளம்பெண்ணெனப்படும். இப்பருவங்களில் மாதர்கட்குரிய வுறுப்பின் பாகுபாடெல்லாம் நிரம்பப் பெறும்பருவம் மங்கைப்பருவமாகலின் "நிரம்பி" என்றார்.

பன்மலர் மாலை வேய்ந்து பானுரைப் போர்வை போர்த்துத்
தென்மலைத் தேய்ந்த சாந்த மான்மதச் சேறு பூசிப்
பொன்மணி யாரந் தாங்கிப் பொருநையாங் கன்னி முந்நீர்த்
தன்மகிழ் கிழவ னாகந் தழீஇக்கொடு கலந்த தன்றே.

(இ-ள்.) பலவித மலர்களாகிய மாலையையணிந்து, பால்போலும் வெண்மை தங்கிய நுரையாகிய போர்வையைப் போர்த்து, பொதியாசலத்தில் அரைபட்ட கஸ்தூரிகலந்த சந்தனத்தையும்பூசி, பொன்னையும் முத்துமாலையையுமணிந்து, (தாமிரபர்ணியென்னும் பெண்குழந்தை) தன்னிடத்தே மகிழ்ச்சியுற்ற தலைவனாகிய சமுத்திர ராஜனது மார்பைத் தழுவிக்கொண்டு சேர்ந்தது. எ-று.

ஆகம்=உடல் அல்லது மார்பு. மான்மதம்=கஸ்தூரி.

முந்நீர் - ஆற்றுநீர் ஊற்றுநீர் வேற்றுநீர் என்பன. அன்றியும் சிருட்டி திதி சங்காரமென்னும் முத்தொழிலு மியற்றத்தக்க நீர் எனவுங் கூறுவர். (௧௦)

வல்லைதா யிருபால் வைகுஞ் சிவாலய மருங்கு மீண்டி
முல்லையா னைந்துந் தேனுந் திரைக்கையான் முகந்துவீசி
நல்லமான் மதஞ்சாந் தப்பி நறுவிரை மலர்தூய் நீத்தஞ்
செல்லலாற் பூசைத் தொண்டின் செயல்வினை மாக்கள் போலும்.

(இ ள்.) தாமிரபர்ணி நதியானது விரைவாகப்போய்த் தனது இருபக்கத்திலும் வீற்றிருக்கின்ற சிவாலயங்களினிடத்தே சேர்ந்து முல்லைநிலத்திலுண்டாகும் பஞ்சகௌவியத்தையுந் தேனையும் அலையாகிய கையினால் முகந்து வீசியும் நல்ல மான் மதத்தையும் சந்தனத்தையும் அப்பியும், நன்மணங்கமழும் மலர்களைத் தூவியுஞ் செல்வதால், சிவபூசையாகிய திருத்தொண்டினைச் சிறந்து செய்யுஞ் சிவனடியார்களை யொக்கும். எ-று.

ஆன் ஐந்தாவன—பால் - தயிர் - நெய் - கோசலம் - கோமயம் - இவ்வைந்துமே பஞ்சகௌவியமெனப்படும். கோவின்சம்பந்தம் கௌவியம் இதுவடமொழி.

அரும்பவிழ் முனங்க வாளி யலைதர வாகம் பொன்போர்த்
திரங்கிவா லன்ன மேந்தி யிருகையுஞ் சங்குஞ் சிந்தி
மருங்குசூழ் காஞ்சி தள்ளி வரம்பிற வொழுகும் வாரி
பரம்பரற் கையம் பெய்யும் பார்ப்பன மகளிர் போலும்.

(இ-ள்.) மொக்குகளையும் விகசித்த மன்மதபாணமாகிய மலர்களையும் அலைகள் (கரைகளில்) ஒதுக்க, உடல்முழுதும் பொன்மணலுடையதாய் ஒலித்து, வெள்ளிய அன்னப்பறவைகளைத்தாங்கி இருபுறத்திலுஞ் சங்குகளையிறைத்து, பக்கங்களிற் சூழ்ந்த காஞ்சிமரங்களைத் தள்ளி அளவுகடக்கப் பெருக்கெடுத்துச் செல்லுந் தாமிரபர்ணி நதியானது (அரும்புகள் மலர்ந்த காமபாணங்கள் வருத்தத் தம் மேனிமுழுவதும் பொற்பிதிர் போன்ற தேமல் படர்ந்து துன்புற்று வெள்ளிய சோற்றினை யேந்தி இரண்டு கைகளிலுமுள்ள வளையல்கள் கழன்று இடையிலணிந்த காஞ்சியென்னு மாபரணஞ் சோர்ந்து தமது கற்புநிலைகெட [பிக்ஷாடனமூர்த்தியாய வந்த]) சிவபெருமானுக்குப் பிச்சையிடுந் தாருகவனத்து முனிபத்தினிகளை யொக்கும். எ-று.

இச்செய்யுளும் இதுபோலஅநேகஞ்செய்யுள்களுஞ் செம்மொழிச்சிலேடை.

அநங்கன் - உடலற்றவன் ; மன்மதன்.

மன்மதபாணங்கள் ஐந்து. அவையாவன :—தாமரை மா அசோகு முல்லை நீலோற்பலம். அவைசெய்யுமவத்தை முதலியவற்றை "வனசஞ் சூத மசோகு முல்லை-நீல மெனமதன் பெய்கணை யைந்தே. அவற்றால், சப்பிர யோகம் விப்பிர யோகம்

சோகம் மோகம் மரணமுந் தோற்றும். சப்பிர யோகஞ் சொல்லு கிளவியும் - விப்பிர யோகம் வெய்துயிர்த்திரங்கல் - சோகம் வெறுப்புந் துய்ப்பன தெவிட்டலும் - மோக மழுங்கலு மொழிபல பிதற்றலும்-மரண மயர்ப்பும் மயக்கமுஞ் செய்யும்" என வருவனவற்றானறிக.

காஞ்சி யென்பது இருகோவையணி; காஞ்சிவிருட்சம்.

பரம்பரற் கையமபெய்யும் பார்ப்பன மகளிர்—என்றது.

தேவதாருவன முனிவர் சிவபக்தியில்லாராகி, யாகமே முத்திதருமென்று கருதி யாகங்களையே செய்துகொண்டிருந்தனர். அவர் பத்தினிகள் கற்பிற் சிறந்தவரென இறுமாந்திருந்தனா. இவற்றையறிந்த சிவ்பெருமான் திருமாலைத் தம்பால் வருவித்து, திருக்கைலையை நீங்கி வெளிவந்து "மாதவ! முன்னொருகால் நீ கொண்ட மோகினிவடிவை யெய்துக" என, மாதவன் மாதுருவேற்றனன். மாலென்னும் பெயருக் கேற்பத் தமது திருவுருவைக்கண்டு மாலெய்தும்படி அம்பிகாபதியும் அவ்வரிவைக் கேற்ற ஆடவவடிவு தாங்கிக் கபாலமுஞ் சூலமுங் கையிற்பற்றித் திகம்பரராய்ப் பிக்ஷாடனத் திருக்கோலங்கொண்டு முனிவர் வாசமாகிய தாருவனத்தை மோகினிப் பெண்ணுடன் சேர்ந்து, தவச்செயல்பூண்ட முனிவர் மனதை மயக்கத்தக்க மாயையை மாயனுக்களித்து விடுத்து,கையிற்கொண்ட பரிகலத்தில் ஐயமேற்பார்போல முனிவர்வீதியிற்சென்று பண்ணோசையோடு உள்ளாளக்கீதமபாட, முனிபன்னியாகேட்டு, இனியவோசையாயிருத்தலின் அதனைப் பாடுவோனைக் காணவிரும்பி வீதியில் வந்து பெருமானைக்கண்டு காமத்துயரிற் கட்டுண்டு வருந்தினர். அரிவையா சிலர் ஐயனை யணையப் பிரார்த்தித்தனர். சிலர் பிச்சையிட்டனர். சிலர் காமநோயாற் கலையவிழ்ந்தனர். சிலர் வளைகழன்றனர். சிலர் நாணமழிந்தனர். எம்பெருமானது திருவிளையாடலால் மாமாயாசால வித்தைபோல் அம்மாதர் நாற்பத்தெண்ணாயிரவரிடம் நாற்பத்தெண்ணாயிரம் புதல்வர் தோன்றினர். அப்பிள்ளைகள் இறைவரைப்பணிய, இறைவர் அவர்களைத் தவஞ்செய்யும்படி ஏவி, தாருவனத்தையகன்று, முனிவரது தவத்தை யகற்றிய மோகினியாகிய திருமாலுடன் கூடினர். மோகமயக்குற்ற தாருவன முனிவர் தமது மனையையடைந்து மனைவியரது மையல் நோயைக்கண்டு வருத்தமுற்றுத் தமது ஞானதிருஷ்டியால், தம்மைத் தவமழித்தவன் தாமோதரன் என்றும், மனைவிமார் கற்பையழித்தவன் சிவபெருமானென்று முணர்ந்து *ஆபிசார வேள்வி செய்து, அதிற்றோன்றிய நாகம் புலி முதலியவற்றைச் சிவபெருமான் மீது பிரயோகிக்க அவர் அவற்றைத் தமதுதிருமேனியிற் பலவகையாக அணிந்தனர் என்பது. இதனை,

காஞ்சிபுராணம - சிவபுண்ணியப்படலம.

"அடியிற் றொடுத்த பாதுகையு மசைந்த நடையு மிசைமிடறும்
வடிவிற் சிறப்ப நடந்தருளி மூழையேந்தி மருங்கணைந்த
தொடியிற் பொலிதோண் முனிமகளிர் சுரமங் கையனை மயல்பூட்டிப்
படியிட் டெழுதாப் பேரழகாற் பலிதேர் பகவன் பேருருவம்"—என்பதனானறிக. (கஉ)

வரைபடு மணியும் பொன்னும வைரமுங் குழையும் பூட்டி
யரைபடு மகிலுஞ் சாந்து மப்பியின் னமுத மூட்டிக்
கரைபடு மருத மென்னுங் கன்னியைப் பருவ நோக்கித்
திரைபடு பொருநை நீத்தஞ் செவிலிபோல் வளர்க்கு மாதோ.

(இ-ள்.) அலைகள் பொருந்திய தாமிரபர்ணி யென்னும் நதியானது, குறிஞ்சிநிலத்துண்டாகிய முத்தும் பொன்னும் வைரமுங் குழையும் அணிவித்து, அரை

* ஆபிசார ஹோமத்தின் விபரம் வந்துழிக் காணலாம்.

பட்ட அகிலையுஞ் சந்தனத்தையும் அப்பி, இனிய அமுதத்தை யுண்பித்து, காவல் பொருந்திய மருதநிலமென்று சொல்லப்படுங் கன்னிகையைப் பருவத்திற்குத் தக்க படி ஆராய்ந்து, செவிலித்தாயைப்போல் வளர்க்காநிற்கும். எ-று.

குழை=இலை ; (நீராடவந்த மாதர்) குண்டலம். அமுதல்=நீர் ; பால். செவிலி=வளர்ப்பவள் ஐவகைத் தாயருள் ஒருத்தி. தாயர்—பாராட்டுந்தாய் - ஊட்டுந்தாய்-முலைத்தாய்-கைத்தாய் - செவிலித்தாய் எனப்படுவர். (கஉ)

மறைமுதற் கலைக ளெல்லா மணிமிடற் றவனே யெங்கு
நிறைபர மென்றும பூதி சாதன நெறிவீ டென்று
மறைகுவ தறிந்துந் தேறு ரறிவெனக் கலங்கி யந்த
முறையின்வீ டுணர்ந்தோர போலத் தெளிந்தது மூரி வெள்ளம்.

(இ-ள்.) பெரிய (தாமிரபர்ணியின்) வெள்ளமானது, வேத முதலிய சாஸ்திரங்களெல்லாம் நீலகண்டத்தையுடைய சிவபெருமானே சர்வ வியாபியாகிய பகவானென்றும், திருவெண்ணீறு தரித்துக் கண்டிகை பூண்டு ஸ்ரீ பஞ்சாக்ஷரத்தை யுச்சரித்தலாகிய சித்தாந்தசைவநெறி யொழுகுதலே மோக்ஷமடைவிக்கும் வழியென்றும் முறையிடுவது தெரிந்திருந்தும், தெளியாதவரது (மந்த) மதியைப்போலக் கலங்கி, அந்தச் சைவக்கிரமப்படியே நின்று மோக்ஷவழியை யறிந்த மெய்யன்பர் திருவுள்ளம் போல (உடனே) தெளிந்தது. எ-று.

மணிமிடற்றவனே யெங்கு நிறைபரம் என்பதனை ஸ்ருதி-ஈஶாநஸ்ஸர்வவித்யாநாம் ... ருத்ர:- ஶிவஏவகேவல: - ஏகஏவருத்ரோ நத்விதீயாயதஸ்தே - த்யாவாபூமிஜநயந் தேவஏக: - ஸஶிவஏகோதேவ: - நமேகம்புருஷம்ருத்ரம்-யஏகோருத்ரஉச்யதே-ஸர்வோவைருத்ர: விஶ்வாதிகோருத்ரோ மஹருஷி:- ய:பரஸ்ஸமஹேஶ்வர :எனவும்,

லிங்கபுராணம்—ப்ரணவோ வாசகஸ்தஸ்ய ஶிவஸ்ய பரமாத்மந: எனவும்,

ஆதித்யபுராணம்—வாசக: ப்ரணவோவாசகஸ்தஸ்ய ஜ்ஞாநமூர்த்தேருமாபதே: எனவும வரும் பிரபல பிரமாணங்களானும், பூதிசாதனநெறி வீடென்பதனை "சைவசமயமே சமயம்" எனவும், "இராஜாங்கத்து அமர்ந்தது வைதிகசைவம்" எனவுங் கூறும் தாயுமானுர் திருவாக்கானும், "சைவத்தின்மேற் சமயம் வேறில்லை" என்னும் ஆன்றோர் திருவாக்கானு மறிக. (கச)

மறைவழி கிளைத்த வெண்ணெண் கலைகள்போல் வருநீர்வெள்ளந்
துறைவழி யொழுகும் பலகால் சோலைதண் பழனஞ் செய்தே
னுறைவழி யோடை யெங்கு மோடிமன் றுடையார்க ளன்பர்
நிறைவழி யாதவுள்ளத் தன்புபோ னிரம்பிற் றன்றே.

(இ-ள்.) வேதத்தின்வழியே கிளைத்த அறுபத்துநான்கு கலைகள்போல (பொதியாசலத்திலிருந்து) வருகின்ற தாமிரபர்ணி நதியானது, நீர்த்துறையினின்று கிளைத்துச்செல்லும் பல கால்களால், சோலைகள் - தண்ணிய மருதநிலம் - வயல்கள் - தேன்றுளி சிந்தும் மலரோடைகள் முதலிய இடங்க ளெங்குஞ் சென்று பொன்னம்பலத்தை யிடமாக வுடைய சிவபெருமானுக்கு அடியாரது உள்ளத்தில் நிறைதல் நீங்காத அன்புபோல நிறைந்தது. எ-று. (கரு)

### கலிநிலைத்துறை.

இழிந்த மாந்தர்கைப் பொருள்களு மிகபரத் தாசை
கழிந்த யோகியர் கைப்படிற் றூயவாய்க் களங்க
மொழிந்த வாறுபோ லுவரியுண் டுவர்கெடுத் தொழிவி
லொழிந்த நீரமு தாயின புவிக்கும்வா னவர்க்கும்,

(இ-ள்.) (கொலையாதி குற்றங்களால்) தாழ்வான மானுடர் தமது கையாற் கொடுக்கும் (அறத்தாறின்றித் தேடிய) பொருள்களும், உலகவின்பத்திலுஞ் சுவர்க்க இன்பத்திலும் ஆசை நீங்கிய சிவயோகிகளது கையிற் சேர்ந்தபொழுதே பரிசுத்தமுடையனவாய் அக்குற்றங்களிலிருந்து நீங்கியமுறைமைபோல, மேகமானது கடல்நீரைப்பருகி (அதனிடத்துள்ள) உவர்ப்பையொழித்துச் சொரிந்த நீர்த்துளிகள் உலகத்திலுள்ள உயிர்கட்குந் தேவர்கட்கும் அமுதமாயின. எ-று.

எழிலி=மேலெழு மியற்கையுடையது ; மேகம். (கசு)

ஈறி லாதவ ளொருத்தியே யைந்தொழி லியற்ற
வேறு வேறுபேர் பெற்றென வேலைநீ ரொன்றே
யாறு கால்குளங் கூவல்குண் டகழ்கிடங் கெனப்பேர்
மாறி யீறில்வான் பயிரெலாம் வளர்ப்பது மாதோ.

(இ-ள்.) (முக்காலத்தும்) நித்தியமாகிய சிற்சத்தியே பஞ்சகிருத்தியங்களையுஞ் செய்ய (பராசத்தி - ஆதிசத்தி - இச்சாசத்தி - ஞானசத்தி - கிரியாசத்தி முதலிய) வெவ்வேறு திருநாமங்கள் பெற்றருளியதுபோல, கடல்நீர் ஒன்றே ஆறு - கால்வாய் - குளம் - கிணறு - நீர்நிலை - தோண்டிய கிடங்கு என்று பெயர்கள் மாறி, கெடுதலில்லாத பெரிய பயிர்களையெல்லாம் வளர்ப்பதாம். எ-று. (கஎ)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

களமர்கள் பொன்னேர் பூட்டித் தாயர்வாய்க் கனிந்த பாடற்
குளமகிழ் சிறாரி னேறு மொருத்தலு முவகை தூங்க
வளமலி மருதம் பாடி மனவலி கடந்தோர் வென்ற
வளமரு பொறிபோ லேவ லாற்றவாள் வினையின் மூண்டார்.

(இ-ள்.) மருதநிலமாக்கள் பொன்னேரைப்பூட்டி, தாய்மார் வாயிற் பாடுகின்ற சுவைமிகுந்த பாடலுக்கு மனங்களிக்குஞ் சிறுவரைப்போல எருதுகளும் எருமைக்கடாக்களும் மனமகிழ்ச்சிமிக வளப்பமிகுந்த மருதப்பண்பாடி மனவலியைக் கடந்த மகான்கள் வென்ற சுழலும் ஐம்பொறிகள் அவர் ஏவல் வழி நிற்றல்போல (அந்த எருதுகளும் எருமைகளும் தமது ஏவல்வழி நிற்க) உழவுத்தொழிலிற் றலைப்பட்டார்கள். எ-று.

அலமரல் என்றது அளமரல் என நின்றது. இது லகார ளகார வொற்றுமை. பொன்னேர்=புத்தேர். புத்தேரென்பது புது+ஏர். (கஅ)

பலநிற மணிகோத் தென்னப் பன்னிற வேறு பூட்டி
யலமுக விரும்பு தேய வாள்வினைக் கருங்கான் மள்ளர்
நிலமக ளுடலங் கீண்ட சால்வழி நிமிர்ந்த சோரிச
சலமென நிவந்த செங்கேழ்த் தழன்மணி யிமைக்கு மன்றே.

(இ-ள்.) பலநிறங்களையுடைய இரத்தினங்களைக் கோவைசெய்ததுபோல, பல நிறங்களையுடைய எருதுகளைப்பூட்டி, கலப்பையின் முகத்திலுள்ள கொழுப்படைதேய, விவசாயத்தொழில்செய்யுங் கரியகால்களையுடைய மருதநிலமாக்கள் பூமிதேவியின் உடலைக்கிழித்த படைச்சால்வழியில் உண்டாகிய உதிரநீர்போல, மேலெழுந்த செந்நிறமமைந்த நெருப்புப்போன்ற இரத்தினங்கள் விளங்காநிற்கும். எ-று. (கக)

ஊறுசெய் படைவாய் தேய வுழுநரு நீர்கால் யாத்துச்
சேறுசெய் குநருந் தெய்வந் தொழுதுநீஞ் செந்நெல் வீசி
நாறுசெய் குநரும் பேர்த்து நடவுசெய் குநருந் தெவ்வின்
மாறுசெய் களைகட் டோம்பி வளம்புகுக் குநரு மானார்.

(இ-ள்.) (விளைநிலத்தைக்) கிழிக்கின்ற கலப்பைமுகந் தேயும்படி உழுகின்றவர்களும், நீரைக் கால்வழியாகக் (கழனியிற்) கட்டிச் சேறு செய்கின்றவர்களும், (அம்மருதநிலத்திற்குரிய) இந்திரனைப் பணிந்து இனிய செந்நெல்முளைகளை விதைத்து நாறுசெய்கின்றவர்களும், (அவற்றைப்) பெயர்த்தெடுத்து நடவுசெய்கின்றவர்களும், பகைவரைப்போன்று (அப்பயிருடன்) மாறுபட்டோங்கும் களைகளைக் களைந்து வளஞ் செய்கின்றவர்களும (ஆக அம்மருதநிலமாக்களாகிய வுழவர்) ஆயினார்கள். எ-று.

உழுநர் செய்குநர் முதலியவற்றிலுள்ள நகரம் நிகழ்கால விடைநிலை. (௨௰)

பழிபடு நறவந் தன்னைக் கடைசியர் பருகிச் செவ்வாய்
மொழிதடு மாற வேர்வை முகத்தெழ முறுவ றோன்ற
விழிசெவந் துழலக் கூந்தலு மென்றுகில் சோர வுள்ளக்
கழிபெருங் களிப்பு நல்கிக் கலந்தவ ரொத்த தன்றே.

(இ-ள்.) (பெரியோர்களால்) பழிக்கப்பட்ட மதுவானது பள்ளப்பெண்களாற் பருகுதலால், அவர்கள் செவந்தவாயிற் றோன்றுஞ் சொற்கள் முறைபிறழவும், குறுவேர்வை முகத்தில் அரும்பவும, (மெய்மறந்து) பெருநகை தோன்றவும், கண்கள் செவந்து சுழலவும், அளகபாரமும மெல்லிய ஆடையுஞ் சோரவும், மனத்தில் மிக்க பெருமயக்கத்தைக் கொடுத்து, (அம்மாதரைக்) கலந்த ஆடவரை யொத்தது. எ-று.

மாதர்கள் சொல் தடுமாறுதலும், முகத்திற் குறுவெயர்வு முகிழ்த்தலும், வாயிற் புன்னகை யரும்பலும், மதர்ப்பால விழி செவப்புற்றுச் சுழலுதலும், கூந்தலும் ஆடையுஞ் சோருதலும, கலவியிற் பெறும் இயற்கைக் குணங்க ளாகலின், அவை யனைத்தையுஞ் செய்ய வல்ல கள்ளைக் கலந்த நாயகனுக்கு உவமிக்கப்பட்டது.

இச்செய்யுள் செம்மொழிச்சிலேடையணி. (௨௧)

பண்பகை யாருந் தீஞ்சொற் கடைசியர் பவளச் செவ்வாய்க்
குடபகை யாம்ப லென்று மொண்ணறுங் குவளை நீலங்
கட்பகை யாகு மென்றுங் கமலங்கண் முகத்துக் கென்றுந்
திட்பகை யாகு மென்றுஞ் செறுத்தல்போற் களைதல் செய்வார்.

(இ-ள்.) (களை களையும்படிப் போந்த) பண்ணுக்குப் பகையாகிய இனிய மொழிகளையுடைய பள்ளப்பெண்கள் பவளம்போன்ற (தமது) செவ்விய வாய்களுக்குத் தீராப்பகையுள்ளது செவ்வல்லிமலாகளென்றும், ஒள்ளிய நன்மணங் கமழும் செங்குவளைமலர்களுங் கருங்குவளைமலர்களும் (தமது) கண்களுக்குப் பகையாமென்றும், தாமரைமலர்கள் அழகிய முகங்கட்கு எக்காலத்திலுந் திண்ணிய பகையாமென்றும் (அவற்றைச்) சேதித்தல்போலக் களைந்தெறிவாராயினர். எ-று.

ஆம்பல் - குவளை - நீலம் - கமலம் என்பன முதற்பொருளின்பெயர்கள் அவற்றின் மலர்களாகிய சினைப்பொருள்கட்கு வந்தமையின் முதலாகுபெயர்கள். (௨௨)

கடைசியர் முகமுங் காலுங் கைகளுங் கமல மென்னார்
படைவிழி குவளை யென்னார் பவளவாய் குமுத மென்னா
ரடையவுங் களைந்தா ரள்ளர் பகைஞரா யடுத்த வெல்லை
யுடையவ னாணை யாற்று லொறுப்பவர்க் குறவுண் டாமோ.

(இ-ள்.) உழவர்கள் தங்கள் மாதர்களது முகம் கால் கைகள் (ஆகிய இவை) செந்தாமரைமலரையும், வேற்படை போன்ற கண்கள் நீலமலரையும், பவளம்போன்ற வாய்கள் குமுதமலரையும் ஒத்திருப்பனவென்று (உறவாக) நினையாமல் (அம்மலர்கள்) எல்லாவற்றையும், (பயிர்க்குப் பகையாக நெருங்கின வென்று தலைவன் கட்டளையிட) களைந்தனர். (இனத்தார்) பகைஞராய் நெருங்கிய சமையத்திலே இறைவன்

கட்டளைவழியினின்று தண்டிப்பவர்க்கு உறவினர் என்று (தாட்சண்யம் பார்த்தல்) உளதோ. (இல்லை). எ-று.

இச் செய்யுள் வேற்றுப்பொருள் வைப்பணி. (உரு)

புரையற வுணர்ந்தோர் நூலின் பொருளினு ளடங்கி யந்நூல்
வரையறை கருத்து மான வளர்கருப் புறம்பு தோன்றிக்
கரையமை கல்வி சாலாக் கவிஞர்போ லிறுமாந் தந்நூ
லுரையென விரிந்து கற்பின் மகளிர்போ லொசிந்த தன்றே.

(இ-ள்.) வளர்கின்ற கரு (ஐயந்திரிபாதி) குற்றங்க ளறக் கற்றறிந்தோர் (இயற்றிய) நூலிலே (பொருந்தியிருக்கும்) பொருள்போல (உள்ளே) அடங்கியிருந்து, அந்நூற்பொருளுக்கு வரையறைப்பட்ட கருத்துரைபோல வெளிப்பட்டு, (இலக்கண) வரம்பு பொருந்திய கல்வி நிரம்பப்பெறாத புன் கவிஞர் போல இறுமாந்து, அந்நூலின் பொருள்போல விரிந்து, கற்புடைய மாதர்கள்போலத் (தலை) வளைந்தது. எ-று.

கரு வென்றது ஈண்டுக் கதிர்.

ஐய முதலிய குற்றங்களொழியக் கற்ற சான்றோர் அருளிய நூல் வெற்றுரையா யிராது பொருள் பொதிந்து கிடக்குமாறு சூலாயிருந்து (சூல்=கர்ப்பம்), "கவிப்பொருள் சுருக்கிக் காட்டல் தாற்பரியம்" என்றபடி, அப்பெருநூலுக்குங் கருத்துரை சிறிதாக நிற்குமாறு சிறிது தோன்றி வெளிப்பட்டு, உத்தமாசிரியரிடத்து முறைப்படி கல்வி கல்லாத புன் கவிஞர் தக்க புலவரை மதியாது தருக்குற்று நிற்குமாறு, இளம்பருவத்தாற் றலைநிமிர்ந் திறுமாந்து, வல்லோர் நூலுக் குரைசெய்யுங்கால் அஃதளவு கடந்து விரியுமாறு கதிர் விரிந்து, கற்பின்மகளிர் பிறிதொன்றினையுங் காண விரும்பாது தமது கால்களைப் பார்க்குமாறு தலைசாய்ந்து நின்றது என முறையே பயிர் வளர்ந்ததன்மையை விளக்கினர். (உசு)

அன்புறு பத்தி வித்தி யார்வநீர் பாய்ச்சுந் தொண்டர்க்
கின்புரு வான வீச னின்னருள் விளையு மாபோல்
வன்புறு கருங்கான் மள்ளர் வைகலுஞ் செவ்வி நோக்கி
நன்புல முயன்று காக்க விளைந்தன நறுந்தண் சாலி.

(இ-ள்.) அன்பு பொருந்திய பத்தியாகிய விதையை விதைத்து ஆசையாகிய நீரைப் பாய்ச்சுகின்ற அடியார்களுக்கு, ஆனந்தமே திருமேனியாகக் கொண்டருளிய சிவபெருமானது இனிய திருவருட்பயன் விளையுமாறுபோல, வலிமை மிகுந்த கரிய கால்களையுடைய உழவர்கள் தினந்தோறும் பருவம் பார்த்து நல்ல வயல்களுக்கு (எருவிடல் முதலிய) முயற்சிகளைச் செய்து காக்க, நன்மணமுங் குளிர்ச்சியும் பொருந்திய நெற்பயிர்கள் விளைந்தன. எ-று.

"அன்புறு பத்தி வித்தி யார்வநீர் பாய்ச்சுந் தொண்டர்க் - கின்புறு வான வீச னின்னருள் விளையும்" எனக்கூறியதனை,—"நெஞ்சப் புனத்து வஞ்சக் கட்டையை - வேரற வகழ்ந்து போக்கித் தூர்வைசெய் - தன்பெனும் பாத்தி கோலி முன்புற - மெய்யெனு மெருவை விரித்தாங் கையறில் - பத்தித் தனிவித் திட்டு நித்தலு- மார்வத் தெண்ணீர் பாய்ச்சி நேர்நின்று - தடுக்குநர்க் கஞ்சா திடுக்கண் செய்யும் - பட்டி யஞ்சினுக் கஞ்சியுட் சென்று - சாந்த வேலி கோலி வாய்ந்தபின்-ஞானப் பெருமுளை நந்தாது முளைத்துக் - கருணை யிளந்தளிர் காட்ட வருகாக் - காமக் குரோதக் களையறக் களைந்து - சேமப் படுத்துழிச் செம்மையி னோங்கி - மெய்ம்மயிர்ப் புளகமுகிழ்த்திட் டம்மெனக்-கண்ணீ ரரும்பிக் கடிமலர் மலர்ந்து - புண்ணிய வஞ்செழுத் தருங்காய் தோன்றி-நஞ்சுபொதி-காள கண்டமுங் கண்ணொரு மூன்றுந்-தோளொரு நான்குஞ் சுடர்முக மைந்தும் - பவளநிறம் பெற்றுத் தவளநீறு பூசி - அறுசுவை யத

ணினு முறுசுவை யுடைத்தாய்க் - காணினுங் கேட்பினுங் கருதினுங் களிதருஞ்-சேனு யர் மருத மாணிக்கத் தீங்கனி - பையப் பையப் புழுத்துக் கைவர" எனக்கூறிய பட்டினத்தடிகள் திருவாக்கான் விளங்க வறிக. (உரு)

அகனில வேறுபாட்டி னியல்செவ்வி யறிந்து மள்ளர்
தகவினை முயற்சி செய்யக் காமநூல் சாற்று நான்கு
வகைநலார் பண்பு செவ்வி யறிந்துசேர் மைந்தர்க் கின்ப
மிகவிளை போகம் போன்று விளைந்தன பைங்கூ ழெல்லாம்.

(இ-ள்.) காமநூல் கூறுகின்ற நான்குவகையினராகிய மாதர்களது தன்மையும் பருவமு முணர்ந்து புணரும் ஆடவருக்கு ஆனந்தம் மிகுதியாக விளங்கும் போகத்தைப்போல, பள்ளர்கள் அகன்ற நிலவேற்றுமைத்தன்மையையும், அந்நிலத்திற் பயிர் செய்யும் பருவத்தையும் உணர்ந்து அவற்றிற்குத் தக்க தொழின்முயற்சிகள் செய்ய, பசுமையாகிய (நன்செய்ப் புன்செய்ப்) பயிர்களெல்லாம் விளைந்தன. எ-று.

நான்குவகை நலார்—பதுமினி - சித்தினி - சங்கினி - அத்தினி.

மாதர்தன்மை முதலியன வென்றதை "பரந்த சாதி குணந் தெய்வப் பயிற்சி சேட்டை சுபாவ மின்பத் - தரங்கள் கொள்கை யிங்கிதமே முதலாந் தகுதி" எனறதனு ன்றிக.

மாதர்போல நிலமும், மாதரிடத்துணடாம்போகம்போல நிலங்களின் போகமுமென வுவமித்தார். விளைவும் போகமாகையாற் போகம்போன் றென்றார். (உசு)

கொடும்பிறை வடிவிற் செய்த கூனிரும் பங்கை வாங்கி
முடங்குகால் வரிவண் டார்ப்ப முள்ளரைக் கமல நீல
மடங்கவெண் சாலி செந்நெல் வேறுவே றரிந்தி டாக்கி
நெடுங்களத் தம்பொற் குன்ற நிரையெனப் பெரும்போர் செய்தார்.

(இ-ள்.) (மருதநிலமாக்கள்) வளைந்த பிறைச்சந்திரன்வடிவுபோலச் செய்துள்ள அரிவாளைக் கையி லேந்தி, முடங்கிய கால்களையுங் கீற்றுகளையுமுடைய வண்டுகள் (மேலெழுந்து) ஒலிக்கும்படி, முட் பொருந்திய அடியையுடைய தாமரைமலர்களும் நீலோற்பலமலர்களும் அடங்க, வெண்ணெல் விளைவுகளையும், செந்நெல் விளைவுகளையும் வெவ்வேறாக அரிந்து கற்றைகள் கட்டி நெடிய களத்திலே அழகிய பொன் மலைகளின் வரிசைகள்போல (வரிசைகளாகப்) பெரிய போர்கள்போட்டார்கள்.

நீர்வள மிகுதியால் அப்பயிருடன் நீர்க்கொடிகளாகிய தாமரை நீலம் முதலியவை பயிராகி வண்டுகள் அவைகளின் மலர்களிலுள்ள தேனையவாவி வசித்திருந்தமையின், அவர்கள் பயிரையறுக்கப்புகுங்கால் கமலமுதலிய கொடிகளை யறுத்தமையின் வண்டுகள் நிற்றற்கிடமின்றி மேலெழும்பி யார்த்தன வென்பார் "முடங்குகால் வரிவண் டார்ப்ப முள்ளரைக் கமலநீல மடங்க" என்றார். (உஎ)

கற்றைவை களைந்து தூற்றிக் கூப்பியூர்க் காணித் தெய்வ
மற்றவர்க் கற்ற வாறீந் தளவைகண் டாறி லொன்று
கொற்றவர் கடமை கொள்ளப் பண்டியிற் கொடுபோய்த் தென்னு
டுற்றவர் சுற்றந் தெய்வம் விருந்தினர்க் கூட்டி யுண்பார்.

(இ-ள்.) (உழவர்கள்) திரளாகிய வைக்கோல்களைப் போக்கி (நெற்களைத்) தூற்றி (பொலிகளாக) க்குவித்து, ஊர்க்காணித் தெய்வங்களுக்கும் தரித்திரர்களுக்கும் அளவிட்டமுறைப்படி கொடுத்து (அதன்மேல் மிச்சத்தை) அளவிட்டு, ஆறிலொருபாகத்தை அரசர்கள் தமது இறைப்பொருளாகக் கொள்ள, (மற்றதை) பண்டியிற் கொண்டுசென்று பிதிரர் - உறவினர் - தேவர் - விருந்தினர் (இவர்களுக்கு) உண்பித்துத் தாமும் உண்பார்கள். எ-று.

ஊர்க்காணித் தெய்வமென்றது—கிராமதேவதை பிடாரி யெனக்கொள்க.

தென்னுடுற்றவர்=பிதிரர். இவர் பிரமனற் சிருட்டிகாலத்திலேயே படைக்கப்பட்ட ஓர் தெய்வச்சாதியர். விருந்தினர் என்றது அதிதிகளை. இதனை

பழமொழி.

"அட்டுண்டு வாழ்வார்க் கதிதிக ளொஞ்ஞான்றும்
அட்டுண்ணு மாட்சி யுடையவர்—அட்டுண்டு
வாழ்வார்க்கு வாழ்வா ரதிதிக ளென்றுரைத்தல்
வீழ்வார்க்கு வீழ்வார் துணை" என்பதனுணர்க.

தென்னுடுற்றவர் முதலிய நால்வகையினரையும் உண்பித்தற்குத் தாமுயிரோடிருந்து செய்ய வேண்டுதலின் தம்மைப் பாதுகாத்தலும் அறமாமென்பார் "தாமும் உண்பார்" என்றார். இச்செய்யுளின் கருத்தை "தென்புலத்தார் தெய்வம் விருந்தொக்க லானென்றாங் - கைம்புலத்தா றோம்ப றலை" என்னுந் திருக்குறளானறிக.()

சாறடு கட்டி யெள்ளுச சாமைகொள் ளிறுங்கு தோரை
யாறிடு மதமால் யானைப் பழுக்குலை யவரை யேனல்
வேறுபல் பயறோ டின்ன புன்னில விளைவு மற்று
மேறொடு பண்டி யேற்றி யிருநிலங் கிழிய வுய்ப்பார்.

(இ-ள்.) கருப்பஞ்சாற்றாற் காய்ச்சப்படும் வெல்லமும், எள்ளும், சாமையும், கொள்ளும், சோளமும், மலைநெல்லும், ஆறுபோலும் ஊற்றெடுக்கின்ற மிக்க மதநீரையுடைய யானையின் பழுவெலும்பின் வரிசைபோன்ற வாழைக்குலைகளும், அவரையும், தினையும், பலவேறுவகைப்பட்டபயறுகளுமாகிய இப்புன்செய்ப்பயிர்களையும், எருதுகளின்மேலும் பண்டிகளின்மேலு மேற்றி, பெரிய பூமியானது பிளவுறும்படி செலுத்துவார்கள். எ-று.

சாறடுகட்டி - யானைப்பழுக்குலை என்றிரண்டும் நன்செய் விளைவாயிருப்பினும், பின்னர்ப்போந்த எள்ளுச்சாமைகொள்ளிறுங்குதோரையாதியவற்றால் பன்மை பற்றியவழக்காகப் புன்செய்விளைவோடொடுனெண்ணப்பட்டன. (௨௬)

துறவின ரீச னேசத் தொண்டினர் பசிக்கு நல்லூண்
டிறவினைப் பிணிக்குத் தீர்க்கு மருந்துடற் பனிப்புக் காடை
யுறைவிடம் பிறிது நல்கி யவரவ ரொழுகிச் செய்யு
மறவினை யிடுக்க ணீக்கி யருங்கதி யுய்க்க வல்லார்.

(இ-ள்.) முற்றத் துறந்தவர்களும், சிவநேசம் பொருந்திய அடியார்களும், ஆகவுள்ளவர்களது பசிக்கு நல்ல வுணவும், நீங்குதலில்லாத (ஊழ்) வினைவசத்தான் வரும் வியாதிகளுக்கு அவுடதமும, (மழை - பனி முதலியவற்றா னுண்டாகும்) உடல் நடுக்கத்திற்கு வஸ்திரமும், வசித்தற்கிடமும், இன்னும் வேண்டிய எனைய பொருள்களையும் உதவி, அத்துறவிகளும் அடியார்களும் தத்தம (மேற்கொண்ட நிலைகளில் வழுவாது) ஒழுகும் தருமச் செயல்களுக்குவரும இடையூறுகளை அவற்றாலொழித்து, அரிய வீட்டுவழியிற் செலுத்த வல்லவராவர். (அந்நாட்டினர்) எ-று.

ஊழ்வினைதன்னைச் செய்தானை விடாது என்பதை

நாலடியார்-பழவினை.

"பல்லாவு ளுய்த்து விடினுங் குழக்கன்று
வல்லதாந் தாய்நாடிக் கோடலைத்—தொல்லைப்
பழவினை யன்ன தகைத்தேதற் செய்த
கிழவனை நாடிக் கொளற்கு." என்பதனு னறிக.

இச்செய்யுளின் கருத்தை "இல்வாழ்வா னென்பா னியல்புடைய மூவர்க்கு - நல்லாற்றி னின்ற துணை" என்னுந் திருக்குறளானறிக. (௯௦)

நிச்சலு மீச னன்பர் நெறிப்படிற் சிரமேல் வைத்த
பொச்சமி லன்பு மன்னர் புதல்வரைக் கண்டா லன்ன
வச்சமுங் கொண்டு கூசி யடிபணிந் தினிய கூறி
யிச்சையா றொழுகி யுள்ளக் குறிப்பறிந் தேவல் செய்வார்.

(இ-ள்.) தினந்தினமும் சிவநேசமுடைய அடியார்கள் வழியில் எதிர்ப்பட்டால், தமது புதல்வர்பேரிலுள்ள மெய்யன்பும், அரசர்களுடைய புதல்வரைக் கண்டாலொத்த பயமும் அடைந்து (சிவகடாக்ஷம் பெற்றிருக்கும் அவரது மேம்பாட்டையும், தமது தாழ்வையுஞ் சீர்தூக்கிக்) கூசி, திருவடிகளைப் பணிந்து இன்சொற்கள் வசனித்து, அவர்களது விருப்பத்தின்வழி நடந்து மனக்குறிப்பையறிந்து (அவர்கட்கு வேண்டிய) பணிவிடைகளைச் செய்வார்கள். (அந்நாட்டினுள்ளவர்கள்) எ-று.

நித்தல் - நிச்சல். மரூஉ. பொச்சம் இது திசைச்சொல. (௯௧)

நறைபடு கனிதேன் பெய்த பாலொடு நறுநெய் வெள்ள
நிறைபடு செம்பொன் வண்ணப் புழுக்கலா னிமிர்ந்த சோறு
குறையற வுண்டு வேண்டும் பொருள்களுங் கொண்மி னென்ன
மறைமுத லடியார் தம்மை வழிமறித் தருத்து வார்கள்.

(இ-ள்.) சிவபெருமா னடியவர்களை (வழியிற் கண்டால்) போகவொட்டாமற் றடுத்து, தேன்பொருந்திய கனியையும் தேனொடுகலந்த பாலையும் நன்மணம்பொருந்திய நெய்ப்பெருக்கு நிறைந்த பருப்போடு கலந்த அரிசியாற் சமைத்தோங்கிய அன்னத்தையுங் குறைவில்லாமற் புசிப்பித்து, இன்னும் வேண்டிய பொருள்களையுங் கொள்ளுங்களென்று (அந்நாட்டினர் தமதிருப்பிடத்திற்கழைத்துவந்து) உண்பிப்பர்.

செம்பொன்வண்ணப் புழுக்கல்-பருப்புச்சோறு. செம்பொன்வண்ணம் = செவந்த பொன்போலு நிறமுடையது. இது உவமைத்தொகைப்புறத்துப் பிறந்த அன்மொழித்தொகை. புழுக்கல் = அரிசி ; சோறு. இது தொழிலாகுபெயர்.

கற்றைவைகளைந்து என்னுஞ் செய்யுள்முதல் இதுகாறும், அந்நாட்டினர் என வருவித்துத் தோன்றா எழுவாயாகக் கொள்க. (௯௨)

பின்னெவ னுரைப்ப தந்தப் பெருந்தமிழ் நாடாங் கன்னி
தன்னிடை யூர்க ளென்னு மவயவந் தாங்கச் செய்த
பொன்னியல் கலனே கோயின் மடமறப் புறநீர்ச் சாலை
யின்னமு தருத்து சாலை யெனவுருத் திரிந்த தம்மா.

(இ-ள்.) அந்தச் சிறப்பினையுடைய பெரிய செந்தமிழ் நாடாகிய கன்னியிடத்திலுள்ள மற்றையூர்களென்னும் உறுப்புகள் தாங்கச்செய்த பொன்னாலியன்ற ஆபரணமே திருக்கோயில் - திருமடம் - தருமசத்திரம் - தண்ணீர்ப்பந்தல் - இனிய அன்னத்தை யுண்பிக்குஞ் சாலை ஆகிய இவைகளாக வடிவம் வேறுபட்டன வென உரைப்பதன்றி வேறே யாதுசொல்லத்தக்கது. எ-று.

பாண்டிநாட்டைப் பெண்ணாகவும், அதனகத்துள்ள வூர்களை யவயவங்களாகவும், கோயில் மடப்புற முதலியவற்றை அவ்வுறுப்புகள் தாங்கிய கலனாகவும் உருவகஞ் செய்தனர். (௯௩)

## திணை மயக்கம்.

### கலிநிலைத்துறை.

இன்ற டம்புனல வேலிசூழ் நிலவ வரைபயிற்
குன்ற முல்லைதண் பணைநெய்தல் குலத்திணை நான்கு
மன்ற வுள்ளமற் றவைநிற்க மயங்கிய மரபி
னொன்றொ டொன்றுபோய் மயங்கிய திணைவகை யுரைப்பாம்.

(இ-ள்.) இனிய விசாலமாகிய நீர்நிலஞ்சூழ்ந்த இந்தச் செந்தமிழ்நாட்டெல்லையில், குறிஞ்சி - முல்லை - குளிர்ச்சிதங்கிய மருதம் - நெய்தலாகிய நான்கு சிறப்புடைய திணைகளும் நிலைபெற்றுள்ளன. அந்நிலங்கள் நிற்க; மயக்கமரபால் ஒரு நிலத்துக் கருப்பொருளோடு மற்றொரு நிலத்துக் கருப்பொருள் சென்று மயங்கிய திணை மயக்கப் பகுதியை (இனிக்) கூறுவாம். எ-று.

திணை நான்கு. அவை, குறிஞ்சி - முல்லை - மருதம் - நெய்தலென்பன; அவற்றுள், மலையும் மலைசூழ்ந்த நிலமுங் குறிஞ்சி. காடுங் காடுசார்ந்த பூமியும் முல்லை. வயலும் வயல்சூழ்ந்த நிலமும் மருதம். கடலுங் கடற்கரையும் நெய்தல் எனப்படுமாகலின், இந்நான்கே சிறந்தனவென விளக்கிக் "குலத்திணைநான்கு" என்றார். பாலையென ஒன்று கூட்டி ஐந்தென வழங்குவரோவெனின், "முல்லையுங் குறிஞ்சியு முறைமையிற் றிரிந்து***பாலை யென்பதோர் படிவங்கொள்ளும்" என்றபடி, குறிஞ்சியும் முல்லையுங் கூடிய வழிப் பாலையாதலின் அஃது சிறப்பிலதாயிற்று.

"மயங்கிய மரபின்" என்பதற்கு முறைமயங்கிக்கலந்த மரபு (மரபு=குலம்) போல, எனப் பொருள்கொள்ளுதலு மொக்கும். இவ்வாறு கொள்ளின் இன் என்பதை ஒப்புப்பொருள் பயக்கும் ஐந்தனுருபிடைச் சொலலென்க.

மயங்கிய மரபினராவார். அநுலோமர் - பிரதிலோமர் - அந்தராளர் - விராத்தியரெனப்படுவர். அவருள் - உயர்குலத்தானுக்கும் இழிகுலப்பெண்ணுக்கும் பிறந்த பிள்ளை அனுலோமன் எனவும், இழிகுலத்தானுக்கும் உயர்குலப்பெண்ணுக்கும் பிறந்த பிள்ளை பிரதிலோமன் எனவும், அனுலோமத் தந்தைக்கும் பிரதிலோமத் தாய்க்கும் பிறந்த பிள்ளை அந்தராளன் எனவும், பிரதிலோமத்தந்தைக்கும் அனுலோமத் தாய்க்கும் பிறந்த பிள்ளை விராத்தியன் எனவும் பெயர்பெறும். இதனை,

"உயர்ந்தநாற் குலத்தி லாண்பெண் ணுயாவிழி விரண்டுங் கூடி
யியங்கிய பிள்ளைப் பேரோ யனுலோம னென்று கூறு
நயந்தவப் பெண்ணு மாணு நண்ணிய வுயர்வு தாழ்வில்
வியந்திடும் பிள்ளைப் பேரோ விரற்பிரதி லோம னாமே.

பெருத்தவவ் வனுலோ மன்னே பிரதிலோம னென்ற பேரி
லுரைத்தவாண் பெண்ணில் வந்தே யுற்றவ னந்த ராள
னிரைத்தவர் மாறிக் கூடிப் பிறந்தவ னீண்ட பேரோ
விரித்தது வினவிக் கேட்கில் விராத்திய னென்னு நூலே"—என்னுஞ்
சூடாமணியானறிக. (கச)

கொல்லை யானிரை மேய்ப்பவர் கோழிணர்க் குருந்தி
னெல்லை தாயதிற் படர்கழிக் கருந்துண ருகுப்ப
முல்லை சோறெனத் தேன்விராய் முத்திழை சிற்றி
லெல்லை யாயமோ டாடுப வெயின்சிறு மகளிர்.

(இ-ள்.) முல்லை நிலத்திலே பசுமந்தையை மேய்க்கின்றவர்கள் கொழுவிய பூங்கொத்தினை யுடைய குருந்தமரத்தில் விரைந்து தாவியேறி, அதிற் (குறிஞ்சிநிலத்

தினின்று) படர்ந்த மிளகுக்கொடியிலுள்ள கரிய கொத்துக்களை யுதிர்ப்பார்கள். (பாலை நிலத்திலுள்ள) வேடப்பெண்கள் (நெய்தநிலத்திலுள்ள) முத்தாற்கோலிய சிறு வீட்டில் (முல்லை நிலத்தி லுள்ள) முல்லையரும்பே சோறாக அதனோடு தேன் கலந்து பெண்கள் கூட்டத்தோடு விளையாடுவார்கள். எ-று.

இச் செய்யுளில், முல்லைநிலத்துடன் குறிஞ்சிநிலத்திற்கும், பாலைநிலத்துடன் முல்லைநிலத்திற்கும் குறிஞ்சிநிலத்திற்கும் நெய்தனிலத்திற்கும் மயக்கங்கூறினர். ()

கன்றொ டுங்கழி வண்டுவாய் நக்கவீர்ங் கரும்பு
மென்று பொன்சொரி வேங்கைவா யுறங்குவ மேதி
குன்றி னந்தினை மேய்ந்துபூங் கொழுநிழன் மருதஞ்
சென்று றங்குவ சேவக மெனமுழைச் செவிமா.

(இ-ள்.) (மருதநிலத்திலுள்ள) எருமைகள், தமது கன்றுகளும் மயக்கமுடைய வண்டுகளும் தமது கடைவாயை நக்கும்படி குளிர்ந்த கரும்புகளை மென்று, (குறிஞ்சி நிலத்திலுள்ள) பொன் (போலும் மலர்களைச்) சிந்துகின்ற வேங்கைமரநிழலில் கண்டு யில்வன. குறிஞ்சிநிலத்திலுள்ள முறம்போன்ற செவியையுடைய யானைகள் முதிராத தினைக்கதிர்களை மேய்ந்து மலர்களையுடைய மருதநிலத்தின் கொழுவிய நிழலிலே சென்று (தாம்) துயிலுமிடமாகக் கொண்டு உறங்குவன. எ-று.

சேவகம் = யானை துயிலுமிடம். பொன் - வேங்கை - தினை ஆகுபெயர்கள்.

இச் செய்யுளில் மருதநிலத்துடன் குறிஞ்சிநிலத்திற்கும், குறிஞ்சிநிலத்துடன் மருதநிலத்திற்கும் மயக்கங் கூறினர். (௩௬)

எற்று தெண்டிரை யெறிவளை யெயிற்றிய ரிழைத்த
சிற்றில் வாய்நுழைந் தழிப்பவச் சிறுமியர் வெகுண்டு
பற்றி லாரெனச் சிதறிய மணவணி பரதர்
முற்றி லாமுலைச் சிறுமியர் முத்தொடுங் கோப்ப.

(இ-ள்.) (நெய்தனிலத்தில் கரையுடன்) மோதும் தெள்ளிய (கடலின்) அலை கள் வீசுகின்ற சங்குகள், (குறிஞ்சிநிலத்திலுள்ள) குறச்சிறுமியர் கோலிய சிற்றிலி னிடத்தே புகுந்து அதனை யழிக்க, அச் சிறுமியர் கோபித்துப் பற்றில்லாதவர்போல (கழற்றி) எறிந்த மணவணியாபரணத்தை, பரதர்குலத்திற் றோன்றிய முதிராத தன ங்களையுடைய சிறுமியர் முத்துக்களோடு கோவை செய்வார்கள். எ-று.

கோப்ப - பலர்பாற்படர்க்கை வினைமுற்று.

இச் செய்யுளில் நெய்தனிலத்துடன் பாலைநிலத்திற்கும், பாலைநிலத்துடன் நெய்தனிலத்திற்கும் மயக்கங்கூறினர். (௩௭)

முல்லை வண்டுபோய் முல்லையாழ் முளரிவாய் மருதம்
வல்ல வண்டினைப் பயிற்றிப்பின் பயில்வன மருதங்
கொல்லை யான்மடி யெறிந்திளங் குழவியென் றிரங்கி
யொல்லை யூற்றுபால் வெள்ளத்து ளுகள்வன வாளை.

(இ-ள்.) முல்லைநிலத்திலுள்ள வண்டுகள் (மருதநிலத்திற்குச்) சென்று தமது முல்லைநிலப்பண்ணைத் தாமரைமலரில் வசிக்கும் மருதப்பண்ணில் வன்மைவாய்ந்த வண்டுகளுக்குக் கற்பித்து, பிறகு அம் மருதநிலப்பண்ணைக் கற்றுக்கொள்வன. (மருத நிலத்திலுள்ள) வாளைமீன்கள் முல்லைநிலத்திலுள்ள பசுவின் மடியில் மோத, (அப்பசு அதனைத் தன்) இளங்கன்று முட்டியதெனக் கருதி மனங் கனிந்து விரைந்து சொரி யும் பால்வெள்ளத்துள் புரள்வன. எ-று.

இச் செய்யுளில் முல்லைநிலத்துடன் மருதநிலத்திற்கும், மருத நிலத்துடன் முல்லைநிலத்திற்கும் மயக்கங் கூறினர்.

யாழ் என்பது பண்ணினை யுணர்த்தலின் கருவியாகுபெயர். (௩௮)

கரும்பொற் கோட்டிளம் புன்னைவாய்க் கள்ளுண்டு காளைச்
சுரும்பு செவ்வழிப் பாண்செயக் கொன்றைபொன்[illegible]சொரிவ
வருந்த டங்கடல் வளையெடுத் தாழியான் கையி
லிருந்த சங்கென விறைகொளப் பூவைமே லெறிவ.

(இ-ள்.) ஆண் வண்டுகள் (நெய்தனிலத்திலுள்ள) இரும்புபோன்ற கரிய கொம்புகளையுடைய முதிராத புன்னைமலரிற் பொருந்திய கள்ளைப் பருகி (அந் நெய்தனிலத்திற்குரிய) செவ்வழிப்பண்ணைப் பாட (முல்லைநிலத்திலுள்ள) கொன்றைமரங்கள் (ஈகைத்தன்மை மிக்கார்போல) மலராகிய பொன்னைச் சொரியாநிற்கும். அளத்தற்கரிய பெரிய கடலானது (அலையாகிய கையினால் தன்னிடத்துள்ள) சங்கத்தையெடுத்து விண்டுவின் கரத்திலிருக்கும் பாஞ்சசன்னியம்போல (முல்லைநிலத்திருக்கும்) காயாஞ்செடியில் நிலைபெற்றிருக்க எறியாநிற்கும். எ-று.

செவ்வழிப்பண் - நெய்தனிலப்பண்.

ஆழியான் கையிலிருந்த சங்கென்றது.

அவந்திதேசத்திலுள்ள சாந்தீவினி யென்பவுனைக் கிருஷ்ணனும் பலராமனும் வித்தியாகுருவாகக்கொண்டு வேதாகமங்களைக் கற்றுணர்ந்தனர். பிறகு கண்ணன் ஆசிரியனை வணங்கி "உமக்கு வேண்டிய குருகாணிக்கை யாது" எனக் கேட்க, அவர் பத்தினியாரைக் கேட்டனர். அவர் மனைவி "சிறிது காலத்திற்கு முன், சமுத்திரஸ்நானஞ்செய்கையில் அலையில் அகப்பட்டிறந்த நமது புத்திரனைக் கேளுங்கள்" என்று சொல்ல, அவ்வாறே கண்ணனைக் கேட்டனர். உடனே கண்ணன் தன் அண்ணனுடன் தேரேறி வருணலோகமடைய, அதுகண்ட வருணன் கண்ணனை வணங்கி "வந்தகாரணம் யாது" என, கண்ணன் "கடலாடுகையி லிறந்த எமதாசிரியர் புதல்வனைத் தருக" என, வருணன் "கடலில் வசிக்கும் பாஞ்சசனன் என்னும் அவுணன் விழுங்கிவிட்டான்" எனக் கேட்ட கண்ணன், கடலிற் பாய்ந்து அங்கு துயிலும் அசுரனது நெஞ்சைப் பிளந்து அதனுள்ளிருந்த சங்கைக் கைக்கொண்டு தேரேறி இயமனுலகடைந்து சங்கைப் பூரித்தனன். அவ் வோசை கேட்ட இயமன் விரைந்தோடிவந்து வணங்கி இங்கு வந்தகாரணம் யாதெனக் கேட்டுணர்ந்து புதல்வனைத்தரக் கண்ணன் அப்புதல்வனை ஆசிரியன்முன்கொணர்ந்து விடுத்தனனென்பது.

இச் செய்யுளில் நெய்தனிலத்துடன் முல்லைநிலத்திற்கு மயக்கங்கூறினர். ()

கழிந்த தெங்கினெண் பழம்பரி இ முட்பலாக் கனிகீண்
டழிந்த தேனுவர்க் கேணிபாய்ந் தகற்றுவ வுவளை
வழிந்த தேன்மடற் கேதகை மலர்நிழல் குருகென்
றொழிந்த தாமரைப் போதுபுக் கொளிப்பன கெண்டை

(இ-ள்.) (மருதநிலத்திலுள்ள குலையினின்று) நீங்கிய தென்னமரத்தின் ஒள்ளிய நெற்றுகள் விழுதலால், (குறிஞ்சிநிலத்திற் பயிராகிய) முட்புறத்தையுடைய பலாக்கனிகள் கிழிந்து சிந்தியதேன்பெருக்கு (நெய்தனிலத்திலுள்ள) உவர்ப்புக்கிணறுகளிற் பாய்ந்து (அந்நீரின்) உவர்ப்பை யொழிக்கும். மருதநிலத்திலுள்ள சேல்கெண்டைகள் (நெய்தனிலத்திலுள்ள) தேன் சிந்திய இதழ்களையுடைய தாழைமலரின் நிழலை (மருதநிலத்திலுள்ள) கொக்கு என்று கருதிப் பயந்து, (அந்நிலத்திலத்திற்குரிய) அப்பறவை இருந்து நீங்கிய தாமரைமலரிற் புகுந்து ஒளித்துக்கொள்ளும். எ-று.

இச் செய்யுளில் மருதநிலத்துடன் குறிஞ்சிநிலத்திற்கும் நெய்தனிலத்திற்கும், நெய்தனிலத்துடன் மருதநிலத்திற்கும் மயக்கங் கூறினர்.

சேல் - மருதநிலக் கருப்பொருளாயிருக்க, அஃது வெள்ளத் தடங்காது கிளம்பி நெய்தனில மடைந்ததென்க. (௬0)

ஆறு சூழ்கழிப் புலால்பொறு தசைந்துகூன் கைதை
சோறு கால்வன வாம்பல்வாய் திறப்பன துணிந்து
கூறு வாரெனக் குவளைகண் காட்டிடக் கூடித்
தூறு வாரெனச் சிரித்தலர் தூற்றுவ முல்லை.

(இ-ள்.) (நெய்தனிலத்திலுள்ள) வளைவாகிய தாழைகள் ஆறுகச்சூழ்ந்த (உப்பங்) கழியின் புலால் நாற்றத்தைச் சகியாமல் (உடல்) நடுங்கி, (மலரிலிருந்து மகரந்தமாகிய) சோற்றைக்கக்க, (அதற்கெதிராக மருதநிலத்திலுள்ள) ஆம்பல் மலர்கள் (அச்சோற்றையுண்ண அவாவினபோல) வாயைத் திறப்பன. (அவ் விழிதொழிலை அம்மருதநிலத்துள்ள) குவளைச்செடிகள் பார்த்து (பிறர் குற்றத்தை) வெளியிடுவார் போல (மலராகிய) கண்களாற் (சைகைசெய்து) காட்ட, (அதற்காக முல்லைநிலத்திலுள்ள) முல்லைச்செடிகள் (பிறர் குற்றங்கண்டு தம்முட்) கூடி (நகைத்து) அலர்தூற்றுவார்போல (மலர்தலாகிய) நகைத்தல் செய்து, (பழைய அலர்களைத்) தூற்றுதல் செய்யும். எ-று.

சோறுகால்வன = சோற்றைக் கக்குவன ; மகரந்தத்தைச் சொரிவன. வாய் திறப்பன = (உண்ணும் வேட்கையால்) வாயைத் திறப்பன ; மலர்வன. கண்காட்டிட = கண்ணாற் சைகைசெய்து காட்ட; அரும்ப. அலர்தூற்றுவ = பழியைப் பலரறியத் தூற்றுவன ; அரும்பிப் பழைய மலர்களைச் சொரிவன. எனச் சிலேடைப் பொருள்கொள்க.

இச்செய்யுளில் நெய்தனிலத்துடன் மருதநிலத்திற்கும் முல்லைநிலத்திற்கும் மயக்கங் கூறினர். (௬௧)

துள்ளு சேல்விழி நுளைச்சியர் சுறவொடு மருந்தக்
கள்ளு மாறவுங் கூனலங் காய்தினை யவரை
கொள்ளு மாறவுங் கிழங்குதேன் கொழுஞ்சுவைக் கன்ன
லெள்ளு மாறவு மளப்பன விடைக்கிடை முத்தம்.

(இ-ள்.) துள்ளும் இயற்கைபொருந்திய சேற்கெண்டைபோலும் விழியையுடைய நெய்தனிலப் பெண்கள் சுறாமீனோடும் உண்ண (மருதநிலத்திலுள்ள) கள்ளுக்கு மாறவும், (குறிஞ்சிநிலத்திலுள்ள) புளியங்காய்க்குந் தினையரிசிக்கும் (முல்லைநிலத்திலுள்ள) அவரைக்குங் கொள்ளுக்கு மாறவும், (குறிஞ்சிநிலத்திலுள்ள) கிழங்குக்குந் தேனுக்கும், (மருதநிலத்திலுள்ள) மிக்க சுவையுடைய கரும்புக்கும் (முல்லைநிலத்திலுள்ள) எள்ளுக்கும் மாறவும், அளக்கும்பொருள்கள் மாறப்படும் பொருளளவிற்கேற்ப மாறும் பொருளளவு முத்தங்களாம். எ-று.

கூனலங்காய் = புளியங்காய் ; அளப்பன = எழுவாய். முத்தம் பயனிலை.

இச்செய்யுளில் நெய்தனிலத்துடன் மருதநிலத்திற்குங் குறிஞ்சிநிலத்திற்கும் முல்லைநிலத்திற்கும் மயக்கங் கூறினர்.

நெய்தனில மாதர்கட்குக் கிடைப்பனவாகிய சுறாமீன்களையும் முத்தங்களையும் ஏனைய மூவகை நிலத்துப் பொருள்கட்குப் பண்டமாற்றாக மாற்றுவர் என்பது கருத்து. பண்டமாற்றென்பது ஒருபொருள் வேண்டுவோர் அப்பொருள் பெறுமளவு தம்மிடத்துள்ள பொருளை மாற்றுதலாம். (௬௨)

அவமி கும்புலப் பகைகடந் துயிர்க்கெலா மன்பா
நவமி குங்குடை நிழற்றிமெய்ச் செய்யகோ னடாத்திச்
சிவமி கும்பர ஞானமெய்த் திருவொடும் பொலிந்து
தவமி ருந்தர சாள்வது தண்டமிழ்ப் பொதியம்.

(இ-ள்.) தீமைமிகுந்த ஐம்புலப்பகையை யொழித்து எல்லாவுயிர்களிடத்தும் அருளாகிய புதுமைமிகுந்த குடைநிழலைச்செய்து மெய்யுணர்வாகிய செங்கோலைச்செலுத்தி மங்கலகர மிகுந்த பரஞானமாகிய அழியாத செல்வத்துடன் விளங்கிச் சிவயோகமிருந்து அரசாட்சிசெய்யுமிடம், தண்ணிய செந்தமிழ்ப்பாஷை தோன்றிய பொதிய மலையாம். எ-று.

ஐம்புலன்களாவன :—சுவை-ஒளி-ஊறு-ஓசை-நாற்றம் என்பன. இவை பகைஞரைப்போல விடயவாதனையிற் செலுத்தித் துன்புறுத்தலின் "அவமிகும் புலப்பகை" என்றார்.

செய்வது என்னும் வினைமுற்றுஇடப்பொருண்மேனின்று பெயராயிற்று. பொதியம்-பொதியில் என்பன ஒரு பொருட்பெயர். தேவர்க்கும் மானுடர்க்கும் பொதுவாயுள்ளது என்பது பொருள். (௩௩)

வான யாறுதோய்ந் துயரிய மலயமே முக்கண்
ஞான நாயக னம்மலை போர்த்தகார் நால்வா
யானை யீருரி யம்மழை யசும்பதன் புண்ணீர்
கூனல் வான்சிலை குருதிதோய் கோடுபோன் றன்றே.

(இ-ள்.) ஆகாய கங்கையை யளாவி யுயர்ந்த பொதியமலை (கங்கையணிந்து மேம்பாடுற்ற) சிவபெருமானையும், அப்பொதிய மலையைச்சூழ்ந்த மேகம் தொங்கியசையும் வாயையுடைய (கயாசுரனென்னும்) யானையினின்றும் உரித்துப்போர்த்த தோலையும், அந்த (மேகத்தின்) மழைத்துளிகள் அவ்யானையின் (தோலினின்று துளிக்கும்) உதிரத்தையும், (ஆண்டுத் தோற்றும்) வளைவாகிய பெரிய இந்திரதனுசு உதிரம் பொருந்திய (அந்த யானையின்) கொம்பையும், போன்றிருந்தன. எ-று.

நால்வா யானை யீருரி என்பது.

கயாசுரனென்னும் யானை வடிவேற்ற அசுரனொருவன் மேருமலையின்மேல் பிரமதேவனை நோக்கி அநேககாலம் அருந்தவஞ் செய்தனன். அவன் தவத்திற்கிரங்கிய பிரமன் அவனுக்குக் காட்சிதந்து "என்ன வரம்வேண்டும்" என, "நெடுங்காலஞ் சீவித்திருக்கவும், என்னை யொருவரும் செயிக்கமுடியாமலும் வரம்வேண்டும்" என, பிரமன் அவ்வாறே யனுக்கிரகித்து, "சிவபெருமான் முன் சென்றால் இவ்வரமழியும்" என்று மறைந்தனன். அவன் அதுமுதல் தனக்குற்ற வரத்தினால் தருக்கெய்தி, தேவர் மானுடரைத் துயர்செய்துவந்தான். அவனது துயர்பொறாத முனிவர் சிலர் காசியை யடைந்தமைகண்டு ஆங்கும் அவர்களைத் தொடர்ந்து பின் செல்ல, அவர்கள் ஆண்டுள்ள மணிகன்னிகை யென்னுஞ் சிவாலயத்தி னுட்சென்று அண்ணலைப்பணிந்து "அருட்பெருங் கடலே! அடியேங்கள் அடைக்கலம். யானையுருவாகவரும் இராக்கதனிறைவனால் துயர்ப்படாவண்ணந் திருவருள்புரிக" எனப் பிரார்த்திக்க, சிவபெருமான் "அஞ்சாதீர்கள்" என் றபயங்கூறி உக்கிரப் பெருவடிவுற்றுப் புறம்போந்து கயாசுரனைத் திருவடியாலுதைத்துத்தள்ள, கயாசுரன் நிலமிசை வீழ்ந்தனன். திருவடி மற்றொன்றாற் சிரத்தைமிதித்துத் திருநகங்களாற்பிளந்து அவன்தோலையுரித்து ஆடையாகத் தரித்தனர் என்பது. இதனை,

கந்தபுராணச்சுருக்கம் - தக்ஷகாண்டம்.

"ஈது நின்றிட யானை மேனியொ டீடு கொண்டக யாசுரன்
வேத னல்கு வரத்தி னாலுயர் விண்ணு மண்ணும லைக்கவே
மாத வத்தின ராரு மஞ்சி வளங்கொள் காசியி லோடினார்
பாத கன்னவ ரைத்தொ டர்ந்து படர்ந்து காசிய டைந்தனன்

கண்டு மாதவர் காசி யின்மணி கன்னி யாகிய வாலயத்
தண்டர் நாத னருட்ப தத்தி லடைக்க லம்புக வங்கணா
ஞெண்டி றற்கரி முன்ன மேகி யுரித்து மேனிதரித்தனன்
றுண்ட வாண்மதி போனு தற்பெறு தோகை யும்பய மாகவே"—என வரு

வற்றானறிக.

இதுவேயன்றி.

இக்கயாசுர சம்ஹாரம் அஷ்டவீரத்து ளொன்றாகக்கொண்டு திருப்பழூர் வீரட்டானத்துள் நடந்ததாகக் கூறுவதும் வழக்கம்.—இதனை,

பூமன் சிரங்கண்டி யந்தகன் கோவல் புரமதிகை
மாமன் பறியல் சலந்தரன் விற்குடி மாப்பழூர்
காமன் குறுக்கை யமன்கட வூரிந்தக் காசினியில்
தேமன்னு கொன்றையுந் திங்களுஞ் சூடிதன் சேவகமே"—என்பதனானறிக.

சிவபெருமான் மணிகன்னிகையினின்று தோன்றியபொழுது அசுரன் எதிர்க்க, அவனைத் தமது கைச்சூலத்தாற்குத்தி மேலேந்தின னெனவும், அவன் வேண்டுகோளுக் கிரங்கி அவன் தோலை யாடையாகத் தரித்து, அவன் தசையைக் கிருத்திவாகேசலிங்கமாக வுருக்கொள்ளத் திருவருள் செய்தனனெனக் காசிகண்டத்துட் கூறப்பட்டுள்ளது. இதனை, 45857

காசிகண்டம் - கிருத்திவாகேசன் றோன்றிய அத்தியாயம்.

"வெருவலீ ரமர ரென்று விடைக்கொடி யுயர்த்த வெந்தை
கருவரை நடந்த தென்னக் கயாசுரன் வருத னோக்கி
யெரியுமிழ்ந் தூன்வாய் பில்கி யிலகுமூத் தலைய வேலிற்
குருதியார் கலியிற் பொங்கக் குத்திமே லேந்தினானே"—என்பதனானறிக.

இவ்வாறு பலபேதப்படக் கூறியது கற்பபேதமெனக் கொள்க. (சச)

சுனைய கன்கரைச் சூழல்வாய்ச் சுரும்புசூழ் கிடப்ப
நனைய விழ்ந்தசெங் காந்தண்மே லுகிள வேங்கைச்
சினைய விழ்ந்தவீ கிடப்பபொன் றோய்கலத் தெண்ணீ
ரனைய பொன்சுடு நெருப்பொடு கரியிருந் தனைய.

(இ-ள்.) (பொதியாசலத்திலுள்ள) சுனையும், இடம்பரந்த (அச்சுனையின்) கரையிடத்திலே வண்டுகள் புறத்திற் சூழ்ந்துகிடப்பனவும், அரும்பவிழ்ந்த செங்காந்தண்மலரும், அதன்மேல் மிக்க இளமைதங்கிய வேங்கைமரத்தின் அரும்புவிரிந்த புட்பங்கள் இருத்தலும், (முறையே பழுக்கக் காய்ச்சிய) பொன்னைத் தோய்க்குந் தெளிவாகிய நீரையுடைய பாத்திரமும், கரியும், அப்பொன்னைச்சுடும் நெருப்பும், (அதன்மீது) உயர்ந்த பொன்னும் இருத்தலை ஒத்திருந்தன. எ-று.

சுனை பொன்தோய் தெண்ணீர்க்கலமாகவும், வண்டுகரியாகவும், செங்காந்தண்மலர் நெருப்பாகவும், வேங்கைமலர் பொன்னாகவும் உருவகஞ் செய்தார்.

சூழல் வாய் ; நாகு இள் ;—ஒருபொருட்பன்மொழிகள். (சரு)

குண்டு நீர்ப்படு குவளைவாய்க் கொழுஞ்சினை மரவம்
வண்டு கூப்பிடச் செம்மறூய்ப் புதுமது வார்ப்ப
வண்டர் வாய்ப்பட மறைவழி பொரிசொரிந் தானெய்
மொண்டு வாக்கிமுத் தீவினை முடிப்பவ ரனைய.

(இ-ள்.) (பொதியமலையிலே) ஆழமாகிய சுனைநீரி லுண்டாகிய செங்குவளை மலரிலே, கொழுவிய கிளைகளையுடைய குங்குமமரங்கள் வண்டுகள் இரையப் பழம் பூக்களைச் சிந்திப் புதிய தேனை யொழுக்குவன. தேவர்களது வாயிற்பொருந்த வேத பாராயணத்தின்வழியே நெற்பொரிகளைத் தூவி, பசுவின் நெய்யை (சுருக்கு சுருவங்களால்) மொண்டு வார்த்து (காருகபத்தியம்-ஆகவனீயம்-தக்ஷிணாக்கினி யென்னும் மூவகை) யாககாரியத்தை முடிக்கும் முனிவர்களை யொத்திருந்தன. எ-று.

செம்மல்=பழம்பூ. சுருக்கு-சுருவம் என்பவை நெய்த்துடுப்புகள்.

காருகபத்தியம் வில்வடிவமும், ஆகவனீயம் சதுரவடிவமும், தக்ஷிணாக்கினி முக்கோணவடிவமுமுடையன.

குவளை தீயாகவும், குங்குமமரம் தீவினைமுடிப்பவராகவும், வண்டொலி வேதகோஷமாகவும், பழம்பூ நெற்பொரியாகவும், புதுமது ஆனெய்யாகவுங் கொள்க.

அகிலு மாரமுந் தழன்மடுத் தகழ்ந்தெறிந் தழல்கா
லுகிலு மாரமுந் தொட்டெறிந் தைவனந் தூவிப்
புகரின் மால்கரி மருப்பினுல வேலிகள் போக்கி
யிகலில் வான்பயி ரோம்புவ வெயினர்தஞ் சீறூர்.

(இ-ள்.) (அப்பொதியாசலத்திலுள்ள) குறவர்களது சிறியவூரி லுள்ளவர்கள், அகில்மரங்களையுஞ் சந்தனமரங்களையும் நெருப்பிட்டு அவற்றை வேரோடு கல்லியெறிந்து, நெருப்புப்போலச் செவ்வொளிவீசும் பவளத்தையும் முத்துகளையும் (பருக்கைக்கற்கள்போலத்) தோண்டியெறிந்து (தூர்வைசெய்து நிலந்திருத்தி) மலைநெல்லை விதைத்துக் குற்றமில்லாத பெரிய யானைக்கொம்புகளால் வேலிகள் கோலி (மிருகங்களால்) இடையூறின்றிப் பெரிய பயிரைப் பாதுகாப்பார்கள். எ-று.

அகில் - கள்ளிமரத்திடையே யுண்டாகும் சேகு. சீறூர்=குறிஞ்சிநிலத்தூர். சீறூர்—சிறு+ஊர். முதல்நீளாவிடின் சிற்றூர் என வரும். இது இடவாகுபெயராய் ஆண்டு வசிப்போரை யுணர்த்தியது. (௬எ)

அண்ட வாணருக் கின்னமு தருத்துவோர் வேள்விக்
குண்ட வாரழற கொழும்புகை கோலுமக் குன்றிற்
புண்ட வாதவே லிறவுளர் புனத்தெரி மடுப்ப
வுண்ட காரகிற் றூமமு மொக்கவே மயங்கும்.

(இ-ள்.) தேவர்களுக்கு இனிய அவிசை யுண்பிக்கும் முனிவர்கள் (செய்கின்ற) யாககுண்டத்தில் மிக்க தீயினது கொழுவிய புகை கோலிய அப் பொதியமலையில், (பகைவரது) ஊன் நீங்காத வேற்படையைத் தாங்கியகுறவர்கள் தங்கள் கொல்லைகளில் (உள்ள காடுகள் அழியும்படி) நெருப்பிட, (அக்கினி) உண்ணும் கரிய அகில்மரத்தின் புகையும் (அவ் யாகாக்கினியின் புகையுடன்) கூடக் கலந்து விளங்கும். எ-று.

யாகத்தீயில் நெய்யும், சந்தனமுதலிய நல்ல சமிதைகளுங் கலந்திருத்தலின் நறுமணங் கமழ்வதுபோல, அகிற்கட்டையும் நறுமணமுடைமையின் இவ்விருவகைப்புகையுங் கலந்து பிரித்தறிதற்கின்றி மயங்குமென்றார். (௬அ)

கருவி வான்சொரி மணிகளுங் கழைசொரி மணியு-
மருவி கான்றபன் மணிகளு மகன்றலை நாகத்

திரவி கான்றசெம் மணிகளும் புனங்கவ ரினமான்
குருவி வீழ்ந்திடக் கொடிச்சியர் கோத்தெறி கவண்கல்.

(இ-ள்.) உலகிற்குத் துணைக்காரணமாகிய மேகங்கள் சொரிகின்ற முத்துகளும், (அப் பொதியாசலத்திலுள்ள) மூங்கில்கள் (தமது கணுக்கள் வெடித்துச் சிந்திய) முத்துகளும், அருவியாறுகள் (கரையில்) ஒதுக்கிய பல ரத்தினங்களும், நாக சர்ப்பங்களின் பரந்த தலையினின்று சூரியன்போலும் வெளிவந்த செவந்த இரத்தினங்களும் (ஆகிய இவை) அம் மலைப்புனங்களிலே (விளைந்த கதிர்களைக்) கவர வருகின்ற கூட்டமாகியமான்களும் குருவிகளும் வீழும்படி குறப்பெண்கள் கவணிற்கோத்தெறியுங் கற்களாம். எ-று.

இச் செய்யுளிற் பொதியாசலத்தின் இரத்தினப்பெருக்கைக் கூறினர். (௪௯)

மாய வன்வடி வாயது வையமா லுந்திச்
சேய பங்கய மாயது தென்னனா டலர்மேற்
போய மென்பொருட் டாயது பொதியமப் பொருட்டின்
மேய நான்முக னகத்தியன் முத்தமிழ் வேதம்.

(இ-ள்.) இப் பூலோகம் விண்டுவி னுருவம்போன்றது. பாண்டிநாடு அவ் விண்டுவின் உந்திபூத்த செந்தாமரையி னுருவம்போன்றது. (அப் பாண்டிநாட்டிலுள்ள) பொதியாசலம் அத் தாமரைமலரின்மேற் பரந்த மெல்லிய கொட்டையி னுருவம்போன்றது. (அப் பொதியாசலத்திலுள்ள) அகத்தியமுனிவர் அப் பொருட்டில் வீற்றிருக்கும் பிரமதேவனைப்போன்றனர். (அம் முனிவர் அருளிய இயல் - இசை-நாடக மென்னும்) முத்தமிழ்கள் (பிரமன்பாற் றோன்றிய) வேதங்கள்போன்றிருந்தன. எ-று.

அகங்கொண்ட விந்தமலையை யடக்கிய காரணத்தினால் அகத்திய னெனப் பெயர்கொண்டனர். (௫௦)

ஏக மாகிய மேருவும் பொதியமே யிரும்பொ
னாகு மேருவைச் சூழ்ந்தசாம் பூநத யாறு
நாக ராடுதண் பொருநையே நாவலா றுடுத்த
போக பூமியும் பொருநைசூழ் பூமியே போலும்.

(இ-ள்.) (யாதொருமலையையும் தனக்கு) ஒப்பில்லாததாகிய மகாமேருவும் பொதியமலையினையே நிகர்க்கும். பெரிய பொன்னாகிய மேருமலையைச் சூழ்ந்த சாம்பூநதநதியுந் தேவர்கள் மூழ்குங் குளிர்ச்சிதங்கிய தாமிரபர்ணிநதியையே நிகர்க்கும். சாம்பூநதநதிசூழ்ந்த போகபூமியுந் தாமிரபர்ணி நதிசூழ்ந்த பாண்டிநாட்டையே நிகர்க்கும். எ-று.

நாவற்பழச்சாறாகியநதி - நாவலாறு; சாம்பூநதயாறு.

இந்திரன்முதலிய வெண்டிசைக் கிறைவரும் திரிமூர்த்திகளும் வசிக்குந் தானமாயிருத்தலின் "ஏகமாகிய மேரு" எனவும், திருமால் திசைமுகன் முதலிய தேவர்கள் வணங்கச் சிவபெருமான் எஞ்ஞான்றும் வசித்திருத்தலின் "மேருவும் பொதியமே" எனவும், மேருமலையின் தென்புறத்திருக்கும் நாவல்மரக்கனியின்சாறு ஓர் நதியாய் அம் மேருமலையைச் சூழ்ந்து வடதிசைநோக்கிச் செல்வது சாம்பூநதயாறு. அதன் சலத்தை யுண்பவர் சுவர்ணமயமாய்ப் பதின்மூவாயிரவருடம் வாழ்வர். அதுபோல, அப் பொதியாசலத்திலிருந்துவருந் தாமிரபர்ணிநதியுந் தம்பால் அடைந்து குடைந்தோரைத் தேவர்களாக்குதலின் "சாம்பூநதயாறு நாகராடு தண் பொருநையே" எனவும், மேருமலையைச் சூழ்ந்த நவகண்டங்களுள் பரதகண்டம்

நீங்க ஏனைய எட்டுக்கண்டங்களில் வசிப்போரும் நீடித்த ஆயுளும் ஒருவகை யுண்வு முடையராய் நரை திரை மூப் பிகந்தவரா யிருத்தலின் போகபூமி யெனப்படும். அதுபோலப் பாண்டிநாட்டிலுள்ளார் பெரும்போக முடையராய் வாழ்தலின் "நாவலா றுடுத்த போக பூமியும் பொருநைசூழ் பூமியே போலும்" எனவுங் கூறினர்.

மேருமலையில் இந்திரன்முதலானோருந் திரிமூர்த்திகளும் வசிப்பர் என்பதை,

"இந்திரனை முதலாய வெண்டிசைப்பா லருமவற்றிற்
றந்தமக்குத் தக்கதிசைக் கொடுமுடியிற் றங்கிடுவ
ரந்தவரை யெட்டினுக்கு நடுவாக வணியுறவே
முந்துமுளைத் தெழுசிகர மூன்றுளவே மூவர்க்கும்.
தடவரையி னடுவுச்சி தனின்முளைத்த சிகரத்தின்
வடிவுடைய மனோவதிதான் மலரயன்வாழ் புரியதற்குக்
குடதிசையிற் கொடுமுடியில் வைகுந்தங் கோவிந்தன்
இடம்வடபாற் குணதிசையி லெசோவதிசங் கரர்தடமே."—எனவும்,

மேருமலையினின்று நாவன்மரக்கனியின் சாறு சாம்பூநதநதியாய் வடதிசை நோக்கிச் செல்லு மென்பதை,

"உத்தரத்திற் பாருசுவ வத்திரியோன் றற்றழுந்தும்
வைத்தவரை முறையுறவே மரமொருநான் கமருமவை
யுத்தமத்த கடம்பமுத லுயர்நாவ லொளிர்போதி
மொய்த்துறுபத் திரமொளிரு முதுமரமென் மொழிப்பொருளே."—

எனவும், நான்குமரங்கள் :—கடம்பு - நாவல் - அரசு - ஆலென்பன.

சாம்பூநதநதியின் சலத்தை யுண்போர் சுவர்ணமயமாய்ப் பதின்மூவாயிரவருடம் வாழ்வ ரென்பதை,

"மேருவினை வலமாகி மேவியிடு மந்நீரை
யாருமவர் கனகநிற மாவரயு தாயுளுறச்
சாருமொரு மூன்றுடனுந் தங்கியவா யிரந்தழைக்க
வாருமுயிர் மற்றையவு முண்டதனை யொளியுறுமே."—எனவும்,

பரதகண்டந்தவிர மற்றை எட்டுக்கண்டத்துள்ளோர் நீடித்தவாயுளும் ஒருவகையுணவு முடையராய் நரை திரை மூப்பின்றி யிருத்தலின் அவை போகபூமி என்பதை,

"பொன்னுருவர் கிம்புருடர் புசிப்பிறலிப் புன்கனியே
மன்னுமயு தாயுவுளர் மனக்கவலை தனையில்லார்
கின்னமிலர் நரைதிரையுங் கிளருடலிற் பிணியினையு
மின்னமுறை மற்றையவேழ் கண்டத்து மெண்ணுகவே."—எனவும்,

பரதகண்டத்தில் வசிப்போர் யுகதர்மத்திற்குத் தக்க வுணவும், நரை திரை மூப்புப் பிணிகளும், சுவல்பவயதும் உடையவராயிருத்தலின் அது போகபூமி யன்றென்பதை,

"அறிவுவலி யாயுளுரு வாகார மவையெல்லாஞ்
செறியுமுகத் தினுக்கிசையப் பாரதத்துட் டிகழ்வார்கட்
குறுமுணவு புலத்துழலா லுழுவதுமின் றியுமுண்டு
பெறுபலமுந் தைவிகமா தியமூன்றிற் பிறழாவே."—எனவும் வரும்

சிவதருமோத்தரம் - கோபுரவியற்செய்யுள்களா னறிக. (௩௧)

சிறந்த தண்டமி ழாலவாய் சிவனுல காகும்
புறந்த யங்கிய நகரெலாம் புரந்தரன் பிரமன்
மறந்த யங்கிய நேமியோ னாதிய வானோ
ரறந்த யங்கிய வுலகுரு வானதே யாகும்.

(இ-ள்.) சிறப்பமைந்த தண்ணிய தமிழ்ச்சங்க மிருந்த திருவாலவாய் என்னுந் திருப்பதியே சிவலோகமாம். அவ்வாறாயின் அத்திருவாலவாயின் புறத்திலுள்ள ஏனைய நகரங்களெல்லாம், தேவேந்திரன்-பிரமன்-கொலைத்தொழில் விளங்குஞ் சுதரிசனமென்னுஞ் சக்ராயுதத்தைத் தாங்கிய திருமால் முதலாகிய தேவர்களது தருமம் விளங்கிய (அமராவதி - மனோவதி - வைகுந்தம் முதலிய) பதவிகள் அந்நகரங்களாக உருவு திரிந்தனவாம். எ-று.

கந்தபுராணம்-அண்டகோசப்படலம்.

"மேருவரை யதற்குநடுப் பிரமன் மூதூர் மிக்கமனோ வதியதற்கு மேலைத் திக்கில்
நாரணன்வாழ் வைகுந்தம் வடகீழ்த் திக்கி னுதனமர் சோதிட்கந் திசைகளெட்டுஞ்
சீரியவிந் திரன்முதலா மெண்மர் தேயம்" என்றபடி - சிவபுரத்தைச் சூழ்ந்த நகரங்களெல்லாம் தேவநகரங்களாதலின், அதுபோல திருவாலவாயைச் சூழ்ந்த நகரங்களும் அத்தேவநகரங்களாக வுவமித்துக் கூறினர்.

உபமானமும் உபமேயமுமாகத் திரித்துக் கூறினமையின் இது திரிபணி.()

வளைந்த நுண்ணிடை மடந்தையர் வனமுலை மெழுகிக்
களைந்த குங்குமக் கலவையுங் காசறைச் சாந்து
மளைந்த தெண்டிரைப் பொருநையோ வந்நதி ஞாங்கர்
விளைந்த செந்நெலுங் கன்னலும் வீசுமவ் வாசம்.

(இ-ள்.) (நீராடச்சென்று) வளைந்த நுண்ணிய இடையையுடைய மாதர்களது அழகிய தனங்களிற் பூசிக் களைந்த குங்குமப்பூச்சேர்ந்த கலவைகளையும், கஸ்தூரிகலந்த சந்தனக்குழம்புகளையுங் கலந்துள்ள தெள்ளிய அலைகளையுடைய தாமிரபர்ணிநதி மாத்திரமா, அத்தாமிரபர்ணியின் பக்கலில் விளைந்த செந்நெற்பயிரும் கரும்புகளும் அந்நறுமணங்கமழாநிற்கும். எ-று.

இச்செய்யுளால் நீராடுமகளிர் பெருக்கங்கூறினர். (௫௩)

பொதியி லேவிளை கின்றன சந்தனம் பொதியி
னதியி லேவிளை கின்றன முத்தமந் நதிசூழ்
பதியி லேவிளை கின்றன தருமமப் பதியோர்
மதியி லேவிளை கின்றன மறைமுதல் பத்தி.

(இ-ள்.) சந்தனமரங்கள் பொதியமலையிலே பயிராகின்றன. முத்துகள் அப்பொதியாசலத்தினின்று வருந் தாமிரபர்ணிநதியிலே விளைகின்றன.(முப்பத்திரண்டு) தருமங்கள் அத்தாமிரபர்ணிநதி சூழ்ந்த நகரங்களிலே உண்டாகின்றன. வேதமுதல்வராகிய சிவபெருமானிடத்திற் பத்திகள் அந்நகரவாசிகளது அறிவிலே வளர்கின்றன. எ-று. (௫௪)

கடுக்க வின்பெறு கண்டனுந் தென்றிசை நோக்கி
யடுக்க வந்துவந் தாடுவா னுடலி னிளைப்பு
விடுக்க வாரமென் காறிரு முகத்திடை வீசி
மடுக்க வுந்தமிழ் திருச்செவி மாந்தவு மன்றே.

(இ-ள்.) அழகுபொருந்திய நீலகண்டத்தையுடைய சிவபெருமானும் தென்றிசையை நோக்கி (பாண்டிநாட்டைப் பொருந்த) வந்து திருவுளமகிழ்ந்து (வெள்ளி

யம்பலத்தில்) திருநடனஞ்செய்தல் (எதினிமித்தமென்றால்) அத்திருநடனத்தாலாகும் இளைப்பு நீங்கும்பொருட்டுச் சந்தனச்சோலையிற் படிந்துவரும் மெல்லிய மந்தமாருதம் தமது திருமுகத்தில் வீசிப்பொருந்தவும், (வடமொழி முதலியவற்றினும் இனிதாய) செந்தமிழைத் தமது திருச்செவியாற் பருகவும் அல்லவா. எ-று.

சிவபெருமான் விடபானஞ்செய்தபோது திருக்கைலையிலும், காலவமுனிவர் முதலாயினோர்பொருட்டுத் திருப்பேரூரிலும், காளியைச்செயிக்கச் சண்டதாண்டவஞ் செய்தபோது திருவாலங்காட்டிலும், பதஞ்சலி வியாக்கிரபாதமுனிவர் நிமித்தம் ஸ்ரீ சிதம்பரத்திலும், தடாதகைப்பிராட்டியாரது திருமணக்கோலத்தைத் தரிசிக்கவந்த பதஞ்சலி வியாக்கிரபாத முனிவா திருவமுது செய்தற்பொருட்டு மதுரையில் வெள்ளியம்பலத்திலும் நடித்தனரென்பது புராணசரிதம். (ருரு)

விடையு கைத்தவன் பாணினிக் கிலக்கண மேனாள்
வடமொ ழிக்குரைத் தாங்கியல் மலயமா முனிக்குத்
திடமு றுத்தியம் மொழிக்கெதி ராக்கிய தென்சொன்
மடம கட்கரங் கென்பது வழுதிநா டன்றோ.

(இ-ள்.) இடபத்தை வாகனமாகச் செலுத்தியருளுஞ் சிவபெருமான் பாணினியாருக்கு வடமொழிக்கு வியாகரணசூத்திரத்தை முற்காலத்தில் அருளிச்செய்ததுபோல, பொதியாசலத்தில் வீற்றிருக்கும் பெருமைதங்கிய அகத்தியமுனிவருக்கு இலக்கணசூத்திரத்தை நன்குணர்த்தி அவ் வடமொழிக்கு எதிராகச்செய்த தென்மொழியாகிய இளமைதங்கிய பெண்ணுக்கு நாடகசாலையென்று சொல்வது பாண்டிநாடல்லவோ. எ-று.

வடமொழி தென்மொழிகட்கு இறைவர் சிவபிரானென்பதையும், அவ்விறைவர் வடமொழியைப் பாணினியாருக்கும், தென்மொழியை அகத்தியமுனிவருக்கும் உபதேசித்தனர் என்பதையும், அவ்விரண்டினுள் தென்மொழியே சிறந்ததென்பதையும்,

காஞ்சிப்புராணம் – தழுவக்குழைந்தபடலம்.

"வடமொழியைப் பாணினிக்கு வகுத்தருளி யதற்கிணையாத்
தொடர்புடைய தென்மொழியை யுலகமெலாந் தொழுதேத்துங்
குடமுனிக்கு வலியுறுத்தார் கொல்லேற்றுப் பாகரெனிற்
கடல்வரைப்பி னிதன்பெருமை யாவரே கணித்தறிவார்.

இருமொழிக்குங் கண்ணுதலார் முதற்குரவ ரியல்வாய்ப்ப
விருமொழியும் வழிப்படுத்தார் முனிவேந்த ரிசைபரப்பு
மிருமொழியு மான்றவரே தழீஇனா ரென்றாலிவ்
விருமொழியு நிகரென்னு மிதற்கைய முளதேயோ.

எவ்வினையு மோப்புதலாற் றிராவிடமென் றியல்பாடை
யெவ்வமறப் புதிதாக யான்வகுப்ப நல்கியது
எவ்வருணத் துள்ளார்க்கு மெளிதாகப் புத்தேளிர்
எவ்வெவர்க்குஞ் சுவையமிழ்தி னினிதாகச் செய்தருளாய்" என வருவனவற்றா னறிக. (ருசு)

கண்ணு தற்பெருங் கடவுளுங் கழகமோ டமர்ந்து
பண்ணு றத்தெரிந் தாய்ந்தவிப் பசுந்தமி ழேனை
மண்ணி டைச்சில விலக்கண வரம்பிலா மொழிபோ
லெண்ணி டப்படக் கிடந்ததா வெண்ணவும் படுமோ.

(இ-ள்.) நெற்றிக்கண்ணையுடைய சிவபெருமானும் சங்கப்புலவர்களோடு (தாமுமொருவராக) எழுந்தருளியிருந்து செவ்வையாக வுணர்ந்து ஆராய்ந்த இப் பசிய தமிழ்ப்பாஷையை, (செந்தமிழ் ஒழிந்த) மற்றைப் பதினேழுநிலங்களிலுள்ள இலக்கணவரம்பில்லாத சில மொழிகள்போல (சாமானியமாக அவற்றிலொன்றாய்) எண்ணிக்கையின் அமைந்ததாக மதிக்கவுங் கூடுமோ (கூடாது) எ-று.

தமிழொழிந்த பதினேழுநிலங்கள் - என்பதை,

"சிங்களஞ் சோனகஞ் சாவகஞ் சீனந் துளுக்குடகங்
கொங்கணங் கன்னடங் கொல்லந் தெலுங்கங் கலிங்கம்வங்கங்
கங்க மகதங் கடாரங் கவுடங் கடுங்குசலந்
தங்கும் புகழ்த்தமிழ் சூழ்பதி னேழ்புவி தாமிவையே."—என்பதனுணர்க.

"எண்ணிடைப்பட" வெனப் பாடங் கூறுவாரு முளர். "எண்ணவும்படுமோ" எனப் பின்னர் வருதலால் அது வழுவா மென்க.

மூவகைச் சங்கமிருந்தார் நூல் - காலம் - இடம் முதலியவற்றை,

இறையனாரகப்பொருள். க-வது சூத்திரம்.

"தலைச்சங்கம் இடைச்சங்கம் கடைச்சங்கமென மூன்றுசங்கம்இரீஇயினார் பாண்டியர்கள். அவருள், தலைச்சங்கமிருந்தார் அகத்தியனாருந் திரிபுரமெரித்த விரிசடைக்கடவுளுங் குன்றமெறிந்தமுருகவேளும், மூரிஞ்சியூர்முடிநாகராயரும், நிதியின் கிழவனுமென இத்தொடக்கத்தார் ஐஞ்ஞூற்றுநாற்பத்தொன்பதின்மர் என்பது. அவருள்ளிட்டு நாலாயிரத்துநானூற்று நாற்பத்தொன்பதின்மர் பாடினாரென்பது. அவர்களாற் பாடப்பட்டன வேத்துணையோர் பரிபாடலும் முதுநாரையும் முதுகுருகுங் களரியாவிரையுமென இத்தொடக்கத்தன. அவர் நாலாயிரத்துநானூற்றுநாற்பதிற்றியாண்டு சங்கமிருந்தா ரென்பது. அவர்களைச் சங்கமிரீஇயினார் காய்சினவழுதி முதலாகக் கடுங்கோனீறாக எண்பத்தொன்பதின்ம ரென்ப. அவருட் கவியரங்கேறினார் எழுவர் பாண்டியரென்ப. அவர் சங்கமிருந்து தமிழாராய்ந்தது கடல்கொள்ளப்பட்ட மதுரை யென்ப. அவர்க்கு நூல் அகத்திய மென்ப."

"இனி இடைச்சங்கமிருந்தார் அகத்தியனாருந் தொல்காப்பியனாரும் இருந்தையூர்க் கருங்கோழியும் மோசியும் வெள்ளூர்க் காப்பியனுஞ் சிறுபாண்டரங்கனுந் திரையன்மாறனுந் துவரைக்கோமானுங் கீரந்தையுமென இத் தொடக்கத்தார் ஐம்பத்தொன்பதின்மரென்ப. அவருள்ளிட்டு மூவாயிரத்தெழுநூற்றுவர் பாடினாரென்ப. அவர்களாற்பாடப்பட்டன கலியுங் குருகும் வெண்டாளியும் வியாழமாலையகவலுமென இத்தொடக்கத்தன என்ப. அவர்க்கு நூல் அகத்தியமுந் தொல்காப்பியமும் மாபுராணமும் இசை நுணுக்கமும் பூதபுராணமு மென இவை. அவர் மூவாயிரத்தெழுநூற்றியாண்டு சங்கமிருந்தாரென்ப. அவரைச் சங்கமிரீஇயினார் வெண்டேர்ச்செழியன் முதலாக முடத்திருமாறனீறாக ஐம்பத்தொன்பதின்ம ரென்ப. அவருட் கவியரங்கேறினார் ஐவர் பாண்டியரென்ப. அவர் சங்கமிருந்து தமிழாராய்ந்தது கபாடபுரத் தென்பது. அக்காலத்துப்போலும் பாண்டியநாட்டைக் கடல்கொண்டது."

"இனிக் கடைச்சங்கமிருந்து தமிழாராய்ந்தார் சிறுமேதாவியருஞ் சேந்தம்பூதனாரும் அடைவுடையானாரும் பெருங்குன்றூர்க்கிழாரும் இளந்திருமாறனும் மதுரையாசிரியனல்லந்துவனாரும் மருதனிளநாகனாருங் கணக்காயனார்மகனார் நக்கீரருமென இத்தொடக்கத்தார் நாற்பத்தொன்பதின்ம ரென்ப. அவருள்ளிட்டு நானூற்று நாற்பத்தொன்பதின்மர் பாடினாரென்ப. அவர்களாற் பாடப்பட்டன நெடுந்தொகை நானூறுங் குறுந்தொகைநானூறும் நற்றிணைநானூறும் ஐங்குறுநூறும் பதிற்றுப்

பத்தும் நூற்றைம்பதுகலியும் எழுபதுபரிபாடலுங் கூத்தும் வரியும் பேரிசையுஞ் சிற்றிசையுமென்று இத்தொடக்கத்தன. அவர்க்கு நூல் அகத்தியமுந் தொல்காப்பியமுமென்ப. அவர் சங்கமிருந்து தமிழாராய்ந்தது ஆயிரத்தெண்ணூற் றைம்பதிற்றியாண்டென்ப. அவர்களைச் சங்கமிரீஇயினார் கடல்கொள்ளப்பட்டுப் போந்திருந்த முடத்திருமாறன் முதலாக உக்கிரப்பெருவழுதியீறாக நாற்பத்தொன்பதின்மரென்ப. அவர் சங்கமிருந்து தமிழாராய்ந்தது உத்தரமதுரையென்ப. அவருட் கவியரங் கேறினார் மூவர் பாண்டியரென்ப." என மதுரைக்கணக்காயனார் மகனார் நக்கீரனா ரெழுதிய வுரையானும்,

சிலப்பதிகாரம் வேனிற்காதையில் (க-உ) வரிகட்கு அடியார்க்குநல்லார் எழுதிய உரையானு மறிக.

தமிழ்நாட்டெல்லை,

சிலப்பதிகாரம். "நெடியோன் குன்றமுந் தொடியோன் பௌவமுந்
தமிழ்வரம் பறுத்த தண்புன னாடு"—என்பதனானும்,

சிகண்டியார். "வேங்கடங் குமரி தீம்புனற் பௌவமென்
றிந்நான் கெல்லை தமிழது வழக்கே"—என்பதனானும்,

நன்னூல். "குணகடல் குமரி குடகம் வேங்கடம்
எனுநான் கெல்லையி னிருந்தமிழ்க் கடல்"—என்பதனானு மறிக.

தொண்டர் நாதனைத் தூதிடை விடுத்தது முதலை
யுண்ட பாலனை யழைத்தது மெலும்புபெண் ணுருவாக்
கண்ட தும்மறைக் கதவினைத் திறந்ததுங் கன்னித்
தண்ட மிழ்ச்சொலோ மறுபுலச் சொற்களோ சாற்றீர்.

(இ-ள்.) (நம்பியாரூரரது திருவாயினின்றுந் தோன்றி) அடியவர்கட்கிறைவராகிய சிவபெருமானை (திருவாரூரிலே பரவையார் கொண்ட ஊடல் தணியும்படி) தூதின்மேல் (செல்ல) விடுத்ததும், முதலையுண்ட பார்ப்பனப்பிள்ளையை (கழிந்த பருவத்தோடு) வருவித்ததும், (ஆளுடையபிள்ளையாரது திருவாயினின்றுந் தோன்றி) எலும்பைப் பெண்ணுருவாகச் செய்வித்ததும், (வாகீசப்பெருமானது திருவாயினின்றுந் தோன்றி) வேதங்கள் (திருக்காப்பிட்ட) கதவைத் திறப்பித்ததும், கெடாத தண்ணிய தமிழ்ப்பாசுரமோ அல்லது ஏனைய நாட்டுச் சொற்களா லாகிய பாசுரங்களோ.

தொண்டர்நாதனைத் தூதிடை விடுத்த விபரம் முன் வந்துள்ளது.

முதலையுண்ட பாலனை யழைத்தது—என்பது.

சுந்தரமூர்த்திசுவாமிகள் கொங்கதேசத்திலுள்ள திருப்புக்கொளியூரென்னுஞ் சிவஸ்தலத்திற் பிராமண வீதியாகச் செல்லுகையில், எதிரெதிராகவுள்ள இரண்டு வீடுகளில் ஒன்றில் மங்கலவோசையும் மற்றொன்றில் அழுகுரலுங் கேட்டு அங்குள்ள வேதியரை "இஃதென்" என வினவ, அவர்கள் பணிந்து "இவ் விரண்டு வீடுகளிலுமுள்ள ஐந்தாண்டுடைய பார்ப்பனச்சிறுவர் ஓர் மடுவில் நீராடுகையில் ஒருவனை முதலை விழுங்கியது. பிழைத்துவந்த சிறுவனுக் கிவ்வீட்டில் உபநயனமாகின்றது. இறந்துபோனவன் சுற்றத்தவ ரவ்வீட்டி லழுகின்றனர்" என்று சொல்லக் கேட்ட சுந்தரமூர்த்திநாயனார் திருவுளமிரங்கி "அப்பிள்ளையை முதலை விழுங்கியமடு எங்கே" என, அவர்கள் காண்பித்தனர். அதன்கரைமேலிருந்து ஓர் திருப்பதிகமோத, யமன், முதலைவாயிற்பட்டதுமுத லதுகாறுங் கழிந்த வயதுகளின் வளர்ச்சியு முதிர்ந்திருக்கும்படி அப் பிள்ளையினுடலை முதலைவயிற்றிற் புகுத்த, முதலை கரையி லுமிழ்ந்தது. உடனே அப்பிள்ளைக்கும் உபநயனஞ்செய்வித்தனரென்பது. இதனை,

பெரியபுராணம் - வெள்ளையானைச்சருக்கம்.

" உரைப்பா ருரையென் றெடுத்ததிருப் பாட்டு முடியா முன்னுயர்ந்த
வரைப்பான் மையினீட் டம்புயத்து மறலி மைந்த னுயிர்கொணர்ந்து
திரைப்பாய் புனலின் முதலைவயிற் றுடலிற் சென்ற வாண்டுகளுந்
தரைப்பால் வளர்ந்த தெனநிரம்ப முதலை வாயிற் றருவித்தான்." — என்பதனு
னறிக.

எலும்பு பெண்ணுருவாக் கண்டது—என்பது.

தொண்டைநாட்டிலுள்ள திருமயிலைப்பதியில் சிவநேச ரென்னும் வணிகரொருவர் சிவகடாட்சத்தால் ஓர் புத்திரியைப் பெற்று வளர்த்துவந்தனர். அக்கன்னிகை தமது தோழியருடன் ஒருநாள் மலர்கொய்கையில் அரவந்தீண்டி மருந்து மந்திர முதலியவற்றாலுந் தீராது உயிர்விட, செட்டியார் தமது புதல்வியைத் தகனஞ்செய்து, கன்னிகையுந் தமது செல்வமுந் திருஞானசம்பந்தமூர்த்திசுவாமிகட்கென்று நியமனஞ்செய்திருந்தமையின் இஃது அவரது பொருளே யென்று அச் சாம்பரைப் பண்டுபோற் கன்னிமாடத்திருத்தி உபசரித்துவந்தனர். அவ்வா றிருக்கையில் ஆளுடையபிள்ளையார் திருவொற்றியூரி லெழுந்தருளி யிருத்தலைக் கேள்வியுற்று அவர் திருமயிலைக்கு வருகையில் எதிர்கொண்டு தாமும் உடன்வந்தனர். பிள்ளையார் இவ்விஷயத்தைத் தெரிந்துகொண்டு ஸ்ரீகபாலீஸ்வரரைத் தரிசித்துத் திருச்சந்நிதியின் புறம்பே வந்து அச் சிவநேசரை நோக்கி, " உமது மகளின் எலும்புள்ள குடத்தைக் கொண்டுவருக " என வருவித்துச் சிவபெருமானுக்கு அபிமுகத்திலே வைத்து நமஸ்காரஞ்செய்து " மட்டிட்டபுன்னை " என்னும் பதிகமோதி எழுப்பினர் என்பது. இதனை,

திருஞானசம்பந்தமூர்த்திநாயனார் புராணம்.

" மன்னு வார்சடை யாரைமுன் றொழுதுமட் டிட்ட
வென்னு நற்பதி கத்தினிற் போதியோ வென்னு
மன்ன மெய்த்திரு வாக்கெனு மமுதமவ் வங்கந்
துன்ன வந்தவர் துருவமாய்த் தொக்கதக் குடத்துள்.

எடுத்த பாட்டினில் வடிவுபெற் றிருநான்கு திருப்பாட்
டடுத்த வம்முறைப் பன்னிரண் டாண்டள வணைந்து
தொடுத்த வெஞ்சமண் பாட்டினிற் றோன்றிடக் கண்டு
விடுத்த வேட்கையார் திருக்கடைக் காப்புமேல் விரித்தார்."—என்பதனு
னறிக.

மறைக்கதவினைத் திறந்தது—என்பது.

திருஞானசம்பந்தமூர்த்திசுவாமிகளும் திருநாவுக்கரசுசுவாமிகளுமாகிய பரமாசாரிய ரிருவரும் திருவீழிமிழலையினின்றும் பல திருப்பதிகளைத் தரிசித்துத் திருமறைக்காட்டுக் கெழுந்தருளினர். அப்பொழுது அவர்கள் இருவரும் தமது திருக்கூட்டங்களுடன் சிவபெருமானைச் சேவைசெய்யும்படி திருக்கோயிலை வலம்வந்து திருச்சந்நிதானத்துட் பிரவேசிக்கும்பொழுது அபிமுகத் திருவாயிலாற் செல்லுமா றிருத்தல்கண்டு " அது வேதங்களாற் பூசித்து மூடப்பட்ட திருக்கதவமாதலின் அதனைத் திறக்கவல்லா ரின்றி அவ்வாறே அன்றுமுதல் அடைபட்டிருக்கின்றன " என ஆண்டுள்ளார் செல்லக்கேட்டு, திருஞானசம்பந்தமூர்த்திநாயனார் " அப்பரே! இக்கதவந் திறக்கும்படி ஓர் திருப்பதிக மோதுவீராக " என, திருநாவுக்கரசுநாயனார் "பண்ணினேர்மொழி" என்னும் திருப்பதிகம்பாடித் திறப்பித்தனர் என்பது. இதனை,

திருநாவுக்கரசுநாயனார் புராணம்.

"உண்ணீர் மையினுற் பிள்ளையா ருரைசெய் தருள வதனாலே
பண்ணி னேரு மொழியாளென் றெடுத்துப் பாடப் பயன்றுய்ப்பான்
றெண்ணீ றணிந்தார் திருக்காப்பு நீக்கத் தாழ்க்கத் திருக்கடைக்காப்
பெண்ணீ ரிரக்க மில்லீரோ வென்று பாடி யிறைஞ்சுதலும்.

வேத வனத்தின் மெய்ப்பொருளி னருளால் விளங்கு மணிக்கதவங்
காத லன்பர் முன்புதிருக் காப்பு நீங்கக் கலைமொழிக்கு
நாதர் ஞான முனிவருடன் றொழுது விழுந்தார் ஞானத்துள்
ஓத வொலியின் மிக்கெழுந்த தும்ப ரார்ப்பு மறையொலியும்." — என்பதனா னறிக.

தேவாரம் "அரக்க னைவிர லாலடர்த் திட்டநீர்
இரக்க மொன்றிலி ரெம்பெரு மானிரே
சுரக்கும் புன்னைகள் சூழ்மறைக் காடரோ
சரக்க விக்கத வந்திறப் பிம்மினே." (௫௪)

வெம்மை யால்விளை வஃகினும் வேந்தர்கோல் கோடிச்
செம்மை மாறினும் வறுமைநோய் சிதைப்பினுஞ் சிவன்பாற்
பொய்ம்மை மாறிய பத்தியும் பொலிவுங்குன் றுவாத்
தம்மை மாறியும் புரிவது தருமமந் நாடு.

(இ-ள்.) அப்பாண்டிநாட்டிலுள்ளவர்கள் (மழைபெயல் மாறி) வெப்பத்தினால் விளைவு குறைந்தாலும், (அதனால்) அரசர்களது செங்கோல் மாறுபட்டு நடுவு நிலைமையினின்று தவறினும், வறுமைநோய்வந்து வருத்தினும், சிவபெருமானிடத்தில் வைத்த உண்மையாகிய பத்தியும், (திருநீறு - கண்டிகை - திருவைந்தெழுத்தாகிய) சைவவிளக்கமுங் குறைவுறாதனவாகத் தங்களை (ஒருவர்பால்) விலைக்கு மாறியாவது செய்யுஞ் செய்கைகள் சிவதருமங்களாம். எ-று.

அஃகினும், மாறினும், சிதைப்பினும்—இவற்றிலுள்ள உம்மைகள் எதிர்மறை யும்மைகள். (௫௬)

உலகம் யாவையு மீன்றவ ளும்பரு ளுயர்ந்த
திலக நாயகி பரஞ்சுடர் சேயென மூன்று
தலைவ ரான்முறை செய்தநா டிஃதன்றிச் சலதி
சுலவு பாரினுண் டாருமோ துறக்கத்து மஃதே.

(இ-ள்.) சமஸ்தலோகங்களையும் பெற்றருளியவரும், அபிராமி முதலிய சத்திமார்களுள் மேம்பாடுற்ற திலகம்போன்ற தலைவியுமாகிய உமாதேவியார் - சிவபெருமான் - அவர்கள் புதல்வர் என்று மூன்று தலைவர்களாலுஞ் செங்கோல்செலுத்திய நாடு இப் பாண்டிநாடே யல்லாது கடல்சூழ்ந்த பூலோகத்திலே வேறு (ஒரு) நாளேதோ (இல்லை) சுவர்க்கலோகத்திலேயும் அப்படியே. எ-று.

உமாதேவியார் தடாதகைப்பிராட்டியாராகவும், சிவபெருமான் சோமசுந்தரபாண்டியராகவும், அவர்கள் புதல்வர் உக்கிரகுமாரபாண்டியராகவுந் திருக்கோலங்கொண்டு அரசுசெய்தனரெனக் கொள்க. இவ் விபரம் பின்னர் வருஞ் சரித்திரங்களான் விளங்கும். (௬௦)

திருநாட்டுப்படலம் முற்றிற்று.

ஆ. திருவிருத்தம் - ௯௧.

சிவமயம்.

# திருநகரப்படலம்.

மங்க லம்புனை பாண்டிநா டாகிய மகட்குச்
சங்க லம்புகை தோளிணை தடமுலை யாதி
யங்க மாம்புறந் தழுவிய நகரொலா மனைய
நங்கை மாமுக மாகிய நகர்வளம் பகர்வாம்.

(இ-ள்.) மங்கலத்தை (இடையகலாது) பூண்ட செந்தமிழ் நாடாகிய பெண்ணுக்கு புறத்திலுள்ள (திருவேடகமுதலிய) நகரங்களெல்லாம் வளையல்கள் சத்திக்குங் கைகள் இருதோள்கள் உயர்ந்த இருதனங்கள் முதலாகிய அவயவங்களாம். அத்தன்மையாகிய செந்தமிழ் நாடென்னும் பெண்ணின்பெருமைதங்கிய முகமாக விளங்கும் மதுராபுரியின் சிறப்பைக் கூறுவாம். எ-று.

நகர்வளம் பகர்வாமென்றது நுதலிப்புகுதலென்னுமுத்தி. (க)

கொங்கை யேபரங் குன்றமுங் கொடுங்குன்றுங் கொப்பூ
ழங்க மேதிருச் சுழியலவ் வயிறுகுற் றாலஞ்
செங்கை யேடக மேனியே பூவணந் திரடோள்
பொங்கர் வேய்வனந் திருமுக மதுரையாம் புரமே.

(இ-ள்.) திருப்பரங்குன்றமுந் திருக்கொடுங்குன்றமும் (செந்தமிழ் நாடாகிய பெண்ணிற்குத்) தனங்களேயாம். திருச்சுழியலென்னுந்தலம் உந்தியாகிய அவயவமேயாம். திருக்குற்றாலமென்னுந் தலம் அப்பெண்ணின் வயிறேயாம். திருவேடகமென்னுந்தலம் செவந்த கையேயாம். திருப்பூவணமென்னுந்தலம் திருமேனியேயாம். சோலைகள் புடைசூழ்ந்த திருநெல்வேலி திரண்ட தோள்களேயாம். திருமதுராபுரி கண்டோரால் விரும்பத்தக்க முகமேயாம். எ-று.

கொடுங்குன்ற மென்றது பிரான்மலை. வேய்வனமென்றது திருநெல்வேலி. வேய்=மூங்கில், நெல்.

கொங்கைகளுக்கு மலையை யுவமிக்கப்படுதலின் "கொங்கையே பரங்குன்றமுங் கொடுங்குன்றும்" எனவும், உந்திக்குச் சுழியை யுவமிக்கப்படுதலின் "கொப்பூழங்கமே திருச்சுழியல்" எனவும், வயிற்றுக்கு ஆலிலையை யுவமிக்கப்படுதலின் "அவ்வயிறு குற்றாலம்" எனவும், கைக்குத் தாமரையை யுவமிக்கப்படுதலின் "செங்கையேடகம்" எனவும், மேனிக்குப் பூவை யுவமிக்கப்படுதலின் "மேனியே பூவணம்" எனவும், தோள்கட்கு மூங்கிலை யுவமிக்கப்படுதலின் "திரடோள் பொங்கர் வேய்வனம்" எனவும், முகத்திற்குச் சந்திரனை யுவமிக்கப்படுதலின் "திருமுக மதுரையாம்புரமே" எனவுங் கூறினர். இவ்வுவமானங்களை உவமான சங்கிரகத்தா னறிக.

குலசேகரபாண்டியன் கடம்பவனத்தையழித்து நகர்கண்டு அந்நகரிற்குச் சாந்திசெய்யக் கருதியவழி சிவபெருமான் தமது சடையிலணிந்த சந்திரனிடத்துள்ள அமுதத்தை யுகுப்ப அது அந்நகரைச் சாந்திசெய்து மதுரமயமாக்கிய தன்மையால் மதுரை யெனப் பெயர்பெற்றது. அதனாற் சந்திர சம்பந்தமுடைமை தோன்ற "திருமுக மதுரையாம் புரமே" என்றார். இதனைத் திருநகரங்கண்டபடலம்.—

"பொன்மய மான சடைமதிக் கலையின் புத்தமு தருத்தன ரதுபோய்ச்
சின்மய மான தம்மடி யடைந்தார்ச் சிவமய மாக்கிய செயல்போற்
றன்மய மாக்கி யந்நகர் முழுதுஞ் சாந்திசெய் ததுவது மதுர
நன்மய மான தன்மையான் மதுரா நகரென வுரைத்தனர் நாமம்" எனவருஞ்
செய்யுளா னறிக. (உ)

வடுவின் மாநில மடந்தைமார் பிடைக்கிடந் திமைக்கப்
படுவி லாரமே பாண்டிநா டாரமேற் பக்கத்
திடுவின் மாமணி யதன்புற நகரெலா மிவற்று
ணடுவி ஞயக மாமணி மதுரைமா நகரம்.

(இ-ள்.) பாண்டிநாடானது குற்றமில்லாத பெருமைதங்கிய பூமிதேவியினது மார்பகத்தில் தங்கிவிளங்கும் ஒளியுள்ள பெரும்பதக்கமாம். அந்நாட்டின் புறத்திலுள்ள நகரங்களெல்லாம் அப்பதக்கத்தின் நாற்புறத்திலும் பதித்த ஒளிதங்கிய பெரிய இரத்தினங்களாம். பெரிய மதுராபுரியானது (அச்சுற்றுப்புறத்துள்ள) இரத்தினங்களுள் நடுநாயகமாகிய பெரிய இரத்தினமாம். எ-று

நடுநாயகம் பெரியதும் விலையுயர்ந்ததும் ஒளிமிக்கதுமா யிருப்பதுபோல, மதுராபுரி அந்நாட்டிலுள்ள பல நகரங்களிலும் பெரியதும் புகழ்மிக்கதும் பெரும் பயன் தருவதுமாயிருத்தல் நோக்கி "நடுவி ஞயக மாமணி மதுரைமா நகரம்" என்றார்.

திரும கட்கொரு தாமரைக் கூடமே திருமான்
மரும கட்குவெண் டாமரை மாடமே ஞானந்
தரும கட்கியோ கத்தனிப் பீடமே தரையாம்
பெரும கட்கணி திலகமே யானதிப் பேரூர்.

(இ-ள்.) இந்தப் பெரிய மதுராபுரியானது (தன்னையடைந்தோர்க்குப் பல செல்வங்களையுந் தருவதால்) திருமகளுக்கு (வசித்தற்குரிய) ஒப்பற்ற செந்தாமரைக் கோயிலாக விருக்கின்றது. (கல்விவளப்ப மிகுந்தளிப்பதால்) திருமாலின் மருமகளாகிய கலைமகளுக்கு (வாசஸ்தானமாகிய) வெள்ளைத்தாமரை மாளிகையா யிருக்கின்றது. (சிவஞானச்செல்வம் அருளுவதால்) ஞானசத்திக்கு ஒப்பற்ற யோகபீடமாயிருக்கின்றது. (நிலவுலகிலுள்ள பதிகளுட் சிறந்திருப்பதால்) பெரிய பூமிதேவிக்கு அணியுந் திலகமாக விருக்கின்றது. எ-று.

மதுராபுரியானது செல்வம் கல்வி ஞானம் புகழ்களாற் சிறந்ததென்பது கருத்து. (௪)

திக்கும் வானமும் புதைபிரு டின்றுவெண் சோதி
கக்கு மாளிகை நிவப்புறு காட்சியந் நகருண்
மிக்க வாலிதழ்த் தாமரை வெண்மக ளிருக்கை
யொக்கு மல்லது புகழ்மக ளிருக்கையு மொக்கும்.

(இ-ள்.) அஷ்டதிசைகளையும் ஆகாயத்தையும் மூடிய அந்தகாரத்தையொழித்து வெள்ளிய ஒளியைவீசும் மாளிகைகள் உயர்ந்துள்ள தோற்றமானது, அம்மதுராபுரியிலே சரஸ்வதியின் மிக்க இதழ்களையுடைய வெண்டாமரைக்கோயில்போலும் விளங்கும். அதுவேயன்றிப் புகழாகிய பெண்ணினது வீடுபோலும் விளங்கும். எ-று.

வெண்சோதி யென்றது முத்தினாலும் சுண்ணத்தினாலும் ஆகிய ஒளி. (௫)

## புடைநகர்.

செற்க ரும்பெனக் கரும்பெலா நெடுங்கமு கென்ன
வற்க வான்கமு கொலிகலித் தெங்கென வளர்ந்த

பொற்க வின்குலைத் தெங்குகார்ப் பந்தரைப் பொறுத்து
நிற்க நாட்டிய காலென நிவந்ததண் பணையே.

(இ-ள்.) தண்ணிய மருதநிலத்தில், நெற்பயிர்களைக் கரும்பென்றும், கரும்புகளையெல்லாம் நெடிய கமுகமரங்களென்றும், வரிசையாயுள்ள பெரிய கமுகமரங்களை (ஓலைகளின் அசைவால்) ஒலிக்கும் ஒலியையுடைய தென்னமரங்களென்றும், வளர்ந்த பொன்னிறம்போலும் அழகுவாய்ந்த குலையையுடைய தென்னமரங்கள் மேகமாகிய பந்தலைத் தாங்கிநிற்கும்படி நாட்டியகால்களென்றும் (கண்டோர்) சொல்லும்படி உயர்ந்துள்ளன. எ-று.

இச்செய்யுள் மயக்கவணி. (சு)

செவந்த வாய்க்கருங் கயற்கணாள் வலாரியைச் சீறிக்
கவர்ந்த வான்றருக் குலங்களே கடிமணம் வீசி
யுவந்து வேறுபல் பலங்களும் வேண்டினர்க் குதவி
நிவந்த காட்சியே போன்றது நிழன்மலர்ச் சோலை.

(இ-ள்.) நிழலைத்தரும் மலர்களையுடைய (மரங்கள்பொருந்திய) சோலையானது, செவ்விய வாயையும், கரிய கயல்மீன்போலுங் கண்களையுமுடைய தடாதகைப் பிராட்டியார் இந்திரனைக் கோபித்து (அவனிடத்திருந்து திறையாகக்) கைக்கொண்ட பஞ்சதருக்களின் கூட்டங்களே நன்மணம் வீசி வெவ்வேறு வகைப்பட்ட பல பலன்களையும் விரும்பிவந்து தம்மை யடைந்தவர்கட்குக் கொடுத்து உயர்ந்த தோற்றத்தையே யொத்திருந்தது. எ-று.

பஞ்சதருக்கள்— அரிசந்தனம் - கற்பகம் - சந்தானம் - பாரிசாதம் - மந்தாரம் என்பன.

வலாரி=வலாசுரனைக் கொன்றவன் ; இந்திரன்.

தடாதகைப்பிராட்டியார் திக்குவிஜயஞ் செய்தபொழுது இந்திரனைச்செயித்து அவனது பல வளங்களோடு பஞ்சதருக்களைக் கவர்ந்த விஷயம் திருமணப்படலத்தில் வரும்போதுணர்க. வலாரியென இந்திரனுக்குக் காரணப்பெயர் வந்தமை மாணிக்கம்விற்ற படலத்தில் விளங்கும். (எ)

ஒல்லொ லிக்கதிர்ச் சாலிகள் புறந்தழீஇ யோங்க
மெல்லி லைப்பசுங் கொடியினால் வீக்குறு பூக
மல்லெ னுங்களத் தண்ணற னணிவிழாத் தருப்பைப்
புல்லொ டும்பிணிப் புண்டபொற் கொடிமரம் போலும்.

(இ-ள்.) ஒல்லென்னும் ஒலிக்குறிப்பையுடைய கதிரீன்ற நெற்பயிர்கள் புறத்திற்றழுவி உயர்ந்து தோன்ற மெல்லிய இலைகளையுடைய பசிய கொடிகளினால் (அவற்றோடு) கட்டுண்டிருக்குங் கமுகமரமானது, கருநிறத்தால் இருளென்றுசொல்லப்படுங் கண்டத்தையுடைய சிவபெருமானது அழகிய மஹோற்சவத்தில், (புறத்தில்) தருப்பைப்புல்லோடுங்கட்டுண்ட பொன்னாலாகிய துஜஸ்தம்பத்தை யொத்திருக்கும்.

சாலி தருப்பையாகவும், கொடி கயிறாகவும், பூகம் துஜஸ்தம்பமாகவும் உவமித்தார். (அ)

சீத வேரியுண் டளிமுரல் கமலமேற் செருந்தி
போத வேரியு மலர்களுஞ் சொரிவன புத்தேள்
வேத வேதியர் செங்கரம் விரித்துவாய் மனுக்க
ளோத வேமமு முத்தமு முதவுவா ரனைய.

(இ-ள்.) செருந்திச்செடிகள் தண்ணிய தேனைக்குடித்து வண்டுகள் பண்பாடுந் தாமரை மலரின்மேற் பொருந்த மதுவையும் மலர்களையுஞ் சொரியாநின்றன. (அத்தோற்றம்) தெய்வீகம்பொருந்திய வேதமுணர்ந்த அந்தணர்கள் செவ்விய கைகளை விரித்துவாயினால் (வேத) மந்திரங்கள் ஜபிக்க (அவர்கள் கைகளில்) பொன்னையும் (அதனைத் தத்தஞ்செய்ய) நீரையுங் கொடுப்போரைப் போன்றிருந்தன. எ-று.

இச்செய்யுளிற் செருந்திச்செடியைக் கொடுப்போராகவும், தாமரைமலரைக் கைகளாகவும், செருந்திசொரியும் மதுவையும் மலரையும் முறையே தத்தஞ் செய்யும் நீராகவும் பொன்னாகவும், வண்டொலியை வேதமந்திரமாகவும் உவமைப்படுத்தினர். (கூ)

விரைசெய் பங்கயச் சேக்கைமேற் பெடையொடு மேவி
யரச வன்னநன் மணஞ்செய வம்புயப் பொய்கை
திரைவ ளைக்கையா னுண்டுளி செறிந்தபா சடையா
மரக தக்கலத் தரளநீ ராஞ்சனம் வளைப்ப

(இ-ள்.) வாசனை வீசுந் தாமரை மலராகிய படுக்கையின்பேரில் அரசவன்னமானது தனது பெட்டையன்னத்துடன் கூடி நல்ல மணத்தொழில்செய்ய (அதைப் பார்த்த) தாமரைத் தடாகங்களாகிய மாதர்கள் அலைகளாகிய வளையலணிந்த கைகளால், நுண்ணிய நீர்த்துளிகளாகிய முத்துகள் நெருங்கிய பசுமைதங்கிய இலையாகிய மரகதத்தட்டினால் நீராஞ்சனம் வளைக்கா நின்றன. எ-று. (௧௦)

இரும்பி னன்னதோள் வினைஞரார்த் தெறிந்துவாய் மடுக்குங்
கரும்பு தின்றிடி யேற்றொலி காட்டியின் சாறு
சுரும்பு சூழ்கிடந் தரற்றிடச் சொரிந்துவெஞ் சினத்தீ
யரும்பு கட்களி றொத்தன வாலையெந் திரங்கள்.

(இ-ள்.) கரும்பாலைகள், இரும்பினையொத்த (திண்ணிய) தோளையுடைய மள்ளர்கள் முழங்கித் தறித்துத் தம்மிடத்திற் கொடுக்குங் கருப்பங்கழிகளைத் தின்று இடியேறுபோன்று ஒலித்து இனிய சாற்றை வண்டுகள் சூழ்ந்து கிடந்து ஒலிக்கப் பொழிந்து, வெவ்விய கோபாக்கினியானது தோன்றுங் கண்களையுடைய யானைகளை ஒத்திருந்தன. எ-று.

வினைஞர்=யானைப்பாகர்; ஏவலாட்கள். வாய்-யானையின் வாய்; ஆலையின் வாய். தின்னுதல்-தின்னுதல்; நெரித்தல். ஒலிகாட்டி-கர்ச்சித்து; இரைச்சலிட்டு. சொரிதல்-கடைவாய்வழியொழுக்கல்; புறத்தில் வெளிப்படுத்தல். எனச் சிலேடைப் பொருள்கொள்க.

கரும்பை யானைவாயிற் கொடுத்தலும் ஆலைவாயிற் கொடுத்தலும், யானை அதனை யுண்ணும்போதும் ஆலையதனைநெரிக்கும்போதும் இரைதலும், இவ்விருபொருளும் அச்சாற்றைப்புறத்திற் பொழிதலும் உடைமைநோக்கி "களிறொத்தனவாலையெந்திரங்கள்" என்றார். (௧௧)

பள்ள நீர்குடைந் தஞ்சிறைப் பாசிபோர்த் தெழுந்த
வெள்ளை யன்னத்தைக் காரன மெனப்பெடை வீழ்ந்த
வுள்ள மீட்டல மரச்சிற குதறியுள் ளன்பு
கொள்ள வாசையிற் றழீஇக்கொடு குடம்பைசென் றணையும்.

(இ-ள்.) பள்ளமாகிய நீரில் மூழ்கி அழகிய சிறகுகள் பாசியாற் போர்க்கப்பட்டு மேலெழுந்த வெள்ளிய சேவலன்னத்தைக் தரிய வேறோர் அன்னமென்று நினைத்து, பெட்டையன்னமானது அதனிடத்து விருப்புற்ற மனதைத் திருப்பி,

(தனது சேவலேக்காணுது) வருந்த, (அதனைத் தெரிந்த சேவலன்னம்) சிறகுகளையுதறி (தனதியற்கை வடிவோடு) மனதில் அன்புமீதூர, ஆசைகொண்டு அதனைத் தழுவிக் கொண்டு கூட்டிற் போய்ச்சேரும். எ-று.

தனது பெட்டையின் கற்புநிலைமை சோதிக்கக்கருதி உருவுதிரிந்து "அஞ் சிறைப் பாசிபோர்த் தெழுந்த வெள்ளையன்னம்" எனவும், அதனுல் அதன் கற்புநிலைமை புலப்பட்டபின் பிரியாதிருக்கவேண்டுதலின் உள்ளன்புகொள்ள "தழீஇக்கொடு குடம்பை சென்றணையும்" எனவுங் கூறினர்.

குடம்பை = பறவைக்கூடு. (கஉ)

இரவி யாழியொன் றுடையதே ரீர்த்தெழு மிமையாப்
புரவி நாநிமிர்த் தயில்வன பொங்கர்வாய்த் தளிர்கள்
கரவி லார்மகத் தெழுபுகை கற்பக நாட்டிற்
பரவி வாட்டுவ பனியெனப் பங்கயப் பொய்கை.

(இ-ள்.) சூரியனது ஒற்றைச் சக்கரமுடைய தேரை இழுத்துச் செல்லும் (கண்கள்) இமையாத எழுபுரவி நாவை நீட்டிச் சோலையினிடத்துள்ள தளிர்களைக் கறிப்பன. வஞ்சகமில்லாத அந்தணர் செய்யும் யாகாக்கினியி லிருந் தெழுகின்ற புகையானது தேவருலகிற் பனியாகச்சென்று தாமரைத் தடாகத்தை வாட்டுவன.

இமையா வென்ற விசேடணம் கண்களைக் குறித்தது.

ஆண்டுள்ள சோலைகள் சூரியமண்டலத்தை யளாவி யுள்ளன; ஆண்டுவசிப்போர் யாகச்செயல்மிகுதியுஞ் செய்வர். என்பது கருத்து. (கங)

பிறங்கு மாலவா யகத்துளெம் பிரானரு ளால்வந்
தறங்கொ ளூர்த்தமா யெழுகட லமர்ந்தவா நோக்கிக்
கறங்கு தெண்டிரைப் பெரும்புறக் கடலும்வந் திவ்வூர்ப்
புறங்கி டந்ததே போன்றது புரிசைசூழ் கிடங்கு.

(இ-ள்.) மதிலைச்சூழ்ந்த அகழியானது விளங்காநின்ற மதுராபுரியிலே எமது சோமசுந்தரக்கடவுளது கிருபையினலே சத்த சமுத்திரங்களும் வந்து புண்ணியஸ்வரூபமாகிய தீர்த்தங்களாய் இருந்த தன்மையைப்பார்த்து, ஒலிக்கின்ற தெள்ளிய அலைகளையுடைய பெரும்புறக்கடலும்வந்து இந்நகர்ப்புறத்தே அமர்ந்திருத்தலை யொத்தது

சத்த சமுத்திரமுந் தீர்த்தமாயமர்ந்ததைக் கண்ட பெரும்புறக்கடல் தானும் ஒரு தீர்த்தமாகலாமென்று அகழி வடிவாயிற்று என்றார்.

உவர்ப்புக்கடல் - பாற்கடல் - தயிர்க்கடல் - நெய்க்கடல் - கருப்பஞ்சாற்றுக் கடல்-தேன்கடல்-சுத்தநீர்க்கடல் என்பவையே எழுகடல். அகற்கப்புறம் சக்கரவாளகிரியுள்ளது. அதனைச் சூழ்ந்து பெரும்புறக்கடல் விளங்கும் இதனை,

கந்தபுராணம் - அண்டகோசப்படலம்.

"பரவுமிவ் வுலகி லுப்பு பால் தயிர் நெய்யே கன்னல்
இரதமா மதுநீ ராகு மெழுகட லேழு தீவும்
வரன் முறை விரவிச் சூழ மற்றதற் கப்பால் சொன்னத்
தரையது சூழ்ந்து நிற்குஞ் சக்கர வாள சையம்."

"அன்னதற் கப்பால் வேலைக் கரசனும் புறத்தி லாழி" என வருவனவற்றானும், சிவதருமோத்தரம்-கோபுரவியலானுமுணர்க.

அறங்கொளூர்த்தமா யெழுகட லமர்ந்தது—என்பது.

தடாதகைப் பிராட்டியாரைத் தமது தாயாகிய காஞ்சனமாலை கடலாடி வருதற்குத் தன் மருகராக வீற்றிருக்கும் சோமசுந்தர பாண்டியர் பால் விடைகேட் டளிக்கும்படி விரும்ப, பிராட்டியார் பெருமானுக் கறிவிப்ப, இறைவர் ஒரு கடலோ எழுகடல்களையும் ஈண்டு வரவழைப்போமென்று ஓர் தீர்த்த ரூபமாய் வரவழைத்தன ரென்பது. இதன் விபரம் எழுகடலழைத்த படலத்துட் காண்க. (௧௪)

எறியும் வாளையு மடிக்கடி யெழுந்துடல் பரப்பிப்
பறியு மாமையும் வாளொடு கேடகம் பற்றிச்
செறியு நாண்மல ரகழியுஞ் சேண்டொடு புரிசைப்
பொறியு மேயொன்றி யுடன்றுபோர் புரிவன போலும்.

(இ-ள்.) (அடிக்கடி மேலெழுந்து) அடிக்கும் வாளை மீன்களும், மேலெழுந்து (தலைமுதலிய) அவயவங்களைப்பரப்பி உள்ளே பதுங்கும் ஆமையும் பொருந்தியிருக்கும் அன்றலர்ந்த மலர்களையுடைய அகழியும், ஆகாயத்தை யளாவும் மதிலிலுள்ள எந்திரங்களும், வாளையுங் கேடகத்தையு மேந்தித் தம்முள் நெருங்கிக் கோபித்துப் போர்புரிதலை நிகர்க்கும். எ-று.

வாளை மீன்கள் வாளாகவும் ஆமைகள் கேடகமாகவும் உவமித்து, வாளை யெறிதல் வாளசைத்தலாகவும் ஆமை எழுந்து உடல்பரப்பிப் பறிதல் கேடகத்துள் உடல்மறைத்துப் பதுங்குதலாகவுங் கூறினர்.

ஒடு எண்ணுப் பொருளதாகிய இடைச்சொல். (௧௫)

கண்ணி லாதவெங் கூற்றெனக் கராங்கிடந் தலைப்ப
மண்ணி னோரெவ ரேனுமிம் மடுவிடை வீழ்ந்தோர்
தெண்ணி லாமதி மிலைந்தவர்க் கொப்பெனச் சிலரை
யெண்ணி னாரிரு ணரகநீத் தேறினு மேறார்.

(இ-ள்.) தாக்ஷணியமில்லாத கொடிய இயமனைப்போல வருத்தும்படி முதலைகள் வசித்தலால், நிலவுலகத்திலுள்ளவர்கள் யாவராகிலும் இவ் வகழியில் வீழ்ந்தவர்கள், தெள்ளிய நிலவை வீசுஞ் சந்திரனைச் சடையிற் றரித்த சிவபெருமானுக்கு ஒப்பாக, (திருமால் - பிரமன் முதலிய) சில தேவரை மதித்தவர், இருண்ட நரகத்திலிருந்து கரையேறினாலும், தாம் கரையேறாது வருந்துவர். எ-று.

மதிமிலைந்தவர்க் கொப்பெனச் சிலரை யெண்ணினா ரிருணர கெய்துவர்—என்பதை,

சூதசங்கிதை – வேதார்த்தமுரைத்த அத்தியாயம்.

"அம்பு யத்தின்மே லிருப்பவன் முதலிய வமரர்
நம்பு றுஞ்சரு வாதிக னெனவுள நாட்டும்
வெம்பு வல்வினை யாளர்கள் விரிதலை கீழாய்ப்
பம்பு தீநர கழுந்தியெக் காலமும் பதைப்பார்.

அரிய நான்முக னாகிய முக்கணம் மானைக்
கரிய மான்முத லோர்களாப் பாவித்தல் கடனன்
றுரிய நற்றவத் துறவிரா தலினுமா பதியே
பெரிய னன்னவன் றியானமே கொள்வர்பே ரறிஞர்."—என வருவன வற்றா னறிக. (௧௬)

குமிழ லர்ந்தசெந் தாமரைக் கொடிமுகிழ் கோங்கி
னுமிழ்த ரும்பர ஞானமுண் டுமிழ்ந்தவாய் வேதத்
தமிழ திந்துவை திகமுடன் சைவமு நிறுத்து
மமிழ்த வெண்டிரை வைகையு மொருபுறத் தகழாம்.

(இ-ள்.) (நாசியாகிய) குமிழம்பூமலர்ந்த (திருமேனியாகிய) செந்தாமரைக் கொடியிலே அரும்பிய (தனமாகிய) கோங்கரும்பினின்று உமாதேவியார் பொழிந்த (பாலாகிய) பரஞானத்தை(திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்) பருகி, (அப்பரஞானம் உலகத்தாருக்கு விளங்கும்படி) திருவாயினால் ஓதியருளிய (அபரஞானமாகிய) தமிழ் வேதச்சுவையை உணர்ந்து வேதமார்க்கத்தையுஞ் சைவமார்க்கத்தையும் நிலைநிறுத் திய தேவாமிர்தம்போன்ற வெள்ளிய அலைகளையுடைய வைகைநதியும் (அம் மதிலு க்கு) ஒருபக்கத்திலுள்ள அகழியாகும் எ-று.

குமிழ் செந்தாமரைக்கொடி கோங்கு முதலிய உவமான வார்த்தைகட்கு ஏற்ப, நாசி திருமேனி திருத்தன முதலிய உவமேயவார்த்தைகள் வருவிக்கப்பட்டன.

உமாதேவியாரது திருத்தனஞ் சொரிந்த திருவமுது பரஞானமாதலால் "கோங்கினுமிழ்தரும் பரஞானம் வாயுண்டு" எனவும், அப்பரஞானமே வேதத்தின் பயனாகிய திருப்பதிகமாதலின் "உமிழ்ந்த வேதத் தமிழ்" எனவும், திருப்பதிகம் எழுதிய ஏடு எதிர்செல்லச் செய்தமையால் "அறிந்து" எனவும், அதனாற் சமணசம யங் கெட்டோட, யாகாதி அறவடிவமாகிய வைதிகமும், அறங்களின் முதிர்ச்சியா னெய்துஞ் சைவமும் நிறுத்தியதனால் "வைதிகமுடன் சைவமு நிறுத்தும்" எனவும், இவ் விசேடத்தை யுணர்தலாலும் தன்னகத்துக் குடைதலாலும் ஆன்மாக்களைக் கதி யடையச்செய்தலாலும் "அமிழ்தவெண்டிரை வைகை" எனவுங் கூறினர்.

திருஞானசம்பந்தப்பிள்ளையார் சமணருடன் வைகைக்கரையில்
புனல்வாதஞ்செய்தபோது திருவாய்மலர்ந்தருளிய
திருப்பாசுரப்பதிகம்

"வாழ்க வந்தணர் வானவ ரானினம்
வீழ்க தண்புனல் வேந்தனு மோங்குக
ஆழ்க தீயதெல் லாமர னாமமே
சூழ்க வையக முந்துயர் தீர்கவே." — என்பதை முதலாகவுடைய திருப்பதிகம். (கஎ)

பிள்ளை யும்பெடை யன்னமுஞ் சேவலும் பிரியாக்
கள்ள முண்டகச் செவ்வியாற் கண்டவர் கண்ணு
முள்ள முந்திரும் பாவகை சிறைப்படுத் தோங்கும்
புள்ள லம்புதண் கிடங்கிது புரிசையைப் புகல்வாம்.

(இ-ள்.) அன்னப் பார்ப்புகளும் பேடன்னங்களும் சேவலன்னங்களும் (எக் காலத்தும் நீக்காத தேனையுடைய தாமரைகள் மலர்ந்துள்ள அழகினால், பார்த்தோ ரது கண்களும் உள்ளமுந் திரும்பாதவகையாக வசப்படுத்தி, மேம்பட்ட (நீர்ப்) பற வைகள் ஒலிக்கின்ற தட்பமாகிய அகழி இத்தன்மையது. (இனி) மதிலின் புகழ்ச்சி யைக் கூறுவாம். எ-று. (கஅ)

மாக முந்திய கடிமதின் மதுரைநா யகர்கைந்
நாக மென்பதே தேற்றமந் நகர்மதில் விழுங்கி
மேக நின்றசை கின்றதவ் வெஞ்சினப் பணித
னாக மொன்றுதோ லுரிபட நெளிவதே யாகும்.

(இ-ள்.) ஆகாயமளாவிய காவலாயுள்ள மதிலானது மதுராபுரீசரது திருக் கரத்தி லணிந்த சர்ப்பகங்கணமென்று சொல்லுவதே நிச்சயம். அந்நகரத்தைச் சூழ்ந் துள்ள மதிலை மறைத்து மேகங்கள் நின்று அசைகின்ற தோற்றமானது, அவ் வெவ் விய கோபத்தையுடைய சர்ப்பம் தன துடலிற்பொருந்திய தோல் உரியும்படி உடல் நெளிதலையே யொக்கும். எ-று.

நகரிற்குரிய நால்வகைக் காவலுள், மதிலும் ஒன்றாக நிற்றலின், கடிமதில் என்றார். நால்வகைக்காவல்களாவன :—மலை-காடு - நீர் - மதில்களாம்.

சிவபெருமான் வங்கியசேகரபாண்டியனுக்கு வெளிதோன்றித் தமது திருக் கரத்தணிந்த சர்ப்பகங்கணத்தால் மதுரைநகரத்தின் எல்லையை யளந்து காண்பித்தன ரென்பது சரிதம். இதனைத் திருவாலவாயானபடலத்துட் காண்க.

மதிலைச் சர்ப்பமாகவும், சர்ப்பந் தோலுரிதற்பொருட்டு உடல் நெளிதல் இயற்கையால், அம்மதிலின்மேல் மேகம் அசைவது அதன் நெளிவாகவுந் தேற்றே காரங்கொடுத் தோதினர். (கக)

புரங்க டந்தபொற் குன்றுகோ புரமெனச் சுருதிச்
சிரங்க டந்தவர் தென்னரா யிருந்தனர் திருந்தா
ருரங்க டந்திட வேண்டினு முதவிசெய் தவரால்
வரங்க டந்திடப் பெறவெதிர் நிற்பது மானும்.

(இ-ள்.) வேதங்களின் உச்சியையுங் கடந்த சிவபெருமான் (இம் மதுராபுரியில்) சோமசுந்தரபாண்டியராக வீற்றிருக்கின்றனர். (ஆனபடியால்) பகைஞரது வலிமையையொழிக்க விரும்பினாலும் (வில்லாகவிருந்து) உதவிசெய்து வரங்களையரு ளும்படிபெற, திரிபுரத்தை யெரித்த (காலத்தில் வில்லாக நின்ற) மேருமலையானது திருக்கோபுரமென்று சொல்ல (உருவுதிரிந்து) எதிர்நிற்பதை யொத்திருக்கும். எ-று.

புரங்கடந்தவர் என்றது.

தாரகாக்கன் - கமலாக்கன்-வித்துன்மாலி யென்னும் அசுரர் மூவரும் விச் சுவகன்மன் நிருமித்துக் கொடுத்த பொன் - வெள்ளி - இரும்புகளாலாகிய மதில்களி லிருந்து சிவபக்தி யொழியாதவராய் அரசுசெய்துவருகையில், இந்திரன் முதலிய இமையவர் அவர்கட்குத் தோற்று அவர் செய்யுந் துன்பத்தைச் சகியாது திருமால் பால் முறையிட, அவர் ஒருயாகஞ்செய்து அதிற்றோன்றிய பூதங்களை அவர்களை யழிக் கும்படி கட்டளையிட்டனுப்ப, அவை அவருடன் போர்செய் தொழிந்தன. அவர்கள் அசுரராயிருப்பினும் சிவபக்தியுடையராயிருத்தலின் அவரைச்செயித்தல் அருமையெ ன்று கருதி, திருமால் தனது அமிசமாகப் புத்தனைத் தோற்றுவித்து அவன்பால் ஓர் நூலைக்கொடுத்து "இதனால் திரிபுரத்தவர் மதியை மயக்குக" என்று நாரதமுனிவ ரையுந் துணைகூட்டியனுப்பி அவர்களால் திரிபுரத்தவரது சிவநேசத்தை யழிப்பித்து, தேவர்கள் தன்னைப் புடைசூழ்ந்துவரத் திருக்கைலையை யடைந்து சிவபெருமான் பால் விண்ணப்பிக்க, இறைவர் "போர்க்குரிய கருவிகளை ஆயத்தஞ்செய்க" எனக் கட்டளையிட, திருமால் தேவர்களுடன் யோசித்து, பூமியே தேராகவும், சூரியசந்திரர் களே இரு சக்கரமாகவும், இருக்கு-யசுர்-சாமம்-அதர்வணமென்னும் நான்கு வேதங் களே நான்கு குதிரைகளாகவும், பிரமனே இரதசாரதியாகவும், பிரணவமே குதிரை தூண்டுங் கோலாகவும், மேருமலையே வில்லாகவும், வாசுகியே நாணாகவும், திருமாலே பாணமாகவும், வாயுவே அம்பிற்கட்டிய சிறகாகவும், அக்கினியே அம்பின் கூர்வாயாக வும், மற்ற தேவர்கள் பல வேறு கருவிகளாகவுஞ் செய்தனர். என்பது. இதனை,

"மேருவி லாயதி ஞரை வாயொரு வெங்கணை மாலரியாய்
விரிதலை யுலகந் தேரா யதிலுறு மிருசக டிருசுடராய்,
ஆரண நாலும் பரியா யம்புய னமைவுறு சாரதியாய்
அதினீ யுற்றிக லழியா முப்புர மட்டிடு மந்நாளில்
சிறுறு மூவர்க ளழியா துன்னடி சேரா நின்றனரால்" — என்னுஞ் சிதம்பரசுவாமிகள் திருவாக்கானுணர்க.

இறைவர் இவ்வகையுணர்ந்து களிகொண்டு அவர்கள் வேண்டுகோளின்படி மேருமலையை வில்லாக வணக்கி அத்தேறிலேறிச் செலுத்துகையில், ஒவ்வொருவரும் தத்தம் உபயோகத்தைக் குறித்துத் திரிபுரவிஜயம் தம்மாலேயே நிகழ்வெய்துகிற தென நினைக்க, இறைவர் அவர்கள் இறுமாப்பு ஒழியும்வண்ணம் அதன் அச்சுமுறியச் செய்து திரிபுரத்தைச் சிரித்தெரித்தனர். சிவபக்தர்களாயிருந்த மூவரும் இறவாமற் கதியடைந்தனர் என்பதாம். (உ0)

சண்ட பானுவுந் திங்களுந் தடைபடத் திசையு
மண்ட கோளமும் பரந்துநீண் டகன்றகோ புரங்கள்
விண்ட வாயிலால் வழங்குவ விடவரா வங்காந்
துண்ட போல்பவு முமிழ்வன போல்பவு முழலா.

(இ-ள்.) வேகமாகச் செல்லுஞ் சூரியனுஞ் சந்திரனும் (போக்குவரவு செய்தல்) தடைபடும்படி கோபுரங்கள் அட்டதிக்கெங்கும் பரந்து அண்டகோளத்தின் மேலும் உயர்ந்து பரந்திருத்தலால், விஷத்தையுடைய இராகு கேதுவென்னும் பாம்புகள் வாய்திறந்துண்டாற்போலவும், உமிழ்ந்தாற் போலவுஞ் சுழன்று, (அக்கோபுரங்களின்) புழையாயுள்ள வாயில்களாற் போக்குவரவு புரிகின்றன. எ-று.

சூரியசந்திரரைப் பாம்பு விழுங்கல்—என்றது.

பூர்வம் திருப்பாற்கடல் கடைந்தபோது அதினின்று தோன்றிய சுரையைப் பானஞ்செய்தவர் சுரர் எனவும் அதனை விலக்கினவர் அசுரரெனவும் பெயரெய்தினர் மேலுங் கடைகையிற் காமதேனு கற்பகவிருக்ஷம் அரம்பையர் உச்சைச்சிரவம் தன்வந்திரி கவுத்துவமணி சிந்தாமணி முதலாகப் பொருள் பல தோன்றிக் கடைசியில் திருமகளும் அமுதமும் பிறக்க, திருமால் அதிலுண்டான பொருள்களை, தான் விரும்பியவண்ணம் பல தேவர்கட்குக் கொடுத்துக் கவுத்துவமணியையுந் திருமகளையுந் தாமேற்றுக்கொண்டனர். கடைசியிற் பிறந்த அமிர்தத்திற்காகச் சுரரும் அசுரரும் தமக்குத்தமக்கென ஒருவரோடொருவர் எதிர்த்துப் பெரும்போர் புரிதல் கண்ட, விஷ்ணு மோகினிவடிவேற்று இருதிறத்தவரையும் விளித்து உங்கட்கு யான் வேண்டுமோ அமுதம் வேண்டுமோ என வினவ, அசுரர் பெண்விருப்புற்றுத் தங்களில் ஒவ்வொருவரும் எதிர்த்துச் சமர்செய்து பலர் மடிந்தனர்.

இஃதிவ்வாறிருக்கையில், விண்டு தேவர்களையெல்லாம் ஒருபுறத்தமர்த்தி அவர்கட்கு அமிர்தத்தைப் பகிர்ந்து கொடுத்துவந்தனர். அதுகண்ட அசுரரிருவர் தேவவடிவேற்று அவருடன் உட்கார்ந்திருக்க, அச்சுதன் அதனையறியாது அவர்கட்கும் அமுதளிப்ப, அவர்கள்கையேற்றுஉட்கொண்டனர். இச்செய்தியை அருகிருந்தசூரிய சந்திரர் கண்டு விண்டுவுக்குக் கண்சைகை செய்து காண்பிக்க, அவர் பெருங்கோபங் கொண்டு தமது கையிலிருந்த சட்டுவத்தால் அவ்விருவர் சிரத்தையும் வெட்டித்தள்ளினர். ஆனால் அவர்கள் அமுதமருந்தியவிசேடத்தால் இறவாமல்,* சீகாழிப்பதியையடைந்து சிவார்ச்சனைசெய்து இராகுகேதுவென்னுங் கிரகங்களாகித் தம்மை அசுரரெனக் குறிப்பித்த சூரியசந்திரர்மீது நீங்காப்பகைகொண்டு காலங்களில் அவர்களைத் துன்புறுத்தி வருவர். இதுவே கிரஹணம் என்பதாம். கிரஹணம் = கிரஹம் + அணம். அணம்-சமீபித்தல். இதனை,

கந்தபுராணம் - மகாசாத்தாப்படலம்.

“ தண்டா மனைக்குப் பகைநண்பெனச் சாரு நீரார்
கண்டார் புடையுற் றிங்கிவர் கள்வ ரேயாம்

* சிரங்கள் சென்று வழிப்பட்ட காரணத்தினாற் சீகாழி சிரபுரமெனவும், ஓர் திருநாமமெய்தியது.

உண்டா ரமுதங் கடிதென்றுளத் துன்னி யங்கண்
விண்டா னவற்குக் குறிப்பால்விழி காட்டி னரால்.
காட்டுற் றிடலு மரிநோக்கியிக் கள்வ ரேயோ
ஈட்டுற்ற வானோ ருடனுண்குவ ரென்று தன்கை
நீட்டுற் றிடுசெட் டுவங்கொண்டு நிருதர் சென்னி
வீட்டிச் சுரருக் கமுதூட்டி விருந்து செய்தான்.
புன்னாக நாக மணிவானடி போற்றி நோற்றுச்
செந்நாக மோடு கருநாகத்தின் செய்கை பெற்றுப்
பின்னாக முன்னந் தமைக்காட்டிய பெற்றி யோரை
அந்நாக மீது மறைப்பாரமு துண்ட கள்வர்."— என வருவனவற்றா னுணர்க.

சந்திரசூரியர்கள் செல்லவொட்டாது அவர்கள் நிலைக்கு மேம்பட்டுயர்ந்திருத்தலின் அக்கோபுரங்களின்வாயிலின் வழியாய்ப் போக்குவரவு புரிகின்றனர் என்றார்.

மகர வேலையென் றியானைபோன் மழையருந் தகழி
சிகர மாலரூ ழம்மதி றிரைக்கரந் துழாவி
யகழ வோங்குநீர் வைகையா லல்லது வேற்றுப்
பகைவர் சேனையாற் பொரப்படும் பாலதோ வன்றே.

(இ-ள்.) மகரமச்சங்கள் பொருந்திய சமுத்திரமென்று கருதி, யானையைப் போல மேகங்கள் உட்கொள்ளும் அகழிசூழ்ந்த சிகரபந்திகள் பொருந்திய அம்மதிலை, அலையாகிய கையினால் துழாவியகழும்படி பெருகிவரும்நீர்ப்பெருக்கையுடைய வைகை நதியாலன்றி, வேறாகிய சத்துருவின் படையினால் மோதுந் தன்மையுடையதோ? அல்லவே. எ-று. (௨௨)

எல்லை தேர்வழித் தடைசெயு மிம்மதிற் புறஞ்சூழ்ந்
தொல்லை மேவலர் வளைந்துழி யுடன்றுபோ ராற்றி
வெல்ல மள்ளரும் வேண்டுமோ பொறிகளே வெல்ல
வல்ல வம்மதிற் பொறிசெயு மறஞ்சிறி துரைப்பாம்.

(இ-ள்.) சூரியனது தேரை வழியில் தடைசெய்கின்ற இந்த மதிலின் புறத்தே முற்றுகைசெய்து பகைஞர்கள் விரைந்துவளைந்துகொண்டால், கோபித்துப் போர் செய்து வெற்றிகொள்ளச் சேவகரும் வேண்டப்படுவரோ? (அதிற் பொறித்துள்ள) பொறிகளே வெல்லத்தக்கவன்மையுடையன. (இனி) அம்மதிலின் பொறிகள் செய்யுங் கொடுமையைச் சிறிது கூறுவாம். எ-று. (௨௩)

எழுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

மழுக்கள் வீசுவன நஞ்சு பூசுமுனை வாள்கள் வீசுவன முத்தலைக்
கழுக்கள் வீசுவன குந்த நேமியெரி கால வீசுவன காலனே
ரெழுக்கள் வீசுவன கப்ப ணங்கள்விட மென்ன வீசுவன வன்னெடுங்
கொழுக்கள் வீசுவன கற்க வண்கயிறு கோத்து வீசுவன வார்த்தரோ.

(இ-ள்.) (அம்மதிலின்புறத்துள்ள வுறுப்புகள் தம்மைச் சத்துருக்கள் முற்றுகை செய்தபோது) வீராவேசங் கொண்டு மழுவாயுதங்களை ஒரு புறம் சொரிவன. விஷத்தோயல் செய்த (கூர்மையாகிய) வாயையுடைய வாள்களால் வெட்டுவன. முத்தலை (வேலாகிய) சூலப்படையாற் குத்துவன. கைவேல்களையும் சக்ராயுதங்களையுங் கோபாக்கினி சிந்தும்படி எறிவன. யமனைப்போன்ற வளைதடிகளைச் சுழற்றிவிடுவன. எழுகாற் செய்த நெருஞ்சில்கள் என்னும் ஆயுதங்களை விஷமென்று பார்த்தோர் சொல்லும்படி எறிவன. வலிதங்கிய நெடிய காறுகளை யெறிகின்றன. கவண்களிற் கற்களைக் கோத்துக் கயிறுபற்றி வீசுவன. எ-று.

குந்தம்=கைவேல். எழு=வளைதடி. கப்பணம்=எழுகாற்செய்த நெருஞ்சின் முள்; இது பகைஞரை ஓடவொட்டாமல் நிறுத்தும் ஆற்றலுடையது. கொழு=காறு.

இதுமுதல் ஆறுசெய்யுள்களால் மதிலுறுப்புகளின்வீறு விளக்குகின்றார். இவற்றைச் சீவகசிந்தாமணியில் - நாமகளிலம்பகம்- நகர்வளங்கூறியவிடத்து விளங்கக்காண்க. (உரு)

நஞ்சு பில்குதொளை வாளெ யிற்றரவு நாநி மிர்த்தெறியு மலையரா [மாற்
வெஞ்சி னங்கொண்முழை வாய்தி றந்துபொரு வாரை விக்கிட விழுங்கு
குஞ்ச ரங்கொடிய முசலம் வீசியெதிர் குறுகு வார்தலைகள் சிதறுமா
லஞ்சு வெம்பொறி விசைப்பி னுங்கடுகி யடுபு லிப்பொறி யமுக்குமால்.

(இ-ள்.) விஷத்தைச்சிந்துந் தொளைகளையுடைய வாள்போலுங் கூர்மையாகிய பற்களையுடைய பாம்புகள் (அம்மதிலை நெருங்கிய சத்துருக்களை) நாவை நீட்டிப் பல்லாற் கடித்துக்கொல்லும். வெவ்விய கோபங்கொண்ட மலைப்பாம்புகள் (மலைக்) குகைபோன்ற வாயைத்திறந்து நெருங்கி, போர்செய்யும் வீரர்களை விக்கும்படி விழுங்கும். யானைகள் கொடிய இருப்புலக்கைகளை வீசித் தம் எதிர் நெருங்கிய வீரர்கள் தலைசிதற அடிக்கும். கொல்லத்தக்க புலிகளாகிய யந்திரங்கள் கொடிய ஐம்பொறிகளின் வேகங்களினும் விரைந்து பற்றி யமுக்கும். எ-று.

தொளைவாளெயிற்றரவு என்பது :—நாகசர்ப்பங்கட்குக் காளி-காளாத்திரி-யமன்-யமதூதனென்னும் நான்கு கோரைப்பற்கள் உளவென்றும் அவை தொளையுடையனவென்றும் கடித்தபொழுது விஷப்பையினின்றும் விஷமானது பல்லின் தொளைவழி கடிவாயி லிறங்குமென்றும் மருத்துவநூலார் கூறுவர். இதனை,

சித்தாரூடம்.

"கடுவமரு நாலெயிற்றுக்கும் பெயர்சொல்வேன் காளி காளாஸ்திரி யமன் யமதூதனும்-மேல்வாயலகுதனில்-விளக்கமாய் நாலுபற்கள் முளைத்திருக்கும் நாலுபற்குந் தொளையிருக்குங்-கடித்திடில்-நச்சுப்பல் தொளைவழியாய் நஞ்சுகழன்று-வந்து கடிவாயிலிறங்கித்-தொண்ணூற்றெட்டு-மாத்திரையினின்றுடலில் மண்டியேறும்" என்பதனு னறிக.

எள்ளி யேறுநரை யிவுளி மார்பிற வெறிந்து குண்டகழி யிடைவிழத்
தள்ளி மீளுமுருள் கல்லி ருப்புமுளை தந்து வீசியுடல் சிந்துமாற்
கொள்ளி வாயலகை வாய்தி றந்துகனல் கொப்பு ளிப்பவுடல் குப்புறத்
துள்ளி யாடுவன கைகள் கொட்டுவன தோள்பு டைப்பசில கூளியே.

(இ-ள்.) மதியாது இகழ்ந்து ஏறும் வீரர்களை, குதிரைகள் அவர்கள் மார்பெலும்பு முறிய வுதைத்து ஆழமான அகழியில் விழத்தள்ளி மீண்டு வரும். (சில யந்திரங்கள்) திரண்ட கற்களையும் இருப்புமுளைகளையும் அரிகயிறுகளையும் வீசிப் பகைஞரது உடலைச்சிந்தும். கொள்ளிவாய்ப் பசாசுகள் தமதுவாயைத்திறந்து தீயைக் கொப்புளிக்கவும், சரீரங்கள் குப்புறவும், கண்டோரஞ்சும்படி துள்ளியாடும். சில பேய்கள் ஒருபுறத்தில் தோள்கள் கொட்டும்; கைகள் கொட்டும். எ-று.

தந்து=அரிகயிறு. (உசு)

துவக்கு சங்கிலி யெறிந்தி ழுக்குமரி தொடர்பி டித்தகை யறுக்கவிட், டுவக்கு மொன்னலர்க டலைக ளைத்திருகி யுடனெ ருக்குமர நிலைகளாற், கவைக்கொ ழுந்தழல்கொ ளுத்தி வீசுமெதிர் கல்லு ருட்டியடு மொல்லெனக், குவைக்க டுங்கன்மழை பெய்யு மட்டமணல் கொட்டு மேவலர்கள் கிட்டவே.

(இ-ள்) சத்துருக்கள் தம்மை நெருங்க, (சில யந்திரங்கள்) பந்தப்படுக்குஞ் சங்கிலிகளை அவர்கள் மேல் வீசியிழுக்கும். (சில யந்திரங்கள்) பிடித்தபகைவர் கையை அறுக்கும்படி அரிசங்கிலிகளைவீசிக்களிக்கும். (சிலயந்திரங்கள்)மரங்களின் நிலைகளால் பகைவருடைய தலைகளைத் திருகி யுடலை நெருக்கும். (சில யந்திரங்கள்) பிளவுபட்ட கொழுந்தையுடைய தீயைக் கொளுத்தி வீசும். (சில யந்திரங்கள்) எதிர்ந்து கற்களை யுருட்டிக்கொல்லும். (சில யந்திரங்கள்) விரைந்து கூட்டமாக அச்சத்தைத்தருங் கன் மழையைப் பொழியும். (சில யந்திரங்கள்) வறுத்த மணலை ஒருபுறங் கொட்டும்.

அரிதொடர்-துவக்குச் சங்கிலிகளுள் ஒருவகை. (௨௭)

உருக்கி யீயமழை பெய்யு மாலயவு ருக்கு வட்டுருகு செம்பினீர், பெருக்கி வீசும்விடு படையெ லாமெதிர்பி டித்து விட்டவர்த மைத்தெறச, செருக்கி வீசுநடை கறற மாடமொடு சென்று சென்றுதுடி முரசொடும், பெருக்கி மீளுநடை வைய மேனடவி யெய்யும் வாளிமழை பெய்யுமால்.

(இ-ள்.) (சில யந்திரங்கள் நெருங்கிய சத்துருக்கள்மேல்) ஈயத்தை யுருக்கி மழைபோற் சொரியும். (சில யந்திரங்கள்)தீயிலுருக்கிய இரும்பாலாகிய உருக்குவட்டுகளையும் செம்பினீரையும் ஒருபாற் பெருக்கி வீசும். (சில யந்திரங்கள் பகைவர்) எறிந்த ஆயுதங்களை யெல்லாம் எதிரே பிடித்து (அவற்றையெறிந்த) அப்பகைவரைக்கொல்ல அகங்கரித்து வீசும். (சில யந்திரங்கள்) சஞ்சரிக்கும் மாடங்களோடு பல இடங்களிலும் போய்ப போய் உடுக்கை யொலியையும் பேரிகை யொலியையும் மிகுதியாகச் செய்து திரும்பும். (சில யந்திரங்கள்) நடைத்தேர்களை மேலே நடத்தி, பிரயோகஞ் செய்யத் தக்க அஸ்திரவருஷங்களைப் பெய்யும். எ-று.

துடி=உடுக்கை. வையம=தேர். (௨௮)

வெறிகொ ளைம்பொறியை வெலலி னும்பொருது வெலலு தற்கரிய காலனை, முறிய வெலலினும்வெ லறகருங் கொடிய முரண வாயமரரரணெலா, மறிவி னிறுவு கமமி யன்செயவு மரிய வாயவனர் புரியுமிப், பொறிகள் செய்யுமவினை யின்ன பொன்னணி புரத்து வீதிக ளுரைத்துமால்.

(இ-ள்.)(விஷய வாதனையிற் செல்லும்) மயக்கங்கொண்ட பஞ்சேந்திரியங்களை யொருவன் ஒருக்கால் வென்றாலும், பிறர் வெல்ல முடியாத யமனைப் போர் செய்து புறமுதுகிட்டோடவென்றாலும், (எவராலும் ஒருக்காலும்) வெல்லமுடியாத மிக்க வலிமையுடையனவாய், தேவர்களதுநகரரண்கள் எல்லாவற்றையுந்தனது அறிவினால் நிருமித்தவிச்சுவகன்மன் செய்யவும் முடியாதனவாய், சிற்பிகள் செய்த இந்த யந்திரங்கள் இயற்றுந் தொழில்கள் இத்தன்மையன. (இனி) பொன்னாலலங்கரித்துள்ள அம்மதுரை நகரத்தின் வீதிகளது சிறப்பைக் கூறுவாம். எ-று.

பஞ்சேந்திரியங்களையும் யமனையும் வெல்லத்தக்கவரிருந்த போதிலும் இம் மதிற் பொறிகளை வெல்வோரில ராகலின் "வெலற் கருங்கொடிய முரணவாய்" எனவும், தேவநகரங்களிலுள்ள அரண்களிலும இத்தகைய பொறிகளின்மையால் "கம்மியன் செயவு மரியவாய்" எனவுங் கூறினார். (௨௯)

## அகநகர்.

### கலிநிலைத்துறை.

கழையுந் தாமமுஞ் சுண்ணமு மணிநிழற் கலனுங்
குழையுந் தூபமுந் தீபமுங் கும்பமுந் தாங்கித்

தழையுங் காதலர் வரவுபார்த் தன்பகந் ததும்பி
விழையுங் கற்பினு ரொத்தன விழவறு வீதி.

(இ-ள்.) திருவிழா மகோற்சவங்கள் (எக்காலத்தும்) நீங்காத திருவீதிகள், கரும்புகளையும் பூமாலைகளையும் சுண்ணப்பொடிகளையும் இரத்தினங்களிழைத்த ஆபரணங்களையும் (மாந்) தளிர்க்கொத்துகளையும் தூபத்தையுந் தீபத்தையும் பூரணகும்பங்களையுந் தாங்கி நிற்றலால், [காமன் கருப்பு வில்லெழுதிய தொய்யிலையும் பூமாலையையும் வாசச்சுண்ணத்தையும் பிரகாசமுடைய மணிப்பணிகளையுமணிந்து, தூபமுந் தீபமும் பூரண கும்பமுமாகிய மங்கலப்பொருள்களைக் கையிற்றாங்கி,] மிக்கவிருப்பத்தையுடைய கணவரது வருகைநோக்கி, அன்பால் மனம்பூரித்து விரும்புங் கற்பினையுடைய மாதர்களை யொத்திருந்தன. எ-று.

வீதிகள் கரும்பு மலர்மாலை யாதியவற்றால் அலங்கரித்துள்ளமையின், தொய்யிலெழுதி மலர்முதலியனவணிந்து, கணவன் வருகையை யெதிர்பார்க்குங் கற்புடைய பெண்ணை யொத்தன வென்றார்.

தொய்யில் என்பது மாதர்கள் தமது மார்பிற் சந்தனக்குழம்பால் மன்மதனது வில் முதலியவற்றை வரைதலாம். இதனை முலைக்கோல மென்பர் பரிமேலழகியார். (௯0)

ஆல நின்றமா மணிமிடற் றண்ணலா னந்தக்
கோல நின்றசே வடிநிழல் குறுகினார் குணம்போல்
வேலை நின்றெழு மதியெதிர் வெண்ணிலாத் தெண்ணீர்
கால நின்றன சந்திர காந்தமா ளிகையே.

(இ-ள்.) ஆலாலவிடமங் குடிகொண்ட பெருமைதங்கிய நீலகண்டத்தையுடைய சிவபெருமானது பேரின்பமே திருவுருவாகக்கொண்டருளிய செவ்விய திருவடிநீழலை (பிறவியாகிய கோடை அகலும்படி)ச் சேர்ந்த அன்பர்கள் (ஆனந்தப்பாட்பஞ்சொரியும்) குணத்தைப்போல, சந்திரகாந்தக்கற்களாலாகிய மாளிகைகள் சமுத்திரத்தி லிருந்து உதயமான சந்திரனுக்கெதிரே வெள்ளிய சந்திரிகையுடைய தெளிவாகிய நீரைச் சொரியும். எ-று.

சிவபெருமானது திருவடியடைந்த அடியார்கள் உரோமஞ் சிலிர்த்தலும், கண்ணீர் பெருக்குதலும் முதலிய பல குறிகளை யடைவார்கள். அவற்றுள் கண்ணீர் பெருக்குதலை யீண் டுவமஞ்செய்தார்.

சந்திரனைக் கண்டு நீர் துளிக்குங் கல்லைச் சந்திரகாந்தக்கல்லென்றும், சூரியனைக் கண்டு நெருப்பு சொரியுங் கல்லைச் சூரியகாந்தக்கல்லென்றுங் கூறுவர். (௯க)

குன்ற நேர்பளிக் குபரிகை நிரைதொறுங் குழுமி
நின்ற பல்சரா சரமுமந் நிழல்வாய் வெள்ளி
மன்ற கம்பொலிந் தாடிய மலரடி நிழல்புக்
கொன்றி யொன்றறக் கலந்தபல் லுயிர்நிலை யனைய.

(இ-ள்.) மலையை நிகர்த்த பளிக்குக் கற்களாலாகிய உபரிகைகளின் வரிசைகள்தோறும் நெருங்கியிருக்கின்ற சராசரமாகிய பலவகைப் பொருள்களும் அந்த (உபரிகைகளின்) நிழலில் (இருக்குந் தோற்றமானது) வெள்ளியம்பலத்தில் வீற்றிருந்து திருநடனஞ் செய்தருளிய (சுந்தரேசப்பெருமானது) தாமரைமலர்போன்ற திருவடிநீழலையடைந்து ஒன்றெனவும், ஒன்றென்னுந் தன்மை நீங்கவுங்கூடிய பல வுயிர்களின் நிலைமையை ஒத்திருந்தன. எ-று.

சராசரம்=சரம்+அசரம். சரம்=அசைவது. அசரம்=அசையாதது. இவற்றை முறையே இயங்கியற் பொருளென்றும் நிலையியற் பொருளென்றுங் கூறுவர்.

ஒன்றியொன் றறக்கலத்தல் என்பது—ஆன்மாக்கள் நல்வினைக் கேடாகப் பெருமானது திருவடி யடையினுஞ் சிவானுபவம்பெறாது நிற்றல்பற்றி யென்க.

முத்தியடைந்த பல்லுயிர்கள் என்பதை,

தணியூர்ப்புராணம்-புழுகீசப்படலம்.

"பிறைம ருப்புரற் கான்முறச் செவிப்பெரு வேழ
நிறைவ லிக்கொடுங் கூற்றென நிகழ்தரு மடங்க
லுறைமு ரட்சின வாளிகாற் கதியமை பாய்மா
வுறைசெ ருத்தலா னேங்கிமி லேறுழல் பன்றி.

மரம்ப யின்றிடு வானர நச்சுவா லெயிற்றி
னுரம்ப யின்றிடு வாளரா வுகண்டெழு மீனம்
பரம்பு மைந்தடக் காமைபல் வகைத்ததாண் டெண்டு
நிரம்பு தேன்கவர் வண்டுநுண் சிறைநில வீயே.

கதியின் மிக்கதாய் விரைசெலு முயல்கடி யுறவி
குதிய மைந்துபாய் தவளைபீ லிக்குர னுரை
பொதிசி றைப்பெரும் பிணிமுகம் புகழ்க்கருங் குருவி
யதிர ரூக்கடுங் கலுழன்முற் பற்பல வாக.

சிவபி ரான்றிரு வருட்குறி யருச்சனை செய்தே
பவமொ ழிந்தன கூடிய மட்டுமப் படியே
கவலை தீர்தரப் பூசைசெய் வாமெனக் கருதி
யவம கன்றவப் பூசையாங் கெழுந்ததன் போடும்."—எனவருஞ் செய்யுள் களாற்றெளிக. (கஉ)

கறித்த ருந்துபுற் குவைகழீஇக் காற்றொடர் பரியத்
தெறித்த கன்றயன் மரகதச் சித்திரத் தெற்றி
யெறித்த பைங்கதிர்க் கொழுந்தையு மெட்டிநா வளைத்துப்
பறித்து மென்றுவா யசைப்பன பசலையான் கன்று.

(இ-ள்.) பசுவின் இளங்கன்றுகள் கறித்துக் குதட்டும் புற்குவையல்களைக் கழித்துக் காலிற்பூட்டிய கயிறு அறும்படி துள்ளி (அவ்விடம்விட்டு) விலகி, சமீபத்தி லுள்ள மரகதத்தாற் சித்திரமமைந்த திண்ணைகள் வீசிய பசுமைதங்கிய கிரணங்களின் கொழுந்துகளை நாவை வளைத்து எட்டிப்பறித்து மென்று வாயால் அசை போடும்.

தெற்றி=திண்ணை.

மரகதக்கொழுந்தைப் புல்லென்று நாவை வளைத்து எட்டிப்பறித்து அசை போடு மென்றார்.

இச்செய்யுள் மயக்கவணி. (கந)

சிறுகு கண்ணவாய்க் காற்றெறி செவியவாய்ப் பாச
மிறுகு காலவாய்க் கோட்டுமா னினம்வழங் காறுங்
குறுகு நுண்மருங் கிறுத்தெழு கோட்டுமா னினம்போ
மறுகும் வண்டுசூழ்ந் திறைகொள மான்மத நாறும்.

(இ-ள்.) சிறுகிய விழிகளையுடையனவாய், காற்றை வீசுங் காதுகளை யுடையனவாய், கயிறுகள் இறுகச்சூழ்ந்த கால்களை யுடையனவாய், கொம்புகளை யுடையன வாய்விளங்கும் யானைக்கூட்டங்கள் சஞ்சரிக்கின்ற வழிகளிலும், தேய்கின்ற நுட்ப மாகிய இடையானது முறியும்படி யெழுந்து பூரிக்கும் மலையின் சிகரம்போன்ற குசங்

கலையுடைய மான்போலும் (பார்வை பொருந்திய) மாதர்கூட்டங்கள் செல்லுந் தெருக்களிலும், வண்டுகள் புறஞ்சூழ்ந்து மொய்க்கும்படி மான்மதம் மணம்வீசும். எ-று.

மால் மதம்=பெரியமதம் எனவும், மான் மதம் = மிருகமதம் எனவும் பிரித்துப் பொருள்கொள்க.

யானை செல்லுந் தெருக்களில் மதநீர் கமழுமெனவும் மாதர் செல்லும் வீதியில் மதம் கமழுமெனவுங் கொள்க. மான்மதம் என்பது கஸ்தூரி. (௩௪)

மாட மாலையு மேடையு மாளிகை நிரையு
மாட ரங்கமு மன்றிவே ளன்னவர் முடியு
மேட விழ்ந்ததா ரகலமு மிணைத்தடந் தோளுஞ்
சூடு மாதரார் சிறடிப் பஞ்சுதோய் சுவடு.

(இ-ள்.) மாடங்களின் வரிசையும், மேடைகளின் வரிசையும், மாளிகைகளின் வரிசையும், ஆடுகின்ற நடனசாலையின் வரிசையுமல்லாமல், மன்மதனை யொத்த ஆடவரது முடிகளும், (அவரது) இதழ்கள்விரிந்த மாலையையணிந்தமார்புகளும், பூரித்த இரண்டு தோள்களும், மாதர்களது சிற்றடியி லூட்டிய செம்பஞ்சுக் குழம்பின் சுவட்டினைச்சூடும். எ-று.

சுவடு=குறி. அரங்கம்=நடனசாலை. அகலம்=மார்பு. (௩௫)

மருமச் செம்புன லாறிட மாறடு கோட்டுப்
பருமச் செங்கண்மால் யானையின் பனைக்கையு மறைநூ
லருமைச் செம்பொரு ளாய்ந்தவர்க் கரும்பொரு ளீவோர்
தருமச் செங்கையு மொழுகுவ தானநீ ராறு.

(இ-ள்.) மார்பினிடத்துச் செவ்விய வுதிரவெள்ள மோடும்படி (தம்மை) யெதிர்த்த) சத்துருக்களைக் கோறல்புரியுங் கொம்பையுங் கவசத்தையுஞ் செவ்விய கண்ணையும் மதமயக்கத்தையுமுடைய யானையினது பனைமரம் போன்ற (திரண்டு நீண்ட) துதிக்கைகளும், வேதநூல்களிற் பொதிந்துள்ள அருமையாகிய உண்மைப் பொருள்களை ஆராய்ந்தறிந்த வேதியருக்குப் பெறுதற்கரிய பொருள்களைத் தானஞ் செய்யுங் கொடையாளிகளது தருமச்செயல் பொருந்திய செவந்தகைகளும், தான நீ ராற்றைப் பெருக்கெடுக்கும். எ-று.

தானம்=மதம் ; சோடசதானம்.செம்பொருளென்பது நிலையாயுள்ள பொருள் ; எனவே, தமது மூதாதைகளால் தேடப்பட்டு, தம்மால் வீண்வழி செலவுசெய்யப்படாமல் உள்ள அறத்தாறீட்டிய பொருள் என்க. யானை துதிக்கையினின்று மதநீரை வெள்ளமாகப் பெருக்குதலும், ஈவோர் தானங் கொடுக்கையில் தத்தஞ்செய்யும் நீர்வெள்ளத்தைப் பெருக்குதலும், ஒப்புமை நோக்கி " யானையின் பனைக்கையும், ஈவோர் தருமச்செங்கையும், தானநீராறு ஒழுகுவ." என்றார். (௩௬)

பரிய மாமணி பத்தியிற் பதித்திருட் படலம்
பொரிய வில்விடக் குயிற்றிய பொன்னர மியமுந்
தெரிய மாமுர சொலிகெழு செம்பொனு டரங்கு
மரிய மின்பயோ தரஞ்சுமந் தாடுவ கொடிகள்.

(இ-ள்.) பூரித்த பெரிய இரத்தினங்களை வரிசையாகப் பதித்து இருட்டொகுதியொழியும்படி விளங்க இழைத்த பொன்னுலாகிய நிலாமுற்றத்திலும், (பண்ணொலியுந் தாளபேதங்களும்) தெரியும்படி பெரிய மத்தளத்தின் ஓசைமிகுந்த செவந்த பொன்னுலாகிய நடனசாலையிலும், (உள்ள) கொடிகள் அரிய மின் பயோதரங்களைச் சுமந்து ஆடாநிற்கும். எ-று.

கொடிகள்=துவசங்கள்; கொடிபோன்ற பெண்கள். அரிய=பசியநிறம் பொருந்திய; இலாத. மின்=மின்னல்; இடை. பயோதரம்=மேகம்; கொங்கை எனச் சிலேடைப்பொருள்கொள்க.

அரமியம்=நிலாமுற்றம். நிலாமுற்றத்திற் கட்டிய கொடிகள் பசிய நிறம் பொருந்திய மின்னலையும் மேகங்களையுஞ் சுமந்து ஆடுமெனவும், அரங்கிலுள்ள பூங் கொடிபோன்ற மாதர் அரிய மின்னல்போன்ற இடையையுங் குயங்களையுஞ் சுமந்து ஆடுவரெனவும் பொருள்.

இச் செய்யுள் ஒப்புமைக்கூட்ட வுவமையணி. (கூஎ)

வலம்ப டும்புயத் தாடவர் மார்பமேற் புலவிக்
கலம்ப டர்ந்தபூண் முலையினார் காலெடுத் தோச்சச்
சிலம்ப லம்பிசை மழுங்கமுன் னெழுமவர் தேந்தார்ப்
புலம்பு வண்டுநொந் தரற்றிய பொங்குபே ரொலியே.

(இ-ள்.) வெற்றியைத் தரத்தக்க புயத்தையுடைய நாயகரது மார்பின்பே ரில் (நெடுநாள் பிரிதல்காரணமாக) ஊடலாகிய ஆபரணமணிந்த குயங்களை யுடைய நாயகிகள் தமது காலெடுத்து உதைக்க, (அம் மாதர்கள் காலிற் பூண்ட) சிலம்புக ளொலிக்கும் ஒலி குன்றும்படி, (அந் நாயகர்கள் மார்பிற் சூடிய) தேன் சொரியும் மாலைகளிலுள்ள இசையைப்பாடும் வண்டுகள்வருந்தி யொலித்த மிகப் பெரிய ஓசை யானது முற்பட வோங்கும். எ-று.

பரத்தையிற் பிரிந்த கணவன் வந்தவழி நாயகி கொண்ட வூட லாதலின் "புலவிக்கலம்படர்ந்த" என்றார்.

பிரிவு அறுவகைப்படும். அவை:—ஓதலிற்பிரிவு-பரத்தையிற்பிரிவு-காவலிற் பிரிவு - தூதுவயிற்பிரிவு - துணைவயிற்பிரிவு-பொருள்வயிற்பிரிவு எனப்படும். இதனை.

அகப்பொருள் விளக்கம்.

"பரத்தையிற் பிரித லோதற்குப் படர்தல்
அருட்டகு காவலொடு தூதிற் ககறல்
உதவிக் கேக னிதியிற் கிகத்தலென்
றுரைபெறு கற்பிற் பிரிவறு வகைத்தே." — என்னுஞ் சூத்திரத்தா னறிக. விரிவு வருமிடத்திற் காண்க. (கூஅ)

தைய லார்மதி முகங்களுந் தடங்களுங் குழைய
மைய ளாவிய விழிகளு மாடமுங் கொடிய
கையு நாண்மலர்ப் பொதும்பருங் கறங்கிசை வண்டு
நெய்ய வோதியும் வீதியு நீளற னெறிய.

(இ-ள்.) மாதர்களுடைய பூரணச்சந்திரன் போன்ற முகங்களுந் தடாகங் களுங் குழைகளையுடையன. (அம் மாதர்களது) மைதீட்டிய கண்களும் [மேகமண்டல மளாவிய] மாடங்களுங் கொடியன. (அப்பெண்களது) கைகளும் புதிய மலர்களையு டைய சோலைகளுங் கறங்கிசை வண்டுகளை யுடையன. நெய்ப்பசையை யுடைய அம் (மகளிரது) அளகபாரங்களும் வீதிகளும் நெடிய அறனெறியன. எ-று.

மையளாவிய விழிகளு மாடமும் என்பதை, மையளாவிய விழிகளும்,[மை யளாவிய] மாடமும் எனக் கொண்டு பொருளுரைக்க.

குழை=குண்டலம்; தளிர். கறங்கு=ஒலித்தல்; சுழலல். இசை=ஒலித் தல்; இராகம். வண்டு=வளையல்; வண்டுகள். அறல் என்பது கருமணல்.

குழையவென்பது மாதர்முகங்கள் குண்டலத்தை யுடையனவென்றுந் தடங்கள் தாமரை முதலிய தளிர்களை யுடையன வென்றும், கொடிய வென்பது அம்மாதர்விழிகள் கொடுந்தொழிலையுடையன வென்றும் மாடங்கள் கொடிகளையுடையன வென்றும், கறங்கிசை வண்ட வென்பது அம் மாதரது கைகள் ஒலிக்கும் ஒலியையுடைய வளையல்களை யணிந்தன வென்றும் பொதும்பர் சுழன்று திரியும் இசை பாடுதலையுடைய வண்டுகளை யுடையன வென்றும், நீளற னெறிய வென்பது நீள் அறல் நெறிய எனப் பிரித்து அப் பெண்கள் கூந்தல் நீண்ட கருமணற்படிவுபோலும் நெறிவையுடையன வென்றும் நீள் அறன் நெறிய எனப் பிரித்து அவ்வீதிகள்மிக்க தருமவழியை யுடையன என்றும், பொருள்பயக்குமாறு காண்க. (௩௯)

மலருந் திங்கடோய் மாடமுஞ் செய்வன மணங்க
ளலருந் தண்டுறை யுங்குடைந் தாடுவ தும்பி
சுலவுஞ் சோலையு மாதருந் தூற்றுவ வலர்கள்
குலவும் பொய்கையு மனைகளுங் குறைபடா வன்னம்.

(இ-ள்.) மலர்களுஞ் சந்திரன் தவழும் மாடங்களும் மணங்களைச் செய்யாநிற்கும். பூக்களிலுந் தட்பமாகிய நீர்த்துறைகளிலுந் தும்பிகள் மூழ்கி யாடாநிற்கும். (அந் நகரைச்) சூழ்ந்துள்ள சோலைகளும் மாதர்களும் அலர்களைத் தூற்றாநிற்கும். நெருங்கிய நீர்நிலைகளிலும் மனைகளிலும் அன்னங்கள் குறைபடா. எ-று.

மணம் = வாசனை; மணவினை. தும்பி = தும்பி; யானை. அலர்கள் = மலர்கள்; பழிச்சொற்கள். அன்னம் = அன்னங்கள்; சோறுகள் எனச் செம்மொழிச் சிலேடையாகக்கொண்டு, மலர்கள் மணம்வீசு மெனவும் மாடங்களில் உள்ளார் மணமணத்தொழில்கள் செய்வார்களெனவும், அலர்களில் தும்பிகள் ஆடுமெனவும் துறைகளில் யானைகள் மூழ்குமெனவும்,சோலைகள் அலர் தூற்று மெனவும் மாதர் பழிச்சொல் தூற்றுவரெனவும், பொய்கைகளில் அன்னங்கள் குறைபடாவெனவும் மனைகளிற் சோறுகள் குறைபடாவெனவுங் கொள்க.

"செயப்படு பொருளைச் செய்தது போலத் - தொழிற்படக் கிளத்தலும் வழக்கினு ளுரித்தே" என்றாராகலின், மாடத்திலுள்ளார் செய்யுந் தொழிலை மாடத்தின்றொழிலாக வுபசரித்தார்.

இச்செய்யுளில் மாதர் என்றது கற்புடைமகளி ரொழிந்த பரத்தையர் முதலாயினரை. (௪0)

ஊடி ஞெறி கலன்களு மம்மனை யுடன்பந்
தாடி ஞெர்பரி யாரமு மழியிறச் சிற்றில்
சாடி ஞெரொடு வெகுண்டுகண் டதும்புமுத் திறைப்ப
வாடி ஞர்பரி நித்தில மாலையுங் குப்பை.

(இ-ள்.) (தத்தம்நாயகருடன்) ஊடல்கொண்ட மாதர்கள் (வெறுப்பாற் கழற்றி) எறிந்த ஆபரணங்களும், அம்மனையும் பந்தும் விளையாடுகின்ற பெண்கள் (சுமையாற்றாது) கழற்றியெறிந்த நகைகளும், (தாம் விளையாடக் கோலிய சிற்றில்களை) அழித்த ஆடவச்சிறாருடன் கோபித்துக் கண்கள் ததும்புகின்ற முத்துப்போன்ற நீரைச் சிந்த (மனம்)வருந்திய மங்கையர் அறுத்தெறிந்தமுத்தாரங்களும், (அம்மதுராபுரியின் வீதியில்) குப்பைகளாயிருக்கும். எ-று.

இச்செய்யுளால் அந்நகரத்தின் செல்வமிகுதியைக் கூறினர். (௪௧)

ஐய வென்னுரை வரம்பின வாகுமோ வடிய
ருய்ய மாமணி வரிவளை விறகுவிற் றுழன்றோன்,

பொய்யில் வேதமுஞ் சுமந்திடப் பொருதகன் றரற்றுஞ்
செய்ய தாண்மலர் சுமந்திடத் தவஞ்செய்த தெருக்கள்.

(இ-ள்.) தமது அடியவர்கள் உச்சிவிக்கும்படி சிறந்த இரத்தினங்களையும், நீற்றுகள் பொருந்திய வளையல்களையும், விறகையும் விற்றுத்திரிந்த சிவபெருமானது, உண்மைப்பொருள் வாய்ந்த வேதங்களுந் தாங்கத் (தவஞ்செய்ய) முடியாமல் நீங்கி முறையிடுகின்ற செவந்த திருவடித்தாமரைமலர்களைத் தாங்கும்படி, தவஞ்செய்த வீதிகளின் பெருமை, என் சொல்லளவிற்கு அடங்கியதாகுமோ. எ-று.

தவத்தின் சொரூபம்—என்பதை.

"மலர்தலை யுலகத்துப் பலபல மாக்கள் - மக்களை மனைவியை யொக்கலை யொரீஇ - மனையும் பிறவுந் துறந்து நினைவருங் - காடு மலையும் புக்குக் கோடையிற்-கைம்மே னிமிர்த்துக் காலொன்று முடக்கி-யைவகை நெருப்பி னழுவத்துநின்றும்-மாரி நாளினும் வார்பனி நாளினும் - நீரிடை மூழ்கி நெடிது கிடந்துஞ்-சடையைப் புனைந்துந் தலையைப் பறித்தும்-உடையைத் துறந்துமுண்ணாதுழன்றுங்-காயுங் கிழங்குங் காற்றுதிர் சருகும் - வாயுவு நீரும் வந்தன வருந்தியுங்-களரிலுங் கல்லிலுங் கண்படை கொண்டுங்-தளர்வுறு மியாக்கைதளர்வித்தாங்கவர்-அம்மை முத்தி யடைதற் காகத் - தம்மைத் தாமே சாலவு மொறுப்பர்" என்னும் பட்டினத்தடிகள் திருவாக்கா னுணர்க.

இத்தெருக்கள் தவவேடங்கொண்டு மழைக்காலத்தில் மழையிலும், பனிக்காலத்திற் பனியிலும், கோடைக்காலத்தில் வெயிலிலு மிருக்குமென்றார். (௬௨)

அறுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

தோரண நிரைமென் காஞ்சி சூழ்நிலை நெடுந்தே ரல்குற்
பூரண கும்பக் கொங்கைப் பொருவின்மங் கலமா மங்கை
தாரணிந் தாரந் தூக்கிச் சந்தநி ரிமிர்ந்து பாலிச்
சீரணி முளைவெண் மூரல் செய்துவீற் றிருக்கு மன்றே.

(இ-ள்.) தோரணவரிசைகளாகிய மெத்தென்ற தொழில் பொருந்தச்செய்த காஞ்சியென்னும் ஆபரணத்தைச் சூழ்ந்த நெடிய நிலைத்தேராகிய அல்குலையும், பூரணகலசங்களாகிய கொங்கைகளையுந் தாங்கிய சமானமில்லாத மங்கலமாகிய மங்கையானவள் மலர்மாலைக ளணிந்து, முத்துமாலைகள் தொங்கவிட்டுச் சந்தனக் குசிம்பு அகிற்குழம்புகளைப் பூசிப் பாலிகைகளிலுள்ள பொலிவுமிகுந்த முளையாகிய வெள்ளிய புன்னகைகளைத் தோற்றி (அத்தெருவீதிகளிலெல்லாம்) வீற்றிருப்பாள். எ-று.

காஞ்சி யென்பது எண்கோவையணி. இதனைத் திருமுருகாற்றுப்படையில் "பல்காசு நிரைத்த சில்கா ழல்குல்" என்பதற்கு நச்சினார்க்கினியர்

"எண்கோவை காஞ்சி யெழுகோவை மேகலை
பண்கொள் கலாபம் பதினாறு—கண்கொள்
பருமம் பதினெட்டு முப்பத் திரண்டு
விரிசிகை யென்றுணரற் பாற்று."—எனக்கூறியதனா லுணர்க.

இச்செய்யுள், "எண்கோவை மேகலை காஞ்சி யிருகோவை
பண்கொள் கலாபமிரு பத்தொன்று—கண்கொள்
பருமம் பதினான்கு முப்பத் திரண்டு
விரிசிகை யென்றுணரற் பாற்று."—எனவும் பாடபேதம்.

நிலைத்தேர்-அழகின்பொருட்டு வீதிகளிற் செய்து நிலையாக வைத்திருக்குந் தேர். தோரணங்கள் கட்டி, பூரணகும்பங்கள் நிறுத்தி, பந்தல்களில் மலர்மாலையும்

முத்துமாலையுந் தொங்கவிட்டு, முளைப்பாலிகை வைத்திருப்பதால், "மங்கலமாமங்கை வீற்றிருக்கும்" என்றார். (௩௩)

திங்களைச் சுண்ணஞ் செய்து சேறுசெய் தூட்டி யன்ன
பொங்குவெண் மாடப் பந்தி புண்ணியம் பூசுந் தொண்டர்
தங்கண்மெய் வேடந் தன்னைத் தரித்தன சாலக் கண்கொண்
டங்கணன் விழவு காண்பா னடைந்தென மிடைந்த வன்றே.

(இ-ள்.) சந்திரனை நீறாக்கி, (அதனிடத்துள்ள அமுதத்தைவிட்டு) சேறுசெய்து பூசியதைப் போன்ற பிரகாசத்தை யுடைய வெள்ளிய மாடங்களின் வரிசைகள், திருவெண்ணீற்றினையணிந்த அடியவர்களது உண்மையாகிய திருவேடத்தைத்தாங்கியவைகளாய், மிகுதியாகிய (பலகணிகளாகிய) கண்களைக் கொண்டு சிவபெருமானது திருவிழாமகோற்சவத்தைத் தரிசிக்கும்படி வந்தடைந்தன போலத் தெருக்கள் தோறும் நெருங்கியுள்ளன. எ-று.

தரித்தனவென்பது முற்றெச்சம். வீடுகளுக்குக்கண்களாயுள்ளவை பலகணிகள். சேறுசெய்து என்றவிடத்து அமுதமென்றது எஞ்சிநின்றது. (௩௪)

தேரொலி கலினப் பாய்மான் சிரிப்பொலி புரவி பூண்ட
தாரொலி கருவி யைந்துந் தழங்கொலி முழங்கு கைம்மான்
பேரொலி யெல்லா மொன்றிப் பெருகொலி யன்றி யென்றுங்
காரொலி செவிம டாது கடிமணி மாடக் கூடல்.

(இ-ள்.) தேரின் ஒலியும், கடிவாளம்பூண்ட பாய்ந்துசெல்கின்ற குதிரையின் கனைத்தலொலியும், அக்குதிரைகள் பூண்ட கிண்கிணியின் ஒலியும், பஞ்ச கருவிகளும் ஒலிக்கு மொலியும், முழங்குகின்ற யானையினது பெரிய ஒலியும் (ஆகிய இவ்வோசைகள்) எல்லாம் ஒருசேரத் திரண்டு, பெருகிய ஓசையே புலப்படுவதல்லாமல் விளக்கமாகிய நவமணிகள் பதித்த மாடங்கள் நெருங்கிய மதுராபுரியிலே எப்பொழுதும் மேகமுழக்கம் செவியிற் கேட்டதில்லை. எ-று.

கைம்மான் = கையையுடைய மிருகம்; யானை.

கருவி ஐந்து ஆவன :—தோற்கருவி, தொளைக்கருவி நரப்புக்கருவி கஞ்சக்கருவி மிடற்றுக்கருவி என்பனவாம். இவற்றுள், தோற்கருவி பேரிகைமுதலியன. தொளைக்கருவி வேய்ங்குழல்முதலியன. நரப்புக்கருவி வீணைமுதலியன. கஞ்சக்கருவி தாளமுதலியன. மிடற்றுக்கருவி கண்டத்தினால் தொனியுண்டாகும்படிப் பாடுதல் எனப்படும். (௩௫)

## பரத்தையர் வீதி.

இழிபவ ருயர்ந்தோர் மூத்தோ ரிளையவர் கழியா நோயாற்
கழிபவர் யாவ ரேனுங் கண்வலைப் பட்டு நெஞ்ச
மழிபவர் பொருள்கொண் டெள்ளுக் கெண்ணெய்போ லளந்து காட்டிப்
பழிபடு போகம் விற்பா ராவணப் பண்பு சொல்வாம்.

(இ-ள்.) இழிகுலத்தவர் - உயர்குலத்தவர் - விருத்தர் - வாலிபர்-நீங்காத நோயினால் மெலிவோர் (ஆகிய இவருள்) யாவராயினும், தமதுகண்களாகிய வலையிற் சிக்கி மனவலிகெட்டோரது பொருள்களைக் கைக்கொண்டு, எள்ளுக்குத் தக்க எண்ணெய் (அளந்துகொடுப்பதுபோலப் பொருளுக்குத் தக்கபடி விருப்பத்தை) அளந்து காட்டி, (மேலோர்) விலக்கும் போகத்தை விற்கின்ற வரைவின்மகளிரது தெருவின் சிறப்பை (இனிச்) சொல்லுவாம். எ-று.

தமது சுகத்திற்குத் தக்கவர் தகாதவ ரென்று கருதாது விலைகொடுப்போர் யாவர்க்கும் போகம்விற்பது வரைவின்மகளிர் வழக்காதலின் "இழிபவ ருயர்ந்தோர் மூத்தோ ரிளையவர் கழியாநோயாற் கழிபவர்யாவரேனும்" எனவும், அவரவர் பொருளுக்கேற்ப அவரவர்க்குப் போகம் விற்றலின் "எள்ளுக் கெண்ணெய்போ லளந்து காட்டி" எனவும், அவர்கள் சுகம் வெறுக்கத்தக்க சுகமாதலின் "பழிபடுபோகம்" எனவுங் கூறினர். எ-று. (சு௬)

மெய்படு மன்பி னார்போல் விரும்பினார்க் கருத்துந் தங்கள்
பொய்படு மின்பம் யார்க்கும் புலப்படத் தேற்று வார்போன்
மைபடு கண்ணார் காமன் மறைப்பொருள் விளங்கத் தீட்டிக்
கைபடச் சுவராய்த் தோன்றச் சித்திரங் காணச செய்வார்.

(இ-ள்.) மை தீட்டிய விழிகளையுடைய பரத்தையர் (தம்மை) விரும்பிய ஆடவருக்கு மெய்யன்புடையார்போல ஊட்டுகின்ற பொய்யாகிய இன்பக்கலவிகளை, (தம்மிடத்துவரும்) எல்லாருக்கும் (முதலிலேயே நன்றாக) தெளிவிப்பவர்போல, காமாகமப்பொருளாகிய கரணபேதங்களை (மெய்போல) விளங்க எழுதி, கைபடுதலாற் சுவரென்றும், தோன்றும்வகையாகச் சித்திரங்கள் புலப்படச்செய்வாராயினர். எ-று.

அநங்காகமத்திற் கூறிய கரணபேதங்களைக் கற்றறியாத ஆடவர் தமதுவீட்டிற்கு வருமுன்னர் அவர்கட்குக் கற்பித்தல் கடனாக நிற்றலின் "புலப்படத் தேற்றுவார்போல்" எனவும், கண்டோர் அதிசயித்துத் தமது கைப்பரிசநேர்ந்தால் இது சுவரொன்றும், ஆடவரு மகளிருங் கிரீடித்தலல்லவென்றுந் தெரிந்துகோடலால் "கைபடச்சுவராய்த் தோன்றச் சித்திரங் காணச் செய்வார்" எனவுங் கூறினர்.

கரணபேதங்கள்—உத்தானிதம் - திரியக்கு - ஸ்திதம் - ஆநிதகம் - ஆனமிதமென ஐவகையன. இவற்றி னுட்பிரிவுகள் அறுபத்துநான்கென்பர். இவற்றின் விரிவெல்லாம் காமாகமத்துட் பரக்கக் காண்க. (சு௭)

திருவிற்கான் மணிப்பூ ணாகம் பலகையாத் தெண்முத் தார
வருவிக்கால் வரைமென் கொங்கைச் சூதொட்டி யாடி வென்று
மருவிக்கா முகரைத் தங்கள் வடிக்கண்வேன் மார்பந் தைப்பக்
கருவிச்சூ தாடி வென்றுங் கைப்பொருள் கவர்தல் செய்வார்.

(இ-ள்.) (தமது வீட்டிற்குவந்த) காமுகரைச் சேர்ந்து அழகிய ஒளிவீசும் இரத்தினாபரணங்க ளணிந்த தமது மார்பத்தைப் பலகையாகக் கொண்டு (அதிலே) தெள்ளிய முத்தாரமாகிய அருவியைப்புலப்படுத்துகின்ற மலைகளாகிய மெல்லிய குயங்க ளென்னும் வட்டுகளைப் பந்தயம்வைத்து ஆடி வென்றும், தமது கண்களாகிய கூர்மை தங்கிய வேற்படையானது (அக்காமுகரது) மார்பிற்பட்டு உருவும்படி கருவியாகிய சூதினையாடி வென்றும், அவர்கள் கையிலுள்ள பொருள் முழுவதையும் (அப்பொதுமகளிர்) கவர்ந்துகொள்வார்கள். எ-று.

ஆயுதத்தாற் போர்செய்யும்போதும் வஞ்ச மிருத்தலின் "கருவிச்சூது" என்றும், போரிலுஞ் சூதாட்டத்திலும் வென்றோர், தோற்றோரது பொருளைக் கொள்ளைகொள்ளுதல் வழக்கமாதலின் "கைப்பொருள்கவர்தல்செய்வார்" என்றுங் கூறினர்.

வடிக்கண்வேன் மார்பந் தைப்ப - என்பதை

**கலிங்கத்துப்பரணி**—"தங்குகண் வேல்செய்த புண்களைத்
தடமுலை வேதுகொண் டொற்றியுஞ்
செங்கனி வாய்மருந் தூட்டுவீர்
செம்பொ னெடுங்கடை திறமினோ"—என்பதனு னறிக. ()

தண்புனி நீரிற் றோய்த்த மலலிகைத் தாம நாற்றி
விண்படு மதியந் தீண்டும வெண்ணிலா முற்றத் திட்ட
வண்பளை யமளிமேற் கொண்டு காமனுங் காமுற றெய்தப்
பண்பல பாடி மைந்த ராவியைப பரிசில் கொளவார்.

(இ-ள்.) குளிர்ச்சிதங்கிய பனிநீரிலே தோய்த்துக் கட்டிய மல்லிகைமலர் மாலையைத் தொங்கவிட்டு, ஆகாயததிற்பொருந்திய சந்திரனை யளாவிய வெள்ளிய நிலாமுற்றத்திற் போட்டுள்ள தூயகுமஞ்சத்தினமேரில் வீற்றிருந்து, மன்மதனுந் தம்மை யிச்சித்து வந்தடையும்படி பலவகைப் பண்களைப் பாடிப் புருஷருடைய உயிர்களைப் பரிசிலாகப் பெறுவாகள் (அவவூாப் பரததையாகள்). எ-று.

திரிலோகத்திலுள்ளார் யாவரையும மயக்கவல்லவன் மன்மதனு யிருக்க, அவனுங் கேட்டு மயஙகததகக பணணொலிக்கு வேறு பரிசிலலையாகலின் "ஆவியைப் பரிசில்கொள்வார்" என்றூர். (சுக)

குருமபைவெம் முலையிற சிநது சாநகமுங குழலிற சிந்து
மருமபவிழ மாலைத தாது மளிநுகாந தெசசி லாகிப
பொருமபரிக்காலிற றாளாயப போயர மாதா மெயயு
மிருஙகுழற காடுஞ சூழபோ யியனமணம விழுஙகு மன்றே.

(இ-ள்.) (பரத்தையரது) தென்னஙகுருமபுபோனற வெவ்விய குயங்களி லிருந்து சிந்திய சந்தனமும், அளகத்திலிருந்து சிநதிய அருமபவிழ்ந்த மலர்களின் மகரந்தமும், வண்டுகளால் உண்ணப்படுதலாற் சேருகி, (வீதிவழியே செல்லும்,போர் செய்யத்தக்க குதிரைகளுடைய காலினால தூளபட்டு, (மேலநோக்கி யெழுந்து) சென்று, (தேவலோகததிலுள்ள) அரமபாஸ்திரீகளுடைய உடலிலும் பெரிய கூந்த லாகியகாட்டிலுஞ் சென்று சூழ்ந்து, (அவற்றிற்குரிய) இயற்கைமணங்களை யடக்கும்.

தெய்வப்பெண்களது உடலுங கூநதலும் இயற்கைமண முடையனவா யிருக்க இப் பொடி அவற்றின் மணததை யடக்கித தமதுமணத்தை வீசு மென்றூர்.

ஆலவா யுடையா னென்று மஙகயற கண்ணி யென்றுஞ்
சோலைவாழ் குயிலி னலலாா சொலலியாங கொருங்கு சொல்லும்
பாலவாங கிளிகள பூவை பன்முறை குரவ னோது
நூலவாய்ச சநதை கூட்டி நுவனமறைச சிறுரை யொத்த.

(இ-ள்.) சோலையில் வாழுங குயில்போன்ற (குரலோசை யுடைய) பரத் தையர் திருவாலவாயில வீற்றிருக்குஞ் சுநதரேசப்பெருமானென்றும், அங்கயற்கண்ணம் மை யென்றுஞ் சொல்லுவித்தபடி, ஒருசேர ஓதுகின்ற பாலைவிரும்பிப்பருகுங் கிளிப் பிள்ளைகளும் நாகணவாய் பறவைகளும, பலதரமும ஆசிரியன கூறும் வேதத்தை விரும்பிச் சந்தைகூட்டி யோதும் வேதியச்சிறுரை யொததிருந்தன. எ-று.

பரத்தையர் ஆசிரியராகவும், சிவநாமமுஞ் சத்திநாமமுமே வேதங்களாக வும், அவற்றைக் கற்றோதுங கிளிகளும் நாகணவாய்ப்புட்களும் வேதங கற்கும் வேதி யச்சிறுவராகவுங கொள்க.

சந்தைகூட்டலாவது ஆசிரியன சொன்ன வேதவாக்கியத்தை, அதனைக் கற்கு மாணாக்கர் யாவரும் ஒருசேரச் சொல்லுதல். (ருக)

ஒளவியமதார்வேற கண்ணா ரங்களிர் விரண டாத்துங்
திவ்விய கரும்புஞ் செவ்வாயுத் தித்திக்கு மொழியாலுந் தம்மிற்
தெவ்விய திற லாகிக் காளையர் செவிக்கா லோடி
வெவ்விய காமப் பைங்கூழ் விளைதர வளர்க்கு மன்றே.

(இ-ள்.) பொருமைக்குணம்பொருத்திய மதர்த்த வேற்படைபோலும் விழிகளையுடைய பரத்தையர் (தமது) அழகிய மாந்தளிர்போன்ற (மெல்லிய) விரல்களால் வாசிக்குந் தெய்வத்தன்மையுடைய வீணைநரம்பின் ஓசையும், செவ்விய வாயிலிருந்து வெளிப்பட்டு (செவிக்கு) இன்பஞ்செய்யுங் கண்டத்தின் ஓசையும், தம்முள் ஒன்றுபட்ட தன்மையுடையனவாய், வாலிபருடைய செவியாகிய கால்வழிச் சென்று (அவர் மனதில் முளைத்த) காமமாகிய பசிய பயிர்கள் விளைவெய்தும்படி வளர்க்கும். எ-று.

திவ்விய என்பது திவ்ய என்னும் வடமொழிச்சிதைவு. திவ்=சொர்க்கம், ய=பிறந்தது, என்பது பொருள்.

"பேரியாழ் பின்னு மகரஞ் சகோடமுடன்
சீர்பொலியுஞ் செங்கோடு செப்பினர்—தார்பொலிந்து
மன்னுந் திருமார்ப வண்கூடற் கோமானே
பின்னு முளவே பிற."—என்றபடியே, யாழானது பேரியாழ்-மகரயாழ்-சகோடயாழ் - செங்கோட்டியாழ் என நான்குவகைப்படும். அவற்றுள்,

"ஒன்று மிருபது மோரேழ்மேற் பத்துடனே
நின்றபதி னேறேழு நேடுங்காற்—குன்றாத
நால்வகை யாழிற்கு நன்னரம்பு சொன்முறையே
மேல்வகை நூலோர் விதி."—என்றபடி நால்வகையாழில், பேரியாழுக்கு நரம்பு இருபத்தொன்றும், மகரயாழுக்கு நரம்பு பதினேழும், சகோடயாழுக்கு நரம்பு பதினறும், செங்கோட்டியாழுக்கு நரம்பு ஏழுந் தொடுக்கவேண்டும். இவ்வகையாக நரம் பெண்ணித் தொடுக்கையில், "கொடும்புரி மயிர்தும்பு முறுக்கிவை நான்கும் - நடுங்கா மரபிற் பகையென மொழிப" என்றாராகலின், இக்குற்றங்களெய்தா வண்ணந் தொடுக்கவேண்டும்.

அவ்வாறு தொடுத்து, பண்ணல் - பரிவட்டணை - ஆராய்தல் - தைவரல் - செலவு - விளையாட்டு - கையூழ் - குறும்போக்குஆகிய கலைத்தொழி லெண்வகையாலிசையெழுப்பவேண்டும். அவையாவன :— பண்ணல் - பாடநினைத்த பண்ணுக்கு இணை - கிளை - பகை - நட்பான நரம்புகள் பெயருந்தன்மை மாத்திரையறிந்து வீக்குதல், பரிவட்டணை - அவ் வீக்கின நரம்பை அகவிரலாலும் புறவிரலாலுங் கரணஞ் செய்து தடவிப் பார்த்தல், ஆராய்தல் - ஆரோகண அவரோகண வகையால் இசையைத் தெரிதல், தைவரல் - அநுசுருதியை யேற்றுதல், செலவு - ஆளத்தியே நிரம்பப் பாடுதல், விளையாட்டு - பாடநினைத்த வண்ணத்திற் சந்தத்தை விடுதல், கையூழ்-வண்ணத்திற் செய்த பாடலெல்லாம் இன்பமாகப் பாடுதல், குறும்போக்கு - குடகச் செலவுந் துள்ளற்செலவும் பாடுதல் என்பன.

மேற்கூறிய எண்வகைத்தாகிய கலைத்தொழிலால் இசையெழுப்பி வார்த்தல் - வடித்தல் - உந்தல் - உழற்றல் - உருட்டல் - தெருட்டல் - அள்ளல்-பட்டையென்னும் எண்வகைப்பட்ட இசைக்கரணத்துடன் பாடவேண்டும். அவ்வாறு பாடுகையில்,

"கண்ணிமையா கண்டந் துடியா கொடிறசையா
பண்ணளவும் வாய்தோன்ற பற்றெரியா—வெண்ணிலிவை
கள்ளார் நறுந்தெரியற் கைதவனே காந்தருவர்
உள்ளாளப் பாட லுணர்."—என்ற உடற்குற்றநீங்க, யாழொலியும் மிடற்றொலியும் வேறுபா டின்றித் தம்முளொற்றுமைப்படச் சப்தசுரங்களும் பொருந்தப் பாடவேண்டும். சுரங்கள் :—குரல் - துத்தம்-கைக்கிளை - உழை-இளி-விளரி-தாரம்-என்பன இவை ஏழ்சுரமெனவும் வீணையி லேழ்நரம்பெனவும்படும். இவற்றுள் மிடற்

ளுல் குரல்-நாவினுல் துத்தம்-அண்ணத்தால் கைக்கிளை-சிரத்தால் உழை-நெற்றியால் இளி - நெஞ்சால் விளரி - மூக்கால் தாரம் பிறக்கு மெனவும், இவற்றிற் கோசையுவமை முறையே மயில் - இடபம் - ஆடு-கொக்கு - குயில் - குதிரை-யானை யெனவும், சுவையுவமை முறையே பால் - தேன் - கிழான் - நெய் - ஏலம் - வாழை - மாதுளங் கனி யெனவும், வாசனையுவமை முறையே மௌவல் - முல்லை - கடம்பு - வஞ்சி - நெய்தல் - பொன்னுவிரை - புன்னை யெனவும், அக்ஷரம் முறையே ஆ அ - ஈ இ, ஊஉ - ஏஎ - ஐஇ - ஓஒ - ஔஉ எனவும், இவற்றிற்கு மாத்திரை முறையே குரலுக்கு நான்கும், துத்தத்திற்கு நான்கும், கைக்கிளைக்கு இரண்டும், உழைக்கு மூன்றும், இளிக்கு நான்கும், விளரிக்கு மூன்றும், தாரத்திற்கு இரண்டுமெனவும் இவற்றினுல் எழுபாலை பிறக்கு மெனவும், இவ்வேழிசைக்கும் இறைவராவார் முறையே விச்சுவாமித்திரன் - சமதக்கினி - சந்திரன் - சூரியன் - கௌதமன் - காசிபன்-ஈசன் எனவும், இவற்றிற் குயிர் ஈசன் எனவும் இசைநூலார் கூறுவர்.

எழுபாலையின் பிரிவும் ஏனைய இசையிலக்கணமும் ஈண்டு விரிக்கப் பெருகு மாதலின் விடுத்தாம். இசைநூலிற் பரக்கக்காண்க. (௫௨)

கட்புல னுதி யைந்து முவப்புறக் கனிந்த காமம்
விட்புலத் தவரே யன்றி வீடுபெற் றவரும் வீழ்ந்து
பெட்பமுற் றமுதுங் கைப்பப் பெருங்குலக் கற்பி னூர்போ
னட்பிடைப் படுத்தி விற்கு நல்லவ ரிருக்கை யீதால்.

(இ-ள்.) கண் முதலிய ஐம்பொறிகளுங் களிகூரும்படி இன்பமுதிர்ந்த காமநுகர்ச்சியை, தேவலோகத்திலுள்ள தேவர்களே யல்லாமல், சீவன்முத்தர்களும் விரும்பி மயல் மிகுந்து தத்தமக்குரிய அமுதையும் வெறுப்ப, மேம்பட்ட குலத்திற்றோன்றிய கற்புடைமகளிர்போலத் தமது நட்பில் அகப்படச்செய்து, (தமது போகத்தை) விலைப்படுத்தும் பரத்தையர் வீதி இத்தகையது. எ-று.

விட்புலத்தவர் அமுது கைப்பவும், வீடுபெற்றவர் மோட்சங் கைப்பவும் அந் நகர்ப் பரத்தையர் நட்புப் பாராட்டித் தமது போகத்தை விற்பர் என்பது கருத்து.

கட்புலனுதி யைந்தும் உவப்புறல் என்பதை "கண்டுகேட் டுண்டுயிர்த் துற்றறியு மைம்புலனு - மொண்டொடி கண்ணே யுள" என்னுந் திருக்குறளானறிக.

வீடு=மோட்சம் ; இது முதனிலைத்தொழிற்பெயர். விடுதலென்னும் பொருளது. எனவே யிருவகைப்பற்றையுங் கொள்க.

உபசரித்தல் முதலிய காரணங்களால், தம்வசப்படுத்தி அன்பு பாராட்டிப் பொருள்பறிப்பராகலின் "பெருங்குலக் கற்பினூர்போல் நட்பிடைப் படுத்தி விற்கு நல்லவர்" என்றார். (௫௩)

## வேளாளர் வீதி.

வழுக்கறு வாய்மை மாண்புங் கங்கைதன் மரபின் வந்த
விழுக்குடிப் பிறப்பு மூவ ரேவிய வினைகேட் டாற்று
மொழுக்கமு மமைச்சாய் வேந்தர்க் குறுதிசூழ் வினையுங் குன்று
விழுக்கறு மேழிச் செல்வர் வளமறு கியம்ப லுற்றும்.

(இ-ள்.) குற்றமற்ற சத்தியச்சொல்லின் மேம்பாடும், கங்கை குலத்திற்றோன்றிய உயர்குடிப்பிறப்பும் (வேதியர்முதல்) மூன்றுவருணத்தவரும் ஏவிய தொழில்களைக் கேட்டு (அவை நிறைவேறச்) செய்யும் நன்னடக்கையும், மன்னவருக்கு மந்திரித் தொழின்மை பூண்டு பயன்தருஞ் செயல்களை ஆராய்ந்து முடிக்குந் திறங்களும், குறையாத குற்றமற்ற மேழியால் (எல்லோருக்கும் உண்டாக்கத்தக்க) செல்வ

த்தையுடைய வளப்பம் பொருந்திய வேளாளருடைய வீதியின் பெருமையைச் சொல்லுவாம். எ-று.

எல்லா வருணத்தவருக்கும் நன்மைதரத்தக்க சத்தியவாக்கை யுடைய மேன்மைய ராகலின், "வழுக்கறு வாய்மை மாண்பும்" எனவும், இவ் வேளாளர் குலத்தவர் கங்கையின்வழி தோன்றினவராகலின் "கங்கைதன் மரபில் வந்த" எனவும், "நகையீகை யின்சொ லிகழாமை நான்கும் - வகையென்ப வாய்மைக் குடிக்கு" என்ற தேவர் குறளின்படி, முகமன் ஈகை முதலிய நல்லொழுக்கங்கள் தொன்று தொட்டு விளங்குதலின் "விழுக்குடிப்பிறப்பும்" என்றும், வேதியர்முதலிய மூன்று வருணத்தவரையுந் தமது தோற்றத்துக்கேற்பத் தமது உழவால் நிலைபெறத் தாங்கி நிறுத்தலின் "மூவ ரேவிய வினைகேட் டாற்று மொழுக்கமும்" எனவும், இவ் வருணத்தவராகிய ஸ்ரீசேக்கிழார் உள்ளிட்டார் மன்னவருக்கு மந்திரித்தொழில் புரிந்தாராகலின் "வேந்தர்க்கமைச்சாய்" எனவும், அரசர் குடிநிழலில் வாழ்வோரது உயிர்களை நிலைபெறச் செய்தல் இவர்களது உழவுச்செய்கையே யாகலின், "உறுதிசூழ் வினை" எனவும், இவ்வகைய செயல்கள் யாவும் இடையூறின்றி எக்காலத்தும் நிகழ்வெய்தலின் "இழுக்கறும்" எனவும், இத்தகைய செயல்கட்குக் காரணம் மேழியுடையராதலானும், உமாதேவியார் தமக்குக்கொடுத்த எட்டுமரக்கு நெல்லைக் கொண்டு உலகமுழுவதும் புரக்குந்தன்மையுடைய ராதலானும் "மேழிச்செல்வர்" எனவுங் கூறினர்.

மூவர் என்றது பிராமணர், க்ஷத்திரியர், வைசியர்.

வழுக்கறு வாய்மை மாண்பு—என்பதை,

திருத்தொண்டர் புராண வரலாறு.

"மாறுகொடுபழைய னூர்நீலிசெய்தவஞ்சனையால்வணிகனுயிரிழப்பத் தாங்கள்
கூறியசொல்பிழையாதுதுணிந்துசெந்தீக்குழியிலெழுபதுபேருமுழுகிக்கங்கை
யாறணிசெஞ்சடைத்திருவாலங்காட்டப்பரண்டமுறநிமிர்ந்தாடுமடியின்கீழ்மெய்ப்
பேறுபெறுவேளாளர்பெருமையெம்மாற்பிரித்தளவிட்டிவளவெனப்பேசலாமோ."

என்பதனானும்,

விழுக்குடிப்பிறப்பு—என்பதை

ஏரெழுபது.

"அழுங்குழவிக் கன்புடைய தாயேபோ லனைத்துயிர்க்கும்
எழுங்கருணைப் பெருக்காள ரெளியரோ யாம்புகழ
உழுங்கொழுவிற் கருவீறி யுலகமுதற் கருவாகச்
செழுங்கமலத் தயனிவரைச் செய்துலகஞ் செய்வானேல்"—என்பதனானும்,

மூவரேவிய * வினை கேட்டாற்று மொழுக்கம்—என்பதை.

திருக்குறள்.

"உழுதுண்டு வாழ்வாரே வாழ்வார்மற் றெல்லாந்
தொழுதுண்டு பின்செல் பவர்."

"பலகுடை நீழலுந் தங்குடைக்கீழ்க் காண்பர்
அலகுடை நீழ லவர்."—என் வருவனவற்றானும்,

* ஏவியவினை என்றது தமக்கு இன்னது வேண்டுமென விரும்பிய வினை.

அமைச்சாய், வேந்தர்க்குறுதி சூழ்வினை—என்பதை,

**சேக்கிழார் சுவாமிகள் புராணம்.**

"அத்தகைய புகழ்வேளாண் மரபிற் சேக்கி-ழார்குடியில் வந்தவருண் மொழித்தேவர்க்குத், தத்துபரி வளவனுந்தன் செங்கோ லோச்சுந்-தலைமையளித் தவர்தமக்குத் தனது பேரும், உத்தமச்சோ ழப்பல்ல வன்று ெனன்னு - முயர்பட்டங் கொடுத்திடவாங் கவர்நீர் நாட்டு, நித்தனுறை திருநாகேச் சுரத்தி லன்பு - நிறைதலினுன் மறவாத நிலைமை மிக்கார்"

"வளவனுங்குண் டமண்புரட்டுத் திருட்டுச் சிந்தா-மணிக்கதையை மெய்யென்று வரிசை கூர, உளமகிழ்ந்து பலபடப்பா ராட்டிக் கேட்க - உபயகுல மணி விளக்காஞ் சேக்கி ழார்கண், டிளவரசன் றனைநோக்கிச் சமணர் பொய்ந்நூ-லிதுமறுமைக் காகாதிம் மைக்கு மற்றே, வளமருவு சின்றசிவ கதையிம் மைக்கு-மறுமைக்கு முறுதியென வளவன் கேட்டு"—என வருவதனுனும்,

எல்லோருக்கு முண்டாக்கத்தக்க செல்வர் என்பதை,

**கம்பர் ஏரெழுபது.**

"அலகிலா மறைவிளங்கு மந்தணரா குதிவிளங்கும்
பலகலையாந் தொகைவிளங்கும் பாவலர்தம் பாவிளங்கு
மலர்நிலாந் திருவிளங்கு மழைவிளங்கு மனுவிளங்கும்
உலகெலா மொளிவிளங்கு முழவருழு முழவாலே."—எனவும்,

உமாபதிசிவாசாரியார்

"காராள ரணிவயலி லுழுது தங்கள் கையார நட்டமுடி திருந்தி விந்தப்
பாராளுந் திறலரசர் கவித்தவெற்றிப் பசும்பொன்மணி முடிதிருந்துங் கலப்பைபூண்ட
ஏராலெண் டிசைவளர்க்கும் புகழ்வேளாள ரேரடிக்குந் தொறுகோலாற் றரணி யாளச்
சீராரு முடியரச ரிருந்துசெங்கோல் செலுத்துவர்வே ளாளர்புகழ் செப்ப லாமோ"—

எனவுங் கூறியவற்று னறிக.

உமாதேவியாருக்குச் சிவபெருமான் கொடுத்த ஈராழி நெல்லை, உமாதேவியார் தம தருமைத் திருக்கரத்தினுற் கொடுக்கப்பெற்ற வேளாளர்களை அவ்வம்மையார் நோக்கி "மைந்தர்காள்! இந் நெல்லைக் கொண்டு உலகிலுள்ளாரைப் புரக்க" என வரமளித்து, "உங்கட்கு இந்நிலவுலகமே விளைநிலம் சமுத்திரமே ஏரி - வருணராசனே மடைமாறுவோன் - கற்பகவிருக்ஷமே கலப்பை-பலராமனே ஆள்' என்று திருவாய்மலர்ந்தருளின ரென்பது புராணவரலாறு. இதனை,

"இமயமலையரயன்மகடமுவக்கச்சியேகம்பர்திருமேனிகுழைந்தனான்று
சமயமவையாறினுக்குந்தலைவிக்கீசர்தந்தபடியெட்டிழக்கீராழிநெல்லு
முமைதிருச்சூடகக்கையாற்கொடுக்கவாங்கியுழவுதொழிலாற்பெருக்கிபுலகமெல்லாந்
தமதுகொழுமிகுதிகொடுவளர்க்கும்வேளாண்டலைவர்பெரும்புகழுலகிற்சாற்றலாமோ
விளைகழனிபூலோகமுழுதுமேரிவிரிதிரைநீர்க்கடல்வருணன்கம்புகட்டி
ளர்கலப்பைதருசுமையாள்சுவேதராமன்கிடாமறலிவசத்தீசன்வசத்தானென்றிங்
களவறிந்தாண்டாண்டுதொறும்விதைதப்பாமலளக்குமவள்கச்சியறம்வளர்த்தமாதா
வொளிபெருகுகொழுமிகுதியெறும்பீறுனவுயிரனைத்துந்தேவருமுண்டுவப்பதன்றே"

என வருவனவற்று னறிக.

ஈண்டு இவர்கள் புகழ்முழுவதையும் விளக்குவதாயின் மிகவும் பரக்குமென்று விடுத்தாம். வேண்டுவோர் மரபாலசூடாமணியானும், மகாகவியாகிய கம்பர் கூறிய ஏரெழுபது - திருக்கைவழக்கங்களானு மறிக. (ருச)

வருவிருந் தெதிர்கொண் டேற்று நயனுரை வழங்கு மோசை
யருகிருந் தடிசி லூட்டி முகமனன் கறையு மோசை
யுரைபெறு தமிழ்பா ராட்டு மோசைகேட் டுவகை துள்ள
விருநிதி யளிக்கு மோசை யெழுகட லடைக்கு மோசை

(இ-ள்.) (தம்மைநோக்கி) வருகின்ற விருந்தினரை எதிர்சென்று இன்சொல்லாலுபசரிக்கும் ஓசையும், (அவர் வந்தபிறகு) சமீபத்திலிருந்து (அறுவகைச்சுவையோடுகூடிய) உணவுகளையுண்பித்து (இடையிடையே) உபசாரவார்த்தைகளை மிகுதியாகக்கூறும் ஓசையும், சொற்சுவைபொருந்திய தமிழ்க்காவியங்களைப் பாடிப் பிரசங்கிக்கும் பிரசங்கத்தைக்கேட்டு இன்பம் அதிகரிக்க அளவில்லாத செல்வத்தை (அக்கவிஞருக்கு) கொடுக்கின்ற ஓசையும், சத்தசமுத்திரங்கள் (செய்கின்ற ஓசையை யும்) கீழ்ப்படச்செய்யும் ஓசையாம். எ-று. (ருரு)

அருந்தின ரருந்திச் செல்ல வருந்துகின் றுரு மாங்கே
யிருந்தினி தருந்தா நிற்க வின்னமு தட்டுப் பின்னும்
விருந்தினர் வரவு நோக்கி வித்தெலாம் வயலில் வீசி
வருந்திவிண் ணோக்கு மோரே ருழவர்போல் வாடி நிற்பார்

(இ-ள்.) புசித்த விருந்தினர் புசித்துச் செல்லவும், புசிக்கின்ற விருந்தினர் அவ்விடத்தில் களிப்போடிருந்து புசிக்கவும், (மேலும்) இனிய சோற்றைச் சமைத்து மேல்வரும் விருந்தினரோடு (தாம் இருந்துண்டும்) அவ்விருந்தினர் (வராதகாலத்தில்) அவர் வரவுபார்த்து, (தம்மிடத்துள்ள) விதைகள் முழுவதையும் வயலில் விதைத்து மழை (வருஷித்தலைப்) பார்த்து வருந்திநிற்கின்ற ஓரேருழவர்போல முகம்வாடி (எதிர்நோக்கியும்) நிற்பார்கள். எ-று.

ஓரேருடையவர் தமது கழனிகளுக்குத் தாமே பலகாற் செல்லுதலும் ஆண்டுச் செய்யவேண்டிய தொழில்களைத் தாமே மேற்கொண்டு மழைவளம் பெருகுதலை எதிர்நோக்கி மனம் வருந்துதலு முடையராகலின் ஓரேருழவரை யுவமித்தார்.

" அருந்தினர்****வரவுநோக்கி" என்றதை "செல்விருந் தோம்பி வருவிருந்து பார்த்திருப்பான்-நல்விருந்து வானத் தவர்க்கு" என்னுந் திருக்குறளானறிக. ()

வானமுந் திசையும் பொங்கும் புகழ்மையும் வானம் பேணு
ஞானமும் பொறையுங் குன்று நன்றியு மூக்கப் பாடுந்
தானமுங் கொடையு மன்பும் வரிசையுந் தகைசா னண்பு
மானமுந் தவஞ்செய் தீன்ற மகவுபோல் வளர்க்க வல்லார்.

(இ-ள்.) தேவருலகத்திலும் அட்டதிசைகளிலும் பரந்து விளங்குங் கீர்த்தியும், தேவர்களாலும் விரும்பத்தக்க உண்மையறிவும், பொறுமையும், குறைவில்லாத செய்ந்நன்றியும், மனோதிடமும், தானமும், வள்ளன்மையும், அன்பும் நல்லொழுக்கமும் பெருமைமிகுந்த நட்பும், மானமும் (ஆகிய இவற்றை) தவஞ்செய்து ஈன்ற (தமது அருமை) மைந்தர்களைப்போல வளர்க்க வல்லவராவார்கள். எ-று.

ஞானம் - பிறப்பு வீடுகளையும் அவற்றின் காரணங்களையு மறியும் மெய்யுணர்ச்சி. பொறை - பிறர் தமக்குச் செய்த தீமையை மனங்கொண்டு தாமு மவர்கட்குச் செய்யாது மனம் பொறுத்தல். நன்றி-தமக் கொருவர் செய்த நன்றியை மறவாமை. ஊக்கப்பாடு - எடுத்தகாரியத்தில் மனஞ்சோராமை. தானம் - செல்வ நிலையாமை கருதி, வேதியர் முதலானோர்க்குத் தானங் கொடுப்பது. கொடை-எளியவருக்கு ஈதல். அன்பு - சுற்றத்தாரிடத்தும் பிற வுயிர்களிடத்தும் அருளுடைமை, வரிசை-தத்தமக்

குரிய நிலைமையினின்று தவறுதிருத்தல். தகைசால்நண்பு - பெரியாரைத் துணைக்கோடல். மானம்-தமக்குரிய நிலைதவறாமையும் ஊழ்வினைவசத்தால் தவறு வந்தவழி உயிர்விடுதலுமாம்.

இத்தகைய செயல்களெல்லாம் வேளாளர் தமது மரபிற்கேயென்றென்றும் உரிமையாகக் கொண்டு குறைவெய்தாது நடந்துவருவோராதலின் *** தவஞ் செய்தீன்ற மகவுபோல் வளர்க்கவல்லார் என்றார். (௩௭)

## வணிகர் வீதி.

புல்லியோர் பண்டங் கொள்வார் வினவினப் பொருடம் பக்க
லில்லெனி னினமா யுள்ள பொருளுரைத் தெதிர்ம றுத்து
மல்லதப் பொருளுண் டென்னின் விலைசுட்டி யறுத்து நேர்ந்துஞ்
சொல்லினு மிலாபங் கொள்வார் தொன்மர பிருக்கை சொல்வாம்.

(இ-ள்.) தம்பால் வந்து ஒரு பொருளை வாங்குவோர் (ஒரு பண்டங்) கேட்டால், அப்பொருள் தம்பால் இல்லையானால் அதற்கினமாயுள்ள (பிறிதொரு) பண்டத்தை யுண்டென்றுகூறி, (அச்சொல்லால்) முன் சொன்னதை இல்லையென்று விடையளித்தும், அல்லது அவர் கேட்ட பொருளே தம்மிடத்தில் இருக்குமாயின் விலையிவ்வளவென்றுவரையறுத்தும்,(அதனைக்) கொடுத்தும், (பொருளிலன்றித்தமது) சொல்லிலும் ஊதியந்தேடும் வணிகரது தொன்றுதொட்டுள்ள மரபுகளின் உறைவிடத்தைக் கூறுவாம். எ-று.

மாடம்-பண்டசாலை.

"தம்பா லில்ல தில்லெனி னினனு - முள்ளது கூறிய மாற்றியு முள்ளது - சுட்டியு முரைப்பர் சொற்சுருங் குதற்கே" என்றபடி ஒருவன் உழுந்துளதோ வணிகீர் எனின், அஃது தம்பாலிலதாயின் துவரையுண்டென்றும் அல்லது அஃதுளதாயின் இன்னவிலையென்றும், அதற்கினமாகிய பிறிதொருபொருளுமுளதாயின் உழுந்துந் துவரையுங் கடலையு முண்டென்றுங் கூறுதல் வழக்கென உணர்த்தினர். (௩௧)

நீல வேதிமேற் பளிங்கினு னிழற்சுவர் நிறீஇமின்
கால வாலிய வைரவாட் கானிரைத் தும்பர்க்
கோல வாணிலாச் சொரிமணி குயிற்றிவெண் மாட
மாலை போல்வகுத் தியற்றின பீடிகை மறுகு.

(இ-ள்.) (அம்மதுராபுரியின்) கடைவீதிகள் நீலரத்தினத்தாற் செய்த திண்ணையின்பேரில் பளிங்குக்கற்களால் பிரகாசத்தையுடைய சுவர்த்தலங்களை நிறுத்தியொளிவீசும்படி வெண்மைதங்கிய வைரரத்தினத்தாலாகிய பிரகாசத்தையுடைய தூண்களை வரிசையாக நட்டு (அவற்றின்) மேலே அழகிய சந்திரிகை சிந்தும் முத்துக்களைப் பதித்து (பல்வகைமலராலாகிய) மாலைபோல வெண்மைதங்கிய மாடங்கள் (வரிசையாக) வகுத்துக் கட்டப்பட்டுள்ளன. எ-று.

வேதி = திண்ணை. பீடிகைமறுகு = கடைவீதி.

இயற்றின என்பதில் படு விகுதி தொக்குநின்றது. இஃது செயப்பாட்டு வினைமுற்று. (௩௨)

திரைய ளிப்பவுந் திரைபடு தீம்புனல் வேலிக்
கரைய ளிப்பவுங் கரையிலா னிரைபடு கானத்
தரைய ளிப்பவுந் தரைகிழித் தூன்றிவிண் டாங்கும்
வரைய ளிப்பவும் வாங்கிவாய் மடுப்பன மாடம்.

(இ-ள்.) அலைகள் பொருந்திய கடல் (ஆகிய நெய்தனிலங்கள்) தந்த பொருள்களும், அலைகளையுடைய இனிய நீர்நிலங்களாகிய மருதநிலங்கள் தரும் பொருள்களும், எல்லையில்லாத பசுமந்தைகள் பொருந்திய முல்லைநிலங்கள் தரும் பொருள்களும், பூமியைக்கிழித்து வேரூன்றி ஆகாயத்தைத் தாங்கும் மலை (ஆகிய குறிஞ்சி நிலம்) தரும் பொருள்களும் (ஆகிய இவற்றை) வணிகரது மாடங்கள் வாங்கித் தம்மிடத்தில் நிரம்பச்செய்வன. எ-று.

"தரைகிழித் தூன்றிவிண்டாங்கும்வரை" என்றது கீழும் மேலுமாக பாதலலோகமட்டும் விண்ணுலகமட்டும் ஆழ்ந்தும் உயர்ந்தும் ஊடுருவி நிற்றலின்.

கடல்படுதிரவியம் ஐந்து. அவை - உப்பு முத்து பவளம் சங்கு ஓக்கோலை என்பன, மருதநிலம்படுதிரவியம் ஐந்து. அவை செந்நெல்-சிறுபயறு கரும்பு வாழை செவ்விளநீர் என்பன. முல்லைநிலம்படுதிரவியம் ஐந்து. அவை-தேனடை தேன் அரக்கு மயிற்பீலி நாவி யென்பன. மலைபடுதிரவியம் ஐந்து. அவை - மிளகு கோட்டம் அகில் தக்கோலம் இலவங்க மென்பன. (சுO)

சரிய கம்பலக் கிடுகின்மேற கதிர்விடு பவளத்
தெரியல பொன்னரி மாலிகை தெண்ணிலாச சொரியும்
பரிய நித்தில மணிவட மரகதப் பசுநதாா
விரிய விட்டன விந்திர வின்னிரை யனைய.

(இ-ள்.) கருமையாகிய கம்பலத்தைப் பரப்பிய சட்டத்தின்பேரில் ஒளி வீசும் பவளமாலையும் பொன்னரிமாலையுந் தெள்ளிய சந்திரிகை வீசும் பருத்த முத்து மாலையும் பசுமைதங்கிய மரகதமாலையும் (ஆகிய இவ்விரத்தினமாலைகளை) ஒளி பரவும் படி (வரிசைவரிசையாய்ப்) பரப்பியிருத்தல் (கரிய மேகத்தினிடையே விளங்கும்) இந்திரவில்லை யொத்திருந்தன. எ-று.

கரியகம்பலம் மேகமாகவும், பவளம்-பொன்னரி-நித்திலம் மரகதமாலைகள் இந்திரதனுசாகவும் உவமித்துக் கூறினர். (சுக)

நாள்க ளுங்குளிர் திங்களு ஞாயிறு மேனைக்
கோள்க ளுங்குளிர் விசும்பொரீஇக் குடிபுகுந் தாங்கு
வாளி டந்திராப் பகலொளி மழுக்கலால வணிக
ராளக லம்பகா வீதிகை துறக்கநா டனைய.

(இ-ள்.) நட்சத்திரங்களும், தண்ணிய சந்திரனும், சூரியனும் (அவரொழிந்த மற்றைக் கிரகங்களும், குளிர்ச்சி பொருந்திய ஆகாயத்தினீங்கி (இந் நிலவுலகத்தில்) குடிபுகுந்ததுபோல, ஒளியைவீசி இரவினொளியையும் பகலினொளியையும் அடக்குதலால், யாவரும் அணியத்தக்கஆபரணங்களை வணிகர்கள் விற்குங் கடைவீதிகள் தேவருலகத்தை யொத்திருந்தன. எ-று.

கடைவீதிகளில் பல்வகை ஆபரணங்களு மிருத்தலை "நாள்களுங் கோள்களுங் குடிபுகுந்தாங்கு" எனவும், அவ்வாபரணங்களின் ஒளியால் இரவும் பகலும் புலப்படாமையின், அவை யிரண்டு மற்ற "துறக்கநாடு" எனவும், திங்களும் ஞாயிறு மெனக் கூறியதனால் அவற்றிற்கு இனமாகிய "ஏனைக் கோள்களும்" என்றார். (சுஉ)

பன்னி றத்தபல் பெருவிலைப் படடெலா மவண
வன்ன பட்டின்மேம் படுவிலைப் பருத்தியு மவண
வெந்நி லத்தரும் பொருள்பதி னெழுபுல வணிகர்
மன்னி ருக்கையு மரும்பெறல் வுளனெலா மவண.

(இ-ள்.) பல வர்ணங்களையுடைய பலவகைப்பட்ட விலையுயர்ந்த பட்டாடைகளின் வகைகளெல்லாம் அவ்விடத்திலுள்ளன. அத்தன்மைத்தான பட்டாடைகளு

க்கும் அதிகமாகிய விலையையுடைய பருத்தி நூலாடைகளும் அவ்விடத்தி லுள்ளன. எந்நாட்டிலுங் கிடைத்தற்கரிய பல பொருள்களும் (தமிழ்நில மொழிந்த) பதினேழு நிலங்களிலுமுள்ள வணிகர்கள் நிலைத்திருக்கின்ற வாசஸ்தானங்களும் அடைதற்கரிய எல்லா வளங்களும் அவ்விடத்திலுள்ளன. எ-று.

பாட்டின் என்பதி னிறுதியில் உயர்வுச் சிறப்பும்மை விகாரத்தால் தொக்கது. பட்டு-பருத்தி யென்பவை கருவியாகு பெயர்கள்.

பல பண்டங்களென்றது சத்த ஸ்பரிச ரூப ரச கந்தங்களால் விரும்பக் கூடியவை. (கூங)

மரக தத்தினு லம்மிகள் வைரவா ளுலக்கை
யுரல்கள் வெள்ளியா லடுப்பகில் விறகுலை பனிநீ
ரரிசி முத்தழல் செம்மணி யடுகலன் பிறவு
மெரிபொ னுலிழைத் தாடுப விவர்சிறு மகளிர்.

(இ-ள்.) இவ்வணிகரது சிறுமகளிர்கள் மரகதரத்தினங்களால் அம்மிகளும் (குழவிகளும்), ஒள்ளிய வைரரத்னங்களாலாக்கிய உலக்கைகளும் உரல்களும், வெள்ளியாற்செய்த அடுப்புகளும், அகிற்கட்டையே விறகும், பனிநீரோ உலைநீரும், முத்தே அரிசியும், செவ்விய மாணிக்கமே நெருப்பும், பிரகாசிக்கின்ற செம்பொன்னு லாக்கிய சமையற்பாத்திரங்களும் பிற பொருள்களுமாகக்கொண்டு விளையாடுவோர்கள். எ-று.

"ஒருமொழி யொழிதன் னினங்கொளற் குரித்தே" என்றதனல் அம்மிகள் என்பதற்கேற்ப, குழவிகளும் என்றும். (கூச)

செயிரிற் றீர்ந்தசெம் பொன்னினுற் றிண்ணிலைக் கதவம்
வயிரத் தாழுடைத் தவர்கடை வாயிலு மென்று
லயிரிற் றீர்ந்தபே ரறிஞரு மனையர்தஞ் செல்வத்
தியலிற் றுமென வரையறுத் திசைப்பதை யெவனே.

(இ-ள்.) அவ்வணிகர்களது (வீட்டின்) கடைவாயிலுங் குற்றத்திலிருந்து நீங்கிய செவந்த பொன்னுற்செய்த வலிய நிலையையுடைய கதவு, வைரத்தினுற்செய்த தாழ்க்கோல் (இவற்றை) உடையது என்றல், சந்தேகத்திலிருந்து நீங்கிய மூதறிவினையுடையாரும் அவ்வணிகமாந்தரது செல்வப்பெருக்கம் இத்தகையினதென்று அளவுபடுத்திச்சொல்வது எப்படி முடியும் (முடியாது). எ-று.

பொன் ஆடகம்-கிளிச்சிறை-சாதரூபம்-சாம்பூநதம் என நால் வகைத்து. இவற்றுள் செம்பொன்னென்றது சாம்பூநதமெனக் கொள்க.

அவ்வணிகரது கடைவாயிலிலுள்ள நிலையுங் கதவுந் தாழ்கோலும் பொன்னுலும் வச்சிரத்தாலுஞ் செய்யப்பட்டன வாகலின் அவர் செல்வத்தின்வீறு பேரறிஞருங் கூறுவது அருமையென்றார். (கூரு)

எரிக்கு றும்பொறி யனையசெம் மணிச்சுட ரொறிபொன்
வரிச்சு ரும்புநேர் மரகத முத்துவாள் வைரந்
தெரிப்ப ருந்துகிர் சிந்தின செல்லுநா ளொன்றுக்
கரிப்பர் கையகப் படுவன வாயிரத் திரட்டி.

(இ-ள்.) சிறிய தீப்பொறி யொத்த செவ்விய மாணிக்கங்களும், பிரகாசத்தை வீசும் பொற்பொடிகளும், கீற்றுகளையுடைய வண்டுகள் போன்ற மரகத ரத்தினங்களும், முத்துமணிகளும், ஒளிபொருந்திய வயிரக்கற்களும், விலைமதித்தற்கரிய பவளங்களும் (ஆகிய வணிகர் தெருக்களில்) சிந்திப்போன பொருள்கள், அரிப்பாளர்களது

(அரிகருவியால்) அரிக்கச்செல்லும் ஒவ்வொரு நாட்களுக்கும் (அவர்கள் கையில்) அகப்படும் பொருள்கள் வகையொன்றுக்கு இரண்டாயிரங்களாம். எ-று.

சிந்தின-வினையாலணையும் பெயர். எ-று. (கூகூ)

பாய தொன்மரப் பறவைபோற் பயன்கொள்வான் பதினெண்
டேய மாந்தருங் கிளந்தசொற் றிரட்சிதான் றூய
மாயை காரிய வொலியன்றி வான்முதற் கருவி
ஞய காரிய வோசையே யாய்க்கிடந் தன்றே.

(இ-ள்.) பரந்துள்ள ஆலமரத்திற்பொருந்திய (பழங்களைப் புசிக்கும்படி வந்துசேர்ந்த) பறவைகளைப்போல, (அவ்வணிகர் கடைவீதியிற் பொருந்திய) பொருள்களைக் கொள்ளும்படி, (திரவிட முள்ளிட்ட) பதினெண்ணிலத்து மாந்தர்களும் (ஒன்று கூடி) பேசுகின்ற சொல்லோசைகளின் கூட்டமானது சுத்தமாயா காரிய ஒலி போலல்லாமல் ஆகாய முதலிய பஞ்சபூதகாரணங்களாலுண்டாகிய காரிய ஓசையாயிருந்தது. எ-று.

சுத்தமாயாகாரிய ஒலி எழுத்துக்களின் வடிவமாய்ப் பொருள் தருவது.

பதினெண்ணிலத்துச் சொல்லோசை புறத்திற் கேட்போர்க்குப் பொருள் தராமையால் "மாயாகாரிய ஒலியன்றி" எனவும், ஆகாயம் சத்தவடிவமாயிருத்தலும் வாயுவிறுவிறெனலும், தேயு சடசடவெனலும் அப்பு சலசலவெனலும், பிருதிவி கிண் கிண்ணெனலுமாகி, பொருள்தரும் எழுத்தின் வடிவமல்லாமையால் "வான்முதற் கருவிஞய காரிய ஓசையேயாய்க் கிடந்தது" எனவுங் கூறினர்.

மாயாகாரிய ஒலியென்பதை "மொழிமுதற்காரண மாமணுத்திரளொலி - எழுத்தது முதல்சார் பெனவிரு வகைத்தே" என்னுஞ் சூத்திரத்தானறிக. (கூஎ)

ஒழிவில் வேறுபல் பொருளுமே ழுலோகமும் பிறவும்
வழுவில் வேறுபல் கலைகளு மரபுளி வகுத்துத்
தழுவி வேண்டினர் தாங்கொளத் தக்கவா பகரா
வழிவி லாமறை போன்றன வாவண வீதி.

(இ-ள்.) (வணிகரது) கடைவீதிகள், குறைதலில்லாத பல்வகைப்பட்ட வெவ்வேறு பண்டங்களையும் (பொன் வெள்ளி முதலிய) எழுவகை லோகங்களையும் பிற பொருள்களையும், குற்றமில்லாத வெவ்வேறு வகைப்பட்ட பல ஆடைகளையும் வரிசையாற் பரப்பி, விரும்பிவந்தோர் வாங்கும்படி தக்கபடி விலை கூறுதலால் [ஒழிதலில்லாத (அறமுதலிய) வேறுபட்ட பலபொருள்களையும், (ஈர்) ஏழுலோகங்களின் இயற்கையையும், பிற அண்டங்களின் இயல்புகளையும், குற்றமில்லாத வெவ்வேறு வகைப்பட்ட அறுபத்துநான்கு கலைஞானங்களையும், முறைப்படி வகுத்து (தன்னை) விரும்பி வந்தடைந்தவர்கள் கைக்கொள்ளும்படி அவரவர்களறிவிற்குத் தக்கபடி பொருள்களைப் புலப்படுத்தி] என்றும் நிலைபெற்ற வேதத்தை யொத்திருந்தன. எ-று.

ஏழுலோகம் = சத்ததாதுக்கள்; ஏழு + லோகங்கள். கலை = ஆடை; அறுபத்து நான்கு கலைஞானம். ஆறுபகரா = அவ்வவருக்குத் தக்கபடி விலை கூறி; "கொள்வோன் கொள்வகையறிந்து அவனுளங்கொள" என்ற முறைப்படி போதித்து.

உளி மூன்றாம்வேற்றுமையுருபு.

இச்செய்யுள் செம்மொழிச் சிலேடையணி. (கூஅ)

திக்கெ லாம்புகழ் மதுரையைச் சிவபுர மாக்கி
முக்க ணாயக னரசுசெய் முறையினுக் கேற்பத்

தக்க தோழனோ டளகைமா நகருறை தயக்க
மொக்கு மந்நகர் வாணிக ருறைபுள்சூழ் நியமம்.

(இ-ள்) அஷ்டதிக்குகளிலுள்ள எல்லோரும் புகழத்தக்க மதுராபுரியைச் சிவபுரமாக்கி, திருநேத்திரங்களையுடைய சிவபெருமான் அரசியல் நடாத்திய முறைமைக்கு ஏற்ப (அத்தலைவனுக்கு)த் தகுதியாகிய குபேரனென்னுந் தோழனோடு சிறப்புற்ற அளகாபுரி (அம்மதுராபுரிக்கருகில்) வந்திருக்குந் தோற்றத்தை, அம்மதுரை நகரில் வணிகரது வாசஸ்தானத்தைச் சூழ்ந்த கடைவீதிகள் ஒத்து விளங்கும். எ-று.

சிவபெருமான் சௌந்தர பாண்டியராக அரசுசெய்தபோது அம்மதுரை சிவபுரமெனப் பெயரெய்தியது. ஆண்டுள்ள வணிகரது கடைவீதி குபேரனது அளகாபுரி போன்றது.

நியமம்=கடை வீதி. (சுசு)

## மன்னவர் வீதி.

ஒற்றை யாழியா னுலகிரு ளொதுக்குமா போலச்
செற்ற நேமியாற் கலியிரு டின்றுகோ லோச்சி
மற்ற டம்புய வலியினுன் மாறடு சீற்றக்
கொற்ற மன்னவர் விழுக்குடிக் கோமறு குரைப்பாம்.

(இ-ள்.) ஒற்றைச்சக்கரம்பூண்ட தேரையுடைய சூரியன் உலகத்திலுள்ள புறவிருளை யொழிக்கும்வகைபோல, (கொடியோரிடத்து) கோபத்தையுடைய ஆக்கினைசக்ரத்தினால் (தமது செங்கோலின்கீழ் வாழுங் குடிகளிடத்துள்ள) துன்பமாகிய இருளையகற்றி (மனுநூலின்படி) அரசுமுறை நடத்தி மற்போர் செய்யும் பெரிய தோள் வலிமையினாற் பகைவரைக் கொல்லுங் கோபத்தையும் வெற்றியையுமுடைய அரசர்களது மேம்பட்ட குடியிலுள்ளோர் வசிக்கும் இராசவீதியின் சிறப்பை (இனிச்) சொல்வாம். எ-று.

"நேமியால் கலியிரு டின்று" என்றது, அரசர், தம்மாலும் தமது பரிசனத்தாலுங் கள்வராலும் பிற வுயிர்களாலுங் குடிகளுக்கு வருந் துன்பத்தை யொழிக்க வேண்டுமென்பதாம். இத்துன்பங்களிலும் பெருந்துன்பம் விளைப்பவர் பகைவராதலின், "மாறடு சீற்றம்" என்றார். இதனை,

திருத்தொண்டர்புராணம் - திருவாரூர்ச்சிறப்பு.

"மாநிலங்கா வலனாவான் மன்னுயிர் புரக்குங்கால
தானதனுக் கிடையூறு தன்னாற்றன் பரிசனத்தால்
ஊனமிகு பகைத்திறத்தாற் கள்வரா லுயிர்தம்மால்
ஆனபய மைந்துந்தீர்த் தறங்காப்பா னல்லனோ."—என்னுந் திருவிருத்தத்தா னுணர்க. (எ0)

தரங்க வேலைக டம்மையே தாளுறப் பிணித்துத்
துரங்க மாவெனத் தொகுத்தமந் துறைபல வருவி
யிரங்கு மோரறி வுயிர்வரை யாவையும் பெயர்த்து
மரங்கொல் யானைபோற் பிணித்தகூ டம்பல மன்னோ.

(இ-ள்.) (அவ் விராசவீதியில்) அலைகள் பொருந்திய சத்த சமுத்திரங்களையே கால்களிற் பொருந்தக் கட்டி, குதிரைகள்போலக் கூட்டியிருக்கின்ற இலாயங்கள் பல வுள்ளன. அருவியாறுகள் ஒலிக்கும் ஓரறிவுயிர்களாகிய மலைகளெல்லாவற்றையும் (அடியோடு) பெயர்த்து, கட்டுத்தறியை முறிக்கும் யானைகள்போலக் கட்டியிருக்கும் யானைக்கூடங்கள் பல் வுள்ளன. எ-று.

மந்துறை=குதிரைகட்டும் இலாயம். கூடம்=யானைகட்டுமிடம். (எக)

மழுக்கள் வச்சிரங் கார்முகம் வாளிமுக் குடுமிக்
கழுக்கள் சக்கர முடம்பிடி கப்பண நாஞ்சி
லெழுக்க ளுந்தகம் பலகைதண் டிவைமுதற் படையின்
குழுக்க ளோடிகல் விந்தைவாழ் கூடமும் பலவால்.

(இ-ள்.) மழுவாயுதங்களும், வச்சிராயுதங்களும், வில்லுகளும், அஸ்திரங்களும், முத்தலைவேலாகிய சூலப்படைகளும், சக்ராயுதங்களும், வேல்களும், கைவேல்களும், கலப்பைகளும், வளைதடிகளும், வாளாயுதங்களும், கேடகங்களும், தண்டாயுதங்களு மாகிய இவை முதலான ஆயுதத் தொகுதியுடன் போர்புரியும் துர்க்கை வாழும் ஆயுதசாலைகளும் (அரசர் வீதிகளிற்) பல வுள்ளன. எ-று.

துர்க்கை வாழ்தற்குரிய இடம் ஆயுதசாலையாதலின் "இகல் விந்தைவாழ் கூடம்" என்றார். (எஉ)

தொளைய கல்லைமா லெனக்கொண்டு சுழற்றியுஞ் செந்து
ளளையும் யானைபோற் பாய்ந்துமல் லாற்றியு மாற்றல்
விளைய வாளொடு கேடகம் வீசியும் வென்றி
யிளைய ராடமர் பயில்வன வெண்ணிலாக் கூடம்.

(இ-ள்.) தொளையையுடைய கல்லைத் திருமால் (கோவர்த்தனகிரியைக் கையிலேந்தியது) போலக் கையிலேந்தி (அதனைச் சக்கரம் சுழற்றுவதுபோல) சுழற்றியும், செந்துளிற் புரண்டு கலந்த யானைகளைப்போல (செந்நிலத்து)ப் பாய்ந்து மற்போர் செய்தும், பராக்கிரம மிகும்படி வாளாயுதத்தையுங் கேடகத்தையும் (பிடித்து ஒருவர் மேல் ஒருவர்) வீசியும், வெற்றியையுடைய வாலிபர் போர்த்தொழில் புரியும் இடங்களாகிய எண்ணிறந்த கூடங்கள், (அவ்வீதியில்) உள்ளன. எ-று.

திருமால் கோவர்த்தன மேந்தியது—என்பது.

இந்திரன் பகைமை கொண்டு விடுத்த சத்தமேகங்களையுந் தடுத்து, பசுந்தையைக் காக்கும்படி, கண்ணபிரான் கோவர்த்தன கிரியைக் குடையாகப் பிடித்தா னென்பது. இதனை,

கூர்மபுராணம் - கண்ணனவதரித்த படலம்.

"காரேழுமெ ழுந்தோமொழு கடல்வற்ற முகந்தாங்
கோர்தாரைநல் லயிராவண முயர்நீள்கர மொப்ப
வாராவுமிழ் தலுமானினந் துயராதணி துளவோன்
பேராவுயர் கோவர்த்தனங் குடையாமெனப் பிடித்தான்"—என்பதனுணர்க.

அறுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

தேசவிர் நீல மாடஞ் செம்மணிச் சென்னி மாடங்
காசறு கனக மாடஞ் சந்திர காந்த மாட
மாசற விளங்கு மின்ன மாடநீண் மாலை கூடற்
பாசிழை மடந்தை பூண்ட பன்மணிக் கோவை யன்ன.

(இ-ள்.) ஒளிவிளங்கும் நீலரத்தினத்தா லாக்கிய மாடங்களும், செவ்விய இரத்தினங்களாற் கட்டிய சிகரங்களையுடைய மாடங்களும், குற்றமற்ற பொன்னாற் செய்த மாடங்களும், சந்திரகாந்தக் கற்களாற் சமைத்த மாடங்களும், குற்றம் நீங்க விளங்காநிற்கும். இம் மாடங்களின் நெடிய வரிசைகள் மதுராநகரென்னும் பசும்பொன்னாற் செய்த ஆபரண மணிந்த மங்கையானவள் அணிந்த பல இரத்தினங்கள் கோத்த கோவையொத்திருந்தன. எ-று. (எச)

விளையகல் கதுப்பி னல்லார் வீங்கிளங் கொங்கை போழ்ந்த
வளையகன் மார்ப மன்றி வடுப்படார் தமக்கன் பில்லா

ருண்டயகன் மான வாற்று லொழுகுவார் பலகை யொள்வாட்
கனையகல் விஞ்சை வீரர் கணம்பயில் காட்சித் தெங்கும்.

(இ-ள்.) வாசனை மிகுந்த அளகபாரத்தையுடைய மாதர்கள் பூரித்த இளமைதங்கிய தனங்கள், பிளந்த குன்றுபோலப் பரந்த மார்பில் அவ் வடுக்களன்றி (சத்துருக்களின் படைகளால்) வடுப்படாதவர்களும், தம்முயிர்மேல் அன்பில்லாதவர்களும், புகழ்மிக்க மானமார்க்கத்தில் நடப்பவர்களும் (ஆகிய) கேடகத்தையும், ஒளியையுடைய வாளாயுதத்தையும் பற்றி வீசும் அளவுகடந்த வித்தையில் வல்லவர்களுமாகிய வீரர்களின் கூட்டமானது (அம் மதுராபுரியின் இராசவீதியில்) எவ்விடத்திலும் பயிலுங் காட்சியையுடையது. எ-று. (௭௫)

மின்னைவா ளென்ன வீசி வீங்குகார் தம்மிற் போர்மூண்
டென்னவான் மருப்பு நீட்டி யெதிரெதிர் புதையக் குத்தி
யன்னவா னென்ன வாய்விட் டதுவெனச் செந்நீர் சோரப்
பொன்னவா மகன்ற மார்பர் பொருகளி றூட்டு வார்கள்.

(இ-ள்.) சூல் முதிர்ந்த மேகங்கள் மின்னல்களை வாள்கள் போல வீசித் தம்முட் போர்செய்ததுபோலப் போர்புரியும் இயற்கையையுடைய யானைகள் பெரிய தந்தங்களை (ஒன்றோடொன்று) எதிரெதிரே நீட்டி (உடம்பில்) புதையும்படிக் குத்தி அந்த மேகங்கள் (கர்ச்சிப்பது) போலக் கர்ச்சித்து அம் மேகங்கள் (பொழியுந் தாரைகள்போல) செந்நீர்த் தாரை பொழிய, விசயலட்சுமி விரும்பும் பரந்த மார்பையுடைய வீரர்கள் அவற்றைப் போர்செய்விப்பார்கள். எ-று. (௭௬)

தூண்டுவா ருளமுந் தங்கள் பின்னிடத் துவக்குண் டீர்த்துத்
தாண்டுமா றொற்றை யாழித் தேரினுந் தள்ளித் துள்ளப்
பாண்டில்வாய்ப் பசும்பொன் றேயப் பார்மகண் முதுகு கீண்டு
சேண்டிசை போய்ம டங்கச் செல்வத்தேர் நடாத்து வார்கள்.

(இ-ள்.) தன்னைச் செலுத்தும் பாகருடைய மனோவேகமுந் தங்கள் (வேகத்துக்கு) பிற்பட் டொழிய நுகத்தில் கட்டப்பட்டு இழுத்துச் செல்லுங் குதிரைகள் (சூரியனுடைய) ஒற்றைச் சக்கரம் பூட்டிய தேரை (இழுக்குங் குதிரைகளை)ப் பார்க்கினும் முற்பட்டுத் துள்ளவும், சக்கரத்திற் பொருந்திய பொற்கட்டுகள் தேயவும், பூமிதேவியின் முதுகு கிழியும்படி அட்டதிசைகளிலுஞ் சென்று திரும்பவும், (அந் நகரத்தரசகுமாரர்கள்) செல்வம் பொருந்திய தேர்களைச் செலுத்துவார்கள். எ-று.

தேர் என்றது குதிரைகளை விடாது நிற்றலின் விடாதவாகுபெயர். (௭௭)

மைந்தர்தந் நெருக்கிற் சிந்து கலவையு மகளிர் கொங்கைச்
சந்தமுங் கூந்தல் சோர்ந்த தாமமுஞ் சிவிறி வீசு
சிந்துரப் பொடியு நாறத் தேனொடு மெழுந்து செந்தா
ளந்தர வயிறு தூர்ப்ப வடுபரி நடாத்து வார்கள்.

(இ-ள்.) ஆடவர்களது நெருக்கத்தினால் உதிர்ந்த கலவைச்சந்தனமும், மாதர்களது கொங்கையினின்று உதிருஞ் சந்தனக்குழம்பும், (அவரது) அளகத்தினின்று சோர்ந்த மாலையின் மகரந்தங்களும், விசிறியால் (பனிநீரோடு கலந்து) வீசிய சிந்தூரப்பொடிகளும், (ஆகிய செவ்விய தூசுகள்) தேனொடும் பரிமளிக்க (மேல்நோக்கி) எழுந்து ஆகாயத்தின் வயிறு தூரும்படி, கொல்லுங் குதிரைகளை (அந் நகரத் தரச குமாரர்கள்) நடத்துவார்கள். எ-று.

இச் செய்யுளால் அரசவீதியிலுள்ள புழுதிகள் சந்தனங் கலவை முதலிய பரிமளவஸ்துக்க ளென்றார்.

மாலை யென்றது தன்னகத்துள்ள மகரந்தத்தை யுணர்த்தியது. இதுவும் விடாதவாகுபெயர். சிவிறி விசிறி—இலக்கணப்போலி. (எஅ)

தம்முயிர்க் கிரங்கா ராகித் தருக்கொடு மான மீர்ப்பத்
தெம்முனை யெதிர்ந்தா ராற்றுஞ் செருவெனக் குருதிச் செங்கேழ்க்
கொய்ம்மலர்க் குடுமிச் சேவல் கோழிளந் தகர்போர் மூட்டி
வெம்முனை நோக்கி நிற்பார் வேறவற் றூறு நோக்கார்.

(இ-ள்.) தமது உயிர்மேல் இரக்கமில்லாதவராகி, வெற்றிச் செருக்குடன் மானமும் நின்று இழுக்க, பகைவர் புரியும் போரி லெதிர்ந்த வீரர்கள் செய்யும் போர் போல, கொய்த உதிரம்போலுஞ் செந்நிறம் வாய்ந்த பூங்கொத்து போன்ற சூட்டை யுடைய சேவற்கோழிகளும், கொழுமையும் இளமையு முடைய ஆட்டுக்கடாக்களும் (ஆகிய இவற்றைத் தனித்தனி) சண்டை செய்ய எழுப்பி (அச்சண்டையால்) அவை கட்கு உண்டாகும் இடையூறுகளையும் உயிர்ச்சேதங்களையுங் கருதாமல், (அவை புரியும்) கொடிய போர்த்திறங்களை (அரசகுமாரர்) வேடிக்கைபார்த்து நிற்பார்கள்.

பெண்முத்த மனைய பேதைச் சிறுமியர் பெருநீர் வைகை
வெண்முத்த மிழைத்த சிற்றில் சிதைபட வெகுண்டு நோக்கிக்
கண்முத்தஞ் சிதறச் சிந்துங் கதிர்முத்த மாலை தட்பத்
தெண்முத்தி னகைத்துச் செல்வச் சிறார்கடே ருருட்டுவார்கள்.

(இ-ள்.) பெண்களில் முத்துப்போலுஞ் சிறந்த பேதைப் பருவம் வாய்ந்த (அரசர்) சிறுமியர், பெரிய நீர்ப்பெருக்கை யுடைய வைகை நதியிலே (தோன்றிய) வெண்மையாகிய முத்தங்களாற் கோலிய சிறுவீடுகளை அழித்தலால், (அச்சிறுமியர்) கோபித்துப் பார்த்து, கண்கள் முத்துப்போல நீர்த்துளி சிந்த (அறுத்து) வீசும் ஒளியுள்ள முத்துமாலைகள் (வழியிடையே வீழ்ந்து சிறு தேரை) தடை செய்ய, செல்வம் பொருந்திய அரசகுமாரர் (அதனை நோக்கி) தெள்ளிய முத்துபோலப் புந்நகை செய்து, அச்சிறுதேரைச் செலுத்துவர். எ-று.

பெண்களுள் பேதை-பெதும்பை-மங்கை-மடந்தை-அரிவை-தெரிவை-பேரிளம்பெண் என எழுவகைப் பருவமுளபோல, ஆடவருள் பாலன்-மீளி-மறவோன்-திறலோன்-காளை-விடலை-முதுமகன் என எழுவகைப் பருவமுளவெனக்கொள்க.(அ0)

கொடிமுகி றுழாவு மிஞ்சிக் கோநகர் வடகீழ் ஞாங்கர்
முடிமிசை வேம்பு நாற முருகவி ழாரும் போந்து
மடிமிசை நாறத் தென்னர் வழிவழி யரசு செய்யு
மிடிமுர சுறங்கா வாயி லெழுநிலை மாடக் கோயில்.

(இ-ள்.) மேகமண்டலத்தைத் துழாவுகின்ற கொடிகளையுடைய மதில்சூழ்ந்த அரசநகரமாகிய மதுராபுரியின் வடகீழ்த்திசையின் பக்கத்தில், (தமது மரபிற் கேற்ப அணிந்த) வேப்பமலர்மாலை (தமது) கிரீடத்தின்பேரில் மணம்வீசவும், (சோழ ராஜனுஞ் சேரராஜனுந் தமது திருவடியிற் பணிவதால், அவர்கள் முடிகளின்மீதணிந்த) வாசத்தோடலர்ந்த ஆத்திமலர்மாலையும் பனம்பூமாலையும், பாதங்களின்மேற் பரிமளிக்கவும், பாண்டிமன்னர் பாரம்பரியமாய் அரசுரிமை நடத்துகின்ற இடிபோன்ற பேரிகையோசை யடங்காத திருவாயிலையுடைய எழுநிலைகள்பொருந்திய இராசக்கிருகம் ஒன்றுளது. எ-று.

பாண்டியர் குலத்திற்குரிய வேப்பமலர்மாலை முடிமிசை விளங்குதலானும், சோழனுஞ் சேரனுந் தமக் கிடுக்கணுற்றுழி, பாண்டிமன்ன னுதவி பெறுமாறு அவன் தாளின்கீழ்ப் பணிதலால், அவர் சிரமிசையணிந்த ஆத்திமாலையும், பனைமாலையும்

பாதங்களில் விளங்குதலானும், அவை இரண்டும் பரிமளிக்குமென விளக்கி, "முடிமிசை வேம்புநாற முருகவி ழாரும் போந்தும்-அடிமிசை நாற" என்றார்.

"தென்னர் வழிவழி யரசுசெய்யும்" என்றது அப்பாண்டியர்குலம் பல்லூழி காலமாக நிலைநிற்றலானும், அதற்கு மலயத்துவஜ பாண்டியன் காலத்துக் குறைநேருதல் கருதி உமாதேவியே தடாதகைப்பிராட்டியாகவும், இறைவரே சோமசுந்தரபாண்டியராகவும் வீற்றிருந்து அரசுசெய்து பண்டுபோல நிலை நிறுத்தியதனுனு மெனக.

கடப்பங்காடழித்து நாடாக்கிய குலசேகரபாண்டியன் தானிருந்து அரசு செய்தற்கு ஆக்கிய அரண்மனை அவன் வழிவந்த பாண்டிமன்னர் அரசியல் நடத்தும் இடமாக விளங்கலின் "வழிவழி" என்று கூறினுரொனினும் பொருந்தும்.

இச்செய்யுளில் ஒலித்தலை உறங்காவென்றது குணவணி. (௪௧)

## மறையவர் வீதி.

ஆத்திக ருண்டென் றோது மறமுதற் பொருள்க ணன்கு
நாத்திகம் பேசும் வஞ்சர் நாவரி கருவி யாக
வாத்தனு லுரைத்த வேத வளவுகண் டுள்ளந் தேறித்
தீர்த்தராய் முத்தீ வேட்குஞ் செல்வர்தம் மிருக்கை சொல்வாம்.

(இ-ள்.) ஆஸ்திகமதஸ்தர்கள் உண்டென்று சொல்லுகின்ற அறமுதலாகிய நான்கு பொருள்களையும், இல்லையென்று சொல்லுகின்ற (உலகாயதன் ஆருகதன் முதலிய) வஞ்சகர்களது நாக்கினை அரியுங் கருவிகளாகச் சிவபெருமானுல் திருவாய்மலர்ந்தருளப்பட்ட வேதங்களின் எல்லையைக்கண்டு மனந்தெளிந்து பரிசுத்தமுடையவர்களாய் (காருகபத்தியம்-ஆகவனீயம்-தக்ஷிணாக்கினி என்னும்) முத்தீயை வளர்ப்பிக்கின்ற செல்வத்தையுடைய வேதியரது வீதிகளின் பெருமையை (இனி) கூறுவாம். எ-று.

ஆஸ்திகர் ஒருவனும் ஒருத்தியுமாக நின்று சுட்டப்பட்ட பிரபஞ்ச நிகழ்ச்சிக்குக் காரண பூதமாகக் கடவுள் ஒன்றிருக்க வேண்டுமென்று கூறுவர். அதனை உலகு காரியம். வருமுறை வந்து நின்று போவதாதலால் கர்த்தாவைச் சாதித்தல் கூடாது. பிருதிவிமுதல் உலகில் தோற்ற நாசங்காணுமென்று உலகாயதன் ஆருகதன் முதலோர் மறுப்பர். இதன் விரிவு சிவஞானசித்தியார் முதலிய நூல்களிற் காண்க. (௪௨)

முஞ்சிநாண் மருங்கின் மின்னப் பொன்செய்த முளரி வேய்ந்த
குஞ்சிநான் றசையத் தாலேச் சொருக்குமுன் கொய்து தூங்கப்
பஞ்சிநாண் கலைத்தோன் மார்பும் பலாசக்கோல் கையுந் தாங்கி
யெஞ்சினுன் மறைநூல் கற்போர் இடைகளே யில்ல மெல்லாம்.

(இ-ள்.) முஞ்சிப்புல்லாற்செய்த அரைநாணனது இடையில் விளங்கவும், பொன்னுற் செய்ததுபோன்ற தாமரைமலர் சூடிய சிகை தொங்கி யசையவும், வஸ்திரச் சொருக்கானது முன்னே கொய்சகமாகத் தொங்கவும்; கிருஷ்ணசலத்தைக் கட்டிய பஞ்சினுலாகிய உபவீதம் மார்பிலும் பலாசத் தண்டு கையிலுந் தாங்கி, குறைவில்லாத நான்கு வேதநூல்களையும் அப்பியசிக்கும் பிரமசாரியர்களது வேதபாடசாலைகளே பிராமணர் வீடுகளிலெல்லாம் (உள்ளன). எ-று.

முஞ்சி - ஒருவகை நாணற்புல். பலாசக்கோல் = முண்முருக்கந்தண்டு. உபவீதத்தோடு கட்டியிருக்கும் கலைமான்றோலின் துண்டு கிருஷ்ணசலமெனப்படும்.

தீவினை யகந்த ணுளர் சிறார்பயி றெய்வ வேத
நாவுரு வேற்றக் கேட்டுக் கிளிகளோடு நவிலும் வேற்றுப்

பூவையும் பயின்று புத்தே ளுலகுறை புதுமந் தாரக்
காவுறை கிளிகட் கெல்லாங் கசடறப் பயிற்று மன்றே.

(இ-ள்.) யாககாரியஞ் செய்யும் வேதியச் சிறுவர் ஓதுகின்ற திவ்விய வேதங்களை, நாவினால் உருவேற்றுகையிற் கேட்டுக் கிளிகளுஞ் சொல்லும். (அக்கிளிகளுக்கு) வேறாயுள்ள நாகணவாய்ப் பறவைகளுங் கற்றுத் தேவலோகத்திலுள்ள புதிய மந்தார (முதலிய பஞ்சதருச்) சோலையில் வாழும் கிளிகள் எல்லாவற்றிற்குங் குற்றமறப் பயிற்றுவிக்கும். எ-று.

மந்தாரக் கா வென்றது உபலக்கணமாதலின் "ஒருமொழி யொழிதன் னினங்கொளற் குரித்தே" என்றபடி ஏனைய நான்கு தருச்சோலைகளும் உடன்கொள்க.

வேதமு மங்க மாறு மிருதியும் புராண நூலின்
பேதமுந் தெரிந்தோ ராலும் பிறமதங் களைய வல்ல
வாதமு மதமேற் கொண்டு மறுத்தலு நிறுத்த வல்ல
போதமு முடையோ ராலும் பொலிந்தன கழக மெல்லாம்.

(இ-ள்.) (நான்கு) வேதங்கள்-ஆறங்கங்கள்-(பதினெண்) ஸ்மிருதிகள்-(பதினெண்) புராண நூற்பேதங்கள் (ஆகிய இவற்றை) உணர்ந்தவர்களாலும், பிறர் கொள்கையைப் போக்கவல்ல வாதம் - பிறர் கொள்கைக்கு உடன்பட்டுத் தாம் பின் மறுத்தல் - (பிறர் கொள்கைக்கு உடன்படாதுகித் தங் கொள்கையைத்) தாபிக்கவல்ல உணர்வு (இவற்றை) உடையவர்களாலும் (வேதியர் வீதியிலுள்ள) பாடசாலைகள் விளக்கம் பெற்றுள்ளன. எ-று.

வேதங்கள் இருக்கு - யசுர் - சாமம் - அதர்வணமென நான்கு. அங்கங்கள் மந்திரம் - வியாகரணம் - நிகண்டு - சந்தோபிசிதம் - நிருத்தம் - சோதிடமென ஆறு. ஸ்மிருதிகள் மனு - அத்திரி - அவிரிதம் - விஷ்ணு - யாஜ்ஞவல்கியம் - உசனம் - ஆங்கிரசம் - யமம் - ஆபத்தம்பம் - சமவர்த்தம் - காத்தியாயனம் - பிரகற்பதி - பராசரம் - வியாசம் - சங்கலிதம் - கௌதமம் - சாதான்மம் - வசிட்டமெனப் பதினெட்டு. புராணங்கள் மச்சம் - கூர்மம் - வராகம் - வாமனம் - பிரமம் - வைணவம் - பாகவதம் - சைவம் - இலிங்கம் - பௌடிகம் - நாரதீயம் - காருடம் - பிரமகைவர்த்தம் - காந்தம் - மார்க்கண்டேயம் - ஆக்கினேயம் - பிரமாண்டம் - பதுமமெனப் பதினெட்டு.

"எழுவகை மதமே யுடன்படன் மறுத்தல் - பிறர்தம் மதமேற் கொண்டு களைவே - தாஅ னாட்டித் தனாது நிறுப்பே - யிருவர் மாறுகோ ளொருதலை துணிவே - பிறர்நூற் குற்றங் காட்ட லேனைப் - பிறிதொடு படாஅன் றன்மதங் கொளலே" என்ற எழுவகை மதங்களுள், இச்செய்யுளில் மறுத்தல் - பிறர்தம் மதமேற் கொண்டு களைவு - தாஅ னாட்டித் தனாது நிறுப்பு என்னு மூவகை மதங்களைக் கூறினர். (அரு)

உறிபொதி கரகக் கைய ரொளிவிடு செங்கற் றோய்த்த
வறுவைய ருயிர்க்கூ றஞ்சு நடையின ரவிச்சை மாள
வெறிசுடர் மழுவா ளென்னக் கோவணம் யாத்த கோலர்
மறைமுடி வன்றித் தேறா மாதவர் மடங்க ளெங்கும்.

(இ-ள்.) உறியிற்பொதிந்த கமண்டலந்தாங்கிய கையும், ஒளிவீசுங் காஷாய வஸ்திரமும், (எறும்பு முதலிய) உயிர்களின் கொலைக்குப் பயந்து (ஒதுங்கி) நடக்கும் நடையும், அஞ்ஞான (விருட்ச)ம் அழியும்படி சேதிக்கும் பிரகாசமுடைய மழுவாயுதம் போல, கோவணங் கட்டிய தண்டமுங் கொண்ட (ஞானகாண்டமாகிய) உபநிடதங்களையே தெளிந்த பெரிய தவமுடைய சந்நியாசிகளது மடாலயங்கள் (வேதியர் வீதிகள்) எங்கும் விளங்காநிற்கும். எ-று.

மழு = கோடரி. (அகூ

அட்டில்வாய்ப் புகையு மாடத் தகில்படு புகையும் வேள்வி
விட்டெழு புகையு மொன்றி விரிசுடர் விழுங்கக் கங்குல்
பட்டது பலரும் தத்தம் பயில்வினை யிழக்க நங்கை
மட்டவிழ் கடுக்கை யான்கண் புதைத்தநா ணானு மன்றே.

(இ-ள்.) மடைப்பள்ளியிலெழுந்த புகையும், மாடங்களில் (மாதர்கள் தமது அளகத்தை யுலர்த்த இடுகின்ற) அகிற்கட்டையினின்றெழுந்த புகையும், யாகாக்கினியினின்றெழுந்த புகையும், தம்முட்கலந்து பரந்த வெயிலை மறைத்தலால், அனைவரும் பழகுந் தந்தந்தொழில்களை ஒழிக்கும்படி இருள்படர்ந்ததினம், வாசனையோ டலர்ந்த கொன்றைமலர்மாலையணிந்த சிவபெருமானது திருக்கண்களை உமாதேவியார் (தமது திருக்கரத்தினால்) மறைத்த தினத்தை யொத்திருக்கும். எ-று. (அஎ)

## சைவர் வீதி.

கலிநிலைத்துறை.

தெய்வ நீறுமைந் தெழுத்துமே சிதைக்கல னாக
வெவ்வ மாசிரு வினையுடம் பெடுத்துழல் பிறவிப்
பௌவ மேழையுங் கடந்தரன் பதமலர்க் கரைசேர்
சைவ மாதவ ருறைமடத் தனிமறு குரைப்பாம்.

(இ-ள்.) தெய்வீகம் பொருந்திய திருவெண்ணீற்றையும், ஸ்ரீ பஞ்சாக்கரத்தையுமே பாய்விரிந்த மரக்கலமாகக்கொண்டு, துன்பந்தருங் குற்றமாகிய நல்வினை தீவினைகளால், தேகங்களை யெடுத்துச் சுழல்கின்ற எழுவகைத் தோற்றத்தையுடைய எழு பிறவிக்கடலையுங் கடந்து, சிவபெருமானது திருவடித்தாமரையாகிய கரையினை யடையும் பெரிய சைவ தபோதனர்கள் தங்கியிருக்கும் மடாலயங்கள் நிறைந்த ஒப்பற்ற வீதியின் சிறப்பைச் சொல்வாம். எ-று.

தெய்வநீறுமைந் தெழுத்தும் எனக் கூறியதற்கேற்ப, அணிதலோடு ஜபித்தலுக்குக் கருவியாகிய உருத்திராக்கமணியையுங் கொள்க.

எழுவகைத் தோற்றம்—தேவர் - மனிதர் - விலங்கு - புள் - ஊர்வன - நீர்வாழ்வன - தாவரம் எனப்படும். (அஅ)

எங்கு மீசனைப் பூசைசெய் திகபர மடைவா
ரெங்கு மன்பரைப் பூசைசெய் தெழுபிறப் பறுப்பா
ரெங்கு மாகமஞ் செவிமடுத் தெதிர்வினை தடுப்பா
ரெங்கு நாயகன் வடிவுணர்ந் திருண்மலங் களைவார்.

(இ-ள்.) (அவ் வீதிகளில்) சிவபெருமானை (ஆகமங்களிற் கூறிய முறைப்படி) பூசைசெய்து இகபோகத்தையும் பரபோகத்தையும் பெறுபவர்கள் எல்லாவிடத்திலும் (உளர்.) சிவபக்தரை (சிவமாகக் கருதி)ப் பூசித்து எழுவகைப் பிறவிகளையும் முதலறக் களைபவர்கள் எவ்விடத்திலும் (உளர்). சிவாகமங்களைச் சிரவணஞ் செய்து மேல்வரும் ஆகாமியவினைகளைத் தடுப்பவர்கள் எவ்விடத்திலும் (உளர்.) சிவபெருமானது திருவுருவத்தைச் சிந்தித்து ஆணவமலங்களை யொழிப்பவர் எவ்விடத்திலும் (உளர்). எ-று. (அகூ)

இகம் - பரம்—ஆகுபெயர்கள்.

அழிவி லானுரை யாகம மிலக்கமாய்த் தவற்றுள்
விழுமி தாகிய விதியினும் விலக்கினு மடியைத்

தழுவு தொண்டர்கண் மைந்தர்கள் சாதகர் பாசங்
கழுவி வீடருள் போதகக் காட்சியர் பலரால்.

(இ-ள்.) அழிவில்லாத (நித்தியனாகிய) சிவபெருமான் திருவாய்மலர்ந்தருளிய ஆகமங்களுள், இலக்ஷம் சுலோகங்களை யாராய்ந்து, அவற்றுள் மேம்பாடுற்றனவாகிய விதிகளாலும் விலக்குகளாலும், தமது திருவடியை இடைவிடாது சிந்திக்கும் அடியவர்கள் - மைந்தர்கள் - சாதகர்களாகிய இவர்களது மலசம்பந்தங்களை யகற்றி மோட்சவீட்டை யுதவும் உத்தமாசிரியர் பலர் (அச் சைவர்வீதியில் உளர்). எ-று.

"ஆகம மிலக்க மாய்ந்து"—என்றது, சைவாகமங்களிலே கிரியாகாண்டம்-ஞானகாண்டமென்னு மிரண்டினும், ஒருலக்ஷங் கிரந்த மோதி உண்மைப்பொருளை யுணரவல்லவன் ஆசாரியனாவான். ஒருலக்ஷங் கிரந்த மோதமாட்டாதானாயின், ஐம்பதினாயிரங்கிரந்த மோதினவன் மத்திமாசாரியனெனவும், இருபத்தையாயிரங்கிரந்த மோதினவன், கனிட்டாசாரியனெனவுங் கொள்க. இதனை,

சைவசமயநெறி - பொதுவிலக்கணம்.

"ஒருதங் கிரத்தினிரு காண்டத்தின் மூன்று
பொருளுமுணர்ந் தான்போ தகன்"—எனவும்,
"அல்லாற் சுலோக மொருநியுத மாராய
வல்லானுந் தேசிகனா வான்"—எனவும்,

சிவபுண்ணியத்தெளிவு.

"ஆகமத்தி லிருபத்தை யாயிரநற் சுலோக
மறிந்ததே சிகன்கனிட்ட னைம்பதினா யிரந்தான்
மோகமற வாராய்ந்த தேசிகன்மத் திமனே
முறையினா லோரிலக்க முயன்றவனுத் தமனே
யேகனம லேசனருள் காமிகமுன் னாக
வியம்பியிடு மிருபத்தெட் டாகமத்து மிஃதே
பாகமென சாராற்சா ரம்மெனவோ ரியலைப்
படித்துணர்ந்தோ னியல்களெலாம் படித்துணர்பண் டிதனே"—

எனவும் வருவனவற்றா னறிக.

[விசேஷவித்தையாகிய சைவாகமத்தை யோதல்வேண்டுமெனவே, அவ்வுணர்ச்சிக்கு இன்றியமையாக் கருவியாயுள்ள நிகண்டு - காவியம்-வியாகரணம் - தருக்க முதலிய சாமானியவித்தைகளுங் கற்றுணர்தல் வேண்டுமெனக் கொள்க. அன்றியும், தமிழ்வழங்கு நிலத்தின்கண்ணே ஆசாரியராவோர் வடமொழிப்பயிற்சி பெரிதுடையராயினும், கேட்போரெல்லார்க்கும் அஃதுண்மை கூடாமையால், தமிழினும் நிகண்டு கற்றுப் பஞ்சவிலக்கணப் பயிற்சியுடையராய் "உந்தி களிறு வுயர்போதஞ் சித்தியார்-பிந்திருபா வுண்மைப் பிரகாசம் - வந்தவருட், பண்புவினா போற்றிகொடி பாசமிலா நெஞ்சுவிடு - வுண்மைநெறி சங்கற்ப முற்று" என்கிற தமிழ்ச்சித்தாந்த சாத்திரம் பதினான்கையு முணர்ந்தாராகியும், தமிழ்வேதமாகிய தேவார திருவாசகங்களைப் பண்ணோ டத்தியயனம் பண்ணி வல்லவராகியு மிருத்தல்வேண்டுமெனவுந் துணிக.]

இதனை,

"வேதம் பசுவதன்பால் மெய்யா கமநால்வ
ரோதுந் தமிழதனி னுள்ளுறு நெய்—போதமிகு
நெய்யி னுறுசுவையா நீள்வெண்ணெய் மெய்கண்டான்
செய்ததமிழ் நூலின் றிறம்"—என்பதனா னறிக.

விதி - சிவாகமங்கள் இன்னவை செய்யவேண்டுமென விதித்தல். விலக்கு செய்யத்தகாததென விலக்கல்.

தொண்ட ரெனினுஞ் சமயியெனினு மொக்கும். போதகக்காட்சியர் என்றது சுந்தர வேடந் தரித்த ஆசாரியர்.

" சமயியெனப் புத்திரன் சாதகனு மென்ன

அமைவரொரு மூவரடை வால் " — என்றபடி, தாம் பெற்ற தீக்ஷை முறையால் சமயியென்றும், புத்திரக னென்றும், சாதக னென்றும் மாணக்கர் முத்திறத்தராயிருப்பர். சமயியென்பவன் சமயதீக்ஷைபெற்றவனும், புத்திரகனென்பவன் சமய விசேடதீக்ஷைகள் பெற்றவனும், சாதகனென்பவன் சமய விசேட நிருவாண தீக்ஷைகள் பெற்றவனும் என்க. இவருள் சமயி சரியாபாகத்திலிருப்பவன். புத்திரகன் மந்திரதேவர் முதலாயினார் தருப்பணம் - சிவார்ச்சனை - அக்கினிகாரிய முதலியன செய்தலாகிய கிரியாபாதத்தி லிருப்பவன். சாதகன் நித்திய நைமித்திக காமிய கர்மங்களைச் செய்து ஆசாரிய னநுமதிபெற்றுத் தனதாச்சிரமத்திற்குப்போய் ஆசாரியன் திருவடியைத் தியானித்துச் சிவபெருமானது திருவடித்தாமரைக் கன்புவைத்து மும்மலங்களையு மொழித்தவன். (கூo)

மறைக ளாகமம் பொதுச்சிறப் பெனச்சிவன் வகுத்து
முறையி னோதிய விதிவிலக் குரைகளு முடிவி
லறையும் வீடுமொன் றிரண்டெனும் பிணக்கற வமைந்த
குறைவி லாச்சிவ யோகியர் குழாங்களும் பலவால்.

(இ-ள்.) சிவபெருமான் வேதசிவாகமங்கள் பொதுவுஞ்சிறப்புமென்று வகுத்தருளி, (அவற்றுள்) முறையாகக் கூறிய விதிவாக்கியங்களும் விலக்கு வாக்கியங்களும் அவற்றின் முடிவிற் கூறிய மோட்சமும், ஒன்றிரண்டென்னுந் தன்மையுமாகிய பிணக்கொழியும்படி திருவருளால் அறிந்து,அமைதிபெற்ற குறைவில்லாத சிவயோகத்தை யுடையவரது கூட்டங்களும் (அச்சைவர் வீதியில்) பல வுள்ளன.—எ-று.

"மறைகளாகமம் பொதுச்சிறப்பு" என்றது வேதம் பொதுநூலாகவும் ஆகமஞ் சிறப்பு நூலாகவும் விளங்குதலின், இதனை "வேதமோ டாகம மெய்யா மிறைவனூல்-ஓதும் பொதுவுஞ் சிறப்புமென் றுன்னுக-நாதனருளவை நாடி லிரண்டந்தம்-பேதம தென்பார் பெரியோர்க் கபேதமே" என்னுந் திருமூலர் திருமந்திரத்தானும்,

நீலகண்டபாஷியம்.

வயஊ-வெடிஸிவாமஜயொமெஷு நவுஸ ாஜவெஜொவிஸிவாமஜ

"வேதசிவாகமங்கட்குப் பேதங் காண்கின்றிலம். வேதமே சிவாகமம்"— என நீலகண்ட சிவாசாரியர் கூறியதனானும்,

வீராகமம்.

" ஆரண நெல்லோ டொக்கு மாகம மரிசி போலாம்
ஆரண முலகற் காஞ்சத் தினிபா தற்காஞ் சைவம்
பாராஃ றிணைக னெல்லே பருகிடு மரிசி தன்னைச்
சீருயர் திணைகள் கொள்ளு மாறுபோற் றேறி டீரே "— என்பதனு மறிக.

சதாசிவமூர்த்தி, ஈசானம்-தற்புருடம்-வாமம்-அகோரம்-ஸத்தியோ ஜாதம் முதலாகிய ஐந்து திருமுகங்களுட னியைந்து எழுந்தருளி ஆன்மாக்களின் பாசச் சேதநிமித்தஞ் சித்தாந்தமாகிய காருடம் - வாமம் - பூததந்தரம் - பைரவ மீருகிய

ஆகமபேதங்களை ஈசானமொழிந்த நான்கு திருமுகத்தினும், காமிகாதி யிருபத்தெட்டாகமங்களை ஈசானமுகத்தினும், அருளிச்செய்தனர். அக் காமிகாதி ஆகமங்கள் :— காமிகம் - யோகசம் - சிந்தியம் - காரணம் - அஜிதம் - தீப்தம் - சூக்ஷ்மம் - ஸஹஸ்ரம் - அம்சுமான் - சுப்ரபேதம் - விஜயம் - நிஸ்வாஸம் - ஸ்வயம்பூதம் - ஆக்நேயம் - வீரம் - ரௌரவம் - மகுடம் - விமலம் - சந்தாஞாநம் - முகபிம்பம் - ப்ரோத்கீதம் - லளிதம் - சித்தம் - சந்தாநம் - சர்வோத்தமம் - பாரமேச்சுரம் - கிரணம் - வாதுளமென்பன. இவைகளைக் கேட்டோர் ப்ரணவர் - திரிகலர் - ஹரர் - சுதர் - பஸ்மர் - காரணர் - சர்வருத்திரர் - பிரசாபதி - சுசிவர் - சிவர் - அச்சுதர் - ஈசர் - ஈசாநர் - ஹூதாஸநர் - சூக்ஷ்மர் - வைச்சிரவணர் - ப்ரபஞ்சநகர் - காலர் - பீமர் - தர்மர் - அம்பு - அக்ரர் - ரவி - தசேசர் - விக்நேச்சுவரர் - சசி - அநாதிருத்ரர் - பரமேசர் - தசார்ணர் - சைலஜர் - நிதநேசர் - பிரமர் - வியோமர் - ஹூதாஸநர் - தேஜசு - ப்ரஜாபதி - பிராம்ஹணேசர் - நந்திகேசர் - சிவர் - மஹாதேவர் - சர்வாத்மகர் - வீரபத்திரர் - அநந்தர் - பிரஹஸ்பதி - பிரசாந்தர் - ததீசி - சூலி - கவசர் - ஆலயேசர் - லளிதர் பிந்து - சண்டிகேச்சுவரர் - சிவநிஷ்டர் - அசம்வாயர் - சோமர் - ந்ருசிம்ஹர் - ஸ்ரீதேவி - உசநர் - தேவவிபவர் - சம்வர்த்தர் - சிவர் - மஹா காளர் முதலியோர். இவ்வாகமங்களுள் முதலிற் கூறிய பத்தும் சிவபேதங்களாம். ஏனைய பதினெட்டும் உருத்திரபேதங்களாம். இச்சிவாகமங்க ளிருபத்தெட்டும் வக்த்ராரம்முதல் விஸ்வாத்மகம் ஈறுயுள்ள இருநூற்றெட்டு உட்பிரிவுடையன. அவற்றைக் காமிகந் தந் திராவதாரப் படலத்துட் காண்க.

இவ்வாகமங்கள் சாதாக்கிய மூர்த்தியாகிய இப்பெருமானுக்குத் திருவடிகள் - கணைக்கால் - அங்குலி - கெண்டைக்கால் - முழந்தாள்கள் - ஊருக்கள் - குஹ்யம் - கடித்தாநம் - முதுகு - கொப்பூழ் - வயிறு - ஹ்ருதயம் - ஸ்தநங்கள் - நயநம் - கண்டம் - செவிகள் - கிரீடங்கள் - கரங்கள் - மார்பு - முகம் - காது - கன்னம் - நெற்றி - குண்டலங்கள் - உபவீதம் - ஹாரம் - ஆபரண முதலிய திருமேனியாகக் கூறப்படும். (கக)

குழலுந் தும்புரு நாரதர் பாடலுங் குனித்துச்
சுழலுங் கொம்பனா ராடலு மூவர்வாய்த் துதியும்
விழவின் செல்வமுஞ் சுருதியுந் திசையெலாம் விழுங்கு
முழவுங் கண்டுயி லாதது முன்னவன் கோயில்.

(இ-ள்.) (அம்மதுராபுரியிலிருக்கும்) சிவபெருமான் எழுந்தருளியுள்ள திருகோயிலானது வேய்ங்குழலினொலியுந் தும்புரு நாரதர்பாடும் இசைப்பாட்டொலியும் பூங்கொம்புபோன்ற மாதர்கள் சுழன்று நடிக்கின்ற நடனமும், (திருஞான சம்பந்தமூர்த்திநாயனார் - திருநாவுக்கரசுநாயனார் - சுந்தரமூர்த்திநாயனாராகிய) மூவர் முதலிகள் திருவாய்மலர்ந்தருளிய (திருநெறித்தமிழ்வேதமாகிய) தேவாரங்களின் பண்ணோசையும், திருவிழா மகோற்சவத்தின் சிறப்பும், நான்குவேதங்களின் கோஷமும், அஷ்டதிக்குகளுந் தன்வயப்படுத்தும் மத்தளவொலியும், (ஆகிய இவை இரவும்பகலும்) இடைவிடாது ஒலித்துக்கொண்டிருக்கும் (இயற்கையுடையது) எ-று. (கஉ)

மடங்க லின்றிவிண் பிளந்துமேல் வளர்ந்துவெள் ளேற்று
விடங்கர் வெள்ளிமன் றிமைத்தெழு வெண்சுடர் நீட்ட
முடங்கல் வெண்பிறைக் கண்ணியான் கயிலைமூ வுலகு
மொடுங்கு கின்றநா ளோங்கிய வோக்கமே யொக்கும்.

(இ-ள்.) வெள்ளிய தருமவிடையை ஆரோகணிக்கும் அழகராகிய சிவபெருமான் (நடனஞ்செய்தருளும்) வெள்ளியம்பலத்தில் விளங்கி, தடைபட்டு மடங்காது ஆகாயமுகட்டைப் பிளந்து அதன்மேலுஞ் சென்றோங்கிய வெள்ளிய கிரணத்

தின் நீட்சியானது வளைவாகிய வெள்ளிய பிறைச்சந்திரனை மாலையாகத் தரித்த சிவ பெருமா னெழுந்தருளியிருக்குங் கைலையங்கிரியானது (சொர்க்க மத்திய பாதலம் என்னும்) மூவுலகமும் லயமடைகின்ற காலத்தில் மென்மேலும் வளர்ந்தோங்கும் ஓக்கத்தை யொத்திருக்கும்.—எ-று.

எல்லா வுலகங்களும் நிலைகெட் டழியும் பேரூழிகாலத்துக் கைலைமலை சிறிது வளர்தலின் "கைலைமூவுலகும் ஒடுங்குகின்றநாள் ஓங்கிய ஓக்கமே யொக்கும்" என உவமித்தார். இதனை,

சுந்தரமூர்த்திசுவாமிகள் தேவாரம்.

"ஊழிதோறூழிமுற்றுமுயர்ந்தபொன்னெடித்தான்மலையைச்
சூழிசையின்கரும்பின்சுவைநாவலவூரன்சொன்ன
வேழிசையின்றமிழாலிசைந்தேத்தியபத்தினையு
மாழிகடலரையஞ்சையப்பர்க்கறிவிப்பதே" என்னுந் திருப்பாசுரத்தானும்,

"புரந்த ராதிவா னவர்பதம் போதுறை புத்தேள்
பரந்த வான்பதஞ் சக்கரப் படையுடை பகவன்
வரந்த வாதுவாழ் பதமெலா நிலைகெட வருநா
ளுரந்த வாதுநின் றூழிதோ றோங்குமவ் வோங்கல்."—என்னும்இந்நூற்

செய்யுளானு முணர்க. (கஅ)

சுரந்து தேன்றுளித் தலர்களுஞ் சொரிந்துவண் டரற்ற
நிரந்து சுந்தரற் கொருசிறை நின்றபூங் கடம்பு
பரந்து கட்புன லுகப்பல மலர்கடூய்ப் பழிச்சி
யிரந்து நின்றருச் சனைசெயு மிந்திர னிகரும்.

(இ-ள்.) தேன் ஊற்றெடுத்துத் துளித்து மலர்களையுஞ் சொரிந்து வண்டுகள் பண்பாடத்தழைத்து,சுந்தரேசப்பெருமானுக்கு ஒருபுடைநின்ற மலர்களையுடைய கடப்பமரமானது, கண்களினின்று ஆனந்தபாஷ்பம் பரவிச்சொரிய பல மலர்களால் அர்ச்சித்துத் தோத்திரஞ்செய்து, வரம்யாசித்து ஒருபால் நின்று பூசித்த தேவேந்திரனை யொத்து விளங்கும்.—எ-று.

கடம்பு ஸ்தலவிருக்ஷம். பெருமான் அவ்விருக்ஷத்தின்கீழ் வீற்றிருத்தலால், தேன்றுளித்தலைக் கட்புனல் சிந்துதலாகவும், அலர்கள் சொரிதலை மலரால் அர்ச்சிப்பதாகவும், வண்டு அரற்றுதலை இரத்தலாகவும், கடம்பு ஒருபுற நிற்றலை இந்திரன் நிற்றலாகவும் உவமித்தார். (கக)

உழல்செய் தீவினை யுருப்பற வுயிர்க்கெலா மடிநி
ணிழல்செய் வார்க்குநீ ணிழல்செயா நின்றபூங் கடம்பின்
குழல்செய் வண்டுகற் பகமதுக் கொணர்ந்துவந் தூட்டித்
தழல்செய் காமமென் பேடையி னூடலைத் தணிக்கும்.

(இ-ள்.) (பிறந்தும் இறந்தும்) உழலச்செய்கின்ற தீவினையாகிய கோடையானது ஆன்மகோடிக ளெல்லாவற்றையும் விட்டு நீங்கும்படி, தமது திருவடிநீழலை அநுக்கிரகிக்குஞ் சிவபெருமானுக்கு, (அருகிலிருந்து) பெருநிழலைச்செய்கின்ற மலர்கள் பொருந்திய கடப்பவிருக்ஷத்தில் வாசஞ்செய்யும் புள்ளாங்குழல்போலும் இசைபாடுகின்ற (ஆண்) வண்டுகள், அக்கினியைப்போல வெம்மையைச்செய்கின்ற காமத்தையும் மென்மையையு முடைய பெண்வண்டுகளின் பிணக்காகிய பிணியை (அமராவதியிலுள்ள) கற்பகவிருக்ஷத்தின் தேனைக்கொண்டுவந்து உண்பித்து ஒழிக்கும். எ-று.

அப் பெண்வண்டுகள் மெல்லிய தன்மையுடையவாகலின் தழல்செய் காம நோய் ஆற்றாது உயிர்விடுமெனக் கருதி ஆண்வண்டுகள் கற்பகமதுக்கொணர்ந் தூட்டி உடல்நோய் தணிக்குமென்றார். (௬௫)

ஆரு நீர்க்கட லன்றது வெனநிறை யகழ்கா
ரூரு மாழியன் றதுவென வோங்கெயி லெட்டாய்ச்
சாரு நேமியன் றதுவெனச சமைந்தகோ புரம்பொன்
மேரு வன்றது வெனசசுடர் விசும்பிழி விமானம்.

(இ-ள்.) நிறைந்த நீர்மயமாகிய சமுத்திரம் அதுவல்ல (இதுதான்) என்று சொல்லும்படி நீர்நிறைந்த அகழியும், மேகந்தவழுஞ் சக்ரவாளகிரி அது அல்ல (இது தான்) என்று சொல்லும்படி உயர்ந்த மதில்களும், எட்டாகத் தொகைப்பட்டுள்ள குலபர்வதம் அதுவல்ல (இதுதான்) என்று சொல்லும்படி பொருந்திய கோபுரமும், பொன்னாகிய மேருபர்வதம் அதுவல்ல (இதுதான்) என்று சொல்லும்படி விளங்கா நின்ற பிரகாசத்தோடுகூடிய விண்ணுலகினின் றிழிந்த விமானமும் (அம்மதுராபுரியி லுள்ளன.) எ-று.

இச் செய்யுளில் பயனிலை தொக்கின்றது. (௬௬)

வேத வந்தமுந் துளக்கற மெய்ப்பொருள் விளங்கு
நாத வந்தமுங் கடந்ததோர் நடுநிலைப் பொருளின்
பாத வந்தனைப் பத்தியின் பாலராய்ப் பயில்வோர்
மாத வந்தரு பயனெனத் தழைத்தபல் வளனும்.

(இ-ள்.) வேதாந்தத்தின் முடிபையும், களங்கமற உண்மைப்பொருள் விளங்கும் நாததத்துவத்தின் இறுதியுங் கடந்ததாகிய ஒப்பில்லாத நடுநிலைப்பொருளாகிய பரசிவத்தின் திருவடியை வழிபாடுசெய்யும் பக்தியின் பகுதியை யுடையவர்களாய்ப் பயிலு மொழுக்கத்தினரது பெரிய தவமானது கொடுக்கின்ற (நிலையாயுள்ள) பலனைப்போல, பலவளங்களும் (அம் மதுராபுரியில்) எப்பொழுதும் நிலைபெற்றுள்ளன. எ-று.

வேதாந்தம் - உபநிடதங்கள். (௬௭)

பொறிக ளைந்தினுக் கூட்டுபல் போகமு மிதப்பச
செறிகொ ணீரவா லுவப்பவத் திருநகா மாகக
ணெறிகொள் செஞ்சடைப் பிறைமுடி நிருமலக் கொழுந்தின்
வெறிகொ ளுண்மல ரடிதழீஇ வீடுபெற் றார்போல்.

(இ-ள்.) (அங்கே பலவகை வளங்களும் நிறைந்திருத்தலின்) அந்த மதுராபுரியில் வசிப்பவர் தமது ஐம்பொறிகளுக்கும உண்பிக்கும் பல போகங்களும் அதிகரிக்கும்படி செறிந்ததன்மையையுடையனவாயிருத்தலால், நெறிதல்பொருந்திய செவ்விய சடாடவியிற் சந்திரனைத் தரித்த நினமலக்கொழுந்தாகிய சிவபெருமானது வாசனைமிகுந்த புதிய தாமரைமலர்போன்ற திருவடியைத் தியானித்து மோட்ச மடைந்த (சீவன்) முத்தரைப்போலச் சதா மகிழெய்துவார்கள். எ-று. (௬௮)

முன்ன வன்னரசிருக்கையா லந்நகர் முளரிப்
பொன்னை யீன்றதா லதுபல பொருணிறை செல்வந்
தன்னை யீன்றதா லதுபல தருமமென் றுரைக்கு
மின்னை யீன்றதஃ தீன்றதால விழுத்தகு புகழே.

(இ-ள்.) முழுமுதற்பொருளாகிய சிவபெருமான் (சோமசுந்தர பாண்டியராய்) அரசவீற்றிருக்கையால் அம்மதுரைமாநகரம் தாமரையில் வீற்றிருக்கும் இலக்

குமியைப் பெற்றது. அவ் விலக்குமி (பொன் முதலிய) பல பொருளாக நிறைந்த செல்வமென்னும் பெண்ணைப் பெற்றாள். அப்பெண் பலவகைப்பட்ட தருமமென்று சொல்லும் பெண்ணைப் பெற்றாள். அப் பெண் மேன்மைமிகுந்த கீர்த்தி யென்னுங் குழந்தையைப் பெற்றனள். எ-று.

இச் செய்யுள் காரணமாலையணி. (௱)

எழுக்க டந்ததோ ளுருத்திர வுலகமென் றியாரும்
வழுத்த நின்றவிந் நகர்வயி னும்பரின் மாண்ட
விழுத்த கும்பல செல்வமும் வியந்துபார்த் துள்ளத்
தழுக்க றாமையா லின்னமு மமரர்கண் ணுறங்கார்.

(இ-ள்.) எழுக் கம்பத்தைச் செயித்த தோளையுடைய உருத்திரமூர்த்திகள் வசிக்கும் உலகமென்று எல்லோருந் துதிக்கும்படி விளங்கும் இந்த மதுராபுரியில் (உள்ள) அமரருலகத்தின் செல்வத்திலும் மாட்சிமைப்பட்ட மேன்மை மிகுந்த பல செல்வங்களையும், தேவர்கள் அதிசயித்துப்பார்த்துத் தமது மனதிற்கொண்ட பொறாமையால், இதுவரையிற் கண்ணுறக்கங் கொள்ளாதிருக்கின்றார்கள். எ-று.

இம்மதுராபுரிக்குச் சிவலோகமென்பது ஓர் திருநாமமாதலின் "உருத்திர வுலகம்" என்றும், இம்மதுராபுரியிலுள்ள செல்வங்கள் தேவருலகத்தும் இல்லையாதலின் "உம்பரின்மாண்ட விழுத்தகும்பல செல்வம்" என்றும், இமையவர் இவற்றைக்கண்டு இவை தமது உலகத்தில்லாமையானும், இதுகாறுந் தாம் கண்டதில்லையானும் "உள்ளத்தழுக்கறாமையால்" என்றும், அழுக்காறுடையார்க்குக் கண்ணுறக்கம் இல்லையாதலின் "இன்னமு மமரர்கண்ணுறங்கார்" என்றுங் கூறினர்.

கண்ணிமையாமை இயற்கையாகவே யுடையவராதலின் தேவர் இமையவர் எனப்பட்டனர். இதனை இந்நூலாசிரியர் பொறாமையால் வந்ததெனக் கற்பித்தார்.

விரைய விழ்ந்ததார் மீனவர் வாகைவேல் விடுத்துத்
திரையை வென்றது முடிதகர்த் திந்திரன் செருக்குக்
கரைய வென்றதுங் கார்தளை யிட்டதுங் கனக
வரையை வென்றது மிந்நகர் வலியினா லன்றோ.

(இ-ள்.) வாசனையோடு மலர்ந்த (வேப்ப) மலர்மாலையணிந்த மீனக்கொடியேந்திய பாண்டிய மன்னவர், வெற்றிமாலையணிந்த வேலை விடுத்துச் சமுத்திரத்தை வெற்றிகொண்டதும், இந்திரனது முடியை (வளை யெறிந்து) தள்ளிச்சிதைத்து (அவனது) இறுமாப்பகலச் செயங்கொண்டதும், மேகங்களைச் சிறையிட்டதும், மேருமலையைச் (செண்டாலடித்து) செயங்கொண்டதும், இம்மதுராபுரியின் வலிமையால் அல்லவோ. எ-று.

வேலாயுதத்தாற் சமுத்திரத்தை வென்றவரும், இந்திரன் முடிமேல் வளையெறிந்து அவன் செருக்கை யொழித்தவரும், மேகங்களைச் சிறையிட்டவரும், மேருவைச் செண்டாலடித்துப் பொருள் கொணர்ந்தவரும் உக்கிர குமாரபாண்டியர். இச்சரித்திரங்களைப் பின்னர் வருமிடத்திற் காண்க. (௧0௧)

எங்கு நாவுமா யெங்கணுங் கண்ணுமா யெங்குந்
தங்கு பேரொளி யல்லதித் தனிநகர்ச் செல்வஞ்
செங்க ணாயிர நாவினன் செப்பவு மெதிர்கண்
டங்க ணாயிர முடையவ னளக்கவும் படுமோ.

(இ-ள்.) எவ்விடத்தும் நாவுகளுமாகி, எவ்விடத்துங் கண்களுமாகி எவ்லாவிடத்தும் வியாபகமாயிராநின்ற பேரொளிப் பிழம்பாகிய பரமசிவமன்றி ஒப்பற்ற

இந்த மதுராபுரியின்செல்வத்தை, செவந்த (ஈராயிரம்) கண்களையும், ஆயிரம்நாவுகளையு முடைய ஆதிசேடன் எடுத்துச்சொல்லவும் அழகிய ஆயிரங்கண்களையுடைய இந்திரன் நேரே பார்த்து அளவுபடுத்தவுங்கூடுமோ? (கூடாது.) எ-று. (கoஉ)

புண்ணி யம்புரி பூமியா ரதில்வரு போக
நண்ணி யின்புறு பூமிவா னுடென்ப நாளும்
புண்ணி யம்புரி பூமியு மதில்வரு போக
நண்ணி யின்புறு பூமியு மதுரைமா நகரம்.

(இ-ள்.) புண்ணிய கருமங்களைச் செய்கின்ற பூலோகத்திலுள்ளவர்கள் அப் புண்ணியத்தால் வரும் பலனை யடைந்து இன்ப நுகரும் உலகந் தேவருலகென்று சொல்லுவர். எக்காலமும் புண்ணிய கருமங்களைச் செய்தற்குரிய பூமியும், அப்புண் ணியத்தால் உண்டாகின்ற பலன்களைப்பெற்று இன்பநுகரத்தற்குரிய பூமியும் மதுரா புரியே யாகும். எ-று.

போகம் எண்வகைத்து. அவையாவன:—பெண் - ஆடை - அணிகலம் - போசனம் - தாம்பூலம் - பரிமளம் - பாட்டு - புஷ்பசயன மென்பனவாம்.

"புண்ணியம்புரி பூமி பார்" எனவும் பாடபேதம். பார்=பூலோகம். (கoஙு)

அறுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

பண்கனிந் தனைய சொல்லார் நரம்பிசைப் பாணிதேவ
ருண்கனி யமுதுங் கைப்பச் செவிதொளைத் தூட்ட வுண்டும்
பெண்கனி னமுத மன்னார் பெருமித நடன முண்ணக்
கண்களை விடுத்துங் காலங் கழிப்பவ ரளவி லாதார்.

(இ-ள்.) இசை பழுத்தாற்போலும் (இனிய) மொழியையுடைய மடவார் (வாசிக்கும்) யாழின் இசையொலி, தேவர்கள் உண்ணும் (சுவை)கனிந்த அமிர்தமும் உவர்க்கும்படி செவிப்புலனைத்தொளைத்து (இன்பத்தை) உண்பிக்கஉண்டும், அமிர்தம் போலச் சிறந்த மாதர்கள் (பரதநூற்படி நடிக்கும்) பெருமித நடனத்தைநுகரும்படி நோக்கங்களைச் செலுத்தியுங் காலம்போக்கும் (விநோத) ஆடவர் அநேகர் (அம்மதுரா புரியில் உளர்). எ-று. (கoச)

கலவிவித் தாக வூடிக் கட்புனல் குளிக்கு நல்லார்
புலவிதீர் செவ்வி நோக்கிப் புணர்முலைப் போகந் துய்த்து
நிலைநிலை யாமை நோக்கி நெறிபடு தரும தானங்
கலைஞர்கைப் பெய்துங் காலங் கழிப்பவ ரெண்ணி லாதார்.

(இ-ள்.) புணர்ச்சியின்பங் காரணமாகச் சிறு பிணக்குற்றுக் கண்ணீரில் மூழ்கும் மனைவியரது ஊடலொழியும்படி சமயம்பார்த்து நெருங்கிய தனபோக வின் பம் அநுபவித்தும், நித்தியமாகிய முத்தியியல்பையும், அநித்தியமாகிய உலகவியல் பையும் ஆராய்ந்து, முறைமையாகத் தரும தானங்களை நூலுணர்ந்த பெரியோர்கை யிற் கொடுத்துங் காலம் போக்கும் (புண்ணிய) புருஷர் அநேகர் (அம்மதுராபுரியில் உளர்). எ-று.

பிணக்கு முதிர்ந்தால் துன்பமும், அப்பிணக்கு முதிராவிடின் இன்பமின் மையுமுடைமையின், இரண்டினுக்கு மிடையாய்ப் பெண்போகம் நுகரவேண்டும் என்பார் "புலவிதீர் செவ்வி நோக்கிப் போகந் துய்த்து" என்றார். (கoரு)

சந்தித்து மீன நோக்கி தலைவனை மூன்று போதும்
வந்தித்து மீசன் பூசை மரபுளி முடித்தும் வேத

மந்தித்து மறியான் செய்த திருவிளை யாடல் கேட்டுஞ்
சிந்தித்து மன்பர் பூசை செய்துநாள் கழிப்பார் பல்லோர்.

(இ-ள்.) அங்கயற்கணம்மையாருக்குத் தலைவராகிய சோமசுந்தரக்கடவுளைக் (காலை உச்சி மாலையாகிய) முக்காலத்திலும் அடைந்து வழிபட்டும், சிவபூசையை (ஆகம) முறைப்படி செய்தும், வேதங்கள் சமீபித்தும் உணராத சுந்தரேசப்பெருமானியற்றியருளிய திருவிளையாடல்களைச் சிரவண மனனங்கள்செய்தும், சிவபத்தர்களைப் பூசித்துங் காலம் போக்கும் அடியார்கள் அநேகர் (அம்மதுராபுரியில்உளர்)எ-று.

கற்பவை கற்றுங் கேட்டுங் கேட்டவை கருத்து ளூறச்
சொற்பொரு ளினைந்துங் கேட்போர்க் குணர்த்தியுட் டுளக்கந் தீர்த்து
மெற்பக லிரவு நீங்கு மிடத்துமெய் யறிவா னந்த
வற்புத வெள்ளத் தாழா தாழ்ந்துநாள் கழிப்பார் சில்லோர்.

(இ-ள்.) (சிவதீக்ஷைபெற்று) கற்கத்தக்க (ஞான) நூல்களைக் கற்றும், கேட்கத்தக்க நூல்களை (கற்றறிந்தோர் சொல்ல)க் கேட்டும், கேட்ட சொற்பொருள்களைக் கருத்துள் அழுந்தச் சிந்தித்தும், (ஒரு சாலை மாணுக்கராய்) வினவுவோர்க்கு உணர்த்தி (அவரது) மனமயக்கத்தை யொழித்தும், இரவும் பகலும் நீங்கியவிடத்தில், சச்சிதானந்தமயமாகிய அற்புத வெள்ளத்தில் ஆழாமல் ஆழ்ந்தும், நாள் கழிக்கும் ஞானிகள் சிலர் (அம்மதுராபுரியில் உளர்) எ-று. (கoஎ)

தன்னிக ருயர்ச்சி யில்லான் காப்பியத் தலைவனுகை
முன்னவர் மொழிந்த தேனோர் தமக்கெலா முகம னன்றோ
வன்னது தனதே யாகு மண்ணலே பாண்டி வேந்தா
யிந்நகர்க் கரச னுவா னிக்கவிக் கிறைவ னுவான்.

(இ-ள்.) தனக்கு (ஒருவரும்) ஒப்பும் உயர்வும் இல்லாதவன் காப்பியத்திற்குத் தலைவனெனப்பண்டைய இலக்கணிகள் உரைத்தது,மற்றையோர்க்கு உபசார வார்த்தையல்லவா? (ஆம்) அச் சமானுதிகரகிதம் தம்முடையதாகவே கொண்டருளிய சிவபெருமானே சோமசுந்தரபாண்டியராக இம் மதுரைநகரிற்கு அரசராயுள்ளவர். (அவரே) இக்காப்பியத்திற்குந் தலைவராயுள்ளவர். (இதுமுகமகனன்று நிச்சயம்)எ-று.

காப்பியம்-கவியாற் புனையப்படுவது. அதுகருவியாகுபெயர். அது காப்பியமெனவும் பெருங்காப்பிய மெனவும் இருவகைத்து. அவற்றுட் பெருங்காப்பியம் என்பதை,

தண்டியலங்காரம்.

"பெருங்காப் பியநிலை பேசுங் காலை - வாழ்த்து வணக்கம் வருபொரு ளிவற்றினென் - றேற்புடைத் தாகி முன்வர வியன்று - நாற்பொருள் பயக்கு நடைநெறித் தாகித் - தன்னிக ரில்லாத் தலைவனை யுடைத்தாய்-மலைகட னுடு வளநகர் பருவமிருசுடர்த் தோற்றமென் றினையன புனைந்து-நன்மணம் புணர்தல் பொன்முடி கவித்தல் - பூம்பொழி னுகர்தல் புனல்விளை யாடல் - தேம்பிழி மதுக்களி சிறுவரைப் பெறுதல்-புலவியிற் புலத்தல் கலவியிற் களித்தலென்-றின்னன புனைந்த நன்னடைத் தாகி - மந்திரந் தூது செலவிகல் வென்றி-சந்தியிற் றொடர்ந்து சருக்க மிலம்பகம் - பரிச்சேத மென்னும் பான்மையின் விளங்கி - நெருங்கிய சுவையும் பாவமும் விரும்பக்-கற்றோர் புனையும் பெற்றிய தென்ப" எனவும், "கூறிய வுறுப்பிற் சிலகுறைந் தியலினும்-வேறுபா டின்றென விளம்பினர் புலவர்" எனவும் வருவனவற்று னறிக.

காப்பிய மென்பதை, ஷை.

"அறமுத னுன்கினுங் குறைபா டுடையது
காப்பிய மென்று கருதப்படுமே" என்பதனு னறிக.

தன்னிக ருயர்ச்சி யில்லான் காப்பியத் தலைவனாக முன்னோர் மொழிந்திருத்தலின், அவை யுடைத்தாயிலாரை உடையாராகக் கவிகள் கூறுவது புனைந்துரையாதலால் "ஏனோர் தமக்கெலா முகம னன்றே" எனவும், அவை முற்றும் உடையார் சிவபெருமான் ஒருவரே யாதலின் "அன்னது தனதே யாகும் அண்ணலே" எனவும், அச்சிவபெருமானே பாண்டியர்பெருமானாக வந்தருளினமையாலும், இப் பெருங் காப்பியத் தலைவனாதலாலும் "இந்நகர்க் கரச னவா னிக்கவிக் கிறைவ னவான்" எனவுங் கூறினர். (௧0௫)

சமானாதிகரஹிதன் = ஒப்புயர்வில்லாதவன்.

என்னென வுரைப்பே னந்த விறைமகன் பண்பை யேனை
மன்னவர் வானோர் போல மதித்துரை விரிக்கற் பாற்றோ
வன்னவ னாணை யாற்றா னடப்பதிவ் வகில மென்றான்
முன்னவன் செய்த வாடல் வரவினை முறையிற் சொல்வேன்.

(இ-ள்.) அச்சிவபெருமானது திருவாணைவழியால் எல்லாவுலகங்களும் ஒழுகுமாயின், அவ்விறைவரது இயல்பை எத்தகையினதெனக் கூறுவேன். ஏனைய அரசர் - அமரர் (ஆகிய பசுக்களது இயல்பு) போல, (அப்பதியியல்பை) அளவிட்டு விரித்து உரைக்கற்பாலதோ? (அன்று ஆகலின்) அம்முதல்வராகிய சோமசுந்தரப் பெருமான் இயற்றியருளிய திருவிளையாடல்களை, யான்(வடநூலிற் கூறியமுறைப்படி மொழிபெயர்த்துக்) கூறுகின்றேன். எ-று.

முன்னவன் என்பதன் முதலில் அகரச்சுட்டு தொக்குநின்றது. (௧0௬)

## திருநகரப்படலம்.

முற்றிற்று.

---

ஆ திருவிருத்தம் - உ00.

சிவமயம்.

# திருக்கைலாயப்புகழ்ச்சி.

கலிநிலைத்துறை.

வரங்க டந்தரு ளெனமுது வானவர் முனிவோர்
கரங்க டந்தலை முகிழ்த்திடக் கருணைசெய் தவிச்சை
யுரங்க டந்துரை யுணர்வெலாங் கடந்தரு மறையின்
சிரங்க டந்தவ னிருப்பது திருக்கயி லாயம்.

(இ-ள்.) (திருமால் முதலிய) பெரிய தேவர்களும் முனிவர்களும் (யாங்கள் கருதிய) வரங்களைத் தருகவென்று கைகளைத் தமது சிரமேற் குவிப்ப, (அவரவர் எண்ணிய வரங்களை எண்ணியாங்கு) திருவருள் புரிந்து, (இயல்பாகவே) பாசவன்மையினின்று நீங்கி, சொல்லும் பொருளுமாகிய எல்லாவற்றிற்கும் அதீதப்பட்டு, அரிய வேதாந்தத்தையுங் கடந்த சிவபெருமான் (திருவோலக்கங்கொண்டு) எழுந்தருளியிருக்குந் தானந் திருக்கைலாயமென்னுந் திருமலை. எ-று.

அருளென்பது வேண்டுகோட்பொருளில்வந்த வியங்கோள்வினைமுற்று.

அவிச்சையென்பது காண்டல் அளவைமாத்திரையிற் சுட்டுணர்வுக்கிடஞ் செய்து நிற்றல் ஆதலின், அவ்விறைவன் அவ்வுணர்வுக்கெட்டாத சுயஞ்சோதியென்பார் "அவிச்சையுரங் கடந்தவன் "எனவும், அம்மலமுத்தன் மலபோதத்தால் நிகழும் வாக்குமனங்களாலறியுஞ் சொல்லளவையாலுங்கருதலளவையாலும் உணரப்படாதவனென்பார் "உரையுணர்வெலாங் கடந்தவன்" எனவும், அத்தகைய தலைவனைப் பரஞானத்தாற் கண்டாலன்றி அபரஞானத்தாற் காணமுடியாதென்பார் "வேதச்சிரங்கடந்தவன்" எனவுங் கூறினார்.

இச்சை யுரங்கடத்தல் என்றது ஈசுவரத்துவத்திற்குரிய எண்வகைக் குணங்களி லொன்று. அவை தன்வயம் - தூயவுடம்பு - இயற்கையுணர்வு - முற்றுணர்வு - பாசமோசனம் - அருள்வடிவு - முடிவிலாற்றல் - வரம்பிலின்ப மென்பவை. இதனை,

"தன்வ யத்தவன் றூய வுடம்பினன் றூணி யற்கை யுணர்வின னருதல்
பன்னு முற்ற வுணர்த லியல்பினன் பாச நீக்குதல் பேரரு ளாருதல்
மன்னு மீறில வாற்ற லுடைமையும் வரம்பி லின்பமு மாகிய வெண்குண
மின்ன தாகச்சை வாகம மோதுமெம் மீசன் றூளையெப் போதும் வணங்குவாம்."
என்பதனானறிக. (க)

புரந்த ராதிவா னவர்பதம் போதுறை புத்தேள்
பரந்த வான்பதஞ் சக்கரப் படையுடைப் பகவன்
வரந்த வாதுவாழ் பதமெலா நிலைகெட வருநா
ளுரந்த வாதுநின் றூழிதோ றோங்குமவ் வோங்கல்.

(இ-ள்.) இந்திரன்முதலிய தேவர்பதவிகளும், தாமரைமலரில் வீற்றிருக்கும் பிரமதேவனது இடம்பரந்த பெரிய சத்தியலோகமும், சக்ராயுதத்தைத் தாங்கிய திருமால் (தம்மை யடைந்தோர்) பேறுகெடாமல் வாழும் வைகுந்தமும் (ஆகிய நகரங்களெல்லாந் தத்தமக்குரிய) நிலைகெட்டு அழியவரும் பேரூழிக் காலத்தினும், தனது வலிமைகுன்றுது நின்று, அத்திருக்கைலாயமலை அவ்வூழிக் காலங்கடோறும் வளர்ந்தேவரும். எ-று.

ஊழியென்பதன் முதலில் அகரம்தொக்கு நின்றது. தோறுளன்பத னிறு தியில் உம்மை தொக்குநின்றது ; இது காலப்பன்மை யுணர்த்துவதோரிடைச்சொல்.

இந்திரன் முதலியோர் பொன்றுவர். என்பதை,

**திருநாவுக்கரசுசுவாமிகள் தேவாரம்.**

" நூறு கோடி பிரமர்க ணொங்கினூர்
ஆறு கோடி நராயண ரங்ஙனே
மாறில் கங்கை மணலெண்ணி லிந்திரர்
ஈறி லாதவ னீச னொருவனே." என்பதனுணறிக. (உ)

அரம்பை மாதரா ராடலி னரவமும் பாட
னரம்பி னோசையு முழவதிர் சும்மையு நால்வாய்
வரம்பி லோதையு மருவிவீ ழொலியுமா றுது
நிரம்பி வானமுந் திசைகளு நிமிர்வன மாதோ.

(இ-ள்.) அரம்பாஸ்திரீகள் ஆடுகின்ற நடனத்தா லுண்டாகிய ஓசையும், (அம்மாதர்கள்) பாடும் பாடலினோசையும், வீணையினோசையும், மத்தள மொலிக்கும் ஓசையும், தொங்குகின்ற வாயையுடைய யானையினது எல்லையில்லாத ஓசையும், (அம்மலையினின்று) அருவியாறுகள் வீழ்கின்ற ஓசையும் மாறுபாடின்றி, (எப்போதும் நிறைந்து) ஆகாயத்திலும் அட்டதிசைகளினும் பரவாநிற்கும். எ-று.

நரம்பு - தானியாகுபெயர். நால்வாயென்றது வினைத் தொகைநிலைக்களத்துப் பிறந்த அன்மொழித் தொகைக் காரணப்பெயர்.

அரவம் - ஓசை - சும்மை - ஓதை - ஒலி யென்பன ஒருபொருட் பன்மொழிகள். (ந)

வெந்த நீற்றொளி வெண்மையும் விமலனை யகங்கொண்
டந்த மின்றியே யசைவற விருக்கையு மருவி
வந்த கண்களுங் கொண்டவ னிருக்குமா தவர்க்குத்
தந்த தாலரன் கயிலையுந் தனதுசா ரூபம்.

(இ-ள்.) சிவபெருமான் எழுந்தருளியிருக்குந் திருக்கைலாயகிரியும், நீறிய திருநீற்றின் வெள்ளொளியையும், அச்சிவபெருமானைத் தனதிடத்துக் கொண்டு தனக்கோர் அழிவில்லாமற் சலனமற்றிருத்தலையும், அருவிகள் இழிந்து வரும் பலவிடங்களையுங்கொண்டு [நீறிய திருநீற்றின் வெள்ளொளியையும், சிவபெருமானை மனதிற்பதித்துத் தமக்கோர் இறுதியில்லாமற் சலனமற்றுச் (சிவயோகத்தில்) இருத்தலையும், அருவிபோலும் ஆனந்தபாஷ்பம் இடையறாது சொரியுங் கண்களையுங் கொண்டு] தனதிடத்திலிருக்கும் பெரிய தவத்தினருக்குத் தனது சாரூப்பியத்தைக் கொடுத்தது.

ஆங்கு வெண்டுகில் விரித்தெனக் கல்லென வார்த்து
வீங்கு காலரு வித்திரள் வெள்ளமே யன்றி
யோங்கு நான்மறைக் குடுமியி னுள்ளொளி நோக்கித்
தூங்கு மாதவர் கண்களுஞ் சொரிவன வெள்ளம்.

(இ-ள்.) அக்கைலாயகிரியில் வெள்ளிய ஆடைவிரித்தாற்போலக் கல்லென்று ஒலித்துப் பருத்து விழுகின்ற காலுடைய திரண்ட அருவியாகிய வெள்ளங்களேயல்லாமல், உயர்ந்த நான்கு வேதங்களின் உச்சியில் விளங்குஞ் சோதிரூபமாகிய சிவபெருமானை அந்தர்முகமாக வுணர்ந்து அழுந்திய பெரிய தவமுடையார் கண்களும் வெள்ளங்கள் சொரிவனவாம். எ-று. (ரு)

கோட்டு மாமலர் நிலமலர் குண்டுநீ ரெடுத்துக்
காட்டு மாமலர் கொடிமலர் கொண்டுமுட் களைந்த
பாட்டு மாமலர் கொண்டுநம் பரஞ்சுட ரடியிற்
சூட்டு மாதவர் தொகுதியுஞ் சூழ்வன வொருபால்.

(இ-ள்.) (அக்கைலேயங்கிரியின்) ஒருபக்கலில், பெருமைதங்கிய கோட்டுப் பூவும், நிலப்பூவும், சுனையிலுள்ள நீர் எடுத்துக் காட்டும் பெரிய நீர்ப்பூவும், கொடிப் பூவும் (ஆகிய இந்நால்வகைப் பூக்களைக்) கொண்டும், மனதைக் களைவிக்கும் பாடலாகிய மகிமை பொருந்திய மலரைக்கொண்டும், நமது சிவபெருமானது திருவடியிலே சூட்டுகின்ற பெருந்தவமுடையார் கூட்டங்களுஞ் சூழ்ந்துள்ளன. எ-று.

நீரிற்பூத்த மலரை நீர் எடுத்துக்காட்டும் மலர் என்றார். (சு)

கைய நாகமுங் காய்சின வுழுவையுங் கடுவாய்ப்
பைய நாகமுந் தங்கிளை பரவிய முக்க
ணைய னுகமெய் யருந்தவர் தமையடைந் தன்பு
செய்ய நாகமும் வையமும் புகழ்வதச் சிலம்பு.

(இ-ள்.) துதிக்கையுடைய யானையும், கொல்லத்தக்க கோபமுடைய புலியும், விஷம்பொருந்திய வாயையும் படத்தையுமுடைய பாம்பும், தமது சுற்றங்களால் (முன்பு) வணங்கப்பட்ட திரிநேத்திரங்களை யுடைய சிவபெருமானைக் கருதி, அரிய மெய்த்தவமுடைய முனிவர்களை அடைந்து வழிபாடு செய்தலால், தேவலோகத்தாராலும், பூலோகத்தாராலும் அத்திருமலை புகழப்படுவதாம். எ-று.

யானை வழிபட்ட சரிதத்தைத் திருவானைக்காப் புராணம் - கஜாரண்ணியப்படலத்திலும், புலி வழிபட்டதை கோயிற்புராணம் - வியாக்கிரபாதச் சருக்கத்திலும், பாம்பு வழிபட்டதை, சீகாளத்திபுராணம்-சிலந்தி முதலிய முற்கதைச் சருக்கத்திலுங் காண்க. (எ)

## திருக்கைலாயப் புகழ்ச்சி

முற்றிற்று.

---

ஆ திருவிருத்தம் - உoஎ.

சிவமயம்.

# புராணவரலாறு.

## கலிவிருத்தம்.

அளந்தி டற்கரி தாயவக் குன்றின்மேற்
களங்க றுத்துவிண் காத்தவன் கோயின்முன்
விளம்ப றுஞ்சிவ தீர்த்தத்தின் மிக்கதாய்
வளம்பெ றுஞ்சிவ தீர்த்தத்தின் மாடது.

(இ-ள்.) அளவுசெய்தற் கருமையாகிய அக்கைலாயகிரியின் மேரில், கண்டங் கறுத்துத் தேவருயிரைக்காத்த சிவபெருமானது திருக்கோயிலின் முன்னதாய் (ஏனைத்தலங்களிலுள்ள) சிவதீர்த்தங்களுட் சிறந்தமாட்சிமையுடையதாய், பலவளப்பங்களும் பொருந்திய சிவதீர்த்தத்தின் பக்கலிலுள்ளது. எ-று.

இச்செய்யுளும் அடுத்தசெய்யுளும் ஒருதொடர். சிவதீர்த்தத்தின் மாடது ஆயிரக்கான் மண்டபம் எனக் கூட்டிக்கொள்க.

களங்கறுத்து விண்காத்தவன்—என்பதை,

காஞ்சிப்புராணம்.

"அடுங்கால மிதுவென்ன விடமெழலு நனிவெருவி யயன்மா லேனோர்
கொடுங்காலன் றனைக்குமைத்த குரைகழற்கீழ்ச் சரண்புகுதக் கொதித்து வானாள்
பிடுங்காம லருள்புரிந்த பிரானன்றிப் பின்னையுமோர் பிரானுண் டென்ன
நடுங்காதார் தமைக்காணப் பெற்றிடினு மென்னுள்ள நடுங்குமாலோ."—என்பதனானறிக. (க)

தண்ட ருங்கதிர்ச் சந்திர காந்தத்திற்
பண்ட யங்க நவமணி பத்திசெய்
தண்டர் தச்ச னனேக தவஞ்செய்து
கண்ட தாயிரக் கான்மண் டபமரோ.

(இ-ள்.) விச்சுவகன்மன் பலவகைத் தவங்களைச்செய்து (அத்தவப்பலனால்) குளிர்ச்சிதங்கிய கிரணங்களையுடைய சந்திரகாந்தக் கற்களால், தொழில் நுட்பங்கள் விளங்க நவரத்தினங்களை வரிசைப்படப் பதிப்பித்து நிருமிக்கப்பட்ட ஆயிரக்கால் மண்டபம் ஒன்று உளது. எ-று.

அம்மண்டபத்திலுள்ள அருமையாகிய தொழில்நுட்பங்கள் அவ் விச்சுவகன்மனது தவப்பலனாலானவை யன்றி, அவனது நுட்பபுத்தியாலாயின வல்லவென்பார் "அண்டர்தச்ச னனேகதவஞ்செய்து கண்ட தாயிரக்கான்மண்டபம்" என்றார்.

ஆன பான்மையி லுலந்த மண்டப
ஞான நாயக னுண்மலர்த் தாடொழ
வான மீனொடு வந்து பதங்குறித்
தூன மின்மதி வைகுவ தொத்ததே.

(இ-ள்.) அவ் வாயிரக்கான் மண்டபம் (சந்திரகாந்தக்கற்களால்) அமைந்த தன்மையால், குற்றமில்லாத சந்திரன் ஆகாயத்திலுள்ள நக்ஷத்திரங்களுடன் வந்து

ஞானரூபியாகிய சிவபெருமானது அன்றலர்ந்த தாமரைமலரையொத்த திருவடிகளைப் பணிய, சமயம்பார்த்திருத்தலை யொத்து விளங்கும். எ-று.

மண்டபம் தாவள்யமாக விளங்குதலின் அதனைப் பூரணசந்திரனென்றும் அதனுறுப்புகளாக விளங்கும் பிறவற்றை நக்ஷத்திரங்களாகவும் உவமித்தார்.

ஊனமில் மதி என்பதற்குக் கலைகள் குறையாது சோடசகலையுடன் விளங்கும் பூரணசந்திரன் எனக் கொள்க. (ரு)

அன்ன மண்டபந் தன்னு ளருந்தவ
மென்ன வேங்கை யதண்மே லிருந்தனன்
பன்னு கேள்விப் பதினெண் புராணமுஞ்
சொன்ன மாதவச் சூத முனிவனே.

(இ-ள்.) அத்தன்மைத்தான ஆயிரக்கான்மண்டபத்தில் அஷ்டாதசபுராணங்களை யோதிய பெருந்தவத்தினையுடைய சூத முனிவர், அரிய தவமே ஒருருக்கொண்டிருந்ததுபோலப் புலித்தோ லாசனத்தின்பேரில் வீற்றிருந்தனர். எ-று.

வியாத முனிவர்பாற் கற்றுணர்ந்தவ ரென்பார், பன்னுகேள்வி யென்றார்.()

அந்த வேலையி லச்சிவ தீர்த்தத்தில்
வந்து மூழ்கியம் மண்டபத் தேறியே
சந்தி யாதி தவமுடித் திறிலா
விந்து சேகரன் முனிவனைத் தேத்தியே.

(இ-ள்.) அக்காலத்தில் வந்து அந்தச் சிவதீர்த்தத்திலே ஸ்நானஞ் செய்து, அவ்வாயிரக்கான் மண்டபத்திலேறி, நித்தியகன்ம முதலிய தவங்களைச் செய்து முடித்து, (எக்காலத்தும்) அழிவில்லாத சந்திரசேகரராகிய சிவபெருமானது திருவடிகளைத் தியானித்துத் துதித்து. எ-று.

இதுமுதல் மூன்று பாடல்கள் * குளகம். (சு)

சம்பு பத்தன் சதானந்த னுத்தம
னம்பு யத்த னனைய மகோதர
னும்ப ரஞ்சிய வுக்கிர வீரிய
னம்பு கேள்விப் பிரசண்ட நற்றவன்.

(இ-ள்.) சம்புபத்தன் - சதாநந்தன் - உத்தமன் - பிரமதேவனை யொத்த மகோதரன் - தேவர்களஞ்சும் (பெருந்தவத்தையுடைய) உக்கிரவீரியன் - கேட்டோர் நம்பும் வேத முதலிய நூற்கேள்விகளில் வன்மைபொருந்திய பிரசண்டனென்னும் நல்ல தபோதனன். எ-று. (எ)

ஆதி மாதவர் யாவரு மன்புமை
பாதி யாய்முற்று மாகும் பராபரச்
சோதி பால்வைத்த சூதனைத் தோத்திர
மோதி யஞ்சலித் தொன்று விறைவினா்.

---

* செய்யுள் முத்தகமெனவுங் குளகமெனவும் இருவகைப்படும். அவற்றுள் முத்தகச் செய்யுள் முடிந்துவருவது. குளகச்செய்யுள் இரண்டுமுதல் பல செய்யுள்கள் ஒன்றுகூடி முடிவது. இதனை,

"முத்தகச் செய்யு டனிநின்று முடியும்"

"குளகம் பலபாட் டொருவினை கொள்ளும்" என்னுந் தண்டியலங்காரச் சூத்திரங்களா னறிக.

(இ-ள்.) (ஆகிய இவர்கள்) முதலிய பெருந்தவத்தினையுடையோரெல்லாரும் உமா தேவியாரிடத்துப்பாதியாகி (ஏனையிடத்து)முழுதுமான சிவபெருமானிடத்தில்அன்பு பொருந்திய சூதமுனிவரைத் தோத்திரஞ்செய்து கைகூப்பி (பணிந்து) ஒன்று வினவத்தொடங்கினர். எ-று. (எ)

கலிநிலைத்துறை.

வேத வாகம புராணமே மிருதியே முதலா
வோது நூல்களின் றுணிபொரு ளுலகெலாம் பயந்த
பேதை பாகனே பரமெனத் தேர்ந்துணர் பெரிய
போத மாதவ வுனக்கியாம் புகல்வதொன் றுளதால்.

(இ-ள்.) வேதங்களும், ஆகமங்களும், புராணங்களும், ஸ்மிருதிகளும் முதலாகச் சொல்லப்பட்ட நூல்களினது துணிந்த பொருள், எல்லா வுலகங்களையும் பெற்றருளிய உமையம்மையாரை வாமபாகத்திலுடைய சிவபெருமானே மேன்மைப்பொருளென்று தெரிந்துணர்ந்த பெரியவரே! ஞானத்தையுடைய பெரிய தபோதனரே! தேவரீருக்கு நாங்கள் செய்யும் விண்ணப்ப மொன்றுண்டு. (அதாவது) எ-று. (அ)

மேரு மந்தரங் கைலைபர்ப் பதமுதல் விடைமே
லூரு மந்தர நாடவ னுறைபதி யனந்த
மாரு மந்தமில் போகம்வீ டடைவதென் றவற்றின்
கார ணங்களோ டொாத்தனை கருத்தினுக் கிசைய.

(இ-ள்.) மகாமேருகிரி - மந்தரமலை - திருக்கைலாயமலை - ஸ்ரீ பருப்பதம் முதலாகிய (தரும)விடையின்மேல் ஏறி நடத்துஞ் சிவலோகநாதன் எழுந்தருளிய ஸ்தலங்கள் அநந்தமும், எவரும் அழிவில்லாத போகத்தையும், மோட்சத்தையும் பெறுதற்குரியனவென்று, அவ்வத் திருப்பதிகளின் வரலாற்றோடு அடியேங்களது கருத்துக்குப் பொருந்தக் கூறியருளினீர். எ-று. (கூ)

ஐய மாதிமுக் குற்றமு மகலநீ யருளிச்
செய்ய வுந்தெளிந் திலேங்கள்யாஞ் சிற்றறி வுடையே
மைய னெஞ்சினே மாகையான் மயக்கற வின்னு
முய்யு மாறருள் செய்தியென் றுரைத்தனர் மன்னோ.

(இ-ள்.) ஐயம் - திரிபு - அறியாமையென்னும் முக்குற்றங்களையும் யாங்களொழியும்படி,தேவரீர் திருவாய்மலர்ந்திருக்கவும்,யாங்கள் சிற்றறிவினையுடையேங்களும், மயக்கமிகுந்த மனமுடையவரு மாகலின் (அவற்றின் உண்மைப் பொருளை) தெளியாதிருக்கின்றோம். அம்மயக்கமகல (அறிந்து) உச்சீவிக்கும்வண்ணம் இன்னமுந் திருவாய்மலர்ந்தருளவேண்டுமென்று விண்ணப்பஞ் செய்தார்கள். எ-று.

தெளிந்திலேங்கள் என்பதில் " அம்மா மென்பன முன்னிலை யாரையு-மெம்மே மோமிவை படர்க்கை யாரையும் - உம்மூர் கடதற விருபாலாரையுந் - தம்மொடு படுக்குந் தன்மைப் பன்மை " என்றபடி, தன்மையும் படர்க்கையுங் கூடிய உளப்பாட்டுத் தன்மைப்பன்மை வினைமுற்று விகுதியாகிய ஏம் என்பதன் பின்போந்த கள் என்பது விகுதிமேல் விகுதி. (க0)

தலங்க டம்மின்மிக் குள்ளதாய்த் தகுதிசா றீர்த்தக்
குலங்க டம்மின்மிக் குள்ளதாய்க் குறையிரந் தோர்க்கு
நலங்க டந்தருண் மூர்த்தியாய் நாதவே தாந்தப்
புலங்க டந்தபே ரொளியுறை தலனொன்று புகலாய்.

(இ-ள்.) ஸ்தலங்களில் மேம்பாடு பொருந்திய (புண்ணிய) ஸ்தலமாகியும், தகுதியாகிய பலதீர்த்தங்களில் மேம்பாடுபொருந்திய (புண்ணிய) தீர்த்தத்தையுடைய

தாகியும், தமது குறைசொல்லி யாசித்தவர்க்குப் பலநன்மைகளையும் அநுக்கிரகிக்கும் மூர்த்தியாகி, நாததத்துவத்தின் இறுதியையும் வேதத்தின் இறுதியையுங்கடந்த பேரொளிப் பிழம்பாகிய சிவபெருமான் வீற்றிருக்கின்ற ஒரு திருத்தலத்தையுணர்த்தி யருளவேண்டும். எ-று. (கக)

என்ற போதெதிர் முகமலர்ந் திருண்மல வலியை
வென்ற சூதனுந் தலங்களின் விசேடமாய்ந் தம்பொற்
குன்ற வார்சிலை யானிடங் கொண்டுறை பதியு
ளொன்று கேட்கவீ டளிப்பதா யுளதுமற் றதுதான்.

(இ-ள்.) என்று விண்ணப்பஞ்செய்த பொழுது, எதிரே முகமலர்ச்சிகொண்டு ஆணவமலத்தின் வன்மையைச் செயித்த சூதமுனிவரும் ஸ்தலங்களின் மேம்பாடுகளெல்லாம் ஆராய்ந்து, அழகிய பொன்மலையாகிய நெடிய வில்லைத்தாங்கிய சிவபெருமான் திருக்கோயில்கொண்டு எழுந்தருளியிருக்கும் ஸ்தலங்களுள் ஒரு ஸ்தலமுள்ளது. அத்தலங் காதாற்கேட்கவும் மோட்சத்தைத்தருவதாயுள்ளது. எ-று. (க௨)

முற்ற வோதிய புராணமூ வாறினுட் காந்தம்
பெற்ற தாறுசங் கிதையவை யாறுந்தம் பெயராற்
சொற்ற பேர்சனற் குமாரமா முனிவரன் சூதன்
கற்றை வார்சடைச் சங்கரன் மாலயன் கதிரோன்.

(இ-ள்.) (எல்லாப் பொருள்களையும்) முடிவுபெறக் கூறும் பதினெண்புராணங்களுள், காந்தபுராணமானது ஆறுஸம்ஹிதைகளையுடையது. அவ்வாறுஸம்ஹிதைகளையுந் தத்தமது பெயராற் சொன்னவர்கள், பெருமைதங்கிய சனற்குமாரமுனிவன்-சூதமுனிவன்- தொகுதியாகிய நெடிய சடையையுடைய சங்கரன்-விஷ்ணு-பிரமன்-சூரியன் (என்பவராவார்). எ-று.

"தம்பெயராற் சொற்ற" என்றதனால், அவையாறும் முறையே சனற்குமார ஸம்ஹிதை - சூதஸம்ஹிதை - ஶங்கரஸம்ஹிதை - விஷ்ணுஸம்ஹிதை- பிரமஸம்ஹிதை- சூரியஸம்ஹிதை எனக் கொள்க.

பேர் என்பது பன்மைப்பொருளதாகிய ஓரிடைச்சொல். (க௩)

இன்ன வாறனுட் சங்கர சங்கிதை யென்று
சொன்ன நூலினை யுணர்த்தினன் சங்கரன் றுணைவிக்
கன்ன போதவண் மடியினி லிருந்துகேட் டதனை
மின்னு வேல்பணி கொண்டவேள் வெளிப்பட வுணர்ந்தான்.

(இ-ள்.) இத்தகைய ஆறு சங்கிதைகளில், சங்கரசங்கிதையென்று சொல்லப்பட்ட நூலைச் சங்கரர் தமது தேவியாராகிய உமாபிராட்டியாருக்கு அறிவித்தனர். விளங்குகின்ற வேற்படையானது தனது கட்டளைப்படி நிற்கக் கொண்டருளிய முருகக்கடவுள் அச்சமயத்தில் அத்தேவியாரது திருமடியில் வீற்றிருந்து, அச் சங்கிதையை நன்கு புலப்படுமாறு உணர்ந்தருளினர். எ-று.

இன்ன-அன்ன என்பன சுட்டுத்திரிபிடைச்சொற்கள். (க௪)

குன்றெ றிந்தவேள் வழிபடு குறுமுனிக் குரைத்தா
னன்று தொட்டஃ தகத்திய சங்கிதை யாகி
நின்ற தன்னது கேட்பவர்க் கரனடி நீழ
லொன்று மின்பவீ டளிப்பதா வொருதல னுரைக்கும்.

(இ-ள்.) கிரவுஞ்சமலையைத் தூள்படுத்திய அம்முருகப்பெருமான், தன்னை வழிபாடு செய்யும் அகத்தியமுனிவருக்கு (அச் சங்கரசங்கிதையை) உபதேசித்தருளி.

னர். அக்காலந்தொட்டு அது அகத்தியசங்கிதை யென்று பெயர்கொண்டு நின்றது. அவ்வகத்திய சங்கிதையானது கேட்பவர்கட்குச் சிவபெருமானது திருவடி நீழலிற் கலத்தலாகிய பெரிய முத்தியைக்கொடுப்பதாக ஒரு தலத்தைப் புகழ்ந்துசொல்லும்.

குன்றெறிந்தவேள்—என்றது,

அகத்தியமுனிவர் தென்றிசைநோக்கிச் செல்லுகையில், கிரவுஞ்சன் என்னும் அசுரன் மலைவடிவாக நின்று தனது மாயையால் வழிதெரியாதபடி அலைக்க, அகத்தியமுனிவர் கோபங்கொண்டு "நீ இவ்வாறே மலைவடிவாகக் கிடந்து குமாரக் கடவுள் வேலாயுதத்துக்கு இரையாகுக" எனச் சபித்தேகினர். அதுமுதல், கிரவுஞ்சன் மலைரூபமாகவே இருந்தனன். அப்படியிருக்கையில், சூரபன்மனது தம்பிமார்களில் இளையோனாகிய யானைமுகம்பெற்ற தாரகாசுரன் அதில் வசித்திருந்தனன். முருகக்கடவுள் சூரனைச் சங்கரிக்கச் செல்லுகையில் அவ்விருத்தாந்தங்களை யுணர்ந்து, தமது திருக்கரத்திலுள்ள வேலாயுதத்தால் தாரகனையும் மலைவடிவாகவுள்ள கிரவுஞ்சனையும் வதைத்தனர். என்பதாம். இதனை,

கந்தபுராணம்-உற்பத்திகாண்டம்-தாரகன்வதைப்படலம்.

"தாரகன் மார்ப மென்னுந் தடம்பெரு வரையைக் கீண்டு
சீரிய கிரவுஞ் சத்திற் சேர்ந்துபட் டுருவிச் சென்று
வீரமும் புகழுங் கொண்டு விளங்கிய தென்ன வங்கட்
சோரியுந் துகளு மாடித் துண்ணென மீண்ட தன்றே."என்பதனானறிக. ()

அதிக வப்பதி யாதெனி னுலவாய் கேட்கக்
கதிய ளிப்பதென் றுரைதிய சூதனைக் கதியின்
மதியை வைத்தவ ரன்னதைப் பகரென வந்த
விதியி னிற்புகல் கின்றனன் வியாதன்மா ணாக்கன்.

(இ-ள்.) மேம்பாடு பொருந்திய அந்தத்தலம் யாதென்றால், திருவாலவாயாம். (செவியாற்) கேட்ட வளவில் மோக்ஷத்தைத் தரத்தக்கதென்று கூறிய சூதமுனிவரை, மோக்ஷத்தில் மனதை வைத்த அம்முனிவர்கள் நோக்கி,அந்தத்தலத்தின் மகாத்மியத்தைத் திருவாய்மலர்ந்தருளவேண்டுமென்று வினவ, வியாதமுனிவரது மாணாக்கராகிய சூதமுனிவர் (தொன்றுதொட்டுள்ள) முறைப்படி சொல்லத்தொடங்கினர். எ-று. (கரு)

புதிய தாமரை மேவிய பழமறைப் புத்தேள்
விதியி னூற்கடு நடைப்பரி மகஞ்செய்வான் வேண்டிக்
கதியை மாய்ந்தவர்க் குதவுதண் டுறைகெழு காசிப்
பதியின் மைந்தரோ டெய்தினன் பண்டொரு வைகல்.

(இ-ள்.) அன்று விகசித்த தாமரைப்பூவில் வீற்றிருக்கும் பழமையாகிய வேதங்களைக் கூறிய பிரமதேவன், வேதவிதிப்படி மிக்க வேகமாகிய நடையையுடைய அசுவமேதயாகஞ் செய்யவேண்டி, தன்னிடத்தில் மரித்தவர்கட்கு மோக்ஷத்தைக் கொடுக்குந் தட்பமாகிய நீர்த்துறைகள் மிகுந்த காசிக்ஷேத்திரத்திலே முன்னொரு காலத்தில், தன் (மானத) புத்திரருடன் சென்றனன். எ-று.

கதியை மாய்ந்தவர்க் குதவு காசிப்பதி—என்பதை,

காசிகண்டம்.

"எறிநீர்க் கங்கை சூழ்கிடந்த வின்ன நகரி னெஞ்ஞான்றும்
பறவை யினமும் விலங்குகளு மிறக்குங் காலைப் படர்சடையெம்

மிறைவன் புகல்தா ரகப்பிரம வுபதே சத்தா லீறில்கதி
பெறுபவென்னிலீங்குறைவோர்பெறுபேறியாமோபேசுவதே."—எனவும்,

"தூயசெழுங் கங்கையலை சுழித்தெறியும் புனலிலொரு துளியுண் டோருந்
தாய்முலைப்பான் மீட்டருந்தாத் தன்மையா லாங்குடலந் தனைவிட் டோர்க்கு
வேயனைய தோளிபங்கன் முரகத்தை வலச்செவியில் விளம்ப றன்றுற்
சேயுயர்விண் ணவருலகோ காசிநகர்க் கிணையாகச் செப்பு மாறே."— எனவும்

வருவனவற்று னறிக. (கஎ)

## எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

அகத்தியன் வியாத ணாரதன சனக ணிநான் முனிவர்கோ தமனூற்
சிகைத்தெளி வுணர்ந்த பராசரன் வாம தேவன்வான் மீகியே வசிட்டன்
சகத்தியல் கடந்த சுகன்முதல் முனிவர் தம்மொடும் பத்துவெம் பரிமா
மகத்தொழின் முடித்து மற்றவர்க் குள்ள மகிழ்வுற வழங்குந வழங்கா.

(இ-ள்.) அகத்தியர்-வியாதர்-நாரதர்-சநகர் முதலிய நான்குமுனிவர்-கௌதமர்-வேதநூன்முடிபின் துணிபொருளை யறிந்த பராசர்-வாமதேவர்-வான்மீகர்-வசிட்டர்-உலக இயற்கையை யொழிந்த சுகர் முதலாகிய முனிவர்கள் ஆகிய இவர்களோடும் பத்து அசுவமேத யாகங்களைச் செய்துமுடித்து அம்முனிவர்களுக்கு மனங் களிக்கக் கொடுக்கத்தக்க தக்ஷிணைகளைக் கொடுத்து. எ-று.

வெம்பரிமா=கடுநடையையுடைய குதிரை.

சநகாதிநால்முனிவராவர் - சனகர் - சனந்தனர்-சநாதனர்-சனற்குமாரர்.

சத்திய வுலகிற் சரோருகக் கிறைவன் சார்ந்தபின் புலப்பகை சாய்த்த
வத்திரு முனிவ ரனைவருங் காசி யடிகளை யடைந்தனர் பணிந்து
முத்திமண் டபத்தி னறமுத லாங்கு மொழிந்தருண் மூர்த்திசந் நிதியிற்
பத்தியா யிருந்து நாரத முனியைப் பார்த்தொரு வினவுரை பகர்வார்.

(இ-ள்.) தாமரைப்பூவில் வசிக்கும் பிரமதேவன் தனது சத்தியலோகத்தைச் சேர்ந்தபின்னர், ஐம்புலப்பகையையுஞ் செயித்த (தவச்) செல்வத்தையுடைய அம்முனிவர்கள் யாவரும், காசிப்பதியில் வீற்றிருக்குஞ் சிவபெருமானை யடைந்து நமஸ்கரித்து, முத்திமண்டபத்திலே தருமமுதலிய நான்கு புருஷார்த்தங்களையும் (சநகாதி முனிவரருக்கு) கூறியருளிய தக்ஷிணாமூர்த்தி சந்நிதியில் அன்பாக இருந்து, நாரதமுனிவரைப்பார்த்து ஒன்று வினவுகின்றார்கள். எ-று.

அறம் முதலிய நான்காவன :—அறம்-பொருள்-இன்பம்-வீடு. இவற்றைத் தரும அர்த்த காமிய மோக்ஷமென வடநூலார் கூறுப. (கஅ)

தலமுதன் மூன்றுஞ் சிறந்ததோர் சைவத் தலமுரை யென்னநா ரத
ன்முன், சலைமுழு துணர்ந்த சனற்குமா ரன்பாற் கற்றவன் வியாதனு மவ
ன்பா, னலமுறக் கேண்மி னென்னவவன் கதிர்வே லம்பிபான் மறைமுத
லனைத்து, மலைவற வுணர்ந்தோன் குறுமுனி யாகு மவனிடைக் கேண்
மென விடுத்தான்.

(இ-ள்.) தலமுதலிய மூவகைப்பொருள்களிலும் மேம்பட்ட ஓர் சைவத் திருப்பதியைச் சொல்லவேண்டுமென்று வினவ, நாரதமுனிவர் நூல்முழுவதையுமறிந்த சனற்குமாரமுனிவரிடத்திற் கற்றவர் வியாதமுனிவராம் ; அவர்பால் நன்மை மிகும்படி வினவுங்கள் எனக் கூற, அவ் வியாதமுனிவர் கிரணங்களையுடைய வேற்படைதாங்கிய முருகப்பெருமானிடத்து வேதாகமமுதலிய நூல்களையெல்லாம் மய

க்கமகலக் கற்றவர் அகத்தியமுனிவராகும். (ஆதலின்) அவரிடத்திற் கேட்பீராகவெ ன்று விடைதந்தனர். எ-று.

தலமுதல் மூன்று - தலம் - தீர்த்தம் - மூர்த்தி.

விடுத்தான் என்பதற்குச் செலவுகொடுத் தனுப்பினர் எனவும் பொருள்.()

மலயமா தவனை யடைந்துகை தொழுது வாழ்த்திவா தாவிவில் வலனைக்
கொலைபுரி தரும மூர்த்தியே விந்தக் குன்றடக் கியதவக் குன்றே
யலைகடல்குடித்தவருட்பெருங்கடலேயருந்தமிழ்க்கொண்டலேதென்பா
றுலைபெற நிறுத்த களைகணே யென்று சுருதியா யிரமெனத் துதித்தார்.

(இ-ள்.) பொதியமலையி லெழுந்தருளிய சிறந்த தவத்தையுடைய அகத்தியமுனிவரை யடைந்து, கைகுவித்துத் தோத்திரஞ்செய்து, வாதாவி வில்வலன் என்னும் அசுரர்களைக்கொலைசெய்த தருமஸ்வரூபமாகவுள்ளவரே! விந்தமலையின் வீறு குறையச்செய்த தவமலையே! அலைகளையுடையசமுத்திரத்தைப்பானஞ்செய்த பெரிய கிருபாசமுத்திரமே! அரிய தமிழ் மழை சுரக்கும் மேகமே! தென்றிசையானது (உயர்ந்தகாலத்தில்) துலாக்கோல்போலச் சரியாகநிறுத்திய பற்றுக்கோடே! என்று, கணக்கில்லாத வேதங்கள் (ஒன்றுகூடித் துதிசெய்தாற்போல அந்த முனிவர்கள்) தோத்திரஞ்செய்தார்கள். எ-று.

### அகத்தியர் வாதாவி வில்வலனைக் கொன்றது.

சூரபன்மன் தங்கையாகிய அசமுகியென்பவள் நாரதமுனிவரை வலிதிற் கூடிப்பெற்ற பிள்ளைகளாகிய வில்வலன் வாதாவியென்போர் தாய்பால் விடையேற்று ஓர் வனஞ்சேர்ந்து பிரமதேவனை நோக்கி ஓர் அரியயாகத்தைச் செய்து பலவரங்களைப்பெற்று, மேற்றிசையில், நான்குவழியுங் கூடும் ஓரிடத்தில் வசித்திருந்து, ஆங்கு வரும் முனிவர்களைக் கொல்லப் பர்ணசாலையொன்றமைத்து வாதாவியாகிய இளையோனை ஓர் ஆடாகச் செய்து, வில்வலன் தவவேடம்பூண்டிருந்து முனிவர்களைக் கொன்று தின்று காலங்கழித்துவரும் நாட்களில், ஒருநாள் அகத்தியமுனிவர் அவ்வழியே தென்றிசைநோக்கிவரக் கண்டு, இவரைக் கொன்று தின்னவேண்டுமென்று நினைத்து, வில்வலன் எதிர்சென்று பணிந்து முனிவரைத் தமது பர்ணசாலைக் கழைத்துவந்து உபசரித்து, அமுது அருந்தும்படி உடன்படுத்தி, ஆடாயுருக்கொண்டிருக்கும் வாதாவியை யறுத்துக் கறிசமைத்து உண்பிக்க, அகத்தியமுனிவர் அவ்வன்னத்தைப் புசித்து உட்கார, வில்வலன் "வாதாவி வருக" எனத் தம்பியைக்கூப்பிட, வயிற்றினுள்ளிருக்கும் வாதாவி ஆட்டொலிவேற்று முழங்குதல்கண்ட முனிவர் கோபங்கொண்டு "இவன்முடிக" என்று வயிற்றைததடவ, வாதாவி ஜீரணமாய் மடிந்தனன். அதுகண்டவில்வலன் தன் தம்பி இறந்தமைகருதி, தண்டாயுதமேந்திப் போர்செய்யவர, அகஸ்தியமுனிவர் ஓர் தருப்பையைப் பாசுபதாஸ்திரமாகப் பாவனை செய்து பிரயோகிக்க அவனும் மடிந்தனன் என்பது இதனை,

### கந்தப்புராணச் சுருக்கம்.

"குன்றத்தை வென்றமுனி முன்பாக வின்பான கோலஞ்ச மைந்த கொடியோன்
சென்றத்த வென்றடிப ணிந்திற்கொ ணர்ந்தமுது செய்தேக வேண்டு மெனவே
நன்றத்தொ ழிற்புரிவ மெனமூழ்கி வந்தடிசி னயமோடு செய்து தகைப்
பொன்றத்த டிந்துகறி யாகச்சி றப்பொடுபு ரிந்தே படைத்த னனரோ.

இன்பான லமுதங்க ருந்தா விருந்தவ னிருந்தா னிருந்த பொழுதின்
வன்பாவி வாதாவி வருகென்ன முனிவன்றன் வயிறா டெழுந்தி டையவே

கொன்பாவ கட்டிற்க ரங்கொண்டு ரங்கொண்ட கொண்டற்க ளத்தன டிகட்
கன்பான வன்றடவ வாதாவி கோதாவி யழிவுற்ற தன்ன பொழுதே.

பின்னுன தன்றம்பி மடிவான செயல்கண்டு பெரிதுஞ் சினந்து தருவன்
முன்னுக மதுகொண்டு முன்னுக வருபோது முனியோர் தருப்பை யதனைக்
கொன்னுறும் விடையாளிபடையாக விடுபோது கொடியோனு முடிவாகவே
யன்னுரிடந்தனை யகன்றே நெடுங்கட லயின்று னடந்தருளினன்."—என்பதனை
னறிக.

அகஸ்தியர் விந்தமலையையடக்கியது.

தென்றிசை நோக்கிவரும் அகத்தியமுனிவர் காசியடைந்து சிவாநுக்கிரகம் பெற்று, அங்கிருந்து மேருமலையோடு மாறுபட்டு அண்டகடாகமடைந்து எழுந்த விந்தகிரியின் சாரலடைந்து "ஓ விந்தமே! நமக்குச் செல்ல வழிதருவாய்" என, விந்தகிரி "திரிவிக்கிரமன்போற் பேருருக்கொண்டு சூரியசந்திர ரியக்கத்தையும் தடைசெய்யும் யான் குறிய உருவுடைய உனக்கஞ்சியோ வழிவிடுவேன்? வந்தவழியே திரும்பிச்செல்" என்று இறுமாப்போடு இசைக்க, அகத்தியமுனிவர் தமது தபோவலிமையாற் பிரமபதவி வரையிற் கையைநீட்டி அவ்விந்தகிரியின் உச்சியின்மேல் வைத்து அழுத்த, அது செருக்கொழிந்து பாதலம் புகுந்தது. என்பது. இதனை. ஷை.

"வீறுமவ் வெற்பினொடு தெற்கேக வெற்குவழி விடுவாயெனப் புகறலு
மாறுகி விந்தம திகழ்ந்தோத வேதபத மட்டுங்கரத்தி னையெடாப்
பேறுமதன்றலை யழுத்தக் குலைந்தது பிலத்தூடு போகி யதுவெண்
ணீறுடி யன்பரொடு வன்பெய்தி னோர்நிரய நெறிவீழ்தல் காட்டுநிலைபோல்."

என்பதனை னறிக. இச்சரிதம் வேறுவகையாகவும் வழங்கும். அதாவது,

நாரதமுனிவர் ஒருகாலத்தில் விந்தமலையை யடைந்து, மேருமலையின் பிரபாவங்களையெடுத்துக் கூறி, அது மேருபர்வதத்தின்மேல் இகல்கொள்ளும்படி செய்து செல்ல, விந்தம் பேருருக்கொண்டு சூரியசந்திரர்முதலானோர் செல்லவொட்டாது தடுத்து நின்றமைகண்ட தேவர், நாள் கோள்முதலியன நிலைமாறியது கருதி, பிரமலோகமடைந்து பிரமன்பால் முறையிட, அயன் பலதேவரோடும் பூவுலகமடைந்து காசிநகரஞ் சேர்ந்து ஆங்குவசிக்கும் அகத்தியமுனிவரது ஆசிரமத்தை யணுகி, அங்குள்ள பல அற்புதங்களைப் பார்த்து, உலோபாமுத்திரை யம்மையாரது காற்சுவடு தோற்றக்கண்டு அதனைப் பணிந்து, முனிவரைத் தரிசித்து, அவர்பால் விந்தகிரியின் செயலைக் கூறி அதன் வீறுகுன்றச் செய்யும்படி வேண்டிக் கொண்டனர். முனிவர் அவர் வேண்டுகோளுக் கிரங்கி "அவ்வாறேயாக" என விடையளித்து விடுத்து, தனது பத்தினியாராகிய உலோபாமுத்திரையாருடன் விந்தமலையை யடைந்தனர். அவரது வருகையைக் கண்ட விந்தபர்வதம் முனிவடிவேற்றுச் சிறிய உருவத்துடன் உடல் வியர்க்கவும், உள்ளம் பதைக்கவும், தலைநடுங்கவும், பெருமூச்சுவிட்டு முனிவர் திருவடிகளைப் பணிந்தது. அப்பொழுது அகத்தியமுனிவர் "விந்தமே! இதுமுதல் யான் பொதியமலைசென்று, ஆங்கிருந்து மீண்டும் இவ்விடம் வருமெல்லையும் இவ்வாறே அடக்கமாக இருக்கக்கடவாய்" என்று தென்றிசைநோக்கிச் சென்றனர். என்பது. இதனை,

காசிகண்டம் - அகத்தியர்விந்தவரையையடைந்த அத்தியாயம்.

"கடலேழு மொருகுடங்கைக் கொண்டகுறு முனிவருதல் காண்டலோடும்
உடல்வேர்வு வரவுள்ளம் பதைபதைப்பத் தலைபனிப்ப வுயிர்ப்புவீங்கிப்
படியூடு புகுவதெனப் பணிந்துமறைக் கிழவனொழிற் படிவந் தாங்கித்
தடமேரு வுடனிகலும் விந்தவரை முனிவனடி தாழ்ந்த தன்றே.

தன்றுணைத்தா டொழுதெழுந்த விந்தவனை முகநோக்கித் தவத்தின் மிக்கோ
னின்றுமுதல் பொதியவனை நீங்கியா னிவ்வுழிமீட் டெய்து காறு
முன்றனது பேருருவ மிவ்வண்ண மிருக்கவென வுரைத்துப் போனான்
தென்றலிளங் குழவியொடு தீந்தமிழு மினிதுலவுந் தென்பான் மன்னோ."—
எனவருவனவற்று னறிக.

அகஸ்தியர் அலைகடல் குடித்த விஷயம் இப்புராணத்தில் இந்திரன் பழி தீர்த்த திருவிளையாடலில் வரும். அருந்தமிழ்க் கொண்டல் என்ற விஷயம் முன்விளக்கப்பட்டது. அகத்தியர் தென்பால் துலைபெற நிறுத்தியது பின்வருமிடத்துக் கூறுவாம். (உக)

மூவகைச் சிறப்பு முள்ளதோர் தான மொழிகென முகமலர்ந் தருள்கூர்ந், தியாவையு முணர்ந்தோன் முத்திமண் டபத்தி னிரிரு தொகையின்வந் திறக்குஞ், சேவல்க டமையு மைங்கரன் றனையுஞ் சேவலங் கொடியுடை வடிவேற், காவலன் றனையும் வடநிழ லமர்ந்த கண்ணுதற் பரனையும் பணியா.

(இ-ள்.) (தலம் - தீர்த்தம் - மூர்த்தியாகிய) மூவகைப்பட்ட சிறப்பினையும் பொருந்திய ஒரு (சைவ) தலத்தைத் தேவரீர் சொல்லியருளவேண்டும் என்று வினவ, (பூத பௌஷிய வர்த்தமான மென்னும்) எல்லாவற்றையுமுணர்ந்த அகத்திய முனிவர் முகமலர்ச்சிகொண்டு அன்பு மிகுந்து, (அக்காசிப்பதியிலுள்ள) முத்திமண்டபத்திலே நான்கென்னுந் தொகைகொண்டுவந்து இறந்த கோழிகளையும், ஐந்து திருக்கரங்களையுடைய விநாயகமூர்த்தியையும், அழகிய சேவற்கொடியையுடைய கூர்மையாகிய வேலாயுத மேந்திய சுப்பிரமணியமூர்த்தியையும், வடவால விருக்ஷத்தின் கீழ் வீற்றிருக்கும் நெற்றிக்கண்ணையுடைய தக்ஷிணாமூர்த்தியையும் வணங்கி. எ-று.

மாகனந்த னென்னும் வேதிய னொருவன் திரேதாயுகத்தில், வேத முதலிய நூல்களைக் கற்று வல்லவனாகி ஆசார தருமங்களைக் கைவிட்டுத் தேசசஞ்சாரஞ் செய்து, காசிநகரத்தை யடைந்து வசித்திருக்கையில், ஆண்டோர் புலையன் பெரும்பொருள்கொண்டு அதனைத் தானமாக வேற்கும்படி பலரையும் வேண்டி அவ்வந்தணர் யாவரும் வெறுக்க, கடைசியாய் இம் மாகனந்தனை யடைந்து "என்பாற் றானம் பெறுதியோ" என, அவன் "கொடுப்பதவற்றை முழுதுமளித்தாற் பெறுவேன்" என, அந்நீசன் அதற்கிணங்கி அவ்வாறே யளித்துப்போயினன். அதுகண்ட ஏனைய வேதியர் இவனும் நீசனே யென்று அக் காசிப்பதியை விட்டு விலக்க, தன் மனைவியையும், இரு மக்களையும் உடன்கொண்டு, கீகடதேயத்தை நோக்கிச் செல்வோன் கங்கா தீர்த்தக் காவடி கொண்டுபோவோரைத் துணையாகக்கொண்டு அவருடன் மறைந்து செல்கையில், வேடர்கள் அவன் பொருளைக் கொள்ளைகொண்டு, மனைவிமக்களுடன் அவனையுங் கொலை செய்தனர். அவன் உயிரொழிகையில், காசியைக் கருத்திற் கொண்ட புண்ணியவசத்தால் அக்கீகடதேயத்திலே பண்டைய வுணர்ச்சியுடன் சேவலாகவும், தன் மனைவி பெடையாகவும், மக்கள் குஞ்சுகளாகவும் அங்குச் சிலநாள் வசித்திருந்து காசிக்குப் போவோர் பின் தொடர்ந்து சென்று, காசியில் முத்திமண்டபஞ் சேர்ந்து ஆங்குச் சிறிதுகாலம் வாழ்ந்திருந்து இறந்து, தன் மக்கள்மனைவியோடு சிவகதியடைந்தனன். என்பது இதனை,

**காசிகண்டம்.**

"மக்க ளிருவர் பார்ப்பாக மடமா னேக்கி பேடாக
வொக்க வுறையு நாளதனிற் காசிக் கேகு மவரோடுஞ்
செக்கர் நிறத்த கூர்வாய குட்டிச் சேவல் பெடைதொடரத்
தொக்க பார்ப்பி னொடுங்காசித் தொல்லை நகரிற் சென்றனனே.

செங்கட் கயவாய் மோட்டெருமை செழுநீர்க் குவளைப் போதருந்திப்
பங்கப் பழனத் துளைந்துழக்கப் பணில முழங்குங் காசியினிற்
றிங்க டவழ்ந்து விளிம்புரிஞ்சு முத்தி மாடத் திடைசேர
வங்க ணிறந்து படுபேற்றுற் கயிலை வரையி னடையுமால்"—என முத்திமண்டபத்தின் கதையுரைத்த அத்தியாயத்திற் காண்க. (உஉ)

அங்கயற் கண்ணி தன்னையு மெந்தை யாலவா யானையு மிதய, பங்கயத் திருத்திச் சமாதியி னிருந்து பரவச மடைந்துபார்ப் பதிக்குச், சங்கர னருளிச் செய்தசங் கிதையைத் தாரக னுடலிரண் டாகச், செங்கை வேல் விடுத்த சேவக னெனக்குத் தெருட்டினு னனையசங் கிதையில்.

(இ-ள்.) (எமது தாயாகிய) அங்கயற்கணம்மையாரையும், திருவாலவாயில் வீற்றிருக்கின்ற எமது தந்தையாகிய சோமசுந்தரக்கடவுளையும், தனது இதய தாமரையிலிருக்கச்செய்து, சமாதி கூடிப் பரவசமாகி, உமாதேவியாருக்குச் சங்கரன் அருளிச்செய்த (சங்கர) சங்கிதையை, தாரகாசுரனது உடல் இரு துண்டாக (பிளவுறும்படி), தமது செவந்த திருக்கரத்தேந்திய வேலாயுதத்தைச் செலுத்திய ஸ்ரீமுருகப்பெருமான் எனக்கு உபதேசித்தனர். அந்தச் சங்கரசங்கிதையிலே. எ-று. (உ௩)

பெறற்கருந் தவஞ்செய் தகந்தெளிந் தரிதிற் பெறுங்கதி கேட்பவர்க் கெளிதா, யுறப்படுந் தலநீர் வினுயமுச் சிறப்பு முள்ளதெத் தலத்தினுங் கழிந்த, சிறப்பினுங் கெண்ணெண் டிருவிளை யாடல் செய்தருள் வடிவெடுத் தென்று, மறைப்பொருள் விளங்கு மாலவா யதனை மண்ணின்மேற் சிவனுல கென்னும்.

(இ-ள்.) பெறுதற்கரிதாகிய தவங்களைச்செய்து மனந்தெளிவுற்று அரிதாக அடையக்கூடிய மோக்ஷத்தை, கேட்பவர்கட்கு இலேசாகக் கிடைக்கச்செய்யுந் தலமாய் நீங்கள் வினவிய (தலச்சிறப்புமுதல்) மூன்று சிறப்பினையும் உடையதும், எல்லாத்தலத்திலு மேம்பட்ட சிறப்புடையதும், வேதப்பொருளாகவிளங்குஞ் சிவபெருமான் திருவருளே திருமேனியாகக்கொண்டு அறுபத்துநான்கு லீலைகளியற்றி எக்காலத்தும் (இடையறாது) வீற்றிருக்குந் திருவாலவாயென்னுந் திருப்பதியாம். அதனைப் பூவுலகத்தின்பேரிற் சிவலோகமென்று (நூல்கள்) சொல்லும். எ-று. (உ௪)

அத்தலத் தனைய மூவகைச் சிறப்பு மளவிலா வுயிர்க்கெலாங் கருணை
வைத்தவன் செய்த திருவிளை யாட்டும் வரையுரங் கிழியவே லெடுத்த
வித்தக னெனக்கு விளம்பிய வாறே விளம்புவ னுமக்கென வந்த
வுத்தம முனிவர் யாவருங் கேட்க வுணர்த்துவான் கடலெலா முண்டான்.

(இ-ள்.) அந்தத் திருவாலவாயில் அத்தன்மையுடைய மூவகைப்பட்ட சிறப்புகளையும், எண்ணிறந்த ஆன்மகோடிக ளெல்லாவற்றிற்குங் கிருபைவைத்த சிவபெருமான் செய்தருளிய (அறுபத்துநான்கு) திருவிளையாடல்களையும், கிரௌஞ்சகிரியின் மார்பு கிழிய வேற்படையைத் தொட்டருளிய ஞானசொரூபராகிய முருகக்கடவுள் எனக்குத் திருவாய்மலர்ந்தருளியவகையே உங்கட்குச் சொல்கின்றேனென்று, சத்த சமுத்திரத்தையும் பானஞ்செய்த அகத்தியமுனிவர் தம்பால் வந்த உத்தமத் தவஞ்செய்த முனிவர்கள் யாவருங் கேட்கும்படி சொல்லத்தொடங்கினார். எ-று. (உ௫)

## புராண வரலாறு

முற்றிற்று.

---

ஆ திருவிருத்தம் - உ௩உ.

# தலவிசேடம்.

அறுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

நாட்டமொரு மூன்றுடைய நாயகனுக் கன்புடையீர் நயந்து நீவிர்,
கேட்டதல மீண்டுரைத்த திருவால வாயதனுட் கிளைத்துப் பொன்னந்,
தோட்டலர்தா மரைமுளைத்த தொருதடமுஞ் சுந்தரச்செஞ் சோதி
ஞான, வீட்டமென முளைத்தசிவ லிங்கமுமொன் றுளவின்னு மிசைப்
பக் கேண்மின்.

(இ-ள்.) ஒப்பற்ற திரிநேத்திரங்களையுடைய சிவபெருமானிடத்தில் அன்பு பொருந்திய முனிவர்களே! நீங்கள் விரும்பிக்கேட்ட தலம் யாங்கூறிய திருவாலவாயாம். அத்தலத்தில் நிறைந்து பொன்மயமாகிய அழகிய இதழ்களோடும் அலர்ந் துள்ள தாமரை முளைத்த தடாகமும், அழகிய செந்நிறம் பொருந்திய சோதிமயமாகிய ஞானத் தொகுதிபோல முளைத்த ஒரு சிவலிங்கக்குறியும் இருக்கின்றன. இன்னுஞ் சொல்லக் கேளுங்கள். எ-று. (க)

திருவால வாய்க்கிணையா மொருதலமுந் தெய்வமணஞ் செய்யப் பூத்த
மருவார்பொற் கமலநிகர் தீர்த்தமுமத் தீர்த்தத்தின் மருங்கின் ஞான
வுருவாகி யுறைசோம சுந்தரன்போ லிகபரந்தந் துலவா வீடு
தருவானு முப்புவனத் தினுமில்லை யுண்மையிது சாற்றின் மன்னே.

(இ-ள்.) திருவாலவாய்க்குச் சமானமாகிய ஒருதலமும், தெய்வத்தன்மை யுடைய மணம்வீசும்படி விகசித்த மணநிறைந்த பொற்றாமரை (தீர்த்தத்தை) ஒத்த தீர்த்தமும், அப்பொற்றாமரையின் பக்கலில் ஞானசொரூபமாய் வீற்றிருக்கின்ற சோமசுந்தரக்கடவுள்போல் இம்மை மறுமைப்பலன்களை அநுக்கிரகித்து அழியாத மோட்ச வீட்டையும் அநுக்கிரகிக்கும் கடவுளுஞ் சொல்லுமிடத்து (சுவர்க்க மத்திய பாதல மென்னும்) மூவுலகங்களிலும் இல்லை. இதுவுண்மை. எ-று. (உ)

அவ்வகைய மூன்றின்முதற் றலப்பெருமை தனைச்சுருக்கி யுறையக் கே[ண்மி
னெவ்வகைய வுலகத்துந் தருமதல மதிகமவற் றீறி லாத
சைவதல மதிகமவற் றறுபத்தெட் டதிகமவை தமிலீ ரொட்டுத்
தெய்வதல மதிகமவற் றதிகதல நான்கவற்றைச் செப்பக் கேண்மின்.

(இ-ள்.) அவ்வகைப்பட்ட (தலம் முதலிய) மூன்றில், முதலில் தலவிசேடத்தைச் சுருக்கமாகச் சொல்லக் கேளுங்கள். எவ்வகைப்பட்ட உலகங்களினும் புண்ணிய க்ஷேத்திரங்கள் சிறந்தன. அப் புண்ணிய க்ஷேத்திரங்களிலும் அழிதலில்லாத சைவஸ்தலங்கள் சிறந்தன. அச்சைவதலங்களில் அறுபத்தெட்டு ஸ்தலங்கள் சிறந்தன. அந்த அறுபத்தெட்டுஸ் தலங்களில், தெய்வத்தன்மைபொருந்திய பதினாறுஸ்தலங்கள் சிறந்தன. அப்பதினாறு ஸ்தலங்களுட் சிறந்த ஸ்தலங்கள் நான்காகும். அந்த நான்கு ஸ்தலங்களையுஞ் சொல்லக் கேளுங்கள். எ-று. (ங)

அன்னமலி வயற்புலியூர் காசிநகர் காளத்தி யால வாயா
மின்னவளம் பதிநான்கிற் றிருவால வாயதிக மெவ்வா றென்னின்
மின்னவிரம் பலங்காணக் காசிநகர் வதிந்திறக்க வியன்கா ளத்திப்
பொன்னகரம் பத்தியினால் வழிபாடு செயவளிக்கும் போகம் வீடு.

(இ-ள்.) அன்னப் பறவைகள் மிகுந்த வயல்களையுடைய சிதம்பரம்-காசி-திருக்காளத்தி-திருவாலவாய் என்பனவாம். இந்நான்குஸ்தலங்களிலுந் திருவாலவாய் (என்னும்ஸ்தலமே) மேம்பட்டது. எவ்வகையாலென்றால்,மின்னலைவீசுகின்ற பொன்னம்பலமாகிய சிதம்பரந் தன்னைத் தரிசித்தலாலும், காசிநகரந் தன்னிடத்திற் சேவித்திருந்து மரித்தலாலும், பெருமைபொருந்திய திருக்காளத்தியென்னும் அழகிய நகரம் பக்தியோடு வழிபாடுசெய்தலாலும் (ஆன்மாக்களுக்கு) போகத்தையும் மோட்சத்தையுங் கொடுக்கும். எ-று. (௪)

அறந்தழையுந் திருவால வாய்கேட்ட வுடன்போக மளிக்கு மீண்டு
பிறந்திறவாப் பேரின்பக் கதியளிக்கு மிதுவன்றிப் பிறழா தெங்கு
நிறைந்தபர னெத்தலமும் படைப்பானித் தலத்தைமுத னிருமித் திங்
ஙுறைந்தருளி ஞனன்றி யின்னமுள ததன்பெருமை யுரைப்பக்கேண்மின்.

(இ-ள்.) தருமங்கள் (முப்பத்திரண்டும்) தழைத்தோங்கிய திருவாலவாய் (தன்பெயரைச்சொல்ல ஒருவர்) கேட்ட அப்பொழுதே (முன்னர்) போகத்தைத் தராநிற்கும். பின்னர் பிறந்து இறவாமற் பேரின்பமாகிய மோட்சத்தைத் தராநிற்கும். இதுவேயல்லாமல் எவ்விடத்துஞ் சமானமாக நிறைந்துள்ள சிவபெருமான் எல்லா ஸ்தலங்களையுஞ் சிருட்டிசெய்யும் பொருட்டு இந்தத்தலத்தை முதலிற் சிருட்டித்து இவ்விடத்தில் எழுந்தருளி யிருக்கின்றனர். இதுவுமல்லாமல் இத்தலத்தின் பெருமை இன்னமும் இருக்கின்றது. யாம் சொல்லக் கேட்பீராக. எ-று. (௫)

திருவால வாயென்று கேட்டவரோ யறம்பெறுவர் செல்வ மோங்குந்
திருவால வாயென்று நினைத்தவரோ பொருளடைவர் தேவ தேவைத்
திருவால வாயிடத்துக் கண்டவரோ யின்பநலஞ் சேர்வ ரொன்றுந்
திருவால வாயிடத்து வதிந்தவரோ வீட்டுநெறி சேர்வ ரன்றே.

(இ-ள்.) திருவாலவாயென்று (ஒருவர் சொல்ல) கேட்டவர்களே தருமப்பயனை யடைவார்கள். பல செல்வங்களும் நிறைந்தோங்கிய திருவாலவாயென்று நினைத்தவர்களே பொருட்பயனை யடைவார்கள். பிரமன் முதலிய தேவர்கட்குத் தேவனாகவுள்ள சோமசுந்தரக் கடவுளைத் திருவாலவாயிடத்தில் தரிசித்தவர்களே எந்தக் காலமும் இன்பப்பயனையடைவார்கள். திருவாலவாயில் வாசஞ்செய்திருந்தவர்களே மோட்சவழியடைவார்கள். எ-று.

ஏகாரம் நான்கும் பிரிநிலைப் பொருளன. (௬)

சுரநதிசூழ் காசிமுதற் பதிமறுமைக் கதியளிக்குந் தூநீர் வையை
வரநதிசூழ் திருவால வாய்சீவன் முத்திதரும் வதிவோர்க் கீது
திரனதிகம் பரகதியும் பின்கொடுக்கு மாதலினிச் சீவன் முத்தி
புரனதிக மென்பதெவ னதற்கதுவே யொப்பாமெப் புவனத் துள்ளும்.

(இ-ள்.) தேவநதியாகிய கங்கைசூழ்ந்த காசிமுதலிய சிவஸ்தலங்கள் மறுஜனனத்தில் மோட்சத்தைக் கொடுக்கும். பரிசுத்தமாகிய நீரையுடைய வையையென்னுஞ் சிறந்த நதி சூழ்ந்த திருவாலவாய் (தன்னிடத்தில் வாழ்வோர்க்கு) சீவன்முத்தியைக் கொடுக்கும். இம்மொழி மிகவும் நிச்சயம். பின்பு பரகதியையுங் கொடுக்கும். ஆனபடியால் இச்சீவன்முத்தி புரமாகிய திருவாலவாய் (மற்றை யெல்லாத் தலங்களிலும்) அதிகப்பட்டதென்று கூறுவதாற்பயனென்ன? எல்லாப்புவனங்களிலும் (தனக்கொப்பாகிய வேறொருதலம் இல்லாததால்) அதற்கு அதுவே ஒப்பாகும். எ-று. (எ)

ஆதலினிப் பதிவிட்டுப் பிறபதியிற் போய்நோற்போ ரங்கை கொண்ட
சீதளவா னமுதேய்ப்பத் தித்திக்கத் தேம்பெய்து செய்த தீம்பா

லோதனத்தைக் கைவிட்டுப் புறங்கையை நக்குவா ரொப்பா ரிந்த
மாதலத்தின் பெருமையினை யாவரோ யளவிட்டு வழுத்தற் பாலார்.

(இ-ள்.) ஆனபடியால் இம்மதுராநகரத்தில் (தவம்புரியாது) நீங்கி, மற்ற ஸ்தலங்கட்குச் சென்று விரதங்களை ஆச்சிரயிப்போர், தமது உள்ளங்கையிலுள்ள குளிர்ச்சிதங்கிய தேவாமிர்தத்தைப்போலத் தித்திக்கும்படி தேனோடு கூட்டிச் சமைத்த மதுரமாகிய பாற்சோற்றை (புசிக்காமல்) விட்டுவிட்டு, புறங்கை நக்குவாரை யொப்பாவர். இந்தப் பெருமைபொருந்திய ஸ்தலத்தின் பிரபாவத்தை யாவர் தாம் வரையறுத்துச் சொல்லுந் தன்மையுடையோர்? (ஒருவருமிலர்) எ-று. (அ)

மேற்படி வேறு.

மற்றைய தலங்க டம்மிற் பரிமகம் வாச பேய
மற்றமில் சோட சீக மக்கினிட் டோமம் யார்க்கு
முற்றரு மிராச சூய முதன்மக முடித்த பேறுஞ்
செற்றமி றெரிச பூர்ண முதலிட்டி செய்த பேறும்.

(இ-ள்.) மற்ற ஸ்தலங்களில் அசுவமேதம் - வாசபேயம் - குற்ற மில்லாத சோடசீகம் - அக்கினிட்டோமம் யாவருக்குஞ் செய்து முடித்தற்கரிய இராசசூயம்- இவைமுதலிய யாகங்களைச் செய்துமுடித்தலால் வரும் பலன்களும் வருத்துத வில்லாத தரிசபூர்ணம் முதலிய இஷ்டிகளைச் செய்தலால் வரும் பலனும். எ-று.

இதுமுதல் மூன்றுபாடல்கள் குளகம்.

முக்கியமான யாகங்கள் இருபத்தொன்று — அவை அக்கினிஷ்டோமம் - அத்தியக்கினிஷ்டோமம் - உக்தியம் - சோடசி - வாசபேயம் - அதிராத்திரம் - அப்தோரியாமம் - அக்கினியாதானம் - அக்கினிகோத்திரம் - தரிசபூர்ணமாசம் - சாதுர்மாசியம் - நிரூடபசுபந்தம் - ஆக்கிரயணம் - சௌத்திராமணி - அஷ்டகை - பார்வணம் - சிராத்தம் - சிராவணீ - ஆக்கிரகாயணீ - சைத்திரீ - ஆசுவயுசி எனப்படும். இவற்றுள், அக்கினிஷ்டோமமுதல் அப்தோரியாம மிறுவாயுள்ள ஏழும் சோமலதை கொண்டு செய்வனவாகலின் சோமயாக மென்றும், அக்கினியாதனமுதல் சௌத்திராமணி யிறுவாயுள்ள ஏழும் அவிசாற்செய்வன வாகலின் அவிர்யாக மென்றும், அஷ்டகைமுதல் ஆசுவயுசி யிறுவாயுள்ள ஏழும் யாகாக்கினிகொண்டுசெய்வன வாகலின் பாகயாகமென்றும் பெயர்பெறும். அன்றியும் இவை ஏகாக்கினியானே முடிக்குஞ் சிறிய யாகமாக விருத்தலின், பாகயாகமென்றுஞ் சிலர் காரணங்கூறுவர்.

அசுவமேதம் இராசசூயம் முயலியவை காமியயாகங்களெனப்படும்.

வாசபேயம் - வேதியர் பனிரண்டுதினங்களில் இருபத்துமூன்று மேடங்களாற் சிவப்பிரீதியாகச் செய்யும் யாகம். சோடசீகம் - ஐந்து தினங்களில் இரண்டு மேடங்களாற் செய்யும் யாகம். இராசசூயம் - எல்லா அரசர்களையும் வென்று, அவர்கள் தமதேவல் வழிநிற்க, ஐந்து - ஏழு - ஒன்பது-பன்னிரண்டுதினங்களில் நான்கு மேடங்களால் க்ஷத்திரியர் செய்யும் யாகம். தரிசபூர்வம் - உவாக்களாகிய பூரணை அமாவாசைகளில் சிவப் பிரீதியாகச் செய்யுங் கிரியை; இதனையே இஷ்டியெனவுங் கூறுப. (கூ)

எள்ளிமு தன்னங் கன்னி யிவுளிதே ரியானை யில்லம்
வெள்ளியான் பொன்பூ ணுடை விளைவொடு பழன முன்னுத்
தள்ளரு மடிமை யாதி தானங்கள் செய்த பேறும்
வள்ளறன் காசி யாதி பதிகளில் வதிந்த பேறும்.

(இ-ள்.) எண்ணெயும், அன்னமும், கன்னியும், குதிரையும், தேரும், யானையும், வீடும், வெள்ளியும், பசுவும், பொன்னும், ஆபரணமும், வஸ்திரமும், விளைவுடன்

யையும், நினைத்துத் தள்ளுதற்கரிய அடிமையு முதலாகவுள்ள தானங்களைக் கொடுத்தலால் வரும்பலனும், சிவபெருமா னெழுந்தருளிய காசிமுதலிய புண்ணிய ஸ்தலங்களில் வாசஞ்செய்தலால் வரும் பலனும். எ-று.

புண்ணியஸ்தலங்கள் ஏழு, அவையாவன:—அயோத்தி, மதுரை, மாயை - காசி - காஞ்சி - அவந்தி - துவாரகை - என்பன. இதனை,

காசிகண்டம் - சத்தபுரியின் சிறப்புரைத்த அத்தியாயம்.

"காசிமா யாபுரி யவந்தி காஞ்சிமற்
றேசைகொ ளயோத்திவண் டுவரை யொப்பறு
மேசிலா மதுரையென் றிசைக்கு மேழ்பதி
மாசறு முத்தியை வழங்கு மென்பவே." என்பதனு னறிக. (௧0)

கங்கைகா ளிந்தி வாணி காவிரி கண்ண வேணி
துங்கபத் திரைதீம் பாலி தூயதண் பொருநை முன்னாச்
சங்கையி னதிகண் முற்று மாடிய தவத்தின் பேறு
மங்கல மதுரை தன்னில் வைகலும் வதிவோர்க் கெய்தும்.

(இ-ள்.) கங்கை - காளிந்தி - சரஸ்வதி - காவிரி - கண்ணவேணி - துங்கபத்திரி - மதுரமாகிய நீரையுடைய பாலி-பரிசுத்தமாகிய தண்ணிய தாமிரபர்ணி முதலாக, கணக்கில்லாத நதிகள் முழுவதுஞ் சென்று மூழ்கிய தவத்தால்வரும் பலனும், (ஆகிய இப்பலன்கள் யாவும்) மங்கலகரம்பொருந்திய மதுராபுரியில் எக்காலத்தும் வாசஞ்செய்வோர்க்கு (இலேசாக)க் கிடைக்கும். எ-று.

காளிந்தி- கருநிறமுடையது. இது சூரியபுத்திரி. கண்ணவேணி-சையகிரியினின்று இந்திரநீல பர்வதத்தருகே வருவது. தீர்த்தயாத்திரையுந் தவத்தின் ஒரு கூறாகக்கொள்க. இதன் பிரபாவத்தைக் காசிகண்டம்-தீர்த்தமகிமை யுரைத்த அத்தியாயத்திற் காண்க. (௧௧)

அன்னிய தலங்க டம்மி லாற்றிய பிரம கத்தி
பொன்னினைக் களவு செய்தல் கள்ளுண்டல் புனித வாசான்
பன்னியைப் புணர்த லின்ன பாதக மனைத்து மென்றுந்
தன்னிக ரால வாயில் வதிபவர் தமைவிட் டேகும்.

(இ-ள்.) மற்றையஸ்தலங்களிற் செய்த பிரமஹத்தியும், பொன்னைத்திருடுதலும், கள்ளுண்ணலும், பரிசுத்தமாகிய ஆசாரியனது பத்தினியைப் புணர்தலுமாகிய இந்த (மஹா) பாதகங்களெல்லாம், தனக்குத்தானே நிகராகியமதுராபுரியில் எக்காலத்தும் வாசஞ்செய்பவர்களை விட்டொழியும். எ-று.

இந் நான்குமே மகா பாதகங்கள் எனப்படும். இம் மகாபாவிகளுடன் ஒரு வருடகாலங் கூடியிருந்தோரும் மகா பாவிகளே யாவர். இதனை,

சூதசங்கிதை - கழுவாயுரைத்தபடலம்.

"மறையவர்ச் செகுத்தோன் கடிமது நுகர்ந்தோன்
வயங்குசெம் பொற்கள வாண்டோ
னிறையருட் குரவன் பன்னியைப் புணர்ந்தோ
னிகரலிக் கொடியரை யாரு
மறைவரான் மாபா தகரென வவரை
யடுத்தொரு வருடகட் டவரு
முறைதவிர் மாபா தகர்களே யென்ன
மொழிவதற் கையமொன் றின்றே." என்பதனு னறிக.

மேற்கூறிய நாற்பெரும்பாவிகட்கும், அவரோடு கூடிய அஞ்சாம்பாவிக்கும் பரிகாரம் வேண்டின், முறையே.

சிவதருமோத்தரம் - பரிகாரவியல்.

"அறிவிலனு யந்தணனை யதஞ்செய்தா னவல
னுயிரமா னினைநடுவே மண்டலத்தை யாக்கி
யறைகவத னடுவிருந்தே யீசான நியுத
மாக்கிடுக நிதியாளன் மகவினையை யாங்கே
பொறையுறவே சாந்திரா யணம்பின்பு புரிகை
பொதுவலது புலனைந்தும் வென்றுதிரு நீற்றின்
அறையின்மக வுருத்திரத்தை யறைந்துநினைந் தரனை
யையறுநாண் மரணமுடி வறிந்தகொலை யறுமே" என, பிரமஹத்திக்குப் பரிகார மில்லையாயினும், ஒருவாற்றாற் பரிகாரமும்,

"கனகமொரு கழஞ்சளவு கருத்தழிந்து கொண்ட
கள்வனுடல் சுடுகளரி யெல்லையினைக் கலந்தே
பனுகவகோ ரத்தைநியு தத்தைநிதி யாளன்
பனுகமகம் பொதுப்பிரமா பத்தியமே யல்லா
லெனைமுசலத் திரும்பாலே யெற்றுகமன் னவனே
யென்றழிக வல்லது வெண் ணீற்றறையை யெய்தி
முனமுரைத்த முறைமுயலின் மோசனமே யாகு
மோகவினை முன்னுணர்வின் முற்றியதீ வினையும்"— எனப் பொன் திருடினவனுக்குப் பரிகாரமும்,

"பண்ணினவே லறிவிலனய் மதுபானம் பார்ப்பான்
பரமேச னுலயத்திற் றற்புருடம் பகர்க
வெண்ணியுற விலக்கமக மியற்றிடுக நிதியன்
பராகமெனுங் கிருச்சரத்தை யியற்றியிடல் பொதுவே
வெண்ணெயழல் வெதுப்பிவாய் வாக்கலுமா மன்றி
வெதுப்பியகோ சலம்வெந்த வெண்கலமு மாகும்
புண்ணியவெண் ணீற்றறையி னுருத்திரத்தைப் புகன்று
பொருந்தலுமா முன்புகன்ற படியிரண்டும் போமே"—எனக் கட்குடித்தவனுக்குப் பரிகாரமும்,

"அற்றறிவு குருமனையை யொருநாளுற் றணைந்தா
னழலோம்புஞ் சாலைதனில் வாமத்தை யறைக
வுற்றிடவே யோரிலக்க மகமியற்றி நிதியன்
றத்தகிருச் சரமியற்ற வொக்குமிரு வருக்கு
மற்றலது குய்யத்தைப் பீசத்தைக் கருக்கான்
மாற்றியுணன் மறந்து திசை தெற்கியங்கி மரிக்க
முற்பகர்ந்த முறையுறவே நீற்றறையின் முயல்க
முயங்கிலறிந் திரண்டாநா னரகனைத்து மூழ்கும்" —எனக் குருபத்தினியைப் புணர்ந்தவனுக்குப் பரிகாரமும்,

"கூடியவ ரிவர்தம்மு ளொருவனுடன் சரதங்
கூறிடுக நியுதமுறக் குலவரையி னுச்சி
மாடுடையன் புரிந்திடுக மகவினையை யாங்கே
வருந்திடுக மற்றையதி தபனத்தை மதித்து"—என நால்வகைப்

பெரும் பாவியருள், ஒருவனோடு உறவுகொண்டவனுக்குப் பரிகாரமுங் கூறப்பட்டன. இப்பிராயச்சித்தங்களை மனுமுதலானோர் மாற்றியுங்கூறுப. விரிவஞ்சிவிடுத்தாம்.

மற்றைய தலத்திற் சாந்தி ராயண மதியந் தோறு
முற்றபே றிங்குக் கங்கு லுண்டியா லடைபே றுகு
மற்றைய தலத்தின் மாதப் பட்டினிப் பலத்தின் பேறிங்
குற்றொரு வைக லுண்டி யொழிந்தவர் பெறும்பே றுகும்.

(இ-ள்.) மற்றஸ்தலங்களில், சாந்திராயணவிரதத்தை மாதந்தோறும் ஆச்சிரயித்தலால் வரும் பலன் இம்மதுராபுரியில் இரவில் உண்ணுதலாகிய விரதத்தால் பெறும்பலனாகும். மற்ற ஸ்லங்களில் மாதோபவாசவிரதத்தால்வரும் பலன் இம் மதுராபுரியில் ஒருநாள் வாழ்ந்து உணவொழிந்து விரதம் ஆச்சிரயிப்போர் பெறுகின்ற பலனாகும். எ-று. (கஙு)

அயனக ரடைந்து நான்கு திங்களோன் பாற்றும் பேறிவ்
வியனக ரடைந்து நோக்கு மட்டமி விரத நல்கு
மயனக ரெய்தி யாறு திங்களோன் பாற்றும் பேறிவ்
வியனகர்ச் சோம வார விரதமே யளிக்கு மன்றே.

(இ-ள்.) மற்றைய ஸ்தலங்களைச் சேர்ந்து நான்குமாதம் விரதம் ஆச்சிரயித்தலால் வரும்பலன் இந்தப் பெருமை மிக்க மதுராபுரியைச் சேர்ந்து ஆச்சிரயிக்கும் அஷ்டமிவிரதம் தரும். மற்றைய ஸ்தலங்களைச் சேர்ந்து ஆறுமாதம் விரதம் ஆச்சிரயித்தலால் வரும்பலன் இந்தப் பெருமை மிக்க மதுராபுரியில் ஆச்சிரயிக்குஞ் சோமவார விரதமே தரும். எ-று.

அஷ்டமிவிரதமென்பது சிவபெருமானைநோக்கி அஷ்டமித்திதியில் நோற்கும் ஓர் நோன்பு. (கச)

ஏனைய தலத்தி லோராண் டுணவொழிந் தியற்று நோன்பா
லானபே றிங்கு நோற்குஞ் சிவனிரா வளிக்கு மிங்கே
யூனவைம் பொறியும் வென்றோன் முப்பொழு துண்டு வைகித்
தானமர்ந் தாலுங் காலுண் டியற்றுமா தவத்தோ னாகும்.

(இ-ள்.) மற்றஸ்தலங்களில் ஒருவருடம் உணவைவிட்டு ஆச்சிரயிக்கும் விரதத்தினால் உண்டாகத்தக்க பலன், இம் மதுராபுரியில் ஆச்சிரயிக்குஞ் சிவராத்திரி விரதம் ஒன்றேதரும். குற்றம்பொருந்திய ஐம்புலன்களையும் வென்ற ஒருதபசி மூன்று வேளையும் புசித்து இம் மதுராபுரியிலே வசித்திருந்தாலும், அவன் வாயுபக்ஷணஞ் செய்து தவம்புரியும் பெருமைபொருந்திய தவத்தினனாவான். எ-று. (கரு)

இந்நகான் மாட மோங்கு மாலவா யிடத்தியா னோனு
மந்தணர் தமக்கோர் முட்டி யருந்தவர் தமக்கோர் பிச்சை
தந்தவர் புறம்பு செய்த சோடச தானந் தம்மால்
வந்தபே றடைவர் பல்வே றுரைப்பதென் மதியான் மிக்கீர்.

(இ-ள்.) நான்மாடமென்று பெயர் கொண்டோங்கிய இம்மதுராபுரியில் எவராயினும் வேதியர்க்கு ஒரு பிடி அரிசியாவது, செய்தற்கரிய தவத்தினையுடையார்க்கு ஒரு பிச்சையாவது உதவினவர்கள், மற்ற ஸ்தலங்களிற்செய்த சோடசதானங்களால் வந்த பலனை அடைவராதலால் வேறு பல(வகையாக) யாம் சொல்லவேண்டுவதென்ன? அறிவிற்சிறந்த முனிவர்களே! எ-று. (கசு)

பல்வகைத் தலங்க ளெல்லாம் வைகிய பயனு மென்றும்
பல்வகைத் தீர்த்த மெல்லா மாடிய பயனு மென்றும்

பல்வகைத் தான மெல்லா நல்கிய பயனு மென்றும்
பல்வகைத் தான பூசை பண்ணிய தவத்தின் பேறும்.

(இ-ள்.) பலவிதப்பட்ட ஸ்தலங்களிலெல்லாம் வாசஞ்செய்த பலன்களும், பலவிதப்பட்ட தீர்த்தங்களிலெல்லாம் எந்நாளும் ஸ்நானம்செய்த பலன்களும், பலவிதப்பட்ட தானங்களெல்லாம் எந்நாளும் கொடுத்த பலன்களும், பலவிதப்பட்ட பூசைகளை எந்நாளும் செய்த தவத்தின் பலன்களும். எ-று.

இதுமுதல் மூன்றுபாடல்கள் குளகம். (கஎ)

பல்வகைத் தவங்க ளெல்லா முற்றிய பயனுந் தூய
பல்வகை மந்தி ரத்தி லெய்திய பயனு நூலின்
பல்வகைக் கேள்வி யெல்லா மாய்ந்துணர் பயனும் யோகம்
பல்வகை ஞான மெல்லாம் பயின்றுணர்ந் தடங்கும் பேறும்.

(இ-ள்.) பலவிதப்பட்ட தவங்களையெல்லாம் செய்துமுடித்த பலன்களும், புனிதமாகிய பலவிதப்பட்ட மந்திரங்கள் ஜபித்தலால் வரும் பலன்களும், பலவிதப்பட்ட நூல்களின் எல்லாக் கேள்விகளையும் ஆராய்ந்துணர்ந்த பலன்களும், பலவிதப்பட்ட யோகங்களையெல்லாம்பயின்று ஞானநிலையறிந்து அடங்கிய பலன்களும். எ-று.

அனையதொல் பதியி லென்றும் வைகுவோ ரடைவ ரொன்று
வினையதொல் பதிக்கு நேர்வே றில்லையிப் பதியின் மேன்மை
தனையறி பவரா ரீசன் றானன்றி யாத லாலே
வினையைவெல் பவரங் கெய்தி வதிவதே வேண்டு மாதோ.

(இ-ள்.) அத்தன்மைத்தாகிய அநாதியாயுள்ள மதுராபுரியில் எந்நாளும் வாசஞ்செய்வோர் பெறுவராதல், இந்தப் புராதனமாகிய மதுராபுரிக்குச் சமானமாகிய வேறு ஸ்தலம் (எங்கும்) இல்லை. இந்த மதுராபுரியின் பெருமையையுணர்ந்தவர் எவர்? சிவபெருமானென்றே யறியுங்கள். ஆனபடியால் வினைச்சம்பந்தத்தை வெல்லவேண்டினவன் அம்மதுராபுரியை யடைந்து (ஆண்டு) வசித்தல் வேண்டும். எ-று. (கக)

மேற்படி வேறு.

கைத்தலநான் கிரண்டுடைய மலர்க்கடவுண் மேலொருநாட் கயிலை யாதி
யெத்தலமு மொருதுலையிட் டித்தலமு மொருதுலையிட் டிரண்டுந் தூக்க
வுத்தமமாந் திருவால வாய்மிகவுங் கனத்ததுகண் டுலகின் மேலா
வைத்ததல மிதுவென்று விதன்பெருமை யாவரோ வழுத்தற் பாலார்.

(இ-ள்.) தாமரைமலரில் வீற்றிருக்கின்ற இருநான்கு திருக்கரங்களையுடைய பிரமதேவன் முன்னொருகாலத்தில், திருக்கைலாய முதலிய எல்லாத் தலங்களையும் (ஒரு தராசின்) ஒரு தட்டிலிட்டு இம்மதுராபுரியையும் ஒரு தட்டிலிட்டு இரண்டையுந் தூக்க, சர்வோத்தமத் தலமாகிய மதுராபுரி மிகவுங் கனத்திருத்தலைக்கண்டு (அப்பிரமதேவன்) சர்வலோகங்களிலும்மேலாக நிச்சயித்ததலம்இதுவானால் இம்மதுராபுரியின் பெருமையை எவர்தாம் எடுத்துச்சொல்லவல்லவர் (எவருமிலர்)? எ-று. (உ0)

அத்திருமா நகரின்பேர் சிவநகரங் கடம்பவன மமர்ந்தோர் சீவன்
முத்திபுரங் கன்னிபுரந் திருவால வாய்மதுரை முடியா ஞானம்
புத்திதரும் பூவுலகிற் சிவலோகஞ் சமட்டிவிச்சா புரந்தென் கூடல்
பத்திதரு துவாதசாந் தத்தலமென் றேதுவினாற் பகர்வர் நல்லோர்.

(இ-ள்.) அந்தச் செல்வமிகுந்த நகரத்தின் பெயர் ஒவ்வோர் காரணங்களால் சிவநகரமென்றும், கடப்பவனமென்றும், ஆண்டு வாசஞ்செய்வோரது (சீவன் முத்தியை அடையச்செய்யுங் காரணத்தால்) சீவன்முத்திபுரமென்றும், (தடாதகைப்

பிராட்டியார் கன்னிப்பருவத்து அரசுரிமை நடாத்தின காரணத்தால்) கன்னிபுரமென்றும், (சிவபெருமான் தமது கங்கணமாகிய சர்ப்பத்தினால் அந்நகரத்தினெல்லையை அளவுபடுத்திய காரணத்தால்) திருவாலவாயென்றும், (குலசேகரபாண்டியன் கடப்பவனத்தை யழித்து நகர்செய்து சாந்தி செய்யக்கருதியபோது சிவபெருமான் தமது சடையிலணிந்த சந்திரகலையைச் சிந்த அது அந்நகரமுழுதுஞ் சாந்திசெய்து மதுரமயமாக்கிய காரணத்தால்) மதுரை என்றும், அழியாதஞானத்தையுஞ் சிவயோகத்தையுங் கொடுப்பதால், பூலோகத்திலுள்ள சிவலோகமென்றும், (சிவஞான முதலிய எல்லா ஞானங்களையுந் தருதலால்) சமட்டி விச்சாபுரமென்றும், தென்றிசையிலுள்ள கூடலென்றும், சிவபக்தியைத்தருந் துவாதசாந்தத்தலமென்றும் பெரியோர்கள் சொல்லுவார்கள். எ-று.

இங்கு விரிக்காத காரணங்களை இப்புராணத்தில் ஆங்காங்கு பின்னர் வருமிடத்துக்காண்க. (உக)

என்றுதலச் சிறப்புரைத்த குறுமுனிவ னெதிரறவோ ரிறும்பூ தெய்தி
நன்றுதலப்பெருமையருள்செய்ததனைகேட்டுடலெடுத்தநயப்பாடெல்லா
மின்றடைந்தேமினிச்சுவணபுண்டரிகச்சிறப்பதனையிசைத்தியென்னக்
குன்றமடக்கியகருணைக்குன்றனையான்வரன்முறையாற்கூறுகின்றான்.

(இ-ள்.) என்று (இவ்வகையாக) தலச்சிறப்பைக் கூறியருளிய குறுமுனிவர் எதிரே முனிவர்களெல்லாரும் வியப்படைந்து தலவிசேடத்தைக் கூறியருளினீர். அதனை நன்றாகக்கேட்டு (மானிடச்) சரீரமெடுத்ததனால் உண்டாகிய பலனெல்லாவற்றையும் இப்பொழுதே பெற்றோம். இனிப்பொற்றாமரைத் தீர்த்தத்தின் விசேடத்தைக் கூறியருளவேண்டுமென்று வினவ, விந்தகிரியின் வீறடக்கிய கிருபாமலை போன்ற அகத்தியமுனிவர் வரன்முறையாகச் சொல்லத்தொடங்கினார். எ-று.

குறுமுனிவன் = குறுகிய வடிவுடையவன்; அகத்தியன். (உஉ)

மேற்படி வேறு.

விரதமா தவத்தீர் காணின் வெவ்வினை யெல்லாம் வீட்டிச்
சரதமாப் போக நல்குந் தமனிய முளரி,வந்த
வரவுமக் கனகக் கஞ்சப் பெருமையும் வளனு நன்கா
வுரைசெய்துங் கேண்மி னென்று முனிவர னுரைக்கு மன்றே.

(இ-ள்.) விரதங்களை (ஆச்சிரயித்தலே) சிறந்த தவமாகக்கொண்ட முனிவர்காள்! (கண்ணால்) தரிசித்தால் தீவினைகளையெல்லாம் அழித்து, சத்தியமாகப் போகங்களைக்கொடுக்கும் பொற்றாமரை தோன்றிய வரலாறும், அப்பொற்றாமரைத் தீர்த்தத்தின் மஹாத்மியமும் வளப்பமும் நன்கு விளங்கச் சொல்லுகிறோம் கேளுங்கள் என்று முனிசிரேஷ்டராகிய அகத்தியமுனிவர் சொல்லத்தொடங்கினார். எ-று.

வளம்-வளன். மொழியிறுதிப்போலி. (உங)

## தலவிசேடம்

முற்றிற்று.

---

ஆ திருவிருத்தம் - உ௫௫.

சிவமயம்.

# தீர்த்தவிசேடம்.

**அறுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.**

கண்ணகன் குடுமி மாடக் கடிபொழி லால வாயி
னண்ணலம் பெருமை யாரோ யளப்பவ ரவிர்தண் முத்த
வெண்ணகை யுமையா ளன்பு விளைமுகச் செவ்வி போலத்
தண்ணறுங் கமலம் பூத்த தடப்பெருந் தகைமை சொல்வாம்.

(இ-ள்.) இடமகன்ற சிகரங்களையுடைய மாடங்கள் பொருந்திய வாசனை தங்கிய சோலைகள் சூழ்ந்த திருவாலவாயில் வீற்றிருக்கின்ற அழகிய சோமசுந்தரப் பெருமானது பிரபாவங்களை அளவிட்டுச் சொல்லுவோர் எவர்? (ஒருவருமிலர். ஆயினும்) விளங்குகின்ற முத்தினை நிகர்த்த வெள்ளிய தந்தபந்தியையுடைய உமாதேவியாரது அன்பு சுரக்குந் திருமுகத்தின் பொலிவுபோலக் குளிர்ந்த நல்லவாசனை பொருந்திய பொற்றாமரைமலர்ந்த தீர்த்தத்தின் பெருஞ்சிறப்பினை (எம்மாற் கூடியவளவில்) சொல்லுவோம். எ-று. (க)

ஆற்றினுக் கரசாங் கங்கை காவிரி யாதி யாறும்
வேற்றுரு வாய மூந்நீர் வேலையும் பிறவுங் காருந்
தோற்றுமுன் றன்னை யாட்டச் சுந்தர மூர்த்தி செங்க
ணேற்றினன் கண்ட தீர்த்த மாகுமீ தெவ்வா றென்னின்.

(இ-ள்.) இத்தீர்த்தம் நதிகளுக்கரசாகிய கங்கை காவிரிமுதலிய நதிகளும், வேறுபட்டவடிவாகிய மூன்றுவகை நீரையுடைய சமுத்திரமும், மற்றுள்ளனவும், மேகங்களுந் தோன்றுவதற்கு முன் தம்மைத் திருமஞ்சனஞ்செய்விக்க, சோமசுந்தர மூர்த்தியாகிய செவ்விய கண்களையுடைய இடபவாகன ரூடராகிய சிவபெருமான் தோற்றச்செய்த தீர்த்தமாகும். அஃது எவ்விதமென்னில் (சொல்லுவோம்.) எ-று.

மூந்நீரென்பது. ஆற்றுநீர் - ஊற்றுநீர் - மழைநீர் என மூன்று நீரையுடையதெனவும், சிருட்டி - திதி - சங்காரமாகிய முத்தொழிற் குணங்களையுடையதெனவும் பொருள்படும். இது பண்புத்தொகைப் புறத்துப்பிறந்த அன்மொழித் தொகைக் காரணப் பெயர். எ-று. (உ)

அகளமா யுலக மெல்லா மொடுக்கியந் நெறியே யார்க்கு
நிகளமாம் விருத்தி தோன்ற நினைவற நினைந்து நிற்குந்
துகளிலா வறிவா னந்த சுந்தரச் சோதி மேனாட்
சகளமா முருவங் கொண்டு தாமொரு விளையாட் டாலே.

(இ-ள்.) நிஷ்களவடிவமாய் எல்லாவுலகங்களையும் ஒடுக்கி, அந்த (ஒடுக்கிய) முறைமைப்படியே எல்லாருக்கும் பந்தமாகிய விருத்தி தோன்றும்படி, நினைப்பற நினைந்து நிற்குங் குற்றமில்லாத ஞானானந்தரூபியாகிய சிவபெருமானே முற்காலத்திலே சகளத்திருமேனிகொண்டு ஒரு திருவிளையாடலைச் செய்யக்கருதி. எ-று.

இதுமுதல் மூன்று பாடல்கள் குளகம். (௩)

ஐவகைச் சிவதத்துவங்களுள் ஒன்றாகிய சத்திதத்துவத்தை அதிக்கிரமித்து நின்ற ஞானஸ்வரூபமாகிய சிவதத்துவத்தில் அக்கிராந்த விந்து பரசிவமாய் அதிஷ்டித்துச் சுத்தசிவமாய்த் தான் நிற்றலான் "அகளமாய்" என்றும், விந்து முதலிய உபாதானத்திரயங்களால் முறையே தோற்றுவித்த சுத்தாசுத்த மிச்சிரமமாகிய அகில முழுவதும் அவ்வுபாதானத்திரயங்களிலொடுக்கி, அம்முறையே மலசேடத்தான் அவ்வகிலங்களை யுதிப்பித்தலான் "உலகமெல்லா மொடுக்கி அந்நெறியே யாக்கும்" என்றும், தநுகரண புவன போகங்களில் தலைப்பட ஞானக்கிரியைகளை விளங்கச் செய்தலான் "நிகளமாம் விருத்தி தோன்ற" என்றும், தனக்கெனச் சங்கற்பமிலாதவனாகிய தலைவன் ஆன்மாக்களின் வினைக்கீடாகத் தனது சத்தியின்வழி சங்கற்பமுற்று நிற்பனாதலான் "நினைவற நினைந்து நிற்கும்" என்றும், எல்லாவற்றையுந் தானே யறியும் பேரறிவும் அவ்வறிவில் ஆனந்தமுமுடைய சுயஞ்சித்தாய் நிற்றலான் "தூகளிலாவறிவானந்தச் சுந்தரச் சோதி" என்றும், இத்தகைய இறைவன் திருவிளையாடல் கருதிச் சகளத் திருமேனி யேற்றமையான் "சகளமா முருவங்கொண்டு" என்றுங் கூறினர்.

இதுமுதல் மூன்றுபாடல்கள் குளகம். (௧)

மூக்கண னரவப் பூணை நூலினன் முகிழ்வெண் டிங்கட்
செக்கரஞ் சடையன் சூல கபாலத்தன் செங்க ணேற்றன்
மைக்கருங் கயலுண் கண்ணி வாமத்தன் முன்னும் பின்னும்
பக்கமு நந்தி யாதி கணாதிபர் பரவிச் சூழ.

(இ-ள்.) திரிநேத்திரங்களை யுடையவரும், சர்ப்பத்தை உபவீதமாக அணிந்தவரும், அரும்பிய வெண்பிறையைச் சூடிய அழகிய செவ்வானம்போன்ற சடையை யுடையவரும், சூலகபாலங்களை யேந்தியவரும், செவ்வியகண்கள் பொருந்திய இடபத்தை (வாகனமாக) உடையவரும், மைதீட்டிய கரியசேற்கெண்டையைச்செயித்த கண்களையுடைய உமாதேவியாரை இடப்பாகத்திலுடையவரும் ஆகிய சிவபெருமான், முன்னும் பின்னும் இருபக்கமும் (ஆகிய இடங்களில்) திருநந்திதேவர் முதலிய சிவகணத்தலைவர்கள் துதித்துப் புடைசூழ்ந்துவரவும். எ-று. (௨)

சென்றுதன் மேனித் தேசாற் றிசையெலாம் விளங்கச் செங்கண்
வென்றிகொ ளுரக வேந்த னகரமும் விபுதர் வேந்தன்
பொன்றிகழ் நகரும் வேதன் புரமுமால் புரமு மேலைத்
தன்றிரு நகருஞ் சென்று சஞ்சரித் தாடி மீள்வான்.

(இ-ள்.) தமது திருமேனியின் ஒளியால் எல்லாத்திக்குகளும் விளங்கும்படி சென்றருளி, செவ்விய கண்களையுடைய வெற்றிபொருந்திய சர்ப்பராசனாகிய ஆதிசேடனது நகரத்திலும், தேவர்களுக்கு இறைவனாகிய இந்திரனது பிரகாசிக்கின்ற பொன்னுலகத்திலும், பிரமனது உலகத்திலும், திருமாலினது உலகத்திலும், இவைகளுக்கு மேலுள்ள தமது சிவஞானச் செல்வம்பொருந்திய சிவலோகத்திலுஞ் சென்று சஞ்சரித்துத் திருவிளையாடல் புரிந்து திரும்புவர். எ-று.

உரகம்=பாம்பு. உரம்=மார்பு; கம்=நடத்தல். உரம்+கம்.

உரகவேந்தன் நகரம்-பாதலம். விபுதர் வேந்தன் பொன்றிகழ் நகரம்- அமராவதி, வேதன்புரம் - மனோவதி, மால்புரம் - வைகுந்தம் என்க. (௩)

அன்னபோ தயனுந் தேவர்க் கரசனு மாழி வேந்து
முன்னர்வந் திறைஞ்சி யேத்த முனிவரும் பேறு நல்கித்
தன்னக ரடைந்து நீங்காத் தனிப்பெருங் கணத்தி னோரா
யின்னருள் சுரந்து நோக்கி யிலிங்கத்திற் புகுது மெல்லை.

(இ-ள்.) அக்காலத்தில் திசைமுகனும், இமையவர்க்கதிபனாகிய இந்திரனும், (சுதரிசனமென்னும்) சக்ராயுதத்தையுடைய திருமாலும், திருமுன்வந்து பணிந்து துதிக்க, சந்தோஷத்தோடு வரங்களைக் கொடுத்து, தமது நகரமாகிய திருவாலவாயை யடைந்து,நீங்காத ஒப்பில்லாத பெரிய கணத்தலைவர்களை இனிய திருவருள் சுரந்து பார்த்து, சிவலிங்கக் குறியிற் சென்றருளுங் காலத்தில். எ-று. (ௗ)

வேத்திரப் படையோ னாதி கணாதிபர் வீழ்ந்து பால
நேத்திர வன்பார்க் கன்ப நிரஞ்சன நிருத்தா னந்த
சாத்திர முடிவுந் தேறாத் தனிமுத லொருவ வென்றுத்
தோத்திர வகையா லேத்தித் தொழுதொன்று வினவல் செய்வார்.

(இ-ள்.) பிரம்பாகிய திருப்படையையேந்திய திருநந்திதேவர் முதலிய கணாதிபர்கள் (சாஷ்டாங்கமாக வீழ்ந்து) நமஸ்கரித்து, திருநெற்றிக்கண்ணை யுடையவரோ! களங்கமில்லாதவரோ! ஆநந்தத்தாண்டவஞ் செய்பவரோ! வேதசாஸ்திரங்களின் முடியும் உணர்தற்கரிய ஒப்பில்லாத ஒரு முழுமுதற்பொருளாக உள்ளவரோ! என்று,தோத்திரரூபங்களாகத் துதிசெய்து வணங்கி ஒன்று வினவுகின்றார்கள். எ-று.

ஐயவிவ் விலிங்க மூர்த்திக் காட்டவு மடியே மூழ்கி
யுய்யவுங் கங்கை யாதி நதிகளு முலகத் துள்ளோர்
மையறு தடாக நீரு மற்றிலை யிருமைப் பேறுஞ்
செய்யவோர் தீர்த்த மிங்குண் டாக்கெனச் செப்ப லோடும்.

(இ-ள்.) ஐயனே! இச்சிவலிங்கமூர்த்திக்குத் திருமஞ்சனஞ் செய்யவும்,அடியேங்கள் ஸ்நாநஞ்செய்து உச்சீவிக்கவும், கங்கைமுதலிய (புண்ணிய) நதிகளும், உலகத்திலுள்ளவரது வினையை யொழிக்குந் தடாகத்தீர்த்தங்களும் (இங்கே) இல்லை. (ஆதலின்) இம்மை மறுமைப் பலன்களுந் தரத்தக்க ஓர் தீர்த்தத்தை ஈண்டு உண்டாக்கவேண்டுமென்று விண்ணப்பஞ் செய்யவும். எ-று. (அ)

அத்தகை யிலிங்க மூர்த்திக் கடுத்ததென் கீழ்சா ராக
முத்தலை வேலை வாங்கி நாட்டினான் முதுபார் கீண்டு
பைத்தலைப் பாந்தள் வேந்தன் பாதலங் கீண்டு போயெண்
கைத்தலப் பிரம னண்ட கடாகமுங் கீண்ட தவ்வேல்.

(இ-ள்.) அத்தன்மையுடைய சிவலிங்கமூர்த்திக்கு அடுத்த தென்கீழ்த்திசையின் பக்கமாய், சூலத்தை யெடுத்து (பூமியில்) ஊன்றியருளினார். (அந்தச் சூலாயுதம்) பழமையாகிய நிலவுலகத்தை ஊடுருவி, படம் பொருந்திய தலையையுடைய ஆதிசேடன் வீற்றிருக்கும் பாதல லோகத்தையும் ஊடுருவிச்சென்று, எட்டுக்கைகளையுடைய பிரமதேவனது அண்டகடாகத்தையுங் கிழித்தது. எ-று. (கூ)

அவ்வழிப் புறம்பு சூழ்ந்து கிடந்தபே ராழி யூழிப்
பௌவநீ ரென்ன வோங்கப் பாணியா லமைத்து வேணித்
தெய்வநன் னீரைத் தூவிக் கலந்துமா தீர்த்த மாக்கிக்
கைவரை கபாலி நந்தி கணத்தினை நோக்கிக் கூறும்.

(இ-ள்.) அவ்விடத்திலிருக்கும் நீரானது (சக்ரவாளகிரியினது) புறம்பு சூழ்ந்து கிடந்த பெரும்புறக் கடல் போலவும், ஊழிக்காலத்தில் (பெருக்கெடுத்து வரும்) கடனீர்போலவும் (பெருக்கெடுத்து) மேலோங்க, (அப்பெருக்கை அடங்குகவென்று) திருக்கரத்தால் அடக்கி, தமது சடாடவியிலுள்ள தெய்வீகம்பொருந்திய நல்ல கங்காசலத்தைத் தெளித்துக் கலந்து பெரிய தீர்த்தமாகச்செய்து, திருக்கரத்திலேந்திய (பிரம) கபாலத்தையுடைய சிவபெருமான் திருநந்திதேவரையும் (ஏனைய) கணத்தலைவர்களையும் பார்த்துத் திருவாய்மலர்ந்தருளுகின்றார். எ-று. (௧o)

இன்னமா தீர்த்தந் தன்னை யெனைப்பல தீர்த்தங் கட்கு
முன்னம்யா மிங்கு கண்ட முதன்மையா லாதி தீர்த்த
மென்னலா மினியுண் டாக்குந் தீர்த்தங்க ளெவைக்கு மேலாய்
மன்னலாற் பரம தீர்த்த மெனப்பெயர் வழங்க லாகும்.

(இ-ள்.) இந்த மகத்தாகிய தீர்த்தத்தை ஏனைய பல தீர்த்தங்கட்கும் முற்பட்டு யாம் இவ்விடத்துண்டாக்கிய முதன்மையினால், ஆதிதீர்த்தமென்று சொல்லலாம். இனி நாம் உண்டாக்கும் எல்லாத் தீர்த்தங்கட்கும் இது மேலாக நிலைபெறுதலால், பரமதீர்த்தமென்றும் பெயர் வழங்கத்தக்கதாகும். எ-று. (கக)

மருட்கெட மூழ்கி னோர்நன் மங்கலம் பெறலா னும
மருட்சிவ தீர்த்தமாகும் புன்னெறி யகற்றி யுள்ளத்
திருட்கெட ஞானந் தன்னை யீதலான் ஞான தீர்த்தந்
தெருட்கதி தரலான் முத்தி தீர்த்தமென் றிதற்கு நாமம்.

(இ-ள்.) அஞ்ஞானமகலும்படி (அத்தீர்த்தத்தில்) ஸ்நானஞ்செய்தவர்கள் நல்ல நன்மைகளைப் பெறுதலால், (இத்தீர்த்தத்திற்குப்) பெயர் அருளுடைய சிவதீர்த்தமாம். புன்மையாகிய (தீய) செயல்களை யொழித்து, மனதிற்பொதிந்த (அஞ்ஞான) இருள்கெடும்படி ஞானம் (ஆகிய ஒளியைத்)தருவதால் ஞானதீர்த்தமென்றும், மயக்கமொழிந்த மோக்ஷத்தைத் தருவதால், மோக்ஷதீர்த்தமெனவும் இத் தீர்த்தத்திற்கு (காரண)த் திருநாமங்களாம். எ-று. (கஉ)

குடைந்துதர்ப் பணமுஞ் செய்து தானமுங் கொடுத்தம் மாடே
யடைந்தெழுத் தைந்து மெண்ணி யுச்சரித் தன்பா லெம்மைத்
தொடர்ந்துவந் திறைஞ்சிச் சூழ்ந்து துதித்தெமை யுவப்பச்செய்தோ
ருடம்பெடுத் ததனு லெந்த வுறுதியுண் டதனைச் சேர்வார்.

(இ-ள்.) (இத்தீர்த்தத்தில்) ஸ்நானஞ்செய்து (விதிப்படி) தர்ப்பணத்தையுஞ் செய்து, (வேதியருக்குத்) தானங்களையுங் கொடுத்து, அத்தீர்த்தத்தருகேசேர்ந்து, திருவைந்தெழுத்தையும் (உபதேசக்கிரமப்படி) உச்சரித்து, அன்போடு எம்மை வழிபட்டு விரும்பி வணங்கிப் பிரதக்கணஞ்செய்து துதித்து, எம்மை மகிழச்செய்தவர்கள் (மானுட) தேகமெடுத்ததனுல் எந்தப் பலனை யடையவேண்டுமோ அந்தப்பலனை யடைவார்கள். எ-று. (கங)

இந்தநீ ரெம்மை யாட்டி னேழிரண் டுலகின் மிக்க
வந்தமி றீர்த்த மெல்லா மாட்டிய பயன்வந் தெய்தும்
வந்திதின் மூழ்கி யிங்கு வைகுநங் குறியை யுங்கள்
சிந்தையி லார்வம் பொங்கப் பூசனை செய்மி னென்னு.

(இ-ள்.) இந்தத் தீர்த்தத்துநீரால் எம்மை யபிடேகித்தால், பதினான்கு லோகங்களிலு மேம்பட முடிவில்லாத தீர்த்தங்க ளெல்லாவற்றையும் அபிடேகஞ் செய்வதால் வரும் பலன்கள் முற்றும் வந்து கைகூடும். (ஆனபடியால்) வந்து இத் தீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்து இவ்விடத்து வீற்றிருக்கும் நமது அருட்குறியாகிய சிவலிங்கத்தை உங்கள் மனதில் ஆசையதிகரிக்கும்படி அருச்சனை செய்யுங்கள் என்று திருவாய்மலர்ந்தருளி. எ-று.

இதுமுத லிரண்டுபாடல்கள் குளகம். (கச)

விண்ணவர் தம்மின் மேலாம் வேதிய னாகி நின்ற
பண்ணவன் றானந் நீரிற் படிந்துதன் னனுஞை யாலே

யண்ணலங் கணத்தி னேடை மூழ்குவித் தனாதி யாய
புண்ணிய விலிங்கந் தன்னுட் புகுந்தினி திருந்தான் மன்னே.

(இ-ள்.) இமையவர்களில் மேலானவராகிய அந்தணராகி நின்ற சிவபெருமான் அந்தத் தீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்து, தமது திருவாணையினுற் பெருமை பொருந்திய கணத்தலைவர்களையும் (அத்தீர்த்தத்தில்) ஸ்நானஞ்செய்வித்து, அநாதியாயுள்ள பரிசுத்தமாகிய சிவலிங்கத்துட்சென்று அந்தர்த்தானமாகி வீற்றிருந்தருளினர். எ-று. (கரு)

அந்தமா நீரா னந்தி யாதியோர் விதியாற் சோம
சுந்தரன் முடிமே லாட்டித் துகளறப் பூசை யாற்றிச்
சிந்தையில் விழைந்த வெல்லா மடைந்தனர் செம்பொற் கஞ்சம்
வந்தவா றிதுவத் தீர்த்த மகிமையு முரைப்பக் கேண்மின்.

(இ-ள்.) அந்த மகத்துவமுள்ள தீர்த்தத்தினுல், திருநந்திதேவர் முதலிய கணநாதர்கள் சோமசுந்தரப்பெருமானது திருமுடிமேல் (ஆகம)விதிப்படி அபிடேகஞ்செய்து, குற்றமறப்பூசனையியற்றி, மனதில் விரும்பிய எல்லாப்பலன்களையும் அடைந்தார்கள். செவந்தபொற்றாமரைத்தீர்த்தம் வந்தவழியிதுவாகும். அந்தத்தீர்த்தத்தின் மகிமையையுஞ் சொல்லக்கேளுங்கள். எ-று. (கசு)

வளையெறி தரங்க ஞான வாவியை நோக்கிற் பாவத்
தளையறு மூழ்கின் வேண்டுங் காமிய மெல்லாஞ் சாரு
முளமுற மூழ்கு மெல்லை முழுக்கொன்றற் குலகத் துள்ள
வளவறு தீர்த்த மெல்லா மாடிய பயன்வந் தெய்தும்.

(இ-ள்.) சங்குகளையெறிகின்ற அலைகளையுடைய ஞானமயமாகிய அந்த (பொற்றாமரை)த் தீர்த்தத்தைத் தரிசித்தால், பாவத்தொடக்கு ஒழியும். (அதில்) ஸ்நானஞ்செய்தால், விரும்பிய இஷ்டகாமியங்களெல்லாங் கைகூடும். மனம் ஒருசேர ஸ்நானஞ்செய்யுங்காலத்தில் ஒவ்வொருமுழுக்கிற்கும் உலகத்திலுள்ள எல்லையில்லாத எல்லாத் தீர்த்தங்களிலும் ஸ்நானஞ்செய்தலால் வரும் பலன்களெல்லாம் வந்து கைகூடும். எ-று. (கஎ)

மெய்யைமண் ணாதி கொண்டு விதிவழி சுத்தி செய்து
மையறு வருண சூத்த மந்திர நவின்று மூழ்கிற்
றுய்யமா தீர்த்த மெல்லாந் தோய்ந்துநான் மறையு மாய்ந்தோர்
கையிலெப் பொருளு மீந்த காசறு பேறு நல்கும்.

(இ-ள்.) உடலைமிருத்திகை முதலானவைகளால் (ஆகம)விதிப்படி சுத்தஞ்செய்து, குற்றமற்ற வருண சூக்த மந்திரத்தை யுச்சரித்து ஸ்நானஞ்செய்தால், பரிசுத்தமாகிய பெரிய எல்லாத் தீர்த்தங்களிலும் ஸ்நானஞ்செய்து, நான்கு வேதங்களையும் ஆராய்ந்துணர்ந்த வேதியர் கையில், எல்லாப் பொருள்களையுந் தானங்கொடுத்தலால் வருங் குற்றமற்ற பலன்களைத் தராநிற்கும். எ-று.

சூத்தம் - சூக்தமென்னும் வடமொழித்திரிபு.

மண்முதலியவை :—ஒன்பதுவகை மண்களும், எழுவகைத்தளிர்களும், பஞ்சகவ்வியங்களுமாம்:

“அரசுகூவிளந்துழாய்புளியால்சம்புமூலம்
புரசைமால்கரிக்கூடமும்புரவிமந்திரமுங்
கரிசிலானிரைத்தொழுவமுங்கல்விநூல்விதியின்
வரிசையாலெடுத்திடப்படுமெண்களொன்பதுமே.”

"தளிர்துழாய்புளிசம்புகூவிளம்வடமரசு
விளரிலாவறுகென்பனவிளம்புகவ்வியங்க
ளளவில்சீர்தருமங்கலமறிகபாறயிர்நெய்
வளநிலாவியகோசலமயமிவையாகும்."— எனவருந் திருவானைக்காப் புராணத்தானறிக. (கஅ)

தெய்வவித் தீர்த்தந் தன்னை நினைவின்றித் தீண்டி னாலு
மவ்விய வினையி னீங்கி யரும்பெறல் வீடு சேர்வ
ரிவ்வுரை மெய்யே யாகு மென்னெனின் மனத்தா லன்றி
வெவ்வழ றீண்டி னாலுஞ் சுடுமனல் விடுமோ வம்மா.

(இ-ள்.) தெய்வத்தன்மையுடைய இந்தத் தீர்த்தத்தை நினைப்பின்றிப் பரிசித்தாலும் பொறாமைமுதலிய தீவினையாகிய கடலினின்று நீங்கிப் பெறுதற்கரிய மோக்ஷமாகிய கரையை யடைவார்கள். இந்த வார்த்தை சத்தியமேயாம். ஏனென்றால், நினைப்பில்லாமல் வெவ்விய நெருப்பைத்தொட்டாலும், அது சுடுமெல்லாமற் சுடாதுபோமோ. எ-று.

அம்மா - வியப்பிடைச்சொல். "அம்ம வுரையசை கேண்மினென் றாகும்" என்றார். (கக)

ஆருமந் நீரி லென்று மாடினோர் சீவன் முத்தி
சேருவ ரந்நீ ராடுஞ் சிறப்புறு பயனுக் கொவ்வா
வாருண மாக்கி னேய மந்திர மிவைமுன் னான
பேருணர் வளிக்கு நானஞ் செய்தவர் பெறும்பே றெல்லாம்.

(இ-ள்.) நிறைந்துள்ள அத்தீர்த்தத்திலே எப்பொழுதும் ஸ்நானஞ்செய்தவர்கள் சீவன்முத்திபெறுவார்கள். அந்தத் தீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்தலால் வருஞ் சிறப்பு மிகுந்த பலன்களுக்கு, வாருண மந்திரஸ்நானம் ஆக்கினேய மந்திரஸ்நானம் ஆகிய இவை முதலான ஞானத்தைத்தரும் ஸ்நானஞ்செய்தவர்கள் பெறும் பலன்களெல்லாம் ஒப்பாகமாட்டா. எ-று.

ஆருமென்றதற்கு எவரேனும் எனப் பொருள்கூறினும் பொருந்தும்.

வாருணமுதலிய ஸ்நானங்கள் எண்வகை. அவை வாருணஸ்நானம் - ஆக்கினேய ஸ்நானம் - மந்திரஸ்நானம் - மானசஸ்நானம் - திவ்வியஸ்நானம் - மாருதஸ்நானம் - பார்த்திபஸ்நானம் - கௌரவஸ்நானம் எனப்படும். அவற்றுள், வாருணஸ்நானம் - ஜலத்தில் மூழ்குதல். ஆக்கினேய ஸ்நானம் - அக்கினி சம்பந்தமான பஸ்மத்தை உத்தூளனஞ்செய்தல். மந்திரஸ்நானம் - சத்தியோஜாதமுதலிய மந்திரங்களை யுச்சரித்தல். மானசஸ்நானம்- பிரணவோச்சாரத்துடன் தியானித்தல். திவ்வியஸ்நானம் - சூரியகிரணத்துடன் தோற்றியமழையிற் கிழக்குநோக்கி ஏழடிநடத்தல். மாருதஸ்நானம் - காற்றிற்கலந்த பசுவின் பாததூளியில் எதிரிட்டுச் செல்லல். பார்த்திப ஸ்நானம் - சிவாலயம் அல்லது நதிகளிலுள்ள மிருத்திகையைக் குழைத்துத் திரிபுண்டரமாகத் தரித்தலும், குழைத்த தீர்த்தத்தைப் புரோக்ஷித்துக் கொள்ளுதலுமாம். கௌரவஸ்நானம் - ஆசிரியர் பாததீர்த்தத்தை மூழ்குதலும், புரோக்ஷித்துக்கொண்டு உட்கொள்ளுதலுமாம். என்பர்.

இவற்றுள், வாருணம் - ஆக்கினேயம் - மந்திரம் - மானசமென்னும் முந்திய நான்கும் நித்தியம் எனவும், திவ்வியம் - மாருதம் - பார்த்திபம் - கௌரவமென்னும் பிந்திய நான்கும் நைமித்திகம் எனவும் பெயர் பெறும். திவ்வியம்-மகேந்திரமெனவும், மாருதம் - வாயவ்வியமெனவும் வழங்காநிற்கும்.

இவற்றின் விரிவு முதலியவற்றைக் காமிகாகமத்தும், சைவபூஷணத்தும் கண்டுகொள்க. இவையேயன்றி, காபிலம் முதலாக ஸ்நானம் பலதிறப்படும். அவை வந்துழிக்கூறுவாம். (உ0)

அன்னநீர் தனையு மாடி யாலவா யுடைய நாதன்
றன்னையும் பணிவோன் மேலைப் பரகதி தன்னைச் சாரு
மென்னநன் னூலிற் சொன்ன பவித்திர மெவைக்கு மேலாய்ப்
பன்னரும் புனித மான பவித்திர மாகி நிற்கும்.

(இ-ள்.) அந்தப் பொற்றாமரைத் தீர்த்தத்திலும் ஸ்நானஞ்செய்து, திருவாலவாயையுடைய சோமசுந்தரப் பெருமானையும் பணிகின்றவன், மறுபிறப்பிலே மேன்மைதங்கிய மோக்ஷபோகத்தையடைவானென்று, நல்ல நூல்களில் எடுத்துச்சொல்லிய (அத் தீர்த்தமானது) பரிசுத்தம் பொருந்திய எல்லாத் தீர்த்தங்கட்குஞ் சிறந்து சொல்லுதற்கரிய புனிதமாகிய பரிசுத்த தீர்த்தமாய் நிலைபெற்றிருக்கின்றது. எ-று.

பவித்திரம் - பாவத்தை விலக்கத்தக்கது. (உக)

ஆதர விலனு யந்நீ ராடினேன் சுவர்க்கஞ் சேரு
மாதர வுளனாய் மூழ்கி வானவ ராதி யானோர்க்
காதர வரிசி யெள்ளுந் தருப்பண மமையச் செய்தோ
னாதர வேள்வி முற்று மாற்றிய பயனைச் சேரும்.

(இ-ள்.) (இஷ்டபோகங்களில்) ஆசையில்லாதவனும் அந்தத் தீர்த்தத்தில் ஸ்நானஞ் செய்தவன் சுவர்க்கம் (முதலிய காமியங்களை) அடையப்பெறுவான். (இஷ்டபோகங்களில்) ஆசையுடையவனும் ஸ்நானஞ்செய்து வானவர் முதலானவர்கட்கு விருப்பத்தோடு அரிசியையும் எள்ளையுங் கொண்டு தருப்பணத்தை விதிமுறை பொருந்தச்செய்து முடித்தவன், அன்புடன் யாகங்கள் எல்லாவற்றையுஞ் செய்தலால் வரும் பலன்களை யடைவான். எ-று. (உஉ)

ஏனைமா தலங்க டம்மி லிருந்துசெய் விரதம் பூசை
தானமா தரும மோமந் தவஞ்செபந் தியானந் தம்மா
லானமா பயனிற் கோடி யதிகமா மடைந்து மூழ்கி
ஞானமா தீர்த்த ஞாங்க ரிருந்தவை நயந்து செய்யின்.

(இ-ள்.) ஏனைய மகாஸ்தலங்களிலிருந்து செய்யும் விரதங்கள்- பூசைகள்- தானம் - பெரிய தருமம் - ஓமம் - தவம் - செபம் - தியானம் (ஆகிய இவைகளால்) வருவதாகிய பெரிய பலனைக்காட்டிலும், ஞானவடிவாகிய பெரிய பொற்றாமரைத் தீர்த்தத்தையடைந்து (அதில்) ஸ்நானஞ்செய்து, (அதன்) கரையிலிருந்து விரதமுதலியவற்றை ஆசையுடன் செய்தால் (அதனால்) வரும் பலன் ஒருகோடியதிகமாம். எ-று.

பிறந்தநா ளந்நீர் மூழ்கின் மேலைவெம் பிறவிப் பௌவ
மறிந்திடு மறிதேள் கும்ப மதிகளின் மூழ்கித் தென்பா
லுறைந்தவர் பொருட்டுப் பிண்ட முதவினு லவர்தா மாழ்ந்து
நிறைந்திடு பிறவிப் பௌவ நின்றுமே லெழுவ ரன்றே.

(இ-ள்.) பிறந்த நக்ஷத்திரத்தில் அந்தத் தீர்த்தத்திலே ஸ்நானஞ்செய்தால் தொன்றுதொட்டுள்ள பெரிய பிறவியாகிய கடல் வற்றும். சித்திரை - கார்த்திகை - மாசி என்னும் மாதங்களில் (அதில்) ஸ்நானஞ்செய்து பிதிரர்கள் பொருட்டுப் பிண்டம் கொடுத்தால் அவர்கள் அமிழ்ந்துள்ள ஆழமாகிய பிறவிக்கடலிலிருந்து (நீங்கி) மோக்ஷமாகிய கரையைச் சேருவார்கள். எ-று.

மறி=ஆடு. தேள்=விருச்சிகம். கும்பம்=குடம். இவை முறையே மேடராசியிற் சூரியன் சஞ்சரிக்குஞ் சித்திரைமாதத்தையும், விருச்சிகராசியிற் சூரியன் சஞ்சரிக்குங் கார்த்திகைமாதத்தையும், கும்பராசியிற் சூரியன் சஞ்சரிக்கும் மாசிமாதத்தையு முணர்த்தின. (உ௪)

அத்தட மருங்கின் யாவர் தென்புல மடைந்தோர் தங்கள்
சித்தமா சகற்ற வேண்டிச் செய்கடன் முடிக்கி னன்னோ
ரெத்தனை யெண்ணோர்ந் தாலு மெள்ளுக்கா யிரமாண் டாக
வத்தனை யாண்டு மட்டு மவரைவிண் ணுள வைப்பார்.

(இ-ள்.) தென்றிசை யடைந்துள்ள பிதிரர் தங்கள் மனமுதலிய திரிகரணங்களால் தேடிய பாவங்களை நீக்கக் கருதி, அந்தத் தீர்த்தத்தின் கரையில், செய்யுங் கடன்களைச்செய்துமுடிக்க அப்பிதிரர்கள் பொருட்டு எத்தனை எள்ளை அவர்கள் சேர்ந்தாலும் ஓரெள்ளுக்கு ஓராயிரம் வருடமாக அவ்வளவு வருடமட்டும், (மனப் பரிசுத்தத்துடன்) அப்பிதிரர்களைச் சுவர்க்கலோகமாள (அவர்கள்) நிறுத்துவார்கள். எ-று.

“யாவர் தென்புலமடைந்தனரோ அவர்களுடைய சித்தமாசகற்றவேண்டி அத்தடமருங்கிற் செய்கடன் முடிக்கின் முடிப்போர் எத்தனை எண்ணேர்ந்தாலும் எள்ளொன்றுக் காயிரம் ஆண்டாக அவரை விண்ணுளவைப்பர்.” என முடித்துக் கொள்க. (உ௫)

மூவகை யுலகி லுள்ள தீர்த்தமு முறையா லென்றுஞ்
சேவகஞ் செய்யு மிந்தத் தீர்த்தமெந் நாளு மூழ்கி
யேவரந் நீரா லென்று மீசனைப் பூசை செய்வோ
ராவரிப் பிறவி தன்னி லவர்கதிக் கரையைச் சார்வார்.

(இ-ள்.) (சுவர்க்க-மத்திய-பாதலமென்னும்) திரிலோகங்களிலுமுள்ள தீர்த்தங்களெல்லாம், கிரமப்படி எக்காலமுஞ் சேவித்து ஏவல்வழிநிற்கும் இந்தத்தீர்த்தத்தில் எக்காலமும் ஸ்நானஞ் செய்து, எவர் எப்பொழுதும் அந்தத் தீர்த்தநீராற் சிவபெருமானைப் பூசை செய்வரோ, அவர் இந்தப் பிறப்பிலேயே மோட்சக்கரையை யடையப்பெறுவர். எ-று. (உ௬)

விடுத்திட லரிய நித்த வேள்விமா விரதம் வேதம்
தடுத்திட லரிய தானந் தவமிவை தரும்பே றெல்லா
மடுத்ததன் கரையில் வைகி யீசனை யருச்சிப் போர்க்குக்
கொடுத்திடு புண்ணி யத்திற் கோடியி லொன்றுக் கொவ்வா.

(இ-ள்.) விடுத்தற்கரிய (அக்கினிஷ்டோமமுதலிய) நித்திய ஆகுதியும்,பெரியவிரதம் - வேதமோதல் - தடுத்தற்கரிய தானம் - தவம் (முதலாகிய) இவைகள் தரும் பலன்கள்யாவும், அத்தீர்த்தத்தின் கரையிற் சென்றிருந்து, சிவபெருமானை அருச்சனை செய்வோர்க்குத் தானங்கொடுக்கும் புண்ணியப்பலன்களிற் கோடிப் பங்கில் ஒருபங்குக்காயினும் ஒப்பாகமாட்டா. எ-று. (உ௭)

உம்மையிற் பிறவி தோறு நியமநல் லொழுக்கம் பூண்டு
பொய்ம்மையில் விரதந் தானந் தவஞ்செய்து புனித ராகிச்
செம்மைநன் னெறியு ணின்ற சித்தருக் கலதித் தீர்த்த
மிம்மையி லடைந்து நித்த மாடுதற் கெய்தா தன்றே.

(இ-ள்.) இறந்துபோன பிறவிகளில், நியமமாக நல்லொழுக்கங்களைப் பூண்டு, உண்மையாகிய விரதத்தையுந் தானத்தையுந் தவத்தையுஞ்செய்து, பரிசுத்தமுடையவர்களாகி, நடுவுநிலைமையாகிய நல்லொழுக்கத்தினின்ற சித்தமுடையவர்களுக்கன்றி

இத்தீர்த்தமானது (மற்றையோர்க்கு) இப்பிறப்பிலடைந்து நாடோறும் ஸ்நானஞ் செய்தற்குக் கிட்டாது. எ-று, (உஅ)

மேற்படி வேறு.

மதிகதிரோ னிடத்தொடுங்கு தினந்திங்கட் பிறப்பரவம் வாயங் காந்து, கதிர்கடமை விழுங்குதினம் விதிபாத மிந்நாளிற் கருதி மூழ்கித் துதிகடருப் பணந்தானம் புரிதன்மனு வோதுதலத் தொகையொன் றற்கொன், றதிகபல னம்முறைநூ றாயிரநூ றாயிரமோ ரனந்த மாகும்.

(இ-ள்.) சந்திரன் சூரியனிடத்தில் ஒடுங்குந்தினமாகிய அமாவாசையும்,மாதப்பிறப்பும், (இராகுகேதுக்களாகிய) சர்ப்பங்கள் வாயைத்திறந்து சந்திரசூரியர்களை விழுங்கும் கிரகணகாலமும், விதிபாதமுமாகிய இந்தப் புண்ணியதினங்களில் (இஷ்டகாமியங்களை) நினைத்து ஸ்நானஞ்செய்து, துதித்தல் - தர்ப்பணஞ்செய்தல் - தானங்கொடுத்தல்- மந்திரஞ்செபித்தல் ஆகிய அத்தொகையுள் ஒன்றுக்கொன்று அதிகபலன் கொடுப்பதாகும். (எப்படியென்றால்) அம்முறைப்படி ஒன்றுக்கு நூறும், (ஒன்றுக்கு) ஆயிரமும், (ஒன்றுக்கு) நூறாயிரமும், (ஒன்றுக்கு) ஒரு அனந்தமுமாம். எ-று.

விதிபாதம் என்பது யோகங்கள் இருபத்தேழனுள் ஒன்று. இது பிதிர் கர்மவிசேடங்களுக்குரிய சிரார்த்தவகை தொண்ணூற்றாறில் ஒன்றென்பர். (உகூ)

பொருவரிய தகர்த்திங்க டலைத்திங்க ளிவையுதிக்கும் போது மூழ்கி
னொருபதினா யிரமடங்காஞ் சுறவுகவைத் தாளலவ னுதிப்பின் மூழ்கி
னிருபதினா யிரமடங்கா மிந்திரவி யிடத்தொடுங்கு மிந்து வாரம்
வருவதறிந் தாடிமனு வோதன்முதற் செயினனந்த மடங்குண் டாகும்.

(இ-ள்.) சமானமில்லாத சித்திரைமாதம், அற்பிசிமாதம் ஆகிய இவை பிறக்கும் (புண்ணிய) காலங்களில் ஸ்நானஞ்செய்தால் (மற்றமாதங்களில் வரும் பலன்களைக் காட்டிலும்) ஒருபதினாயிரம்பங்கு அதிகபலனாகும். தைமாதம்- ஆடிமாதம் ஆகிய இவை பிறக்கும் (புண்ணிய) காலங்களில் ஸ்நானஞ்செய்தால் இருபதினாயிரம் பங்கு அதிகமாம். சந்திரன் சூரியனிடத்து ஒடுங்குகின்ற அமாவாசை சோமவாரத்தில் வருவதறிந்து (அத்தீர்த்தத்தில்) ஸ்நானஞ்செய்து மந்திரஞ்செபித்தல் முதலியவைகளைச் செய்தால் அனந்தம்பங்கு அதிகபலன் உண்டாகும். எ-று.

தகர்=ஆடு. கவைத்தாள் அலவன்=பிளவுபட்டகாலையுடையநண்டு. (௩0)

பிரயாகை தனின்மகர மதிநாண்முப் பதுங்குடைந்து பெறும்பே றிந்தத், திரையார்பைந் தடத்தொருநாண் மூழ்குவோன் பெறும்விரத சீலம் பூண்டு,வரையாம லொருவருடம் படிந்துமையை யமரசிகா மணியாம் வேத, வுரையானை வழிபடுமேன் மலடிக்கு நன்மகப்பே றுண்டா மன்றே.

(இ-ள்.) (காசிநகரத்திலுள்ள) பிரயாகைத் தீர்த்தத்தில் தைமாதமுப்பது நாள்களும் ஸ்நானஞ் செய்தலால் அடையும் பலன் இந்த அலைகள் பொருந்திய பசிய பொற்றாமரைத்தீர்த்தத்தில் ஒருநாள் ஸ்நானஞ்செய்வோன் பெறுவான். விரதமாகிய நல்லொழுக்கத்தை மேற்கொண்டு இடைவிடாமல் ஒருவருடம் ஸ்நானஞ்செய்து அங்கயற்கண்ணம்மையையும் தேவர்கள் சிகாமணியாகிய வேதங்களை அருளிச்செய்த சோமசுந்தரக்கடவுளையும் பூசிப்பாளாயின் மலடிக்கும் சற்புத்திரப்பேறு உண்டாகும்.

முப்பதும் என்ற உம்மை முற்றும்மை. மலடிக்கும் என்பதிலுள்ள உம்மை இறந்தது தழீஇய எச்சவும்மை. (௩க)

எண்டிசைய நதிவாவி வடிவான மாதீர்த்த மெல்லா மிப்பொற், புண்டரிகத் தடத்திலொரு கோடியிலோர் கூறுநிகர் போதா வீது,கண்டத னு லறந்தீண்டப் பெற்றதனு னற்பொருளங் கையா லள்ளிக், கொண்டத னு லின்பநலங் குடைந்ததனாற் பேரின்பங் கொடுக்கு மன்றே.

(இ-ள்.) அஷ்டதிக்கிலுமுள்ள நதிவடிவுந் தடாக வடிவுமான பெருமை பொருந்திய தீர்த்தங்களெல்லாம் இந்தப் பொற்றாமரைத் தீர்த்தத்தால் உண்டாகும் ஒருகோடிப் பலனுள் ஒரு பங்குக்கும் ஒப்பாகாவாம். (எவ்வாறெனில்) இந்தத் தீர்த்தம், தரிசித்தலால் தருமத்தையும், பரிசித்தலால் மிக்க திரவியத்தையும், அழகிய கையினுல் அள்ளி (உட்)கொள்ளுதலால் இன்பப்பலனையும், அதில் ஸ்நானஞ் செய்தலால் மோட்ச இன்பத்தையுங் கொடுக்கும். எ-று. (௬௨)

மேற்படி வேறு.

முன்னவ னருளிச் செய்த காரண முறையா லன்றி
யின்னமிப் புனித வாவிக் கேதுவா லெய்து நாம
மின்னவிர் சடையான் சென்னி மேவிய கங்கை நீரிற்
பின்னது கலந்த நீராற் பெறுஞ்சிவ கங்கை யென்றும்.

(இ-ள்.) முழுமுதற்கடவுளாகிய சிவபெருமான் திருவாய்மலர்ந்தருளிய காரணமுறையால் அல்லாமலும், இன்னமும் இப்பரிசுத்தமாகிய பொற்றாமரைத் தீர்த்தத்திற்குக் காரணத்தால் வரும் பெயர்கள், மின்னல்போலும் பிரகாசிக்கின்ற சடையையுடைய சிவபெருமானது திருமுடியிற் பொருந்திய கங்காசலத்தில் அந்தத் தீர்த்தம் பிறகு கலந்ததன்மையால், சிவதீர்த்தமெனவும் (பெயர்)பெறும். எ-று.

மின்னவிர் சடையான் சென்னிமேவிய கங்கைநீரொன்றது.

பண்டொருகாலத்தில், சிவபெருமான் திருக்கைலாயகிரிக் கருகிலுள்ள ஓர் நந்தனவனத்தில் உமாதேவியாரோடு உல்லாசமாக உலாவுகையில், தேவியார் ஓர் விளையாடல் கருதிப் பின்புறம்போந்து பெருமானது இருவிழிகளையுங் கைகளான் மறைப்ப, அண்டாண்ட பிரமாண்டங்களு மிருண்டு சர்வான்மாக்களுந் துன்புற்றன. அது பொழுது அமலர் தமது நெற்றியின் இடையே ஒரு திருவிழி தோன்றுவித்துச் சூரிய சந்திரர் முதலிய சுடர்கட் கொளிசெய்வித்தனர். தேவியார் அதுகண்டு பெரிதும் அச்சமுற்று, இறைவர் திருவிழிகளைப் பொத்திய இருகரங்களையும் இமைப்பொழுதி லெடுத்தனர். பார்ப்பதியாருக்கு எய்திய அச்சத்தால் கைவிரல்கள் பத்திலும் வெயர்வுதோன்றிப் பத்துக்கங்கைகளாகிச் சத்தசமுத்திரங்கட்கு வழிகொண்டன. அந்நீர்ப்பெருக்கைக் கண்ட தேவர்முதலானோர் ஊழிக்காலம் எதிர்பாராது நேர்ந்ததென்று உளங்குலைந்து உம்பர்நாதனை யடைந்து பல்வகையாகத் துதிபுரிந்து தமக்குக் கங்கையால் நிகழுந்துன்பத்தைக்கூறிவேண்ட, கருணாமூர்த்தியாகியகண்ணுதல் அவர்கள் இடுக்கண்களையக் கருதி அக்கங்கையைத் தமது கட்டளையால் வருவித்துத் தமது சடைக்கற்றையின் ஓர் முனையிலணிந்தனர் என்பதாம். (௬௩)

அலகிலாத் தீர்த்தந் தம்மு ளதிகவுத் தமமாய்த் தோன்றி
யிலகலா லிதனைத் தீர்த்த வுத்தம மென்ப ராய்ந்தோர்
பலவிதழ் விரித்துச் செம்பொற் பங்கய மலர்ந்த நீரா
லுலகவர் யாரும் பொற்று மரையென வுரைப்ப ரன்றே.

(இ-ள்.) எண்ணிறந்த தீர்த்தங்களுள் உத்தமோத்தமமாகத் தோன்றி விளங்குதலால், நூலாராய்ச்சியுடைய பெரியோர் இந்தத்தீர்த்தத்தை உத்தமதீர்த்தமென

வுங் கூறுவர். பல இதழ்களை விரித்துச்செவந்த பொற்றாமரைமலர் புஷ்பித்ததன்மை யால், உலகத்தவர் யாவரும் பொற்றாமரைத்தீர்த்த மெனவுங் கூறுவர். எ-று. (௩௪)

தருமமுன் னொரு நான்குந் தருதலாற் றரும தீர்த்த
மருமைசா லருத்த தீர்த்த மரும்பெறற் காம தீர்த்த
மிருமைசேர் முத்தி தீர்த்த மென்பதா மினைய தீர்த்தம்
வெருவரு பாவ மென்னும் விறகினுக் கெரியா மன்றே.

(இ-ள்.) தரும முதலாகிய நான்கு புருஷார்த்தங்களையுங் கொடுத்தலால், தருமதீர்த்த மெனவும், அருமை மிகுந்த பொருட்டீர்த்த மெனவும், பெறுதற்கரிய இன்பதீர்த்த மெனவும், பெருமைதங்கிய முத்திதீர்த்த மெனவுங் கூறப்படுவதாம். இத்தன்மையாகிய தீர்த்தமானது அச்சத்தைத்தரும் பாவமாகிய விறகுக்குப் பெரு நெருப்பாகும். எ-று.

அறம் - பொருள் - இன்பம் - வீடு என்பவை நான்கும் புருஷார்த்த மெனப் படும். இவற்றைத் தருமார்த்த காமிய மோக்ஷ மென்பது வடநூலார்கூற்று.

வெரு என்பது முதனிலைத் தொழிற்பெயர். (௩௫)

இவ்வருந் தலத்தி னன்ற பெருமையு மெரிகால் செம்பொற்
றெய்வத பதும தீர்த்தப் பெருமையுஞ் செப்பக் கேட்டோ
ரொவ்வமில் போகம் வீடு பெறுவரொன் றிசைத்தான் முந்நீர்ப்
பெளவமுண் டமரர் வேந்தன் பரிபவ விழுமந் தீர்த்தோன்.

(இ-ள்.) இந்த அருமையாகிய ஸ்தலத்தினது சிறந்த பெருமையையும் ஒளிவீசுந் தெய்வத்தன்மை யுடைய செவந்த பொற்றாமரைத் தீர்த்தத்தின் பெருமை யையும் (ஒருவர்) சொல்லக் கேட்டவர்கள் துன்பமில்லாத போகத்தையும், மோக்ஷ த்தையும் பெறுவார்களென்று, முந்நீராகிய சமுத்திரத்தைப் பானஞ்செய்து, தேவ ராசனாகிய இந்திரனது துன்பத்தைத் தவிர்த்த அகத்தியமுனிவர் திருவாய்மலர்ந் தருளினர். எ-று.

அகத்தியமுனிவர் சமுத்திரசலத்தைப் பானஞ்செய்து தேவேந்திரனது துன்பத்தைத் தொலைத்த சரிதத்தைப் பின்வரும் இந்திரன் பழிதீர்த்தபடலத்துட் கண்டுகொள்க. (௩௬)

## தீர்த்தவிசேடம்

முற்றிற்று.

---

ஆக திருவிருத்தம் - ௨௬௧.

சிவமயம்.

# மூர்த்திவிசேடம்.

அறுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

ஆலவா யலர்ந்த செம்பொ னம்புயப் பெருந்தீர்த் தத்தின்
மேலவாம் பெருமை தன்னை விளம்புவா ரெவரோ யங்க
ணீலமா மிடற்று முக்க ணிராமய னறிவா னந்த
மூலமா லிலிங்க மேன்மை முறையினு லறைய லுற்றும்.

(இ-ள்.) திருவாலவாயிற்பொருந்திய மலர்ந்த செவ்விய பொற்றாமரையாகிய பெருமைதங்கிய தீர்த்தத்தினது தேவருலகத்தோர் விரும்பும் மஹாத்மியத்தைச் சொல்லுவோர் யாவர்? (ஒருவருமிலர்) அந்தத் திருவாலவாயில் எழுந்தருளிய பெருமைதங்கிய நீலகண்டத்தையுந் திரிநேத்திரங்களையுமுடைய சுந்தரேசப் பெருமானது சிதானந்த சொரூபமாகிய மகத்தான மூலலிங்கத்தின் சிறப்பைக் கிரமப்படி சொல்லத்தொடங்கினோம். எ-று.

மேல்-இடவாகுபெயராய்த் தேவரை யுணர்த்தியது.

நிராமயன்=நோயற்றவன். ஆமயம்=நோய். நிர்-எதிர்மறையுபசர்க்கம்.(க)

பொன்னெடு மேரு வெள்ளிப் பொருப்புமந் தரங்கே தாரம்
வன்னெடும் புரிசை சூழ்ந்த வாரணா வாசி யாதிப்
பன்னருந் தலங்க டம்மிற் பராபர லிலிங்கந் தோன்று
முன்னரிக் கடம்பின் மாடே முளைத்ததிச் சைவ லிங்கம்.

(இ-ள்.) பெரிய பொன்னாகிய மேருமலை - வெள்ளிமலையாகிய திருக்கைலாயம் - மந்தரம் - திருக்கேதாரம் - வலியமைந்த நீண்ட மதில்புடைசூழ்ந்த வாரணாசி முதலிய சொல்லுதற்கரிய ஸ்தலங்களிலுள்ள சிவலிங்கக்குறிகள் தோன்றுதற்கு முன்னே இக்கடப்பமரத்தின்கீழ் இந்தச் சைவலிங்கமானது தோன்றியருளியது. எ-று.

வாரணாசி=வரணை+அசி என்னும் இவ்விரண்டு நதிகளுங் கலங்குந்தானம் என்பது பொருள். இதனை,

காசிகண்டம்.

"ஆதலாற் றீமை யோர்கட் கடையொணு வசியி னேடு
மேதகு வரணை யாறும் விழைதக வொழுகு மாற்றன்
மாதவக் கிழமை பூண்ட முனிவர வளங்கொள் காசிக்
கேதமி னும்ம் வார ணாசியென் றிசைந்த தாமால்"—என்பதனுனறிக.

இச்சொல் வாரணாசி வாராணசி வாரணவாசி வாரணசி எனவும் வரும்.

"பன்னருந் தலங்க டம்மிற் பராபர லிலிங்கந் தோன்று - முன்னரிக் கடம்பின் மாடே முளைத்ததிச் சைவ லிங்கம்"—என்பதை,

திருநாவுக்கரசுசுவாமிகள் - தேவாரம்.

"முளைத்தானை யெல்லார்க்கு முன்னே தோன்றி
முதிருஞ் சடைமுடிமேன் முகிழ்வெண் டிங்கள்
வளைத்தானை வல்லசுரர் புரங்கண் மூன்றும்
வரைசிலையா வாசுகிமா நாணுக் கோத்துத்

துளைத்தானைச் சுசேரத்தாற் றுவள நீருத்
தூமுத்த வெண்முறுவ லுமையோ டாடித்
திளைத்தானைத் தென்கூடற் றிருவால வாய்ச்
சிவனடியே சிந்திக்கப் பெற்றே னானே"— என்னுந் திருப்
பாசுரத்தானறிக. (உ)

அப்பதி யிலிங்க மெல்லா மருட்குறி யிதனிற் பின்பு
கப்புவிட் டெழுந்த விந்தக் காரண மிரண்டி னாலு
மொப்பரி தான ஞான வொளிதிரண் டன்ன விந்தத்
திப்பிய விலிங்க மூல விலிங்கமாய்ச் சிறக்கு மன்றே.

(இ-ள்.) (மேருமுதலிய) அந்தத் திருப்பதிகளிலுள்ள சிவலிங்கங்களெல்லாம், இந்தச் சிவலிங்கமாகிய மூலத்திலிருந்து பிறகு கிளைவிட்டுத் தோன்றின. இந்த இரண்டு காரணங்களினாலும் ஒப்பில்லாத ஞானவொளி திரண்டாற்போன்ற இந்தத் திவ்வியமாகிய சிவலிங்கக்குறியானது (எல்லாச் சிவலிங்கக் குறிகட்கும்) மூலலிங்கம் எனப் பெயர்பெற்றுச் சிறந்துவிளங்கும். எ-று.

மூலம்=கிழங்கு; வேர். கப்பு=கிளை. மூலத்தினின்றே கிளை விடுதல் வழக்காதலின் இந்த லிங்கம் மூலலிங்கமெனவும், மற்றவை கப்பு விட்டெழுந்த லிங்கமெனவுங் கூறினர். (ங)

இந்தமா விலிங்கத் தெண்ணான் கிலக்கண விச்சை மேனி
யந்தமி லழகன் பாகத் துமையொடு மழகு செய்து
சந்ததம் விளக்கஞ் செய்யுந் தகைமையை நோக்கிச் சோம
சுந்தர னென்று நாமஞ் சாத்தினா் துறக்க வாணர்.

(இ-ள்.) இந்த மகாலிங்கமூர்த்தி யிடத்து, முப்பத்திரண்டு இலக்கணம் வாய்ந்த ஞானமே திருமேனியாகக்கொண்ட முடிவில்லாத பேரழகினையுடைய சிவபெருமான், தமது வாமபாகத்திலுள்ள உமாபிராட்டியாருடன் அழகுசெய்து எக்காலமும் பிரகாசஞ் செய்தருளுந் தன்மையைப்பார்த்து, தேவர்கள் சோமசுந்தரன் என்று திருநாமங் கூறினர். எ-று.

சோமசுந்தரன்=சஹ+உமா+சுந்தரன். எனவே உமையோடு கூடி அழகு செய்பவனென்பது பொருள். (ச)

திறப்படு மூலக மெங்கும் வியாபியாச் சிறந்து நிற்கு
மறப்பெருங் கடவுள் சோம சுந்தர னதனா லன்றோ
கறைக்கதிர் வடிவேற் றென்னன் கையிற்பொற் பிரம்பு பட்ட
புறத்தடித் தழும்பு மூன்று புவனமும் பட்ட தன்றே.

(இ-ள்.) கூறுபட்ட சர்வலோகங்களிலும் வியாபியாய்ச் சிறந்துவிளங்குந் தருமசொரூபியாகிய கடவுள் சோமசுந்தரக்கடவுளாம். அக்காரணத்தினாலல்லவோ, உதிரக்கறை பொருந்திய பிரகாசத்தையுடைய வேற்படையேந்திய பாண்டியன் கையிலுள்ள பொற்கட்டிடப்பட்ட பிரம்பால் முதுகிற்பட்ட அடியினது தழும்பானது திரிலோகங்களிலுமுள்ள சராசரங்கள் மேலும்பட்டது. எ-று.

கண்ணன் முதலானோரைப் பன்முறை பலர் அடித்திருப்ப, அவ்வடிகள் ஒருவர் மேலும் படாது, வந்தியென்னும் பிட்டு வாணிபச்சியின் கூலியாளாகத் திருவிளையாடல் புரிந்த சுந்தரேசப்பெருமான் தன்து பங்கிற்குரிய கரையை மட்கொண் டடையாது விளையாடல் செய்திருப்பது கண்டு கடுங்கோபங்கொண்ட அரிமர்த்தன பாண்டி

யன் அடித்த அடி, தேவர் முனிவர் நாகர் தாபரசங்கம முதலிய எல்லா உயிர்கட்கும் பட்டதுமன்றிக் கருப்பத்திருந்த பிண்டங்கட்கும் பட்டு, அவை பூமியிற் பிரசவிக்கப் பட்டபின் அத்தழும்போடு விளங்கினமையின், சர்வவியாபகத்துவமும் ஈஸ்வரத்துவ மும் அநந்நிய சாதாரணமாய் விளங்கின ஆதலின், இச்சிவலிங்கப் பெருமானே சிற ந்தவரென்றார். (௫)

சொற்றவிச் சமட்டி யான சோமசுந் தரனைக் காணப்
பெற்றவர் வியட்டி யான பிறபதி யிலிங்கங் காண
லுற்றவ ராவ ரென்னென் றுரைக்கின்வே ரூட்டு நீர்போய்
மற்றைய சினைக ளெல்லாந் தழைவிக்கு மரத்தின் மாதோ.

(இ-ள்.) சொல்லிய இந்தச் சமஷ்டிமூர்த்தியாகிய சுந்தரேசப்பெருமானைத் தரிசிக்கப்பெற்றவர்கள் வியஷ்டிமூர்த்திகளாகிய ஏனைய ஸ்தலங்களிலுள்ள சிவலிங்க மூர்த்திகளைத் தரிசித்தவர்களாவார்கள். எக்காரணத்தாலென்று வினவில், வேரிற் பெய்த நீர் (அம்மரத்திலுள்ள) மற்றைய கிளைகளிலெல்லாம் பரந்து தழையச்செய்யும் (அதுபோல வென்றறிக.) எ-று.

வேரிற்பெய்த நீர் கிளைகளிளெல்லாம் பாயுமாறு, மூலத்தைத் தரிசிக்கக் கிளைகளையெல்லாம் தரிசித்தது போலாம் என்றார்.

சமஷ்டி - சோலைபோலத் தொகையாயுள்ளது. வியஷ்டி மரம்போலத் தனியாயுள்ளது. (௬)

எத்தலத் தியாவ னெண்ணெண் டிருவிளை யாடல் செய்தா
னத்தலத் தவனுக் கொப்பு மதிகமாஞ் சிறப்புப் பெற்ற
வுத்தம னென்று மெந்த வுலகிலு மில்லை யந்த
வித்தக னதிகத் தன்மை யெனைத்தெனின் விளம்பக் கேண்மின்.

(இ-ள்.) எந்த ஸ்தலத்தில் (சோமசுந்தரப் பெருமானைப்போல) எந்தக்கட வுள் அறுபத்துநான்கு திருவிளையாடல்களைச் செய்தருளினர். (எவ்விடத்தும், ஒருவரு மிலர். ஆதலால்) அந்த மதுராபுரியில் வீற்றிருந்தருளும் அந்த (சோமசுந்தர)க் கடவுளு க்கு ஒப்பும் மேம்பட்ட சிறப்பும் பொருந்திய உத்தமக்கடவுள் எந்தக் காலத்திலும் எந்த வுலகத்திலும் இல்லையாம். அந்த ஞானமூர்த்தியினது தலைமைத்தன்மையானது எத்தகைய தென்னில் (யாம்) சொல்லக்கேளுங்கள். எ-று.

எத்தலத்து என்பதற்கு எந்த மதுரைப்பதியில் என்றும், யாவன் என்பத ற்கு எந்தச் சோமசுந்தரக்கடவுள் என்றும் பொருள் கூறினும் பொருந்தும். (௭)

பொருப்பினுட் டலைமை யெய்தும் பொன்னெடுங் குடுமி மேரு
தருக்களிற் றலைமை சாருந் தண்ணறுந் தெய்வ தாரு
விருப்புறு வேள்வி தம்முண் மேம்படும் புரவி மேத
மருட்படு தானந் தம்முள் விழுமிதா மன்ன தானம்.

(இ-ள்.) நெடிய சிகரங்களையுடைய பொன்னாகிய மேருவானது மலைகளுள் முதன்மை பெற்றுள்ளது. தட்பமாகிய நன்மணம் பொருந்திய கற்பகமரமானது மரங் களில் முதன்மை பெற்றுள்ளது. அசுவமேதயாகமானது (சுவர்க்காதி போகங்களை) விரும்பிச்செய்யும் யாகங்களில் முதன்மை பெற்றுள்ளது. அன்னதானமானது அன் போடு செய்யும் தானங்களுள் முதன்மை பெற்றுள்ளது. எ-று.

இதுமுதல் நான்கு பாட்டுக்கள் ஒரு தொடர். (அ)

மனிதரி லுயர்ந்தோ ராதி மறையவர் தேவர் தம்மிற்
பனிதரு திங்கள் வேணிப் பகவனே யுயர்ந்தோன் வேட்டோர்க்
கினிதருள் விரதந் தம்மு ளதிகமா மிந்து வாரம்
புனிதமந் திரங்க டம்முட் போதவைந் தெழுத்து மேலாம்.

(இ-ள்.) ஆதிவருணத்தவராகிய பிராமணர் மனிதருள் முதன்மை பெற்றுள்ளவர்கள். தண்ணிய சந்திரனைச் சடையிற் சூடிய சிவபெருமானே (பிரமன் முதலிய) தேவர்களில் முதன்மை பெற்றவர். சோமவாரவிரதம் (இம்மை மறுமைப்பலன்களை) விரும்பினவர்களுக்கு இனிதாகக்கொடுக்கும் விரதங்களில் முதன்மை பெற்றுள்ளது. சிவஞானத்தைத் தரும் ஸ்ரீ பஞ்சாக்கரமந்திரம் பரிசுத்தமாகிய மந்திரங்களில் முதன்மை பெற்றுள்ளது. எ-று.

ஐஶ்வர்யஸ்ய ஸமக்ரஸ்ய வீர்யஸ்ய யஶஸஶ்ஶ்ரிய: ।
ஜ்ஞாநவைராக்யயோஶ்சைவ ஷண்ணாம் பக இதீரிதா: ॥ என்றபடியே

ஐசுவரியம்-வீரியம்-புகழ்-திரு-ஞானம்-வைராக்கியம் என்று சொல்லப்படும் அறுகுணங்களையும் அநந்நியசாதாரணமாயுள்ள சிவபெருமானே **பகவன்** என்னும் சப்தவாச்சியன். இவ் வறுகுணங்களையும் விரிக்கப்பெருகும். இவ்வறு குணங்கட்கும் பகம் என்று பெயர். இவற்றை யுடையோன் பகவன். (௯)

மின்மைசான் மணியிற் சிந்தா மணிவரம் விழுப்ப நல்குந்
தன்மைசா லறங்க டம்மின் மிகுஞ்சிவ தரும மென்ப
வின்மைசா னெறிநின் றோருக் கேற்றுநற் றவங்க டம்மி
னன்மைசான் றவரோ முக்க ணுதனுக் கன்பு பூண்டோர்.

(இ-ள்.) சிந்தாமணி பிரகாச மிகுந்த இரத்தினங்களில் (முதன்மைபெற்றுள்ளது) சிவதருமமானது (விரும்பிய) வரங்களை மிகவுங் கொடுக்கும் இயற்கையுடைய தருமங்களில் முதன்மைபெற்றது. திரிநேத்திரங்களையுடைய சிவபெருமானிடத்து அன்பு வைத்தவர்களே தருமமிக்க இல்லறமார்க்கத்தி விருப்பவருக்கு விதித்த நல்ல தவமுடையோரில் முதன்மைபெற்றுள்ளவர் என்று (பெரியோர்) சொல்லுவர். எ-று.

இன்மை=இல்லின்றன்மை. கலம் = தானபாத்திரம். தவம் - குணவாகு பெயர். (௧0)

தீயவான் சுவைப்பா லாவிற் றேவரா வதிகம் பல்வே
றுயமா தீர்த்தந் தம்மு ளதிகமாஞ் சுவண கஞ்ச
மாயமா சறுக்க வெல்லாத் தலத்தினும் வந்து மன்னுந்
தூயவா னவரிற் சோம சுந்தரன் சிறந்தோ னாகும்.

(இ-ள்.) காமதேனுவானது தித்திப்பாகிய சிறந்த சுவைபொருந்திய பாலையுடைய பசுக்களில் முதன்மைபெற்றுள்ளது. (அப்படியே) பொற்றாமரைத் தீர்த்தமானது பலவகைப்பட்ட மகத்தாகிய தீர்த்தங்களில்முதன்மைபெற்றுள்ளது. சோமசுந்தரலிங்கப்பெருமானானவர், பந்தமாகிய குற்றத்தைக் கெடுக்க எல்லாத் தலங்களிலும் வதிந்தருளும் (சயம்புவாகிய) பரிசுத்தமுடைய சிவலிங்கப்பெருமான்களில் முதன்மைபெற்றவராவார். எ-று. (௧௧)

அந்தமு முதலு மில்லா வகண்டபூ ரணமா யார்க்கும்
பந்தமும் வீடு நல்கும் பராபரச் சோதி தானே
வந்தனை புரிவோர்க் கிம்மை மறுமைவீ டளிப்பா னிந்தச்
சுந்தர விலிங்கத் தென்றும் விளங்குவான் சுருதி யேத்த.

(இ-ள்.) இறுதியும் முதலு மில்லாமல் அகண்ட பரிபூரணமாகி (இறுதியும் முதலுமுடைய) எல்லா ஆன்மகோடிகளுக்கும் பந்தத்தையும் மோக்ஷத்தையுந் தந்தருளுஞ் சிவபெருமானே, தன்னை வந்தனை செய்வோர்க்கு இகபர போகங்களையும் மோக்ஷத்தையும் அநுக்கிரகிக்கும்பொருட்டு, இந்த அழகுவாய்ந்த சிவலிங்கக்குறியில் வேதங்கள் துதிசெய்யும்படி எக்காலத்தும் நிலைபெற்று விளங்கியருளுவர். எ-று.(கஉ)

இத்தகு சயம்பு தன்னை யேனைய சயம்பு வெல்லா
நித்தமுந் தெரிசித் தேகு நிருமல வொளியா மிந்த
வுத்தம லிங்கங் கண்டோ ருரையுணர் வொடுங்க வுள்ளே
சித்தமா சொழியத் தோன்றுஞ் சிவபரஞ் சுடரைக் கண்டோர்.

(இ-ள்.) இத்தகைய சயம்புமூர்த்தியை மற்றைச் சயம்புமூர்த்திகளெல்லாம் நாடோறும் வந்து தரிசனைசெய்து செல்லாநிற்கும். இந்த நின்மலவொளிப் பிழம்பாகிய உத்தமலிங்கத்தை (புறத்திற்)கண்டு தரிசித்தவர்கள் மனவாக்கு (காயங்)களொடுங்கவும், மனக்குற்றமொழியவும், உள்ளத்திலே தோன்றும் மேலான ஒளிப் பிழம்பாகிய சிவத்தைத் தரிசித்தவர்களாவார்கள். எ-று. (கங)

இத்தனிச் சுடரை நேர்கண் டிறைஞ்சினோர் பாவ மெல்லாங்
கொத்தழற் பொறிவாய்ப் பட்ட பஞ்சுபோற் கோப மூள
மெய்த்தவஞ் சிதையு மாபோன் மருந்தினால் வீயு நோய்போ
லுத்தம குணங்க ளெல்லா முலோபத்தா லழியு மாபோல்.

(இ-ள்.) இந்தச் சமானமற்ற சிவலிங்கப்பெருமானை நேரே தரிசித்து வணங்கினவர்களது பாவங்களெல்லாம், திரண்ட தீப்பொறியின்வாயில் அகப்பட்ட பஞ்சுபோலவும், கோபமதிகரித்தலால் உண்மையாகிய தவப்பலன் அழியும் வகை போலவும், அவுடதத்தினால் அழியும் வியாதிபோலவும், உலோபகுணம் ஒன்றினாலே உத்தமகுணங்கள் முழுவதும் அழியும் வகைபோலவும். எ-று.

இதுமுதல் மூன்றுபாடல்கள் குளகம்.

இச் செய்யுளிலுள்ள பாவமெல்லாம் என்னும் எழுவாய், "மருட்சிசெய்" என்னும் மூன்றாஞ் செய்யுளி னிறுதியிலுள்ள சிதையும் என்னும் பயனிலைகொண்டு முடிந்தது. (கச)

கலிகட லிரவி தோன்றக் கருகிரு ளுடையு மாபோ
லொலிகெழு பெருங்கா றள்ள வுடைபடு மேகம் போல
வலிகெழு மடங்கல் சீற மாயுமால் யானை போலக்
குலிசவல் லேறு தாக்கப் பொடிபடுங் குன்றம் போல.

(இ-ள்.) சத்திக்குங் கடலின் முகட்டிற் சூரியன் உதயமாக, கருமையாகிய இருள் அழியும் வகைபோலவும், ஒலிமிக்க பெருங்காற்று வீச உடைபட்டுச் சிதறும் மேகம்போலவும், வல்லமைமிகுந்த சிங்கமானது சீறுதலினால் அழிகின்ற மதமயக்கத்தையுடைய யானைபோலவும், (இந்திரனது) வச்சிராயுதமாகிய வலிய இடியானது தாக்குதலாற் பொடிபடும் மலைகள்போலவும். எ-று.

முற்காலத்தில் மலைகளெல்லாஞ் சிறகொடு பறந்து பற்பல தேசங்கட்குச் செல்வதும் நிலமிசை யிறங்குவதுமாக விருந்தமையால், அங்குள்ள எவ்வுயிர்களும் மிகவுந் துக்கித்தலைத் தேவர்கள் நோக்கி வருந்தி இந்திரனுக்கு முறையிட, அப்பொழுது அவன் அம்மலைகளுடைய சிறகுகளைத் தனது கையிலுள்ள வச்சிராயுதத்தாற் சேதித்துவருங்கால், அச்சங்கூர்ந்து பன்னிரண்டுமலைகள் உவர்க்கடலில் மறைந்துவந்து

விழுந்தொளித்தன. ஏனைய பர்வதங்கள் சிறகின்றி இருந்தவிடத்திலேயே யிருந்தன ஆதலின், "குலிசவல் வேறு தாக்கப் பொடிபடுங் குன்றம்" என்றார்.

வால்மீகராமாயணம் - சுந்தரகாண்டம்.

पूर्वं कृतयुगे तात पर्वताः पक्षिणोऽभवन्। ते हि
जग्मुर्दिशः सर्वा गरुडानिलवेगिनः। ततस्तेषु प्रयातेषु
देवसङ्घाः सहर्षिभिः। भूतानि च भयं जग्मुस्तेषां पतनशङ्कया।
ततः क्रुद्धः सहस्राक्षः पर्वतानां शतक्रतुः। पक्षांश्चिच्छेद
वज्रेण तत्र तत्र सहस्रशः। स मामुपगतः क्रुद्धो वज्रमुद्यम्य
देवराट्। ततोऽहं सहसा क्षिप्तः श्वसनेन महात्मना। अस्मिँल्
लवणतोये च प्रक्षिप्तः प्लवगोत्तम॥

அவ்வாறொளித்த பன்னிரண்டுமலைகளாவன:—
கீழ்த்திசையில்—இடபகிரியும், துந்துபிகிரியும், தாமிரகிரியும்,
தென்றிசையில்—சக்கரகிரியும், மைநாககிரியும், வலாககிரியும்,
மேற்றிசையில்—சோககிரியும், வராககிரியும், நந்தனகிரியும்,
வடதிசையில்—கங்ககிரியும், சந்திரகிரியும், துரோணகிரியுமென்பர். (கரு)

மருட்சிசெய் காம நோயான் மதிகெடு மாறு போல
வருட்சிவ ஞான நோக்கால் வலிகெடு மவிச்சை போலத்
தருக்குறு முவணஞ் சீறத் தழலரா விளியு மாபோற்
செருக்குற வழியுங் கற்ற கல்விபோற் சிதையு மன்றே.

(இ-ள்.) மயக்கத்தை யுண்டுசெய்யுங் காமமாகிய நோயினால், புத்திகெட்டுபோம் வகை போலவும், கிருபைபொருந்திய சிவஞானப் பார்வையால் வலிகெட்டழியும் அஞ்ஞானத்தைப்போலவும், இறுமாப்புபொருந்திய கருடன் கோபித்தலால், நெருப்புப்போன்ற (விஷத்தையுடைய) பாம்புகள் அழியும் வகைபோலவும், மமதையுச் சிதைகின்ற (ஒருவன்) கற்றகல்வியைப்போலவும், அழியும். எ-று.

"இத்தனிச் சுடரை நோக்கண் டிறைஞ்சினோர் பாவ மெல்லாம் * * * சிதையும்" என மூன்றுசெய்யுள்களையும் ஒருதொடராகவும், எடுத்துக்காட்டிய வுவமானங்களையெல்லாம் இடைப்பிறவரலாகவுங் கொண்டு முடித்துக்கொள்க. (கசு)

புலரியிற் சீவன் முத்தி புரேசனைக் காணப் பெற்றா
லலைகட லன்குட் பட்ட வவனிமா தானஞ் செய்த
பலனுறுங் கதிர்கா லுச்சி வைகலிற் பணியப்பெற்றாற்
கலைஞர்பா லூற்றுப் பத்துக் கபிலைமா தானப் பேறாம்.

(இ-ள்.) புலரியில், சீவன்முத்திபுரேசனாகிய சுந்தரேசப்பெருமானைத் தரிசனஞ்செய்யப்பெற்றால், அலைகள்பொருந்திய கடல்சூழ்ந்த நான்குதிசைகட்குட்பட்ட பெரிய பூதானஞ்செய்த பலன் கைகூடும். சூரியன்கிரணத்தைவீசும் நடுப்பகலில் (அச்சுந்தரேசப்பெருமானை) பணிதல் செய்யப்பெற்றால், வேதநூல்களையுணர்ந்த பிராமணருக்குக் கொடுத்த பெரிய ஆயிரங் கோதானப்பலன் கைகூடும். எ-று.

புலரி - விடியற்காலம். புலர்தல்=மலர்தல். (கஎ

விண்ணிடைப் பரிதிப் புத்தேண் மேலைநீர் குளிக்கு மெல்லை
யண்ணலை வணங்கிற் கோடி யானினத் தானப் பேறாம்

பண்ணவர் பரவும் பாதி யிருள்வயிற் பணியப் பெற்றால்
வண்ணவெம் புரவி மேத மகம்புரி பெரும்பே றெய்தும்.

(இ-ள்.) ஆகாயவீதியிற் சஞ்சரிக்குஞ் சூரியதேவன் மேற்றிசைக்கடலில் மூழ்கும் அந்திப்பொழுதில், அச் சுந்தரேசப்பெருமானை வணங்கினால், கோடிப் பசுக் கூட்டங்களைக் கோதானங்கொடுக்கும்பலன் உண்டாகும். அமரர்கள் பணியும் அர்த்த ராத்திரியில் (அச் சுந்தரேசப்பெருமானை) வணங்கப்பெற்றால், நிறந்தங்கிய நடைநடையுடைய அசுவமேதயாகஞ்செய்த பெரும்பலன் கைகூடும். எ-று. (கஅ)

இன்னன வதிக மாம்பே றறிந்துபோ யெத்தே வர்க்கு
முன்னவன் சமட்டி விச்சா புரமுறை முதல்வன் றன்னைச்
சொன்னவிக் காலந் தோறு மிறைஞ்சியுந் தொழுதுஞ் சூழ்ந்தும்
பொன்னடிக் கன்ப ராகி வழிபடும் புனித சீலர்.

(இ-ள்.) இவைபோல்வனவாகிய அதிக பலனை யறிந்துபோய், எல்லாத்தேவர்கட்கும் ஆதிதேவனாகிய சமட்டி விச்சாபுரம் என்னும் மதுராபுரியில்வீற்றிருக்கும் முதல்வராகிய சுந்தரேசப்பெருமானை, மேற்கூறிய இக்காலங்கடோறும் பணிந்துங் கை குவித்தும் பிரதக்கணஞ் செய்தும் அழகிய திருவடிகட்கு அன்புடையவர்களாய் வழிபாடுசெய்யும் பரிசுத்தமாகிய நல்லொழுக்கமுடையவர். எ-று.

இதுமுதல் இரண்டு செய்யுள்கள் ஒருதொடர்.

இச் செய்யுளி லுள்ள புனிதசீலர் என்னும் எழுவாய் அடுத்த செய்யுளி லுள்ள வாழ்வார் என்னும் பயனிலையைக்கொண்டு முடிந்தது. (கக)

உம்மையில் வினைக ளென்னும் பிணியவிழ்ந் தொருவித் தூய
செம்மைய ராகி யாணுத் திருவொடு செல்வ மோங்க
வெம்மையில் போக மூழ்கி மலவிருள் வீக்க நீந்தி
மைம்மலி கண்டத் தெங்கோன் மலரடி நீழல் வாழ்வார்.

(இ-ள்.) சன்மாந்தரத்திற் செய்த வினைகளாகிய கட்டினின்று நீங்கி, பரிசுத்தமாகிய நடுநிலைமை யுடையவராகி, நீங்காத பொருட்செல்வமுங் கல்விச்செல்வமும் ஓங்கும்படி, நல்ல (இஷ்ட) போகங்களை யனுபவித்து, ஆணவமலமாகிய இருட்பெருக்கைத் தாண்டி, கருமைநிறமிக்க கண்டத்தையுடைய எமதுதலைவராகிய சோமசுந்தரப்பெருமானது திருவடித்தாமரைநீழலில் (இரண்டறக்கலந்து ஆனந்தித்து) வாழ்வார்கள். எ-று. (உ0)

மேற்படி வேறு.

அறவுருவ ளாலவா யானுமஞ் செவிமடுத்தா லடைந்த பத்துப், பிறவிவினை யறுநினைந்தா னூறுபெரும் பவப்பாவப் பிணிபோங் கூட, விறைவனையின் றிறைஞ்சுதுமென் றெழுந்துமனைப் புறம்போந்தா லினைஞ்னூறு,மறமுறுவெம் பவத்திழைத்த பாதகவல் வினையனைத்து மாயு மன்றே.

(இ-ள்.) தருமசொரூபியாகிய திருவாலவாயில் வீற்றிருக்குஞ் சோமசுந்தரப்பெருமானது திருநாமத்தைச் செவியிற் கேட்டால், கீழ்ப்போன பத்துப் பிறவிகளிற் செய்த பாவங்கள் (வேரோடு) அறும். (அவரது திருநாமத்தை) சிந்தித்தால், கீழ்ப்போன நூறு பிறவிகளிற் செய்த பெரிய பாவத்தொடக்கு ஒழியும். மதுராபுரியில் வீற்றிருக்கும் அச் சோமசுந்தரப்பெருமானை இன்றே சென்று வணங்குவோமென்று எழுந்து வீட்டினின்று புறம்பில் வந்தால், இம்மையிருந்த கொடிய ஆயிரம் பிறவிகளிற் செய்த பாதகங்களாகிய வலிய வினைகளெல்லாம் நீங்கும். எ-று. (உக)

புழைக்கைவரை தொலைத்தானைத் தரிசித்தோ ராயிரவாம் புரவி வேள்வி
தழைத்தபெரும் பயன்பெறுவ ருருத்திரசூத் தம்மதனாற் றவவா னோர்க
டொழற்கரியான் றனைத்துதித்தோர் கணத்துக்கா யிரராச சூய யாக
மிழைத்தபெரும் பயன்பெறுவர் சமட்டிவடி வாகியவவ் விலிங்கந் தன்னை

(இ-ள்) துவாரம் பொருந்திய கையையுடைய மலைபோன்ற யானையைக் கொன்ற சோமசுந்தரக்கடவுளைத்தரிசித்தவர்கள் ஆயிரம் அசுவமேதயாகங்கள் செய்த பலனைப் பெறுவார்கள். சிறந்த தேவர்கள் வணங்குதற்கரிய அச் சோமசுந்தரக்கடவுளை உருத்திரசூத்த மந்திரத்தாற் றுதித்தவர்கள் ஒருக்ஷணப் பொழுதிற்கு ஆயிரம் இராசசூயயாகங்களைச் செய்தலாற் பெறும் பெரிய பலனை அடைவார்கள். (சமட்டி வடிவாகிய) அச்சிவலிங்கப்பெருமானை. எ-று.

சூத்தம் - சூக்தமென்னும் வடமொழிச்சிதைவு. நல்லவாக்கியமெனப் பொருள். வாம்புரவி = தாவிச் செல்லுங் குதிரை.

இதுமுதல் இரண்டுபாடல்கள்குளகம். (உஉ)

அங்கையள வர்கியநன் னீராட்டிப் பூசித்தோ ரளவி லேனைத்
துங்கதலத் துறையிலிங்க மூர்த்திகளைச் சிவாகமநூல் சொன்ன வாற்றான்
மங்கலமா கியமுகம னீரெட்டும் வழுவாது வாசந் தோய்ந்த
செங்கனக மணிக்கலசப் புனலாட்டி மாபூசை செய்தோ ராவார்.

(இ-ள்.) உள்ளங்கை அளவாகிய சுத்த ஜலத்தைக் கொண்டு அபிடேகஞ் செய்து பூசித்தவர்கள் கணக்கில்லாத மற்றப் பரிசுத்தமான ஸ்தலங்களில் வீற்றிருக்குஞ் சிவலிங்கமூர்த்திகளைச் சிவாகமங்களிற் கூறிய முறைப்படி நன்மை பொருந்திய சோடசோபசாரங்களுந்தவறாமல், செம்பொன்னாற் செய்த நவமணிகள் பதித்த கலசத்திலுள்ள வாசமூட்டிய நீரால் அபிடேகஞ்செய்து பெரிய பூசையைச் செய்தவர்கள் அடையும் பலனைப் பெறுவார்கள். எ-று. (உங)

அவ்வண்ணஞ் சுந்தரனை யைந்தமுத மானுதவு மைந்து தீந்தேன்
செவ்வண்ணக் கனிசாந்தச் சேறுமுதன் மட்டித்துத் தேவர் தேறு
மெய்வண்ணங் குளிரவிரைப் புனலாட்டி மாபூசை விதியாற் செய்தோர்
மைவண்ண வினைநீந்தி யறமுதனாற் பொருளடைந்து மன்னி வாழ்வார்.

(இ-ள்.) அவ்வாகம முறைப்படி சோமசுந்தரப் பெருமானைப் பஞ்சாமிர்தமும், பசுக்கள்தரும் பஞ்சகவ்வியமும், இனியதேனும், செந்நிறம்பொருந்திய (வாழை, பலா, மா முதலிய) கனிகளும், சந்தனக்குழம்புமுதலிய (வாசனைத்) திரவியங்களும் ஆகிய இவற்றைக் கலந்து தேவர்களும் அறியமுடியாத திருமேனி குளிரும்படி வாசனையூட்டிய நீரால் அபிடேகித்து, பெரிய பூசையை விதிமுறையாகச் செய்தவர்கள் கரியநிறத்தையுடைய தீவினைக்கடலைக்கடந்து, அறமுதலிய நால்வகைப்பொருளையும் பெற்று நீடூழிவாழ்வார்கள். எ-று. (உச)

நல்லவகை முகமனீ ரெட்டுள்ளும் வடித்தவிரை நன்னீ ராட்ட
வல்லவர்நூ றாயிரமா மேதமகப் பயன்பெறுவர் வாச நான
மெல்லவிர்குங் குமஞ்சாந்த மிவைபலவு மட்டித்தோ ரெழிலார் தெய்வ
முல்லைநகை யாரோடும் விரைக்கலவை குளித்தின்ப மூழ்கி வாழ்வார்.

(இ-று.) நல்லவகையாயுள்ள சோடச உபசாரங்களோடு, வடித்த வாசனை பொருந்திய நல்ல நீரால் (சோமசுந்தரப் பெருமானுக்கு) அபிடேகஞ்செய்யவல்

லவர்கள் இலக்ஷம் அசுவமேதயாகங்கள் செய்த பலனைப் பெறுவார்கள். வாசனை பொருந்திய கஸ்தூரியும், மென்மையோடு விளங்குங் குங்குமப்பூவும், சந்தனமும் (ஆகிய) இவைமுதலிய (வாசனைப் பொருள்கள்) பலவற்றையுங்கலந்து (அச் சோம சுந்தரப் பெருமானுக்கு) பூசினவர்கள் அழகுபொருந்திய முல்லையரும்புபோன்ற பல்லையுடைய (அமர) மாதர்களுடன் வாசனைத்திரவியங்கள் கலந்தசந்தனக்குழம்பைப் பூசிச் சுவர்க்க இன்பத்தில் மூழ்கி வாழ்வார்கள். எ-று.

நானம் = கஸ்தூரி. (உரு)

நன்மலரொன் றாலவா யான்முடிமேற் சாத்தினு னயர்ந்து நூறு
பொன்மலர்கொண் டயற்பதியிற் பூசித்த பயனெய்தும் புனித போகத்
தன்மைதரு சுந்தரற்குத் தூபமொரு காற்கொடுப்போர் தமக்குத் தாங்கள்
சொன்மனமெய் யுறச்செய்த குற்றமா யிரம்பொறுப்பன் சுருதி நாதன்.

(இ-ள்.) நல்லமலரொன்றைத் திருவாலவாயில் வீற்றிருக்குஞ் சோமசுந்தரக் கடவுளது திருமுடியின்மேற் சாத்தினால், பொன்னாற்செய்த நூறுமலர்களால் மற்ற ஸ்தலங்களிலுள்ள சிவலிங்கமூர்த்திகளை விரும்பி அர்ச்சித்த பலன்கள் பெறுவார்கள். சிவபோகத்தைப் பிரசாதிக்கும் அச்சோமசுந்தரக்கடவுளுக்குத் தூபம் ஒருதரமேனுங் கொடுப்பவர்கட்கு அவர்கள் மனம் வாக்கு காயங்களினாற் பொருந்தச் செய்த ஆயிரங்குற்றங்களையும்வேதநாயகராகியஅக்கடவுள்பொறுத்தருளுவார். எ-று.

தூபம்—குந்துருக்கம் - பச்சைக்கற்பூரம் - அகில் - சந்தனம் - கருஞ்சீதாரி என ஐவகைப்படும். (உசா)

திருவமுது நிவேதிப்போ ரவிழொன்றற் குகமொன்றாச் சிவலோ கத்தின்
மருவிநிறை போகமுடன் வைகுவர்தாம் பூலமுக வாச மீந்தோர்
பொருவரிய கடவுளரான் டொருநூறு கோடிசிவ புரத்து வாழ்வ
ரொருபளிதவிளக்கிடுவோர்வெண்ணிறமுங்கண்ணுதலுமுடையராவார்.

(இ-ள்.) (அச் சுந்தரேசப் பெருமானுக்கு) திருவமுது நிவேதிப்பவர்கள் அவிழொன்றுக்கு ஒருயுகமாகச் சிவலோகத்திற் பொருந்தி நிறைவாகிய போகத்துடன் வாழ்ந்திருப்பார்கள். தாம்பூலம் (ஐந்து) முகவாசம் (ஆகிய) இவற்றை (அக்கடவுளுக்கு)க் கொடுத்தவர்கள் சமானமற்ற ஒரு நூறுகோடித் தேவ வருடமட்டும் அச் சிவபுரத்தில் வாழ்ந்திருப்பார்கள். ஒருகற்பூரதீபத்தை (அச்சந்நிதியில்) இடுபவர்கள் தவளநிறத்தையும் நெற்றிக்கண்ணையுமுடைய சிவசாரூப்பியத்தைப் பெறுவார்கள்.

முகவாசம் "தக்கோலமேலந்தகைசாலிலவங்கங்-கற்பூரம்வாசமோடைந்து"

பளிதம் = கற்பூரம். (உஎ)

நறுந்திருமஞ்சனமெடுக்கக் குடமாட்ட மணிகலச நல்லவாசம், பெறுந்தகைய தூபக்கா றீபக்கான் மணியின்ன பிறவுங் கங்குற், றெறுங்கதிர்கான் மணிமாட மதுரைநா யகற்கீந்தோர் செய்த பாவம், வெறுந்துகள்செய் தைம்பொறிக்கும் விருந்தூட்டும் பெருங்காம வெள்ளத் தாழ்வார்.

(இ-ள்.) இருளை யோட்டத்தக்க ஒளிவீசும் இரத்தினங்கள் பதித்த மாடங்களையுடைய மதுராபுரியில் வீற்றிருக்குஞ் சோமசுந்தரப் பெருமானுக்கு, வாசமூட்டிய திருமஞ்சன மெடுக்கக் குடமும், அபிடேகிக்க இரத்தினகலசமும், நன்மணங் கமழுந் தூபக்காலும், தீபக்காலும், மணியுமாகிய இவைபோன்ற பிறபொருளுங் கொடுத்தவர்

கள் (தாம்) செய்த பாவங்களைப் பொடிப்படுத்திப் பஞ்சேந்திரியங்களுக்கும் விருந்து உண்பிக்கும் பெரிய இன்பவெள்ளத்தி லழுந்துவார்கள். எ-று.

இச்செய்யுளிற் கூறியவற்றையும் பிறபொருள்களையுஞ் சிவதானஞ் செய்வதனால் வரும் பலனைச் சிவபுண்ணியத்தெளிவிற் கண்டுணர்க. (உஅ)

கயலிசையுங் கண்ணுமைகோன் றிருமுன்னர்ப் பல்லியமுங் கல்லென் றார்ப்ப, வியலிசைய பாடலினோ டாடலிவை செய்விப்போ ரிறுமாப் பெய்திப், புயலிசைய வியங்கலிப்ப மூவுலகுந் தொழவரசாய்ப் பொலங் கொம் பாடுஞ், செயலிசைய வணங்கனையா ராடரங்கு கண்டின்பச் செல் வத் தாழ்வார்.

(இ-ள்.) சேற்கெண்டை போலுங் கண்ணையுடைய மீனாட்சியம்மையாரது தலைவராகிய சோமசுந்தரக்கடவுளது திருச்சந்நிதானத்திற் பல வாத்தியங்களுங் கல்லென்று ஒலிக்க, இலக்கண விதிவழாத இசைக்கூறுபாடுகளமைந்த பாடலும், ஆடலும் ஆகிய இவற்றைச் செய்விப்பவர்கள் இறுமாப்புற்று, மேகம்போலப் பல வாத்தியங்கள் ஒலிக்கவும், மூவுலகமும் வணங்கவும் மன்னராகி, பொற்கொம்பாடுஞ் செயலுக்கொப்ப அரமகளிர்போன்ற அரிவையர் நாடகசாலையில் ஆடுதலைக்கண்டு இன்ப நுகர்தற்குரிய செல்வக்கடலில் அமிழ்வார்கள். எ-று.

பேரி முதலிய வாத்தியந் தருவோர் பலனை,

சிவபுண்ணியத்தெளிவு.

"பொங்கு பேரி பொருமுர சம்மிரு-தங்க மோடு திமில்பட காதியுஞ்
சங்கு தாளந் தனுமிகு காகளம்-விங்கு சீரொலி வேணுவும் வீணையும்."

"சொன்ன வின்னவை சோதி நிலாவணி-மன்ன வற்கு வழங்கிய மாதவ
ரன்ன வன்றனை யொத்தயு தந்தரு-துன்னு கற்ப மவன்பதி தோய்வரால்"
என்பதனானும்,

சிவசந்நிதியில் நடித்தோர் பலனை, ஷை.

"நிருத்த மெந்தைமுன் யாவர் நிகழ்த்தினும்-விரித்த பானு வயுதம் விரிகதிர்
பொருந்து தேரிற் புலவ ரரம்பையர்-கருத்தி னாடகங் காண்பர் சிவபுரி" என்பதனானும்,

சிவசந்நிதியிற் கீதம் பாடினோர் பலனை, ஷை.

"துதியுங் கீதமுஞ் சோதிமுன் பத்தியாற்-கெதியி னோதிடக் கேட்டவர் தாவர
மதியில் கீடங் கிருமி வரன்பதி-வதியு மோதினர்க் கென்கொல் வகுப்பதே"
என்பதனானு மறிக. (உகூ)

ஒருகாலட் டாங்கமுடன் பஞ்சாங்கமுடனுதை லொண்செங் கால் வெண், குருகானு மலர்த்தடஞ்சூழ் கூடனு யகற்பணிவோர் கோலொன் றோச்சிப், பொருகாலின் வருபரித்தேர் மன்னவரா யாவருந்தம் புடை வந் தெய்தி, யிருகாலுந் தலைவருட வெக்காலுந் தமைவணங்க விருப்ப ரன்றே.

(இ-ள்.) ஒள்ளிய செவந்த காலையுடைய வெண்மையாகிய அன்னங்கள் சத்திக்குந் தாமரைமலர்களையுடைய தடாகங்கள் சூழ்ந்த மதுராபுரியி லெழுந்தருளிய சோமசுந்தரக்கடவுளை, ஒருதரம் அஷ்டாங்கத்துடனாவது பஞ்சாங்கத்துடனாவது பணிபவர்கள், ஓரே செங்கோலைச் செலுத்தி, மோதுகின்ற காற்றைப்போலும் விரைந்து

செல்லுங் குதிரை பூட்டிய தேரையுடைய மன்னவர்களாகி, எல்லோருந் தம் பக்க லடைந்து தமது இருபாதங்களையும் அவர்கள் தலைதோயும்படி வணங்கவீற்றிருப்பார்கள். எ-று.

அட்டாங்க நமஸ்காரமென்பது தலை-இரு கை-இரு செவி-மோவாய்-இரு தோள் ஆகிய எட்டுறுப்புகள் நிலத்திற் றோயப் பணிதல். பஞ்சாங்க நமஸ்காரமென்பது தலை-இரு கை-இரு முழந்தாள் ஆகிய ஐந்துறுப்புகள் நிலத்திற் றோயப் பணிதல். இதனை,

சிவதருமோத்தரம்.

"வலஞ்செய்து தண்டதனை மானவிதி வழிதழுவத்
தலந்தன்னிற் பணிந்தெழுக தலைகரமற் றிருகன்னந்
துலங்குமோ வாய்புயங்க ளெனுமெட்டுந் தோயமயி
ரிலங்குசிரங் கரமுழந்தா ளெனுமைந்து மிசைந்திடவே" என்பதனானறிக.

அட்டாங்க, பஞ்சாங்கநமஸ்காரங்களே யன்றி, திரிவிதாங்க, துவிதாங்க, ஏகாங்க நமஸ்காரங்களும் உள, அவையனைத்தையும்.

சிவபுண்ணியத்தெளிவு.

"சிரமே காங்கம் வலக்கரத்தைச் சிரத்திற் குவித்த றுவிதாங்கஞ்
சிரமேல் வாம கரத்தினையுஞ் சேர்த்த றிரிவி தாங்கமதாஞ்
சிரநீள் கரஞ்சா னுக்கணிலந் தீண்டிற் பஞ்சாங் கமதாகுஞ்
சிரமோ வாய்கா துகைசானு செகத்திற் படித லட்டாங்கம்."—என்னுந் திருவிருத்தத்தானறிக. (௩௦)

இத்தகைய திருவால வாயுடையான் றிருமுன்ன ரியற்று மோம
மெய்த்தவமந் திரந்தான மின்னவனு வளவெனினு மேருவாகு
முத்தமமா மிவ்விலிங்கப் பெருமையெலாம் யாவரளந் துரைப்பர் வேத
வித்தகரோ சிறிதறிந்த வாறுரைத்தே மினிப்பலகால் விளம்பு மாறென்.

(இ-ள்.) இத்தன்மைப்பட்ட திருவாலவாயை இடமாகவுடைய சோமசுந்தரக்கடவுளது திருச்சந்நிதானத்திற் செய்யும் ஓமங்களும், மெய்ம்மையாகிய தவங்களும், மந்திரங்களும், தானங்களும் இவைபோன்ற பிறவும் அணுவளவானாலும் மகம் மேரு அளவாகும். உத்தமமாகிய இச்சிவலிங்கமூர்த்தியின் பிரபாவங்கள் எல்லாவற்றையும் அளவிட்டுச் சொல்லுவோர் யாவர்? (ஒருவருமிலர்.) வேதங்களில்வல்ல முனிவர்களே! சிறிது தெரிந்தவகையாகக் கூறினோம். இனி, பலதரமும் எடுத்துச் சொல்வது யாதுபலன்? (ஒன்றுமில்லை.) எ-று.

மீட்டுங் கூறப்புகின், கூறியது கூறலென்னுங்குற்றமாமாகலின், "இனிப் பலகால் விளம்பு மாறென்" என்றார். (௩௧)

இத்தலத்துக் கொப்பாக வொருதலமும் பொற்கமல மென்னு மிந்த
வுத்தமமா தீர்த்தத்துக் கொப்பதொரு தீர்த்தமுமெய் யுணர்வா னந்த
வித்தனையவிலிங்கமிதற்கொப்பாவோரிலிங்கமும்பார்விண்மேலென்னு
முத்தலத்து மிலையந்த மூர்த்திதிரு நாமங்கண் மொழியக் கேண்மின்.

(இ-ள்.) இந்த ஸ்தலத்திற்குச் சமானமாக ஒருஸ்தலமும், பொற்றாமரை என்னுஞ் சிறந்த இந்த உத்தமதீர்த்தத்திற்கு நிகராக ஒரு தீர்த்தமும், சச்சிதானந்தங்கள் தோன்றுதற்கு ஒருவிதைபோன்ற இந்தச் சிவலிங்கமூர்த்திக்கு ஒப்பாக ஓர்

சிவலிங்கமூர்த்தியும், பூமி - அந்தரம் - சொர்க்கமென்னுந் திரிலோகங்களிலு மில்லை அந்தச் சிவலிங்கமூர்த்தியினது திருநாமங்களைச் சொல்லக்கேளுங்கள். எ-று. (௩௨)

கருப்பூர சுந்தரன்பூங் கடம்பவன சுந்தரனுட் கரவாத் தொண்டர்
விருப்பூருங் கலியாண சுந்தரனல் லறவடிவாய் விளங்கு மேற்றுப்
பொருப்பூரு மபிராம சுந்தரன்றேன் புடைகவிழப் பொன்னிற் பூத்த
மருப்பூசு சண்பகசுந் தரன்மருட சுந்தரன்றான் வாழி மன்னோ.

(இ-ள்.) கருப்பூர சுந்தரன் - பூக்களையுடைய கடம்பவன சுந்தரன் - அன்பரது இதயத்தில் ஒளிக்காத விருப்பமிருந்த கலியாணசுந்தரன் - நல்லதருமசொரூபமாய் விளங்கும் இடபமாகியமலையை நடத்தியருளும் அபிராமசுந்தரன் - தேன் புறத்திற் சிந்தப் பொன்போல மலர்ந்த வாசனைவீசும் சண்பகசுந்தரன் - மருடசுந்தரன் - (என்னுந் திருநாமங்களையுடைய சிவலிங்கப் பெருமான்) வாழக்கடவன். எ-று.

சிவபெருமான் தருமவிடையை வாகனமாகக் கொண்டது.

முன்னொரு தேயுப்பிரளயத்தில், சகலரும் மடிதல்கண்ட தருமதேவதை தானும் இறக்க நேரிடுமேயென்று ஏக்கங்கொண்டு இறவாதிருக்க வழியேதென்று கருதிச் சிவபிரானைச் சேர்ந்தாலொழிய இறவாதிரோம் என்று தீர்மானித்து இடபவடிவாகி, இறைவர் பாற்சென்று "நான் இறவாதிருக்கவும், தேவரீருக்கு வாகனமாகவுந் திருவருள்செய்க" என வேண்ட, சிவபெருமான் அவ்வாறே அபயமளித்து அதன் சிரமேற் கைவைத்து "நீவிரும்பியவகையே அவற்றையடைக. அன்றியும், தருமத்தின் காலநிலைமைக் கேற்ப, கிரேதாயுகத்தில் நான்கு கால்களும், திரேதாயுகத்தில் மூன்றுகால்களும், துவாபரயுகத்தில் இரண்டுகால்களும், கலியுகத்தில் ஒருகாலுங் கொண்டு நடந்து காட்டக்கடவாய்" என்று அநுக்கிரகித்து அதனை வாகனமாகக் கொண்டருளினர் என்பதாம். இதனை,

கந்தபுராணம்-தக்ஷகாண்டம்-ததிசியுத்தரப்படலம்.

"பெருகு தேயுப் பிரளய மன்னதில்
தருமம் யாவினுக் குந்தனித் தெய்வதம்
வெருவி யாமிவண் வீடுது மேலினிப்
புரிவ தேதெனப் புந்தியிற் சூழ்ந்ததே..

ஆறு லாஞ்சடை யண்ணலைச் சேர்வனே
வீறி லாதென்று முய்ந்திடு வேனெனாத்
தேறி யேயறத் தெய்வதஞ் செங்கணு
னேற தாயொ ரொழிவுருக் கொண்டதே." என்பதனுனறிக. (௩௩)

மான்மதசுந் தரன்கொடிய பழியஞ்சு சுந்தரனோர் மருங்கின் ஞானத்
தேன்மருவி யுறைசோம சுந்தரன்றேன் செவ்வழியாழ் செய்யப் பூத்த
கான்மருவு தடம்பொழில்சூ ழாலவாய்ச் சுந்தரன்மீன் கணங்கள் சூழப்
பான்மதிசூழ் நான்மாடக் கூடலு யகன்மதுரா பதிக்கு வேந்தன்

(இ-ள்.) மான்மதசுந்தரன் - கொடிய பழியஞ்சு சுந்தரன் - ஞானத்தேனாகிய உமாதேவியார் ஒருபாகத்திற் பிரியாது வாழுஞ் சோமசுந்தரன் - வண்டுகள் செவ்வழிப் பண்பாட மலர்கள் பூத்தவாசனைபொருந்திய பெரியசோலைசூழ்ந்த திருவாலவாய்ச் சுந்தரன் - நட்சத்திரகணங்கள் சூழத் தாவள்யமாகிய சந்திரன் வலஞ்செய்யும் நான்மாடக்கூடல்நாயகன் - மதுராநகரத்திற்கு மன்னன். எ-று. (௩௪)

சிரநாலோன் பரவரிய சமட்டிவிச்சா புரநாதன் சிவன் முத்தி
புரநாதன் பூவுலக சிவலோகா திபன்கன்னி புரேசன் யார்க்கும்
வரநாளுந் தருமூல விலிங்கமென விவைமுதலா மாடக் கூட
லரனுமை மின்னமளப் பிலவாகு முலகுய்ய வவ்வி லிங்கம்.

(இ-ள்.) நான்கு சிரங்களையுடைய பிரமதேவன் பணிவதற்கரிய சமட்டிவிச்சாபுரநாதன் - சிவன்முத்திபுரநாதன் - பூவுலக சிவலோக அதிபன் - கன்னிபுரேசன்-எல்லார்க்கும் எக்காலத்திலும் வரத்தைக்கொடுக்கும் மூலலிங்கம் என்று இவை முதலாக நான்மாடக்கூடலில் எழுந்தருளிய சோமசுந்தரக்கடவுளது திருநாமங்கள் இன்னமும் அளவில்லாதனவாம். உலகத்திலுள்ள ஆன்மாக்கள் உச்சீவிக்கும்படி அச்சிவலிங்கமூர்த்தி. எ-று.

இதுமுதல் இரண்டுபாடல்கள் குளகம்.	(கரு)

பாதாள மேழுருவ முளைத்தெழுந்த தவ்விலிங்கப் படிவந் தன்னு
ளாதார மாகவமர்ந் தறுபத்து நாலுவிளை யாடல் செய்த
போதாநந்தன்பெருமைநங்குரவன்மொழிப்படியேபுகன்றேமென்றான்
வேதாதி கலைதெரிந்த மலயமுனி கேட்டறவோர் வினுதல் செய்தார்.

(இ-ள்.) பாதாளலோகத்தை இறுதியாக வுடைய கீழ் உலக மேழினும் ஊடுருவ முளைத்துத் தோன்றியது. அச் சிவலிங்கமூர்த்தியில் (சமஸ்த) காரணபூதமாக எழுந்தருளி அறுபத்துநான்கு திருவிளையாடல்கள் செய்தருளிய ஞானானந்தத் திருவுருவத்தையுடைய சோமசுந்தரக்கடவுளது பிரபாவத்தை நமது ஆசாரியனாகிய ஸ்ரீமுருகப்பிரான் உபதேசஞ்செய்தவகையேகூறினேமென்று வேதமுதலிய நூல்களை ஆராய்ந்தறிந்த அகத்தியமுனிவர் அருளிச்செய்தனர். (அதைக்) கேட்ட முனிவர்கள் ஒன்று வினவத் தொடங்கினார்கள்.எ-று.

கேட்ட+அறவோர்=கேட்டறவோர் என நின்றது-அகரம் தொகுத்தல்.

அருட்கடலே யிறைவிளையாட் டறுபத்து நான்கென்ற யவையான
ந்தப், பொருட்கடவுளெக்காலத் தியாவர்பொருட் டாடினனெம் போதந்
தேறித், தெருட்படர வரன்முறையாற் செப்புகெனக் கரங்குவித்தார்
தென்பால் வெற்பி, லிருப்பவனும் வினயபடிக் கிறைநிரம்பத் தொகுத்
துவிரித் தியம்புகின்றான்.

(இ-ள்.) கிருபாசமுத்திரமாகிய அகத்தியமுனிவரே! சோமசுந்தரப்பெருமானது திருவிளையாடல்கள் அறுபத்துநான்கென்று கூறியருளினீர். அத் திருவிளையாடல்களை ஆனந்தப்பொருளாகிய அச் சோமசுந்தரப்பெருமான் எந்தக்காலத்தில் எவர்நிமித்தமாக இயற்றியருளினார். (கலக்கம்நீங்கி) எமதறிவுதேறித்தெளிய வரிசைக்கிரமமாகச் சொல்லக்கடவீரென்று கைகுவித்தார்கள். தென்றிசையிலுள்ள பொதிய மலையில் வீற்றிருக்கும் அகத்தியமுனிவரும் (அம்முனிவர்கள்) வினவிய வகைக்கு உத்தரம் நிரம்பத் தொகுத்தும் விரித்துஞ் சொல்லத்தொடங்கினார். எ-று.	(கஎ)

## மூர்த்தி விசேடம்

முற்றிற்று.

ஆ திருவிருத்தம்-கஉஅ.

---

சிவமயம்.

# பதிகம்.

வானவர்கோன் பழிதொலைத்த விளையாட்டுங் கரிசாப மாய்த்த வாறு
மீனவர்கோன் காடெறிந்து புரங்கண்ட பெருஞ்சிறப்பு மீன நோக்கி
யானதடா தகையழல்வா யவதரித்துப் பாராண்ட வருளு மீசன்
றானவளை மணஞ்செய்து முடிதரித்து மண்காத்த தகைமைப் பாடும்.

(இ-ள்.) [முதலாவது] அமரர்கட்கரசனாகிய இந்திரனது பிரமகத்திதோஷத்தை விலக்கிய திருவிளையாடலும், [இரண்டாவது] (ஐராவதமென்னும்) வெள்ளையானைக்கு (துருவாசமுனிவரா லெய்திய) சாபந்தீர்த்த திருவிளையாடலும், [மூன்றாவது] மீனக்கொடியையுடைய குலசேகரனென்னும் பாண்டியர் பெருமான் கடப்பங்காட்டையழித்து, திருநகரங்கண்ட திருவிளையாடலும், [நான்காவது] மீனாட்சியம்மையார் திருவருள் மிகுந்த தடாதகைப்பிராட்டியாராக (மலயத்துவஜ பாண்டியன் செய்த) புத்திரகாமேஷ்டியாகத்தில் திருவவதாரஞ்செய்து உலகமுழுவதும் அரசுசெய்த திருவிளையாடலும், [ஐந்தாவது] சிவபெருமான் (சோமசுந்தர பாண்டியராகத் திருக்கோலங்கொண்டு) அத்தடாதகைப்பிராட்டியாரைத் திருமணம் புரிந்து மகுடந் தரித்து பூபாலனஞ் செய்த திருவிளையாடலும். எ-று.

அத்திரிமுனிவர் சிவபெருமானைப் புத்திரராக அவதரிக்கவேண்டுமெனப் பிரார்த்தித்தபொழுது, அவர் பத்தினியாகிய அநசூயையினது புஷ்பாஞ்சலிக்கரத்திலே, சிவாம்சமாக இம்முனிவர் குழந்தையாகி, "கர்ப்பவாசம் சர்வ வாசங்களினும் துர்வாசம்" என மொழிந்துகொண்டே தோன்றினமையால் துர்வாசரெனப் பெயர் பெற்றனர். இச்சரித்திரவிரிவை ஸ்காந்தபுராணம் சனற்குமாரசங்கிதையுட் காண்க.

புலிமுனியும் பணிமுனியுந் தொழவெள்ளி மன்றுணடம் புரிந்தவாறும், வலிகெழுதோட் குண்டகட்டுக் குறட்கன்னக் குன்றளித்த வகையும் பின்னு, நலிபசிநோய் கெடவன்னக் குழியழைத்துக் கொடுத்துநீர் நவைக்கு வைகை, யலைபுனல்கூ யருத்தியதும்பொன்மாலைக் கெழுகடலு மழைத்த வாறும்.

(இ-ள்.) [ஆறாவது] வியாக்கிரபாதரும், பதஞ்சலி முனிவரும் (தேவியாரது திருமணந் தரிசிக்க வந்தபோது) பணிய வெள்ளியம்பலத் திருக்கூத்தாடிய திருவிளையாடலும், [ஏழாவது] வலிமைமிகுந்த தோளையும் ஆழமாகிய வயிற்றையுமுடைய குண்டோதரனுக்கு மலைபோல அன்னமிட்ட திருவிளையாடலும், [எட்டாவது] மேலும் (அது பற்றாமையால்) வருத்துகின்ற பசிப்பிணி நீங்கும்படி (அக் குண்டோதரனுக்கு) அன்னக்குழி யழைத்துக் கொடுத்து, தண்ணீர் விருப்பந் தீர்த்தற்காக அலைகள் பொருந்திய நீர்மயமாகிய வையை நதியை அழைத்து குடிப்பித்தருளிய திருவிளையாடலும், [ஒன்பதாவது] (கடலாட விரும்பிய தடாதகைப்பிராட்டியார் தாயாகிய) காஞ்சனமாலையாருக்கு எழுகடலழைத்துக் கொடுத்த திருவிளையாடலும். எ-று.

குண்டோதரன் = ஆழமாகிய வயிற்றை யுடையவன். (உ)

அந்தரர்கோ னாதனத்தி லுறைமலயத் துவசனைமீண் டழைத்த வாறுஞ்
சுந்தரவுக் கிரகுமா னவதரித்த வாறும்வளை சுடர்வேல் செண்டு
தந்தையிடத் தவன்பெற்ற வாறுமவ னவ்வடிவேல் சலதி வீறு
சிந்தவிடுத் ததுமகவான் முடியைவளை யெறிந்திறைவன் சிதைத்த வீறும்

(இ-ள்.) [பத்தாவது] தேவேந்திரனோடு ஒரோயாதனத்தில் வீற்றிருந்த மலையத் துவசபாண்டியனை (காஞ்சனமாலையோடு நீராடும்படி) மீண்டும் (நிலவுலகத்திற்கு)அழைத்த திருவிளையாடலும், [பதினொன்றாவது] அழகிய உக்கிரகுமாரபாண்டியன் அவதரித்த திருவிளையாடலும், [பன்னிரண்டாவது] சக்கரம் பிரகாசிக்கின்ற வேல்-செண்டு (ஆகிய இவற்றை) தனது பிதாவினிடத்தில் அவ்வுக்கிரகுமாரபாண்டியன் பெற்ற திருவிளையாடலும், [பதின்மூன்றாவது] அவ்வுக்கிரகுமாரபாண்டியன் அந்தக் கூர்மையாகிய வேற்படையைச் சமுத்திரத்தின் செருக்குச் சிந்த எறிந்த திருவிளையாடலும், [பதினான்காவது] அவ் வுக்கிரகுமாரபாண்டியன் சக்கரத்தை விடுத்து, இந்திரனது முடியை யழித்த திருவிளையாடலும். எ-று. (௩)

பொன்னசலந் தனைச்செண்டாற் புடைத்துநிதி யெடுத்ததுவும் புனிதர்க்கீசன், பன்னரியமறைப் பொருளைப் பகர்ந்ததுவு மாணிக்கம் பகர்ந்த வாறுந், தொன்னகர்மே னீர்க்கிழவன் வரவிடுத்த கடல்சுவறத் தொலைத்த வாறு, மன்னதனித் தொன்மதுரை நான்மாடக் கூடனக ரானவாறும்.

(இ-ள்.) [பதினைந்தாவது] மகம்மேருவைச் செண்டாலடித்து (வேண்டிய வளவு) பொன்னெடுத்து (பின்பு அப் பொன்னறையை மூடி, தன் பெயரை இலச்சினை வைத்து) மீண்ட திருவிளையாடலும், [பதினாறாவது] முனிவர்களுக்குச் சிவபெருமான் (ஒருழிக்காலத்தில்) வேதத்திற்குப் பொருளருளிச்செய்த திருவிளையாடலும், [பதினேழாவது] (வீரபாண்டியன் புதல்வனுக்கு மகுடஞ்சூட்டு நிமித்தம்) மாணிக்கம் விற்ற திருவிளையாடலும், [பதினெட்டாவது] தொன்றுதொட்டுள்ள மதுராபுரியின்பேரில் (சிவபெருமானது திருவருள்சோதிக்க) வருணனனுப்பிய கடலை வற்றச்செய்த திருவிளையாடலும், [பத்தொன்பதாவது] சமானமில்லாத அந்தப்பழைய மதுராபுரி (அச்சிவபெருமான் அனுப்பிய நான்கு மேகங்களும் நான்குமாடங்களாகக் கூடியதால்) நான்மாடக் கூடலான திருவிளையாடலும். எ-று. (௪)

வட்டங்கொள் சடையுடைய சித்தர்விளை யாடியதோர் வனப்புங் கையிற்
கட்டங்கந் தரித்தபிரான் கல்லானை கரும்பருந்தக் காட்டு மாறு
முட்டங்கு வஞ்சனையா லமணர்விடு வாரணத்தை யொழித்த வாறு
மிட்டங்கொள் கௌரிமுனம் விருத்தனிளை யோன்குழவி யான வாறும்.

(இ-ள்.) [இருபதாவது] வட்டமாகக் கட்டிய சடையையுடைய சித்தமூர்த்திகள்ஆடிய திருவிளையாடலும்,[இருபத்தொன்றாவது] மழுவாயுதத்தைக் கையிற்றாங்கிய சோமசுந்தரக்கடவுளாகிய அந்தச் சித்தமூர்த்திகள் (அபிடேகபாண்டியன் காண) கல்லானைக்குக் கரும்பருந்தக்காட்டிய திருவிளையாடலும்,[இருபத்திரண்டாவது] சமணர்கள் தமது மனதிற் பொருந்திய வஞ்சனையுடன் (சோழன் சொற்படி) அனுப்பிய யானையெய்த திருவிளையாடலும், [இருபத்துமூன்றாவது] அன்பு மிகுந்த கௌரி என்னும் பார்ப்பனத்திமுன் விருத்தகுமாரபாலரான திருவிளையாடலும். எ-று.

கட்டங்கம்=மழு. (௫)

செய்யதான் மாறிநட மாடியதும் பழியஞ்சு திறனுந் தாயை
மையலாற் புணர்ந்தமகன் பாதகத்தை மாற்றியது மதியா தாசான்

றையலா டனைவிரும்பு மாணவனை வாளமரிற் றடிந்த வாறும்
பையரா வெய்ததுவும் படிற்றமணர் விடுத்தபசுப் படுத்த வாறும்.

(இ-ள்.) [இருபத்துநான்காவது] (இராசசேகரபாண்டியனுக்காக) செவந்த கான்மாறி நடமாடிய திருவிளையாடலும், [இருபத்தைந்தாவது] (குலோத்துங்கபாண்டியன் பொருட்டு) பழியஞ்சிய திருவிளையாடலும், [இருபத்தாறுவது] தனதுதாயைக் காமமயக்கத்தாற் சேர்ந்த புத்திரனது மகா பாதகத்தைத் தீர்த்த திருவிளையாடலும், [இருபத்தேழாவது] மதிக்காமற் குருபத்தினியை விரும்பிய மாணுக்கனை வாட்போரினால் அங்கம் வெட்டிய திருவிளையாடலும், [இருபத்தெட்டாவது] வஞ்சகமுடைய சமணர்கள் (அனந்தகுணபாண்டியனைக் கொல்ல) அனுப்பிய படத்தையுடைய நாகமெய்த திருவிளையாடலும், [இருபத்தொன்பதாவது] (சமணர்கள் அனுப்பிய) மாயப் பசுவை வதைத்த திருவிளையாடலும். எ-று. (சு)

அறவேற்றுப் பரியுகைத்து மெய்க்காட்டு கொடுத்தவிளை யாட்டுங் காட்டுச்
சுறவேற்றுக் கொடியரசன் றனக்குலவாக் கிழிகொடுத்த தொடர்பு நாயகர்
நறவேற்ற மலர்க்குழலார் மனங்கவர்ந்து வளைபகர்ந்த நலனு மாறு
மறவேற்கண் மாதரார்க் கட்டமா சித்திபுற மதித்த வாறும்.

(இ-ள்.) [முப்பதாவது] தருமவிடையை (சாமந்திரர் பொருட்டு)க் குதிரையாகச் செலுத்தி மெய்க்காட்டிட்ட திருவிளையாடலும், [முப்பத்தொன்றுவது] மீனக்கொடியேந்திய குலபூஷணபாண்டியனுக்கு உலவாக்கிழி யருளிய திருவிளையாடலும், [முப்பத்திரண்டாவது] தேன்பொருந்திய (முல்லை) மலர் சூடிய அளகத்தையுடைய (வணிக) மாதர்களது மனதைக்கவர்ந்துவளையல்விற்ற திருவிளையாடலும், [முப்பத்துமூன்றுவது] கொலைத்தொழில் பொருந்திய வேல்போன்ற கண்களையுடைய அறுவகைப் பெண்களுக்கு (மனதிற்) பொருந்த அட்டமாசித்தி யுபதேசித்த திருவிளையாடலும். எ-று.

காட்டுச் சுறவேற்றுக் கொடியென்றதை, சுறவு ஏறு காட்டு கொடி என அன்வயித்து ஆண்சுறுவைக் காட்டுதலையுடைய கொடியெனப் பொருள்கொள்க. (எ)

சென்னிபொருட் டெயில்வாயி றிறந்தடைத்து விடைபொறித்த செயலுஞ் சென்னி, மன்னிகலிட் டமர்விளைப்ப மீனவற்கு நீர்ப்பந்தர் வைத்த வாறும், பொன்னனையாள் பொருட்டிரத வாதவினை முடித்ததுவும் புகார்க்கு வேந்தன், றன்னையகன் குழிவீட்டித் தென்னவற்கு மறவாகை தந்த வாறும்.

(இ-ள்.) [முப்பத்து நான்காவது] (காடுவெட்டிய) சோழன்பொருட்டு மதிலின் வாயிலைத்திறந்து அடைத்து விடை யிலச்சினையிட்ட திருவிளையாடலும், [முப்பத்தைந்தாவது] அச்சோழராசன் பகைகொண்டு போர்புரிய இராசபுரந்தர பாண்டியனுக்குத் தண்ணீர்ப்பந்தல் வைத்த திருவிளையாடலும், [முப்பத்தாறுவது] திருப்பூவனத்தில்) பொன்னனையாள் நிமித்தம் இரசவாதஞ்செய்த திருவிளையாடலும், [முப்பத்தேழாவது] காவிரிப்பூம் பட்டினத்திற்கு மன்னனாகிய சோழனை அகன்றமடுவில் விழுத்திச் சுந்தரேசபாதசேகர பாண்டியனுக்கு வெற்றிமாலைதந்த திருவிளையாடலும்.

மனக்கவலை கெடவுலவாக் கோட்டையடி யார்க்களித்த வகையு மாம
னெனக்கருணை வடிவாகி வழக்குரைத்துப் பொருள்வணிகற் கீந்த வாறுஞ்
சினக்கதிர்வேல் வரகுணற்குச் சிவலோகங் காட்டியதுந் திவவு கோலான்
றனக்கடிமை யெனவிறகு திருமுடிமேற் சுமந்துபகை தணித்த வாறும்.

(இ-ள்.) [முப்பத்தெட்டாவது] மனோதுக்கமொ[illegible]லவாக்கோட்டையை ஓரடியாருக்குக் கொடுத்த திருவிளையாடலும், [முப்பத்தொன்பதாவது] (தனபதி யென்னும்) மாமன் தானென்று கண்டோர் சொல்லும்படி அருள்வடிவங்கொண்டு வழக்குரைத்து (பொருள் இழந்த வணிகனுக்கு அந்த) ப் பொருளைக் கொடுத்த திருவிளையாடலும், [நாற்பதாவது] கோபத்தையுடைய ஒளிதங்கிய வேற்படை தாங்கிய வரகுண பாண்டியனுக்குச் சிவலோகங் காட்டிய திருவிளையாடலும், [நாற்பத்தொன்றாவது] நரம்பின் கட்டமைந்த வீணையேந்திய பாணபத்திரருக்குத் தாம் அடிமையென்று சிவபெருமான் தமது திருமுடியின்பேரில் விறகு சுமந்து அவரது பகைவனாகிய ஏமநாதனை யோட்டியருளிய திருவிளையாடலும். எ-று. (௯)

அப்பாணற் கிருநிதியஞ் சேரனிடைத் திருமுகமீந் தளித்த வாறு
மப்பாணன் பாடமழை யனையிரவிற் பொற்பலகை யளித்த வாறு
மப்பாணன் மனைவியிசைப் பகைவெல்ல வண்ணலவை யடைந்த வாறு
மப்பாண னானென்றோன் முலையருத்திப் பன்றியுயி ரளித்த வாறும்.

(இ-ள்.) [நாற்பத்திரண்டாவது] அந்தப் பாணபத்திரருக்குச் சேரராஜனிடஞ்செல்லத் திருமுகப்பாசுரங் கொடுத்து (அவ்வரசனால்) திரவியங் கொடுத்தருளிய திருவிளையாடலும், [நாற்பத்து மூன்றாவது] அப்பாணபத்திரர் யாழ்வாசிக்க மழைபொழியும் நடுராத்திரியிற் சங்கப்பலகை தந்த திருவிளையாடலும், [நாற்பத்துநான்காவது] அப்பாணபத்திரது மனைவியாரை வெல்லும்படி (இராச சேகரபாண்டியனது காமக்கிழத்தியருள் ஒருத்தி ஈழநாட்டினின்று) வருவித்த பாடினியை வெல்ல இராசசபையிற் சென்றருளிய திருவிளையாடலும், [நாற்பத்தைந்தாவது] அப்பாணபத்திரருக்கு அடிமையென்றுரைத்த சோமசுந்தரக்கடவுள் முலையூட்டிப் பன்றிக்குட்டிகளை உயிர்புரந்த திருவிளையாடலும். எ-று. (௧௦)

வயவேனக் குருளைகளை மந்திரிக ளாக்கியதும் வலியுண் டாகக்
கயவாய்க்குக் குருமொழிவைத் தருளியது நாரைக்குக் கருணை நாட்டந்
தயவால்வைத் தருண்முத்தி நல்கியதுங் கூடனகர் தன்னைச் சித்தர்
புயநாகம் போய்வளைந்து திருவால வாயாக்கிப் போந்த வாறும்.

(இ-ள்.) [நாற்பத்தாறாவது] வெற்றிபொருந்திய பன்றிக்குட்டிகளை (இராச சேகரபாண்டியனுக்கு) மந்திரிகளாக்கிய திருவிளையாடலும், [நாற்பத்தேழாவது] (மெலிவுற்ற (கரிக்குருவிக்கு) மற்றப் பறவைகளிலும்) வலிமையுண்டாக உபதேசஞ் செய்த திருவிளையாடலும், [நாற்பத்தெட்டாவது] நாரைக்குக் கிருபா நோக்கத்தைத் தயவுடன் வைத்து முத்தியருளிய திருவிளையாடலும், [நாற்பத்தொன்பதாவது] (ஒரு ஊழியில் வங்கியசேகர பாண்டியனது விருப்பத்தினபடி) சித்தமூர்த்தியா யெழுந்தருளித் திருக்கரத்திலணிந்த நாககங்கணஞ் சென்று நான்மாடக் கூடலைவளைந்து திருவாலவாயாக்கிய திருவிளையாடலும். எ-று. (௧௧)

சுந்தரனென் றெழுதியகூ ரம்பெய்து செம்பியன்போர் தொலைத்த வாறுஞ்
செந்தமிழோர்க் கியற்பலகை யருளியதுந் தருமிக்குச் செம்பொன் பாடித்
தந்ததுவு மாறுபடு கீரற்குக் கரையேற்றந் தந்த வாறும்
விந்தமடக் கியமுனியாற் கீரனியற் றமிழ்தெளிய விடுத்த வாறும்.

(இ-ள்.) [ஐம்பதாவது] சுந்தரன் என்னும் பெயரைத்தீட்டிய அம்புகளைப் பிரயோகித்து (வங்கியசேகரபாண்டியனை எதிர்த்த) விக்கிரமச் சோழனது யுத்தத்தை விலக்கியருளிய திருவிளையாடலும், [ஐம்பத்தொன்றாவது] செந்தமிழ்ப் பண்டிதர்களுக்கு (அவரவர் கல்வித்திறம் புலப்படுமாறு) சங்கப்பலகை யருளிய திருவிளையாடலும், [ஐம்பத்திரண்டாவது] தருமியென்னும் வேதியனுக்காகக் "கொங்குதேர் வாழ்க்கை" என்று பாடல்செய்து பொற்கிழியளித்த திருவிளையாடலும், [ஐம்பத்துமூன்றாவது] (அச்செய்யுள் விஷயமாகப்) பகைகொண்ட நக்கீரனைக் (கபிலர் பரணர்முதலானோர் வேண்டுகோளின்படி) கரையேறச் செய்தருளிய திருவிளையாடலும், [ஐம்ப

த்துநான்காவது] விந்தகிரியை யடக்கிய அகத்திய முனிவரால் நக்கீரன் இயற்றமிழ் ஆராய்ந்து தெளிய விடையளித்த திருவிளையாடலும். எ-று. (கஉ)

உமைமைந்த னுரைக்கவுணர்ந் தவைமகளிர் புலவரிக லகற்றியது மிடைக்காட னுடன்போய்க் கொன்றைத்
தாமனுர் வடவால வாயமர்ந்த பரிசும்வலை சலதி வீசிப்
பூமனுப் குழலியைவேட் டருளியதும் வாதவூர்ப் புனிதர்க் கேறத்
தேமனுண் மலரடிகண் முடிசூட்டி யுபதேசஞ் செய்த வாறும்.

(இ-ள்.) [ஐம்பத்தைந்தாவது] உமைமராகவுதித்த குமாரக்கடவுளால், சங்கப் புலவர் கலகந்தீர்த்த திருவிளையாடலும், [ஐம்பத்தாறுவது] கொன்றைமலர்மாலை சூடிய சோமசுந்தரக்கடவுள் புலவராகிய (இடைக்காடர்பிணக்கு தீரும்படி) அவருடன்சென்று வடவாலவாயி லெழுந்தருளிய திருவிளையாடலும்,[ஐம்பத்தேழாவது] கடலில் வலையை வீசி (நெய்தனிலத் தலைவன் திருக்குமாரியாகத் திருவவதாரஞ் செய்த) உமாதேவியாரைத் திருமணஞ்செய்த திருவிளையாடலும், [ஐம்பத்தெட்டாவது] திருவாதவூரில் அவதரித்த பரிசுத்தராகிய வாதவூரடிகட்குத் திருவருள் பொருந்த வாசனை பொருந்திய புதிய தாமரைமலரை யொத்த திருவடிகளைச் சிரத்திற் சூட்டி உபதேசஞ் செய்தருளிய திருவிளையாடலும். எ-று. (கரு)

நரிகள்பரி யாக்கியதும் பரிகணரி யாக்கியது நாகம் பூண்டோ
னரியதிரு மேனியின்மே லடிசுமந்து மண்சுமந்த வருளுந் தென்ன
னெரியுமவெஞ் சுரந்தணித்த வாறுமம ணரைக்கழுவி லிட்ட வாறுங
கரியதென வன்னிகிண றிலிங்கங்கூய் வணிகமகட் காத்த வாறும்.

(இ-ள்.) [ஐம்பத்தொன்பதாவது] வாதவூரையர் பொருட்டு நரிகளைப் பரிகளாகச் செய்தருளிய திருவிளையாடலும், [அறுபதாவது] பரிகளை நரிகளாகப் (பண்டுபோற்) செய்தருளிய திருவிளையாடலும், [அறுபத்தொன்றாவது] சர்ப்பாபரணராகிய சோமசுந்தரக்கடவுள் தமது அருமைத் திருமேனியின்பேரில் (வந்தியென்பாள் நிமித்தம்) அரிமர்த்தன பாண்டியனது பிரம்படியேற்று மண்சுமந்த திருவிளையாடலும், [அறுபத்திரண்டாவது] கூன்பாண்டியனது தீப்போல் வருத்துஞ் சுரநோயைத் (திருஞானசம்பந்தப்பிள்ளையாரால்) தீர்த்தருளிய திருவிளையாடலும், [அறுபத்துமூன்றுவது] ஆளுடைய பிள்ளையாருடன் வாதிட்டுத் தோற்ற சமணர்களைக் கழுவிலேற்றிய திருவிளையாடலும், [அறுபத்து நான்காவது] சாக்ஷியாகத் திருப்புறம்பயத்தி லுள்ள வன்னிமரம் - கிணறு- சிவலிங்கமாகிய இம்மூன்றையு மழைத்து ஒருவணிகப் பெண்ணைக் காத்தருளிய திருவிளையாடலும். எ-று. (கச)

எனத்தொகையா லறுபத்து நான்கிவற்றை நிறுத்தமுறை யீறி லாத,
வினைத்தொகையா றகன்றீரெக் காலமெவர் பொருட்டெனநீர் வினவ வாற்றுன், மனத்தளவி னன்புமடை யுடைந்தொழுகத் திருவால வாயான் றாளை,
நினைத்தளவி லானந்தம் பெருகவிரித் துரைப்பலென நெறியாற் கூறும்.

(இ-ள்.) என்று திருவிளையாடல்கள் தொகையளவில் அறுபத்துநான்காகும். முடிவிலாத வினைத்தொகுதியினின்று நீங்கிய முனிவர்களே! இவைஎக் காலத்தில் யாவர் நிமித்தம் நிகழ்ந்தனவென்று நீங்கள் கேட்டபடியால் இத்திருவிளையாடல்களை யிங்குவைத்த முறைப்படி,விரித்துச் சொல்கின்றேனென்று, அகத்தியமுனிவர் மனதிலிருந்து அன்பாகிய வெள்ளம் மடையுடைந்து பாயத் திருவாலவாயில் வீற்றிருக்குஞ் சோமசுந்தரக்கடவுளது திருவடிகளைத் தியானித்து, எல்லையில்லாத சிவானந்தம் மேலிட முறைப்படி சொல்லத்தொடங்கினர். எ-று. (கடு)

பதிகம்முற்றிற்று.

---

ஆக திருவிருத்தம் - கூசக.

சிவமயம்.

## முதலாவது
# இந்திரன் பழிதீர்த்த படலம்.

அறுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

மின்பயில் குலிசப் புத்தேள் விருத்திரா சுரனைக் கொன்ற
வன்பழி விடாது பற்றக் கடம்பமா வனத்தி லெய்தி
யென்பர வாரம் பூண்ட விறைவனை யருச்சித் தேத்திப்
பின்பது கழிந்து பெற்ற பேற்றினை யெடுத்துச் சொல்வாம்.

(இ-ள்.) மின்னலை வீசுகின்ற வச்சிராயுதத்தைக் கையிலேந்திய தேவேந்திரன் விருத்திராசுரனைக் கொலைசெய்த கொடிய பாவமானது விடாது தொடர, பெருமைதங்கிய கடம்பவனத்தையடைந்து, (பிரமவிஷ்ணுக்களின்) என்புகளையும், சர்ப்பங்களையும் மாலையாகத் தரித்த சோமசுந்தரக்கடவுளைப் பூசித்துத் துதிசெய்து, பிறகு அப பழியைக் கழிந்து, அடைந்த பதவியை எடுத்துச் சொல்லுவாம். எ-று.

பிரமனும் விண்டுவுந் தத்தமக்குரிய காலவரையிற் பொன்றுதலின், அவர்கள் தொகை புலப்படுமாறு அவர்களது நரம்பு என்பு முதலியவற்றை இறைவர் தமது திருமேனியி லணிவ ரென்பது. இதனை,

திருவாசகம்.

“ நங்காயி தென்னதவ நரம்போடெ லும்பணிந்து
கங்காளந் தோண்மேலே காதலித்தான் காணேடீ
கங்காள மாமாகேள் காலாந்த கத்திருவர்
தங்காலஞ் செய்யத் தரித்தனன்காண் சாழலோ ” என்னும் பிரமாண வாக்கியத்தா னறிக. (க)

முன்னதா முகத்தில் வண்டு மூசுமந் தார நீழற்
பொன்னவிர் சுணங்குண் கொங்கைப் புலோமசை மணாளன் பொற்பூண்
மின்னவிர்ந் திமைப்பச் சிங்கஞ் சுமந்தமெல் லணைமேன் மேவி
யன்னமென் னடையா ராடு மாடன்மே லார்வம் வைத்தான்.

(இ-ள்.) (நால்வகை யுகங்களில்) முற்பட்டதாகிய கிரேதாயுகத்திலே, வண்டுகள் (தேனை அவாவி) மொய்க்கின்ற கற்பகவிருக்ஷத்தின் நிழலில், பொன்போலப் பிரகாசிக்குந் தேமல் படர்ந்த தனங்களையுடைய அயிராணி நாயகனாகிய தேவேந்திரன், பொன்னாலாகிய ஆபரணங்கள் மின்னல்போன் றொளிசெய்து விளங்கும்படி, மெல்லிய சிங்காதனத்தின்பேரில் வீற்றிருந்து, அன்னம்போல மெல்லிய நடையையுடைய அரம்பாஸ்திரிகள் நடிக்கின்ற நடனத்தின்மேல் அன்பு செலுத்தினன். எ-று.

“ முன்னதா முகத்தில் ” என்பதை “ முன்னதாம் உகத்தில் ” எனப் பிரிக்க. உகம்=யுகம். “ ஆவோ டல்லது யகர முதலா ” என்ற தொல்காப்பியர் சொற்படி உகம் என்பதே தமிழ்ச்சொல்லென்றும், யுகம் என்பது வடசொல்லென்றுங்

கொள்க. "முகத்தில் வண்டு மூசும்" எனப் பொருள் கூறுவாருமுளர். அஃது தூர் நிமித்தமாகலிற் பொருந்தாது என்க. (உ)

மூவகை மலரும் பூதது வண்டுளே முழங்கத் தெய்வப்
பூவலர் கொடிபோர்ந் தன்ன பொன்னனார் கூத்து மன்னார்
நாவல ரமுத மன்ன பாடலு நாக நாட்டுக
காவலன் கண்டு கேட்டுக் களிமதுக் கடலு ளாழ்ந்தான்.

(இ-ள்.) மூவகைப்பட்ட புட்பங்களும் மலர்ந்து வண்டுகள் உள்ளே முழங்கும்படி தெய்வீகம் பொருந்திய மலர்கள் விகசித்த கொடியானது போர்ந்து நடித்தது போல நடிக்கும் அரமகளிரது நடனத்தையும், அம்மாதரது நாவானது அலர்ந்த தேவாமிர்தம் போன்ற பாடலையும் பொன்னாட்டுக்கு அரசனாகிய இந்திரன் முறையே கண்டுங் கேட்டும் களிப்பைத்தரும் மதுக்கடலில் ஆழ்ந்திருந்தனன். எ-று.

மூவகை மலர் என்பனகோட்டுப்பூ-நீர்ப்பூ-நிலப்பூ.

"கூத்தைக்கண்டு, பாடலைக்கேட்டு" என நிரனிறையே கூட்டிக்கொள்க.

மதுக்கடலு ளாழ்ந்தானெனவே மயங்கினனென்பது பெறப்பட்டது. (௩)

பையரா வணிந்த வேணிப் பகவனே யனைய தங்க
ளையனும் வியாழ புத்தே ளாயிடை யடைந்தா னைச்
செய்யதாள் வழிபா டின்றித் தேவர்கோ னிருந்தா னந்தோ
வையலார் மயலிற் பட்டோர் தமக்கொரு மதியுண் டாமோ.

(இ-ள்.) படம் பொருந்திய பாம்பைத் தரித்த சடையையுடைய சிவபெருமானே ஒப்பாகிய தங்கள் ஆசாரியராகிய பிரகஸ்பதி முனிவர் அவ்விடத்தில் வந்து சேரவும், தேவராசனாகிய இந்திரன் (அவரது) செவந்த திருவடிகளை வழிபடுதலில்லாமல் (வாளா) இருந்தான். ஐயோ! மாதரது மயக்கத்தில் அகப்பட்டவர்களுக்குச் சிறிதும் புத்தி இருக்குமோ? (இராது!) எ-று.

ஒருமதி = ஒப்பற்ற புத்தி.

ஆயிடை = அ + இடை. ஈண்டுச் சுட்டு நீண்டு யகரமெய் தோன்றியது. "எகர வினாமுச் சுட்டின் முன்ன ருயிரும் யகரமு மெய்தின் வவ்வும்-பிறவரி னவையுந் தூக்கிற் சுட்டு-நீளின் யகரமுந் தோன்றுத னெறியே" என்றாராகலின். (௪)

ஒல்லெனக் குரவ னேக வும்பர்கோன றிருவி னாக்கம்
புல்லெனச் சிறிது குன்றப் புரந்தர னறிந்திக் கேடு
நல்லதொல் குரவற் பேணா நவையினால் விளைந்த தென்னா
வல்லலுற் றுய்வன் றன்னைத் தேடுவா னாயி னானே.

(இ-ள்.) (அது கண்டு மனம் பொறாத) ஆசாரியராகிய பிரகஸ்பதி முனிவர் விரைந்து செல்லவும், அமரராசனாகிய இந்திரனது செல்வத்தின் வீறு பொலிவழிந்து சிறிது குறைபட, அத் தேவேந்திரன் அதனை யறிந்து இந்த (செல்வக்) கேடு தொன்றுதொட்டுள்ள நமது நல்ல ஆசாரியனை வழிபாடு செய்யாத குற்றத்தினால் விளைந்ததென்று துன்பமுற்று, பிரகஸ்பதி முனிவனைத் தேடத்தொடங்கினான். எ-று. (௫)

அங்கவ னிருக்கை புக்கான் கண்டில னவித்த பாசப்
புங்கவ ருலகு மேனோர் பதவியும் புவன மூன்றி
லெங்கணுந் துருவிக் காணா னெங்குற்றான் குரவ னென்னுஞ்
சங்கைகொண் மனத்த னாகிச் சதுர்முக னிருக்கை சார்ந்தான்,

(இ-ள்.) (தேவேந்திரன்) அப் பிரகஸ்பதிமுனிவரது வாசஸ்தலத்தையடைந்து அவ்விடத்திற் காணுதவனுய், பாசங்களேயழித்த முனிவர்களுலகத்திலும், ஏனையோருலகத்திலும், திரிலோகங்களிலும், எவ்விடத்துஞ் சென்று தேடிக் காணுதவனுய் நமதாசிரியர் யாண்டடைந்தனரொன்னுஞ் சந்தேகம் பொருந்திய மனதோடு, நான்கு திருமுகங்களேயுடைய பிரமதேவனது சத்தியலோகத்தை யடைந்தனன். எ-று. (சு)

துருவின னங்குங் காணுன் றிசைமுகற் றொழுது தாழ்ந்து
பரவிமுன் பட்ட வெல்லாம் பகர்ந்தனன் பகரக் கேட்டுக்
குரவனை யிகழ்ந்த பாவங் கொழுதுபட் டருந்துஞ் செவ்வி
வருவது நோக்கிச் சூழ்ந்து மலர்மக னிதனைச் சொன்னுன்.

(இ-ள்.) அச் சத்தியலோகத்திலுந் தேடிக் காணுதவனுய், பிரமதேவனை வணங்கித் தொழுது துதித்து முன் நடந்த விருத்தாந்தங்களேயெல்லாங் கூறினன் பிரமதேவன் (அவன் அவற்றைச்) சொல்லக் கேட்டு, ஆசாரியனை அவமதித்த பாவமானது கொழுந்துவிட்டோங்கி (அத் தேவேந்திரனை)த் தன்னகப்படுத்துங்காலம் வருவதறிந்து ஆலோசித்து இவ் வார்த்தையைச் சொல்லத்தொடங்கினுன். எ-று. (எ)

அனையதொல் குரவற் காணு மளவுநீ துவட்டா வீன்ற
தனையன்முச் சென்னி யுள்ளான் றனவர் குலத்தில் வந்தும்
வினையினு லறிவான் மேலான் விச்சுவ வுருவ னென்னு
மினையனைக் குருவாக் கோடி யென்னலு மதற்கு நேர்ந்தான்.

(இ-ள்.) (தேவேந்திரா!) அந்தத் தொன்மையுடைய ஆசாரியராகிய பிரகஸ்பதி முனிவரை நீகாணுமட்டும், துவட்டா வென்பவன் பெற்ற புதல்வன் மூன்று சிரங்களை யுடையவன் அசுரகுலத்திற் சனித்துஞ் செய்கையாலும் அறிவாலும் மேம்பட்டவன். விச்சுவவுருவன் என்னும் பெயரையுடைய இவனை ஆசாரியனுக வைத்துக் கொள்வாயாக வென்று சொல்லவும், (தேவேந்திரன்) அதற் கிணங்கி. எ-று.

"வினைமுற் றேவினை யெச்ச மாகலுங் - குறிப்புமுற் றீரெச்ச மாகலு முளவே" என்றபடி நேர்ந்தான் என்னும் வினைமுற்று வினையெச்சப்பொருளில் வந்தது.

அழலவிர்ந் தனைய செங்கே ழடுக்கிதழ் முளரி வாழ்க்கைத்
தொழுதகு செம்ம றன்னைத் தொழுதுமீண் டகன்று நீங்கா
விழைதகு காதல் கூர விச்சுவ வுருவன் றன்னை
வழிபடு குருவாக் கொண்டான் மலர்மகன் சூழ்ச்சி தேருன்.

(இ-ள்) அக்கினியானது பிரகாசித்தாற் போன்ற செந்நிறம் பொருந்திய அடுக்கு வாய்ந்த இதழ்கள் பொருந்திய தாமரைமலரில் வசித்தலையுடைய, எல்லோரும் வணங்கும் பிரமதேவனைத் திரும்பவும் பணிந்து நீங்கி, அப் பிரமனது ஆலோசனையை யறியாமல் விரும்பத்தக்க ஆசை அதிகரிக்க, அவ் விச்சுவவுருவனென்பவனை வழிபாடுசெய்யத்தக்க குருவாகக் கொண்டனன் (தேவேந்திரன்) எ-று. (கூ)

கைதவக் குரவன் மாயங் கருதிலன் வேள்வி யொன்று
செய்திட லடிக ளென்னத் தேவர்கட் காக்கங் கூறி
வெய்தழல் வளப்பா னுள்ளம் வேறுபட் டவுணர்க் கெல்லா
முய்திற நினைந்து வேட்டான் றனக்குமே லுறுவ தோரான்.

(இ-ள்.) வஞ்சகம் பொருந்திய குருவாகிய அவ் விச்சுவவுருவனது துர் அபிப்பிராயத்தை யறியாமல், சுவாமி! ஓர் யாகஞ் செய்கவென்று (தேவேந்திரன்

வேண்ட (அவ் விச்சவவுருவன்) தேவர்கட்குச் செல்வம் பெருகுக வென்று (வாக்கி னுற்) சொல்லி, வெவ்விய யாக்கினியை வளர்ப்பவன், மனம் விகாரமுற்று தனக்கு மேல்வருங் கெடுதி யுணராது அசுரர்கட்கெல்லாம் பிழைக்குந் திறம் உண்டாகுகவெ ன்று (மனத்தினுற்) சிந்தித்துச் செய்தான். எ-று.

செய்திடல் - செய்க வென்னும் வியங்கோள்வினைமுற்று. (கல)

வாக்கினுன் மனத்தால் வேருய் மகஞ்செய்வான் செயலை யாக்கை
நோக்கினு னேதி தன்னு னேக்கினுன் குலிச வேலாற்
ருக்கினுன் றலைகண் மூன்றுந் தனித்தனி பறவை யாகப்
போக்கினு னலகை வாயிற் புகட்டினுன் புலவுச் சோரி.

(இ-ள்.) வாக்கால் வேறுபட்டும் மனத்தால் வேறுபட்டும் யாகம் வளர்த்தி வரும் விச்சவவுருவனது செய்கையை, உடல் முழுதுங் கண்கள் பொருந்திய தேவேந் திரன் ஞானநோக்கத்தாற் பார்த்து (அறிந்து தனது கையிலுள்ள) வச்சிராயுதத்தால் (அவனது) தலைகள் மூன்றையுந் தனித்தனி யொவ்வொரு பறவையாகப் போக்கிச் சிதைத்தான். பேய்களின் வாய்களில் ஊனேடு கூடிய உதிரத்தை நிறைவித்தான்.

சோமபானஞ் செய்யும் முகமுடைய தலையைக் காடையாகவும், சுராபான பானஞ் செய்யும் முகமுடைய தலையை ஊர்க்குருவியாகவும், அன்னபானஞ்செய்யும் முகமுடைய தலையைச் சிச்சிலியாகவும்போக்கினுன் என ஆலாஸ்யமகாத்மியங் கூறு கின்றது. இதனை

* [illegible]

[illegible]

[illegible] என வருவனவற்று னறிக.

தெற்றெனப் பிரம பாவஞ் சீறிவந் தமரர் வேந்தைப்
பற்றலு மதனைத் தீர்ப்பான் பண்ணவர் மரமேன் மண்மேற்
பொற்றொடி யார்மே னீர்மேல் வேண்டினர் புகுத்த லோடு
மற்றவ ரிஃதியாந் தீர்க்கும் வண்ணம்யா தென்ன விண்ணேர்.

(இ-ள்.) அதி சீக்கிரத்தில், பிரமஹத்தியானது கோபித்துவந்து இமையவர் க்கரசனுகிய தேவேந்திரனைப் பற்றவும், தேவர்கள் அப் பிரமஹத்தியைத் தீர்க்க விரு ம்பி, மரத்தினிடத்தும், மண்ணினிடத்தும், பொன்னுலாகிய வளையலை யணிந்த பெண் களிடத்தும், நீரினிடத்தும் (அப் பிரமகத்தியைப்பாகித்து)ச் செலுத்த, அந்நால்வரும் இப் பிரமஹத்தியை நாங்கள் ஒழிக்கும்வகை யாதென்று வினவ, தேவர்கள். எ-று.

இச் செய்யுளிலுள்ள விண்ணேர் என்பது அடுத்த*செய்யுளின்மூன்ருவது வரியிலுள்ள என்ருர் என்னும் முற்றுப் பயனிலைகொண்டது.

இதுமுத லிரண்டுபாடல்கள் குளகம்.

தீர்ப்பான் என்பதில் பான் எதிர்காலவினையெச்சவிகுதி. (கஉ)

அப்பிடை நுரையாய் மண்ணி லருவருப் புவரா யம்பொற்
செப்பிளங் கொங்கை யார்பாற் றீண்டுதற் கரிய பூப்பாய்க்
கப்பிணர் மரத்திற் காலும் பயினதாய்க் கழிக வென்று
ரீப்பழி சுமந்த வெங்கட் கென்னல மென்ருர் பின்னும்

(இ-ள்.) (தேவர்கள்) சலத்தில் நுரையாகவும், மண்ணில் அருவருப்புப் பொருந்தியஉவர்ப்பாகவும், அழகிய பொற்கலசம்போன்ற இளமைதங்கிய குயங்களையுடைய மாதர்களிடத்தில் தொடுதற்கரியபூப்பாகவும், கிளைகளையும் பூங்கொத்துகளையுமுடைய மரத்தில் கசிந்தொழுகும் பிசினாகவும் (அப்பிரமஹத்தி) கழியக்கடவது என்றார்கள். மீளவும் (அவர்கள் நால்வரும்) இந்தப் பிரமகத்தியை யேற்றுக்கொண்ட எங்கட்கு (இதனால்) என்னபலன் என்று வினவினர். எ-று.

பூப்பு=மாதவிடாய். (௧௩)

மேற்படி வேறு.

கருவின் மாதர் கருவுயிர்க்கு மளவு முறையாற் கணவர்தோண்
மருவி வாழ்க மண்ணகழ்ந்த குழியு மதனால் வடுவொழிக
பொருவி னீரு மிறைதோறு மூறிப் பொலிக மரங்குறைபட்
டொருவி னுனுந் தழைகவென வொழியா நலனு முதவினார்.

(இ-ள்.) கருப்பத்தை யடைந்த மாதர்கள் அக் கருவைப் பிரசவிக்குமெல்லையும் முறைப்படி தத்தமது கணவரது தோள்களைச் சேர்ந்து வாழக்கடவர்: மண் தோண்டிய குழியும் அம் மண்ணாலேயே அவ் வடு ஒழியக்கடவது: சமானமில்லாத நீரும் இறைக்குந்தோறும் ஊற்றெடுத்து நிறையக்கடவது: மரங்கள் (வாளால்) வெட்டப்படினுந் தழையக்கடவன என்று, (ஒருபோதும்) ஒழியாதபலனையுங் கொடுத்தார்கள். (அத் தேவர்கள்) எ-று. (௧௪)

மாசிற் கழிந்த மணியேபோல் வந்த பழிதீர்ந் திந்திரனுந்
தேசிற் றிகழத் துவட்டாதன் செல்வன் றன்னைத் தேவர்பிரான்
வீசிக் குலிசத் துயிருண்ட விழுமங் கேட்டு வெகுண்டுயிர்த்துக்
கூசிப் பழிகோள் கருதியொரு கொடிய வேள்வி கடிதமைத்தான்.

(இ-ள்.) மாசிலிருந்து நீங்கிய இரத்தினம்போல (விச்சுவவுருவனைக் கொன்றதால் தனக்கு)ச் சம்பவித்த பிரமகத்தியை (நிலம்-நீர்-மரம்-மாதர்கட்குப் பகிர்ந்து) ஒழிந்து தேவேந்திரனும் (பண்டுபோல்) ஒளிகொண்டு விளங்க, துவஷ்டா என்னுமசுரன் தன் புதல்வனாகிய விச்சுவவுருவனைத் தேவேந்திரன் வச்சிராயுதத்தால் வீசி அவ னுயிரைக் குடித்த துன்பச்செய்தியைக் கேள்விப்பட்டுக் கோபித்துப் பெருமூச்செறிந்து மனங் கூசி, பழிக்குப் பழி வாங்க நினைத்து, ஒரு கொடிய யாகத்தை விரைவாகச் செய்தான். எ-று. (௧௫)

அந்தக் குண்டத் தெரிசிகைபோ லழலுங் குஞ்சி யண்டமுக
டுந்தக் கொடிய தூமம்போ லுயிர்த்துச் செங்கண் சினச்செந்தீச்
சிந்தப் பிறைவா ளெயிறதுக்கித் திசைவான் செவிடு படநகைத்து
வந்தக் கொடிய விடம்போல வெழுந்தா னொருவாள் மறவீரன்.

(இ-ள்.) அந்த யாககுண்டத்திலே, அக்கினிக் கொழுந்துபோலச் செந்நிறமுற்று விளங்குஞ் சிகையானது அண்டமுகட்டிற் றாக்கவும், கொடிய புகைபோலப் பெருமூச்செறிந்து செவந்த கண்கள் கோபாக்கினியை வீசவும், பிறைச்சந்திரன்போன்ற (வளைவாகிய) ஒளிதங்கிய பற்களை யதுக்கி, அஷ்டதிக்குகளும் ஆகாயமுஞ் செவிடுபடும்படி அட்டகாசஞ் செய்து (கடலிற் றோன்றித் தேவருயிரைப் பருக) வந்த அந்தக் கொடிய ஆலாலவிடம்போல வாட்படை தாங்கிய ஒரு மறவீரன் தோன்றினான். எ-று.

வந்த என்பதில் அகரவீறு தொக்குநின்றது. அகரச்சுட்டு மிகுதிப்பொருளது. மறம்-பாவம்; கோபம். பிறைவாளெயிறு - வக்கிரதந்தம். (௧௬)

கலிவிருத்தம்.

ஈங்கிவன் விருத்திர னென்ப வாரழற்
றாங்குவன் கணைவிடு தூர நீண்டுநீண்
டோங்குவ னேங்குதற் கொப்ப வைகலும்
வீங்குவ னறனிலார் வினையி னென்பவே.

(இ-ள்.) இவ் யாகத்திற் றோன்றிய இவ்வீரனை விருத்திராசுரனென்று சொல்வார்கள். மிகுந்த கோபாக்கினி பொருந்திய வலிய அம்புகளை விடுந்தூரமள வும் எந்நாளும் நீண்டுநீண்டு உயர்வான். நீள்வதற்கு ஏற்ப, தருமச்செயல்க ளில்லா தவர்கள் தேடும் பாவம்போலக் கனப்பான். எ-று.

உகரம்-அகரச்சுட்டுப் பொருளி னின்றது. (கஎ)

வீங்குடல் விருத்திரன் றன்னை விண்ணவ
ரேங்குற வருதுவட் டாவெ னும்பெயர்த்
தீங்குறு மனத்தினேன் றேவர் கோனுயிர்
வாங்குதி பொருதென வரவிட் டானரோ.

(இ-ள்.) (தான் செய்தயாகத்திற் றோன்றிய) பூரித்த உடலையுடைய விருத் திராசுரனை, தேவர்கள் ஏக்கமுறும்படி வந்த துவஷ்டாவென்னும் பெயர்வாய்ந்த கொடுமைபொருந்திய மனதினையுடையவன், போர்புரிந்து தேவேந்திரனது உயிரை வாங்கக்கடவாயென்று ஏவினன். எ-று. (கஅ)

மதித்துணி யெயிற்றினோன் வடவை போற்சினை இக்
கொதித்தெதிர் குறுகினன் கொண்ட லூர்தியு
மெதிர்த்தனன் களிற்றின்மே லிமயத் துச்சிமே
லுதித்ததோர் கருங்கதி ரொக்கு மென்னவே.

(இ-ள்.) சந்திரதுண்டம்போன்ற (வக்கிர) தந்தங்களையுடைய விருத்திரா சுரன் வடவாமுகாக்கினிபோலச் சினந்து பொங்கி (போர்செய்ய) எதிரில் வந்தனன். மேகத்தை வாகனமாகவுடைய தேவேந்திரனும் இமயமலையின் முகட்டில் உதித்த ஒரு கருஞ்சூரியனை யொக்குமென்று சொல்லும்படி, (ஐராவதமென்னுந் தனது பட் டத்து) யானையின்பேரிலேறி (போர்க்கோலங்கொண்டு) எதிர்த்தனன். எ-று

வடவாமுகம்-பெட்டைக்குதிரை முகம்போலிருக்கும் ஊழித்தீ. இதுகடல் எல்லைகடந்து உலகிற்பரவாது இறைவரால்ஆண்டு நிறுத்தப்பட்டுள்ளது. இதில் முன் மொழியீற்றிற் பொருணின்றது. வீமசேனனை வீமன் என்றாற்போல. (கக)

அறத்தொடு பாவநேர்ந் தென்ன வார்த்திரு
திறத்தரு மூண்டமர் செய்யக் கற்சிறை
குறைத்தவன் றகுவன்மேற் குலிச வேலெடுத்
துறைத்திட வீசின னுடன்று கள்வனும்.

(இ-ள்.) புண்ணியமும் பாவமுந் தம்முட் பொருதக்கருதி எதிர்த்தாற் போல ஆரவாரித்து அவ்விரண்டு திறத்தினருங் கோபமதிகரித்துப் போர்செய்ய, மலையினது சிறகுகளைச் சங்கரித்தவனாகிய தேவேந்திரன் விருத்திராசுரன்பேரில் தனது வச்சிராயுதத்தை யெடுத்து உறைக்கும்படி வீசினன். வஞ்சகனாகிய அந்த விருத்திராசுரனுங் கோபமுற்று. எ-று. (உ0)

இது முதலிரண்டு பாடல்கள் குளகம்.

இடித்தனன் கையிலோ ரிருப்பு லக்கையைப்
பிடித்தனன் வரையெனப் பெயர்ந்து தீயெனத்
துடித்தனன் சசிமுலைச் சுவடு தோய்புயத்
தடித்தன னிந்திர னவச மாயினன்.

(இ-ள்.) ஆரவாரித்து, ஒரு இருப்புலக்கையைக் கையிற்றாங்கி, மலைபோல அடிபெயர்ந்து அக்கினிபோலக் கோபித்து, இந்திராணியின் முலைச்சுவடுபொருந்திய புயத்தின்பேரி லடித்தனன். (அவ்விருத்திராசுரன் அடித்த அடியால்) தேவேந்திரன் மூர்ச்சித்தனன். எ-று.

அவசம்-தன்வசமொழிதல்.

இடித்தனன் பிடித்தனன் துடித்தனன் என்னும் வினைமுற்றுகள் வினையெச்சப் பொருளன. (உக)

அண்டரோ ரரியவ னவச மாறிப்பின்
கண்டகன் கைதவ நினைந்திக் கள்வனோர்
மண்டம ராற்றுவான் வலியி லோமெனப்
புண்டரீ கத்தவ னுலகிற் போயினன்.

(இ-ள்.) தேவர்களுள் ஆண் சிங்கத்தை யொத்தவனாகிய தேவேந்திரன் (சிறிது நேரத்தில்) மூர்ச்சை தெளிந்து, பிறகு விருத்திராசுரனது வஞ்சனையை யுணர்ந்து, இவ்விருத்திரனுக்கு எதிரிலிருந்து நெருங்கிய போர்செய்ய வல்லமையில்லோமென்று நினைத்து, தாமரை மலரில் வாசஞ்செய்யும் பிரமதேவனது சத்தியலோகத்தை யடைந்தனன். எ-று.

வலியிலோம்-என்றது உளப்பாட்டுத் தன்மைப் பன்மை வினைமுற்று. (உஉ)

தாழ்ந்துதான் படுதுயர் சாற்றத் தாமரை
வாழ்ந்தவன் வலாரியோ டணைந்து மாமகள்
வீழ்ந்தமார் பினனடி வீழ்ந்து செப்பமால்
சூழ்ந்துவா னுடனை நோக்கிச் சொல்லுவான்.

(இ-ள்.) (பிரமதேவனை) நமஸ்கரித்து, தான் (விருத்திராசுரனால்) படுகின்ற துயரங்களை முறையிட, தாமரைமலரில் வீற்றிருக்கும் பிரமதேவன், வலாசுரனைச் சங்கரித்த தேவேந்திரனுடன் (வைகுந்தலோகத்திற்குப்) போய், திருமகள் வாசஞ்செய்யும் மார்பையுடைய விண்டுமூர்த்தியின் திருவடியில் வீழ்ந்து விண்ணப்பிக்க, அத்திருமால் ஆலோசித்துத் தேவேந்திரனை நோக்கிச் சொல்கின்றார். எ-று. (உா)

ஆற்றவும் பழையதுன் னங்கை வச்சிர
மாற்றவ ருயிருண வலியின் றுதலால்
வேற்றொரு புதியது வேண்டு மாலினிச்
சாற்றுது மதுபெறுந் தகைமை கேட்டியால்.

(இ-ள்) (தேவேந்திரா !) உன் கையிற்பற்றிய வச்சிராயுதமானது சாலவும் பழமையானது. (அது) சத்துருக்களது உயிரைப்பருக வலிமையில்லா திருக்கின்றது. ஆனபடியால் வேறொரு புதிய வச்சிராயுதம் வேண்டும். அவ்வாயுதத்தைப் பெறுந்தன்மையை இனிச் சொல்கின்றோம் கேட்பாயாக. எ-று. (உச)

தொடையகன் மார்பநாந் தூய பாற்கடல்
கடையுநா ளசுரருஞ் சுரருங் கையில்வெம்

படையொடு மடையன்பின் பழுதென் றப்படை
யடையவுந் ததீசிபா லடைவித் தாமரோ.

(இ-ள்) (கற்பக மலர்) மாலையணிந்த பரந்த மார்பகத்தையுடைய தேவேந்திரா! நாம பரிசுத்தமாகிய திருப்பாற்கடலைக் கடைந்தகாலத்தில் அசுரர்களுஞ் சுரர்களுங் கையிலேந்திய வெவ்விய ஆயுதங்களோடும் வராதேயுங்கள் (ஆயுதங்களைக் கொண்டுவருவீராயின்) குற்றம் வருமென்று அந்த (இருதிறத்தவரது) ஆயுதங்களை யெல்லாந் ததீசி முனிவரிடத்திற் சேர்ப்பித்தோம். எ-று.

சுரையையுண்டவர் சுரா. அதனை யுண்ணாதவர் அசுரர். (உ௫)

சேட்படு நாணனி செல்வத் தேவரா
வாட்படை யவுணரா வந்து கேட்டிலர்
ஞாட்படை படையெலா ஞான நோக்கினால்
வேட்படை வென்றவன் விழுங்கி னானரோ.

(இ-ள்.) நீடி[illegible] லம் மிகுதியாகக் கழிய, தேவராவது வாட்படைதாங்கிய அசுரராவது வந்து (தாம்[illegible] ஆயுதங்களைக்) கேட்டாரிலர். (ஆனபடியால்) மன்மத பாணங்களை ஞான நோக்கத்தினால் வென்ற அத்ததீசி முனிவர் போர்க்களத்தில் (தொழில் செய்தற்கு) அடையத்தக்க அவ்வாயுதங்களை யெல்லாம் விழுங்கினர். எ-று.

ஆவது விகற்பப் பொருளில்வரும் இடைச்சொல். ஈண்டு ஈறு தொக்குத் தேவரா அவுணரா எனநின்றது. (உசு)

விழுங்கிய படையெலாம் வேற றததிரண்
டொழுங்கிய தான்முது கந்தண் டொன்றியே
யெழுங்கதிர்க் குலிசமா மிதனை யெய்துமுன்
வழங்குவன் கருணையா வடிவ மாயினான்.

(இ-ள்.) அத்ததீசி முனிவர் விழுங்கிய ஆயுதங்களெல்லாம் வேறன்மையாய் (ஒன்றுபடச்) சேர்ந்து வீணாதண்டம்போன்ற அவரது முதுகந் தண்டெலும்போடு பொருந்தி ஒழுங்குபட்டுள்ளது. (அது) பிரகாசத்தைவீசும் வச்சிராயுதமாகும். கிருபையே ஓருருவங் கொண்டாற்போன்ற அம்முனிவர் (அவரை யடைந்து) கேட்பதன்முன்னே அதனைக்கொடுப்பர். எ-று. (உஎ)

மேற்படி வேறு.

என்று மாதவ னியம்ப வுமபாகோ
னென்றும வானவர் தமமொ டொல்லெனச
சென்று மாயையின் செயலை நோன்பினால்
வென்ற மாதவ னிருக்கை மேவினான்.

(இ-ள்.) என்று (இவ்வகையாகத்) திருமால்கூறவும், தேவராசன் தன்னைப் பிரியாத தேவர்களுடன் விரைந்து சென்று, மாயாவிகாரங்களை விரதங்களால் வெற்றிகொண்ட பெரிய தவத்தையுடைய ததீசிமுனிவரது ஆச்சிரமத்தை யடைந்தனன்.

மாதவன் இரண்டனுள் முற்பட்டது மா+தவன்=இலக்குமி நாயகன் எனவும், பிற்பட்டது மா=பெரிய, தவன்=தவமுடையோன் எனவும் பொருள்படும்.

மேற்படி வேறு.

அகமலர்ந் தருந்தவ னமரர்க் கன்புகூர்
முகமலர்ந் தின்னுரை முகமன் கூறிநீர்

முகமெலிந் தெய்தினீர் விளைந்த தியாதது
தகமொழிந் திடலென வலாரி சாற்றுவான்.

(இ-ள்.) செய்தற்கரிய தவத்தையுடைய ததீசிமுனிவர் மனங்களிகூர்ந்து தேவர்களைப்பார்த்து அன்புமிகுந்த முகமலர்ச்சி காண்பித்து, இன்சொல்களை உபசாரங்களாகக்கூறி, நீங்கள் மிகவும் மெலிந்துவந்தீர்கள் நடந்த விருத்தாந்தமென்ன? அவ்விருத்தாந்தத்தைப் பொருந்தச் சொல்லக்கடவீர் என்று கேட்க, வலாசுரனைச் செயித்த தேவேந்திரன் சொல்லத்தொடங்கினன். எ-று. (உக)

அடிகணீர் மறுதவிதான் றதனை வேண்டியிம்
முடிகொள்வா னவரொடு முந்தி னேனது
செடிகொள்கா ரிருளுட லவுணர்த மேதெய்த்தெமர்
குடியெலாம் புரப்பதோர் கொள்கைத் தாயது.

(இ-ள்.) சுவாமிகாள்! தேவரீர் தடைசொல்லாமற் கொடுக்கவேண்டிய பொருள் ஒன்று (உளது) அப்பொருளை (அடைய) விரும்பி, இந்தக் கிரீடந்தரித்த தேவர்களுடன் இங்கேவந்தேன். அப்பொருள் முடைநாற்றம்வீசுங் கரிய இருள் போன்ற உடலையுடைய அசுரர்களையெல்லாம் அடியோடழித்து, எம்முடையவர் குடிகளையெல்லாம் பாதுகாக்கும் ஒரு கொள்கையை யுடையது. எ-று. (௬௦)

யாதெனி னினையதுன் யாக்கை யுள்ளதென்
றோதலும் யாவையு முணர்ந்த மாதவ
னாதவற் கண்டதா மரையி னன்னப்
போதலர்ந் தின்னன புகல்வ தாயினான்.

(இ-ள்.) இவ்வகைப்பட்ட பொருள் யாதென்று வினவில், தேவரீரது உடலிற்பொருந்தி யுள்ளதென்று கூறவும், (திரிகாலவர்த்தமான முதலிய) எல்லாவற்றையும் (ஞான நோக்கத்தினால்) அறிந்த அத்ததீசி முனிவர், சூரியனைக்கண்ட தாமரை மலர்போல, முகமலர்ச்சிகொண்டு இத்தன்மையனவற்றைக் கூறத்தொடங்கினர்.

உணர்ந்த-காலவழுவமைதி. உணரும் என நிற்றற்பாலது. (௬க)

நாய்நம தெனநரி நமதெ னப்பிதா
தாய்நம தெனநமன் றனதெ னப்பிணி
பேய்நம தெனமன மதிக்கும் பெற்றிபோ
லாய்நம தெனப்படும் யாக்கை யாரதே.

(இ-ள்.) நாய் நம்முடையதென்றும், நரி நம்முடையதென்றும், தந்தையுந் தாயும் நம்முடையதென்றும், இயமன் தன்னுடையதென்றும், பிணியும் பேயும் நம்முடையதென்றும், மனதிற்கருதுந் தன்மைபோலாகி, (நாமும்) நம்முடையதென்று நினைக்கப்படும் இச்சரீரம் யாவர்க்கு உரியது? (ஒருவர்க்குமுரியதன்று.) எ-று. (௬உ)

விடம்பயி லெயிற்றர வுரியும் வீநுழை
குடம்பையுந் தானெனுங் கொள்கைத் தேகொலா
நடம்பயில் கூத்தரி னடிக்கு மைவர்வா
ழுடம்பையும் யானென வுரைக்கற் பாலதோ.

(இ-ள்.) ஆடுகின்ற கூத்தர்கள்போல (விடயவாதனையுற்று) நடிக்கின்ற பஞ்சேந்திரியங்கள் வாழுஞ் சரீரத்தையும் யானென்று உயிர்சொல்லுந் தன்மையது விஷம்பொருந்திய பற்களையுடைய பாம்பு தனதுதோலையும் பக்ஷி தான் நுழையுங் கூட்டையும் தானென்று (தனித்தனி) கூறுங் கொள்கையையுடையதேயாம். எ-று.

ஐவர் என்னுந் தொகைக்குறிப்புச்சொல் உடம்பு என்னுங்குறிப்பால், பஞ்சேந்திரியங்களை யுணர்த்தியது. (௬௩)

நடுத்தயா விலார்தமை நலியத் துன்பநோ
யடுத்தயா வருந்திரு வடைய யாக்கையைக்
கொடுத்தயா வரும்புகழ் கொள்வ னேயெனி
னெடுத்தயாக் கையின்பய னிதனின் யாவதே.

(இ-ள்,) தேவேந்திரா! நடுநிலைமையுங் கருணையுஞ் சிறிதுமில்லாத அசுரர்கள் தம்மைத் துன்புறுத்துதலால், துன்பநோய் பொருந்திய இமையவர் யாவருஞ் செல்வமடையும்படி, என் உடலைக் கொடுத்துப் புண்ணியத்தையும் புகழையுங் கைக்கொள்வேனாகில், நானெடுத்த சரீரத்தினாலாகிய பலன் இதைக்காட்டிலும் வேறே யாதுளது? (ஒன்றுமில்லை) எ-று.

புகழுடம்பு பெறுவேனாதலிற் பூதவுடம்பாற் பயனில்லையென்பார் "கொள்வனேல் எடுத்தயாக்கையின் பயனிதனின்யாவதே" என்றார்.

மூன்றாவது வரியிலுள்ள ஐயாவென்பது அயா எனப் போலியாயிற்று. யாவது-வகர மெய்தோன்றல் விகாரம். (௬௪)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

என்றனன் கரண மொன்றி யெழுகருத் தறிவை யீர்ப்ப
நின்றனன் பிரம நாடி நெறிகொடு கபாலங் கீண்டு
சென்றனன் விமான மேறிச் சேர்ந்தன னுலகை நோன்பால்
வென்றவன் றுறக்கம் புக்கு வீற்றினி திருந்தா னம்மா.

(இ-ள்.) என்று (இவ்வகையாகக்) கூறி, உலகவின்பத்தைச் சிவநேயத்தாற் செயித்த ததீசிமுனிவர் அந்தக் கரணங்கள் ஒன்றுபட்டு, (அந்நிலையில் நான் என்று) எழுகின்ற போதவிருத்தி உண்மை யறிவைப்பற்றிப் பின்செல்ல, சிவயோகங்கூடி பிரமநாடியின் வழிக்கொண்டு கபாலத்தைக் கிழித்துச்சென்று விமானமேறிச் சிவலோகஞ் சேர்ந்து இடையூறின்றி வீற்றிருந்தனர். எ-று. (௬௫)

அம்முனி வள்ள லீந்த வடுபடை முதுகந் தண்டைத்
தெம்முனை யடுபோர் சாய்க்குந் திறல்கெழு குலிசஞ் செய்து
கம்மியப் புலவ னுக்கங் கனைந்துகை கொடுப்ப வாங்கி
மைம்முகி லூர்தி யேந்தி மின்விடு மழைபோ னின்றான்.

(இ-ள்.) முனிவள்ளலாகிய அத்ததீசிமுனிவர் கொடுத்த கொல்லுதற்குரிய ஆயுதங்கள் திரண்ட முதுகந்தண்டெலும்பினை, சத்துருக்கள் முனையுங் கொல்லுதற்குரிய போரைப் பின்னிடச்செய்யும் வெற்றிமிக்க வச்சிராயுதமாகச்செய்து, தேவதச்சன் (வெற்றிதரத்தக்கது என்று) ஆசீர்வசனங்கூறிக் கையிற் கொடுக்கவாங்கி, கரிய மேக வாகனனாகிய தேவேந்திரன் (அவ்வச்சிராயுதத்தைத்) தாங்கி, மின்னலைக் கக்குகின்ற மேகம்போல நின்றான். எ-று.

தெவ்+முனை=தெம்முனை. நிலைமொழியீற்று வகரமெய் வருமொழிமுதல் மகரமெய்யாகத் திரிந்தது. (௬௬)

மறுத்தவா வஞ்சப் போரால் வஞ்சித்து வென்று போன
கறுத்தவா ளவுணற் கொல்வான் கடும்பரி நெடுந்தேர் நீழல்
வெறுத்தமால் யானை மள்ளர் வேலைபுக் கெழுந்து குன்ற
மறுத்தவா னவர்கோ னந்த வவுணர்கோ மகனைச் சூழ்ந்தான்.

(இ-ள்.) குற்றத்தினின்றும் அகலாத வஞ்சனைபொருந்தியபோரினால் வஞ்சித்துச் சயங்கொண்டுசென்ற, கரிய சரீரத்தையுடைய ஒள்ளியவாளேந்திய விருத்திராசுரனைக் கொல்லும்படி கடுநடையையுடைய குதிரைகளும், நெடிய (நிலைகளையுடைய) தேர்களும், தமது உடல்நிழலைக்கோபிக்கும் மதமயக்கமுடைய யானைகளும், காலாள்களுமாகிய (நால்வகைப்பட்ட) சேனாசமுத்திரம் புடைசூழ்ந்து வரச்சென்று அசுரர் தலைவனாகிய அந்த விருத்திராசுரனைச் சூழ்ந்துகொண்டான் (தேவேந்திரன்.)

வானவர் சேனை மூண்டு வளைத்தலும் வடவைச் செந்தீ
யானது வரையி னோங்கி யழன்றுருத் தெழுந்தா லென்னத்
தானவர் கோனு மானந் தலைக்கொள வெழுந்து பொங்கிச்
சேனையுந் தானு மூண்டு சீறிநின் றடுபோர் செய்வான்.

(இ-ள்.) தேவர்களது சேனையானது கோபமுண்டு முற்றுகைசெய்யவும், வடவாமுகாக்கினியானது மலையைப்போல ஓங்கிக் கொதித்துக் கோபித்து எழுந்தாற்போன்று, அசுரர்குலத் தலைவனாகிய அந்த விருத்திராசுரனும் மானம் மீதூரப் போருக் கெழுந்து கொதித்து, தானுஞ் சேனையுங் கோபமூண்டு சீறிப் போர்புரியத் தொடங்கினன். எ-று.

அடுபோர்=கொலைத்தொழிற்குரிய போர்.

தானுஞ் சேனையும் எனத் திணைவிரவிச் சிறப்பினாற் செய்வான் என்னும் உயர்திணையொருமை முடிபேற்றது. இது திணைவழுவமைதி. (கூஅ)

அடுத்தன ரிடியே றென்ன வார்த்தன ராக்கங் கூறி
யெடுத்தனர் கையிற் சாப மெறிந்தனர் சிறுநா ணோசை
தொடுத்தனர் மீளி வாளி தூர்த்தனர் குந்த நேமி
விடுத்தனர் வானோர் சேனை வீரர்மே லவுண வீரர்.

(இ-ள்.) அசுரவீரர்கள் தேவசேனாவீரர்பேரில் அடுத்து, இடியேற்றினைப் போல ஆர்ப்பரித்து, வெற்றியுண்டாகவெனக்கூறி, வில்லைக் கையிற்றாங்கி, சிறிய குணத்தொனியுண்டாக நாணெறிந்து, பலம் பொருந்திய அஸ்திரங்களைப் பிரயோகஞ்செய்து தூர்த்தார்கள். (அவருட்சிலர்) கைவேல்-சக்கராயுதம் (இவற்றை) எறிந்தார்கள். எ-று. (கூகூ)

கிட்டினர் கடகக் கையாற் கிளர்வரை யனைய திண்டோள்
கொட்டினர் மாறி மாறிக் குதித்தனர் பலகை நீட்டி
முட்டின ரண்டம் விள்ள முழங்கினர் வடிவா ளோச்சி
வெட்டின ரவுணச் சேனை வீரரை வான வீரர்.

(இ-ள்.) அசுரசேனா வீரர்களைத் தேவசேனாவீரர்கள் நெருங்கி, தமது கடகம்பூண்ட கைகளால் விளங்குகின்ற மலைகளையொத்த திண்ணிய புயங்களைக் கொட்டினார்கள். வலசாரி இடசாரியாக மாறி (அவருட்சிலர்) குதித்தார்கள். அவர் கேடகங்களோடு தமது கேடகங்கள் தாக்கும்படி நீட்டி (சிலர்) மோதினார்கள். அண்டகடாகம் பிளவுறும்படி (சிலர்) ஆர்ப்பரித்தார்கள். வடித்த வாளாயுதத்தை யோச்சி (சிலர்) வெட்டினார்கள். எ-று. (சு0)

வீழ்ந்தனர் தோளுந் தாளும் விண்டனர் சோரி வெள்ளத்
தாழ்ந்தனர் போருந் தாரு மகன்றன ரகன்ற மார்பம்
போழ்ந்தனர் சிரங்க ளெங்கும் புரண்டனர் கூற்றூர் புக்கு
வாழ்ந்தன ரடுபோ ராற்றி வஞ்சகன் சேனை மள்ளர்

(இ-ள்.) விருத்திராசுரனது சேனாவீரர்கள் போர்செய்து புயங்களுந் தோள்களும் அறுபட்டார்கள். (சிலர்) உதிரஞ் சொரிந்தார்கள். (சிலர் அவ்வுதிர) வெள்ளத்தில் ஆமிழ்ந்தார்கள். (சிலர்) போர்புரிதலையும் (வெற்றி) மாலையணிதலையும் விலகினார்கள். (சிலர்) பரந்தமார்பு பிளவுற்றார்கள். (சிலர்) எங்குந் தலைகள் புரளப்பட்டார்கள். (சிலர்) இயமபுரத்திற் குடிபுகுந்து வாழ்ந்தார்கள். எ-று.

தோளுந்தாளும் வீழ்ந்தனர்.-சோரிவிண்டனர்—திணைவழுவமைதி. (சுக)

தாளொடு கழலு மற்றார் தலையொடு முடியு மற்றார்
தோளொடு வீர மற்றார் தும்பையோ டமரு மற்றார்
வாளொடு கரமு மற்றார் மார்பொடு கவச மற்றார்
கோளொடு மாண்மை யற்றார் குறைபடக் குறையா மெய்யர்.

(இ-ள்.) (ஆயுதங்களாற்) சிதைக்கப்பட்டாலுஞ் சிதைக்கப்படாத தேகத்தையுடைய தேவர் சேனாவீரருட்சிலர் (அசுரசேனாவீரரால்) கால்களும் வீரகண்டாமணியும் அறுபட்டார்கள். (சிலர்) தலையுங் கிரீடமுந் துணிபட்டார்கள். (சிலர்) தோள்களும் வீரத்தனமும் நீங்கினார்கள். (சிலர்) தும்பைமாலையும் போரும் ஒழிந்தார்கள். (சிலர் பிடித்த) வாள்களும் கைகளும் அறுபட்டார்கள். (சிலர்) மார்புங் கவசமும் பிளவுபட்டார்கள். (சிலர்) வல்லமையும் ஆண்தன்மையும் நீங்கினார்கள்.

தொக்கன கழுகு சேனஞ் சொரிகுடர் பிடுங்கி யீர்ப்ப
வுக்கன குருதி மாந்தி யொட்டல்வாய் நெட்டைப் பேய்க
ணக்கன பாடல் செய்ய ஞாட்பினுட் கவந்த மாடப்
புக்கன பிணத்தின் குன்றம புதைத்தபார் சிதைத்த தண்டம்.

(இ-ள்.) கழுகுகளும் பருந்துகளும் போர்க்களத்தில் (ஒருபுறம்) நெருங்கி, சரிகின்ற குடல்களைப பிடுங்கி இழுக்கா நின்றன. ஒட்டிய வாய்களையுடைய நீண்ட பேய்கள் (போர்க்களத்தின் ஒருபுறத்தில்) சிந்தின உதிரங்களைப் பருகிச் சிரித்துப் பாடல்களைப்பாட, தலையிழந்தஉடல்கள் (ஆண்டு ஒருபால்) ஆடத்தொடங்கின. பிணமலை நிலவுலகத்தை மறைத்தது. (அப பிணமலையால்) வானுலகஞ் சிதைவுபட்டது.

சேனம்=பருந்து. ஞாட்பு=போர்க்களம். கவந்தம்=தலையொழிந்தவுடல். தொக்கன-நக்கன—முற்றெச்சவினைகள். (சுரு)

இவ்வகை மயங்கிப போர்செய் திறந்தவ ரொழியப் பின்னுங்
கைவகை யடுபோ ராற்றிக் கழையிறந் தார்கண் மாண்டா
ரவ்வகை யறிந்து வானத் தரசனு மவுணர் வேந்துந்
தெய்வதப் படைகள் வீசிச் சீறிநின் றடுபோர் செய்வார்.

(இ-ள்.) (தேவாசுர சேனைகளிலுள்ளோர்) இவ்வண்ணமாகத் தம்முட் கலந்து போர்புரிந்து இறந்தவர்கள் நீங்க, (ஒழிந்த) எண்ணில்லாதவர்கள் மீணடுங் கைவரிசையின் வகைகளால், கொல்லுதற்குரிய மற்போர் செய்திறந்தார்கள். தேவராசனும் அசுரநாதனாகிய விருத்திராசுரனும், (தமது சேனையிலுள்ளோர்) அவ்வாறு (மடிதலை) அறிந்து (தம்முள்) கோபித்துநின்று தேவாஸ்திரங்களைப் பிரயோகித்துப் போர் செய்யத் தொடங்கினார்கள். எ-று. (சுசு)

அனற்படை விடுத்தான் விண்ணோ ராண்டகை யதனைக் கள்வன்
புனற்படை விடுத்துச் சிந்தத் துணித்தனன் புனிதன் காற்றின்
முனைப்படை விடுத்தான் வெய்யோன் முழங்குகால் விழுங்கு நாகச்
சினப்படை தொடுத்து வீசி விலக்கினான் றேவ ரஞ்ச.

(இ-ள்.) தேவேந்திரன் அக்கினியாஸ்திரத்தைச் செலுத்திஞன். அந்த அஸ்திரத்தை விருத்திராசுரன் வருணஸ்திரத்தைப் பிரயோகித்துச் சிந்தும்படி துணித்தான். தேவேந்திரன் கூர்மைபொருந்திய வாயுவஸ்திரத்தை விடுத்தான். விருத்திராசுரன் ஒலிக்கின்ற அக்காற்றினை விழுங்குங் கோபத்தையுடைய நாகாஸ்திரத்தை (வில்லில்)தொடுத்துப் பிரயோகித்து,தேவர்கள் அஞ்சும்படி (அந்த வாயுவஸ்திரத்தை) ஒழித்தான். எ-று.

அக்கினி சம்பந்தமான அஸ்திரத்தை ஆக்கினேயமென்றும், வருணசம்பந்தம் வாருணமென்றும், வாயுசம்பந்தம் வாயவியமென்றுங் கூறுப. இவை தத்திதாந்த பதங்கள். (சடு)

நாகமாப் படைவிட் டார்த்தா ஞகர்கோ னுவணச் செல்வன்
வேகமாப் படையை வீசி விலக்கிஞன் றகுவர் வேந்தன்
மோகமாப் படையைத் தொட்டு முடுக்கிஞன் முனைவ னன்ன
தேகமாப் படிறன் ஞானப் படைவிடுத் திருள்போ னின்முன்.

(இ-ள்.) (விருத்திராசுரன்) பெரிய நாகாஸ்திரத்தைவிடுத்து வீரகோஷஞ் செய்தான். தேவேந்திரன் வேகத்தையும் பெருமையையுமுடைய கருடாஸ்திரத்தை விடுத்து (அந்நாகாஸ்திரத்தை) மாற்றிஞன். அசுரர் வேந்தனுகிய விருத்திராசுரன் கரிய மோகஞஸ்திரத்தையெடுத்து விரைந்து பிரயோகித்தான். தேவேந்திரன் பெரிய வஞ்சகத்தையுடைய அந்த அசுரன் (தொடுத்த மோகஞஸ்திரம்) பின்னிட்டோட, ஞானஸ்திரத்தைச் செலுத்திக் கரியமேகம்போல நின்முன். எ-று. (சசு)

மட்டிடு தாரான் விட்ட வானவப் படைக்கு மாறு
விட்டடன் விலக்கி வேறும் விடுத்திடக் கனன்று வஞ்சன்
முட்டிட மான வெங்கான் மூட்டிடக் கோபச் செந்தீச்
சுட்டிடப் பொறுது பொங்கிச் சுராதிப னிதனைச் செய்தான்

(இ-ள்.) தேனைச்சிந்தும் (கற்பக) மாலைபூண்ட அத்தேவேந்திரன் பிரயோகித்த தேவாஸ்திரங்களுக்கு, மாருகிய (தேவ) அஸ்திரங்களைச் செலுத்தி உடனேவிலக்கி, வேறு அஸ்திரங்களையும்விட வஞ்சத்தையுடைய அவ்வசுரன் கோபித்து நெருங்க, மனமாகிய சுடுங்காற்று மூட்ட, கோபமாகிய செவந்த அக்கினியானது மூண்டு சுடுதலாற் சகியாமற்சீறி, அத்தேவேந்திரன் இதனைச்செய்யத்தொடங்கினன்.

வீங்கிரு ளொதுங்க மேக மின்விதிர்த் தென்னக் கையி
லோங்கிருங் குலிச வேலை யொல்லென விதிர்த்த லோடுந்
தீங்குளம் போன்றி ருண்ட திணியுடற் கள்வ னஞ்சி
வாங்கிருங் கடலில் வீழ்ந்தான் மறைந்தமை நாக மொத்தான்.

(இ-ள்.) தடித்த அந்தகாரமானது அகன்ருேடும்படி மேகமானது மின்னலை விதிர்த்தாற்போல, கையிலேந்திய பெரிய வச்சிராயுதத்தை விரைந்து அசைக்க (அதனைப்பார்த்து) தீமைநிறைந்த தனது மனம்போலக் கரியநிறம்பொருந்திய திண்ணிய சரீரத்தையுடைய விருத்திராசுரன் அச்சமெய்தி, (பூமியை) வளைந்துள்ள பெரிய சமுத்திரத்தில் வீழ்ந்து மறைந்தான் (பூர்வம் அத்தேவேந்திரனுக் கஞ்சிக் கடலில்) வீழ்ந்து மறைந்த மைநாககிரியை யொப்பாஞன். எ-று. (சஅ)

ஒக்கவிந் திரனும் வீழ்ந்தா னுடல்சின வுருமே றன்ஞன்
புக்கிடந் தேடிக் காஞன் புண்ணிய முளரி யண்ணல்
பக்கம்வந் தனைய செய்தி பகர்ந்தனன் பதகன் மாளத்
தக்கதோர் சூழ்ச்சி முன்னிச் சராசர மீன்ற தாதை.

(இ-ள்.) அவனுடனே தேவேந்திரனும் வீழ்ந்து, கோபத்தையுடைய இடியேறுபோன்ற விருத்திராசுரன் புகுந்து மறைந்தவிடத்திற் றேடி அவனைக் காணாதவனாய், தெய்வீகம்பொருந்திய தாமரை மலரில் வசிக்கும் பிரமதேவன் பக்கலில்வந்து அந்தச் செய்தியைச் சொன்னான். சரம் அசரம் ஆகிய சமஸ்த வுயிர்களையும் பெற்ற அப்பிரமதேவன் (அதனைக்கேட்டு) பாதகனாகிய அவ்விருத்திராசுரன் இறக்கத்தக்க ஒருபாயத்தை யோசித்து. எ-று.

இது முதலிரண்டுபாடல்கள் குளகம். (சகூ)

விந்தவெற் படக்கி னாற்கீ துரையென விடுப்ப மீண்டு
சந்தவெற் படைந்தான் வானோர் தலைவனை முகமன் கூறிப்
பந்தவெற் பறுத்தான் வந்த தெவனெனப் பறைக ளெல்லாஞ்
சிந்தவெற் பறுத்தான் வந்த செயலெலா முறையாற் செப்ப.

(இ-ள்.) விந்தகிரியை யடக்கிய அகஸ்தியமுனிவருக்கு இவ் விருத்தாந்தத்தை விளம்புகவென விடுப்ப, அங்கிருந்து திரும்பிச் சந்தனமரங்கள் நெருங்கிய பொதியமலையை யடைந்தான். பந்தமாகிய மலையை யொழித்த அவ்வகத்தியமுனிவர் (தம்மிடம்வந்த) அத்தேவேந்திரனை நோக்கி உபசாரங்கூறி, வந்தகாரணம்யாதென்று வினவ, மலைகளின் சிறகுகளையெல்லாஞ் சிந்த அறுத்த அத்தேவேந்திரன் தான்வந்த செய்திகளையெல்லாங் கிரமப்படி சொல்லத்தொடங்கினான். எ-று. (ருo)

யாவையு முணர்ந்த வெந்தைக் கியானெடுத் துணர்த்து கின்ற
தாவதென் னமருக் காற்றா தாழிபுக் கொளித்தா னாவி
வீவது மவனால் வந்த விழுமமே யெல்லா மின்று
போவதுங் கருதி நும்பாற் புகுந்தன மடிக ளென்றான்.

(இ-ள்.) சுவாமிகளே! எல்லாவற்றையு மறிந்த எனது தந்தையாராகிய தேவரீருக்கு யான் உணர்த்துகின்ற செய்தியாவது யாது (என்னுடன்) போர்புரிதற்கு முடியாமற் கடலிற் புகுந்தொளித்துக்கொண்ட விருத்திராசுரன் உயிர் ஒழிதலையும் அவனால் வந்த துன்பநோய்களெல்லாம் (இப்பொழுதே எங்களை விட்டு) கழிதலையுங் கருதி, தேவரீரிடம் யாங்கள்வந்தோம் என்று கூறினன். எ-று. (ருக)

என்றவ னிடுக்கண் டீர்ப்பா னிகல்புரி புலன்க ளைந்தும்
வென்றவ னெடியோன் றன்னை விடையவன் வடிவ மாக்கி
நின்றவ னறிவா னந்த மெய்ம்மையாய் நிறைந்த வெள்ளி
மன்றவ னூழிச் செந்தீ வடிவினை மனத்துட் கொண்டான்.

(இ-ள்.) என்று (இவ்வாறு) கூறிய தேவேந்திரனது துன்பத்தைக் களையும் பொருட்டு (ஒன்றோடொன்று) போர்புரியும் ஐம்புலன்களையும் வென்றவரும், (திருக்குற்றாலத்தில் வீற்றிருந்த) திருமாலைச் சிவபெருமானது திருவடிவமாகச்செய்துநின்றவருமாகிய அகஸ்தியமுனிவர், சத்து சித்து ஆனந்தங்களே திருவுருவமாக நிறைந்து நின்ற வெள்ளியம்பலத்தையுடைய சோமசுந்தரக்கடவுளது ஊழித்தீயை நிகர்த்த செவந்த திருவுருவத்தை மனதில் தியானித்தார். எ-று.

கடல்நீர் சுவறக் கருதினவராதலின், இறைவனது ஊழிச் செந்தீவடிவினை மனத்துட்கொண்டார் என்றார். இக்குறிப்பை இதன் முன்னூலாகிய ஆலாசிய மகாத்மியத்திலும்.

காலாக்நிகோடிஸத்ருசம் ஹ்ருதம்போஜே ஸமாஹிதஹ், த்யாயந். எனவருதலானறிக.

நெடியோன்றன்னை விடையவன்வடிவமாக்கியது.

இறைவர் கட்டளைப்படி அகஸ்தியமுனிவர் பொதியமலையைநோக்கிச்செல்லுங்கால், திருக்குற்றாலத்திலுள்ள திருமுற்றம் என்னுந் திருப்பதி வழியே செல்ல, ஆங்குள்ள வயிணவப்பிராமணர் சிலர் இவரது சைவதவவடிவுநோக்கி மனஞ் சகியாது "இவ்வழி நீர் வருவது தகுதியன்று" என இகழ்ந்து கூற, அகஸ்தியமுனிவர் "மனம் பொறுக்க" என்று திரும்பிச் சென்று, அவர்களது அகந்தையைக் களையக் கருதி ஓர் வைணவப்படிவங்கொண்டு மீண்டும் அத்திருப்பதிவழியே செல்ல, அவ்வைணவர் அவரைப் பணிந்து திருமால் கோயிலை விரலாற் சுட்டிக்காட்டவும், சந்நிதியையடைந்து கண்ணபிரானைப் பணிந்து "பூசா திரவியங்கள் வேண்டும்" எனக் கூறி அவர்கள் கொடுக்கப்பெற்றுப் பூசைசெய்வார்போல உண்ணின்று, அவ்விண்டுவின் சிரமேற்கை வைத்து "குறுகுகுறுகு" என்று குறுகச்செய்து அத்திருமாலின் உருவத்தைச் சிவலிங்கத் திருவடிவாக்கினர். என்பதாம். இதனை,

கந்தபுராணம்-திருக்குற்றாலப்படலம்.

"அறுகுமதி நதிபுனையுஞ் செஞ்சடையெம் பெருமானை யகத்துட் கொண்டு
சிறுகுமுரு வுடையமுனி நாரணனார் திருமுடிமேற் செங்கை யோச்சிக்
குறுகுகுறு கெனவிருத்தி யொள்ளரக்கிற் புனைபாவைக் கோல மீது
மறுகுதழ லுற்றென்னக் குழைவித்தோர் சிவலிங்க வடிவஞ் செய்தான்" என்பதனுனறிக. (கஉ)

கைதவன் கரந்து வைகுங் கடலைவெற் படக்குங் கையிற்
பெய்துமுந் தெல்லைத் தாக்கிப் பருகினன் பிறைசேர் சென்னி
யையன தருளைப் பெற்றார்க் கதிசய மிதென்கொன் மூன்று
வையமுத் தொழிலுஞ் செய்ய வல்லவ ரவரே யன்றே.

(இ-ள்.) (அகத்தியமுனிவர்) வஞ்சகனாகிய அவ் விருத்திராசுரன் மறைந்து வாழ்கின்ற சமுத்திரத்தை உழுந்தினளவினதாகச் செய்து, விந்தகிரியை யடக்கிய தமது கையினால் அள்ளிப் பருகினார். சந்திரனைச் சூடிய திருமுடியையுடைய சிவபெருமானது திருவருளைப் பெற்றவர்கட்கு இ தோரதிசயமென்று சொல்வது யாது? மூன்று உலகங்களிலும் (சிருட்டி-திதி-சங்கார மென்னும்) முத்தொழில்களையுஞ் செய்ய வல்லவர்கள் அவர்களே யல்லவோ? எ-று. (கங)

அறந்துறந் தீட்டு வார்த மரும்பெறற் செல்வம் போல
வறந்தன படுநீர்ப் பௌவம் வடவைகட் புலப்பட் டாங்கு
நிறைந்தசெம் மணியு மத்தீ நீண்டெரி சிகைபோ னீண்டு
சிறந்தெழு பவளக் காடுந் திணியிருள் விழுங்கிற் றம்மா

(இ-ள்.) வளப்பம் பொருந்திய நீர்மயமாகிய சமுத்திரங்கள், தருமநெறியைக் கைவிட்டுப் பொருள் சம்பாதிப்போரது பெறுதற்கரிய செல்வம் (நிலைத்திராது அழிவது) போல வற்றிப்போயின. (ஆண்டுள்ள) வடவாமுகாக்கினி கண்களுக்குத் தோன்றியதுபோல நிறையொளியுடைய செவந்த மாணிக்கமும், அந்தத் தீயானது ஓங்கி எரிகின்ற கொழுந்து போல நீண்டுசிறந்து விளங்கி எழுகின்ற பவளக்காடும் மிகுந்த இருளை விழுங்காநிற்கும். எ-று. (கச)

பணிகளின் மகுட கோடிப் பரப்பென விளங்கிப் பல்கா
சணிகலப் பேழை பேழ்வாய் திறந்தனைத் தாகி யொன்பான்
மணிகிடந் திமைக்கு நீரான் மகபதி வேள்விக் காவாய்த்
திணியுடலவுணன் பட்ட செங்கள மனைய தன்றே.

(இ-ள்.) (ஆதிசேடன்முதலிய) சர்ப்பங்களின் மகுடகோடிகளினது வரிசைகளைப்போலப் பிரகாசித்து, பல இரத்தினங்கள்பதித்த ஆபரணங்களை வைத்த பெட்டியினது பிளந்தவாயைத் திறந்துவைத்ததையொப்பதாகி, நவமணிகளும் இருந்து விளங்குந்தன்மையால், தேவேந்திரனது யாகத்திற்குப் பசுவாகவந்த வலிய தேகத்தையுடைய வலாசுரன் இறந்த செவ்வியகளத்தை யொத்திருந்தது. எ-று.

செங்களம் என்பதற்குப் போர்க்களமெனவும் பொருள் கூறுவர். (நிரு)

வறந்தநீர் தன்னின் மின்னு வாள்விதிர்த் தென்னப் பன்மீ
னெறிந்தன நெளிந்த நாக மிமைத்தன வளையு முத்துஞ்
செறிந்தன கரந்த யாமை சேர்ந்தபல் பண்டஞ் சிந்தி
முறிந்தன வங்கங் கங்க முக்கின சிறுமீ னெல்லாம்.

(இ-ள்) வற்றிய நீருள்ளவிடத்திலே பிரகாசிக்கின்ற வாளினையசைத்தாற்போல பல மீன்கள் எறிந்தன. சர்ப்பங்கள் நெளிந்தன. சங்குகளும் முத்துகளும் விளங்கின. யாமைள் நெருங்கி ஒளித்தன. கப்பல்கள் (தம்பாற்) பொருந்திய பல பண்டங்களையுஞ் சிந்தி உடைந்தன. பருந்துகள் சிறியமீன்களையெல்லால் விழுங்கின. எ-று. (நிசு)

செருவினி லுடைந்து போன செங்கண்வா ளவுண னங்கோ
ரருவரை முதுகிற் கார்போ லடைந்துவா னுடர் செய்த
வுருகெழு பாவந் தானே ருருவெடுத் திருந்து நோற்கும்
பரிசென நோற்று னின்னம் பரிபவ விளைவு பாரான்.

(இ-ள்.) போர்செய்கையில், தோற்றோடிய செவந்த கண்களையுடைய வாளேந்திய விருத்திராசுரன், இன்னமுந்தனக்கு விளையுந்துன்பத்தை யாராயாமல், அச்சமுத்திரத்திலுள்ள ஒரு பெரியமலையின் முதுகில், மேகம்போலச்சேர்ந்து தேவர்கள் செய்த அச்சமிக்கபாவமானது ஓர் வடிவங்கொண்டிருந்து தவஞ்செய்யுந் தன்மை போலத்தவஞ்செய்தான். எ-று.

மலையின் நடுப்பாகத்தை முதுகு என்றார். (நிஎ)

கைதவ நோன்பு நோற்குங் கள்வனைக் கண்டு வானோர்
செய்தவ மனையான் யாணர் வச்சிரஞ் சீரிப் பான்போற்
பொய்தவன் றலையைக் கொய்தான் புணரிவாய் நிறையச் சோரி
பெய்தது வலாரி தன்னைப் பிடித்தது பிரம சாயை.

(இ-ள்.) தேவர்கள் செய்ததவமே ஒருருக்கொண்டாற்போன்ற தன்மையையுடைய தேவேந்திரன், வஞ்சனைவடிவமாகிய தவத்தைச் செய்யும் விருத்திராசுரனைக் கண்டு, புதியவச்சிராயுதத்தைப் பரீக்ஷிப்பவன்போல, பொய்த்தவஞ்செய்யும் அவ்வசுரனது தலையை வெட்டினான். [அவனுடல் நீர்வற்றிய] சமுத்திரத்தின்வாயானது நிறையும்படி உதிரத்தைச் சிந்தியது. அத்தேவேந்திரனைப் பிரமகத்திபிடித்தது. எ-று.

போரில் அழிந்தவன்மீது படையெடுக்காதிருப்பது போர்க்குரிய தருமம். இவ்விருத்திரன் இந்திரனுடன் போர்புரிய ஆற்றாது புறமுதுகிட்டோடிக் கடலிலொளித்துத் தவஞ்செய்தானுகையால் அவனைக் கொன்றதினால் பிரமகத்தி பிடித்தது எனக்கொள்க.

பிறர்க்கு இன்னுசெய்தல் கருதி நோற்றமையின் கைதவநோன்பு என்றும், தவஞ்செய்துந் தவமில்லான் எனப்பொருள்பயந்து நிற்றலின் பொய்தவன் என்றுங் கூறினார். (நிஅ)

உம்மெனு மார்பைத் தட்டு முருத்தெழு மதிர்க்கும் போர்க்கு
வம்மெனும் வாய்ம டிக்கும் வாளெயி றதுக்கும் வீழுங்
கொம்மென வோடு மீளுங் கொதித்தழுஞ் சிரிக்குஞ் சீறு
மிம்மெனு மளவு நீங்கா தென்செய்வா னஞ்சி னானே.

(இ-ள்.) (அப்பிரமகத்தியானது) இம்மென்னுங்காலவளவும் அவனைப்பிரியாது உம்மென்று அதட்டும்; தனது மார்பைத்தட்டும்; கோபித்துப் போர்க்கு எழும்; ஆர்ப்பரிக்கும்; போருக்கு வாருங்களென்று கூப்பிடும்; வாயைமடிக்கும்; ஒள்ளிய பற்களைக்கடிக்கும்; குப்புறவிழும்; (எழுந்து) விரைந்து ஓடும்; திரும்பிவரும்; பொங்கி அழாநிற்கும்; சிரிக்கும்; சீறும்; (இவ்வகையாகத் துன்புறுத்தலால்)தேவேந்திரன் தான் செய்வது இன்னதென்றுதெரியாமல் அச்சமெய்தினான். எ-று. (ருக)

விரைந்தரன் றிசையோர் வாவி வீழ்ந்தொரு கமல நூலுட்
கரந்தனன் மகவா னிப்பாற் கற்பக நாடு புல்லென்
றிருந்ததா விருக்கு மெல்லை யிம்பரி னகுட னென்போ
னரும்பரி மேத வேள்வி யாற்றினா னாற்று மெல்லை.

(இ-ள்.) (அவ்வாறஞ்சிய) தேவேந்திரன் விரைந்துசென்று, ஈசானதிசையிலுள்ள ஒருதடாகத்திலே விழுந்து ஒரு தாமரை (நாளத்திலுள்ள) நூலில் ஒளித்தனன். இப்புறம் பொன்னுலகம் பொலிவழிந்திருந்தது. அவ்வாறு (அரசனில்லாது) இருக்குங்காலத்தில், இந்நிலவுலகத்தில் நகுஷனென்பவன் செய்தற்கரிய அசுவமேதயாகஞ்செய்துவந்தான். (அவன் அவ்யாகத்தைச்) செய்து வருங்காலத்தில். எ-று.

இதுமுதல் மூன்றுபாடல்கள் ஒருதொடர். (சுo)

அரசிலா வறுமை நோக்கி யவனைவா னாடர் யாரும்
விரைசெய்தார் மகுடஞ் சூட்டி வேந்தனாக் கொண்டார் வேந்தாய்
வருபவன் சசியை யீண்டுத் தருகென மருங்கு ளார்போய்த்
திரைசெய்நீ ரமுத னாட்குச் செப்பவக் கற்பின் மிக்காள்.

(இ-ள்) அரசனில்லாத வறுமையைக்கண்டு தேவர்களெல்லாரும், அந்த நகுஷன் என்னும் (நிலவுலகத்து) அரசனை வாசனைவீசும் மாலைபுனைந்த கிரீடஞ் சூட்டி (தங்கட்கு) அரசனாகக் கொண்டார்கள். தேவர்கட்கு அரசனாகவந்தவன் இந்திராணியை இவ்விடத்து அழைக்கக் கடவீரென்றுகூற, பக்கத்திலுள்ளோர் சென்று அலைபுரட்டுங்கடலிற் றோன்றிய அமிர்தம்போன்ற அவ்விந்திராணிக்குச் சொல்ல, அந்தக்கற்பின் மேம்பட்டவள். எ-று.

வருபவன் என்பதிலுள்ள பகரவிடைநிலை இறந்தகாலத்தின்மேல் நின்றது.

பொன்னுயிர்த் தனைய காட்சிப் புண்ணியக் குரவன் முன்போய்
மின்னுயிர்த் தனையா ணின்று விளம்புவா ளிதென்கொல் கெட்டே
னென்னுயிர்த் துணைவ னாங்கே யிருக்கமற் றொருவ னென்னைத்
தன்னுயிர்த் துணையாக் கொள்கை தருமமோ வடிக ளென்றாள்.

(இ-ள்.) மின்னலே ஓர் உருக்கொண்டதுபோன்ற இந்திராணி, பொன்னே ஓர் வடிவங்கொண்டதுபோன்ற காட்சியையுடைய புண்ணியஸ்வரூபியாகிய தனது ஆசிரியர்முன்சென்று நின்று சொல்லுகின்றாள். சுவாமிகள்! இதென்ன ஆச்சரியம்? எனதுயிர்க்கேள்வன் அவ்விடத்தே (உயிர்கொண்டு) இருக்க, வேறொருவன் (வந்து)

(இ-ள்.) (இராகுகேதுக்களாகிய) சர்ப்பங்கள் உண்ண மாசுபடிந்து பொலிவிழக்குஞ் சந்திரனைப்போன்ற தேவேந்திரன் கங்கை முதலாகிய கணக்கில்லாத தீர்த்தங்க ளெல்லாவற்றிலுஞ் சென்று மூழ்கி, காசி-காஞ்சி அழகிய பொன்மயமாகிய கேதார முதலிய பல ஸ்தலங்களை நமஸ்கரித்தும், விருத்திராசுரனைக் கொன்ற மிக்க பிரமகத்தியானது நீங்காமையாற் பொலிவிழந்து, கடம்பவனத்தின் எல்லைக்குச்சமீபமாகச் செல்லுகையில். எ-று. (எ௦)

தொடுத்தபழி வேறாகி விடுத்தகன்ற திந்திரன்றான் சுமந்த பாரம்
விடுத்தவனுத் தளவிறந்த மகிழ்வெய்தித் தேசிகன்பால் விளம்பப் பாசங்
கெடுத்தவன்மா தலம்புனித தீர்த்தமுள திவணமக்குக் கிடைத்தல் வேண்டு
மடுத்தறிக வெனச்சிலரை விடுத்தவ்வ ருநிலைநின் றப்பாற் செல்வான்.

(இ-ள்.) விடாமற் பற்றிய பிரமகத்தியானது தன்னை விட்டுப் புறம்பாய் நீங்கி யொழிந்தது. தேவேந்திரன் தான் சுமந்த பாரத்தை இறக்கினவன் போன்று எல்லையில்லாத சந்தோஷமுற்று, தனது ஆசிரியராகிய பிரகஸ்பதிமுனிவரிடஞ் சொல்ல, பாசத்தொடக்கை (அறவே) ஒழித்த அப்பிரகஸ்பதிமுனிவர் இவ்விடத்திலே மகத்துவம்பொருந்திய ஸ்தலமும் பரிசுத்தமாகிய தீர்த்தமும் உள்ளன. நமக்கு அவை (காணக்) கிடைக்கவேண்டும். சென்று (தேடி) அறியக்கடவாயென்று கூற, சில தூதரை ஏவி (அப் பிரமகத்தி நீங்கிய) அவ்விடத்திலிருந்து அப்புறஞ்செல்லுந் தேவேந்திரன். எ-று. (எக)

அருவிபடிந் தருவியெறி மணியெடுத்துப் பாறையிலிட் டருவி நீர்தூய்க்
கருவிரல்கொய் தலர்சூட்டிக் கனியூட்டி வழிபடுவ கல்லா மந்தி
யொருதுறையில் யாளிகரி புழைக்கைமுகந் தொன்றற்கொன் றூட்டியூட்டிப்
பருகுவன புலிமுலைப்பால் புல்வாய்க்கன் றருந்தியிடும் பசிநோய் தீர.

(இ-ள்.) அறிவில்லாத குரங்குகள் அருவியாற்றில் மூழ்கி, அவ்வருவிகள் வீசிய மாணிக்கங்களை யெடுத்துக் கற்பாறையின்பேரில் (சிவலிங்கமாக) வைத்து, அவ் வருவிநீரால் அபிடேகஞ்செய்து, தமது கருமையாகிய விரல்களாற் கொய்த மலர்களைச் சூட்டி, (அக் கடம்பவனத்துள்ள பலவகைக்) கனிகளை நிவேதனஞ் செய்து வழிபட்டு ஆராதிப்பன. (ஒருபக்கத்தில்) யாளிகளும் யானைகளும் ஒரு தீர்த்தத்துறையிலே தமது துவாரம் பொருந்திய கைகளால் நீரை முகந்து ஒன்றற்கொன்று உண்பித்துப் பருகாநிற்பன. (ஒருபக்கத்தில்) புலிகள் தமது முலைப்பாலை மான்கன்றுகள் பசிநோய் நீங்க வுண்பிக்கும். எ-று.

குரங்குகள் அறிவில்லாத ஜந்துக்களாயினும், அருவியாற்றின் நீரில் ஸ்நானஞ் செய்து அதிலுள்ள மாணிக்கங்களைச் சிவலிங்கங்களாகப் பாறைப்பீடத்தேற்றி அருவிநீரா னபிடேகித்து,பத்திரபுட்பங்கள் சாத்தி, பலங்களை நிவேதிக்கும் என்றார். இதனால் அந்தத்தலவிசேடமுந் தீர்த்தவிசேடமுமே அவற்றிற்கு அவ்வகைய ஞானம் வருவிக்கக் காரணமென்க. அன்றியும், யாளியும் கரியும், புலியும் புல்வாயும் இயற்கையாகவே சத்துருத்துவ முடையனவாயினும் அவ்விடத்தின் விசேடத்தாற் பகைமை நீங்கி ஒன்றோடொன்று உறவுகொண்டு விளையாடியும், வளர்த்தும் வராநிற்கும் எனவுங் கொள்க.

அறியாமை, கல்லாததன் காரணமாதலின் மந்திகட்குக் கல்லா என அடை கொடுக்கப்பட்டது. (எஉ)

ஞெளியராக் குருளைவெயில் வெள்ளிடையிற் கிடந்துயங்கி ஞெளியப் புள்ளே
ருளியறாச் சிறைவிரித்து நிழல்பரப்பப் பறவைநோ யுற்ற தேகொ

வளியவா வச்சோவென் றிரங்கியயன் மடமந்தி யருவி யூற்றுந்
துளியநீர் வளைத்தசும்பின் முகந்தெடுத்துக் கருங்கையினாற் சொரிவ மாதோ

(இ-ள்.) நெளியும் இயற்கையுடைய பாம்பின் குட்டிகள் வெயில் வீசும் வெளியிடங்களிலிருந்து மயங்கி வருந்தி (உடல்) நெளிய, கருடன் தனது ஒளியுறுத சிறகினை மேலே விரித்து நிழல்செய்ய, சமீபத்திலுள்ள அறியாமைக்குணமுடைய குரங்குகள் அக்கருடன் வெயிலால் வருத்தமுற்றதோ (வென்று நினைத்து) கிருபை யுடையனவாகி ஐயோவென்று கூறி, அருவியாறு சொரியும் துளிகள்பொருந்திய சல த்தைச் சங்காகிய குடத்தினால் முகந்தெடுத்து, தமது கரிய கைகளினால் (அக்கருடன் பேரில்) சொரியாநிற்பன. எ-று.

"பாம்பிற்குப் பகை கருடன்" என வுலக வழக்கமாகப் பகைமை யிருக்க வும் வெள்ளிடையில் வெயிலிற்கிடந்து வருந்தல்நோக்கி மனம்பொறாது சிறகுவிரித்து நிழல்செய்யுங் கருடனை வெயிலால் துன்புற்றதென்று கருதிய குரங்கு அவ்வினத் தோடு நட்பின்றியும் மனந்தாளாது நீர்முகந்து அதன்மேற் சொரிவதும் அந்த ஸ்தான த்தின் தெய்வீகத்தை யுணர்த்தின.

வளை=சங்கு. இது ஆகுபெயர். வளைத் தசும்பு எனக் கூறியதனானே அரு வியின் நீர்ப்பெருக்கத்தை விசேடித்ததாயிற்று. தசும்பு=குடம்.

அச்சோ-இரக்கக்குறிப்பை யுணர்த்தும் இடைச்சொல். (எங)

படவரவ மணியீன்று நொச்சிப்பா சிலையன்ன பைந்தாண் மஞ்ஞை
பெடைதழுவி மணஞ்செய்ய மணவறையில் விளக்கிடுவ பெருந்தண் கானத்
தடர்சிறைமென் குயிலோமென் றூர்ப்பமடக்கிள்ளையெழுத்தைந் துமோதைத்
தொடர்புபெற வுச்சரிப்பக் குருமொழிகேட்டாங்குவப்ப தொடிக்கட்பூவை.

(இ-ள்.) (ஒரு பக்கத்தில்) நொச்சியினது பசிய இலையையொத்த (பிளவு பட்ட) பசியகால்களையுடைய மயில்கள் (தத்தமக்குப்பொருந்திய) பெண்மயில்களைத் தழுவிமணஞ்செய்யாநிற்க, படங்களையுடைய பாம்புகள் மாணிக்கங்களை வெளிப்படு த்தி (அவற்றின்) மணவறையில் விளக்கேற்று நிற்கும். (ஒரு பக்கத்தில்) நெருங்கிய மென்மைதங்கிய சிறகுகளையுடைய குயில்கள் பெரிய குளிர்ந்தகாட்டில் ஓம் என்று ஒலிக்காநிற்கவும், இளமைபொருந்திய கிளிகள் பஞ்சாக்ஷரத்தையும் ஓசையின் தொ டர்புபொருந்த உச்சரியாநிற்கவும், கைவளைபோலும் வட்டமாகிய கண்களை யுடைய நாகணவாய்ப்பறவைகள் குருவின்உபதேசமொழியைக்கேட்டாற்போல(அவற்றை)க் கேட்டு மகிழ்வெய்தா நிற்கும். எ-று.

மயில் பாம்பையுண்ணும் இயற்கையினவேனும் அவ்விரண்டும் தமது கடு மையும் பயமும் நீங்கி மயிலின் மணவறையிற் பாம்புகள் சிரோமாணிக்கத்தால் விள க்கிடுவதும், குயில்கள் ஓமென்றுச்சரிப்பதும், கிளிகள் ஸ்ரீபஞ்சாக்கரமோதலும், நாக ணவாய்ப்பறவைகள் அவற்றைக் குருமொழியாகக்கொண்டு களிப்பதும் அந்தஸ்தா னத்தின் விசேடமேயாம்.

எழுத்தைந்தும் என்பதிலுள்ள வும்மை உயர்வு சிறப்பு. முற்றும்மை யென னலுமாம். (எச)

இன்னவிலங் கொடுபுள்ளின் செயற்கரிய செயனோக்கி யிறும்பூ தெய் திப், பொன்னகரான் புளகமுடல் புதைப்பநிறை மகிழ்ச்சியுளம் புதைப்பப் போவா, னன்னபொழு தொற்றுவர்மீண் டடிவணங்கி யின்சுவைப்பா லரு ந்து வான்முன், பின்னரிய தேன்சொரிந்தாங் குவகைமேற் பேருவகை பெ ருகச் சொல்வார்.

(இ-ள்.) பொன் நகரமாகிய அமராபதிக்கு அரசனாகிய தேவேந்திரன் இந்த மிருகங்களும் பறவைகளுமாகிய இவைகளின் செய்தற்கரிய செய்கைகளைக் கண்டு அதிசயமடைந்து தனதுடல்முழுதும் புளகம் போர்க்கவும், நிறைந்த மகிழ்ச்சி தனது மனதைத்தூர்க்கவும், (வழிநடந்து) போகின்றவனாயினான். அப்படிப்பட்ட சமயத்தில் தூதர் திரும்பிவந்து (அவனது) பாதங்களைப்பணிந்து இனிய சுவைபொருந்திய பாலைப்பருகுவோன் முன்னர், பின்பு கிடைத்தற்கரிய தேனையொழுக்கினாற்போல மகிழ்ச்சியின்பேரிற் பெருமகிழ்ச்சி அதிகரிக்கும்படி சொல்லத்தொடங்கினர். எ-று.

புளகமுடல் புதைப்ப = உடல்முழுதும் மயிர்க்குச்செறிய.

தான்கண்ட வளவிலேயே பெருமகிழ்ச்சியும் அதிசயமுங்கொண்டு செல்லுகையில், தான் இனிக் காணவேண்டியதாகிய அற்புதமொன்றை ஒற்றர் கூறினராகலின் "இன்சுவைப்பா லருந்து வான்முன் பின்னரிய தேன்சொரிந் தாங்குவகைமேற் பேருவகை பெருகச்சொல்வார்" என்றார். (எகு)

எப்புவனத் திலுமென்றுங் கண்டறியா வதிசயமு மெண்ணுக் கெய்
தாத், திப்பியமு மிக்கடம்ப வனத்தின்று கண்டுவகை திளைத்தே மங்கண்,
வைப்பனைய வொருபுனித வாவிமருங் கொருகடம்ப வனத்தி னீழ, லொப்
பிலொளி யாய்முளைத்த சிவலிங்க மொன்றுளதென் றுரைப்பக் கேட்டான்.

(இ-ள்.) எந்தலோகத்திலும் எந்தக்காலத்திலும் பார்த்தறியாத அதிசயமும், கணக்கிடற்கடங்காத தெய்வத்தன்மையும் இந்தக்கடம்பவனத்தில் (இப்பொழுது) கண்டு ஆராமகிழ்ச்சியடைந்தோம். (அஃதென்னவென்றால்) அக் கடம்பவனத்தில் வைப்புத்திரவியத்தைப் போன்ற ஒரு பரிசுத்தமாகிய தடாகத்தின் பக்கத்திலே ஒரு கடம்பமரத்தின் நிழலிலே தனக்கு ஒப்பில்லாத ஒளிப்பிழம்பாகி முளைத்தெழுந்த சிவலிங்கமொன்று வீற்றிருக்கின்றதென்று சொல்லக்கேட்டான். எ-று. (எகூ)

செவித்தொளையி லமுதொழுக்கு முழையரொடும் வழிக்கொண்டு சென்
னி மேற்கை, குவித்துளமெய் மொழிகரணங் குணமூன்று மொன்றித்தன்
கொடிய பாச, மவித்துளயர் வொழிக்கமுளைத் தருள்குறிமே லன்பீர்ப்ப வ
டைவான் கானங், கவித்துளபூந் தடம்படிந்து கடம்பவனத் துழைநுழைந்
தான் கவலை தீர்வான்.

(இ-ள்.) தன்னைப்பற்றிய பிரமகத்தியினின்றுநீங்குந் தேவேந்திரன் தனது செவித்தொளையிற் சந்தோஷமாகிய அமிர்தத்தை ஒழுக்கிய தூதுவருடன்போய், தனது சிரசின்மேற் கைகுவித்து மனம் வாக்கு காயங்களும் (மனமுதலிய) அந்தக்கரணங்களும் (சாத்துவிகமுதலிய) முக்குணங்களும் ஒருவழிப்பட, தனது கொடியபாசத்தைக் கெடுத்து மனத்துயரமொழிக்க முளைத்தருளிய சிவலிங்கக்குறியின்பேரில் அன்பானது இழுக்கச்செல்கின்றவனாகி,காட்டினாற்கவியப்பட்ட பொற்றாமரைத் தீர்த்தத்தில் நீராடிக் கடம்பவனத்துக்குட் பிரவேசித்தான். எ-று. (எஎ)

அருவாகி யுருவாகி யருவுருவங் கடந்துண்மை யறிவா னந்த
வுருவாகி யளவிறந்த வுயிராகி யவ்வுயிர்க்கோ ருணர்வாய்ப் பூவின்
மருவாகிச் சராசரங்க ளகிலமுந்தன் னிடையுதித்து மடங்க நின்ற
கருவாகி முளைத்தசிவக் கொழுந்தையா யிரங்கண்ணுங் களிப்பக் கண்டான்.

(இ-ள்.) அருவமாகியும் உருவமாகியும் அருவுருவமாகியும் (இவைகளைக்) கடந்து சச்சிதானந்த வுருவமாகியும், கணக்கில்லாத உயிர்களாகியும், (அவ் வுயிர்களின்) அறிவுக்கோ ரறிவாகியும், பூவினிடத்துள்ள வாசம்போலாகியும், சரங்கள் அசரங்

கள் முதலிய எல்லாவற்றையும் தன்னிடத்துத் தோன்றி யொடுங்குகின்ற காரணமாகி யும் முளைத்தருளிய சிவலிங்கப்பெருமானைத் தனது ஆயிரங்கண்களும் களிப்பில் மூழ் கத் தரிசித்தான் (தேவேந்திரன்) எ-று.

அருவம் - சிவம் - சத்தி - நாதம் - விந்து என நான்கு. உருவம்-மகேசுவரன்- உருத்திரன் - திருமால் - பிரமன் என நான்கு. அருவுருவம் - சதாசிவம் என ஒன்று.

மேற்கூறிய நவவடிவாகியும்,இவ்வாறு சிருஷ்டியாதிகாரணமாக நாடகமாத் திரையாக நடித்தும் அவற்றைக்கடந்தும் நிற்பதால் "அருவாகி யுருவாகி யருவுருவங் கடந்து" என்றும், சத்து சித்து ஆனந்தங்களே திருமேனியாக வுடைமையின் "உண் மையறிவானந்த வுருவாகி" என்றும், இறைவன் சத்திரூபமாக நின்று ஆன்மாக்களைப் புணருற்பவஞ் செய்தலான் "அளவிறந்த வுருவாகி" என்றும், "அறிவுசிவமிரண் டெ ன்பரறிவிலார்-அறிவுசிவமாவ தாருமறிகிலார்-அறிவுசிவ மாவதாரு மறிந்தபின்-அறிவே சிவமாவமர்ந்திருப்பாரே" என்னுந் திருமூலநாயனார் திருவாக்கின்படி அவ்வுயிர்கட் குணர்வாக நிற்றலின் "அவ்வுயிர்க்கோருணர்வாகி" என்றும், மணியுளொளிபோலப் பிரிவற்று அத்துவிதமாக வுடனாய் நிற்றலின் "பூவின் மருவாகி" என்றும், எல்லாவ ற்றிற்கும் காரணபூதமாகி நிற்றலின், "சராசரங்களகிலமுந் தன்னிடையுதித்து மடங் குகின்ற கருவாகி" என்றும், ஒருவராலேயும் பிரதிட்டை செய்யப்படாத சுயம்புமூர் த்தியாக நிற்றலின் "முளைத்த" என்றும், சிவமூர்த்தங்களிலெல்லாஞ் சிறந்தது சிவலி ங்கமூர்த்தமாதலின் "சிவக்கொழுந்தை" என்றும், இந்திரன் ஆயிரங்கண்களுடையவ னாகலின் "ஆயிரங்கண்ணும்" என்றும், தான் தேடிவந்த பொருளைத் தரிசிக்க நேர் ந்தமையின் பேரன்போடு ஆனந்தந்துளும்பத்தரிசித்தானாகலின் "களிப்பக்கண் டான்" என்றுங்கூறினார். (எஅ)

கண்டுவிழுந் தெழுந்துவிழி துளிப்பவெழு களிப்பென்னுங் கடலி லாழ்ந்து
விண்டுமொழி தழுதழுப்ப வுடல்பனிப்ப வன்புருவாய் விண்ணோர் வேந்த
னண்டர்பிரா னருச்சனைக்கு வேண்டுமுப கரணமெலா மகல்வா னெய்திக்
கொண்டுவரச் சிலரைவிடுத் தவரேகப் பின்னுமொரு குறைவு தீர்ப்பான்.

(இ-ள்.) தேவர்கட்கு அரசனாகிய தேவேந்திரன் அன்பே ஒருவடிவமாய்த் தரிசித்துப் பணிந்தெழுந்து கண்கள் ஆனந்தபாஷ்பஞ் சொரிய (கரைகடந்து) எழா நின்ற இன்பமென்னுஞ் சாகரத்தில் மூழ்கி, தனது நாவானது தழுதழுக்கவும், உட லானது வியர்வரும்பவும், தோத்திரஞ்சொல்லி, மகா தேவனாகிய சிவபெருமானது அருச்சனைக்கு வேண்டிய உபகரணங்களெல்லாவற்றையும் அகன்ற தேவலோகத்திற் போய்க்கொண்டு வரும்படி சிலரை ஏவி, அவர்கள் செல்லப் பின்னும் ஒரு குறைவு தீர்க்க நினைத்தான். எ-று.

உபகரணம்=பூசாத்திரவியங்கள். தழுதழுத்தல்=நாப்பின்னுறல்.

தீர்ப்பான்-வினையெச்சமாகக் கொண்டு, தீர்க்க நினைத்து எனப் பொருள் கூறினும் பொருந்தும். (எகூ)

தங்குடிமைத் தச்சனையோர்விமானமமைத் திடவிடுத்தத் தடத்தின் பாற்போ
யங்கணனைக் கடிதருச்சித் திடநறிய மலர்கிடையா தயர்வா னந்தச்
சங்கெறிதண் டுறைத்தடத்தி லரனருளாற் பலபரிதி சலதி யொன்றிற்
பொங்குகதிர் பரப்பிமுளைத் தாலென்னப் பொற்கமலம் பூப்பக் கண்டான்.

(இ-ள்.) தமது குடிக்குரிய தேவதச்சனை (விளித்து) ஓர் விமானஞ் செய்க என ஏவி விடுத்து, அப்பொற்றாமரைத் தீர்த்தத்தி னருகிற்சென்று அழகிய கிருபா நோக்கத்தையுடைய சிவபெருமானை விரைந்து அருச்சனைசெய்ய நல்லமலர்கள் அகப்

படாமற் சோர்வுறுகின்ற தேவேந்திரன், சங்குகளைவீசுந் தண்ணிய அலைகளையுடைய அந்தத் தடாகத்திலே, பல சூரியர்கள் ஒரு சமுத்திரத்தில் விளங்கும் கிரணத்தைப் பரப்பி உதயமானாற்போல, சிவபெருமானது திருவருளாற் பொற்றாமரை மலர்கள் மலர்ந்திருக்கப் பார்த்தான். எ-று. (அ௰)

அன்புதலை சிறப்பமகிழ்ந் தாடினன் காரணத்தா லதற்கு நாம
மென்பதுபொற் றாமரையென் றேழுலகம் பொலிகவென விசைத்துப் பின்னு
மின்பதுமத் தடங்குடைந்து பொற்கமலங் கொய்தெடுத்து மீண்டு நீங்காத்
தன்பிணிநோய் தணியமுளைத் தெழுந்தமுழு முதன்மருந்தின் றன்பால் வந்து.

(இ-ள்.) அன்பானது தன்னை விழுங்கி மேலெழுந்தோங்க மகிழ்ந்து ஆனந்தக் கூத்தாடி (பொற்றாமரை மலர்ந்த) காரணத்தினால் இத்தீர்த்தத்திற்குத் திருநாமம் பொற்றாமரை யென்று சத்தலோகங்களிலும் விளங்கக்கடவதென்று கூறி, மீளவும் விளங்குகின்ற பொற்றாமரைத் தடாகத்தில் ஸ்நானஞ்செய்து (அங்கு புட்பித்துள்ள) பொற்றாமரை மலர்களைப் பறித்தெடுத்துத் திரும்பி, நீங்காத தனது பழிநோய் தீரும்படி முளைத்தெழுந்தருளிய முழுமுதற்பொருள் என்னும் ஒரு திருநாமத்தையுடைய பிறவிப்பிணி நீக்கும் மருந்தினிடத்து வந்து. எ-று.

இதுமுத லிரண்டுபாடல்கள் குளகம். (அக)

மொய்த்தபுனக் காடெறிந்து நிலந்திருத்தி வருமளவின் முளைத்த ஞான
வித்தனைய சிவக்கொழுந்தின் றிருமுடிமேற் பரிதிகர மெல்லத் தீண்டச்
சித்தநெகிழ்ந் திந்திரன்றன் வெண்கவிகைத் திங்கணிழல் செய்வா னுள்ளம்
வைத்தனனப் போதிரவி மண்டிலம்போ லிழிந்ததொரு மணிவி மானம்.

(இ-ள்.) நெருங்கிய புனங்களையுடைய (கடப்பங்) காட்டை வெட்டிநிலத்தைத் திருத்தி வரும்பொழுது, முளைத்தருளிய சிவஞான வித்தைப்போன்ற சிவக்கொழுந்தினது திருமுடியின்பேரில்,சூரியனதுகிரணங்கள் மெல்லப்பரிசிக்கக்கண்டு, தேவேந்திரன்மனம் உடைந்து தனது சந்திரன்போன்ற வெண்மைதங்கிய குடையாகிய சந்திரனால் நிழல்செய்ய நினைத்தான். அந்தக்காலத்தில், சூரியமண்டிலம் நிலவுலகிலிறங்கியதுபோல ஒரு இரத்தினவிமானம் (ஆகாயத்திலிருந்து) இறங்கியது. எ-று.

ஞானம் அங்குரித்தற்கு அச்சிவலிங்கம் ஓர் விதைபோன் றிருத்தலின் "ஞானவித்து" என்றுவமித்தார். (அஉ)

கிரியெட்டு மெனமழையைக் கிழித்தெட்டும் புழைக்கைமதிக் கீற்றுக் கோ
கரியெட்டுஞ் சினமடங்க லறுபத்து நான்கு மெட்டெட்டுக் கணமுந் தாங்க [ட்டுக்
விரியெட்டுத் திசைபரப்ப மயனிருமித் துதவியவவ் விமானஞ் சாத்தி
யரியெட்டுத் திருவுருவப் பரஞ்சுடரை யருச்சிப்பா னாயினனே.

(இ-ள்.) அஷ்டகுலபர்வதங்கள் என்று சொல்லும்படி, மேகமண்டலத்தைக் கிழித்து எட்டுகின்றதோற்றத்தையுடைய துவாரம்பொருந்திய துதிக்கையையும் அர்த்தசந்திரனையொத்த கொம்புகளையுமுடைய அஷ்டகெஜங்களும், கோபத்தையுடையமுப்பத்திரண்டு சிங்கங்களும், அறுபத்துநான்கு சிவகணங்களுந் தாங்கும்படி, விரிவாகிய அஷ்டதிக்குகளும் பரவும்படி தேவதச்சன் நிருமாணஞ்செய்துகொடுத்த அந்த விமானத்தைத் தேவேந்திரன்சாத்தி, எட்டுத்திரு மூர்த்தங்களாக விளங்குஞ் சோமசுந்தரப்பெருமானை அருச்சனை செய்யத்தொடங்கினான். எ-று.

எட்டுத்திருவுருவம் :—பஞ்சபூதங்களும் சூரியசந்திரர்களும் ஆன்மாவுமாம்.

இதனை-திருவாசகம்.

"நிலநீர் நெருப்புயிர் நீள்விசும்பு நிலாப்பகலோன்
புலனாய மைந்தரோ டெண்வகையாய்ப் புணர்ந்துநின்றான்
உலகே ழெனத்திசை பத்தெனத்தா னொருவனுமே
பலவாகி நின்றவா தோணேக்க மாடாமோ" என்னுந்திருப்பாசுரத்தானறிக.

முந்தவம ருலகடைந்து பூசனைக்கு வேண்டுவன முழுதுந் தேர்வார்
வந்துதரு வைந்தீன்ற பொன்னுடை மின்னுமிழு மணிப்பூண் வாசச்
சந்தனமந் தாகினிமஞ் சனந்தூபந் திருப்பள்ளித் தாமந் தீப
மந்தமிலா னைந்துநறுங் கனிதீந்தேன் றிருவமுத மனைத்துந் தந்தார்.

(இ-ள்.) முற்படத்தேவலோகத்திற்குப்போய்ப் பூசைக்குவேண்டிய உபகரணங்களையெல்லாங் கொண்டுவரச் சென்றவர்கள் வந்து, பஞ்சதருக்கள் கொடுத்த பீதாம்பரமும் பிரகாசத்தைவீசும் இரத்தினங்கள்பதித்த ஆபரணங்களும், வாசனையுடைய சந்தனமும், கங்கை நீராகிய திருமஞ்சனமும், தூபமும், திருப்பள்ளித்தாமமும், தீபமும், அழிவில்லாத பஞ்சகவ்வியமும், நறியபழங்களும், மதுரமாகியதேனும், திருவமுதமுமாகிய எல்லாவற்றையுங் (கொண்டுவந்து) கொடுத்தார்கள். எ-று.

அமரருலகு என்பது அமருலகு எனத்தொக்குநின்றது. தருவைந்து-அரிசந்தனம் - கற்பகம் - சந்தானம் - பாரிசாதம் - மந்தாரம் எனப்படும். பொன் ஆடை என்பது பீதாம்பரம். மந்தாகினி-கங்கை. திருப்பள்ளித்தாமம் என்றதுபத்திரபுஷ்ப மாலிகை முதலியன. ஆன் ஐந்து - பசுகொடுக்கும் பஞ்ச கௌவியம் இவையெல்லாம் சிவபூசைக்கு இன்றியமையாத உபகரணங்களாக விளங்குதலின் "முந்தவமருலகடைந்து பூசனைக்கு வேண்டுவன முழுதுந்தேர்வார் * * * அனைத்துந்தந்தார்" என்றார். (அச)

தெய்வத்தா மரைமுளைத்த தடம்படிந்து பவந்தொலைக்குந் திருநீ றாடிச்
சைவத்தாழ் வடந்தாங்கி யன்புருவா யருளுருவந் தானாய்த் தோன்றும்
பைவைத்தா டரவார்த்த பசுபதியை யவனுரைத்த பனுவ லாற்றின்
மெய்வைத்தா தரம்பெருக வருச்சனைசெய் தானந்த வெள்ளத் தாழ்ந்தான்.

(இ-ள்.) தெய்வீகம் பொருந்திய பொற்றாமரை முளைத்த தீர்த்தத்திலே மூழ்கி, பிறப்பினை யொழிக்கத்தக்க திருவெண்ணீறு தரித்து, சிவசின்னமாகிய உருத்திராக்கத் தாழ்வடமணிந்து (தேவேந்திரன்) அன்பே உருவமாக நின்று, திருவருளே திருவுருவமாகக் கொண்டருளிய படத்தை விரித்தாடும் சர்ப்பத்தைக் (கச்சாகஇடையிற்) கட்டிய சோமசுந்தரப்பெருமானை அவ்விறைவர் அருளிச்செய்த சிவாகமத்திற் கூறிய முறைப்படியே, உண்மையாகிய அன்பு பெருகும்படி அருச்சனைசெய்து ஆனந்தவெள்ளத்தில் அழுந்தினன். எ-று. (அரு)

பாரார வட்டாங்க பஞ்சாங்க விதிமுறையாற் பணிந்துள் வாய்மெய்
நேராகச் சூழ்ந்துடலங் கம்பித்துக் கும்பிட்டு நிருத்தஞ் செய்து
தாராருந் தொடைமிதப்ப வானந்தக் கண்ணருவி ததும்ப நின்றன்
பாராமை மீக்கொள்ள வஞ்சலித்துத் துதிக்கின்றா னமரர் கோமான்.

(இ-ள்.) இமையவர்கட் கரசனாகிய தேவேந்திரன் நிலமிசைப்பொருந்த அஷ்டாங்க பஞ்சாங்க விதிமுறைப்படி நமஸ்கரித்து, மனம் - வாக்கு - காயங்கள் ஒருசேரப் பிரதக்ஷிணஞ்செய்து (பரவசத்தால்) உடல் கம்பித்துக் கைகூப்பி ஆனந்தக் கூத்தாடி (மார்பி லணிந்த) மலராற் றொடுத்த மாலை மிதக்கும்படி ஆனந்தக் கண்ணரு

வியானது பெருக்கெடுக்க நின்று, ஆராமையாகிய அன்பானது மேலு மேலு மெழுந் தோங்க, அஞ்சலியஸ்தனாய்த் தோத்திரஞ்செய்யத் தொடங்கினான். எ-று. (௬௬)

மேற்படி வேறு.

அங்கண போற்றி வாய்மை யாரண போற்றி நாக
கங்கண போற்றி மூல காரண போற்றி நெற்றிச்
செங்கண போற்றி யாதி சிவபரஞ் சுடரே போற்றி
யெங்கண யகனே போற்றி யீறிலா முதலே போற்றி.

(இ-ள்.) அழகிய கிருபாநோக்க முடையவரே! போற்றி. சத்தியமாகிய வே தங்களை யருளிச் செய்தவரே! போற்றி. சர்ப்பங்களைக் கங்கணமாகப் பூண்டவரே! போற்றி. மூலகாரணமாயுள்ளவரே! போற்றி. திருநெற்றியினிடத்தே சிவந்த (அக் கினிக்) கண்ணையுடையவரே! போற்றி. முழுமுதற்பொருளாக வுள்ளவரே! நன்மை பயக்கும் மேன்மைதங்கிய ஒளிப்பிழம்பாக வுள்ளவரே! போற்றி. எங்கள் தலைவரே! போற்றி. தனக்கோ ரிறுதியில்லாத முழுமுதலே! போற்றி. எ-று.

ஆதி-அண்மை விளி. "அண்மையி னியல்புமீ றழிவுஞ் சேய்மையி—னளபும் புலம்பி னோவு மாகும்" என்ற சூத்திரத்தினால் இயல்பாயிற்று.

போற்றியவென்பது ஈறுகெட்டுநின்றது.

ஈறிலாமுதல்— என்றதை,

"எல்லார் பிறப்பு மிறப்புமியற் பாவலர்தஞ்
சொல்லா லறிந்தோநஞ் சோணேச—னில்லிற்
பிறந்தகதை யுங்கேளேம் பேருலகில் வாழ்ந்து
டிறந்தகதை யுங்கேட் டிலேம்."—என்பதனானறிக. (௬௭)

யாவையும் படைப்பாய் போற்றி யாவையுந் துடைப்பாய் போற்றி
யாவையு மானாய் போற்றி யாவையு மல்லாய் போற்றி
யாவையு மறிந்தாய் போற்றி யாவையு மறந்தாய் போற்றி
யாவையும் புணர்ந்தாய் போற்றி யாவையும் பிரிந்தாய் போற்றி.

(இ-ள்.) எல்லாப்பொருள்களையுஞ் சிருட்டி செய்பவரே! போற்றி. எல்லா ப்பொருள்களையும் அழிப்பவரே! போற்றி. எல்லாப்பொருள்களுமாக விளங்குகின்ற வரே! போற்றி. எல்லாப்பொருள்களும் அல்லாதவரே! போற்றி. எல்லாவற்றையும் அறிந்தவரே! போற்றி. எல்லாவற்றிலும் பிரியாதவரே! போற்றி. எல்லாவற்றிலும் பிரி ந்தவரே! போற்றி. எ-று. (௬௮)

இடருறப் பிணித்த விந்தப் பழியினின் றென்னை யீர்த்துன்
னடியிணைக் கன்ப னாக்கு மருட்கடல் போற்றி சேற்கண்
மடவரன் மணாள போற்றி கடம்பமா வனத்தாய் போற்றி
சுடர்விடு விமான மேய சுந்தர விடங்க போற்றி.

(இ-ள்.) அடியேனைத் துன்பமிகும்படி விடாதுபற்றிய இந்தப் பிரமகத்தியி லிருந்து விலகித்து, தேவரீரது உபய திருவடிகட்கு அன்பனாக்கிய கருணைக்கடலே! போற்றி. மீனாக்ஷியம்மையாரது மணவாளா! போற்றி. பெரிய கடம்பவனத்தி லெழுந் தருளியிருப்பவரே! போற்றி. ஒளிவீசுகின்ற விமானத்தில் வீற்றிருக்கின்ற சோமசுந் தர விடங்கரே! போற்றி. எ-று.

சேற்கண்மடவரல்=சேல்மீன்போலும் விழிகளையுடைய உமாபிராட்டியார். விடங்கன்-உளிகொத்த முள்ளவன். டங்கம்=உளி, வி-எதிர்மறைஉபசர்க்கம்.

பூசையும் பூசைக் கேற்ற பொருள்களும் பூசை செய்யு
நேசனும் பூசை கொண்டு நியதியிற் பேறு நல்கு
மீசனு மாகிப் பூசை யான்செய்தே னெனுமென் போத
வாசனை யதுவு மான மறைமுத லடிகள் போற்றி.

(இ-ள்.) பூசையும், அப்பூசைக்குத்தகுதியாகிய உபகரணங்களும், அப்பூசையைச்செய்கின்ற அன்பனும்,அப்பூசையையேற்றுக்கொண்டு அதற்குத்தக்கபலனை அனுக்கிரகஞ்செய்யும் தலைவனுமாகி, நான் பூசைசெய்தேனென்று நினைக்கும் எனது தற்போதவாசனையுமாகிய வேதத்திற்கோர் வித்தாகிய சுவாமிகளே! போற்றி. எ-று.

சிவாகமவிதிப்படி செய்யும் பூசையும், அப்பூசைக்குரிய வுபகரணங்களும், மெய்ச்சார்போடியைந்த பத்தியுடைமையும், அப்பத்தியுடைமைக்கு மகிழ்ந்து பேறு நல்கும் ஈசனும், திருவருளாலன்றி யமையாவாகலின் " பூசையையும் பூசைக்கேற்ற பொருள்களும் பூசைசெய்யுநேசனும் பூசைகொண்டு நியதியிற் பேறுநல்குமீசனும் " என்றும், அவ்வகைய சிவப்பணியில் ஒற்றுமைப்பட்டு நிற்கும் ஆன்மபோதம் அவனன்றி வேறன்மையால் " யான்செய்தேனெனு மென்போத வாசனையதுவுமான " என்றுங்கூறினர். (கய)

என்னநின் றேத்தி னானை யின்னகை சிறிது தோன்ற
முன்னவ னடியா ரெண்ணை முடிப்பவ னருட்க ணோக்கா
வுன்னறு வேட்கை யாதிங் குரையென விரையத் தாழ்ந்து
சென்னிமேற் செங்கை கூப்பித் தேவர்கோ னிதனை வேண்டும்.

(இ-ள்.) என்றிவ்வகையாகக் கூறிநின்று தோத்திரஞ்செய்த தேவேந்திரனுக்கு, (எல்லாத் தேவர்கட்கும்) முதற்கடவுளும், அன்பர்கள் (எண்ணியவற்றை) எண்ணியாங்கு அநுக்கிரகஞ் செய்பவருமாகிய சோமசுந்தரப்பெருமான் இனிய புன்னகை சிறிது தோன்றக் கிருபாநோக்கஞ் செய்து, உனது மனோவிருப்பம் யாது? இப்பொழுது கூறுவாயாக என்று திருவாய்மலர்ந்தருள, தேவேந்திரன் விரைந்து நமஸ்கரித்துச் சிரசின்பேரிற் செவந்த கைகளைக்கூப்பி (பின் வருமாறு) இதனை வேண்டிக் கேட்கின்றான். எ-று.

ஏத்தினானை-ஐ உருபுமயக்கம். (கக)

ஐயநின் னிருக்கை யெல்லைக் கணியனு மளவி னீங்கா
வெய்யவென் பழியி னோடு மேலைநா ளடியேன் செய்த
மையல்வல் வினையு மாய்ந்துன் மலரடி வழுத்திப் பூசை
செய்யவு முரிய னானேன் சிறந்தபே றிதன்மேல் யாதோ.

(இ-ள்) ஐயனே! தேவரீரது வாசஸ்தானமாகிய கடம்பவனத்தின் எல்லைக்கு அடியேனாகியயான் சமீபித்தபொழுதே என்னைவிட்டு அகலாத கொடிய பிரமகத்தியும் ஜன்மாந்தரத்தில் அடியேன் செய்த மயக்கத்தைத்தரும் வலிய தீவினைச் சம்பந்தமும் அழிந்து, தேவரீரது (தாமரை) மலர்போன்ற திருவடிகளைத் தோத்திரஞ் செய்து அருச்சனைசெய்யவும் உரியவனாயினேன். இதற்குமேல் சிறந்ததாகிய பயன் யாதுளது? (யாதொன்றுமில்லை) எ-று. (கஉ)

இன்னநின் பாதப் போதே யிவ்வாறே யென்றும் பூசித்
துன்னடி யாருள் யானு மோரடித் தொண்ட னாவே
னன்னதே யடியேன் வேண்டத் தக்கதென் றடியில் வீழ்ந்த
மன்னவன் றனக்கு முக்கண் வரதனுங் கருணை பூத்து.

(இ-ள்.) இதுபோலவே இத்தகைய தேவரீரது திருவடித்தாமரைகளையே எக்காலத்திலும் பூசைசெய்து, தேவரீரது அடியவருள் அடியேனும் ஒருதாழ்ந்த தொண்டனுவேன். அதுவே அடியேன் குறையிரக்கத்தக்கதென்று தமது திருவடியில்நமஸ்கரித்ததேவேந்திரனுக்குத்திரிநேத்திரங்களையுடையசிவபெருமானுங்கிருபைமிகுந்து.

பூத்து என்னும் வினையெச்சம் மூன்றாவது செய்யுளின் இறுதியிலுள்ள விடைகொடுத்தான் என்னும் முற்றுவினையைக் கொண்டுமுடிந்தது.

வரதன் = அருட்கொடை யுடையோன். அடித்தொண்டு என்பதில் அடி என்பது தாழ்மையை யுணர்த்திற்று. (கங)

எழுசீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்.

இருதுவிற் சிறந்த வேனிலு மதியா றிரண்டினிற் சிறந்தவான் றகரும்
பொருவிரு ரகையிற் சிறந்தசித் திரையுந் திதியினிற் சிறந்தபூ ரணையு
மருவுசித் திரையிற் சித்திரை தோறும் வந்துவந் தருச்சியோர் வருடந்
தெரியுநாண் முன்னூற் றறுபது மைந்துஞ் செய்தவர்ச் சனைப்பய னெய்தும்.

(இ-ள்.) (ஆறு) இருதுக்களுள் மேம்பாடுற்ற வேனிற்பருவமும், பன்னிரண்டு மாதங்களுள் மேம்பாடுற்ற பெருமைபொருந்திய சித்திரைமாதமும், ஒப்பில்லாத (இருபத்தேழு) நட்சத்திரங்களுள் மேம்பாடுற்ற சித்திரைநக்ஷத்திரமும், (பதினைந்து) திதிகளில் சிறந்த பௌர்ணமித் திதியும் (ஆகிய இவையெல்லாம்) பொருந்திய அந்தச் சித்திரைமாதத்தில், சித்திரை நக்ஷத்திரந்தோறும் வந்துவந்து அருச்சனைசெய். (அதனுல்) ஒருவருடத்திற்கு வரையறுத்த முந்நூற்றறுபத்தைந்து நாளுஞ் செய்த அருச்சனைப்பயன் வந்து கைகூடும். எ-று.

இருதுக்கள்—கார்-கூதிர்-முன்பனி-பின்பனி-இளவேனில்-முதுவேனில் என ஆறு. இவை முறையே ஆவணிமாதமுதல் இரண்டிரண்டு மாதங்களென்பர்.

மதி = மாதம். சந்திரன் வளர்தலுந் தேய்தலுங் கூடிய நாள்கள் முப்பதாகலின் அவற்றின் சம்பந்தமாக மேடமதி எனப்பட்டது. மேடம் = ஆடு. (கச)

துறக்கநா டணைந்து சுத்தபல் போகந் துய்த்துமேன் மலபரி பாகம்
பிறக்கநான் முகன்மான் முதற்பெருந் தேவர் பெரும்பதத் தாசையும் பிறவு
மறக்கநாம் வீடு வழங்குது மென்ன வாய்மலர்ந் தருளிவான் கருணை
சிறக்கநால் வேதச் சிகையெழு மனுதி சிவபரஞ் சுடர்விடை கொடுத்தான்.

(இ-ள்.) (உனக்குரிய) சுவர்க்கநாட்டிற்குச்சென்று பரிசுத்தமாகியபலபோகங்களையும் புசித்து அதற்குமேலே மலபரிபாகம் உண்டாக, திசைமுகன் திருமால் முதலிய பெரியதேவர்களது பெரிய பதவிகளிலுள்ள போகங்களையும் மற்றப்போகங்களையும் மறக்கும்படி நாம் (உனக்கு) மோக்ஷத்தைத் தருவோமென்று திருவாய்மலர்ந்தருளி, நான்குவேதங்களின் உச்சியில் விளங்கும் அநாதியாகிய சோமசுந்தரக்கடவுள் சிறந்த கிருபையானது அதிகரிக்கும்படி விடைகொடுத்தருளினர். எ-று. (கரு)

மூடினன் புளகப் போர்வையால் யாக்கை முடிமிசை யஞ்சலிக் கமலஞ்
சூடினன் வீழ்ந்தா னெழுந்துகண் ணருவி துளும்பினன் பன்முறை துதிசெய்
தாடினனைய னடிபிரி வாற்றா தஞ்சின னவனரு ளாணை
நாடினன் பிரியா விடைகொடு துறக்க நண்ணினன் விண்ணவர் நாதன்.

(இ-ள்.) தேவர்கள் தலைவனுகிய தேவேந்திரன் புளகமாகிய போர்வையினுல் உடல் முழுதும் போர்க்கப்பட்டான். (தனது) முடியின்மேரிற் கைகளைக் குவித்தான். (சாஷ்டாங்கமாகப் பூமியின்மேல் விழுந்து) நமஸ்கரித்தான். எழுந்து கண்



வெள்ளையானைச்சாபந்தீர்த்தபடலம்.

ணிலிருந்து ஆனந்தபட்பந்துளித்தான். பலமுறை துதித்து ஆனந்தக்கூத்தாடினன். சோமசுந்தரப்பெருமானது திருவடிநிழற் பிரிவுக்கு ஆற்றுமல் அஞ்சினன். அப்பெருமான் தனக்குத் திருவாய்மலர்ந்தருளிய திருவாணையை மனதிற்கருதி (அதைத்தடுக்க முடியாது) பிரியாவிடைகொண்டு சுவர்க்கலோகத்தையடைந்தான். எ-று.

பல போகங்களையுஞ் சிவபோகத்தையும் நுகருமிடத்து அவனது திருவருளின் வழிநிற்க நுகர்வோனுதலால் "பிரியா விடைகொடு நண்ணினன்" என்றார். ()

எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

*வந்தரமங் கையர்கவரி மருங்கு வீச மந்தார கற்பகப்பூ மாரி தூற்ற, வந்தரநாட் டவர்முடிக ளடிகள் சூட வயிராணி முலைத்தடந்தோய்ந் தகலத் திண்டோள், விந்தமெனச் செம்மாந்து விம்மு காம வெள்ளத்து ளுடலழுந்த வுள்ளஞ் சென்று, சுந்தரநா யகன்கருணை வெள்ளத் தாழ்ந்து தொன்முறையின் முறைசெய்தான் றுறக்க நாடன்.*

(இ-ள்.) அரம்பாஸ்திரிகள் தனது பக்கலில் வந்து சாமரையிரட்டவும், மந்தாரமுங் கற்பகமும் புஷ்பவருஷஞ் சொரியவும், (தன்னைத் தரிசிக்கவந்த) அந்தர நாட்டவரது முடிகள் தனது பாதங்களைச்சூடவும், மார்புந்திண்ணியதோளும் இந்திராணியினது பெரியகுயங்களிலழுந்தி விந்தபர்வதம்போல இறுமாப்படையவும், அளவிறந்த காமவெள்ளத்தில் தனது உடலழுந்தவும், தனதுமனமானது சென்று சோமசுந்தரப்பெருமானது திருவருள் வெள்ளத்திலழுந்தவும், தேவேந்திரன் முன்பு நடத்திய முறைப்படியே அரசியல் நடத்திவந்தான். எ-று. (கள)

இந்திரன் பழிதீர்த்த படலம்.

*முற்றிற்று.*

ஆ. திருவிருத்தம்-சசா.

இரண்டாவது,

# வெள்ளையானைச் சாபந்தீர்த்த படலம்.

கொச்சகக்கலிப்பா.

*மட்டவிழுங் கொன்றைச் சடையான் மகவானைத்*
*தொட்ட பழியின் றொடக்கறுத்த வாறோதிப்*
*பட்டமத வேழம் பரனைப் பராய்முனிவ*
*னிட்டகொடுஞ் சாபதீத் தேகியவா றோதுவாம்.*

(இ-ள்.) தேனுடன் விகசித்த கொன்றைமலர்மாலை சூட்டிய சடாடவியினையுடைய சோமசுந்தரக்கடவுள், இந்திரனைப்பிடித்த பிரமகத்தியின் கட்டினைமுற்றும் ஒழித்த வகையை யெடுத்துச் சொல்லி, நெற்றிப் படத்தையும் மதத்தையு முடைய ஐராவதமாகிய வெள்ளையானை அச்சோமசுந்தரப் பெருமானைப் பணிந்து துருவாச முனிவர் கொடுத்த கொடிய சாபத்தை யொழித்து (தனது பதவிக்கு)ச் சென்ற சரித்திரமாகிய திருவிளையாடலைச் சொல்லுவோம். எ-று. (க)

கருவா சனைகழிக்குங் காசிநகர் தன்னிற்
றுருவாச வேதமுனி தொல்லாக மத்தின்
பெருவாய்மை யாற்றன் பெயர்விளங்க வீச
னொருவா விலிங்க வொளியுருவங் கண்டான்.

(இ-ள்.) பிறவியாகிய வாசனையை யொழிக்கத்தக்க காசிக்ஷேத்திரத்திலே வேதநூல்களை யறிந்த துருவாசமுனிவர் அநாதியாயுள்ள சிவாகமத்திற் கூறிய பெரிய உண்மைவாக்கியத்தினால், தமதுபெயர் விளங்கும்படி சிவபெருமான் சிறிதும் அகலாத ஒளிவடிவமாகிய சிவலிங்கம் ஒன்று பிரதிட்டை செய்தனர். எ-று.

ஆகமம் பதிவாக்கிய மாதலின் "பெருவாய்மை" என்றார். ஆகம மென்னு மொழியில் ஆ வென்பது ஞானமும், கவ்வென்பது மோக்ஷமும், மவ்வென்பது மலநாசமுமாம்; ஆகவே மலத்தை நாசஞ்செய்து ஞானத்தை யுதிப்பித்து மோக்ஷத்தைக் கொடுக்கையால் ஆகமமெனப் பெயராயிற்று என்றுணர்க.

துருவாசர் காசியிற் சிவலிங்கப்பிரதிட்டைசெய்ததை,

காசிகாண்டம்.

" காசிநகரின்பெருமை கண்டுளம் வியந்து
மாசடை வினைர்ந்ததுரு வாசனவண் வந்தான்.
ஈசனுக்கு றையாலய மியற்றிமகிழ் வோடு
மாசற விளங்குமொ ரிலிங்கமு மமைத்துப
பூசனை புரிந்தினிது போற்றியுல கேத்தத்
தேசுடை முனிகடவுள் செய்தவ மிழைத்தான் " — என வருஞ் செய்யுளானறிக. (உ)

இன்புற் றருச்சனைசெய் தேத்துதலு மவ்வேலை
யன்பர்க் கெளிய னருளாற் றிருமுடிமே
லின்பொற் கடிக்கமலப் போதொன்று வீழ்ந்திடலுந்
தன்பொற் கரகமலப் போதுவிரித்துத் தாங்கினான்.

(இ-ள்.) மகிழ்வெய்தி (தாம் பிரதிட்டைசெய்த சிவலிங்கக்குறியை) அருச்சனைசெய்து துதிக்கத் தொடங்கினார். அப்பொழுது அடியவர் அன்புக்கெளியவராகிய சிவபெருமானது திருவருளால் (அவனது) திருமுடிமேல் (சாத்தி) இருந்த பிரகாசிக்கும் பொன்னிறத்தையும் வாசனையையுமுடைய தாமரை மலரொன்று விழ (துருவாச முனிவர்) தமது பொன்மயமாகிய கைத்தாமரைகளை விரித்துத் தாங்கினார். எ-று. (ௐ)

தாங்கிக்கண் சென்னி தடமார் பணைத்துடலம்
வீங்கித் தலைசிறந்த மெய்யுவகை மேற்கொள்ள
நீங்கிக் கழிந்த கருணை நிதியனையான்
பூங்கற் பகநாட்டிற் போகின்றா னவ்வேலை

(இ-ள்.) (கைத்தாமரையில்) ஏந்தித் தமது கண்களிலுஞ் சிரசிலும் பரந்தமார்பிலும் ஒற்றிக்கொண்டு உடல்பூரித்து மேம்பட்ட உண்மையாகிய மகிழ்ச்சி அதிகரிக்கும்படி (அக்காசிப்பதியை) அகன்று, மிக்க கிருபையாற் சங்கநிதியை யொத்த துருவாசமுனிவர் அழகிய கற்பகவிருக்ஷம் பொருந்திய தேவலோகத்திற் செல்கின்றவரானார். அப்பொழுது, எ-று. (௪)

சங்கலறச் செங்களத்துத தானவரைத் தேய்த்துவிறற்
கொங்கலர்தார் வேய்ந்தமரர் கோமான்றன் கோநகரிற்

செங்க ணமரர்பெருஞ் சேனைக் கடல்கலிப்ப
மங்கலப்பல் லாண்டு மறைமுழங்க வந்தணைவான்.

(இ-ள்.) தேவர்கட்கரசனாகிய இந்திரன் வெற்றிச் சங்கமுழங்கப் போர்க்களத்திலே அசுரர்களைச் சிதைத்து மகரந்தப்பொடியுடன் விகசித்தவெற்றிமாலையையணிந்து, செவ்விய (கோபக்) கண்களையுடைய கணக்கில்லாத தேவசேனா சமுத்திரமானது (ஒருபுறம்) முழங்கவும், மங்கலப்பாடலாகிய வாழ்த்தும் வேதமும் (ஒருபுறம்) முழங்கவும்,தனது அரசத்தன்மையுடைய அமராவதி நகரத்தில் வந்தடைகின்றவன்.

கிழக்குமுதல் தென்கிழக்கிறுவாயுள்ள அட்டதிக்குகளின் இறைவராகிய இந்திரன் முதல் ஈசானன் ஈறானவர்களது நகரங்களில் அமராவதியே சிறந்ததாகலின், "கோநகர்" என்றார். (௫)

எத்திக்குங் கல்லென் றியங்கலிப்ப வேந்திழையார்
தித்தித் தமுதொழுகுங் கீதஞ் செவிமடுப்பப்
பத்திக் கவரிநிரை தானைப் படுகடலிற்
றத்திப் புரளுந் திரைபோற் றலைபனிப்ப.

(இ-ள்.) எல்லாத் திசைகளிலுங் கல்லென்று வாத்தியங்கள் முழங்கவும், ஆபரணமணிந்த அரம்பாஸ்திரிகள் மதுரித்த அமுதஞ் சிந்தும் இசைப்பாட்டானது (ஒருபுறம்) தனது காதில் மடுக்கவும், வரிசையாகிய சாமரைக்கூட்டங்கள் (ஒருபுறம்) சேனையாகிய வளப்பமிக்க சமுத்திரத்தில் தவழ்ந்து புரளாநின்ற அலைகளைப்போல அசையவும். எ-று.

கல்-ஒலிக்குறிப்பு. தித்தித்த என்பதில் அகரவீறு தொகுத்தல். (௬)

அங்கட் கடலி னெடுங்கூம் பகநிமிர்ந்த
வங்கத் தலையுய்க்கு மீகாம றன்னமானத்
திங்கட் குடைநிழற்றத் தீந்தேன் மதங்களிழ்க்கும்
வெங்கட் களிற்றின் மிசைப்பவனி போந்தணைந்தான்.

(இ-ள்.) அழகிய இடமகன்ற சமுத்திரத்தில், தன்னிடத்து நெடிய பாய்மரமோங்கிய மரக்கலத்தின் தலையிலிருந்து செலுத்தும் மாலுமியைப்போன்று, சந்திரவட்டக் குடைநிழல் செய்ய, இனிய வாசனையுடைய மதநீரைச்சொரியுங் கோபக்கண்ணையுடைய ஐராவதமாகிய வெள்ளையானையின்பேரிற் பவனி வந்தனன். எ-று.

தீம் தேன் என்பன ஒருபொருட் பன்மொழி எனக் கூறினுமமையும். பவனிபோதல் = உலாவருதல். கூம்பு = பாய்மரம்.

கூம்பு-வெண்குடையாகவும், வங்கம்-வெள்ளை யானையாகவும், அதன் தலை-அவ்யானையின் பிடராகவுங் கூட்டிப் பொருள்கொள்க. (௭)

அத்தலைவின் னாட ரருகணைந்து வெவ்வேறு
தத்த மனக்கிசைந்த கையுறைக டாங்கொடுத்துக்
கைத்தலங்கள் கூப்பினார் கண்டார் கடவுளரி
னுத்தமனை யர்ச்சித்துப் போந்தமுனி யுத்தமனும்,

(இ-ள்.) அவ்விடத்தில் தேவர்கள் (தேவேந்திரனுக்கு) சமீபித்துவந்துதங்கடங்களது மனதுக்கிசைந்த வெவ்வேறு வகைப்பட்ட கையுறைகளைக் கொடுத்துத் தமது கைகளைக் குவித்துப் பணிந்தார்கள். தேவர்களிற் சிரேஷ்டராகிய சிவபெருமானை அருச்சனைசெய்து (அவ்விறைவனது அருள்பெற்று) வந்த முனிசிரேஷ்டராகிய துருவாசமுனிவரும் (இந்திரனது உலாவருகையின் ஆரவாரத்தை) கண்டனர்.

கையுறை-கையில் வரப்படுவது; காணிக்கை என்னும் பொருளது.

கடவுள்-குரு-அரசன் முதலானோரைக் காணவேண்டுவோர் ஏதேனுங் கையுறைகொண்டு செல்லவேண்டுமன்றி வெறுங்கையாகச் செல்லப்படாமைகருதி, இமையவர் தமக்கரசனாகிய இந்திரனைத் தத்தமக்கியைந்த கையுறைகளைக் கொண்டுவந்து கொடுத்துக் கண்டனரென்பார் "விண்ணுடர்தத்தமனக் கியைந்த கையுறைகடாங் கொடுத்துக் கைத்தலங்கள் கூப்பினர்" என்றார்.

குசேலோபாக்கியானம்.

"தெய்வங் குரவ னரசன்றிரு முன்னர்ச் செல்வோர்
மெய்வந்த வன்னா ரருள்வேண்டி விரும்பி யேதேனுங்
கைவந்த பெற்றுச் செலீஇக்காண்குவர் கண்ணன் முன்பு
மைவந்த கண்ணா யினிதென்கொடு வல்லை செல்வல்"-என்பதனானறிக.

தீங்கரிய வாசிமொழி செப்பித்தன் செங்கரத்தி
னீங்கரிய தாமரையை நீட்டினான் மற்றதனைத்
தாங்கரிய செல்வத் தருக்காலோர் கையோச்சி
வாங்கிமத யானையின்மேல் வைத்தான் மதியில்லான்.

(இ-ள்.) குற்றமில்லாத ஆசீர்வசனங் கூறித் தமது செவந்த கையிலிருந்து நீங்கற்கரிதாகிய (சிவப்பிரசாதமாகிய) தாமரைமலரை (துருவாசமுனிவர்) கொடுத்தார். அக்கையுறையாகிய தாமரைமலரைப் பெறுதற்கரிய பெருஞ்செல்வச் செருக்கினாலே அறிவில்லாதவனாகிய தேவேந்திரன் ஒரு கையை நீட்டிவாங்கி, மதம்பொழியும் வெள்ளையானையின்பேரில் வைத்தனன். எ-று.

துருவாசர்கொடுத்த தாமரைமலராகிய கையுறை சிவப்பிரசாத மாதலாலும், ஏனையோர் கொடுத்த கையுறை போலாது, இது அவனது செல்வத்தின் பெருக்கை உண்டுசெய்ய வல்லதாதலாலும் "நீங்கரிய தாமரையை நீட்டினான்" என்றார். (கூ)

கீறிக் கிடந்த மதியனைய கிம்புரிக்கோட்
டூறிக் கடங்கவிழ்க்கு மால்யானை யுச்சியின்மே
னாறிக் கிடந்த நறுமலரை வீழ்த்தியுரத்
தீறிக் கிடந்தநெடுந் தாளாற் சிதைத்தன்றே.

(இ-ள்.) பிளவுபடுத்திய சந்திரன்போன்ற பூணணிந்த கொம்புகளையுடைய ஊற்றெடுத்து மதத்தைக் கவிழ்க்கும் மயக்கங்கொண்ட அந்த ஐராவதமானது தனது உச்சியின்பேரில் மணம் வீசிக்கொண்டிருந்த நல்ல தாமரைமலரைக் கீழேதள்ளி, உரலொடு மாறுபட்ட தனது நெடிய தாள்களாற் சிதைவுபடுத்தியது. எ-று.

சிதைத்தது என்றது சிதைத்து என நின்றது. (க0)

கண்டான் முனிகாமற் காய்ந்தா னுதற்கண்போல்
விண்டா ரழல்சிதற நோக்கினான் வெங்கோபங்
கொண்டா னமரரொது ங்கக் கொதித்தால
முண்டா னெனநின் றுருத்தா னுரைக்கின்றான்.

(இ-ள்.) துருவாசமுனிவர் (தாம் கொடுத்த கையுறையை யானைசிதைக்கப்) பார்த்து, மன்மதனை யெரித்த சிவபெருமானது நெற்றிக்கண்ணிலுள்ள தீயைப்போலப் பொருந்திய தீயானது பரந்து சிந்தப்பார்த்துக் கொடிய கோபங்கொண்டார். தேவர்கள் (அச்சமெய்தி) ஒதுங்கப் பொங்கி, ஆலாலவிடத்தைப் பானஞ்செய்த உருத்திர மூர்த்தியைப்போல நின்று கோபித்துச் சொல்லுகின்றார். எ-று. (கக)

புள்ளியதோ லாடை புனைந்தரவப் பூணணிந்த
வெள்ளிய செங்கண் விடையா னடிக்கமல
முள்ளிய மெய்யன் புடையா ரருவருத்துத்
தள்ளிய செல்வத் தருக்கினை யென்செய்தாய்.

(இ-ள்.) புள்ளிகள் பொருந்திய (புலித்) தோலாகிய ஆடையையணிந்து, சர்ப்பாபரணம் பூண்ட செவந்த கண்களையுடைய வெண்மைதங்கிய இடபவாகனத்தையுடைய சிவபெருமானது திருவடித்தாமரையைக் கருதிய உண்மையாகிய அன்பையுடைய அடியவர்கள் அருவருப்புற்றுவிலக்கிய செல்வத்தாலாகியசெருக்கினையுடைய பேதாய்! நீ யாது காரியஞ் செய்தனை? எ-று.

பெருந்திரட்டு.

" தீய வசுரர் பகையுண்டு செற்ற மார்வ மிகவுண்டு
நோயுண் டனங்க னுருண்டு நோய்கட் கெல்லாந் தாயான
காய முண்டு கைதொழுவேண் டினரு முண்டு கற்பத்தே
மாயுந் தன்மை யுண்டானால் வானோர்க் கென்ன வளனுண்டே "—என்றபடி. இந்திராதி தேவபோகங்களும் நிலையான சுகமுடையனவல்லவென்று அறிவுடையோரால் விலக்கப்படுதலின் "அருவருத்துத் தள்ளிய செல்வம்" என்றும்,

" பெருத்திடு செல்வமாம் பிணிவந் தெய்திடி
னுருத்தெரி யாமலே யொளிம ழுங்கிடும் "—என மேலோரும்,

" சிறியரோ மதிக்கு மிந்தச் செல்வம்வந் துற்ற ஞான்றே
வறியபுன் செருக்கு மூடி வாயுளார் மூக ராவர்
பறியணி செவியு ளாரும் பயிறரு செவிட ராவர்
குறிபெறு கண்ணு ளாருங் குருடராய் முடிவரன்றே"—எனக்குசேலருங் கூறியபடி அற்பர்கள்மதிக்கத்தக்க செல்வத்தினாலே யிறுமாந்திருந்த இந்திரனை நோக்கி "செல்வத் தருக்கினோய்" என்றும், சிவப்பிரசாதமென மதியாது அவன்செய்தது அபசாரமாதலின், அதனைக் குறிப்பித்து " என் செய்தாய் " என்றுங் கூறினார்.

கதித்தார் முடியமரர் கையுறையே நன்கு
மதித்தாயெம் மீசன் மதிமுடிமேற் சாத்தும்
பொதித்தா தவிழ்மலரைப் போற்றாது வாங்கி
மிதித்தானை சிந்தவதன் மேல்வைத்தாய் பேதாய்.

(இ-ள்.) பேதைமைக் குணமுடைய இந்திரா! சிறப்புப் பொருந்திய மாலையணிந்த கிரீடந்தரித்த தேவர்கள் கொடுத்த கையுறைகளையே நன்கு மதித்து, எமது ஜகதீசனது சந்திரனையணிந்த திருமுடியின்பேரிற் சாத்திய பொதிதலையுடைய மகரந்தத்தோடு விகசித்த தாமரைமலரை நன்கு மதியாமல் வாங்கி, (நீ ஊர்ந்துவரும்) யானையினது காலால் மிதித்துத் தேய்க்கும்படி அதன்மேல் வைத்தாய். எ-று.

" கதிர்த்தார்முடி " எனப் பாடங்கூறுவாருமுளர். (கரு)

வண்டுளருந் தண்டுழாய் மாயோ னிறுமாப்பும்
புண்டரிகப் போதுறையும் புத்தே ளிறுமாப்பு
மண்டர்தொழ வாழுன் னிறுமாப்பு மாலால
முண்டவனைப் பூசித்த பேறென் றுணர்ந்திலையால்.

(இ-ள்.) வண்டுகள் கிளரும் தட்பமாகிய துளவமாலையணிந்த விண்டுவினது செல்வச்செருக்கும், (செந்) தாமரை மலரில் வீற்றிருக்கின்ற பிரமனது செல்வச்செ

ருக்கும், தேவர்கள் பணியும்படி வாழ்கின்ற உனது செல்வச்செருக்கும், ஆலாலவிடத்தை யுண்டருளிய சிவபெருமானை அருச்சித்தலால் வந்த பயனென்று (நீ சிறிதும்) அறியாமற் போயினை. எ-று.

இச்செய்யுளின் கருத்தை,

காஞ்சிப்புராணம் - திருமால் வாக்கியம்.

“ வான மேத்தயான் வைகுந்த வாழ்வுபெற் றதுவும்
ஞான நான்முகன் சத்திய வுலகநண் ணியதும்
ஏனை விண்ணவர் தத்தம வாழ்க்கையெய் தியதும்
ஆனு யர்த்தவ னருட்குறி யருச்சனைப் பயனால் ”—என்பதனானும்,

“ குடங்கை நீரும் பச்சிலையு மிடுவார்க் கிமையாக் குஞ்சரமும்
படங்கொள் பாயும் பூவணையுந் தருவாய் மதுரைப் பரமேட்டி ”—எனவரும்
இந்நூற் செய்யுளானு மறிக. (கச)

சேட்டானை வானவநின் சென்னி செழியரிலோர
வாட்டானை வீரன் வளையாற் சிதறுகநின்
கோட்டான நாற்கோட்ட வெண்ணிறத்த குஞ்சரமுங்
காட்டானை யாகவென விட்டான் கடுஞ்சாபம்.

(இ-ள்.) பெரிய யானையை வாகனமாகவுடைய இந்திரா! உனது தலையானது பாண்டியர் மரபில்வரும் வாட்படைதாங்கிய சேனையையுடைய ஒப்பற்றவீரனாற் சிதறக்கடவது. உன்னுடைய வலிமையும் மதத்தையும நான்கு கொம்புகளையும் வெண்மை நிறத்தையுமுடைய ஐராவதமும் காட்டானையாகக் கடவது என்று (இந்திரனுக்கும் அவன் வாகனமாகிய யானைக்கும்) கொடிய சாபங்கொடுத்தார் (துருவாச முனிவர்.) எ-று.

குஞ்சரமும் என்பதிலுள்ள வும்மை இறந்ததுதழீஇய வெச்சவும்மை. (கரு)

சவித்தமுனி பாதந் தலைகொண்டு செங்கை
குவித்தமரர் தங்கோன் குறையிரப்பா ரைய
வவித்தபொறி யாயெம் மரசுங்கா றள்ளுஞ்
செவித்தறுகண் வேழமுந் தீங்குடைய ரன்றோ.

(இ-ள்.) தேவர்கள், (அவ்வாறு) சாபங்கொடுத்த துருவாச முனிவரது பாதங்களைத் தமது தலைமேற்கொண்டு செவந்த கரங்களைக் குவித்து (கும்பிட்டு) தமது அரசனாகிய தேவேந்திரன் செய்த குறைகளைச் சொல்லி யிரப்பவர், ஐயா! ஐம்பொறிகளையுங் கெடுத்த முனிவரே! அடியேங்களது அரசனும், காற்றை யெறியுங் காதையும் அஞ்சாமையையுமுடைய ஐராவதமும் (சிவாபராதஞ் செய்தமையின்) குற்றமுடையவர்களல்லவா? எ-று.

அரசும் வேழமுந் தீங்குடையர் என்ற விடத்து, திணைவிரவிச் சிறப்பினால் உயர்திணை முடிபேற்றது. (கசு)

அத்தகைய நீராற் சபித்தீ ரடிகேண்மற்
றித்தகைய சாப மினிவிடுமி னென்றிரந்து
கைத்தலங்கள் கூப்பிக் கரைந்தார்க் கிரங்கியருள்
வைத்த முனிபிறிது சாபம் வகுக்கின்றான்.

(இ-ள்.) சுவாமிகாள்! அத்தகைய குற்றங்களாற் சபித்தருளினீர். இப்பொழுதே இத்தகைய சாபங்களை யொழித்தருளுமென்று குறைகூறிக் கைகளைக் கூப்பி முறையிட்ட அத்தேவர்க ணிமித்தம் மனமிரங்கிக் கிருபைகூர்ந்த அத்துருவாசமுனிவர் வேறு சாபம் அருள்கின்றார். (அதாவது.) எ-று. (கஎ)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

சிந்தனை வாக்கிற் கெட்டாச் சிவனரு ளளித்த சேட
நிந்தனை பரிகா ரத்தா னீங்காது தலைமட் டாக
வந்தது முடிமட் டாக மதமா வனமா வாகி
யைந்திரு பஃதாண் டெல்லை யகன்றபின் பண்டைத் தாக.

(இ-ள்.) மனம் வாக்கு (காயங்) கட்கு அதீதப்பட்ட சிவபெருமானதுதிருவருள்பிரசாதித்த சேடத்திலுண்டான அவமதிப்பு பிராயச்சித்தத்தினால் ஒழியமாட்டாது. (ஆனபடியால்) தலையளவாகவந்தகொடுமை முடியினளவாக முடியக்கடது. மதத்தையுடைய வெள்ளையானை நூறுவருடமட்டுங் காட்டானையாகத்திரிந்து (அவ்வளவு காலமும்) கழிந்தபிறகு முன்னுள்ள (தெய்வத்) தன்மையடையக்கடவது. எ-று.

ஆகவென்னும் மூன்றனுள் முற்பட்டது வினையெச்சம். பிற்பட்டவை வியங்கோள் முற்றுகள். (கஅ)

என்றனன் பிறிது சாப மிந்திரன் மகுட பங்க
மொன்றிய செய்கை பின்ன ருரைத்துமற் றஃதா நிற்க
நின்றவெள் ளானை வான நீத்தறி விழந்து நீலக்
குன்றென வனத்து வேழக் குழாத்தொடுங் குழீஇய தன்றே.

(இ-ள்.) என்று (துருவாசமுனிவர்) பிறிது சாபம்வகுத்தருளினர். தேவேந்திரன் மகுடம் பங்கப்பட்ட சரிதத்தைப்பின்பு கூறுவாம். * அச்சரிதம்நிற்க. ஒழிந்த வெள்ளையானையானது (அப்பொழுதே) தேவலோகத்திலிருந்து நீங்கி இயற்கையறிவு ஒழிந்து, நீலமலையைப்போல (கரியநிறம்படைத்துக்) காட்டிற்சஞ்சரிக்கும் யானைக் கூட்டங்களோடு சேர்ந்து சஞ்சரித்துக்கொண்டிருந்தது. எ-று. (கக)

மாவொடு மயங்கிச் செங்கண் மறம்பயில் காடு முல்லைப்
பூவொடு வழங்கு நீத்தப் புறவமுங் குறவர் தங்க
டேவொடு பயிலுங் கல்லுந் திரிந்துநூ றாண்டுஞ் செல்லக்
காவொடு பயிலுந் தெய்வக் கடம்பமா வனம்புக் கன்றே.

(இ-ள்.) காட்டானைகளுடன் சேர்ந்து, செவ்விய கண்களையுடைய மறவர் சஞ்சரிக்கும் பாலைநிலங்களிலும், முல்லைப்பூவையும் ஒலிவிருகூத்தையும் பெருக்கெடுத்தோடும் காட்டாறுகளையுமுடைய முல்லைநிலங்களிலும், குறவர்கள் தங்களுக்குரியதெய்வமாகிய குமாரசுவாமியுடன் வாசஞ்செய்யுங் குறிஞ்சி நிலங்களிலுந்திரிந்து, நூறுவருடமும் (இவ்வாறு) ஒழிய, சோலைகளால்விளங்குந் தெய்வத்தன்மைபொருந்திய கடம்பவனத்திற்புகுந்தது (வெள்ளையானை.) எ-று. (உ0)

புக்குரல் வட்டத் திண்காற் பொருவிறே வியலிற் றீர்ந்த
மைக்கருங் களிறு முக்கண் மாதவ னருள்வந் தெய்தத்
தக்கதோ ரமையஞ் சார மரகதந் தழைத்து மின்னு
நக்கபொன் முளரி பூத்த நளிர்கயந் தலைக்கண் டன்றே.

---

* இந்திரன் முடிமேல் வளையெறிந்த படலத்துட் கண்டுகொள்க.

(இ-ள்.) (கடம்பவனத்திற்) புகுந்து உரல்போன்ற வட்டவடிவாகிய வலிய கால்களையுடைய சமானமில்லாத தெய்வத்தன்மையினின்று நீங்கிய கரிய யானையானது திரிநேத்திரங்களையுடைய மாதவனாகிய சிவபெருமானது திருவருள்வந்துகிடைக்கத்தக்க ஒப்பில்லாதகாலம் தனக்குக்கிடைக்க,மரகதம்போலும் இலைகள் தழைத்து மின்னலைப்போலும் விளங்கிய பொற்றாமரைமலர்கள் விகசித்த குளிர்ந்த தடாகத்தைக்கண்டது. எ-று.

புக்குரல் என்பதை, புக்க உரல் எனப்பிரித்து நிலைமொழியீற்றில் அகரந் தொக்கதெனக்கொள்க. கயந்தலை-இருபெயரொட்டுப் பண்புத்தொகை.

மாதவன் என்றது சிவநாமங்களிலொன்று. இதனை,

சிவாரகசியத் திருநாமநிர்வசனம்.

మకారవాచ్యోరుద్రస్స్యాదౌ స్స్యాతాఽవిష్ణుర్దసా ।
ధవో ... పరిభుస్తేషాం మాదవాఖ్యోధ్రువంశివః ॥

என வருஞ் சுலோகத்தா னறிக. (உக)

கண்டபோ தறிவு தோன்றக் கயந்தலை குடைந்த போது
பண்டைய வடிவந் தோன்றப் பரஞ்சுட ரருட்கண் டோன்றக்
கொண்டதோர் பரமா னந்தக் குறியெதிர் தோன்றக் கும்பிட்
டண்டர்நா யகனைப் பூசை செய்வதற் கன்பு தோன்ற.

(இ-ள்.) (அந்தப்பொற்றாமரைத்தீர்த்தத்தைக்) கண்டவுடனே (இயற்கையாகிய பண்டைய) அறிவுதோன்றவும், அந்தத்தீர்த்தநீரில் முழுகியவுடனே முன்னுள்ள (வெண்மையாகிய) வடிவந்தோன்றவும், சிவபெருமானது திருவருட்பார்வைதோன்றுவதால், மேலான ஆனந்தமே திருமேனியாகக்கொண்ட ஒப்பில்லாத சோமசுந்தரப் பெருமான் நேரோதரிசனமாகப்பணிந்து தேவதேவராகிய அச்சோமசுந்தரப்பெருமானைப்பூசைசெய்வதற்கு (தன்மனதில்) அன்புதோன்ற நிற்கவும். எ-று.

இது முதலிரண்டுபாடல்கள் ஒருதொடர் (உஉ)

தூம்புடைக் கையான் மொண்டு மஞ்சனத் தூநீ ராட்டித்
தேம்புடை யொழுகப் பள்ளித் தாமமுந் தெரிந்து சாத்திப்
பாம்புடைத் தாய வேணிப் பரனையர்ச் சிக்க வுள்ளத்
தாம்புடை யறிந்த வெந்தை யானையை நோக்கிக் கூறும்.

(இ-ள்.) துவாரம் பொருந்திய துதிக்கையால்முகந்து திருமஞ்சனமாகிய பரிசுத்தம்பொருந்திய நீரினால் அபிஷேகித்து, தேனானது புறத்திற்சிந்தும்படி திருப்பள்ளித்தாமத்தையும் (குற்றமற) ஆராய்ந்துசாத்தி, சர்ப்பத்தையணிந்த சடையையுடைய அச்சோமசுந்தரக்கடவுளை அருச்சனைசெய்ய, (அவ் ஐராவதத்தின்) மனதில் உண்டான (அன்பின்) மிகுதியையறிந்த எந்தையாகிய அப்பெருமான் அவ்வெள்ளையானையைக் கடைக்கணித்துத் திருவாய்மலர்ந்தருளுகின்றார். எ-று.

வண்டுகள் மொய்க்காமுன்ன றெடுத்ததா தலாலும், குற்றமற்றமலர்களும் நீக்கற்பாலன வல்லாததுமாகிய புஷ்பவிதியிற் கூறியவண்ணஞ் செய்யப்பட்ட மலர் மாலையாதலாலும் " தேம்புடையொழுகப்பள்ளித் தாமமுந்தெரிந்துசாத்தி " என்றார்.

வந்தனை யெவனீ வேண்டும் வரமென வுணர்த்தி யென்னச்
சிந்தையி லன்பு கூர்ந்த தெய்வத வேழந் தாழ்ந்து

முந்தையில் விளைவும் வந்த முறைமையு முறையாற் கூறி
யெந்தையை யடையப் பெற்றேற் கினியொரு குறையுண் டாமோ.

(இ-ள்.) (ஐராவதமே!) நீ இங்குவந்தகாரணம் யாது? உனக்குவேண்டிய வரம்யாது? சொல்வாயாகவென்று அருளிச்செய்ய, மனதில் அன்புமிகுந்த தெய்வீகம் பொருந்திய வெள்ளையானையானது பணிந்து, முன்னடந்த (சிவப்பிரசாத அவமதித்தல் செய்த) செய்தியும், அது காரணமாக (துருவாசமுனிவராற் சாபமேற்று உருமாறி) வந்த முறைமையையுங் கிரமமாக விண்ணப்பித்து, எனது தந்தையாராகிய தேவரீரைச் சரணடையப்பட்ட அடியேனுக்கு இனி யொரு குறையுண்டோ? (இல்லை.)

தெய்வதவேழ மென்பதற்குத் தெய்வலோகத்து யானை யெனவும் பொருள்.
வந்தையை என்பதில் ஐகாரம் - சாரியையிடைச்சொல். (உச)

என்பரா வாரம் பூண்ட வெந்தையிக் கரிக ளெட்டோ
டொனபதா யடிய னேனு முன்னடி பிரியா துன்றன்
முன்பதா யிவ்வி மான முதுகுறச் சுமப்ப லென்றே
ரன்பதா யொன்றென் னுள்ளத் தடுத்ததா லஃதே வேண்டும்.

(இ-ள்.) (பிரம விஷ்ணுக்களின்) என்பையும், சர்ப்பங்களையும் மாலையாகத் தரித்தருளிய எனது தந்தையே! அடியேனாகிய யானும் (தேவரீர் வீற்றிருக்கும் விமானத்தைச் சுமக்கும்) இந்த அஷ்ட கெஜங்களோடு ஒன்பதாகி, உமது திருவடியைப் பிரியாமல் உமது திருமுன்பு நின்று இவ்விமானத்தை முதுகிற் பொருந்தச் சுமப்பேன் என்று சமானமில்லாத அன்பொன்று அடியேனதுமனதிற் பொருந்துவதால் அடியேனுக்கு அதுவே (வரம்) வேண்டும். எ-று.

என்பதாமாரம் எனவும் பாடங்கூறுவர்.
முன்பது அன்பது என்பவற்றிலுள்ள அது பகுதிப்பொருள்விகுதிகள். ()

இடையறு வன்பின் வேழ மிங்ஙனங் கூற விண்ணு
டையவ னம்பான் மெய்யன புடையவ னவனைத் தாங்கி
யடைவதே நமக்கு வேண்டு மகமகிழ் வென்னாப் பின்னும்
விடையவன் வரங்க ணல்கி விடைகொடுத் தருளி னானே.

(இ-ள்.) இடையறாத அன்பினையுடைய வெள்ளையானை இவ்வண்ணம் உரைக்க, இடபவாகனத்தையுடைய சோமசுந்தரக்கடவுள், தேவலோகத்தை (தனது அரசுரிமை செய்யும்படி) உடையவனாகிய தேவேந்திரன் நம்மிடத்தில் உண்மையாகிய பத்தியையுடையவன் (ஆதலால், நீ) அவனைச் சுமந்து செல்லுவதே நமக்கு வேண்டிய அகமகிழ்ச்சியென்று திருவாய்மலர்ந்து மீளவும் வரங்கள் அருளிச்செய்து விடைகொடுத்தனுப்பினார்.—எ-று. (உசு)

எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

விடைகொடு வணங்கி யேகும்வெள் ளானை மேற்றிசை யடைந்துதன் பெயராற், றடமுமற் றதன்பா லரனையுங் கணேசன் றன்னையுங் கண்டருச் சனைசெய், திடையறு வன்புந் தானுமங் கிருக்கு மெல்லையிச் செய்திகேட்டருள் கூர், கடவுளர் பெருமா னுழையரை விளித்தெங் களிற்றினைக் கொணர்கென விடுத்தான்.

(இ-ள்.) விடைபெற்றுப்பணிந்து செல்லும் வெள்ளையானையானது மேலைத்திசையையடைந்து தனதுபெயரால் ஒரு தீர்த்தத்தையும் அத்தீர்த்தத்தருகே ஒரு சிவலிங்கமூர்த்தியையும் விநாயகக்கடவுளையும் பிரதிட்டைசெய்து அர்ச்சித்துக்கொண்டு இடையறாத அன்புந்தானுமாக அவ்விடத்தில் வாழ்ந்திருக்குங்காலத்தில், இரு

பை மிகுந்த தேவர்கட்கரசனாகிய இந்திரன் இவ்விருத்தாந்தங்களைக் கேள்வியுற்று ஏவல்செய்வோரை யழைத்து எமது யானையைக் கொண்டுவரக்கடவீரென்று கட்டளையிட்டனுப்பினான். எ-று. (௨எ)

வல்லைவந் தழைத்தார் தம்மைமுன் போக்கி வருவலென் றெழுந்து
கீழ்த் திசையோ, ரெல்லைவந் தோரூர் தனதுபே ராற்கண் டிந்திரேச் சுர
மென விறைவன், றொல்லைவண் பெயரா லொன்றுகண் டரணைத் தூயபூசனை
செய்தங் கிருப்பக், கல்லைவன் சிறகு தடிந்தவ னின்னுங் களிறுவந் திலதெ
னப் பின்னும்.

(இ-ள்.) (இந்திரனது கட்டளையை யேற்று) விரைவாகவந்து அழைத்தவர்களை யான் வருகின்றேன்; நீங்கள் முந்திச்செல்லுங்களென்று கூறியனுப்பி, அவ்விடம் விட்டுப் புறப்பட்டுக் கீழைத்திசையில் ஓரிடத்தில் வந்து, தனதுபெயரால் (ஐராவதீச்சரம் என்று) ஒரு தலத்தை ஏற்படுத்தி, தனது தலைவனது தொன்று தொட்டுள்ள பெயரினால் இந்திரேச்சரம் என்று ஒரு தலத்தை ஏற்படுத்தி, சிவபெருமானைப் பரிசுத்தமாகிய பூசைசெய்துகொண்டு அவ்விடத்திலிருக்க, மலைகளின் வலிய சிறகுகளையறுத்த தேவேந்திரன் இன்னமும் ஐராவதம் வந்து சேரவில்லையென்று மீண்டும்.

மனத்தினுங் கடிய தூதரை விடுப்ப வானடைந் திறைவனை வணங்கிப்
புனத்தினுங் கடிய கலலினும் பன்னாட் புன்கணே யுறவரு சாபங்
கனத்தினுங் கரிய கண்டனைக் கண்டு களைந்ததுந் களைந்துதிக் கயத்தி
னினத்தினுங் கழிந்த தெய்வத வேழ மினிதுவீற் றிருந்தது மாதோ.

(இ-ள்.) மனோவேகத்தைக் காட்டிலும் விரைவாகச் செல்லும் வேகத்தையுடைய தூதுவரை (விளித்து, ஐராவதத்தை யழைத்துவரும்படி கட்டளையிட்டு) அனுப்ப, (ஐராவதம் அவர்களுடன்) சுவர்க்கலோகத்தை யடைந்து தனது தலைவனாகிய தேவேந்திரனைப் பணிந்து, காடுகளிலும் அசசத்தைத்தரும் மலைகளிலும் பல நாள் துன்பநோயை அனுபவிக்கும்படி (துருவாச முனிவரால்) வந்த சாபத்தை, மேகத்தைக்காட்டிலுங் கரிய ஸ்ரீ கண்டத்தையுடைய சோமசுந்தரக்கடவுளைத் தரிசித்து நீக்கிக்கொண்டதையும் (மற்றைச் சஙகதிகளையுஞ்) சொல்லி, அஷ்டதிக்கஜங்களிலுஞ் சிறந்த தெய்வத்தன்மைபொருந்திய வெள்ளையானையானது இனிதாக வீற்றிருந்தது.

ஐராவதம் - புண்டரீகம் - வாமனம் - குமுதம் - அஞ்சனம் - புட்பதந்தம் - சார்வபூமம் - சுப்பிரதீபம் என்பவை அட்டதிககயங்கள். இவை எட்டனுள் ஐராதவமும் ஒன்றாயிருப்பினும், இது சிவார்ச்சனை செய்து மேம்பட்ட வரங்களைப் பெற்றிருக்குஞ் சிறப்பு நோக்கி "திக்கயத்தி னினத்தினுங் கழிந்த தெய்வத வேழம்" என அடைகொடுத்துக் கூறப்பட்டது.

களைந்ததும் என்பதிலுள்ள உம்மையால் (மற்றைச் சங்கதிகளையும்) என்று வருவித்துக் கூறினோம். (௨௮)

குடவயி னயிரா வதப்பெருந் தீர்த்தங் குடைந்தயி ராவத கணேசக்
கடவுளைத் தொழுதை ராவதேச் சுரத்துக் கடவுளைப் பணிந்தவர் சாபத்
தொடர்பினும்பாவதொடர்பினுங்கழிவர்சுராதிபனகளிறுசென்னெறிபோ
யிடர்கெட வைகை படிந்துதென் கரையி லிந்திரேச சுரனடி பணிவோர்.

(இ-ள்.) மேலைத் திசையிலேயுள்ள பெரிய ஐராவத தீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்து ஐராதவ கணபதியைப் பணிந்து ஐராவதேச்சுரரது திருவடிகளை வணங்கினவர்கள் சாபக்கட்டினின்றும் பாவக்கட்டினின்றும் நீங்குவார்கள். (இதுவேயல்லாமல்) இந்திரனது யானையானது சென்றவழியே சென்று பிறவித் துன்பங்கெட, வைகை



திருநகரங்கண்டபடலம்.

நதியில் நீராடி, (அதன்) தென்கரையி லெழுந்தருளிய இந்திரேச்சுரனது திருவடிகளை வணங்குகின்றவர்கள். எ-று.

இதுமுத லிரண்டுபாடல்கள் ஒருதொடர்.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

(கூ0)

இம்மையி லறமுன் மூன்று லெய்திய பயனை யெய்தி
யம்மையின் மகவா னேரோ ழரும்பத மளவும் வானில்
வெம்மையில் போக மூழ்கி வெறுப்புவந் தடைய வுள்ளச்
செம்மையில் வினைபே ரின்பச் சிவகதிச செல்வ ராவார்.

(இ-ள்.) இந்தப்பிறப்பில் அறம் முதலிய மூன்று பொருள்களால் வரும் பலனை நுகர்ந்து, மறுமையில் கிடைத்தற்கரிய பதினான்கு தேவேந்திர பட்டங்காறும், சுவர்க்கலோகத்தில் விருப்பைத்தரும் போகவெள்ளத்தி லாழ்ந்து, அதில் வெறுப்பு உண்டாக, (அதனால் நேர்ந்த) இருவினை யொப்பால் உண்டாகும் பேரின்பத்தைத் தரும் சிவசாயுச்சியச் செல்வமுடையவராவார்கள். எ-று.

பிரமனது ஆயிரஞ் சதுர்யுகங் கொண்டபகல் நீக்கத்துக் கற்பாந்த வெள்ளம் வரும். அப்பொழுது பூமி அந்தர சுவர்க்கமென்னு மூவுலகமும் முழுகி யழிவுறும். விண்மீன்களும் சோமசூரியர்களும் பொன்றுவர். மாறிய பதினான்கு மனுக்களும் இந்திரர்களும் மகலோகமடைவர். இக்காலம் பரார்த்தமெனப்படுமாதலின், அவ்வளவு காலம் சுவர்க்கபோகத்தில் வாழ்வார்களென்பது கருத்து. (கூக)

வெள்ளையானைச் சாபந்தீர்த்த படலம்.

முற்றிற்று.

---

ஆ திருவிருத்தம் - உஎக.

---

மூன்றாவது,

# திருநகரங்கண்டபடலம்.

கலிநிலைத்துறை.

தான வாறிழி புகர்முகத் தடுகரி சாபம்
போன வாறுரை செய்துமேற் புதுமதி முடிமேல்
வான வாறினன் கடம்பமா வனமுது நகர
மான வாறது தனைச்சிறி தறிந்தவா றிசைப்பாம்.

(இ-ள்.) மதமாகிய வெள்ளமானது பெருக்கெடுத்தோடும் புள்ளிதங்கிய முகத்தையுடைய (எதிர்த்தோரைக்) கொல்லும் வெள்ளையானையினது சாபநீங்கிய சரிதத்தைச் சொன்னோம். இனிப்பிறைச்சந்திரனைச் சூடிய சடாமுடியின்பேரில் ஆகாய கங்கையையணிந்த சோமசுந்தரக்கடவுளது பெரிய கடம்பவனமானது பழைய (சிற்ப நூலின்வழி) திருநகரமான திருவிளையாடலைச் சிறிது தெரிந்தவண்ணம் (எடுத்துச்) சொல்லுவோம்.—எ-று.

(க)

இன்ன ரம்புள் ரோழிசை யெழான்மிடற் றளிகள்
கின்ன ரம்பயில் கடம்பமா வனத்தினின் கீழ்சார்த்

தென்னர் சேகர னெனுங்குல சேகர னுலக
மன்னர் சேகர னரசுசெய் திருப்பது மணவூர்.

(இ-ள்.) இனிமைபொருந்திய நரம்புகளைத் தடவுமிடத் துண்டாகிய சத்த சுரங்கள்போலுங் கண்டத் தொனியை யுடைய வண்டுகள், வீணாநாதம்போலும் இசை பாடுகின்ற பெரிய கடம்பவனத்தினது கீழ்ப்புறத்தில், பாண்டிமன்னரது பரம்பரைக் கோர் மகுடம் போன்றவனாகிய குலசேகரபாண்டியன் என்னும் இயற்பெயருடைய வன். பூமியிலுள்ள மற்றைய மன்னவர்கட்கும் மகுடம் போன்றவன். அவன் (மனுமுறைப்படி) அரிசியல் நடத்திவரும் ஊர் மணவூராம். எ-று. (உ)

குலவு மப்பெரும் பதியிளங் கோக்களி லொருவ
னிலவு மாநிதி போலருச் சனைமுத னியதி
பலவு மாஞ்சிவ தருமமுந் தேடுவான் பரன்பாற்
றலைமை சான்றமெய் யன்பினான் றனஞ்சய னென்பான்.

(இ-ள்.) விளங்காநின்ற அந்தப் பெரிய மணவூரென்னும் நகரத்திலுள்ள வணிகர் மரபில், விளங்காநின்ற பெரிய திரவியங்களை (தேடிச் சேகரிப்பது) போல, சிவார்ச்சனை முதலிய செய்கடன்க ளாகிய பலவகைப்பட்ட சிவபுண்ணியங்களைத் தேடிச் சேகரிப்பவனும், சிவபெருமானிடத்தில் முதன்மைபெற்ற உண்மைப் பத்தி யுடையவனுமாகிய தனஞ்சயனென்னும் இயற்பெயருடைய ஒருவன் (இருந்தான்).

தனஞ்சயன் என்னும் வணிகன் பொருட்செல்வத்தைப் போலவே அருட் செல்வத்தையும் அன்புபாராட்டித் தேடத்தக்கவன் என்பது கருத்து. (ந)

செல்வ மாநக ரிருந்துமேற் றிசைப்புலஞ் சென்று
மல்லல் வாணிகஞ் செய்துதன் வளம்பதி மீள்வான்
றொல்லை யேழ்பவக் கடற்கரை தோன்றுவித் தடியா
ரல்லல் தீர்ப்பவன் கடம்மா வனம்புகு மளவில்

(இ-ள்.) (பல்வகைப்பட்ட) செல்வங்களையுடைய (மணவூரென்னும்) பெரிய நகரத்திலிருந்து நீங்கி மேற்றிசையிலுள்ள நாடுகளிற்போய், ஊதிய மிகுந்த வர்த்தகஞ்செய்து தனது வளப்பம்பொருந்திய நகரத்திற்குத் திரும்புகிறவன், அடியவருக்குத் தொன்றுதொட்டு வருகின்ற ஏழு பிறப்பாகிய கடலின் கரை (ஆகிய மோக்ஷத்தைக்) காட்டுவித்து, (அப்பிறவித்) துன்பங்களையொழிக்கும் சோமசுந்தரக்கடவுளது பெரிய கடம்பவனத்திற் பிரவேசிக்குங்காலத்தில். எ-று.

பிறவியைக் கடலாக வுருவகஞ்செய்தமைக் கேற்ப, கரையினை மோக்ஷமென்று கூறினேம். (ச)

இரவி கண்மறைந் தேழ்பரியிரதமுந் தானு
முரவு நீர்க்கருங் கடலில்வீழ்ந் தொளித்தன னாக
விரவு நீண்மயங் கிருள்வயிற் றமியனாய் மெலியு
மரவு நீர்ச்சடை யண்ணலுக் கன்பினோ னங்கண்.

(இ-ள்.) சூரியன் (தன்னைப் பார்ப்போரது) கண்களுக்குப் புலப்படாமல், எழுபுரவிபூட்டிய இரதமுந் தானும் பெரியநீர்மயமாகிய கரிய(மேற்)கடலில் விழுந்து அஸ்தமனமாக, (அதனால்) வந்த கருமைமிகுந்த இருட்பொழுதில் ஒருவனாய் வருந்தாநின்ற, சர்ப்பத்தையுங் கங்கையையுந் தரித்த சடாடவியையுடைய சிவபிரானிடத்தில் அன்புடைய தனஞ்சயனென்னும் வர்த்தகன். அவ்விடத்தில், எ-று. (ரு)

வாங்கு நான்மருப் பேந்திய மதமலை யெருத்தந்
தாங்கி யாயிரங் கரங்களாற் றடவியெண் டிசையுந்
தூங்கு காரிரு ளோட்டுசெஞ் சுடரெனச் சூழ்போய்
வீங்கு காரிரு ளொதுக்கிய விமானநேர் கண்டான்.

(இ-ள்.) வளைந்த நான்கு கொம்புகளை யேந்திய மதம் பொழியும் மலைபோன்ற அஷ்டகெஜங்களது பிடரிகளாற் சுமக்கப்பட்டு ஆயிரங் கிரணங்களாலும் எட்டுத் திக்கிலு மாராய்ந்து (ஆண்டுத்) தங்கிய கரிய இருளைத் துரத்துஞ் செவந்த கிரணங்களையுடைய சூரியனைப்போல (அஷ்டதிக்கிலுஞ்) சூழ்ந்துசென்று மிகுதியாகிய கரிய இருளைப் (புறத்திற்போக) ஒதுக்கிய (இந்திர) விமானத்தை எதிரில் தரிசித்தான்

அடுத்த ணைந்தன னவிர்சுடர் விமானமீ தமர்ந்த
கடுத்த தும்பிய கண்டனைக் கண்டுதாழ்ந் துவகை
மடுத்த நெஞ்சின னங்ஙனம் வைகிருள் கழிப்பா
னெடுத்த சிந்தையி னிருந்தன னிருக்குமவ் விருள்வாய்.

(இ-ள்.) சமீபித்துச்சேர்ந்து, பிரகாசிக்கின்ற கிரணங்களையுடைய இந்திர விமானத்தின்கண் வீற்றிருக்கும் ஆலாலவிஷம் நிறைந்த கண்டத்தையுடைய சோமசுந்தரக்கடவுளைத் தரிசித்துப்பணிந்து களிப்புமிகுந்த மனமுடையவனாகி, அவ்வாறு (தரிசித்துக்கொண்டிருந்து) தங்கிய இருட்பொழுதைக் கழிக்கும்பொருட்டு உண்டாகிய எண்ணத்துடனிருந்தான். (அப்படி) இருக்கும் அந்த இருட்காலத்தில். எ-று. (எ)

சோம வாரமன் றுதலாற் சுரர்களங் கெய்தி
வாம மேகலை மலைமக டலைமகன் மலர்ந்த
காமர் சேவடி பணிந்தவன் கங்குல்போற் கருதி
யாம நான்கினு மருச்சனை யின்புறப் புரிவார்.

(இ-ள்.) அன்றையதினம் சோமவாரமாகையால், தேவர்கள் அவ்விடம் வந்து சேர்ந்து, ஒளியையுடைய மேகலாபரணமணிந்த பார்வதிநாயகராகிய சிவபெருமானது (தாமரைமலர்போல) மலர்ந்த விருப்பந்தருஞ் செவந்த திருவடிகளைப் பணிந்து, (அவ்விருளைச்) சிவராத்திரிபோல நினைத்து, நான்குசாமத்திலும் மகிழ்ச்சிமீதாரும்படி அருச்சனை செய்வாராயினர். எ-று. (அ)

அண்டர் வந்தது மருச்சனை புரிவது மனைத்துந்
தொண்ட ரன்பினுக் கெளியவன் சுரர்தொழக் கறுத்த
கண்ட னின்னருட் கண்ணினுற் கண்டன னுதலிற்
புண்ட ரம்பயி லன்புடைப் புண்ணிய வணிகன்.

(இ-ள்.) தேவர்கள் வந்ததும் (சோமசுந்தரப்பெருமானை) அருச்சனை புரிவதும் (ஆகிய இச்செய்கைகள்) எல்லாவற்றையும், அடியவரது அன்புக்கு எளியவரும், தேவர்கள் முறையிட்டு வணங்கக் கறுத்த ஸ்ரீ கண்டத்தை யுடையவருமாகிய சோமசுந்தரப்பெருமானது இனிய கிருபாநோக்கத்தால்,நெற்றியில்திரிபுண்டரமாகத்தரித்த திருவெண்ணீற்றினையும் மிகுந்த அன்பினையும் சிவபுண்ணியத்தினையுமுடைய தனஞ்சயனென்னும் அவ்வணிகன் பார்த்தனன். எ-று. (கூ)

நான மென்பனி நறும்புன லுயகன் பூசைக்
கான நல்வினை வருக்கமு மமரர்கைக் கொடுத்து
ஞான வெண்மதிச் சடையவன் கோயிலின் ஞாங்கர்
தான மர்ந்தருச் சனைசெய்வான் றங்கணு யகனை

(இ-ள்.) கஸ்தூரியையும், மெல்லிய நறுமணம்பொருந்திய பனிநீரையும், சோமசுந்தரக்கடவுளது பூசைக்குத் தகுதியாகிய நல்ல வாசனை வருக்கங்களையும் தேவர்கள்கையிற் கொடுத்து ஞானசொரூபியாகிய வெள்ளிய சந்திரனையணிந்த சடைமுடியையுடைய சோமசுந்தரபெருமானது திருக்கோயிலின் சமீபத்தில் தானுமிருந்து தங்கள் தலைவராகிய சோமசுந்தரமூர்த்தியை அருச்சனை செய்யத்தொடங்கினான் (தனஞ்சயன்) எ-று. (கo)

வள்ள றன்னைமெய் யன்பினு லருச்சிசெய் வானு
ருள்ள வல்வினை யீட்டமுங் கங்குலு மொதுங்கக்
கள்ள மில்லவன் யாரையுங் கண்டிலன் கண்டான்
றள்ள ருஞ்சுடர் விமானமேற் றனித்துறை தனியை.

(இ-ள்.) (ஆன்மார்த்த) சிவலிங்கத்தை உண்மையன்புடன் அருச்சித்தலைச் செய்த தனஞ்சயன், ஒப்பில்லாத (அநாதியாக வுள்ள) பாசத்தொகுதியும் இராப்பொழுதும் நீங்க, வஞ்சனையில்லாத மனமுடைய அவ்வணிகன் (அங்கேவந்து பெருமானைப் பூசைசெய்த தேவர்களில்) ஒருவரையுங் காணுதவனும்,நீங்காத ஒளியையுடைய விமானத்தின்பேரில் ஒபபில்லாமல் வீற்றிருக்கும் தனிமுதற்கடவுளாகிய அச்சோமசுந்தரக்கடவுளை மாத்திரம் பார்த்தான். எ-று.

பிறவிக்கு வித்தாயுள்ளது பாசமாதலாலும், அஃது அநாதி சம்பந்தமுடையதாதலாலும் (ஓர் உள்ள) என்னும் அடைகள் கொடுக்கப்பட்டன. "கள்ளமில்லவன் (அநாதியாய்) உள்ள வல்வினையீட்டமுங் கங்குலு மொதுங்க, அருச்சி செய்வானோர் யாரையுங் கண்டிலன் என அன்வயப்படுத்திப் பொருள் கூறினும் பொருந்தும்.

அருச்சி-தொழிற்பெயர். (கக)

ஆழ்ந்த சிந்தைய னதிசய மடைந்துசே வடிக்கீழ்
தாழ்ந்தெ ழுந்திரு கைகளுந் தலைமிசைக் கூப்பிச
சூழ்ந்து தன்பதிக் கேகுவா னொருதலை துணிந்து
வாழ்ந்த வன்பினுன் விடைகொடு வழிக்கொடு வந்தான்.

(இ-ள்.) (அன்பில்) அழுந்திய சிந்தையையுடைய தனஞ்சயன் அதிசயமடைந்து, (சோமசுந்தரபெருமானது) செவந்த திருவடியின்கீழ் நமஸ்கரித்து எழுந்து இரண்டுகரங்களையுஞ் சிரமேற்குவித்து, பிரதக்கணஞ்செய்து, தனது (மணவூரென்னும்) நகரத்திற்கு ஒருவகையாகத் துணிவுற்றுச்செல்ல, நீங்காத அன்பின்வாழ்வையுடைய அத்தனஞ்சயன் (சோமசுந்தரக்கடவுளிடம்) விடைபெற்றுவழிநடந்து தனது நகரத்திற்குவந்து சேர்ந்தான. எ-று.

"ஒருதலை துணிந்து" என்றது அவன் இறைவரைபபிரிந்து தன்னகரிற்குச் செல்லுங் கருத்திலனெனக் குறித்தது.

"ஆழ்ந்த அன்பினுன்" என்பதில் உள்ள ஆன் விகுதியைப்பிரித்து ஆழ்ந்தவென்பதனோடு கூட்டிக்கொள்க. (கஉ)

முக்க டம்படு களிற்றினுன் முகிறவழ் கோயில்
புக்க டங்கலர்ச் சிங்கமன் னுனெதிர் புகல்வான்
றிக்க டங்கலுங் கடந்தவெந் திகிரியாய் நெருநல்
லக்க டம்பமா வனத்திலோ ரதிசயங் கண்டேன்.

(இ-ள்.) மும்மதங்களைப்பொழியும் யானைச்சேனையையுடைய குலசேகர பாண்டியனது மேகந்தவழும் கோயிலுட் புகுந்து, பகைவர்களாகிய யானைகளுக்குச்

சிங்கம்போன்று அக் குலசேகரபாண்டியனுக்கெதிரில் நின்று சொல்லுவான். அஷ்ட திக்குகளையுஞ் செயித்த வெய்ய ஆக்கினைசக்கரத்தை யுடையவனே! அந்தப் பெரிய கடம்பவனத்தில் நேற்றைப்பொழுது ஒரு அற்புதத்தைக்கண்டேன் (அதாவது) எ-று.

யானைகள் துதிக்கைவழியும் இருகபோலவழியும் பொழியும் கரியநீரோ மும்மதமெனப்படும். பாண்டியனைச் சிங்கமெனக் கூறியதனானே அதற்கேற்ப அவனது அடங்கலரை யானைகளென்றும். திக்கு இடவாகுபெயராய் ஆண்டுள்ள பகைவரை யுணர்த்தியது.

கோ இல் = இராசக் கிரகம். (௧௩)

வல்லை வாணிகஞ் செய்துநான் வருவழி மேலைக்
கல்ல டைந்தது வெங்கதிர கங்குலும பிறப்பு
மெல்லை காணிய கண்டன னிரவிமண் டலம்போ
லல்ல டுஞ்சுடர் விமானமு மதிற்சிவக் குறியும்.

(இ-ள்.) வர்த்தகஞ் செய்து நான் (ஊரை நோக்கி) விரைந்து வருகையில் வெவ்விய கிரணங்களையுடைய சூரியன் அஸ்தமனகிரியையடைந்தான். இராப்பொழுதின் எல்லையையும் பிறப்பின் எல்லையையுங் காணும்படி சூரியமண்டலம் போல இருளையொழிக்கும் ஒளியையுடைய விமானத்தையும் அவ்விமானத்தின்பேரில் வீற்றிருந்தருளும் ஓர் சிவலிங்கமூர்த்தியையும் நான் தரிசித்தேன். எ-று.

மேலைக்கல் - மேற்றிசையிலுள்ள மலை. இது அஸ்தகிரி எனப்படும். ஈண்டுச் சூரியன் லயமடைவான்.

கங்குலும் பிறப்பும் என உடனெண்ணிக் கூறியது குணம்பற்றி யென்க.

மாவ லம்புதார் மணிமுடிக் கடவுளர் வந்தத
தேவ தேவனை யிரவெலா மருச்சனை செய்து
போவ தாயினர் யானுமப் பொன்னெடுங் கோயின்
மேவு மீசனை விடைகொடு மீண்டன னென்றான்.

(இ-ள்.) வண்டுகள் (தேனுண்டு) அறைகின்ற (கற்பகமலர்) மாலையணிந்த இரத்தினங்கள் பதித்த கிரீடங்களைத் தரித்த தேவர்கள் வந்து, தேவர்கட்குத் தேவனாகிய அந்தச் சோமசுந்தரப்பெருமானை நேற்றைய இராப்பொழுது முழுதும் அருச்சனை செய்து (விடையேற்றுச்) சென்றார்கள். யானும் அப்பொன்னாலாகிய நெடிய திருக்கோயிலில் எழுந்தருளியிருக்கும் (அப்பெருமானைப் பணிந்து) விடையேற்றுத் திரும்பினேனென்று (தனஞ்சயன்) சொன்னான். எ-று. (௧௪)

மூனு மன்பினன் மொழிந்திட முக்கணெம் பெருமான்
முளு மஞ்சலி கரங்களுந் தலையில்வைத் துள்ள
நீளு மன்புமற் புதமுமே நிரம்பநீர் ஞால
மாளு மன்னவ னிருந்தனன் போயின னருக்கன்.

(இ-ள்.) மேலிட்டோங்கும் அன்பையுடைய தனஞ்சயன் சொல்ல, கடல் புடைசூழ்ந்த உலகத்தைக் காக்குங் குலசேகரபாண்டியன் திரிநேத்திரங்களையுடைய அழகு சோமசுந்தரப்பெருமானது திருவடிகளையும், கூப்பிய கைகளையுந் தனது தலையின்மேல் வைத்து மனத்திலெழுந்தோங்கும் அன்பும் அதிசயமுமே மீக்கூர விருந்தான். (அப்பொழுது) சூரியன் அஸ்தமனமாயினான். எ-று.

அஞ்சலிகரங்கள் - வினைத்தொகை நிலைத்தொடர். (௧௫)

ஈட்டு வார்வினை யொத்தபோ திருண்மலங் கருக
வாட்டு வாரவர் சென்னிமேல் மலரடிக் கமலஞ்
சூட்டு வார்மறை கடந்ததந் தொல்லுரு விளங்கக்
காட்டு வாரொரு சித்தராய்த் தோன்றினர் கனவில்.

(இ-ள்.) (இருவினைப் போகங்களையும்) தேடுகின்றவர்களது இருவினைப் பயன்களும் (தம்முள்) ஒப்புவந்தபொழுது (ஆசிரியத் திருக்கோலந் தாங்கி) அவர்களது ஆணவமலங்கருகும்படி வாட்டி அவர்களது சிரசின்பேரில் தமது திருவடித் தாமரையைச் சூட்டும் நான்கு வேதங்களையுங் கடந்த தமது புராதனத் திருமேனி விளங்கக்காட்டுஞ் சோமசுந்தரக்கடவுள் ஒரு சித்தமூர்த்தியாய் அக்குலசேகரபாண்டியனது கனவில் தரிசனங் கொடுத்தருளினர். எ-று. (கஎ)

வடிகொள் வேலினுய் கடம்பமா வனத்தினைத் திருந்தக்
கடிகொள் காடகழ்ந் தணிநகர் காண்கென வுணர்த்தி
யடிக ளேகினுர் கவுரிய ராண்டகை கங்குல்
விடியும் வேலைகண் விழித்தனன் பரிதியும் விழித்தான்.

(இ-ள்.) வடித்தல்செய்த வேற்படையைத்தாங்கிய குலசேகரபாண்டியனே! பெரிய கடம்பவனத்தைத் திருந்தும்படி அச்சத்தைத்தருங் காட்டைவேருடன்கல்லி அழகிய நகரமாகச் செய்யக்கடவாய்என்று சோமசுந்தரக்கடவுள் திருவாய்மலர்ந்தருளி அந்தர்த்தான மாயினர். பாண்டியர் மரபில் தோன்றிய ஆண்டன்மையையுடைய அக்குலசேகரபாண்டியன் இராப்பொழுது கழியும் விடியற்காலத்தில் துயிலொழிந்தான். சூரியனும் விழித்தான். (உதயமானுன் என்றபடி.) எ-று. (கஅ)

கனவிற் றீர்ந்தவ னியதியின் கடன்முடித் தமைச்சர்
சினவிற் றீர்ந்தமா தவர்க்குந்தன் கனுத்திறஞ் செப்பி
நனவிற் கேட்டதுங் கனவினிற் கண்டது நயப்ப
வினவித் தேர்ந்துகொண் டெழுந்தனன் மேற்றிசைச் செல்வான்.

(இ-ள்.) கனவிலிருந்து நீங்கிய அக்குலசேகரபாண்டியன் (செய்யவேண்டிய) நித்திய கடன்களைச் செய்துமுடித்து, மந்திரிகளுக்கும் கோபித்தலிலிருந்து நீங்கிய பெரிய தவத்தையுடைய முனிவர்களுக்கும் தான் கண்ட சொப்பனத்தின் வகையைச் சொல்லி, நனவில் (ஓர் வணிகனுற்) கேள்வியுற்ற செய்தியும், கனவில் தான் கண்ட செய்தியும், பயன்பட (அவர்களிடத்தில்) வினவித் தெளிந்து மேற்றிசை நோக்கிச் செல்ல எழுந்தான். எ-று.

சினவு - தொழிற்பெயர். (கக)

அமைச்ச ரோடுமந் நீபமா வனம்புகுந் தம்பொன்
சமைத்த விழ்ந்தபொற் றுமரைத் தடம்படிந் தொளிவிட்
டிமைத்த லர்ந்தபொன் விமானமீ தினிதுவீற் றிருந்தோர்
தமைச்ச ரண்பணிந் தஞ்சலி தலையின்மேன் முகிழ்த்தான்.

(இ-ள்.) மந்திரிகளுடன் பெரிய அந்தக் கடம்பவனத்திற் சென்று, அழகிய பொன்னுற் சமைக்கப்பட்டு விகசித்தது போலுமுள்ள பொற்றுமரைத் தீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்து, ஒளிவீசி விளங்கிப்பரந்த பொன்னுலாகிய (இந்திர) விமானத்தின் பேரில் இனிதாக எழுந்தருளியிருக்குஞ் சோமசுந்தரப் பெருமானது திருவடிகளைப் பணிந்து அஞ்சலியாகத் தனது கரங்களைச் சிரசின்பேரிற் கூப்பினுன். எ-று. (உ0)

அன்புபின் றள்ள முன்புவந் தருட்கணீர்த் தேக
வென்பு நெக்கிட வேகிவீழ்ந் திணையடிக் கமலம்
பொன்பு னைந்ததார் மௌலியிற் புனைந்தெழுந் திறைவன்
முன்பு நின்றுசொற் பதங்களாற் றேத்திர மொழிவான்.

(இ-ள்.) அன்பானது பின்னேயிருந்து தள்ளிச் செலுத்தவும், (சோமசுந்தரக்கடவுளது) திருவருட் பார்வையானது முன்னேநின்று இழுத்துச்செல்லவும், எலும்புகள் குழைந்துருகவும், குலசேகரபாண்டியன் (சோமசுந்தரப் பெருமானைச் சமீபித்துச்) சென்று சாஷ்டாங்கமாகப் பணிந்து, இரண்டு திருவடித் தாமரைகளையும் பொன்னலரிந்து செய்த மாலையையணிந்த தனது மகுடத்திற் சூடியெழுந்து, திருமுன்னே நின்று வாக்கியரூபங்களாகத் தோத்திரங் கூறுகின்றான். எ-று.

"அவனருளாலே யவன்றாள் வணங்கி" என்னும் ஆசாரிய வாக்கியத்தின்படி "அருட்கணீர்த்தேக" என்றது சிவபெருமானது திருவடியை வணங்குவது அவனது திருவருளே யாமென வுணர்த்தியது. அன்றியும் "அன்பு பின்றள்ள" எனவும், "முன்புவந்தருட்கணீர்த்தேக" எனவுங் கூறப்பட்டமையின், குலசேகரபாண்டியனது விரைந்து செல்கைவிளங்கிக் கிடந்தவாறு முணர்க. சொல்-பதம் - ஒருபொருட் பன்மொழி. அல்லது சொற்பத மெனக்கொண்டு புகழ் மொழியெனப் பொருள்கூறினும் பொருந்தும்.

இச்செய்யுளில் "அருட்கணீர்த்தேக" என்பதை "அருட்கணீர் தேங்க" எனவும் பாடங் கூறுவர். "அன்பு பின் றள்ள" என்றதற்கேற்க "முன்பு வந்து அருட்கண் ணீர்த்தேக" எனவழங்குதலே சிறப்புடையதுபோலும். (௨௧)

சரண மங்கையோர் பங்குறை சங்கர சரணஞ்
சரண மங்கல மாகிய தனிமுதல் சரணஞ்
சரண மந்திர வடிவமாஞ் சதாசிவ சரணஞ்
சரண மும்பர்க் ணாயக பசுபதி சரணம்.

(இ-ள்.) உமாதேவியாரை ஒருபாகத்தில் வீற்றிருக்கப்பெற்ற சங்கரா! சரணம். சரணம். மங்கலமே ஓர்திருவுருவாகக்கொண்ட தனிமுதலே! சரணம். சரணம். மந்திரரூபியாக விளங்குஞ் சதாசிவமூர்த்தியே! சரணம் சரணம். தெய்வநாயகா! சரணம். பிரமன்முதலிய பசுக்கட்குப் பதியாகவுள்ளவனே! சரணம். எ-று.

சரணம்=அடைக்கலம்.

தான்போகியாயிருந்து ஆன்மாக்கட்குப் போகந்தந்தருளி, பின்னர் முத்தியாகிய சுகத்தைத்தருவோனாதலால் "மங்கையோர் பங்குறை சங்கர" எனவும் "—மற்றைத்தெய்வங்கள் - வேதனைப்படுமிறக்கும் பிறக்குமால் வினையுஞ்செய்யும் - ஆதலாலிவையிலாதானறிந்தருள் செய்வனன்றே" என்றசாத்திரப்படி தனக்கோர் துன்பங்கேமுதலியனவின்றி விளங்குகின்றவனாதலின் "மங்கலமாகிய" எனவும், இரணியகற்பபிரமாதி பலகோடியுயிர்கட்குந் தானே முன்னுள்ளவனாதலால் "தனிமுதல்" எனவும், சிவபெருமான பஞ்சப்பிரமமந்திரத்தைத் தமக்குரியவடிவமாகக் கொண்டருளின்படியால் "மந்திரவடிவமாம்" என்றும்,

[illegible]
[illegible]
[illegible]

[illegible]
[illegible]
[illegible]
[illegible]
[illegible]
[illegible]

என்றபடியே படிகநிறம் சடைமுடி ஐந்து திருமுகம் பத்துகரங்கள் ஒரு தேகம் இரண்டு திருவடிகளுடன் வலக்கரத்து இச்சாஞானக்கிரியையென்னும் மூவிலைச்சூலமும், பராசத்திரூபமான மழுவும், கர்த்துருபாவமானகட்வங்கமும், வாளும், பீஜாபூரகமும், வஜ்ரமும், ஜனனபயத்தைப்போக்குவதான அபயமும், இடக்கரத்து ரித்திகுணமாகியநாகமும், தூலசூக்கும பூதங்களைநடத்தும் மாயாரூபமாகிய பாசமும், குணமாகிய நீலோற்பலமும், அங்குசமும், சுத்தாசுத்த அத்துவாவைப் பிரவர்த்திக்குங் குணமான தமருகமும், போகத்தைத்தரும் வரதமும், நாதகுணமாகிய மணியும், சங்காரகுணமாகியஅக்கினியும், திரோதாயியென்னும பரிவட்டமும், அருளாகிய சுகந்தமும், பரையாகிய மாலையும் அநுக்கிரகாங்குரமான சிறுநகையும்பொருந்திக் கன்மசாதாக்கியத்திருவுருவாக வீற்றிருத்தலின் "சதாசிவ" என்றும், பலகோடி தேவர்கட்குந் தலைவனுக விளங்குதலின் "உம்பர்கணுயக பசுபதி" என்றும், இத்தகைய தலைவனைச் சரண்புகுதலின் யாதொரு குறைபாடுமில்லையென்னுந் துணிவுபற்றி முன்னும் பின்னும் இடையும் "சரணம்" எனவுங்கூறினர். (௨௨)

ஆழி ஞாலமே லாசையு மமரர்வான் பதமேல்
வீழு மாசையும் வெறுத்தவர்க் கன்றிமண் ணுண்டு
பீழை மூழ்கிவா னரகொடு பிணிபடச் சுழலு
மேழை யேங்களுக் காவதோ வெந்தைநின் கருணை.

(இ-ள்.) கடல்சூழ்ந்த பூலோக போக விருப்பத்தையும், தேவர்கள்வாழுஞ் சுவர்க்கலோகத்திலுள்ள விரும்பத்தக்க போக விருப்பத்தையும் அருவருப்பெய்தித் தள்ளினவர்களுக்கல்லாமல், மண்ணுலகத்தை அரசுசெய்து துன்பத்திலழுந்திச் சுவர்க்கநரகமென்னும் இரண்டிடத்துங் கட்டுப்பட்டு (போக்கு வரவாக)ச் சுழன்று திரியும் ஏழையாகிய அடியேங்களுக்கு எனது தந்தையாகிய சோமசுந்தரப்பெருமானே! தேவரீரது திருவருள் எளிதாகக்கிடைக்கத்தக்கதோ ? (அன்று) எ-று. (௨௩)

சூளை தாமறைச் சென்னியுந் தொடத்தொட நீண்ட
தாள நீயுனக் கன்பில மாயினு நீயே
மூள வன்புதந் தெங்குடி முழுவதும் பணிகொள்
டாள வேகொலிக் கானகத் தமர்ந்தனை யென்று.

(இ-ள்.) (எட்டுவேனென்னும்) பிரதிக்ஞையுடையதாய் வேதத்தின் உச்சியுந் தொடுந்தோறும் (அப்பாற்பட்டு) நீண்டநீட்சியையுடையீர் தேவரீர்! தேவரீரிடத்தில் யாங்கள் அன்பில்லோமாறுலும், தேவரீரோ அன்பு மீளூரக்கொடுத்தருளி, எமது குடிமுழுவதையும் ஏவல்கொண்டு ஆளும்படிக்கா இக்கடப்பங்காட்டி லெழுந்தருளினீர்? என்றுகூறி. எ-று.

இதுமுத லிரண்டுபாடல்கள் குளகம். (௨௪)

சீர்ந்த வன்பிரு கண்வழிச் சொரிவபோற் சொரிந்து
பரந்த வாரொடு சிவானந்தப் பரவையுட் படிந்து
வரந்த வாதமெய் யன்பினால் வலங்கொடு புறம்போந்
தரந்தை தீர்ந்தவ னொருசிறை யமைச்சரோ டிருந்தான்.

(இ-ள்.) ஊற்றெடுக்கும் அன்பானது இருகண்களின்வழி சிந்துவபோல, ஆனந்தபாஷ்பஞ்சிந்தி (அதனால்) பரவியவெள்ளத்துடன் சிவானந்தமாகிய கடலிற் படிந்து, நன்மையினின்றகலாத உண்மையாகியஅன்புடன்பிரதக்கணஞ்செய்து (ஆங்கிருந்து) வெளிவந்து மனக்கவலையொழிந்து அவ்விடத்தில் ஒருபக்கத்தில் மந்திரிமார்களுடன் குலசேகர பாண்டியன் (ஆலோசித்துக்கொண்டு) இருந்தான். எ-று.

"மந்திரந்தூது செலவிகல்வென்றி" என்றபடி இது பெருங்காப்பியங்களு ளொன்றாகலின் மந்திரத்தொழில்தோன்ற "அமைச்சரோடிருந்தான்" என்றார். (உ௫)

ஆய வேலையின் மன்னவ னாணையா லமைச்சர்
மேய வேவலர் துறைதுறை மேவினர் விடுப்பப்
பாய வேலையி னார்த்தனர் வழிக்கொடு படர்ந்தார்
சேய காடெறிந் தணிநகர் செய்தொழின் மாக்கள்.

(இ-ள்.) அவ்வாறாகிய சமயத்தில், குலசேகரபாண்டியனது கட்டளையால் மந்திரிகள் தமதருகிருந்த ஏவலாட்களை இடங்கடோறும்போய் (தொழில்செய்வோரைக்கொண்டுவர) அனுப்ப, பெரிய காட்டைவெட்டி அழகிய நகரமாகச்செய்யுந் தொழிலையுடைய மாந்தர்கள் (அரசன் ஏவலைமேற்கொண்டு) பரந்த சமுத்திரம்போல இரைந்து (காடுதிருத்த) வழிசெய்துகொண்டு சென்றார்கள். எ-று. (உ௬)

வட்ட வாய்மதிப் பிளவின்வெள் வாய்க்குய நவிய
மிட்ட தோளினர் யாப்புடைக் கச்சின ரிரும்பின்
விட்ட காரொளி மெய்யினர் விசிகொள்வார் வன்றோற்
றொட்ட காலினர் வனமெறி தொழிலின ரானார்.

(இ-ள்.) இரும்பினைப்போலுங் கரிய ஒளிவீசுஞ் சரீரத்தையுடைய (காடுவெட்டுந்) தொழின்மக்கள் வட்டவடிவமாகிய சந்திரனது பிளவைப்போன்ற வெள்ளியவாயையுடைய கொடுவாளையும் கோடரியையும்வைத்த தோளினையுடையராகியும், அரையிற்கட்டிய கச்சினையுடையராகியும், வாராற்கட்டிய வலியசெருப்புக்காலினையுடையராகியும் காடுவெட்டுந்தொழிலை மேற்கொண்டவரானார்கள். எ-று.

குயம் - கொடுவாள். நவியம்-கோடரி. (உ௭)

மறியு மோதைவண் டரற்றிட மரந்தலை பனிப்ப
வெறியு மோதையு மெறிபவ ரோதையு மிரங்கி
முறியு மோதையு முறிந்துவீ ழோதையு முகில்வாய்ச்
செறியு மோதையுங் கீழ்ப்பட மேற்படச் செறியும்.

(இ-ள்.) (அவர்கள்வெட்டுகையில், கிளைகள்) மடங்கிவிழும் ஓசையும், வண்டுகள் ஒலிக்கவும் மரங்கள் தலைநடுங்கவும் வெட்டுகின்ற ஓசையும், வெட்டுகின்றவரோசையும், சத்தித்து (மரங்கள்) முறிகின்ற ஓசையும், முறிந்துகீழேவிழும் ஓசையும் (ஆகிய இவையெல்லாம்) மேகத்தினிடத்துப்பொருந்திய ஓசையுங் கீழ்ப்படும்படிமேற்பட்டொலிக்கும். எ-று.

மறியு மோதை என்பத னிறுதியில் ஏண்ணும்மை விகாரத்தால் தொக்கது.

ஒளிறு தாதொடு போதுசெந் தேனுக வொலித்து
வெளிறில் வன்மரஞ் சினையிற வீழ்வசெங் களத்துப்
பிளிறு வாயதாய் நிணத்தொடு குருதிநீர் பெருகக்
களிறு கோடிற மாய்ந்துவீழ் காட்சிய வனைய.

(இ-ள்.) சேகுபற்றிய வன்மரங்கள் பிரகாசிக்கின்ற மகரந்தப்பொடியுடன் மலர்களுஞ் செந்தேனுஞ் சிந்தும்படி ஒலித்துக் கொம்புகள் முறியும்படிவிழுஞ் செய்கைகள், யானைகள் போர்க்களத்தில் சத்திக்கும்வாயினையுடையனவாகி நிணத்துடன் உதிர நீர்பெருக்கெடுக்க, தந்தங்கள்முறிய இறந்துவீழுந் தோற்றங்களை யொத்திருந்தன. எ-று.

வன்மரம் யானையாகவும், தாதுநிணமாகவும், செந்தேன் குருதியாகவும், சினைகொம்பாகவுங் கூட்டிக்கொள்க. (உகூ)

பூவ டைந்தவண் டினமயற் புறவொடும் பழனக்
காவ டைந்தன பறவைவான் கற்பக மடைந்த
கோவ டைந்திட வொதுங்குறுங் குறும்புபோற் செறிந்து
மாவ டைந்தன மாடுள வரைகளுங் காடும்.

(இ-ள்.) மலர்களில்மொய்த்திருக்கும் வண்டுகூட்டங்கள் அயற்புறத்துள்ள முல்லை நிலங்களிலும், மருத நிலங்களிலுள்ள சோலைகளிலுஞ்சென்று சேர்ந்தன. பறவைகள் தேவலோகத்திலுள்ள கற்பகச்சோலையிற்சென்று சேர்ந்தன. பேரரசர்கள்வர (தமது சிற்றூரைவிட்டோடிவிடும்) குறுநிலமன்னர்போன்று, மிருகங்கள் கூட்டங் கூட்டமாகநெருங்கிச் சமீபத்திலுள்ள மலைகளிலுங் காடுகளிலும் அடைந்தன. எ-று.

கா வென்பதனிறுதியில் எண்ணும்மை விகாரத்தால் தொக்கது. ஒதுங் குறும்-ஒருசொல். (௩0)

இருணி ரம்பிய வனமெலா மெறிந்துமெய் யுணர்ந்தோர்
தெருணி றைந்தசிந் தையின்வெளி செய்துபல் லுயிர்க்கு
மருணி றைந்துபற் றறுத்தர னடிநிழ லடைந்த
கருணை யன்பர்தம் பிறப்பென வேரொடுங் களைந்தார்.

(இ-ள்.) (நெருக்கத்தினால்) இருள் நிறைந்த காட்டையெல்லாம் வெட்டி, உண்மை ஞானத்தையுணர்ந்த பெரியோரது கலங்காதமனம்போல வெளிசெய்து, பல ஆன்மாக்களிடத்துங் கிருபைவைத்து (இருவகைப்) பற்றையுமறுத்துச் சிவபெருமானது திருவடியாகிய நிழலையடைந்த திருவருள் வசத்தராகிய அடியார் தமது பிறவியை (வேரோடுங்களைதல்)போல, (தொழில்செய்வோர்) காட்டை வேரோடுங்களைந் தார்கள். எ-று.

இருவகைப்பற்று—அகப்பற்று-புறப்பற்று என்பன.

பிறப்பு வீடுகளையும் அவற்றின் காரணங்களையும் விபரீதமன்றி உண்மையாக அறிந்தமேலோரை "மெய்யுணர்ந்தோர்" என்றார். (௩க)

களைந்து நீணிலந் திருத்திச்செந் நெறிபடக் கண்டு
வளைந்து நன்னக ரெடுப்பதெவ் வாறெனத் தேறல்
விளைந்து தாதுகு தார்முடி வேந்தன்மந் திரரோ
டளைந்த ளாவிச் சிந்தையோ டிருந்தன னங்கண்.

(இ-ள்.) தேன் ஊற்றெடுத்து மகரந்தப்பொடியைச்சிந்தும் வேப்பமலர் மாலைதரித்த கிரீடத்தையுடைய குலசேகரபாண்டியன், (காட்டை) வெட்டி நெடிய

நிலத்தை ஒழுங்குபடத்திருத்திச் செம்மையாகிய வழியுண்டாகச்செய்து, வளைவுபட நல்ல நகரமுண்டாக்குதல் எவ்விதமென்று மந்திரிகளோடு கலந்து ஆலோசனைசெய்யும் மனத்தோடிருந்தான். அப்பொழுது. எ-று. (௬௨)

மெய்ய ரன்புதோய் சேவடி வியனிலந் தீண்டப்
பொய்ய கன்றவெண் ணீறணி மேனியர் பூதிப்
பையர் நள்ளிருட் கனவிலவ தருளிய படியே
மையர் வல்லைவந் தருளினா ரரசுளங் களிப்ப.

(இ-ள்.) சோமசுந்தரக்கடவுள் உண்மையாகிய அடியாரது அன்பிற்றோயுஞ் செவந்த திருவடிகளைப பெரிய நிலவுலகமானது சூடும்படி, உண்மையாகிய திருவெண்ணீற்றையணிந்த திருமேனியையுடையவராகியும் திருநீற்றுப்பையையுடையவராகியும் (நேற்றைய) நடுராத்திரியிற் சொபபனத்தி லெழுந்தருளிய வகையே குலசேகரபாண்டியனது மனங்களிகூரும்படி விரைந்து (அப்பொழுதுசாக்கிரத்திலும்) எழுந்தருளினார். எ-று. (௬௩)

கனவி லும்பெருங் கடவுளர் காண்பதற் கரியார்
நனவி லும்வெளி வந்தவர் தமையெதிர் நண்ணி
நினைவி னின்றதா ளிறைஞ்சிநேர் நின்றுநல் வரவு
வினவி யாதனங் கொடுத்தனன் மெய்யுணர் வேந்தன்.

(இ-ள்.) மெய்யுணர்ச்சியிற்றலைபபட்ட குலசேகரபாண்டியன் (திருமால் பிரமன்முதலிய) பெருந்தேவர்கள் கனவிலுங் காணுதற்கரியராகவுள்ள சிவபெருமான்,நனவிலும்தான்தரிசிக்கும்படி சித்தமூர்த்தியாய்வெளிவந்தவரை எதிர்கொண்டு, (தனது) நினைப்பில் விடாதுநின்ற திருவடிகளை நமஸ்கரித்து நேரே நின்று (அவரது) நல்லவருகையை வினவி (வீற்றிருக்கும்படி) ஒரு ஆதனங்கொடுத்தான். எ-று: (௬௪)

தென்ன ரன்பினி லகப்படு சித்தர்தா முன்னர்ச
சொன்ன வாதிநூல் வழிவரு சார்புநூற் றொடர்பா
னன்ன ராலய மண்டபங் கோபுர நகர
மின்ன வாறுசெய் யெனவகுத் திம்மென மறைந்தார்.

(இ-ள்.) பாண்டி மன்னரது அன்பின் வலையிலகப்பட்ட சித்தமூர்த்திகள் தாம் முதலிற்றிருவாய்மலர்ந்தருளிய முதனூலும், (அதன்வழிவந்த) வழிநூலும், (இவ்விரண்டையும் ஒருபுடைதழுவுஞ்) சார்புநூலும் ஆகிய (இவற்றுட்கூறிய) முறைபபடி, நல்ல ஆலயமும் மண்டபமும் கோபுரமும் நகரமும் இவ்வகையாகச்செய்யக்கடவாயென்று வகுத்துக்கூறி விரைந்து அந்தர்த்தானமாயினர். எ-று.

"முதல்வழி சார்பென நூன்மூன் றாகும்" அவற்றுள்
வினையி னீங்கி விளங்கிய வறிவின்
முனைவன் கண்டது முதனூ லாகும்"—
"முன்னோர் நூலின் முடிபொருங் கொத்துப்
பின்னோன் வேண்டும் விகற்பங் கூறி
யழியா மரபினது வழிநூ லாகும்"—
"இருவர் நூற்கு மொருசிறை தொடங்கித்
திரிபுவே றுடையது புடைநூ லாகும்"— எனவருவனவற்றானறிக.

ஆதிநூல் - ஆகமமெனவும், வழிநூல் - சிற்பமெனவும், சார்புநூல் - ஏனையவை யெனவுங்கொள்க. (௬௫)

மறைந்தெ வற்றினு நிறைந்தவர் மலரடிக் கன்பு
நிறைந்த நெஞ்சுடைப் பஞ்சவ னிலத்துமேம் பட்டுச்
சிறந்த சிற்ப நூற் புலவராற் சிவபரஞ் சுடர்வந்
தறைந்து வைத்தவா றாலய மணிநகர் காண்பான்.

(இ-ள்.) எல்லாப்பொருள்களிலும் மறைந்து நிறைந்த சோமசுந்தரப்பெருமானது தாமரைமலர்போன்ற திருவடியில் அன்பு நிறைந்த மனத்தையுடைய குலசேகரபாண்டியன், நிலவலகத்தில் மேம்பட்டுச் சிறந்த சிற்பநூற்புலவரால், சோமசுந்தரக்கடவுள் (சித்தமூர்த்தியாய்) எழுந்தருளித் திருவாய்மலர்ந்து அறிவித்தவகையே ஆலயமும் அழகிய நகரமுங் காணத்தொடங்கினான். எ-று.

"மறைந் தெவற்றினு நிறைந்தவர்—என்பதை.

திருநாவுக்கரசுசுவாமிகள் தேவாரம்.

"விறகிற் றீயினற் பாலிற்படு நெய்போல்
மறைய நின்றுளன் மாமணிச் சோதியான்
உறவு கோனட் டுணர்வு கயிற்றினான்
முறுக வாட்டிக் கடையமுன் னிற்குமே—என்பதனானறிக.

'ஆலயமணிநகர்' எனக்கூறியதனானே, மேற்செய்யுளிற்கூறியபடி மண்டபகோபுரங்களும் உடன்கொள்க. (௬௬)

எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

மறைபயில் பதும மண்டப மருத்த மண்டப மழைநுழை வளைவாய்ப்
பிறைபயில் சிகைமா மண்டப மறுகாற் பீடிகை திசையெலாம் பிளக்கும்
பறைபயி னிருத்த மண்டபம் விழாக்கொள் பன்மணி மண்டபம் வேள்வித்
துறைபயில் சாலை திருமடைப் பள்ளி சூழுறை தேவாதங் கோயில்.

(இ-ள்.) வேதபாராயணஞ்செய்யும் பதுமமண்டபமும், அர்த்தமண்டபமும், மேகத்தில் நுழையும் வளைந்தமுகத்தையுடைய பிறைச்சந்திரன் தவழுஞ் சிகரம்பொருந்திய மகாமண்டபமும், அறுகாற்பீடிகையும, அட்டதிக்குகளும் பிளக்கும் (ஓசையையுடைய) வாச்சியங்கள் ஒலிக்கும் நிருத்தமண்டபமும், (சோமசுந்தரப்பெருமான்) திருவிழாக் கோலங்கொண்டருளும் பல ரத்தினங்கள் பதித்தமண்டபமும், யாகசாலைகளும், திருமடைப்பள்ளியும், ஆலயத்தைச்சூழ்ந்து விளங்கும் பரிவார தேவர்கள் கோயில்களும். எ-று.

இது முதலிரண்டு பாடல்கள் ஒருதொடர். (௬௭)

வலவயி னிமய வல்லிபொற் கோயின் மாளிகை யடுக்கிய மதில்வா
னிலவிய கொடிய நெடியசூ ளிகைவா னிலாவிரி தவளமா ளிகைமீன்
குலவிய குடுமிக் குன்றிவர் செம்பொற் கோபுரங் கொண்டல்கண் படுக்குஞ்
சுலவெயி லகழிக் கிடங்குகம் மியநூற் றொல்வரம் பெல்லைகண் டமைத்தான்.

(இ-ள்.) (சோமசுந்தரக்கடவுளது) வலப்பாரிசத்தில் மீனாக்ஷியம்மை வீற்றிருக்கும் பொன்னாலாகிய திருக்கோயிலும், (அதனைச்சூழ) திருமாளிகைப்பத்தியையுடைய திருமதிலும், ஆகாயமளாவிய கொடிகளையும் நெடிய இறப்புகளையுமுடைய தாவள்யமான சந்திரிகைவிரிக்குந் தவளமாளிகைகளும், நக்ஷத்திரங்கள் சஞ்சரிக்குஞ் சிகரத்தையுடைய மலைபோன்ற செம்பொன்னாலாகிய திருக்கோபுரங்களும், மேகங்கள் நித்திரைசெய்யுஞ் சுற்றியமதில்களும், அகழிக்கிடங்குமாகிய இவற்றைச்

சிற்பநூலிலுள்ள பழைமையாகிய வரம்பினையாராய்ந்து செய்வித்தான. (குலசேகர பாண்டியன்.) எ-று.

சூளிகை = இறப்பு. வரம்பு - எல்லை—ஒருபொருட்பன்மொழி.

மதில்கள் இரண்டனுள் முன்னது ஆலயத்தைச் சூழ்ந்ததெனவும், பின்னது நகரத்தைச் சூழ்ந்ததெனவுங் கொள்க. (கஅ)

சித்திர நிரைத்த பீடிகை மறுகு தெற்றிகள் வாணிலாத் தெளிக்கு
நித்தில நிரைத்த விழாவரு வீதி நிழன்மணிச சாளர வொழுக்கப்
பித்திகை மாடப் பெருந்தெருக் கவலை பீடுசால் சதுக்கநற பொதியில்
பத்தியிற் குயின்ற மன்றுசெய் குன்று பருமணி மேடையா டரங்கு.

(இ-ள்.) சித்திரங்களை வரிசைபடச்செய்த கடைத்தெருக்களும், சித்திர கூடங்களும், ஒள்ளியசந்திரிகையைவீசும் முத்துகளைவரிசைபடத் தொகுத்த திரு விழாவரும் வீதிகளும், ஒளிவீசும் இரத்தினங்கள் பதித்த சாளரவரிகைள் பொருந்திய சுவர்த்தலங்களையுடைய வீடுகள் நெருங்கிய பெரிய வீதிகளும், கவலைகளும், பெருமையமைந்த சதுக்கங்களும், நல்ல அம்பலங்களும், வரிசைபடச்செய்த சபைகளும், செய்குன்றமும், பருத்தமணிகளிழைதத மேடைகளும், (ஆடும்) நாடக சாலைகளும்.

இதுமுதலிரண்டு பாடல்கள் ஒருதொடர்.

பீடிகைமறுகு - கடைவீதி. தெற்றி - சித்திரக்கூடம். சாளரம் - சன்னல். பித்திகை - சுவர். கவலை - முத்தெருக்கள் கூடுமிடம். சதுக்கம் - நாற்றெருக்கள் கூடுமிடம். (கக.)

அருந்தவ ரிருக்கை யநதண ருறையு ளரசரா வணஙகுல வணிகப்
பெருந்தெரு நலவே ளாளர்பே ரறஞ்சால் பெருங்குடி யேனைய கரிதேர்
திருந்திய பரிமா நிலைக்களங் கழகந தீஞ்சுவை யாறுநான் குண்டி
யிரந்தவர்க் கருத்து நல்லறச சாலை யினையன பிறவுநன் கமைத்தான்.

(இ-ள்.) அருந்தவஞ்செய்யும் முனிவர்கள் வசிக்குந்திருமடங்களும், வேதியர்வாழும் வீடுகளும், இராஜவீதிகளும், சிறந்த வைசியர்வசிக்கும் பெரியதெருக்களும், பெரிய தருமமமைந்த நல்லவேளாளராகிய பெரியகுடிகளின் வீதிகளும், இவை நீங்கிய யானைகளும் தேர்களும் நல்ல சுழிகளையுடைய குதிரைகளுமாகிய இவைகளிருக்குங்கூடங்களும், கல்விச்சாலைகளும், இனிய அறுசுவையமைந்த நான்குணவுகளையும் இரப்போர்க்கு ஊட்டும் நல்ல அறச்சாலையும் (ஆகிய) இவை போல்வன பிறவற்றையும் நன்றாகச்செய்வித்தான். எ-று.

அறுசுவை—கார்பபு - உவர்ப்பு - துவர்ப்பு - புளிபபு - இனிப்பு - கைப்பு என்பனவாம்.

நான்குண்டி—உண்ணல் - தின்னல் - நக்கல் - பருகல். இவற்றுள் சோறு முதலியன உண்ணலெனவும், கறி முதலியன தின்னலெனவும், தேன் முதலியன நக்கலெனவும், நீர்முதலியன பருகலெனவுங் கொள்க.

ஆவணம் - தெரு. கழகம் - கல்விச்சாலை. (உ0)

துணிகயங் கீழ்நீர்க் கூவல்பூ வோடை தொடுகுளம் பொய்கைநந் தவனந்
திணிமலர்ச் சோலை துடவையுய் யானந் திருநகர்க் கணிபெறச் செய்து
மணிமலர்த் தாரோன் மாளிகை தனக்கம் மாநகர் வடகுண பாற்கண்
டணிநகர் சாந்தி செய்வது குறித்தா னண்ணலா ரறிந்திது செய்வார்.

(இ-ள்.) வெட்டியகயங்களும், தாழிடத்தில் நீரையுடைய கிணறுகளும், மலர்கள் நெருங்கிய ஓடைகளும், தோண்டப்பட்ட குளங்களும், பொய்கைகளும், நந்தனவனங்களும், மலர்கள்நெருங்கிய சோலைகளும், பூந்தோட்டங்களும், (ஆகிய இவற்றை) செல்வமிகுந்தநகரத்துக்கு அலங்காரமாகச்செய்து, அழகிய (வேப்ப) மலராற்றொடுக்கப்பட்ட மாலையையணிந்த குலசேகரபாண்டியன் தனக்கு மாளிகையையும் அந்தப்பெரியநகரத்தின் ஈசானதிசையிற்செய்வித்து, அழகிய அந்நகரத்திற்குச் சாந்திசெய்ய நினைததான். சோமசுந்தரக்கடவுள் (அதனை) அறிந்து இவ்வாறு செய்யத்தொடங்கினர். எ-று. (௭௪)

பொன்மய மான சடைமதிக் கலையின் புத்தமு துகுத்தன ரதுபோய்ச்
சின்மய மான தம்மடி யடைந்தாரச சிவமய மாக்கிய செயல்போற்
றன்மய மாக்கி யந்நகர் முழுதுஞ் சாந்திசெய் ததுவது மதுர
நன்மய மான தன்மையான் மதுரா நகரென வுரைததனர் நாமம்.

(இ-ள்.) பொன்மயமாகிய சடையிலுள்ள சந்திரகலையின் புதிய அமுதத்தைச்சிந்தினர். அவ்வமுதமானதுபோய், ஞானமயமாகிய தமது திருவடிகள் தம்மையடைந்தவரைச் சிவமயமாக்குஞ் செய்கைபோல, அந்த நகர்முழுவதுந் தன்மயமாகச் செய்து சாந்திசெய்தது. அந்நகரம் (அதனால்) மதுரமயமாகியகாரணத்தினலே (அது முதல்) அந்த நகரத்திற்குநாமம் மதுராநகரமென்று (யாவருஞ்) சொன்னர்கள். எ-று.

கீட்டிசைக் கரிய சாத்தனுந் தென்சார் கீற்றுவெண் பிறைநுதற் களிற்றுக்
கோட்டிளங் களபக் கொங்கையன் னையருங் குடவயின் மதுமடை யுடைக்குந்
தோட்டிளந் தண்ண துழாயணி மௌலித் தோன்றலும வடவயிற் றொடு
நீட்டிரும போநதி னிமிர்குழ லெண்டோ ளீலியுங் காவலா நிறுவி.

(இ-ள்.) கீழ்த்திசையிலே கருநிறம்பொருந்திய ஐயனரையும், தென்றிசையிலே தாவள்யமாகிய அாத்தசந்திரன்போன்ற நெற்றியையும் யானைக்கொம்பு போன்ற இளமைதங்கிய கலவைச்சாந்தணிந்த குயங்களையுமுடைய சத்தமாதரையும், மேற்றிசையிலே தேனுைது மடையெடுத்துப்பாயும் இதழலர்ந்த முதிராததட்பமாகிய துளவமாலையையணிந்த கிரீடத்தையுடைய விண்டுவையும், வடதிசையிலே நெடிய பெரிய பனையினது மலர்களின் இதழவிழ்ந்த கூந்தலையும் எட்டுத்தோள்களையுமுடைய காளிகாதேவியையுங் காவலாகநிறுத்தி. எ-று.

இதுமுலிரண்டு செய்யுள்கள் குளகம்.

நீண்ட வென்பது நீட்டவெனவலித்தல் விகாரமுற்று அதன் அகரவீறு தொக்கது.

சாத்தன் - ஐயனா அல்லது அரிகரபுத்திரர். இதன்வரலாறு.

திருமால் சிவாக்கினைபெற்றுத் திருப்பாற்கடலைக்கடைய, அதிற்றேன்றிய அமிர்தத்தைத் தேவர்கட்குமாத்திரங் கொடுக்கக்கருதி, பெண்வடிவாகி அசுரர்கள் பக்கலிற்சென்று "உங்கட்கு யான்வேண்டுமோ அமுதம்வேண்டுமோ" என்றுமயக்கி, ஒருவரோடொருவரைச் சண்டைசெய்யும்படிசெய்து அவர்கள் யாவரையுந்தொலைத்து சிவபெருமான் பக்கலிற்சென்று பணிய, சிவபெருமான் தமது சத்தியாகிய திருமாலைப்புணர்ந்தனர், அப்பொழுது அரி அர புத்திரராகிய ஐயனர் பிறந்தனர் என்பது இதனை.

கந்தபுராணம் - மகாசாததாப்படலம்.

"இந்த வண்ண மிருக்க முராரியு-மந்திவண்ணத் தமலனுமாகியே
முந்து கூடி முயங்கிய வெல்லையில்-வந்த னன்னெமை வாழ்விக்கு மையனே.
மைக்க ருங்கடன் மேனியும் வானுலாஞ்-செக்கர் வேணியுஞ் செண்டுறு கையுமா
யுக்கி ரத்துடனேர்மகன் சேர்தலு-முக்க ணெந்தை முயக்கினை நீங்கினேன்" எனவும்,

பாகவதபுராணம் - கூர்மபடலம்.

"தூயயோ கியர்க்கு மெட்டாச் சோதியோர் தைய லாகி
மாயையை யியற்றிப பந்து மண்மிசை யெழிலான் மோத
வேயெனு முணரிற் றேன்ற விருநகிற் றுகிலை நீக்கப்
பேயினஞ் சூழும் பேதை பாகன்றான் பித்த னானான்.

வாசமார் வசந்த மெய்தி மங்கைதன கொங்கை மீதிற்
றூசினை நீக்க லோடுஞ் சுசியுறு விரக மெய்தத்
தேசுறு முமையுங் கங்கை மங்கையும் வெள்கச் சேர்ந்தே
யீசனம் பாங்கு வீழ வெழின்மினைத் தழுவ வந்தான்

தழுவிய புராரி கையிற் சார்குவார் போல வங்கண்
நழுவிய வனிதை யோடே நாணமு மகல வெஃகச்
சுழியெழு மாறு போல வீரியஞ் சுரந்து மாலின்
ஒழுகிட வவனின் மாசாத் தன்கடி துதைய மானன்"—எனவும், வருவன வற்றானறிக.

அன்னையர் - சத்தமாதர்கள். அவர்—அபிராமி - மாகேசுவரி - கௌமாரி - நாராயணி - வராகி - இந்திராணி - காளி எனப்படுவோர். (சங)

கைவரை யெருத்திற் கனவரை கிடந்த காட்சியிற் பொலிந்தொளிர் கோயின்
மைவரை மிடற்று மதுரைநா யகனை மரபுளி யருச்சனை புரிவான்
பொய்வரை மறையா கமநெறி பொழுகும் புண்ணிய முனிவரை யாதி
சைவரைக் காசிப பதியினிற் கொணாந்து தலத்தினிற் றாபனஞ் செய்தான்.

(இ-ள்.) (கையையுடைய மலைபோன்ற யானையினது பிடரியின்பேரிற் பொன்மலையானது வீற்றிருந்த காட்சிபோலும் விளங்கி, ஒளிவீசுந் திருக்கோயிலில் (எழுந்தருளியிருக்கும்) கருமைதங்கிய ஸ்ரீ கண்டத்தையுடைய சோமசுந்தரபெருமானை (ஆகமமுறையுடன்) அருச்சனைசெய்ய, உண்மையாகிய வேதாகம வழியினின்றொழுகும் புண்ணியசொரூபமாகியமுனிவரையும் ஆதிசைவப் பிராமணரையுங் காசிக்ஷேத்திரத்திலிருந்து கொண்டுவந்து அத்தலத்தில் தாபனஞ்செய்தான். (குலசேகரபாண்டியன்) எ-று.

கனகம் என்னுஞ்சொல் இடைகுறைந்து கனம் எனநின்றது.
மரபுளி என்பதில் உளி மூன்றனுருபிடைச்சொல். (சச)

உத்தம குலத்து நாற்பெருங் குடியு முயர்ந்தவு மிழிந்தவு மயங்க
வைத்தவு மான புறக்குடி மூன்று மறைவழூக காமனு வகுத்த
தத்தம நெறியின் றொழுகவை திகமுஞ் சைவமுந் தருமமுந் தழைப்பப்
பைத்தெழு திரைநீர் ஞாலமேற் றிலகம் பதித்தென நகர்வளம் படுத்தான்.

(இ-ள்.) உத்தமகுலமாகிய (பிராமணர்முதலிய) நால்வகைப்பட்ட பெரிய குடிகளும், உயர்ந்தகுலமும் இழிந்தகுலமும் இவ்விரண்டின் சங்கமத்தால் ஆனவும்

ஆகிய புறக்குடிகள் மூன்றும், வேதமுறைதவறாத மனுவால் ஏற்படுத்திய தங்கடங்களுக்குரிய ஒழுக்கங்களிலிருந்து நடக்கவும், வேதமார்க்கமும் சைவமார்க்கமும் தருமமும் மேலிட்டோங்கவும், பரவியெழுந்த அலைகள்பொருந்திய கடல்புடை சூழ்ந்த உலகத்திலே (பாண்டிநாட்டிற்கு) ஓர்திலதம் பதித்தாற்போன்று நகரத்தை வளம்படச்செய்தான். எ-று.

உயர்ந்தன - இழிந்தன - மயங்கவைத்தனவாகிய மூன்றுபுறக்குடி என்பது உயர்வு - இழிவு - விரவு என்னும் மூவகைக்குடிகளையும். உயர்வு - உயர்குலத்தானும் இழிகுலப்பெண்ணுங்கூடிப்பெற்ற அனுலோமரும், இழிவு - இழிகுலத்தானும் உயர் குலப்பெண்ணுங்கூடிப் பெற்ற பிரதிலோமரும், விரவு - அனுலோம பிரதிலோமர் கூடிப்பெற்ற சங்கரசாதிகளும், அல்லது அனுலோமத்தானும் பிரதிலோமப் பெண்ணும் கூடிப்பெற்ற அந்தராளனும், அனுலோமப்பெண்ணும் பிரதிலோமத்தானுங் கூடிப்பெற்ற விராத்தியனும் எனக்கொள்க.

சூத்திரம்.

அனுலோமராவார்.— " பார்ப்பா ரரசர் வணிகர்வே ளாளரென
நாற்குலத் தவருந் தங்குல நடையினும்
உயர்ந்த வாணினு மிழிந்த பெண்ணினும்
வியந்த கூட்டத் தவரனு லோமர்."

பிரதிலோமராவார்.— " இழிந்த வாணினு முயர்ந்த பெண்ணினும்
வியந்த கூட்டத் தவர்பிரதி லோமர் "

அனுலோமர் அறுவகையர்.

பிராமணனுக்கும் க்ஷத்திரியப்பெண்ணுக்கும் பிறந்தவன் சவர்ணன்,
பிராமணனுக்கும் வைசியப்பெண்ணுக்கும் பிறந்தவன் அம்பட்டன்,
பிராமணனுக்குஞ் சூத்திரப்பெண்ணுக்கும் பிறந்தவன் பாரசவன்,
ஆகப் பிராமணனுக்குப் பிறந்தமூவரும்,
க்ஷத்திரியனுக்கும் வைசியப்பெண்ணுக்கும் பிறந்தவன் மற்குரு,
க்ஷத்திரியனுக்குஞ் சூத்திரப்பெண்ணுக்கும் பிறந்தவன் உக்கிரன்,
ஆக க்ஷத்திரியனுக்குப் பிறந்த இருவரும்,
வைசியனுக்குஞ் சூத்திரப்பெண்ணுக்கும் பிறந்தவன் சூசுகன்,
ஆக வைசியனுக்குப் பிறந்த ஒருவனுமாவர்.

பிரதிலோமர் அறுவகையர்.

க்ஷத்திரியனுக்கும் பிராமணப்பெண்ணுக்கும் பிறந்தவன் சூதன்,
ஆக க்ஷத்திரியனுக்குப் பிறந்த ஒருவனும்,
வைசியனுக்கும் க்ஷத்திரியப்பெண்ணுக்கும் பிறந்தவன் மாகதன்,
வைசியனுக்கும் பிராமணப்பெண்ணுக்கும் பிறந்தவன் வைதேகன்,
ஆக வைசியனுக்குப்பிறந்த இருவரும்,
சூத்திரனுக்கும் வைசியப்பெண்ணுக்கும் பிறந்தவன் அயோகவதன்,
சூத்திரனுக்கும் க்ஷத்திரியப்பெண்ணுக்கும் பிறந்தவன் க்ஷத்தா,
சூத்திரனுக்கும் பிராமணப்பெண்ணுக்கும் பிறந்தவன் சண்டாளன்,
ஆகச் சூத்திரனுக்குப்பிறந்த மூவருமாவர்.

அந்தராள விராத்திய சங்கரசாதிகளை விரிக்கப்பெருகுமன்றிப் பலபேதப் படுமாதலின் விடுத்தாம். அவற்றைச் சாதிநூல்களிற் பரக்கக் கண்டுகொள்க.

"அந்தணர்முன் னொருநால்வர் சிவதீக்கைக் கருகரவர்
சிந்தைமகிழ் வுறப்பூசை செய்கசிவன் றிருவடியில்
புந்திமகிழ் வுறப்பூசை யனுலோம ரும்புரிக
தந்தமக்குத் தக்கவெல்லை மண்டபத்திற் றனித்தனியே" என்றதனாலும்,

சைவசமயநெறி,

"அருச்சிக்க விட்டலிங்க மந்தணர்முன் னால்வ
ருரித்தே யனுலோமர்க் கும்" என்றதனாலும்,

பிரதிலோமர் ஆசிரியனிடத்தே தங்களுக்குத்தக்க தீக்ஷைபெற்று அவன் கற்பித்தபடி பிரதக்ஷிண நமஸ்காரஞ்செய்துகொண் டிருப்பதே சிவபூசையாதலாலும், "உத்தமகுலத்து நாற்பெருங்குடியு முயர்ந்தவு மிழிந்தவு மயங்க வைத்தவுமான புறக்குடி மூன்றுந் தத்தமநெறி நின்றொழுக" என்றார்.

வைதிக மென்றது வேதமோதல் முதலிய வேள்விப்பயன்க ளெனவும், சைவமென்றது சரியை கிரியையோக ஞானங்களாகிய ஆகமநெறியெனவும், இவற்றுள் வேதம் சிவபெருமானால் உலகுய்தற்பொருட்டருளிய தென்றும், சைவம் அவ்விறைவனாற் சத்திநிபாதருய்தற்பொருட்டருளிய தெனறுங் கொள்க. (சரு)

அன்றுதொட் டரச னந்நக ரெய்தி யணிகெழு மங்கல மியம்ப, வென்று தொட் டிமைக்கு மனையின்மங் கலநா ளெய்தினா னருநதுமுப் புரமுங், குன் றுதொட் டெய்தான் கோயின்மூன் றுறுப்புங் குறைவிலா பூசனைபொலி தோங் கக், கன்றுதொட் டெறிந்து கனியுகுத் தான்போற் கலிதுரந் தரசுசெய் நாளில்.

(இ-ள்) (குலசேகரபாண்டியன்) அற்றையதினமுதல் அம்மதுரா நகரத்திற் போய் அழகுமிகுந்த மங்கலவாத்தியங்கள் ஒலிக்க, சூரியனையளாவிப் பிரகாசிக்கும் அரண்மனையில் நல்ல முகூர்த்தநாளிற் குடியேறியிருந்து, திரிபுரங்களையும் மேருமலையை வில்லாகவளைத்து எய்தெரித்த சோமசுந்தரப்பெருமானது திருக்கோயிலில் (நித்திய முதலிய) மூன்றங்கங்களுங் குறைவில்லாத பூசை (காலந்) தவறாமல் நிலைபெற்றோங்கும்படி, கன்றினையெடுத்து வீசி விளாங்கனியையுகுத்த திருமால்போல (குடிகளுக்கு) நேரிடுந்துன்பங்களை யொழித்து அரசுசெய்திருக்குங்காலத்தில். எ-று.

மூன்றுறுப்பாவன - நித்தியம் - நைமித்திகம் - காமியம்.

அரசன் உலகினர்க்கு நேருந்துன்பங்களை விலக்கிச் சுகஞ்செய்து காக்க வேண்டுவோனாகலின், உலகத்தில் திதிக்கடவுளாகியதிருமாலுக்கு ஒப்பிட்டு "கன்றுதொட்டெறிந்து கனியுகுத்தான்போல் கலிதுரந்து" எனக் கூறப்பட்டனன்.

திருமால் கன்றுதொட்டெறிந்து கனியுகுத்ததை,

கூர்மபுராணம்.

"குறுந்தாம் பிணைத்த குழக்கன்றி னுருவா யசுரன் கொடுங்கானிற்
செறிந்தாண் டுறலு மணிவண்ணன் செங்கட் கமல மலர்பரப்பி
யறிந்தோ ரிமைப்பி னிளங்கன்று குணிலாய் விளவின் கனியதனி
லெறிந்தான் விளவின் கனியோடும் வீழ்ந்தா னுவி யிழந்தானே."— என்பதனானறிக. (சசு)

பவநெறி கடக்கும் பார்த்திவன் கிரணம் பரப்பிளம் பரிதிபோன் மலயத்
துவசனைப் பயந்து மைந்தன்மேன் ஞாலஞ் சுமத்திநாள் பலகழித் தொருநா
ணவவடி விறந்தோ னலயத் தெய்தி நாதனைப் பணிந்துமூ வலஞ்செய்
துவமையி லின்ப வருணிழ லெய்தி யொன்றியொன் றாநிலை நின்றான்.

(இ-ள்.) பிறவித்தொடர்ச்சியினின்று நீங்குங் குலசேகரபாண்டியன் கிரணங்களைப்பரப்பும் இளஞ்சூரியனைப்போல மலயத்துவசனென்னும் புத்திரனைப்பெற்று அப்புதல்வனுக்குப் பூமிபாரத்தையளித்து, அநேககாலங்கழித்து, நவவடிவங்களையுங் கடந்து அப்பாற்பட்ட சோமசுந்தரப்பெருமானது திருக்கோயிலை ஒருநாள் அடைந்து அவ்விறைவனை நமஸ்காரித்து மூன்று பிரதக்ஷிணஞ்செய்து ஒப்பில்லாதபேரின்பமாகிய திருவருள் நிழலையடைந்து கலந்துங் கலவாத நிலையினின்றான். எ-று.

பிரமன் - விண்டு - உருத்திரன் - மகேஸ்வரனென்னும் உருவம் நான்கும், நாதம் - விந்து - சத்தி - சிவமாகிய அருவம் நான்கும், சதாசிவமாகிய உருவாருவமும் ஆக ஒன்பது திருவடிவங்களை நவவடிவு என்றும், உருவும் அருவும் உருவருவும் ஆகிய நவவடிவுங்கடந்த பராபரவடிவமாய் நிற்பவனாதலின் "நவவடிவிறந்தோன்" என்றுங் கூறினார்.

பரமுத்தியே திருவடிப்பேறாதலாலும், எடுத்த சரீரத்தோடே முத்தியடைந்தனனாதலாலும், அநன்னியமாய் இருந்தபடி இருந்தனனாதலாலும் "மூவலஞ் செய்து அருணிழலெய்தி ஒன்றியொன்றா நிலைநின்றான்" என்றார். (சஎ)

எடுத்த சரீரத்தோடு முத்தியடைந்தானென்பதை இதன் முதனூலாகிய ஆலாசிய மகாத்மியம்.

ஸ்ரீஸுந்தரேச்வரஸ்வாமீம் ப்ரணம்ய ஸ பராசரம் (?)
ஸசரீரோ ... (?)

எனக் கூறுவதா னறிக. (சஎ)

திருநகரங்கண்ட படலம்.

முற்றிற்று.

---

ஆக. திருவிருத்தம் - ருசுஅ.



தடாதகைப்பிராட்டியார்திருவவதாரப்படலம்.

சிவமயம்.

நான்காவது.

# தடாதகைப்பிராட்டியார் திருவவதாரப்படலம்

கலிவிருத்தம்.

கன்னியொரு பங்கினர் கடம்பவன மெல்லா
நன்னகர மானது நவின்றுமுல கீன்ற
வன்னைமக ளாகிமல யத்துவச னுகுந்
தென்னனிடை வந்துமுறை செய்ததுரை செய்வாம்.

(இ-ள்.) உமாதேவியாரை ஒப்பற்ற (வாம) பாகத்திலுடைய சோமசுந்தரப் பெருமான் (வீற்றிருந்தருளும்) கடம்பவனமுழுவதும் நல்ல திருநகரமாகிய திருவிளையாடலைச்சொன்னோம். (சமஸ்த) உலகங்களையும் பெற்றருளிய தாயாகிய அப்பார்ப்பதியார் மலயத்துவஜபாண்டியனிடத்துப் புத்திரியாராகத் திருவவதாரஞ்செய்து வந்தருளி (மனுநூல்) முறைப்படி அரசியல்நடாத்திய திருவிளையாடலாகிய சரிதத்தைச் சொல்லுவோம். எ-று.

கன்னி - அழியாமைக்குணமுடையாள்.

மலயத்துவஜன் என்பது காரணப்பெயர். இவ்வரசன் அகத்தியமுனிவர் முன்னிலையில் "யான்தருமமே நடத்தக்கடவேன்" என்று உறுதிகூறி, அதுபிறழாமைக்கு அறிகுறியாக அம்முனிவரது வாசஸ்தானமாகிய மலயமலையைத்தனது துவஜத்தில் வரைந்துகைக்கொண்ட காரணத்தினால் இப்பெயரெய்தினன் எனக்கூறுகின்றனர். (க)

மனுவற முவந்துதன் வழிச்செல நடத்தும்
புனிதன்மல யத்துவசன் வென்றிபுனை பூணான்
கனியமுத மன்னகரு ணைக்குறையுள் காட்சிக்
கினியன்வட சொற்கட றமிழ்க்கட லிகந்தோன்.

(இ-ள்.) மனுநூலிற்கூறிய தருமமானது மகிழ்வுற்றுத்தன்செங்கோல்வழிச் செல்ல நடத்தும் நல்லொழுக்கமுடையவன்; மலயத்துவஜனென்னும் பெயரையுடையவன், ஜெயத்தையே ஆபரணமாகத்தரித்தவன்; சுவைமுதிர்ந்த அமிர்தம்போன்ற கிருபைக்கு வாசஸ்தானமாயுள்ளவன்; (குறைகூறவந்தவர்கள்) காணுதற்கெளிய சமயத்தன்; வடமொழிக்கடலையுந் தென் (மொழிக்) கடலையுங் கரைகண்டவன். எ-று.

வடமொழி - சமஸ்கிருதமெனவும், தென்மொழி - தமிழெனவுமறிக. (உ)

இதுமுதல்மூன்று செய்யுள்கள் ஒருதொடர்.

அரசர் மனுமுறைப்படி செங்கோல்நடத்துவர். இவ்வரசன் அதுபோலன்றித் தன்செங்கோல்வழி அம்மனுமுறை நடக்கச்செய்வோனாதலின் "மனுவறமுவந்து தன்வழிச்செலநடத்தும்" என்றும், தீயகாரியங்களிற்றலையிடாது தருமச்செயல்களையேசெய்து மனப்பரிசுத்தமுடையனாகலின் "புனிதன்" என்றும், பொதியமலையைத்

தனது கொடியிலெழுதிவைத்தவனுகலின் "மலயத்துவஜன்"என்றும், அமராபரணன் எனக்கூறினுர்போல யுத்தத்திற் பின்னிடாது, எதிர்த்த சத்துருக்களைச்செயித்து வெற்றிகொண்டவனுகலின் "வென்றிபுனைபூணன்" என்றும், தேவரதுபசியையொழிக்கும் அமுதம்போலக் குடிகளின் பசிப்பிணிமுதலியன ஒழியச் செய்வோனுகலின் "கனியமுதமன்னகருணை" என்றும், அவ்வகைக்கருணை சிறிது நிற்கவும் பிரியவும் பெருமல் என்ஞான்றும் யாவரிடத்தும் உடையனுகலின் "கருணைக்குறையுள்" என்றும், இருவர் மாறுகொண்டு இராசசமுகத்திற் ப்ரயாது விண்ணப்பித்து நியாயத்தீர்ப்பு பெறப்போந்துழி அவர்கட்கும், வறுமையால் வருந்தினுர்க்கும், கண்ணுக்குப் புலப்படாது நாள்கழித்துக்குடிகட்குத்துன்புவளர்த்தி அவர்களாற் சபிக்கப்பட்டொழிந்த நிமியரசன் முதலானோர் போலன்றி, அமைச்சர்முதலானுருடன் செவ்வியுடையனுயிருத்தலின், "காட்சிக்கினியன்" என்றும், அருங்கலைவிநோதன் என்ருர்போல, சமஸ்கிருததிராவிடபாஷையாகிய கடல்களை அறிவாகிய புணையாற்கடந்தவனுகலின் "வடசொற்கடறமிழ்க்கடலிகந்தோன்" என்றுங்கூறினுர். (உ)

வேனில்விறல் வேள்வடிவன் வேட்கைவிளை பூமி
யானமட வார்கள்பதி னுயிரவ ருள்ளான்
வானெழுகு பானுவழி வந்தொழுகு சூர
சேனன்மகள் காஞ்சனையை மன்றல்வினை செய்தான்.

(இ-ள்.) வேனிற்காலத்திலே காமுகனைச்செயங்கொள்ளும் மன்மதன்போலும் அழகுடையவன்; காமம் (ஆகியபயிர்) ஆனது விளையத்தக்க நிலம்போன்ற பதினுயிரம் காமக்கிழத்தியர்களையுடையவன்; ஆகாயத்திற்செல்லுஞ் சூரியனது மரபில் வந்து பிறந்து (நீதிதவருது) ஒழுகுஞ் சூரசேனனென்னுஞ் (சோழராசனது) புத்திரியாகிய காஞ்சனமாலையை (வேதவிதிப்படி) மணஞ்செய்து முடித்தவன். எ-று.

"வேட்கை விளைபூமியான மடவார்கள் பதினுயிரவருள்ளான்" என முற்கூறியதனுல் "சூரசேனன் மகள் காஞ்சனையை மன்றல்வினை செய்தான்', என ஐயமகற்றிப் பட்டமகிஷியென விளங்கக் கூறினர்.

காமக்கிழத்தியரை விளைபூமியென்றதனுல் காமத்தைப் பயிர் என்ரும். (௩)

கண்ணுதலை முப்பொழுதும் வந்துபணி கற்றோ
னெண்ணில்பல நாண்மகவி லாவறுமை யெய்திப்
பண்ணரிய தானதரு மம்பலவு மாற்றிப்
புண்ணிய நிரம்புபரி வேள்விபுரி குற்றுன்.

(இ-ள்.) நெற்றிக்கண்ணையுடைய சோமசுந்தரக்கடவுளை (காலை - உச்சி - மாலையென்னும்) திரிகாலங்களிலும் வந்து வணங்குதலையே கற்றறிந்தவன்; அளவில்லாத பலகாலம் புத்திரப்பேறு இல்லாத தரித்திரமடைந்து (அக்குறைவையொழிக்க) பிறர்செய்தற்கரிய தான தருமங்கள் பலவற்றையும் (முறைப்படி) செய்து, புண்ணியமிகுந்த அசுவமேதயாகஞ் செய்யத்தொடங்கினுன். எ-று.

எல்லாப்பேற்றுள்ளும் புத்திரப்பேறே சிறந்ததாகலின் அஃதின்மைபெரிய வறுமையென்பார் "மகவிலாவறுமை யெய்தினுன்" என்ருர். புத்திரப்பேறு சிறந்தது என்பதனை.

திருக்குறள்.

"தம்பொரு ளென்பதம் மக்க ளவர்பொருள்
தந்தம் வினையான் வரும்" என்பதனுலும்,

நளவெண்பா.

"பொன்னுடைய ரோனும் புகழுடைய ரோனுமற்
றென்னுடைய ரோனு முடையரோ—இன்னடிசில்
புக்களையுந் தாமரைக்கை பூநாறுஞ் செய்யவாய்
மக்களையிங் கில்லா தவர்" என்பதனாலுமறிக. (௪)

ஈறின்மறை கூறுமுறை யெண்ணியொரு தொண்ணூற்
றாறினொடு மூன்றுமக மாற்றவம ரேச
னூறுமக மும்புரியி னென்பத நொடிப்பின்
மாறுமென மற்றதனை மாற்றியிது சாற்றும்.

(இ-ள்.) அழிவில்லாத வேதங்கள் பிரதிபாதிக்கும் முறைகருதி, தொண்ணூற்றொன்பது (அசுவமேத) யாகஞ்செய்துமுடிக்க, (அதனையறிந்த) தேவேந்திரன் (இம்மலயத்துவஜபாண்டியன்) நூறு (அசுவமேத) யாகங்களுஞ்செய்து முடிப்பானாகில் எனது இந்திரபதவி ஒருவிநாடியில் மாறிவிடுமேயென்று நினைத்து, (மலயத்துவசபாண்டியனையடைந்து) அந்தயாகத்தை விலக்கி, இவ்வாறு சொல்கின்றான். எ-று.

நொடிப்பு - மாத்திரை அல்லது விநாடி. (௫)

நன்பொருள் விரும்பினை யதற்கிசைய ஞால
மின்புறு மகப்பெறு மகத்தினை யியற்றி
னன்புறு மகப்பெறுதி யென்றமரர் நாடன்
றன்புல மடைந்திடலு நிம்பநறு தாரான்.

(இ-ள்.) நீ நல்ல புத்திரப்பேற்றை விரும்பினை, அவ்விருப்பிற்கியையும்படி உலகத்தார் விரும்பும் புத்திரப்பேற்றை அடைதற்குரிய யாகத்தைச் செய்வாயாகில், அன்புமிகுந்த புத்திரப்பேற்றை யடைவாயென்றுகூறி, தேவேந்திரன் தனது உலகத்திற்குச்செல்லவும், வேப்பமலர்கள் பிரகாசிக்கும் மாலையை யணிந்த மலயத்துவஜபாண்டியன். எ-று.

இதுமுதலிரண்டுபாடல்கள் குளகம்.

இச்செய்யுளிலுள்ள "தாரான்" என்னும்வினைமுதல்அடுத்தசெய்யுளிலுள்ள "புரிகிற்பான்" என்னும் முற்றுப்பயனிலைகொண்டு முடிந்தது. (௬)

மிக்கமக வேள்விசெய் விருப்புடைய னாகி
யக்கண மதற்குரிய யாவையு மமைத்துத்
தக்கநிய மத்துரிய தேவியொடு சாலை
புக்கன னிருந்துமக வேள்விபுரி கிற்பான்.

(இ-ள்.) (நன்மை) மிகுந்த புத்திரகாமேஷ்டி யாகத்தைச்செய்யும் விருப்பத்தை அடைந்தவனாகி, அந்தக்ஷணத்திலேயே அந்தயாகத்திற்குவேண்டிய (உபகரணங்கள்) எல்லாவற்றையுந்தேடி, அதற்குத்தக்க நியமத்துடன் (தன் இல்வாழ்க்கைக்கு) உரியமனைவி (ஆகிய காஞ்சனமாலை) யுடன் யாகசாலையிற் புகுந்திருந்து, (உத்தேசித்தவகையே) அப்புத்திர காமேஷ்டியாகத்தைச் செய்யத்தொடங்கினான். எ-று.

"போகமடவார்கள் பதினாயிரவருள்ளான்" எனமேற் கூறப்பட்டிருத்தலின் தேவியொடு சாலைபுக்கனனெனப் பொதுப்படக்கூறுது ஐயமகல, மனையறத்திற்குரிய காஞ்சனமாலையை யுடன்கொண்டு யாகசாலை சேர்ந்தனனெனத் தெள்ளிதின் விளங்குமாறு "உரிய தேவியொடு" என, உரிய என்னும் அடைகொடுத்துக் கூறினர். (௭)

ஆசற மறைப்புலவ ராசிரியர் காட்டு
மாசறு சடங்கின்வழி மந்திரமு தாத்த
வோசையனு தாத்தசொரி தந்தழுவ வோதி
வாசவ னிருக்கையி லிருந்தெரி வளர்ப்பான.

(இ-ள்.) குற்றமற்ற வேதநூற் புலமையின் வல்லவராகிய யாகாசிரியர் காட்டும் பரிசுத்தமாகிய சடங்கின்வழியே மந்திரங்களை உதாத்தம் - அனுதாத்தம் - சொரிதம் (ஆகிய மூவகை) ஓசைகள் தழுவ உச்சரித்து, இந்திரன் திசையாகிய கிழக்கிலிருந்து (புத்திரகாமேஷ்டி) யாகஞ்செய்யத்தொடங்கினுன் (மலயத்துவஜபாண்டியன்.)

உதாத்தம் - அனுதாத்தம் - சொரிதம் என்பவற்றை முறையே எடுத்தல் - படுத்தல் - நலிதல் எனக்கொள்க. இவ்வகையாகச் சந்தபேதமுற வேதபாராயணஞ் செய்தலே முறையாகலின் "உதாத்தவோசை யனுதாத்த சொரிதந் தழுவ வோதி" என்ருர். (அ)

விசும்பு நில னுந்திசையும் வேள்வியடு சாலைப்
பசும்புகை படர்ந்தொரு படாமென மறைப்பத்
தசும்புபடு நெய்பொரி சமித்தினொடு வானோர்க்
கசும்புபடு மின்னமுதி னுகுதி மடுத்தான்.

(இ-ள்.) யாகசாலையிலெழுந்த பசியபுகையானது பரவி, ஆகாயத்தையும் பூமியையும் அட்ட திசைகளையும் பரந்து ஒருபோர்வைபோல மறைக்க, குடங்களில் நிறைந்தநெய்யையும் பொரியையும் சமித்துகளையும், தேவர்களுக்கு ஊற்றெடுக்கும் இனிமையையுடைய அமுதம்போல ஆகுதியாகக் கொடுத்தான். எ-று. (கூ)

ஐம்முக னநாதிபர மாத்தனுரை யாற்று
னெய்ம்முக நிறைத்தழ னிமிர்ந்துவரு மெல்லை
பைம்முக வராவணி பரஞ்சுடர் தனிப்ப
மைம்முக நெடுங்கணிம வான்மனைவி நாண.

(இ-ள்.) ஐந்து திருமுகங்களை யுடையவனும் அநாதியானவனும் பரமாத்தனுமாகிய சிவபெருமானது திருவாக்காகிய வேதவழியால், நெய்யை யாகமுகத்தில் நிறைத்து, அவ்யாகாக்கினியானது சிகைவிட்டு (வலஞ்சுழித்து) எழும்போது, படத்தையுடைய சர்ப்பாபரணத்தையணிந்த சிவபெருமான் தனித்திருக்கவும், மைதீட்டிய நெடியகண்களையுடைய இமாசல மன்னன் மனைவியாகிய மேனையென்பவள் நாணமடையவும். எ-று.

சிவபெருமானுக்குரிய ஐந்து திருமுகங்கள்—ஈசானம்-தற்புருடம் - அகோரம் - வாமம் - சத்தியோஜாதம் எனப்படும். அவற்றுள், ஈசானமுகம் உச்சியிற் பொருந்தி வடகிழக்குத் திக்கை நோக்கும். தற்புருடம் கிழக்குத் திக்கை நோக்கும். அகோரம் - வாமதேவம் - சத்தியோஜாதமென்னும் மூன்று முகங்களும் முறையே தெற்கையும் வடக்கையும் மேற்கையும் நோக்கியிருக்கும். இதனை,

சைவசமயநெறி.

"ஈசான முச்சிமுக மீசதிசை நோக்கியுறுந்
தேசார் புருடங்கீழ்த் திக்கு.
தெற்கு வடக்குமேற் றிக்குமுறை யானேக்குந்
தக்கவகோ ராதிமுகந் தான்." —என்னுந் திருக்குறள்களானறிக.

ஐம்முகனெனக்கூறியது சதாசிவமூர்த்தியை.

தாஞெருத்திியே தனக்கு உமாதேவி புதல்வியாகவும் சிவபெருமான் மருக ராகவுந் தவப்பலனுல் அமையப்பெற்றுத் தருக்கெய்தி நின்றமைநீங்க, இப்பொழுது காஞ்சனமாலைக்கும் அவ்வகைய அருட்செல்வம் அடையக் காலநேர்ந்தமை நோக்கி மேனை மனங்கூசுவளென்பார் " இமவான்மனைவிநாண " என்ருர்.

இதுமுதல் பத்துப் பாடல்கள் ஒருதொடர். இதனுல் தடாதகைப்பிராட்டியார் யாகாக்கினியினின்று திருவவதாரஞ் செய்தமை சொல்கின்ருர். (கO)

வள்ளன்மல யத்துவச மீனவன் வலத்தோ
ளுள்ளமனை காஞ்சனை சுருங்கிய மருங்கு
றள்ளவெழு கொங்கைக டதும்பநிமிர் தீம்பால்
வெள்ளமொழு கக்கரிய வேற்கணிட னுட.

(இ-ள்.) ஈகையாளனுகிய மலயத்துவஜபாண்டியனது வலத்தோள் துடிக்கவும், (அவனது) பட்டமகிஷியாகிய காஞ்சனமாலையின் சுருங்கிய இடையானது ஒசியும்படி பூரித்த கொங்கைகளினின்று தளும்ப நிமிர்ந்த மதுரமாகிய பால்வெள்ளம் ஒழுகவும், (அவளது) வேலாயுதம்போன்ற கருமையாகிய இடக்கண்துடிக்கவும். எ-று.

வள்ளல்—வரையாதுகொடுப்போன்.

மீனவன்—மீனக்கொடியுடையவன்-இதுபாண்டியர் மரபிற்குரியது.

ஆடவருக்கு வலக்கண்ணும் வலத்தோளுந் துடித்தலும், மாதர்கட்கு இடக்கண்ணும் இடத்தோளுந் துடித்தலும் நற்சகுனமென்பர். (கக)

இவ்வுலக மன்றியுல கேழுமகிழ் வெய்தச்
சைவமுத லாயின தவத்துறை நிவப்ப
வெளவிய மறங்கெட வறங்குது கலிப்பத்
தெய்வமறை துந்துபி திசைப்புல னிசைப்ப.

(இ-ள்.) இந்தப்பூலோகத்திலுள்ளவரோ யல்லாமல், பூலோகமுதலிய சத்த லோகங்களிலு முள்ளவர்களும் மகிழ்ச்சிகூரவும், சைவமுதலாயுள்ள தவநெறிக்குரிய உட்சமயங்கள் ஆறும் எழுந்தோங்கவும், பொருமைநிறைந்த பாவங்கெடவும், தருமங் களிப்பெய்தவும், தெய்வத்தன்மையுடைய வேதங்களும் தேவதுந்துபிகளும் அட்ட திசைகளிலும் ஒலிக்கவும். எ-று.

உலகேழு—பூலோகம் - புவலோகம் - சுவலோகம் - தவலோகம் - மகாலோகம் - சனலோகம் - சத்தியலோகம் என்பனவாம்.

சைவம்-பாசுபதம்-மாவிரதம்-காளாமுகம்-வைரவம் - வாமம் என்பவையே உட்சமயம் ஆறு. அட்டதிசைகளேயன்றி மேலுங் கீழுங் கூட்டித் திசைபத்தெனக் கூறுதலுமுண்டு. (கஉ)

மைம்மலர் நெடுங்கணர மங்கையர் நடிப்ப
மெய்ம்மன மொழிச்செயலின் வேறுபட லின்றி
யம்மதுரை மாநகரு ளாரக மகிழ்ச்சி
தம்மையறி யாதன தலைத்தலை சிறப்ப.

(இ-ள்.) மைதீட்டிய நெடிய கண்களையுடைய அரம்பாஸ்திரீகள் நிருத்தஞ் செய்யவும், அந்தப் பெருமைதங்கிய மதுராபுரியிலுள்ளவர்களுக்கு, மனம் வாக்குக் காயங்களின் செய்கைகள் தம்முள் ஒப்பநிற்க,(எழுந்த)மனக்கிளர்ச்சியானது தம்மை விழுங்கத் தனித்தனி மேலிட்டோங்கவும். எ-று.

"செயலின் வேறுபடலின்றி" என்றது மகிழ்ச்சிக்கடலிலமிழ்ந்தும் மனம் வாக்கு காயங்களின் செய்கைகள் ஒன்றுபட்டு நிற்றலின் என்க. (கங)

மாந்தர்பயின் மூவ றுசொன் மாநில வரைப்பிற்
றீந்தமிழ் வழங்குதிரு நாடது சிறப்ப
வாய்ந்ததமிழ் நாடர சளித்துமுறை செய்யும்
வேந்தர்களின் மீனவர் விழுத்தகைமை யெய்த.

(இ-ள்.) மானுடர் ஆராய்ச்சிசெய்யும் பதினெண்பாஷைகள் வழங்கும் பெரிய (பதினெட்டு) நிலங்களில், இனிய தமிழ் வழங்கும் அழகிய நாடானது சிறப்புற்றோங்கவும், ஆராய்ந்த அந்தத் தமிழ்நாடுகளை அரசுபுரிந்து மனுமுறை தவறாது நடத்தும் (சேர-சோழ-பாண்டிய) இராசர்களில், மீனக்கொடியேந்திய பாண்டியர்கள் மேன்மைத்தன்மையை யடையவும். எ-று.

ஆய்ந்த தமிழ் என்றது முதல் இடை கடை என்னும் முச்சங்கத்தாரால் ஆராய்ந்த தமிழ் எனக் கொள்க. இது முன் விளக்கப்பட்டுள்ளது. (கச)

நொய்தழ லெரிக்கடவு ணோற்றபய னெய்தக்
கொய்தளி ரொனததழல் கொழுந்துபடு குண்டத
தைதவி ழிதழ்க்கமல மப்பொழு தலர்ந்தோர்
மொய்தளிர் விரைக்கொடி முளைத்தெழுவ தென்ன.

(இ-ள்.) தீக்கடவுள் (தான் செய்த) தவப்பயனை இலேசாக அடையவும், நெருப்புக்கொய்த தளிர்போல (செந்நிறமுற்று) கொழுந்துவிட்டெரியும் யாகாக்கினியில் அழகிதாக இதழவிழ்ந்த தாமரை அன்றலர்ந்த நெருங்கிய தளிர்களும் மணமும் (நிறைந்த) ஒரு கொடிமுளைத்தெழுதல்போலவும். எ-று. (கரு)

விட்டிலகு சூழியம் விழுங்குசிறு கொண்டை
வட்டமதி வாய்க்குறு முயறகறையை மானக்
கட்டியதி னூற்றிய கதிர்த்தரள மாலை
சுட்டியதில் விட்டொழுகு சூழ்கிரண மொப்ப.

(இ-ள்.) ஒளிவீசி விளங்கும் முத்துச்சூழியத்துட்பட்ட சிறிய உச்சிக்கொண்டையானது வட்டவடிவுவாய்ந்த சந்திரனிடத்துள்ள சிறிய முயற்களங்கத்தைப் போன்று விளங்கவும், அச் சூழியத்திற் கட்டித் தொங்கவிட்ட கிரணத்தையுடைய முத்துச்சரத்துடன் சேர்ந்துள்ள சுட்டியானது அச் சூழியமாகிய சந்திரனிடத்திலிருந்து பரந்து சூழ்ந்த கிரணத்தை யொத்திருக்கவும். எ-று.

சூழியம் என்பதில் அம் சாரியை. சூழி=உச்சிக்கொண்டையணி. (கசு)

தீங்குதலை யின்னமுத மார்பின்வழி சிந்தி
யாங்கிள நிலாவொழுகு மாரவட மின்ன
வீங்குட லிளம்பரிதி வெஞ்சுடர் விழுங்கி
வாங்குகடல் வித்துரும மாலையொளி கால.

(இ-ள்.) மதுரம் பொருந்திய மதலைச்சொல்லாகிய இனிய அமுதமானது மார்பகத்து ஒழுகினாற்போல, இளஞ்சந்திரிகை சிந்தும் முத்துவடம் பிரகாசிக்கவும், ஒளி மிகுந்த உருவத்தையுடைய பாலசூரியனது வெவ்விய கிரணத்தைத் தன்னகப்படுத்தி வளைவாகிய சமுத்திரத்திற்றோன்றிய பவளமாலை (ஒருபக்கலில்) ஒளிசெய்யவும். எ-று. (கஎ)

சிற்றிடை வளைந்தசிறு மென்றுகில் புறஞ்சூழ்
பொற்றிரு மணிச்சிறிய மேகலை புலம்ப
விற்றிரு மணிக்குழை விழுங்கிய குதம்பை
சுற்றிருள் கடிந்துசிறு தோள்வருடி யாட.

(இ-ள்.) சிறிய இடையைச்சூழ்ந்த மெல்லிய சிற்றுடையின்புறத்து வளைந்துசூழ்ந்த பொன்னாலாகிய அழகிய இரத்தினங்கள்பதித்த சிறிய மேகலாபரணம் ஒலிக்கவும், ஒளியையுடைய அழகிய இரத்தினகுண்டலத்தைத் தன்னகப்படுத்திய குதம்பையானது சூழ்ந்த இருளைத்துறந்து சிறிய தோளினைத் தடவி யாடவும். எ-று.

தெள்ளமுத மென்மழலை சிந்தவிள மூரன்
முள்ளெயி றரும்பமுலை மூன்றுடைய தோர்பெண்
பிள்ளையென மூவொரு பிராயமொடு நின்று
ளெள்ளரிய பல்லுயிரு மெவ்வுலகு மீன்றாள்.

(இ-ள்.) இகழ்வில்லாத பல்வகைய ஜீவராசிகளையும், சமஸ்த லோகங்களையும் பெற்றருளிய உமாதேவியார், தெளிவாகிய அமிர்தம்போன்ற மென்மையாகிய குதலைச்சொல் தோன்றவும், புன்னகை யரும்புங்கூரியபற்கள் பிரகாசிக்கவும், மூன்று தனங்களையுடைய ஓர் பெண்குழந்தைவடிவாக, மூன்று பிராயத்துடன் விளங்கி நின்றனர். எ-று. (கக)

அறுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

குறுந்தளிர்மெல் லடி கிடந்த சிறுமணி நா புரஞ்சதங்கை குழறி யேங்க, நறுந்தளிர்போ லசைந்துதளர் நடைபெ றங்கி மழலையிள நகையுந் தோன்றப், பிறந்தபெரும் பயன்பெறுபொன் மாலைமடி யிருந்தொருபெண் பிள்ளை யாளு, னறந்தழுவு நெறிநின்றோர்க் கிகம்போகம வீடளிக்கு மம்மை யம்மா.

(இ-ள்.) தளிர்போன்ற மென்மையாகிய சிறிய திருவடியின்பேரிற் சூழ்ந்து கிடந்த இரத்தினங்கள் பதித்த சிறுசிலம்பும் சதங்கைகளும் (தம்முள்) கலந்து ஒலிக்கவும், நறிய தளிர் அசைதல்போலத் தளர்ந்த நடை நடந்து, மழலைச்சொல்லும் புன்னகையுந் தோன்றவும், பிறந்ததனாலாகிய பெரியபயனை (இப்பிறவியிலேயே) பெற்ற காஞ்சனமாலையினது மடியில் ஒரு பெண் குழந்தையாயிருந்தருளினர்; தருமத்தைத் தழுவிய நன்னெறியில் நின்றவர்கட்கு இகபோகத்தையும், (சுவர்க்காதி) பரபோகத்தையும், மோக்ஷத்தையுந் தந்தருளும் மீனாக்ஷியம்மையார். எ-று. (உ௦)

செய்யவாய் வெளிறாது துணைமுலைக்கண் கருகாது சேலபோ னீண்ட
மையவாய் மதர்த்தகருங் கண்பசவா தையிரண்டு மதியந் தாங்கா
தையவா லிலைவருந்தப் பெறாதுபெறு மகவையெடுத் தணைத்தாண் மோந்தா
டெய்யவாய் முத்தங்கொண் டின்புற்றா ளுன்பெற்ற தோகை யன்னாள்.

(இ-ள்.) செவ்விய வாயானது விளர்ப்பெய்தாமலும், இருதனங்களின் கண்கள் கருகாமலும், சேற்கெண்டைபோலும் (காதளவும்) நீண்ட மைதீட்டிய மதர்த்த கரிய கண்கள் பசவாமலும், பத்துமாதங்கள் (பிண்டத்தை வயிற்றில்) சுமக்காமலும், அழகிய ஆலிலை (போன்ற வயிறானது) நோவப்பெறாமலும் பெற்ற (ஜகன்மாதாவாகிய) குழந்தையை, முன்பு (உமையைக் குழந்தையாகப்) பெற்றமேனையை யொத்த காஞ்சனமாலை (வாரி) எடுத்து (மார்போடு) அணைத்து (உச்சி) மோந்து பரிசுத்தமான வாயினால் முத்தமிட்டு இன்பத்தி லமிழ்ந்தாள். எ-று.

முன்பெற்ற தோகையன்னாள் என்றது இமாசலமன்னன் மனைவியாகிய மேனையும் உமாதேவியைப் புத்திரியாகப் பெற்றபொழுது கருப்பக்குறி தோன்றாது பெற்று மகிழ்ந்தவளாகலின் என்க.

மூலைக்கண்களைச் சூசுகமென்பர். பசத்தல்-நிறம் வேறுபடுதல்.

உமையம்மையார் இமாசல புத்திரியாரானது

திருக்கைலாயகிரியில் சிவபெருமான் திருவோலக்கங் கொண்டெழுந்தருளி யிருக்கையில், அவரது வாமபாகத்திலிருந்த பிராட்டியார் அச்சிவபெருமானை வணங்கி "தேவரீரைப் பணியாத தக்கன் புதல்வி யென்பதையும், அதனாலாகிய தாக்ஷாயணி யென்னும் பெயரையும் அவனாற் போஷிக்கப்பட்ட உடலையும் இனிச் சகிக்ககில்லேன். ஆதலின் மாற்றியருளவேண்டும்" எனவேண்ட, சிவபெருமான் திருவுளத்தோர்ந்து "நம்மிடத்தன்புள்ள இமய பர்வதராசனும் நின்னைப் புத்திரியாகப் பெறுதற்பொருட்டு அவ்விமாசலத்துள்ள ஓர் தடாகத்தருகிற் பெருந்தவஞ் செய்கின்றனன். ஆதலின் நீ அவன்பாற் செல்க" எனப் பணிக்க, பிராட்டியார் சென்று அத்தடத்தில் அலர்ந்த ஓர் தாமரைத்தவிசின்பேரில், பிள்ளைமைத் திருக்கோலங் கொண்டெழுந்தருளியிருந்தனர். அவ்விமோ பர்வதராசன் அதுகண்டு அடங்காமகிழ்ச்சிகொண்டு பாடிப் பணிந்து தனது அங்கையாற்றூங்கி அவ்வருமைக் குழந்தையைக்கொண்டு சென்று தனது மனைவி மேனையாரிடங் கொடுக்க, அவ்வம்மையார் மகிழ்வு மிகுந்து அக்குழந்தையை வாங்கிப் பாலூட்டி வளர்த்து வந்தனர். என்பதாம்-இதனை,

கந்தபுராணம் - பார்ப்பதிப்படலம்.

"கொடுத்தலுந் தொழுது வாங்கிக் கொற்றவ விவணின் பாங்கர்
அடுத்ததெங் கெவனோ வென்னா வரசனு நிகழ்ந்த வெல்லா
மெடுத்துரை செய்யக் கேளா வீசன தருளோ வென்னா
வடுத்தவிர் கற்பின் மேனை மனமுற மகிழ்ச்சி கொண்டாள்.

சுரந்தன கொங்கை பாலுந் துண்ணென வொழுகிற் றெங்கும்
பரந்தன பொடிப்பின் போர்வை பனைதன தருளே யுள்ள
நிரந்தன கவலை யாவு நீங்கின பவமுன் னுள்ள
கரந்தன விமயத் தண்ணல் காதலி தனக்கு மாதோ"—என்பதனானறிக. ()

பனையாதி விருப்பறிவு தொழிலாகி யுலகமெலாம் படைத்துக் காத்து
வனையாது துடைத்துமறைத் தருளியவை நின்றுந்தன் வடிவு வேறா
யுனையாதி மறைகடந்த வொருமுதல்வி திருமகளா யுதித்தற் கிந்தத்
தனையாளு மன்னவன்செய் தவமிதுவோ வதற்குரிய தவநதான் மன்னோ.

(இ-ள்.) பராசத்தி - ஆதிசத்தி - இச்சாசத்தி - ஞானசத்தி - கிரியாசத்தி (என்று ஐந்துசத்தி)களாகி எல்லாவுயிர்களையுஞ் சிருட்டித்தும், இரட்சித்தும், முற்றுஞ் சங்கரித்தும், திரோபவித்தும், அனுக்கிரகித்தும், அந்த (பஞ்ச) சத்திகளினின்றுந் தனது திருமேனி வேறாகி மனுதிகளையும் வேதங்களையுங் கடந்து அதீதப்பட்ட சமானமில்லாத தலைவியாராகிய பிராட்டியார் தனக்குத் திருமகளா யவதரிப்பதற்கு இப் பாண்டிநாட்டை அரசுசெய்யும் மலயத்துவஜபாண்டியன் செய்ததவம் இவ்வளவுதானென்று அளவிடற்பாலதோ? (அப்பிராட்டியார் அவதரிக்கும்) அதற்குரியதவம் அம் மலயத்துவஜ பாண்டியன் வடிவமே (அன்றிப் பிறிதில்லை.) எ-று.

"பனையாதி விருப்பறிவு தொழிலாகி யுலகமெல்லாம் படைத்துக் காத்து வனையாது துடைத்து மறைத்தருளி" என்பதை எதிர்நிரனிறைப்பொருள் கோளாகக்

கொண்டு கிரியாசத்தியாய்ப் படைத்தும், ஞானசத்தியாய்க் காத்தும், இச்சாசத்தியாய்ச் சம்ஹரித்தும், ஆதிசத்தியாய் மறைத்தும், பராசத்தியாய் அனுக்கிரகஞ் செய்தும் எனக் கூட்டிப் பொருள்கொள்க.

இறைவன் திருக்குறிப்பின்படி அக்கினிக் குஷ்ணம்போல அபின்ன பாவமாக விருக்குங் கருணையுருவாகிய சத்தியே பஞ்சகிருத்திய நிமித்தமாகக் கிருத்திய பேதத்தால் ஐவகைப்பட்டு நிற்றலின் " பனையாதி * * * துடைத்து மறைத்தருளி" என்றும், அவ்வா றஞ்சத்தியாக நிற்பதுமன்றி உருவும் அருவும்பரயோகமுங் கடந்து பேரொளியாய்நிற்றலின் "அவை நின்றுந் தன்வடிவுவேறாய்" என்றும், காரியவொலி பற்றியெழுங் காரண விகற்பங்களை வரைசெய்து அவை முற்றும் வியாபகமாய்விளங்குங் குடிலானந்த சத்தியாக நிற்றலின் " உரையாதி மறைகடந்த வொரு முதல்வி" என்றுங் கூறினர்.

மனாதி என்றது மனம் வாக்கு காயங்கள்.

காரியவொலி - வைகரியாதி நால்வகையும், காரணவிகற்பம் விந்துநாத மெனவுங் கொள்க. (உஉ)

கள்ளமா நெறியொழுகும் பொறிகடந்து கரணமெலாங் கடந்தா னந்த
வெள்ளமாம் பரஞான வடிவுடையா டன்னன்பின் வெளிவந் தின்றோர்
பிள்ளையா யவதரித்த கருணையுந்தன் மனாட்டிதவப் பேறுந் தேறான்
பள்ளமா கடற்றானைப் பஞ்சவர்கோ னெஞ்சத்துப் பரிவு கூர்ந்தான்.

(இ-ள்.) கள்ளமாகிய மார்க்கத்திற் செல்லும் ஐம்பொறி யுணர்வுக்கும் அப்பாற்பட்டும், (புறக்கரண அந்தக்) கரணங்கள் எல்லாவற்றிற்கும் அப்பாற் பட்டும், பேரின்பப் பெருக்காகிய பரஞானமே திருமேனியாக வுடைய உமாபிராட்டியார் தனது அன்பின் மிகுதியால் (தனக்கோர் திருமகளாய் யாவருக்கும்) புலப்படவந்து இப்பொழுது ஓர் பிள்ளைமைத் திருக்கோலமாய் அவதரித்தருளிய திருவருளையும், தனது மனைவியான காஞ்சனமாலையின் தவப்பலனையுந் தேறாதவனாகி, ஆழமாகிய பெரிய கடல்போன்ற (பரந்த) சேனையையுடைய மலயத்துவஜபாண்டியன் தன் மனதில் துன்பமிகுந்தான். எ-று.

மனாட்டி - மணவாட்டி என்பதன் மரூஉ.

கள்ளமா நெறியொழுகும் பொறிகடந்து (உம்) கரணமெலாங் கடந்து (உம்) என இவ்விரண்டிடத்தும் எண்ணும்மைகள் விகாரத்தால் தொக்கன.

மலயத்துவஜன் பரிவுகூர்ந்த காரணம் வருஞ் செய்யுளானறிக. (உ௩)

மகவின்றிப் பலபகல்யான் வருந்தியருந் தவம்புரிந்தேன் மைந்தற் பேறு
தகவிந்த மகஞ்செய்தே னதுவுமொரு பெண்மகவைத் தந்த தந்தோ
முகவிந்து நிலவொழுக வருபெண்ணு முலைமூன்றாய் முகிழ்த்து மாற்றார்
நகவந்த தென்னேயோ வென்றுவகை யிலனாகி நலிபு மெல்லை.

(இ-ள்.) சந்தானமில்லாது யான் பலகாலம் வருந்தி ஆற்றற்கரிய அருந்தவங்களைச் செய்தேன். (அத்தவங்களும் எனது மனவிருப்பின்படி அப்புத்திரப்பேற்றினைத்தராமையால்) புத்திரப் பேறுதர இந்தப் புத்திர காமேஷ்டியாகஞ் செய்தேன். அவ்யாகமும் (யான் விரும்பியபடி ஆண்குழந்தையை யளிக்காமல்) ஒரு பெண்குழந்தையைப் பிரசவித்தது. ஐயோ முகமாகிய சந்திரனிட மிருந்து (புன்னகையாகிய) நிலவு சிந்த அவதரித்த அந்தப் பெண்குழந்தையும், தனங்கள் மூன்றாக அரும்பிப்

பகைவர்சிரிக்க அவதரித்தது. (இது நாம்செய்த தவத்தும் யாகத்தும் குறைவு) யாதோ வென்று சந்தோஷமில்லாதவனாய் மலயத்துவஜ பாண்டியன் வருந்துங்காலத்தில்.

மலயத்துவஜன் பலவகைப் பேறுமுடையவனாயிருந்தும் மகப்பேறொன்றே குறைவுற்றமையின், அதனைத்தீர்ப்பான்கருதிப பன்னெடுங்காலம் அருந்தவம்புரிந்தானாகலின் “மகவின்றிப பல பகல் யான் வருந்தியருந் தவம்புரிந்தேன்” என்றும், புத்திர காமேஷ்டியாகஞ் செய்தால் அப்பேற்றினை யடையலாமென்று இந்திரன் கூறிய வண்ணம் யாகஞ் செய்தானாகலின் “மைந்தர்ப்பேறு தகவிந்த மகஞ்செய்தேன்” என்றும், அவ்வாறு செய்த யாகத்தில் ஆண்குழந்தை அவதரியாமல் அன்னையார் பெண் மகவாக அவதரித்தமையின் “அதுவுமொருபெண்மகவைத்தந்தது” என்றும், அவ்வாறு தோன்றிய பெண்குழந்தையோ அதிரூபசவுந்தர்யமாக விளங்கியும் மும்முலைப் பெண்ணாகிச் சத்துருக்கள் ஏளனஞ்செய்யத் தோன்றியதே யென்பார் “முகவிந்து நிலவொழுக வருபெண்ணு முலைமூன்றாய் முகிழ்த்து மாற்றார் - நகவந்த தென்னேயோ” என்றும், இந்தச் செயலால் மனஞ் சகியாது நின்றானெனக் குறிக்க “அந்தோ” என்றும், இவ்வாறு மனம் வருந்தினானென்பார் “உவகையிலனாகிநலியு மெல்லை” என்றுங் கூறினார்.

அந்தோ என்பது இரக்கக்குறிப்பிடைச்சொல். இது சிங்களச்சொல் என்பர். என்னேயோ என்பதில் உள்ள ஏகாரம் ஐயப்பொருளிலும், ஓகாரம் இரக்கப் பொருளிலும் நின்றன. (உச)

மன்னவநின் றிருமகட்கு மைந்தர்போற் சடங்கனைத்தும் வழாது வேதஞ், சொன்னமுறை செய்துபெயர் தடாதகையென் றிட்டுமுடி சூட்டு வாயிப், பொன்னனையா டனக்கிறைவன் வருமபொழுதோர் முலைமறையும் புந்தி மாழ்கே, லென்னவர னருளாலோர் திருவாக்கு விசும்பிடைநின் றெழுந்த தன்றே.

(இ-ள்.) அரசனே! உனது திருமகளுக்குப புதல்வர்களுக்குச் செய்யுஞ் சடங்குபோலச் சடங்குகள் எல்லாவற்றையும் வேதம் விதித்த கிரமப்படி செய்து, தடாதகையென்று நாமகரணஞ்செய்து முடிசூட்டக்கடவாய். இந்தப் பொன்போலும் (அரிய திருவுரு வாய்ந்த) பெண்ணுக்கு நாயகன் வருங்காலத்திலே (இடையிலுள்ள) ஒரு தனம் மறைந்துபோகும் (அதுவிஷயமாக நீ) மனங்கலங்காதே யென்று, சிவபெருமானது திருவருளினாலே ஓர் அசரீரி ஆகாயத்திலிருந்து தோன்றியது.

அவ்வாக்குச செவிநிரம்ப வன்புவகை யகநிரமப வகில மெல்லா
மெய்வாக்கு மனமொன்ற விழிவாக்கும் புனனிரமப விமலற் போற்றி
நெய்வாக்கு மகநிரப்பி யெழுந்துமனை யொடுஞ்சாலை நீததி ரண்டு
கைவாக்கு மியங்கலிப்பக் கடிமாட மனைபுகுநதான் கழற்கால் வேந்தன்.

(இ-ள்.) அவ்வசரீரி தனது செவியில் நிரம்பவும், அன்பும் சந்தோஷமும் தனது மனதில் நிரம்பவும், மனம்வாக்கு காயங்கள் ஒரு வழிப்படவும், கண்களானவை சிந்தும் ஆனந்த பாட்பமானது மார்பக முழுவதும் நிரம்பவும், வீரகண்டாமணி தரித்த மலயத்துவஜ பாண்டியன் சோமசுந்தரப் பெருமானைத் தோத்திரஞ்செய்து, நெய்யைச் சொரிந்து செய்யும் பூரணாகுதி செய்துமுடித்து, தனதுமனைவியாகிய காஞ்சன மாலையுடன் எழுந்து யாகசாலையை விலகி, இருகரங்களால் தாக்கப்படும் பல வாத்தியங்கள் ஒலிக்க, காவல்பூண்ட தனது அரண்மனையிற் சென்றான். எ-று.

பூரணாகுதி யென்றது யாகஞ்செய்வோர் யாகத்தினிறுதியில் பெருமிதமான நெய்யை யாகாக்கினியிற் பெய்து செய்யும் ஓர் கிரியை.

"இரண்டு கைவாக்குமியம்" எனக் கூறியதனானே பறைமுதலிய தோற்க ருவிகளேயன்றி அதற்கினமாகிய ஏனையவுங் கொள்க. அவை தோற்கருவி - தொளைக் கருவி - நரம்புக்கருவி - கஞ்சக்கருவி - என நால்வகைப்படும். அவற்றுள் பேரிகை முதலியன தோற்கருவி யென்றும், வேய்ங்குழல் முதலியன தொளைக்கருவி யென் றும், வீணைமுதலியன நரம்புக்கருவி யென்றும், தாளமுதலியன கஞ்சக் கருவியெ ன்றுங் கூறப்படும். இவை நான்குடன் கண்டத்தாற் பாடுதலை மிடற்றுக் கருவியெ னக் கொண்டு ஐந்தெனவும் ஒருசாரார் கூறுப.

இரண்டுகை வாக்கும் என்பதற்கு இருபக்கத்திலும் எனப் பொருள்கூறுத லும் பொருந்தும். வாக்கு-எதிரிடல்லாதது; பக்கமென்பது பொருள். (உசு)

முரசதிர்ப்ப மங்கலங்கொண் டெதிர்வருவார் முகத்துவகை முறுவல் பூப்ப
வரசிருக்கு மண்டபம்புக் கினிதமர்ந்து கனகமழை யான்ற கேள்வி
விரசிருக்கு மறையவர்கைப் பெய்தெவர்க்கு மம்முறையால் வெறுப்ப நல்கிப்
பரசிருக்குங் கரதலத்தெம் பரன்கோயி லனிசிறப்புப் பல்க நல்கா.

(இ-ள்.) பேரிகைகள் ஒலிக்கவும், (அஷ்ட) மங்கலங்களைத் தாங்கி எதிரே வருகின்ற (பார்ப்பன) மாதர்களது முகத்திற் சந்தோஷ நகையாகிய புன்னகை யரும்பவும், அரசியல் நடத்துங் கொலுமண்டபத்திற் பிரவேசித்து இனிதாக வீற்றிருந்து நிறைந்த கேள்வியமைந்த வேதியரது கரங்களாகிய விளைநிலங்களில், சுவர்னமாகிய மழையைப் பொழிந்து (மற்ற) எல்லோருக்கும் அவ்வகையே (ஆசையானது) வெறுக் கும்படி கொடுத்து, மழுப்படை தாங்கிய திருக்கரத்தையுடைய எமது இறைவராகிய சோமசுந்தரக்கடவுளது திருக்கோயிலில், செல்வமிக்க திருவிழா முதலியவை அதிக மாய் நடக்க (வேண்டிய பொருளை) கொடுத்து. எ-று.

இதுமுதல் ஐந்துபாடல்கள் குளகம்.

அஷ்டமங்கலங்கள் சாமரம் - பூரணகும்பம் - கண்ணாடி - தோட்டி-முரசு - விளக்கு - கொடி-இணைக்கயல் எனப்படும். தோட்டி - முரசு - கொடி - இணைக்கயல் இந்நான்கையும் விலக்கி இடபம் - ஸ்ரீவற்சம் - சங்கு - சுவத்திகம் என நான்கையுங் கொள்வது முண்டு. ஸ்ரீவற்சம்-குழந்தையை யிடையில் வைத்திருக்கும் ஓர் பெண்வடி வம். சுவத்திகம் - மண்டபரூபம். (உஎ)

சிறைவிடுமின் சிறைக்களமுஞ் சிதைத்திடுமி னேழாண்டு தேயத் தீட்டு
மிறைவிடுமி னயல்வேந்தர் திறைவிடுமி னிறைநிதிய மீட்டு மாயத்
துறைவிடுமி னுலயமு மறப்புறமும் பெருக்குமெனத் தொழாரைக் காய்ந்த
கறைவிடுமின் னயில்வேலான் வள்ளுவனைக் கூய்முரசங் கறங்கச் சாற்றி.

(இ-ள்.) பகைவரைக்கொன்ற உதிரந்தோய்ந்த ஒளிபொருந்திய கூரிய வே லைத்தாங்கிய மலயத்துவஜ பாண்டியன் காவல் செய்துள்ளவர்களை விடுதலை செய்யுங் கள். சிறைச்சாலையையும் அழித்துவிடுங்கள். குடிகளிடத்து வாங்கும் வரிப்பணத்தை ஏழுவருஷம் வாங்காது விடுங்கள். மறுபுலமன்னர் அனுப்பும் கப்பங்களை வாங்காது விடுங்கள். மிகுதியாகிய பொருளைச் சேகரிக்குஞ் சுங்கத்துறையை நீக்கிவிடுங்கள். தேவாலயங்களையும் அறச்சாலைகளையும் பெருகச் செய்யுங்களென்று, வள்ளுவனை யழைப்பித்துப் பேரிகை யறையக் கட்டளையிட்டு. எ-று.

வள்ளுவன்-ஒருசாதியான். பறையறைவோ னெனவுஞ்சிலர் கூறுவர். (உஅ)

கல்யாண மணிமௌலி வேந்தரையுங் கால்யாப்புக் கழலநீத்துக், கொ
ல்யானைப் பரிநெடுந்தே ரரசுரிமை தொன்முறையாற் கொடுத்துப் போக்கிப்,

பல்லாருங் கொள்கவெனப் பண்டாரந் தனைத்திறந்து பசும்பொன் னுடை,
வில்லாரு மணிகொடும்பூண் வெறுக்கைமுத லெனைப்பலவும் வெறுப்ப வீசி.

(இ-ள்.) பொன்னாற்செய்து இரத்தினங்கள் பதித்த கிரீடமணிந்த (பகை) மன்னர்களையும் விலங்குகளைத் தறித்து, கொல்லும் யானைகளையும் குதிரைகளையும் நெடிய தேர்களையும் (அவரவர்கட்குரிய) அரசிய லுரிமைகளையும் பண்டைய முறைப்படி கொடுத்து (அவரவர்களது தேசங்களுக்குப்) போக விடையளித்து விடுத்து, பலருங் கொள்ளக்கடவதென்று பொக்கிஷத்தைத்திறந்து பசிய பீதாம்பரங்களும் பிரகாசம் பொருந்திய ரத்தினங்கள் பதித்த வளைவாகிய ஆபரணங்களும் பொற்கட்டிகளும், முதலாகிய ஏனைய பல பொருள்களையும் (அவரவர்) மனம் வெறுப்பக்கொடுத்து.

கொடும்பூண் - வளைந்த வடிவாகச் செய்த ஆபரணம். சந்திராரம் முதலியன.

கழலநீத்து - ஒரு சொல். (உ௯)

தூமரபின் வருபெருமங் கலகவிகட் கிருநிதியந் துகில்பூண் பாய்மா
காமர்கரி பரித்தடந்தேர் முதலாய பலபொருளுங் களிப்ப நல்கிக்
கோமறுகு களிதூங்கச சுண்ணமொடு மெண்ணெய்விழாக் குளிப்ப நல்கி
மாமதுரா நகரன்றி மற்றுமுள நகரெங்கு மகிழ்ச்சி தூங்க.

(இ-ள்.) நல்ல மரபில்வந்த பெரிய மங்கலப் பாடகர்களுக்குப் பெரிய செல்வமும், வஸ்திரமும், ஆபரணமும், குதிரையும், அழகிய யானையும், குதிரைபூண்ட அகன்ற தேரும், ஆகிய இவை முதலிய பலபொருள்களையுங் களிப்பு மிகக்கொடுத்து, இராஜவீதிகளிற் களிப்பு மீக்கூர வாசனைப பொடிகளோடும் எண்ணெய்ச் சிறப்பையுங் குளிக்கும்படி கொடுத்து, பெரிய மதுராபுரியேயல்லாமல் வேறும் உள்ள எல்லா நகரங்களிலும் (இவ்வண்ணஞ் செய்தலால்) மகிழ்ச்சி மீக்கூரவும். எ-று. (௩0)

இவ்வண்ண நகர்களிப்ப விறைமகனுங் களிப்பெய்தி யிறைவர் சொன்ன
வவ்வண்ணஞ் சாதமுதல் வினைநிரப்பித் தடாதகையென றழைத்துத தேவி
மெய்வ்வண்ண மறையுணரா விறைவிதனை மேனைபோன் மேனு ளேற்ற
கைவ்வண்ணத் தளிர்தீண்டி வளர்ப்பவிம வான்போலக் களிக்கு நாளில்.

(இ-ள்.) இவ்விதமாக மதுராபுரியிலுள்ளோர் மகிழ்வெய்தும்படி மலயத்துவஜ பாண்டியனும் மகிழ்வெய்தி, சோமசுந்தரப் பெருமான் (அசரீரியாகத்) திருவாய்மலர்ந்தருளியபடி சாதகரும முதலிய சடங்குகள் யாவையுஞ் செய்துமுடித்து, தடாதகை எனத் திருநாமமு மிட்டழைத்து, உண்மையாகிய சந்தவிகற்பங்களையுடைய வேதங்களு மறியாத உமாதேவியாரை, காஞ்சனமாலை இமவான் மனைவியாகிய மேனைமுற் காலத்தில் வளர்த்ததுபோல,முன்னுளில் தவஞ்செய்த கைகளாகிய நிறம்வாய்ந்த தளிர்களாற் பரிசித்து வளர்க்க, பர்வதராசனைப்போலக் களிகூருங்காலத்தில். எ-று. ()

திருந்தாத விளங்குதலை யாயமொடு புறம்போந்து சிறார்க்குச் சிற்றில்
விருந்தாக மணற்சிறுசோ றட்டும்வரை யுரங்கிழித்த வேளும் வாய்வைத்
தருந்தாத விளமுலைவாய் வைத்தருந்தப் பாவைதனக் களித்தும் போதில்
வருந்தாதை யண்டமெலாஞ் சிற்றிலிழைப் பாளாய்க்கு மகிழ்ச்சி செய்தாள்.

(இ-ள்.) ஓசை நிரம்பாத இளமைதங்கிய குதலைச் சொற்களையுடைய பெண்கள் கூட்டத்துடன் வீதியிற்சென்று சிறுவீடு (கோலி) சிறுமியர்கட்கு விருந்தாக மணலாகிய சிறு சோற்றைச் சமைத்தும், கிரவுஞ்ச கிரியின் மார்பைக்கீண்ட முருகப் பெருமானும் வாய்வைத்துண்ணாத இளந்தனத்தை வாய்வைத் துண்ணும்படி பதுமைக்குக் கொடுத்தும், தாமரைமலரில் வாசஞ்செய்யும் பிரமதேவன் (வகுத்த) அண்டங்

கள் எல்லாவற்றையும் (நினைப்பு மாத்திரையில்) சிறு வீடாகச் சமைக்கும் பிராட்டியார் தமது தாயாகிய காஞ்சனமாலைக்கு மகிழ்வு மிகச் (சிறுவிளையாட்டு) செய்தருளினார். எ-று.

குமாரக்கடவுளை யீன்றருளியுங் கன்னியாயிருத்தலின் '' இளமுலை'' என்றார்.

வரையுரங்கிழித்தவேள் என்றது.

கிரவுஞ்சன் என்னும் அசுரனொருவன் மலைவடிவாக நின்று, அவ்வழிவரும் முனிவர் பலரையும் மாயையால் வழிதெரியவொட்டாமல் மலக்கித்துன்புறுத்தி வந்தான். அப்படியிருக்கையில் அகத்தியமுனிவர் சிவாக்கினைப்படி தென்றிசை நோக்கிச்செல்லுகையில் அம்மலைவழிவர, முதலிற் சிறிது தூரம் வழிபோற் காண்பித்து, பிறகு அதனைமறைத்து வேறுவழிதோன்றச்செய்து கடைசியில் வந்தவழியுஞ்செல்ல வேண்டிய வழியுந் தெரியவொட்டாமல் மயக்க, அகத்தியமுனிவர் இவனோ ரசுரனென்றுணர்ந்து தமது ஞான திருஷ்டியால் வழியுணர்ந்து மலைவடிவா யுள்ளவனை நோக்கி ''கொடியோனே ! நீ யிம்மலையுருவாகவே நின்று ஸ்ரீ குமாரக்கடவுளது வேற்படையா லழியக்கடவாய்.'' என்றுசபித்து, தென்றிசை நோக்கிச் சென்றனர். அம்மலையில், சூரபன்மனது இளைய தம்பியாகிய யானைமுகங்கொண்ட தாரகாசுரன் வாசஞ்செய்திருந்தனன். ஸ்ரீ முருகக்கடவுள் சூரசம்ஹார நிமித்தமாக அவ்வழி வருகையில் தாரகனை யெதிர்த்துப் போர்புரிந்து அவனது மாயைகளை விலக்கிச் சத்தியாகிய வேற்படையைச் செலுத்த, அது தாரகாசுரனையும் அவன் வாழ்ந்திருந்த கிரவுஞ்சகிரியையும் மாய்த்தது. இதனாற் கிரவுஞ்ச னிறந்தானென்பது. இதனை,

கந்தபுராணம் - தாரகன் வதைப்படலம்.

''தாரகன் மார்பமென்னுந் தடம்பெரு வரையைக் கீண்டு
சீரிய கிரவுஞ் சத்திற் சேர்ந்துபட் டுருவிச் சென்று
வீரமும் புகழுங் கொண்டு விளங்கிய தென்ன வங்கட்
சோரியுந் துகளு மாடித் துண்ணென மீண்ட தன்றே'' என்பதனானறிக.

நீட்டுவா ளிரண்டனைய கண்களிப்பத் தோழியர்க்குத் தெரிய வாடிக்
காட்டுவா ளெனக்கழங்கு பந்துபயின் றம்மனையுங் கற்றுப் பாசம்
வீட்டுவாள் மேலொடுகீழ் தள்ளவெமை வினைக்கயிறு வீக்கி யூச
லாட்டுவாள் காட்டுதல்போ லாடினா ணித்திலத்தாம் பசைத்த வூசல்.

(இ-ள்.) (அடியார்கட்குப்) பாசவீக்கத்தைப்போக்கி யருளும் பிராட்டியார், நீட்டிய இரண்டு வாளாயுதங்கள்போன்ற இருகண்களுங் களிகூரத் தோழிப் பெண்கட்கு ஆடிக்காட்டுகின்றவளைப்போல, கழங்காடலையும் பந்தாடுதலையும் பழகி, அம்மனையாடுதலையுங் கற்று, மேலுலகுக்குங் கீழுலகுக்கும் போக்குவரவு செய்ய எங்களை இருவினைகளாகிய கயிறுகளாற் பிணித்து ஊசலாட்டும் அப்பிராட்டியார் (இங்கு அதனை) ஆட்டிக் காட்டுவார்போல முத்துவடம் பூட்டிய ஊசலாடினார். எ-று. (௫௫)

இம்முறையாற் றாயர்க்குந் தோழியர்க்கு மகிழ்துவகை யீந்தா ளாகி
யம்முறையாற் றாதைக்கு மகத்துவகை யீவாளா யாத்த வாய்மைச்
செம்மறையா ரணமுதனூ லீரெட்டுக் கலைமுழுதுந் தெளிந்தா ளாந்த
மெய்ம்மறையார் கலையனைத்து மேகலையா மருங்கசைத்த விமலை யம்மா.

(இ-ள்.) இவ்விதங்களால், தாயாகிய காஞ்சனமாலைக்கும் தோழிமாருக்கும் மனதில் (ஆரா) மகிழ்வளித்தருளி, அவ்விதமாகத் தந்தையாகிய மலயத்துவஜ பாண்டியனுக்கும் மனதில் (ஆரா) மகிழ்வளித்தருள, உண்மைவாக்கியமாகிய திரிபில்

லாத வேதமுதலிய அறுபத்துநான்கு கலைகளையும் முற்றும் (ஐயம்-திரிபு அறியாமை யகல) அறிந்தனர் ; அந்த வுண்மையாகிய வேதமுதலிய நிறைந்த அந்த (அறுபத்து நான்கு) கலைகள் யாவையும் மேகலாபரணமாக இடையில் கட்டிய அப்பிராட்டியார்.

மேகலை யென்பது முன் விளக்கப்பட்டுள்ளது. (கச)

சொல்வாய்மைக் கலைத்தெளிவு முழுமதியைப் பிளந்திருபாற் சொருகி யன்ன
பல்வாய்மைக் கடகரிதேர் பரியுகைக்குந் திறனுமழற் பகழி தூர்க்கும்
வில்வாள்வச் சிரமுதற்பல் படைத்தொழிலுங் கண்டிளமை விழுங்கு மூப்பிற்
செல்வாய்மைத் திறலரசன் திருமகட்கு முடிசூட்டுஞ் செய்கை பூண்டான்.

(இ-ள்.) உண்மைச் சொற்களா லமைந்த நூலின் தெளிவையும், பூரணசந்திரனைப் பிளந்து இருபுறத்திலுஞ் சொருகிவைத்ததுபோன்ற தந்தங்களையும் பொருந்திய கருநிறத்தையும் மரத்தையு முடைய யானையையும், தேரையும், குதிரையையும் நடத்தும் பாகுபாட்டையும், தீப்போலச் சுடும் அம்புகளைச் செலுத்தும் வில்லும், வாளும், வச்சிராயுதமுமுதலிய பல ஆயுதத் தேர்ச்சியையும் பார்த்து, இளமை கழிந்த வார்த்திபப்பருவத்திற் செல்லும் உண்மையாகிய வெற்றி வாய்ந்த மலயத்துவஜபாண்டியன் (தனது) புத்திரியாருக்கு மகுடஞ் சூட்டுஞ் செய்கையிலமைந்தான். எ-று.

சாஸ்திரப்பயிற்சியும், கஜாரூட இரதாரூட அசுவாரூடங்களும், அஸ்திர சஸ்திரப் பிரயோகங்களும் தடாதகைப் பிராட்டியாருக்குக் கைவந்தமை கண்ட மலயத்துவச பாண்டியன் தனது புதல்விக்கு மகுடாபிஷேகஞ் செய்ய எத்தனித்தான் என்பது கருத்து.

"சொல்வாய்மைக் கலைத்தெளிவு" என்றதை "வாய்மைசொல் கலைத்தெளிவு" என்று மாற்றிக்கொள்க. "முழுமதியை * * * கடகரி" என்றதை "முழுமதியைப் பிளந்து இருபாற் சொருகியது அன்ன பல் வாய் மை கடம் கரி" எனப பதப் பிரிவு செய்துகொள்க.

முழுமதி-சோடசகலைகளுடன் கூடிய சந்திரன். எனவே பௌர்ணமிச் சந்திரன் அல்லது பூரணச்சந்திரன் என்க. (கரு)

முடிகவிக்கு மங்கலநாள் வரையறுத்துத் திசைதோறு முடங்கல் போக்கிக்
கடிகெழுதார் மணிமௌலிக் காவலரை வருவித்துக் காவல் சூழ்ந்த
கொடியணிமா நகரெங்கும் விழாவெடுப்ப வழகமைத்துக் குன்ற மன்ன
தொடிகெழுதோட் சுமதிதிரு மணத்தினுக்கு வேண்டுவனசூழ்ந்துசெய்தான்.

(இ-ள்.) மலைபோன்ற வாகுவலய மணிந்த தோளையுடைய சுமதி யென்னும் மந்திரி, மகுடஞ் சூட்டுஞ் சுபதினத்தைத் தீர்மானித்து, திக்குகடோறுந் திருமுகமனுப்பி வாசனைமிகுந்த மலர்மாலை யணிந்த அழகிய கிரீடந்தரித்த மன்னர்களை வருவித்து, அரண் புடைசூழ்ந்த கொடிகட்டிய பெரிய மதுராபுரியிலுள்ளோர் யாவரும் (தத்தம் வீடுகள் தோறும்) சிறப்புச்செய்ய அலங்காரஞ் செய்வித்து, (தடாதகைப் பிராட்டியாரது) திருமகுடாபிஷேகமகோற்சவத்திற்கு வேண்டிய ஆயத்தங்களை (இன்னின்னவென்று) ஆலோசித்து (குறைபாடின்றி)ச் செய்து வைத்தான். எ-று.

சுமதி - பாண்டிமன்னனது முதன் மந்திரி.

காவல்=அரண். அஃது மலை - காடு-மதில் - நீர் என நால்வகைத்து. மகுடாபிஷேகமும் மங்கலகரமாகலின் திருமணம் என்றார். (கசு)

மங்கலதூ ரியமுழங்க மால்யானை யுச்சியின்மிசை வந்த பூத
கங்கைமுத லொன்பதுதீர்த் தமுநிரப்பிக் கதிர்விடுபொற் கடம்பூசித்துப்

புங்கவரை மந்திரத்தீ வளர்த்தமுத மருத்தியெரி பொன்னாற் செய்த
சிங்கமணி யாதனத்தை நேசித்துப் பூசித்துத் தெய்வ மேத்தி.

(இ-ள்.) மலயத்துவச பாண்டியன் மங்கலவாத்தியங்கள் ஒலிக்க, மதமயக்கத்தையுடைய (பட்டத்து) யானையின் மத்தகத்தின்மேரில் வைத்துக்கொண்டுவந்த புனிதமாகிய கங்கைமுதலிய நவதீர்த்தங்களையும் நிறைத்து, கிரணங்களைச் சிந்துகின்ற பொன்னாலாகிய கும்பத்தைப் பூசைசெய்து, மந்திர விதிவழாத வேள்விசெய்து தேவர்களை அவியுணவு உண்பித்து, பிரகாசிக்கின்ற பொன்னாற்செய்து அமைத்த இரத்தின மிழைத்த சிங்காதனத்தை அன்புகொண்டு பூசைசெய்து (அவ்வாதனத்திற்குரிய) அதிதேவதையைப்பணிந்து. எ-று.

"புங்கவரை மந்திரத் தீவளர்த் தமுத மருத்தி" என்பதை "மந்திரத்தீவளர்த்து, புங்கவரை அமுதம் அருத்தி" என அன்வயஞ் செய்க. நவதீர்த்தங்கள் கங்கை-யமுனை - சரசுவதி - நருமதை - காவேரி - குமரி - கோதாவரி - துங்கபத்திரி - தாமிரபர்ணி. தெய்வமேற்றி எனவும் பாடம். ஏற்றல்=ஆவாகனஞ் செய்தல். (௬௭)

திருமுடியை மதயானை மிசைவைத்து நகரைவலஞ் செய்து பூசித்
தருமணியாற் சுடிகையிழைத் தாடகத்தாற் குயிற்றியதோ ரைவாய் நாகம்
பெருமணிநீள் படம்பரப்பி மிசைகவிப்ப வச்சிங்க பீடத் தேற்றிக்
குருமணிவா ணகைமயிலைக் கும்பத்துப் புண்ணியநீர் குளிர வாட்டி.

(இ-ள்.) அழகிய கிரீடத்தை மதம்பொழிகின்ற (பட்டத்து) யானையின்பேரில் வைத்து நகரைப் பிரதக்ஷிணஞ்செய்து பூசைசெய்து, விலையேறப்பெற்ற இரத்தினங்களாற் சூட்டுச்செய்து, ஆடகப்பொன்னாற் செய்தமைந்த ஒரு ஐந்தலை நாகமானது பெரிய மணிகள் பதித்த நெடிய படத்தை மேலே பரப்பி நிழல்செய்ய, நிறந்தங்கிய முத்துப்போன்ற வெள்ளிய பற்களையுடைய தடாதகைப் பிராட்டியாரை அந்தச் சிங்காதனத்தில் எழுந்தருளச்செய்து, குடங்களில் நிறைந்த புண்ணிய (தீர்த்தங்களாகிய நவ) தீர்த்தங்களால் (அவரது திருமேனி குளிர) திருமஞ்சனஞ்செய்வித்து. எ-று.

ஆடகம் - நால்வகைப்பொன்னில் ஒன்று. சுடிகை=உச்சிக்கொண்டை. மயில் - உவமையாகு பெயர்; மயிலின் சாயலை யுடையாளென்பது பொருள். (௬௮)

புங்கவர்மந் தாரமழை பொழியவருந் தவராக்கம் புகலத் தெய்வப்
பங்கயமென் கொம்பனையா ராடமுனி பன்னியர்பல் லாண்டு பாட
மங்கலதூ ரியமுழங்க மறைதழங்க மாணிக்க மகுடஞ் சூட்டி
யெங்கருணைப் பெருமாட்டிக் கரசமைச்சர் பணியுநதன் னிறைமை நல்கா.

(இ-ள்) தேவர்கள் மந்தாரபுஷ்பமாரி வருஷிக்கவும், அரிய தவத்தையுடைய முனிவர்கள் (ஒரு பக்கலில்) ஆசீர்வசனஞ் சொல்லவும், தெய்வத்தன்மையுடைய தாமரைமலர்ந்த மெல்லிய பூங்கொம்பையொத்த அரம்பாஸ்திரிகள் (ஒரு பக்கலில்) நடிக்கவும், முனிபத்தினிகள் (ஒரு பக்கலில்) பல்லாண்டு பாடவும், மங்கலவாத்தியங்கள் (ஒரு பக்கலில்) ஒலிக்கவும், வேதங்கள் (ஒரு பக்கலில்) முழங்கவும், எமது கருணையையுடைய தடாதகைப் பிராட்டியாருக்கு இரத்தினம் பதித்த கிரீடஞ்சூட்டி, அரசர்களும் மந்திரிகளும் பணியத்தக்க தனது அரசுரிமையைத் தந்து. எ-று. (௬௯)

பாலனைய மதிக்கவிகை மிசைநிழற்ற மதிகிரணம் பரப்பி யன்ன
கோலமணிக் கவரிபுடை யிரட்டமலர் மழைதேவர் குழாங்க டூற்றக்
காலையிளங் கதிர்கயிலை யுதித்தெனவெண் கடாயானைக் கழுத்தில் வேப்ப
மாலைமுடிப் பெண்ணரசை மங்கலதூ ரியமுழங்க வலஞ்செய் வித்தான்.

(இ-ள்.) பால்போன்ற (வெண்மைதங்கிய) சந்திரவட்டக்குடை (ஒரு பக்கலில்) மேலே நிழலைச்செய்யவும், (அக்குடையாகிய)சந்திரன்(இருபக்கலிலும்) கிரணங்களைப் பரப்பியதுபோல அழகிய வெண்கவரி இருபக்கலிலும் வீசவும், அமரர்கூட்டங்கள் புஷ்பமாரி சொரியவும், உதயகாலத்திற்றோன்றிய இளஞ்சூரியன் வெள்ளிமலையிலுதயஞ் செய்ததுபோல வேப்பமாலையணிந்த கிரீடத்தையுடைய பெண்ணரசியாரை, மதம்பொழியும் வெள்ளையானையின் பிடரியில் (எழுந்தருளச்செய்து) மங்கலவாத்தியங்கள் ஒலிக்க, நகரைப் பிரதக்ஷிணஞ் செய்வித்தான். எ-று.

சூரியனுதித்தவுடனே இளம்பருவமுடையான்போல, "காலையிளங்கதிர்" என்றார். தடாதகைப் பிராட்டியாரை இளங்கதிராகவும், வெள்ளையானையைக் கயிலைமலையாகவும் உவமித்தார். "கருங்கதிர்" என்றும் பாடம். சூரியன் மலையுச்சியில் உதயமாதல் வழக்கமேயாயினும் உதயகிரியிலேயுதிக்குஞ் சூரியன் கயிலையில் உதித்ததாகக் கற்பித்தலுங், கருஞ்சூரியனெனக் கூறுதலும், இல்பொருளுவமையணி. (௬௦)

விண்ணாடு மொழிகேட்ட மகிழ்ச்சியினுந் திருமகடன் விளக்க நோக்கி
யுண்ணாடு பெருங்களிப்புத் தலைசிறப்பச் சிலபகல்சென் றொழிய மேனாட்
புண்ணாடு வேன்மங்கை குதுகலித்து நடிப்பத்தன் புயமேல் வைத்த
மண்ணாடு மகட்களித்து வானாடு பெற்றானம் மகவு பெற்றான்.

(இ-ள்.) ஆகாயத்திலுண்டான அசரீரியைக் கேட்ட மகிழ்ச்சியைக்காட்டினும், தனது செல்வப்புதல்வியாரது பொலிவைக்கண்டு, தனது மனதிலெழுந்த பெருமகிழ்ச்சி மேலெழுந்தோங்கும்படி (ஆனந்தமயமாய்ச்) சிறிதுகாலங்கழிந்தபிறகு, அப்புத்திரியாரைப் பெற்ற மலயத்துவஜ பாண்டியன் (பகைவருடலில்) புண்படுதலை நோக்கித் திரியும் வேற்படைதாங்கிய வீரலக்ஷுமி களிகூர்ந்து நடனஞ்செய்ய, சென்றநாள்வரையில் தனது தோளில்வைத்து ஆற்றிய மண்ணுலகத்தை (தனது) புதல்வியாருக்குக் கொடுத்து (அப்புதல்வியாரால்) சுவர்க்கலோகத்தை (கொடுக்க)ப் பெற்றான்.

வேன்மங்கை என்றமையின் வீரலக்ஷுமி யென்றாம்.

"மண்ணாடு மகட்களித்து வானாடு பெற்றான்" என்றது "சிற்சகனத்தற் சொருபச் சீரகத்தைச் சேர்தனுமுன் - புற்கையிட்டுப் பெற்ற 'புலியூரோ" என்றது போல, பண்டமாற்றலங்காரம். இதனை வடநூலார் பரிவருத்தனை யென்பர். (௬௧)

விரதநெறி யடைந்தீற்றுக் கடன்பிறவுந் தாதைக்கு விதியா லாற்றி
யரதனமெல் லணைமேற்கொண் டுலகமெலா மொருகுடைக்கீ ழாள்வா ளாளா
சரதமறை யாய்மறையின் பொருளாய்ப் பொருண்முடிவு தானாய்த் தேனி
னிரதமெனப் பூவின்மண மெனப்பரம னிடம்பிரியா வெம்பி ராட்டி.

(இ-ள்.) உண்மையாகிய வேதமே தானாகியும், அவ்வேதத்தின் பொருளே தானாகியும், அவ்வேதப்பொருளின் முடிபேதானாகியும், தேனிலுள்ள சுவைபோலவும், பூவிலுள்ள மணம்போலவும், சிவபிரானிடத்திலிருந்து பிரியாத எமது பிராட்டியார் (தமது தந்தை சுவர்க்கலோகமடைந்ததுமுதல்) விரத நெறியையடைந்து, அந்தியேஷ்டி முதலிய மற்றைய கடன்களையும், அப்பிதாவுக்கு வேதமுறைப்படி செய்துமுடித்து, நுண்ணிய தொழிலமைந்த இரத்தினங்கள்பதித்த சிங்காதனத்தில் வீற்றிருந்து எல்லா வுலகங்களையும் (தமது) ஒரு குடையின்கீழ் அரசுபுரிவாராயினர். எ-று.

"ஒரு குடைக்கீழாள்வா ளானாள்" என்பது பொதுக்கடிந்த ரசாண்டமை குறிப்பித்தவாறு என்க. (௬௨)

மேற்படி - வேறு.

மண்ணரசி றைஞ்ச ஞால மனுவழி புரந்து மாறன்
விண்ணர சிருக்கை யெய்தப் பெற்றபின் விடையோ னுள்ளத்

தெண்ணர சன்ன மென்னத் தென்னவ னீன்ற கன்னிப்
பெண்ணர சிருந்து நேமி யுருட்டிய பெருமை சொல்வாம்.

(இ-ள்.) பூலோகத்திலுள்ள மன்னர்கள் பணிய இவ்வுலகத்தை மனுநூன் முறையாற்காத்து, மலயத்துவஜபாண்டியன் சுவர்க்கலோகத்தில் இந்திரனது ஆதனத்தை யடையப்பெற்ற பிறகு, இடபாரூடராகிய சிவபெருமான் (தமது) திருவுள்ளத்திற் கருதும் அரச அன்னத்தைப்போல, பாண்டியன் (புத்திர காமேஷ்டியாகஞ் செய்து) பெற்ற கன்னிப் பெண்களு ளரசியார் சிங்காதனத்தி லிருந்து (தமது) ஆகஞை சக்கரத்தைச் செலுத்திய பெருமையை இனி யெடுத்துச் சொல்லுவோம். எ-று.

"விண்ணர சிருக்கை யெய்தப் பெற்றபின்" என்றது மலயத்துவஜபாண்டியன் நிலவுலகநீத்து விண்ணுலகு சேர்ந்து இந்திரனுடன் அர்த்தாசனத்தில் வீற்றிருந்தானாகலின் இதனை "மண்ணுடமைகட் களித்து வானாடு பெற்றானம் மகவுபெற்றான்" என இந்தப் படலத்திலேயே முன் வந்திருப்பதாலும், மலயத்துவஜனை யழைத்த படலத்தில் "அலையத்திரி யட்டவனுதனநீத்து" என வருவதாலுமறிக. இதன் முதனூலாகிய ஆலாசிய மகாத்மியமும் இவ்வாறே கூறும். (௪௩)

இன்னிய மியம்பு வார்க்க ளெழுப்பவா னிரவி தோன்றக்
கன்னலைந் தென்னப் பள்ளித் துயிலெழீஇக் கடிநீ ராடித்
தன்னிறை மரபுக் கேற்ற நியதிமா தான மன்பு
துன்னிய கடவுட் பூசைத் தொழின்முத லனைத்து முற்று.

(இ-ள்.) இனிய வீணாநாதத்தில் வல்லவர்கள் எழுப்ப, ஆகாயத்திற் சூரியோதயமாக ஐந்துநாழிகை யென்னும் பொழுது சயனத்திலிருந்து நித்திரை தெளிந்து வாசனையூட்டிய திருமஞ்சனமாடி, தனது க்ஷத்திரியகுலத்திற்குத் தகுதியாகிய கடன்களையும் பெரியதானங்களையும், அன்பின் மிகுதியாற் சிவபூசையாதிய செயல்களையுஞ் செய்துமுடித்து. எ-று.

இதுமுதற் பதினாறு பாடல்கள் குளகம். அவை பிராட்டியார் அரசியல்நடாத்திய வகையைக் கூறும். (௪௪)

திடம்படு மறிஞர் சூழச் சிவபரன் கோயின் முன்னிக்
கடம்படி முளைத்த முக்கட் கரும்பினை மறைவண் டார்க்கும
விடம்பொதி கண்டத் தேனை விதிமுறை வணங்கி மீண்டு
குடம்பயில் குடுமிச் செம்பொற் குருமணிக் கோயி னண்ணி.

(இ-ள்.) திடமாகிய அறிவினையுடைய மந்திரிகள் புடைசூழ்ந்துவர, சோமசுந்தரக்கடவுள் (எழுந்தருளிய) திருவாலயத்தை யடைந்து, கடம்ப விருக்ஷத்தினடியில் முளைத்தருளிய திரிநேத்திரங்களையுடைய கரும்பும், வேதங்களாகிய வண்டுகள் (புடைசூழ்ந்து) ஒலிக்கும் விஷம்பொருந்திய கண்டத்தையுடைய தேனும் போல்பவராகிய அக்கடவுளை (ஆகம) விதிப்படி பணிந்து திரும்பி, கலசங்கள் விளங்குஞ் சிகரத்தையுடைய செம்பொன்னாலாகிய நிறந்தங்கிய மாணிக்கங்கள் பதித்த தமது திருக்கோயிலை யடைந்து. எ-று.

விடம் பொதிந்திருப்பினும் மிக மதுரமுள்ள தென்பார் "மறைவண்டார்க்கும்" என்றார். (௪௫)

அரசிறை கொள்ளுஞ் செம்பொ னத்தாணி யிருக்கை யெய்தி
நிரைசெறி மடங்க லாறு முடங்கின நிமிர்ந்து தாங்க

விரைசெறி மலர்மீ பெய்த வியன்மணித் தவிசின் மேவித்
திரைசெறி யமுதிற் செய்த பாவைபோற் சிறந்து மாதோ.

(இ-ள்.) அரசர்களிடம் இறைப்பணம் வாங்குஞ் செம்பொன்னாற் செய்த கொலுமண்டபமாகிய அரசிருக்கையைச்சேர்ந்து, வரிசையாக நெருங்கியஆறு சிங்கங்கள் வளைந்து கழுத்தை நிமிர்த்துத் தாங்க, வாசமிகுந்த மலர்களை மேலே பரப்பிய பெரிய இரத்தினங்கள் பதித்த ஆசனத்தின்மேல் வீற்றிருந்து, கடலிற்றோன்றிய அமுதத்தாற் செய்த பதுமைபோலப் பொலிவுற்று விளங்கி. எ-று.

இறை = கப்பம். அத்தாணி = கொலுமண்டபம். திரை = அலை. இது தானியாகுபெயராய்ச் சமுத்திரத்தை யுணர்த்திற்று. (௬௬)

அணிந்திதை யமுதின் சாயற் கமலினி யனங்கு காதற்
கனிந்தபார் மகளி ராய்வந் தடைப்பைபொற் களாஞ்சி யேந்த
வினந்திரி பதுமக் கோயி லிருவரு மண்ய ராகிப்
புனைந்தவெண் கவரிக் கற்றை யிருபுடை புரட்டி வீச

(இ-ள்.) (அத்தேவியாருக்குத் திருக்கைலாயகிரியில் அகம்படித்தொண்டு செய்யும்) அனிந்திதையும், அமுதம்போலும் மென்மைத்தன்மையுடைய கமலினியுமாகிய தெய்வப்பெண்கள், (பிராட்டியாரைப் பிரிவாற்றாமல்) அன்பு மிகுந்த மானுடமங்கையராக வந்து, (ஒருபக்கலில்) அடைப்பையும், பொன்னாலாகிய களாஞ்சியையும் ஏந்திநிற்கவும், நிறத்தால் வேறுபட்ட இனப்பொருள்களாகிய தாமரைக்கோயில்களில் வசிக்கும் (திருமகளும், கலைமகளுமாகிய) இருவரும் அம்மானுட மங்கையராகி, அலங்கரித்த தொகுதிகளாகிய வெள்ளிய சாமரைகளை இருபக்கலிலும் நின்று புரட்டி வீசவும். எ-று.

'இனந்திரி பதுமக் கோயி லிருவர்' என்றது பதுமம் என்பது ஒரு பொருளாயினும் நிறவேறுபாட்டால் செந்தாமரை வெண்டாமரையெனப் பெறுதலின். இதனால் செந்தாமரைமலரில் வசிக்குந் திருமகளும், வெண்டாமரைமலரில் வசிக்குங் கலைமகளும் எனப் பொருள் கொள்க.

அடைப்பை - வெற்றிலைப்பாக்குப்பை. அடை = வெற்றிலை. களாஞ்சி-தம்பலப்படிக்கம்.

சாயல் - மென்மை. தொல்காப்பியம் சொல்லதிகாரம் சூத்திரம் ௩௨௫.(௬௭)

செடியுட லெயினச் செல்வன் சென்னிமேற் சுமந்து சாத்துங்
கடியவிழ் மலரிற் பொன்னிக் காவலன் குடக்கோ னேனை
முடிகெழு வேந்த ருள்ளார் முடிமிசை மிலைந்த தாம
மடிமிசைச் சாத்தி நங்கை யாணையா றேவல் செய்வார்.

(இ-ள்.) முடைநாற்றம் பொருந்திய உடலையுடைய வேடவேர்குலத்திற்றோன்றிய கண்ணப்பநாயனார் (தமது) சிகையின்பேரிற் சுமந்து சாத்திய வாசத்தோடு விகசித்த திருப்பள்ளித்தாமம்போல, பொன்னிக்காவலனும் குடக்கோனும் அவர் நீங்கிய கிரீடந்தரித்த அரசராயுள்ளவரும் தமது முடிமேற் சுமந்த மாலையைத் திருவடியிற் சாத்தி, தடாதகைப்பிராட்டியாரது திருவாணைவழி நின்று (ஒருபக்கலில்) ஏவல் செய்து நிற்கவும். எ-று.

கண்ணப்பநாயனார் திருப்பள்ளித்தாமந் தலைமேற்சுமந்து சென்று சாத்தியதையும், அவரது சரிதத்தையும்,

திருத்தொண்டர்புராணசாரம்.

" வேடர்தி புதியுடுப்பூர் வேந்த னுகன்
 விளங்கியசேய் திண்ணனூர் கன்னி வேட்டைக
காடதில்வாய் மஞ்சனமுங் குஞ்சிதரு மலருங்
 காய்ச்சினமென் றிடுதசையுங் காளத்தி யார்க்குத்
தேடருமன் பினிலாறு தினத்தளவு மளிப்பச்
 சீருசிவ கோசரியுந் தெளியவிழிப புண்ணீ
ரோடவொரு கண்ணப்பி யொருகண் ணப்ப
 வொழிகவென வருள்கொடரு குறவின் ரூறே." என்னுந் திருவிருத் தானறிக.

பொன்னி=காவிரிநதி. பொன்னிக்காவலனெனறது காவிரிநதி வளந்தரு நாட்டிற்கு மன்னனாகிய சோழராசன். குடம்=மேற்கு, கோன்=அரசன் எனவே குடக்கோன் மேற்றிசைக்கரசனாகிய சேரராசன் என்க. கோ என்றது " ஆமா கோ னவ்வணையவும் பெறுமே" என்ற சூத்திரப்படி ன் சாரியை பெற்று நின்றது. (சஅ)

வையுடை வாள ராகி மார்புறப பின்னி யாத்த
கையின ராகி யன்னை யென்று தங் கருணை நோக்கஞ
செய்யுமென் றிமையார் நோக்கி நோககுமேற் செங்கை கூப்பி
யுய்குந மெனவாய் பொத்தி யுழையர்தம பணிகேட டுய்வார.

(இ-ள்.) கூர்மைதங்கிய வாட்படை தாங்கினவராகியும், மார்பிற் பொருந் தப் பின்னிக் கட்டிய கைகளையுடையவராகியும், பிராட்டியார் எப்பொழுது தமது கிருபாநோக்கஞ் செய்வாரோ வென்று கண்க ளிமையாமற் பார்த்துநின்றும், (தங்கள் பேரில்) கிருபாநோக்கஞ் செய்வாராகில், செவந்த கைகளைக் கூப்பி நாம் பிழைத்தோ மென்று வாய் பொத்தியும், (பிராட்டியாரது) அருகிலுள்ள ஏவல் செய்வோர் (ஒருபக் கலில்) நின்று தமக்குரிய ஏவல்களைக் கேட்டு உச்சரிக்கவும். எ-று. (சகூ)

ஆங்கவன் மராடர் வேநத னவன்கரு நாடர் வேநத
னீங்கிவன் விராடர் வேந்த னிவன்குரு நாடர் வேந்த
னூங்குவன் சேரன் சென்னி யுவனெனக் கோலாற் சுட்டிப்
பாங்கிரு மருங்குங் காட்டக் கஞ்சுகப் படிவ மாக்கள.

(இ-ள்.) (திறைசெலுத்தும்படி வந்து) அவ்விடத்தில் நிற்கும் அவ்வரசன் மராடநாட்டரசன்; அவ்விடத்து நிற்போன் கருநாடநாட்டரசன்; இவ்விடத்தில் நிற் கும் இவ்வரசன் விராடநாட்டரசன்; இவ்விடம் நிற்போன் குருநாட்டரசன்; இடை யில் நிற்கும் அரசன் சேரராசன்; இடையில் நிற்போன் சோழராசன் என்று, சட்டை தரித்த உருவத்தையுடைய கஞ்சுகமாக்கள் (ஒருபக்கலில்நின்று) இருபாலும் பிரம் பாற்சுட்டி வரிசையாகக் காட்டவும். எ-று.

அவன் இவன் உவன் என்னுஞ் சொற்களும், ஆங்கு ஈங்கு ஊங்கு என்னுஞ் சொற்களும் முறையே சேய்மை அண்மை இடைமையாகிய பொருள்களையுணர்த்தின.

செந்தமிழ் வடநூ லெல்லை தெரிந்தவர் மறைநூ லாதி
யந்தமி லெண்ணெண் கேள்வி யளந்தவர் சமயு மாறும
வந்தவர் துறந்தோர் சைவ மாதவர் போத மாண்ட
சிந்தையு ணர்வுஞ் மாயை வலிகெடச் செற்ற வீரர்.

(இ-ள்.) செந்தமிழ்நூல் வடநூல்களின் வரம்பை யுணர்ந்தவர்களும், வேத நூல் முதலிய கணக்கில்லாத அறுபத்துநான்கு கலைகளையும் அளவுகண்டறிந்தவர்களும், (உட்சமயங்களாகிய) ஆறு சமயநூல்களையுங் கற்றவர்களும், துறவிகளும், சைவ மாதவர்களும், தற்போத வுணர்ச்சிகெட்ட மெய்யுணர்வாகிய கருவியால் மாயையின் வலிமை கெடச் செயித்த மெய்ஞ்ஞானிகளும். எ-று.

"வலிகெடச்செற்ற" என்றதற்கேற்ப,மெய்ஞ்ஞானிகளை "வீரர்" என்றார்.

முன்னிருந் தினிய தேற்று மூத்தவ ரெண்ணி யெண்ணிப்
பன்னுமைந் துறுப்பிற் கால மளந்தறி பனுவன் மாந்தர்
பின்னுமுன் னோக்குஞ் சூழ்ச்சிப பெருந்தகைச் சுமதி யோடு
மின்னமு தனைய கேள்வி மந்திரர் யாருஞ் சூழ.

(இ-ள்.) தம்முன்னிருந்து குணமுள்ளவற்றை (தெளிய)க் கூறும் முதியவர்களும், கணக்கிட்டுச் சொல்லும் ஐந்துறுப்புக்களாற் காலங்களை நியதி செய்தறியும் (சோதிட) நூலாராய்ச்சியில் வல்லவர்களும், மேல்வரத்தக்க காரியங்களையும் முன் நடந்த விருத்தாந்தங்களையும் ஆராய்ந்தறியத்தக்க ஆலோசனையிற் பெருந்தகைமையுடைய சுமதியாகிய முதன் மந்திரியுடன், இனிய அமிர்தம்போன்ற நூற்கேள்வியில் வல்ல மந்திரிகளெல்லாரும் (ஒரு பக்கலில்) சூழ்ந்திருக்கவும். எ-று.

ஐந்துறுப்பு - திதி - வாரம் - நக்ஷத்திரம் - யோகம் - கரணம் எனப்படும்.

மந்திரி குடிகட்கு உறுதி பயத்தலின் "இன்னமு தனைய கேள்வி" என விசேடணங் கொடுத்தனர். (௯உ)

கற்றறி யந்த ணாளர் விருத்திகள் கடவுட் டானத்
தற்றமில் பூசைச செல்வ மறப்புற நடக்கை யேனைச்
செற்றமில் குடிகள் மற்று மமைச்சராற் றெளிந்தும் வெவ்வே
றொற்றுவிட் டுணர்ந்தும் வேறு குறையுண்டே லொறுத்துத் தீர்த்தும்.

(இ-ள்.) (வேதாகமங்களைக்) கற்றறிந்த வேதியர்களது (ஓதல்முதலிய அறுவகைத்) தொழில்களையும், தேவாலயங்களில் நடக்குங் குற்றமில்லாத பூசைச் சிறப்புகளையும், தருமசாலையில் நடக்குஞ் செய்கைகளையும், மற்றைய (தமது செங்கோலின் கீழ்ப்பட்ட) குடிகளின் வாழ்க்கைகளையும், மற்றைய காரியங்களையும், மந்திரிகளைக்கொண்டு (அப்போதைக்கப்போது நேரிற் கண்டாற்போலத் தமது செவிகளால்) பார்த்தறிந்தும், (அவர்கள் கூறுவதே போதாமல்) வேறு வேறு தூதுவரை (ஒருவருக்கொருவர் தெரியாமல்) செலுத்தித் தெரிந்தும், (அவற்றுள்) யாதாயினும் வேறு குறைபாடுகளுளவாயின் தண்டித்து அக்குறைகளைப் போக்கியும். எ-று.

"கண்ணிற் சொலிச் செவியினோக்கு மிறைமாட்சி" என்றும், "ஒற்றிற் றெரியா" என்றும், "சிறைப்புறத் தோர்துமெனப் பொற்றோடுணையாத் தெரிதந்தும்" என்றுங் கூறிய குமரகுருபரசுவாமிகள் திருவாக்கின்படி உண்மையுணரவேண்டுதலின் "அமைச்சராற் றெளிந்தும் வெவ்வேறொற்று விட்டுணர்ந்தும்" என்றார்.

தீயாரைச் செகுப்பதே தருமம்" என்றபடி கொடியோரைத் தண்டனை செய்யாது சற்கருமங்கள் கைகூடாவாகலின் "ஒறுத்துத் தீர்த்தும்" என்றார்.

வேதியர் அறுதொழில்—ஓதல் - ஓதுவித்தல் - வேட்டல் - வேட்பித்தல் - ஈதல் - ஏற்றல் என்பனவாம். (௯௩)

ஆதிபுத் தேசத் தானு மிலக்கண வமைதி யானுஞ்
சோதனை வகைமை யானுஞ் சொன்னூ லனுவா தித்து

நீதியி னவற்றாற் கண்டித் தவ்வழி நிறுத்தித் தம்மில்
வாதிகள் வாதஞ் செய்யுங் கோட்டிமேன் மகிழ்ச்சி கூர்ந்தும்.

(இ-ள்.) முதலாயுள்ள உத்தேசத்தினாலும், இலக்கண அமைவினாலும், பரீட்சை வகையினாலும் பிறர்கூறிய விஷயங்களை அனுவாதஞ்செய்து, நியாய வொழுங்கால் அவற்றைப் பரிகரித்து, அந்த வழியிலே தாபனஞ்செய்து, தருக்கநூலின் முதிர்ச்சியுடையோர் தம்முள் வாதஞ்செய்த வாக்கிய முடிவில் மகிழ்வு கொண்டும். எ-று.

[உத்தேசம் ஆவதுதான் விவரிக்கும் பொருளைப் பெயர்மாத்திரங் கூறல். அதாவது இலக்கியம். இலக்கணமாவது அவ்வியாப்தி முதலிய மூன்று குற்றங்களுமில்லாத தருமம். சோதனை ஆவதுதான் விவகரிக்கும் அப்பொருளில் இவ்விலக்கண முளதோ வெனப் பார்த்தல். அனுவாதம் ஆவது பிறர்கூறுங் கூற்றைத் தானெடுத்துக் கூறுதல். கண்டித்தல் ஆவது இலக்கிய இலக்கண உபநியாச விசேஷணங்களாற் பரிகரித்தல். அவ்வழி நிறுத்தல் ஆவது உத்தேசமாகிய ஆரம்பத்தினின்று விபக்ஷாதிகளைச் சார்ந்து பக்ஷப்போலிகளுக்கு இடஞ்செய்யாது லக்ஷண நிறையாம் ஏதுப்பொருள் ஒருமருங்குஞ் சாய்தலின்றித் தம்மதம் நிறுத்தல். உத்தேசம் - இலக்கணம் - சோதனை இம்மூன்றையும் போதப் பிரகாரமென்பர். அவ்யாப்தி முதலிய மூன்று குற்றங்கள்- அவ்யாப்தி அதிவியாப்தி அசம்பவம். இங்கு அவற்றை விரிக்கப் பெருகும்.] (௩௪)

பையுள பருவாய் நாகப் பள்ளியோ னாதி வானோர்
கையுள வலியா லட்ட கடலமு தனைத்தும் வாரிப்
பொய்யுள மகலக் கற்ற புனிதநூற் புலவர் நாவிற்
செய்யுளின் விளைவித் தூட்டத் திருச்செவி தெவிட்ட வுண்டும்.

(இ-ள்.) படத்தின்கணுள்ள பிளந்த வாயைப்பொருந்திய சர்ப்பசயனத்தில் வீற்றிருக்குந் திருமால் முதலாகிய தேவர்கள், (தமது) கைகளின் வலிமையினாலே க்ஷீராப்தியைக் கடைந்து கொடுத்த அமிர்தமுழுமையும் வாரியெடுத்து, அறியாமையானது மனதினின்றும் அகலக் கற்றுணர்ந்த பரிசுத்தமாகிய நூலுணர்ச்சியில் வல்லவர்கள் (தமது) நாவன்மையாற் செய்யுளுள் அமைவித்து உண்பிக்க, (பிராட்டியார் தமது) திருச்செவிகள் தேக்கெடுக்க உண்டும். எ-று.

செய்யுளுள் அமைவித்தலாவது வீரமுதலிய எண் சுவைகளின் அமைதி. இது பெருங்காப்பியத்தி னுறுப்புகளுளொன்று. இதனைப் பாவமென்பர்.

திருமால் முதலிய தேவர் புலவராகவும், கையின்வன்மை நாவின்வன்மையாகவுங் கொண்டு கூட்டிக்கொள்க. புலவர் என்றது தேவரெனவும், கல்வி வல்லோரெனவும் பொருள்படும். (௩௫)

தொல்லைநான் மறையோர் சைவர் துறந்தவர் யார்க்கு மின்பம்
புல்லவா னமுதுங் கைப்பப் பாகநூற் புலவ ரட்ட
முல்லைவான் முகையி னன்ன வறுசுவை முரியா மூர
னல்லவூ ணருத்தி யன்னார் நாவிருந் தமுது செய்தும்.

(இ-ள்.) அநாதியாகிய நான்குவேதங்களையுமறிந்த அந்தணர்களும் சைவர்களும் துறவிகளுமாகிய யாவர்க்கும் இன்பமிகும்படி, தேவாமிர்தமுங் கசப்பாகப் பாகநூலுணர்ச்சியின் முதியோராற் சமைத்த முல்லையினது வெள்ளிய அரும்புபோன்ற முனை முரியாத அரிசியாற் சமைந்த நல்ல அன்னமும் அறுசுவையமைந்த கறிகளும் ஆகிய உணவை யுண்பித்து, அவர்களது நாவாற்செய்யூட்டிய (வாழ்த்து மொழியாகிய) விருந்தினை அமுதுசெய்தருளியும். எ-று. (௩௬)

எல்லவ னுச்சி நீந்து மெல்லையி னான்கு மாறும்
வல்லவர் சூத ளேதி வகுத்தமூ வாறு கேள்வி
சொல்லவுண் மலர்ந்து மேனை மனுமுதற் றுறைமாண் கேள்வி
நல்லன நயந்து கேட்டு நண்பகற் போது நீத்தும்

(இ-ள்.) சூரியன் (ஆகாயத்தின்) உச்சியிலிருந்து (மேற்கே) செல்லுங்காலத்தில், நான்கு வேதங்களிலும், ஆறு அங்கங்களிலும் வல்ல புலவர்கள் சூதமுனிவர் கூறிப் பாகுபாடுசெய்த பதினெண்புராணங்களைச் சொல்லக்கேட்டு மனமகிழ்ந்தும், ஏனைய மனுநூல் முதலிய நீதியின் மாண்பமைந்த நூல்களுள் (குடிகட்கு நன்மை பயக்கும்) நீதியின் பாகுபாடுகளை விருப்புற்றுக் கேட்டும், (இவ்விதமாக) நடுப்பகற்காலத்தைக் கழித்தும். எ-று.

நான்கு-ஆறு-மூவாறு என்பன தொகைக்குறிப்புச் சொற்கள். (௩எ)

கலைக்குறை விரிப்பா ரொன்ன வறுமையிற் கல்வி போலப்
புலப்படா மருங்கு னல்லா ரெந்திரப் புலவன் பூட்டி
யலைத்திடு பாவை போனின் றாடல்செய் யாடற் கண்ணு
நலத்தகு பாடற் கண்ணு நல்லரு ளூட்டஞ் செய்தும்.

(இ-ள்.) வறுமைத்திசையில், ஒருவர் கற்ற கல்வி (புலப்படாதது) போல, (பிறர் கட்புலனுக்குப்) புலப்படாத இடையையுடைய (நடன) மாதர்கள், சூத்திரப் பாவையாட்டும் உணர்ச்சியில் வல்லான் (சூத்திரக்கயிறு) பூட்டி ஆட்டும் பதுமைபோல நின்று, (பரத) சாஸ்திரப் பொருளை விரித் துரைப்பதெத்துவார்போல ஆடும் ஆடலிலும், பண்சுவை மிக்க பாடலிலும், நல்ல கிருபாநோக்கம் வைத்தருளியும்.

வறுமையிற் கற்ற கல்வி பயன்படாதென்பதை "களிமடிமானி காமிகள் வன்-பிணியன் ஏழைபிணக்கன் சினத்தன்-துயில்வோன் மந்தன்தொன் னூற்கஞ்சித்-தடுமாறுளத்தன் தறுகணன்பாவி-படிறன் இன்னோர்க்குப் பகரார்நூலே" என்னுஞ் சூத்திரத்தா னறிக.

இச்செய்யுளை "வறுமையிற் கல்வி போலப் புலப்படா மருங்கு னல்லார் எந்திரப் புலவன் பூட்டி அலைத்திடு பாவை போல் நின்று, கலைக்குறை விரிப்பா ரொன்ன ஆடல்செய் ஆடற் கண்ணும், நலத்தகு பாடற் கண்ணும், நல்லரு ளூட்டஞ் செய்தும்" என அன்வயங் கொள்க. (௩அ)

இன்னிலை யொழுகுந் தொல்லோ ரியற்றிய தருமம் வேறு
மந்நிலை நிறுத்தும் வேள்வி யறம்பல வாக்கஞ் செய்ய
நன்னிதி யளித்தும் வேள்வி நடத்தியுஞ் செல்வங் கல்வி
தன்னிரு கண்க ளாகத் தழைந்திட வளர்க்கு நாளும்.

(இ-ள்.) கிருகஸ்தாச்சிரமதருமத்தில் ஒழுகும் முன்னோர் செய்த தருமங்களும், அல்லொழிந்த (பிரமசரிய முதலிய மூவகை) ஆச்சிரமங்களின் தருமங்களும், (ஆகிய) அவ்வாச்சிரமங்களை நிலைநிறுத்தும் யாக முதலிய பல தருமங்களும் விருத்தி பண்ணுநிமித்தமாக மிக்க திரவியங்களைக் கொடுத்தும், (தாமே அசுவமேத முதலிய) யாகங்களைச் செய்தும், செல்வமுங் கல்வியும் தமது இருகண்களாக எக்காலமும் உயர்ந்தோங்கும்படி தடாதகைப்பிராட்டியார் வளர்த்தருளுவார். எ-று.

மேலுள்ள பதினாறு செய்யுள்கள் ஒரு தொடராதலால் அவற்றி னிறுதியிலுள்ள வினையெச்சங்கள் பல வடுக்கி வளர்க்கும் என்னும் வினைமுற்றின் முதனிலையைக் கொண்டன.

"செல்வங் கல்வி தன்னிரு, கண்க ளாக" என்றது அவற்றை விருத்திசெய்யப் பொருளும் இயற்றுதற்குக் கல்வியும் இன்றியமையாமையினென்க.

ஆச்சிரமம் நான்கு - அவை பிரமசரியம்-கிரகஸ்தம்-வானபபிரஸ்தம்-சன்னியாசமெனப்படும். அவற்றுள் பிரமசரியம் ஆசிரியனையடைந்து நூல ராய்ந்துநிற்றல். இருகஸ்தம் மனைவியுடன் இல்வாழ்க்கை நடத்தல். வானபபிரஸ்தம மனைவியுடனுயினுந் தனித்தாயினும் வனசஞ்சாரஞ் செய்தல். சன்னியாசம் முற்றத் துறத்தலாம்.

அந்நிலை நிறுத்தும் வேள்வி என்றது இல்லறத்தோர் செய்யவேண்டிய ஐவகை வேள்விகளை. அவை பிரமயாகம் - தேவயாகம் - மானுடயாகம் - பிதி யாகம்- பூதயாக மெனப்படும். அவற்றுள் பிரமயாகம் - வேதமோதல், தேவயாகம் - ஓமம் வளர்த்தல், மானுடயாகம் - விருந்தோம்பல், பிதிர்யாகம் - நீர்க்கடனுற்றல், பூதயாகம் - பலியிடுதலாம்.

இனி, பிரமசரியர் செய்யவேண்டிய வேள்விகள். பிரமயாகம்-தேவயாகம்-பிதுர்யாகம் என மூன்று. வானப்பிரஸ்தர்செய்யும் வேள்விகள் முற்கூறியஐந்துமாம்.

சன்னியாசிகள் செய்யவேண்டிய வேள்விகள் கருமயாகம் - தவயாகம்-செபயாகம் - தியானயாகம் - ஞானயாகங்களுமாம். அவற்றுள், கருமயாகம் - சிவார்ச்சனை முதலியன செய்தல். தவயாகம் - சரீரம் வாடச் சாந்திராயண முதலிய விரதங்களையாச்சிரயித்தல். செபயாகம் - திருமந்திரஞ் செபித்தல். தியானயாகம் - மனம் விஷயங்களிற் பொருந்தவொட்டாமல் தாரணையி னிறுத்தி அஷ்டாஷ்ட மூர்த்தங்களில் ஒன்றைச் சிந்தித்திருத்தல்.

மேற்கூறிய ஞானயாகங்கள் ஐவகைப்படும். அவை ஓதல் - ஓதுவித்தல் - தெளிதல் - தெளிவித்தல் - சிந்தித்தல் எனப்படும். (௩௯)

ஒப்புரு முதலீ றில்லா வொருத்திதன் சத்தி பெற்ற
முப்பெருந் தேவ ராலே முத்தொழி னடத்து மென்று
செப்பலும் புகழுன் றெனனிற் றென்னவன் கன்னி யாகி
யிப்புவி மனுவிற் காக்கு மென்பதென் பேதை மைத்தே.

(இ-ள்.) சமானமும் உருவமும் ஆதியும் அந்தமுமில்லாத சிவசத்தியார் தனது சத்திகளிடத்தி லுண்டான பெரிய திரிமூர்த்திகளாலே (சிருட்டி - திதி - சங்காரமென்னும்) முத்தொழிலையும் நடத்தினுரென்று சொல்வதும், (அச்சத்தியாருக்குப்) புகழல்லவென்று (வேதாகமங்கள்) முறையிடுமாகில், மலயத்துவஜ பாண்டியன் திருமகளாகி இந்நிலவுலகை மனுமுறைப்படி காக்கின்றுரென்று கூறுவது எனது அறியாமையி லடங்கும். (வேறன்று) எ-று.

"என் பேதைமைத்து" என்றது கவிக்கூற்று.

நவாதீத நிலையினின்ற ஒளியுருவான அருட்சத்தியை "ஒப்புருமுதலீறில்லா வொருத்தி" என்றூர். "தன் சத்தி" என்றது அவ்வருட்சத்தியி னிடந்தோன்றிய மகேசை முதலானுரை. (௪௦)

கலிநிலைத்துறை.

வளைசெய் பூண்முலைத் தடாதகை மடவரற் பிராட்டி
விளைசெய் தார்முடி வேய்ந்துதண் குடைமனு வேந்தன்
களைசெய் நூல்வழி கோல்செலக் கன்னியாம் பருவத்
தரசு செய்தலாற் கன்னிநா டாயதந் நாடு.

(இ-ள்.) மலைபோன்ற ஆபரணங்களையணிந்த திருத்தனங்களையுடைய தடாதகையென்னுந் திருநாமத்தையும் மடவரற்றன்மையையு முடைய எமது பிராட்டியார், வாசம் வீசும் மலர்மாலை யணிந்து கிரீடந்தரித்து தட்பமாகிய குடைநீழலில் (வீற்றிருந்து) மனுவரசன் வரையறுத்தமைத்த நீதிநூற்படி செங்கோல் செல்லக் கன்னிப்பருவத்திலே அரசியல் நடாத்திய காரணத்தினால், அப்பாண்டி நாடானது கன்னிநாடு எனப் பெயரெய்தியது. எ-று.

மடவரல் - மடமைக்குணம் வருதலையுடையாள். " அச்சமு நாணமு மடனு மிறிதற்-கிச்சவும் பெண்பாற்குரிய வென்ப " என்றாராகலின் மடமை மாதர்கட்குரிய குணங்களுளொன்று. (௬௧)

இன்ன வாறுமை யவதரித் திருந்தன ளென்னப்
பொன்ன வாவினர் பெறவெறி பொருநைகால் பொருப்பன்
சொன்ன வாய்மைகேட் டகங்களி தூங்கினர் தொழுது
மின்னு வார்சடை முனிவரோர் வினவுரை செய்வார்.

(இ-ள்.) இந்தப்படி உமாதேவியார் (மலயத்துவஜ பாண்டியன் குமாரியாகத்) திருவவதாரஞ் செய்திருந்தனரென்று, பொன்னை இச்சித்தோர் அடையும்படி வீசும் (அலைகளையுடைய) தாமிரபர்ணி நதியைத்தந்த பொதிய மலையில் வசிக்கும் அகத்தியமுனிவா கூறியருளிய உண்மைச்சொல்லை, மின்னல்போன்ற நெடிய சடையையுடைய முனிவர்கள் கேட்டுப் பணிந்து மனங் களிகூர்ந்து ஒரு கேள்வி (சந்தேகத்தால்) கேட்கின்றார்கள் (அதாவது) எ-று. (௬௨)

திருந்து நான்மறைச் சென்னியுந் தீண்டுதற் கரிதா
யிருந்த நாயகி யாவையு மீன்ற வெம் பிராட்டி
விரிந்த வன்புகூர் தக்கனு மவெற்பனும் பன்னாள்
வருந்தி நோற்றலா லவர்க்கொரு மதலையாய் வந்தாள்.

(இ-ள்.) திருந்திய நான்கு வேதங்களின் உச்சியுந் தொடுதற்கரிய இயற்கையுடைய தலைவியாராகிய அண்டாண்ட சராசரங்களையும் பெற்றருளிய எமது பிராட்டியார் அளவில்லாத அன்புமிகுந்த தக்ஷப் பிரசாபதியும், இமாசலமன்னனும் பல காலம் வருந்தித் தவஞ்செய்தலால், அவர்களுக்கு (முற்காலத்தில்) ஒரு குழந்தையாக அவதரித்தருளினர். எ-று.

இதுமுத லிரண்டுபாடல்களால் அம்முனிவர் கேள்வியை விளக்குகின்றார்.

தக்கன் மகளாய்த் தேவியார் தோன்றியது.

பிரமதேவனது மானதபுத்திரரிலொருவனாகிய தக்கன் தனது தவப்புதல்வியாகப் பிராட்டியார் அவதரிக்கவேண்டுமென்று பல காலம் அருந்தவஞ் செய்திருந்தனன். அவ்வாறிருக்கையில், சிவபிரானது கட்டளைபெற்ற உமாதேவியார் காளிந்திநதியிற் கமலாசனத்தின்பேரில் வலம்புரிச் சங்கவடிவாய்ச் சிவநாமங்களை யுச்சரித்துக் கொண்டிருந்தனர். மாசிமாதத்தில் மகநக்ஷத்திரத்தில், தக்கன் தன் மனைவியாகிய வேதவல்லியுடன் ஸ்நானஞ்செய்து திரும்புகையில், இறைவியாரது வலம்புரிச் சங்கவடிவைக்கண்டு கைகளிற்றாங்க அஃது குழந்தை வடிவேற்றமையாற் களித்து, அருகிருந்த மனைவி வேதவல்லிகையி லளித்து உடன்கொண்டு தனது தக்கமாபுரியை யடைந்தனன். வேதவல்லி அம்மையாரை வளர்த்துவந்தனள். பிறகு தேவியார் தவஞ்செய்து சிவபிரானைமணந்து திருக்கைலை யடைந்து வீற்றிருந்தனர் என்பது. (இது விரிக்கப் பெருகும்).

இதனை - கந்தபுராணம் - தக்ஷகாண்டம்.

"போனதோர் தக்க னென்போன் புரைதவிர் புனற்கா ளிந்தித்
தூநதி யிடைபோய் மூழ்கித் துண்ணென வரலு மோர்பாற்
றேனிமிர் கமல மொன்றிற் சிவனிடத் திருந்த தெய்வ
வானிமிர் பணிலம் வைக மற்றவ னதுகண் ணுற்றான்."

"கண்ணுறுவா னினிமகிழ்ந்தே கையினையுற் றெடுத்திடுங்காற் காமர் பெற்ற
பெண்ணுருவத் தொருகுழவி யாதலும்விம் மிதப்பட்டுப் பிறைதாழ் வேணி
யண்ணலருள் புரிவரத்தாற் கவுரியே நம்புதல்வி யானு ளென்று
வுண்ணிகழ்பே ருணர்ச்சியினாற் கானுற்றுத் தேவர்குழா மொருவிப் போனான்"
என்பதனு னறிக. (௬௩)

வெற்பன் மகளான சரிதம் முன் விளக்கப்பட்டுள்ளது.

மனித்த னாகிய பூழியன் மகளென வீங்குத்
தனித்த காரணம் யாதெனத் தமனியப் பொதுவிற்
குனித்த சேவடிக் கன்புடைக் குடமுனி யருள்கூர்ந்
தினித்த தோர்கதை கேண்மினென் றெடுத்துரை செய்வான்.

(இ-ள்.) (அவ்வாறிருக்க) மானுடனாகிய பாண்டியன் திருமகளாய் இவ்வுல கத்தில் (சிவபிரானி னின்றும்) தனித்துவந்த காரணம் யாது? என வினவ, பொன்னம் பலத்தில் நடனஞ்செய்தருளிய செவந்த திருவடிக்கு அன்பினையுடைய அகத்தியமுனி வர் கிருபை மிகுந்து, (முனிவர்களே!) இன்பத்தைத்தரும் ஒரு சரிதமுள்ளது (அத னையுங்) கேட்பீர்களாகவென்று எடுத்துச்சொல்லத் தொடங்கினர். எ-று.

மனிதன் - மனித்தனென நின்றது விரித்தல். (௬௪)

விச்சு வாவசு வெனுமொரு விச்சையன் பயந்த
நச்சு வாள்விழி மடந்தைவிச் சாவதி நாம
மச்சு வாகத மொழியினு ளம்பிகைக் கன்பு
வைச்சு வாழ்வுறு மனத்தினு டாதையை வணங்கா.

(இ-ள்.) விச்சுவாவசு வென்னும் பெயரையுடைய ஒரு கந்தர்வன் பெற்ற, விஷம் பூசிய வாட்படைபோன்ற விழிபொருந்திய மகளாகிய விச்சாவதி யென்னும் பெயரமைந்த அந்தக் கிளிபோலும் மொழியையுடையவள் உமாதேவியாரிடத்தில் அன்புவைத்து வாழும் மனமுடையவளாய்த் தனது தந்தையைப் பணிந்து. எ-று.

இதுமுத லிரண்டுபாடல்கள் குளகம்.

விச்சையன் - இசைநூலில் வல்லவன். ஈண்டு, கந்தர்வனெனப் பொருள் கூறினோம் இதனை,

ஆலாசிய மகாத்மியம்.

[Grantha text, illegible]
[Grantha text, illegible]"—என வருவதனுனறிக.

ஐய வம்பிகை தன்னையா னன்பினுல் வழிபட்
டுய்ய வேண்டுமென் றுளவ னுலகெலாம் பயந்த
தையன் மந்திரந் தனைமக டனக்குப தேசஞ்
செய்ய வந்நெறி யொழுகுவாள் செப்புவாள் பின்னும்

(இ-ள்.) தந்தையே! யான் உமாதேவியாரை அன்போடு வழிபட்டொழுகிக் கடைத்தேறவேண்டுமென்று கூறினள். அவ்விச்சுவாவசு (அவள் வேண்டுகோளுக்கிரங்கி) சமஸ்த லோகங்களையும் பெற்றருளிய உமாதேவியாரது திருமந்திரத்தைத் தனது புத்திரிக்கு உபதேசஞ்செய்ய, அத்திருமந்திரத்தின் வழிபட்டொழுகும் விச்சாவதி மேலும் (தன் தந்தையை நோக்கிச்) கூறுவாள். எ-று. (௬௬)

இறைவி தன்னையா தரிப்பதற் கிம்பரிற் சிறந்த
குறைவி னன்னகர் யாதெனக் கூறுவான் கேள்வித்
துறைவி ளங்கினோர் பயில்வது துவாதச முடிவென்
றறைவ ளம்பதி யவனிமேற் சிவபுர மாமால்.

(இ-ள்.) உமாபிராட்டியாரை வழிபாடு செய்தொழுக இவ்வுலகத்திற் சிறப்புப்பொருந்திய குறைவில்லாத நல்ல நகரம் யாது? என்று வினவ (விச்சுவாவசு) சொல்கின்றான். துவாத சாந்தமென்று சொல்லப்படும் வளப்பத்தையுடைய க்ஷேத்திரம் (ஒன்றிருக்கின்றது) அதுதேர்ச்சியுடையோர் வசிக்கும் தலமாய்ப் பூவுலகிற் சிவலோகமாகும். எ-று. (௬௭)

சேடு தாங்குமூ வுலகினிற் சிறந்தன சத்தி
பீட மூவிரு பத்துநான் கவற்றின்முற் பீட
மாட மோங்கிய மதுரையா மற்றது போகம்
வீடும் வேண்டிய சித்தியும் விளைப்பதென் றெண்ணா.

(இ-ள்.) பெருமை மிகுந்த திரிலோகங்களிலுமுள்ள மேம்பட்டனவாகிய சத்திபீடங்கள் அறுபத்துநான்காகும். அவற்றுள் முதன்மையாகிய பீடமானது மாடங்கள் உயர்ந்து நெருங்கிய மதுரையென்னும் க்ஷேத்திரமாகும். அந்த க்ஷேத்திரமானது போகம் மோக்ஷம் (அவரவர்) விரும்பிய இஷ்டசித்திகள் (இவற்றைத்) தரத்தக்கது என்று மனதில்நினைத்து. எ-று.

இதுமுதல் மூன்று பாடல்கள் குளகம்.

மூவிருபத்து + நான்கு - உம்மைத்தொகை.

சத்திபீடங்கள் அறுபத்துநான்காவன:—

“கொல்லாபுரத்திலுள்ள இலக்ஷ்மிபீடமும், மாதுபுரத்திலுள்ள ரேணுகா பீடமும், துளஜாபுரபீடமும், சப்தசிருங்க பீடமும், இங்குலையிலுள்ள ஜுவாலாமுகி பீடமும், சாகம்பரியிலுள்ள பிராமரிபீடமும், ஸ்ரீரக்ததந்திகையிலுள்ள துர்க்கைபீடமும், விந்தியாசலபீடமும், ஸ்ரீ காஞ்சியிலுள்ள அன்னபூரணிபீடமும், விமலையிலுள்ள பீமாதேவிபீடமும், ஸ்ரீ சந்திரலையிலுள்ள கௌசிகிபீடமும், நீலபருவத்திலுள்ள நீலாம்பரிபீடமும், ஸ்ரீ நகரத்திலுள்ள சாம்புநதேசுவரிபீடமும், நேபாளத்திலுள்ள இரகசியகாளிபீடமும், மதுரையிலுள்ள மீனாக்ஷிபீடமும், வேதாரணியத்திலுள்ள சுந்தரி பீடமும், ஏகாம்பர பீடமும், மஹாலசத்திலுள்ள யோகேசுவரிபீடமும், சீனாவிலுள்ள நீலசரசுவதிபீடமும், வைத்தியநாதத்திலுள்ள வகலைபீடமும், மணித்தீபத்திலுள்ள புவனேசுவரிபீடமும், காமயோனி மண்டலமென்கிற திரிபுரபைரவிபீடமும், புஷ்கரத்திலுள்ள காயத்திரிபீடமும், அமரேசத்திலுள்ள சண்டிகைபீடமும், பிரபாசத்திலுள்ள புஷ்கரேக்ஷணிபீடமும், நைமிசத்திலுள்ள தேவிபீடமும், புஷ்கராக்ஷத்திலுள்ள புருகூதபீடமும், ஆஷாடத்திலுள்ள இரதிபீடமும், சண்டமுண்டியிலுள்ள தண்டினி பீடமும், பாரபூதியிலுள்ள பூதிபீடமும், நாகுலத்திலுள்ள நகுலேசுவரிபீடமும், அரிச்சந்திரத்திலுள்ள சந்திரிகைபீடமும், ஸ்ரீகிரியிலுள்ள சாரதாபீடமும், பஞ்சநதத்திலுள்ள திரிசூல பீடமும், ஆம்பிராதகேசுவரத்திலுள்ள சூக்ஷ்மபீடமும், மகாகாளத்

திலுள்ள சாங்கரிபீடமும், மத்தியமாபிதத்திலுள்ள சர்வாணிபீடமும், கேதாரத்திலுள்ள மார்க்கதாயினிபீடமும், பைரவத்திலுள்ள பைரவிபீடமும், கயையிலுள்ள மங்களபீடமும், குருக்ஷேத்திரத்திலுள்ள ஸ்தாணுப்பிரியை பீடமும், வியபிநாகுலத்திலுள்ள ஸ்வாயம்புபீடமும், கனகலத்திலுள்ள உக்கிரபீடமும், விமலேசுவரத்திலுள்ள விசுவேசைபீடமும், அட்டகாசத்திலுள்ள மஹானந்தபீடமும், மகேந்திரத்திலுள்ள மகாந்தகைபீடமும், பீமத்திலுள்ள பீமபீடமும், வஸ்திராபதத்திலுள்ள பவானிபீடமும், அர்த்தகோடிகையிலுள்ள உருத்திராணிபீடமும், அவிமுத்தத்திலுள்ள விசாலாக்ஷிபீடமும், மகாலயத்திலுள்ள மகாபாகைபீடமும், கோகர்னத்திலுள்ள பத்திரகாளிபீடமும், பத்திர கர்ணிகத்திலுள்ள பத்திரைபீடமும், சுவர்ணாக்ஷத்திலுள்ள உற்பலாக்ஷிபீடமும், ஸ்தாணுவிலுள்ள ஸ்தாண்வீசைபீடமும், கமலாலயத்திலுள்ள கமலைபீடமும், சகமண்டலத்திலுள்ள பிரசண்டைபீடமும், குரண்டலத்திலுள்ள திரிசந்திகைபீடமும், மாகோடத்திலுள்ள மகுடேசுவரிபீடமும், மண்டலேசத்திலுள்ள சாண்டகைபீடமும், காலஞ்சரத்திலுள்ள காளிபீடமும், சங்குகர்னத்திலுள்ள தொனிபீடமும், தூலகேசுவரத்திலுள்ள தூலபீடமும், ஞானிகளிதயகமலத்திலுள்ள பரமேசுவரிபீடமுமாம்."

இவற்றை வடமொழியிலுள்ள தேவிபாகவதத்திற் காண்க. (௬அ)

அல்லு மெல்லும்வா னகர்க்கத வடைப்பின்றிச் சுவர்க்கச்
செல்வ ரங்கடைந் துமைபருள் சித்தியால் வினையை
வெல்லு வாரதான் றெந்தையோ டைவர்கள் வேண்டி
நல்வ ரம்பல வடைந்தனர் நமர்களந் நகரில்.

(இ-ள்.) சுவர்க்கலோக வாழ்க்கையையுடைய தேவர்கள் இரவிலும் பகலிலும் (தமது) சுவர்க்கலோகத்தின் கதவை மூடுவதில்லாமல் அந்த மதுரைக்ஷேத்திரத்தை யடைந்து மீனாக்ஷியம்மையருளிய சித்தியால் (தமது) வினையைச் செயிப்பார்கள். அதுவுமல்லாமல், என்பிதாவுடன் நம்மவர்கள் ஐந்துபேர் அந்த நகரத்தில் (பிராட்டியாரைப்) பணிந்து பல நல்ல வரங்களைப் பெற்றார்கள். எ-று.

ஐவர்—பஞ்சசுரர் - வசுபூர்ணர் - சொச்சவித்தியர் - யக்ஷர் - வித்தியாதரரெனப்படுவர். இவருள், பஞ்சசுரரென்பவர் விச்சுவாவசுவின்பிதா. (௬௯)

எம்மை யாரையும் யாவையு மீன்றவங் கயற்க
ணம்மை யாவரே யாயினு மன்பினா தரிப்போ
ரிம்மை யாகிய போகம்வீ டெண்ணியாங் கெய்தச்
செம்மை யாகிய வின்னருள் செய்துவீற் றிருக்கும்.

(இ-ள்.) நம்மையும் (மற்ற) எல்லோரையும் எல்லாவற்றையும் பெற்றருளிய மீனாக்ஷியம்மையார் (தம்மை) அன்புடன் பூசனைசெய்பவர்கள் யாவரானாலும் (அவர்கள்) இம்மைப்பலனாகிய போகத்தையும் மறுமைப்பலனாகிய மோக்ஷத்தையும் எண்ணியவகையே அடையும்படி, செம்மையாகிய இனிய கிருபைசெய்து வீற்றிருக்கின்றார். எ-று.

சராசரங்களையும் என்பதுதோன்ற "யாவையும் யாரையும்" என்றார். யாரையு மென்பதனால், தேவகணமேயன்றி மனிதர்முதலானாரையுங் கொள்க. (எ0)

என்ற தாதையை யிறைஞ்சின னனுஜைகொண் டெழுந்தாண்
மன்றன் மாமலர் வல்லிபோல் வழிக்கொடு கானங்
குன்ற மாறுபின் கிடப்பமுன் குறுகின னன்பி
னின்ற வாதியெம் பணையருணிறைந்தவந் நகரில்.

(இ-ள்.) என்று (இவ்வாறு) உரைத்த தந்தையாகிய விச்சுவாவசுவைப்பணிந்து விடைபெற்றுக்கொண்டு (அங்கிருந்து) புறப்பட்டு வண்டுகள்சூழ்ந்த வாசமிக்க பூங்கொடி (நடத்தல்) போல நடந்து, காடும் மலையும் ஆறும் தனக்குப்பின்கழிய, அடியாரன்பிற் குடிகொண்ட (தெய்வமாதர்கட்கு) முதல்வராகிய எமது மீனாக்ஷிதேவியார் திருவருள்நிறைந்த அம்மதுரைநகரில் முன்சென்றாள். எ-று. (எக)

அடைந்தி ளம்பிடி யாடல்போ லாடக கமலங்
குடைந்து நான்மறைக் கொழுந்திடங் கொண்டுறை குறிப்பாற்
படர்ந்த பொன்மலை வல்லியைப் பணிந்துவெங் கதிரோன்
றொடர்ந்த வான்சுறா மதியமே யாதியாத் தொடங்கா.

(இ-ள்.) (அத்திருநகரத்தைச்) சேர்ந்து இளமையான பெண்யானை நீராடுவதுபோல, பொற்றாமரைத்தீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்து, நான்குவேதங்களின் உச்சியாகிய (பரசிவத்தின்) வாமபாகத்தைத் தமக்கிடமாகக்கொண்டு வாழுங் குறிப்புடன் (ஒருபக்கலிற்) படர்ந்த இமயவல்லியாகிய மீனாக்ஷியம்மையாரை நமஸ்கரித்து வெவ்விய கிரணங்களையுடைய சூரியன் பெரிய மகரராசியிற்சேர்ந்த தை மாதமே முதலாகத்தொடங்கி. எ-று.

இது முதல் நான்குபாடல்கள் குளகம்.

"நான்மறைக்கொழுந்து" என இறைவரைக் கூறினமைக்கேற்ப "படர்ந்த பொன்மலைவல்லி" எனப் பிராட்டியாரைக் கூறினர். வல்லி=கொடி. (எ௨)

எழுசீர்க்கழி நெடிலடி யாசிரியவிருத்தம்.

பெரும்பக னல்லூண் கங்குலூ ணுதவப் பெற்றவூ ணிலைமுதற் பல்லூ
ணரும்பொடி யெள்ளுண் சாந்திரா யணமா னைந்துபா னறியநீர் தருப்பை
யிரும்புத னுனிநீர் காலிவை நுகர்ந்து மியற்றரும் பட்டினி யுற்றும்
வரம்புற விரா று திங்களு நோற்று வாடிமேல் வருஞ்சுறா மதியில்.

(இ-ள்.) (ஆரம்பித்த தை மாதத்தில்) பகற்காலத்தில் நல்லஉணவுபுசித்தும், (மாசிமாதத்தில்) இராப்பொழுதில் உண்டும், (பங்குனிமாதத்தில்) கிடைக்கபெற்றபோது புசித்தும், (சித்திரைமாதத்தில்) இலைமுதலிய காய்கனிகளை உண்டும், (வைகாசிமாதத்தில்) நுண்ணிய எள்ளுப்பொடியைப் புசித்தும், (ஆனிமாதத்தில்) சாந்திராயண விரதமாற்றியும், (ஆடிமாதத்தில்) பஞ்சகவ்வியநுகர்ந்தும், (ஆவணிமாதத்தில்) பாலுண்டும், (புரட்டாசிமாதத்தில்) நல்ல நீரைக்குடித்தும், (அற்பிசிமாதத்தில்) தருப்பையாகிய பெரிய புல்லின்முனையிலுள்ள நீரைப்பருகியும், (கார்த்திகைமாதத்தில்) காற்றைப்புசித்தும், (மார்கழிமாதத்தில்) இருத்தற்கரிய பட்டினியாயிருந்தும், இவ்விதமாக வரிசைப்பட, பன்னிரண்டுமாதமுந் தவஞ்செய்து (உடல்) இளைத்து, (அவற்றின்) மேல்வரும் தைமாதத்தில். எ-று.

சாந்திராயணமென்றது முன்விளக்கப்பட்டது. நுகர்ந்து என்பது கடைநிலைத்தீவகமாகலின் ஒவ்வொன்றிற்கும் ஒட்டிக்கொள்க. (எ௩)

சன்னிதி யடைந்து தாழ்ந்துநின் றிளமாந் தளிரடிக் காஞ்சிசூழ் கிடந்த
மின்னிகர் மருங்கு லிழையிடை நுழையா வெம்முலைச் செம்மலர்க் காந்தட்
பொன்னிரை வளைக்கை மங்கலக் கழுத்திற் பூரண மதிக்கலை முகத்தி
னின்னிசை யளிசூ ழிருட்குழற் கற்றை யிறைவியை யிம்முறை நினையா.

(இ-ள்.) திருச்சந்நிதியையடைந்து பணிந்து நின்று, இளமாந்தளிர்போன்ற திருவடியையும், காஞ்சியென்னும் ஆபரணம் புறத்திற்சூழ்ந்த மின்னல்போன்ற இடை

யும், இழையிடைபுகாத வெவ்விய தனத்தையும், செம்பொன்னாலாகிய வளையலின் வரிசைகளையுடைய காந்தள்மலர்போன்ற திருக்கரங்களையும், மங்கலம்பொருந்திய திருக்கழுத்தையும், சோடசகலைகளையுடைய சந்திரன்போன்ற முகத்தையும், இன்னிசைபொருந்திய வண்டுகள்சூழ்ந்த அந்தகாரம்போன்ற நெருங்கிய அளகபாரத்தையுமுடைய தலைவியாராகிய மீனாக்ஷியம்மையாரை, இந்த (பாதாதிகேச) முறையாக மனதில் தியானித்து. எ-று.

பாதாதிகேசம் என்றது, பாதமுதற் சிரம்வரையிற் கிரமமாகத் துதித்தல் இதற்கு எதிர் கேசாதிபாதம் - இவ்விருவகையும் பணிதல் ஆன்றோர்வழக்கென்க. ()

கோலயாழ்த் தெய்வம் பராய்க்கரங் குவித்துக் கொழுஞ்சுடர்ப் பசுங் கதிர் விளக்கம், போலநூற் பொல்லம் பொதுதுபொன் னிறத்த போர்வை நீத் தவிழ்கடி முல்லை, மாலைமேல் வீக்கிப் பத்தாபின் கிடப்ப மலர்க்குழ ரேய்சுவற் கிடத்திச், சேலைநேர் விழியாண் மாடகந் திரித்துத் தெறித்தனள் பண்ணறிந் திசைப்பாள்.

(இ-ள்.) சேற்கெண்டையை நிகர்த்த விழிகளையுடைய விச்சாவதி, அழகிய வீணைக்குரிய அதிதேவதையைப் பணிந்து கைகூப்பி (வீணையையெடுத்து)க் கொழுவிய கிரணத்தையுடைய பாலசூரியனது ஒளிபோல விளங்கும் நூற்சரட்டாற் பொத்திய பொன்னிறந்தங்கிய உறையை நீக்கி, விகசித்த வாசனைபொருந்திய முல்லைமாலையை (அதன்) மேலே சூட்டி, பத்தர் பின்புறமிருக்க மலரணிந்த கூந்தல்சாய்ந்த பிடரியில் (வீணையைச்) சாத்தி, மாடகத்தைமுறுக்கி நரம்பைத்தெறித்துப பண்ணின்திறங்களைத் தெரிந்து பாடுகின்றாள். எ-று.

மாடகம் = முறுக்காணி.

நால்வகைப்பண்ணும், அவற்றின் திறங்களும், பண்ணின்கிரியைகளும், ஆதியவிஷயங்கள் முன்னர் நன்குவிளக்கப்பட்டுள்ளனவாகலின் ஆங்குக் கண்டு கொள்க. (எரு)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

ஒளியா லுலகீன் றுயிரனைத்து மீன்போற் செவ்வி யுறநோக்கி
யளியால் வளர்க்கு மங்கயற்க ணன்னே கன்னி யன்னமே
யளியா லிமவான் றிருமகளா யாவி யன்ன மயில்பூவை
தெளியா மழலைக் கிளிவளர்த்து விளையாட் டயருஞ் செயலென்னே.

(இ-ள்.) (தனது) ஒளியால் (சமஸ்த) லோகங்களையும் பெற்றருளி, அவ்வுயிர்களையெல்லாம் மீனைப்போலப் பக்குவமுறப் பார்த்தருளிக் கிருபையுடன் இரட்சிக்கும் அங்கயற்கண்ணியாகியதாயே! கன்னித்தன்மையையுடைய பெண்ணன்னமே! கருணையால் இமயமன்னன் திருமகளா யவதரித்து உயிர்போன்ற மயிலையும் நாகணவாய்ப் புள்ளையும் ஓசை நிரம்பாத மழலைச் சொல்லையுடைய கிளியையும் வளர்த்துத் திருவிளையாடல் புரியுஞ்செய்தி யாது காரணம்? எ-று.

"ஆவியன்ன மயில் பூவை தெளியா மழலைக்கிளி" என்பதை "ஆவி அன்னம் - மயில் - பூவை - தெளியா மழலைக்கிளி" எனப் பொருள்கூறினும் பொருந்தும். மீன்கள் முட்டையிட்டுச் சென்று திரும்பிப்பார்க்குங்கால் அம் முட்டைகளெல்லாங் குஞ்சாதல்போலத் தான் சிருட்டிசெய்தருளிய ஆன்மகோடிகளை உமாதேவியார் திருக்கடைக்கணோக்கஞ்செய்து பக்குவமுறப் பார்த்தருளுங் காரணப்பற்றி அங்கயற்

கன்னி யெனவும் மீனாக்ஷி யெனவுந் திருநாமம் வந்ததென்பார். "உயிரனைத்து மீன் போற் செவ்வியுற நோக்கி அளியால் வளர்க்கு மங்கயற்கணண்ணே" என்றார். (௭௬)

அண்டக் குவைவெண் மணச்சிறுசோ றுக்கித் தனியே விளையாடுங்
கொண்டற் கோதாய் படியெழுத லாகா வுருவக் கோகிலமே
கொண்டற் குடுமி யிமையவரை யருவி கொழிக்குங் குளிர்முத்தால்
வண்டற் குதலை மகளிரொடும் விளையாட் டயரும் வனப்பென்னே.

(இ-ள்.) பல்லாயிரங்கோடி அண்டத்தொகுதி யாவையும் வெள்ளிய மணற் சிறுசோறு போலச் சிருட்டிசெய்து தனக்கோர் துணைவேண்டாது விளையாடிவரும் மேகம்போலுங் கூந்தலையுடைய தாயே ! ஒப்பெழுதக் கூடாத திருவுருவத்தையுடைய குயிலே ! மேகந் தவழுஞ் சிகரத்தையுடைய இமாசலத்திலுள்ள அருவிகள் கொழிக் குந் தண்ணிய முத்தினால் விளையாட்டையுங் குதலைச் சொல்லையுமுடைய சிறுமிய ரோடு சிற்றில் (கோலி) திருவிளையாடல் புரியும் அழகு யாது காரணம் ? எ-று. (௭௭)

வேத முடிமே லானந்த வுருவாய் நிறைந்து விளையாடு
மாத ரரசே முத்தநகை மானே யிமய மடமயிலே
மாத ரிமவான் றேவிமணி வடந்தோய் மார்புந் தடந்தோளும்
பாத மலர்சேப் புறமிதித்து விளையாட் டயரும் பரிசென்னே.

(இ-ள்.) வேதத்தினுச்சியில் ஆனந்தத்தையே திருமேனியாகக்கொண்டு பூர ணமாகி விளையாடுகின்ற பெண்ணரசியே ! முத்தம்போலுந் தந்தங்களையுடைய மான் போல்பவளே ! இமயமலையிற் றோன்றிய இளமயிலின் சாயலையுடையாளே ! அழகிய இமோபர்வதராசனது தேவியாகிய மேனையினது முத்துவடந் தாங்கிய மார்பிலும், பணைத்த தோள்களிலும் (உனது) திருவடித்தாமரை செவப்பூறக்குதித்துத் திருவிளை யாடல் புரியுந்தன்மை யாது காரணம் ? எ-று. (௭௮)

எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

யாழியன் மொழியா லிவ்வழி பாடி யேத்தினு ளாகமெய் யுள்ளத்
தாழிய வன்பின் வலைப்படு கருணை யங்கயற் கண்மட மானோர்
சூழிய நுழைமெல் விளங்குழற் குதலைத் தொண்டைவா யகவைமூன் றெய்தி
வாழிளங் குழவி யாகியா லயத்து வந்துநின் றுள்வரங் கொடுப்பாள்.

(இ-ள்.) வீணை நரம்பிலெழுந்த இசைவாக்கியங்களால் இவ்வகையாகப் பாடித்துதிக்க, உண்மையாகிய அடியாரது இதயத்தில் ஆழ்ந்த அன்பாகியவலையிலகப் படுங் கிருபையுடைய மீனாக்ஷியம்மையார், ஒப்பில்லாத சூட்டணியணிந்த மெல்லிய சிறியகூந்தலையும் குதலைச்சொல்லையும் கொவ்வைக்கனிபோன்ற வாயையும் மூன்று வயதையும் பொருந்தி விளங்குஞ் சிறிய பெண்குழந்தையின் திருவுருவங்கொண்டு (அவ்விச்சாவதிவேண்டிய) வரத்தைப் பிரசாதித்தற்பொருட்டுத் திருக்கோயிலின்கண் வந்து நின்றருளினார். எ-று. (௭௯)

இறைஞ்சியஞ் சலித்தா டன்னையெம் மன்னே யாதுவேண் டினையென
வென்று, நிறைந்தபே ரன்பு நின்னடிப் போதி னீங்கலா நிலைமைதந் தரு
ளென், றறைந்தன ளின்னும் வேண்டுவ தேதென் றருளலும் மகவுரு வாகிச்,
சிறந்துவந் தென்பா லருள்சுரந் திருக்கத் திருவுளஞ் செய்யெனப் பணிந்
தாள்.

(இ-ள்.) பணிந்து (துதித்து) கைகூப்பிய அவ்விச்சாவதியை எமது தாயா கிய மீனாக்ஷிதேவியார் (நோக்கி) நீ எதனைவிரும்பினையென்று வினவியருள, (தாயே!) உனது திருவடித்தாமரையில் எக்காலமும் நிறைந்துள்ள பேரன்புநீங்காதநிலைமைதந் தருளாயென்று விண்ணப்பஞ்செய்தாள். (தேவியார்) இன்னமும் நீ விரும்பியது யா தென்று வினவியருள, (இப்பொழுது காக்ஷியளித்த) இபபிள்ளைமைத் திருவுருவங் கொண்டு என்னிடத்துச் சிறக்கவந்து கருணைசெய்திருக்கத் திருவுள்ளஞ்செய்வாய் என்று (மீண்டும்) நமஸ்கரித்தாள். எ-று. (அ0)

சிவபரம் பரையு மதற்குநேர்ந் தருள்வா டென்னவர் மன்னனும் மல யத், துவசனென் றொருவன் வருமவன் கற்பின் றுணைவியாய் வருதியப் போ தும், றவமக வாக வருவலென் றன்பு தந்தனள் வந்தவா றிதுவென், றுவ மையில் பொதியத் தமிழ்முனி முனிவர்க் கோதினு னுள்ளவா றுணர்ந்தார்.

(இ-ள்.) சிவசத்தியாகிய மீனாக்ஷியம்மையார் அவள்விருப்பிற்கிணங்கித்திரு வருள்செய்கின்றவர், பாண்டியர் மரபில் அரசனாக மலயத்துவஜனென்று ஒருபாண்டி யன் பிறப்பான். நீ அவனது (இல்வாழ்க்கைக்குரிய) கற்பினையுடைய மனைவியாகவரு வாய். அக்காலத்தில் உனது தவப்பலனால் ஓர் புத்திரியாக அவதரிப்பேனென்று கிருபைசெய்தனர். (பாண்டியனுக்குத் திருமகளாகத்தேவியார்) அவதரித்தவகை இது வாமென்று, ஒப்பில்லாத பொதியமலையில் வீற்றிருக்கும் அகத்தியமுனிவர் முனிவர்க ளுக்குக் கூறியருளினார். அம்முனிவர்கள் (சந்தேகநீங்கி) உள்ளபடி தெரிந்தார்கள்.()

தடாதகைப்பிராட்டியார் திருவவதாரப்படலம்.

முற்றிற்று.

---

ஆகூ திருவிருத்தம் - ரு௬௬.

---

ஐந்தாவது

# திருமணப்படலம்.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

தண்ணபுகழ் தென்னன் செல்வத் தடாதகைப் பிராட்டி தானே
திணைசெய்நீர் ஞாலங் காத்த செயல்சிறி துரைத்தேன் றெய்வ
விரைசெய்பூங் கோதை மாதை விடையவன் மணந்து பாராண்
டரசுசெய் திருந்த தோற்ற மறிந்தவா றியம்ப லுற்றேன்.

(இ-ள்.) பூமியிலுள்ளார் புகழ்ந்துபேசும் மலயத்துவஜ பாண்டியனது செல் வப்புதல்வியாராகிய தடாதகைப்பிராட்டியார் அலைகளை யெறியுங் கடல்புடைசூழ்ந்த நிலவுலகத்தை (அரசுபுரிந்து) இரட்சித்தருளிய சரிதத்தை (தெரிந்தவரையில்) சிறிது கூறினேன். தெய்வமணம் வீசுகின்ற மலரணிந்த கூந்தலையுடைய அத்தடாதகைப் பிராட்டியாரை இடபாரூடராகிய சிவபெருமான் திருமணம்புரிந்து நிலவுலகத்தை யாண்டு அரசுசெய்து, (சோமசுந்தரபாண்டியராக) வீற்றிருந்த திருவிளையாடலைத் தெரி ந்தவரையில் சொல்லப்போகிறேன். எ-று. (க)

காயிரும் பரிதிப் புத்தேள் கலியிரு டிமிப்பச் சோதி
பாயிருங் குடைவெண் டிங்கட் படரொளி நீழல் செய்ய
மாயிரும் புவன மெல்லா மனுமுறை யுலக மீன்ற
தாயிளங் குமரி யாகித் தனியர சிருக்கு நாளில்.

(இ-ள்.) பிரகாசிக்கின்ற பெரிய ஆக்கினைசக்கரமாகிய சூரியன் துன்பமாகிய இருளை (ஒரு பக்கலில்) ஓட்டவும், ஒளிபரவிய பெரிய (சந்திரவட்டக்) குடையாகிய தாவள்யமான சந்திரன் பரந்த வொளியாகிய நிழலை (ஒருபக்கலில்) செய்யவும், சமஸ்தலோகங்களையும் பெற்றருளிய (ஜகன்) மாதா (ஆகிய உமாதேவியார்) இளங் கன்னியாகத் திருவவதாரஞ்செய்து, பெரிய பூமிமுழுவதும் மனுநூல் முறைப்படி (பொதுக்கடிந்து) ஏக சக்ராதிபத்தியஞ் செலுத்திவருங்காலத்தில். எ-று.

காய்தல்=கோபித்தல். ஈண்டு இருளைக்காயும் எனப்பொருள் பயத்தலின் பிரகாசிக்கும் எனப்பொருள் கூறினோம். (உ)

மருங்குறேய்ந் தொளிப்பச் செம்பொன் வனமுலை யிறுமாப் பெய்தக்
கருங்குழற் கற்றை பானுட் கங்குலை வெளிறு செய்ய
விரங்குநல் யாழ்மென் றீஞ்சொ லின்னகை யெமபி ராட்டிக்
கருங்கடி மன்றல் செய்யுஞ் செவ்விவந் தடுத்த தாக.

(இ-ள்.) ஒலிக்கின்ற நல்லவீணாநாதம்போன்ற மென்மைத்தன்மை வாய்ந்த இனியசொல்லையும் இனிய புன்முறுவலையுமுடைய (தடாதகை யென்னும் திருநாமம் வாய்ந்த) எமதுபிராட்டியாருக்கு, இடையானது தேய்ந்துமறையும்படி செவந்தபொன் னிறம் பொருந்திய சந்தனக்கோலமெழுதிய தனங்கள் மேலெழுந்தோங்கவும், கரிய கூந்தற்றொகுதியானது நடுராத்திரியை வெண்ணிறஞ்செய்யவும், அரிய திருக்கலியா ணஞ்செய்யும் பருவம் வந்தடுக்க. எ-று.

இதுமுதல் மூன்றுபாடல்கள் குளகம். (ங)

பனிதரு மதிக்கொம் பன்ன பாவையைப் பயந்தா ணோக்கிக்
குனிதர நிறையப் பூத்த கொமபனாய்க் கின்னங் கன்னி
கனிதரு செவ்வித் தாயுங் கடிமணப் பேறின் றென்னுத்
துனிதரு நீர ளாகிச் சொல்லினள் சொல்லக் கேட்டாள்.

(இ-ள்.) குளிர்ந்த சந்திரன் உதயமான பூங்கொம்புபோன்ற தடாதகைப் பிராட்டியாரைப்பெற்ற காஞ்சனமாலைகண்டு, வளையும்படி நிரம்பமலர்ந்த பூங்கொம்பு போன்ற வுனக்கு, கன்னிப்பருவ முதிர்ந்தகாலம் வந்தும் இன்னமும் விவாகப்பலன் கிடைக்கவில்லையேயென்று, வருந்துந் தன்மையுடையவளாய்க் கூறினள் (தனது தாயாகிய காஞ்சனமாலை அவ்வாறு வருத்தத்துடன்) சொல்லக்கேட்ட தடாதகைப் பிராட்டியார். எ-று.

எல்லாவுறுப்புகளுங் குறைவின்றி நிறைந்தனவென்னுங் குறிப்பால் "குனி தர நிறையப் பூத்த கொம்பு" என்றார். செவ்வித்து-து-பகுதிப்பொருள் விகுதி. (ச)

அன்னைநீ நினைந்த வெண்ண மாம்பொழு தாகும் வேறு
பின்னைநீ யிரங்கல் யான்போய்த் திசைகளும் பெருநீர் வைப்பு
மென்னது கொற்ற நாட்டி மீள்வலிங் கிருத்தி யென்னுப்
பொன்னவிர்மலர்க்கொம்பன்னுள்பொருக்கெனவெழுந்துபோந்தாள்.

(இ-ள்.) தாயே! நீ யெண்ணிய வெண்ணம் நிறைவேறுங்காலத்தில் முடி யும். பின்பு நீ வேறுபட நினைத்து வருந்துதலொழிக. நான் சென்று அஷ்டதிசைக

ளிலும், கடல் சூழ்ந்த இந்நிலவுலகிலும் எனது வெற்றியை நிலைநிறுத்திவருகின்றேன்; நீ இங்கிருப்பாயாகவென்று, பொன்னிறத்துடன் பிரகாசிக்கும் பூங்கொம்புபோன்ற அத்தடாதகைப்பிராட்டியார் விரைந்தெழுந்து (யுத்தசந்நத்தமாகப்) புறத்திற்சென்றருளினர். எ-று.

இரங்கல் - எதிர்மறை வியங்கோள்வினைமுற்று. அல் - எதிர்மறைவியங்கோள் விகுதி. (ரு)

தேம்பரி கோதை மாதின் றிருவுளச் செய்தி நோக்கி
யாம்பரி சுணர்ந்த வேந்த ரமைச்சரும் பிறரும் போந்தார்
வாம்பரி கடாவித் திண்டேர் வலவனுங் கொணர்ந்தான் வையந்
தாம்பரி வகல வந்தா ளேறினாள் சங்க மார்ப்ப.

(இ-ள்.) வாசமிகுந்த அளகபாரத்தையுடைய தடாதகைப்பிராட்டியாரது திருவுள்ளக்குறிப்பையறிந்து போருக்குரித்தாகிய திறங்களையறிந்த மன்னாகளும் மந்திரிகளும் மற்றைச்சேனை வீரர்களும் உடன் வத்தார்கள். தாவிச்செல்லுங் குதிரைகளைச் செலுத்தித் திண்ணிய தேரைப் பாகனுங் கொண்டுவந்தான். இவ்வுலகததிலுள்ளார் துன்பத்தினின்றும் நீங்கும்படி அவதரித்த அப்பிராட்டியார் (வெற்றிச்) சங்குகள் முழங்கும்படி (அந்தத்) தேரிலேறியருளினர். எ-று.

வலவன் - இரதசாரதி. (சு)

ஆர்த்தன தடாரி பேரி யார்த்தன முருடு மொந்தை
யார்த்தன வுடுக்கை தக்கை யார்த்தன படகம் பம்பை
யார்த்தன முழவந தட்டை யார்த்தன சின்னந் தாரை
யார்த்தன காளந் தாள மார்த்தன திசைக ளெங்கும்.

(இ-ள்.) தடாரியும் பேரியும் முழங்கின; முருடும் மொந்தையும் கோஷித்தன; உடுக்கையும் தக்கையும் ஆரவாரித்தன; படகமும் பம்பையும் முழங்கின; மத்தளமும் தட்டையும் ஒலித்தன; சின்னமுந் தாரையும் இசைத்தன; காளமுந் தாளமும் அதிர்ந்தன; (ஆகிய இவைபோன்ற வாத்தியங்களால்) திசைகளெட்டிலும் சத்தித்தன. எ-று.

மேற்கூறிய வாத்தியங்களில், மொந்தையும் படகமும் ஒருகட்பறையென்றும், தட்டை கற்கடிப்பறையென்றுங் கூறுவர். தடாரி முருடு தக்கை யென்பன பூர்வகாலத்திருந்த ஒருவகை வாத்தியங்கள். வாத்திய வோசை திசையெல்லாம் பறந்தது என்பது கருத்து. (எ)

வீங்கிய கொங்கை யார்த்த கச்சினர் விழிபோற் றைப்ப
வாங்கிய சிலையே றிட்ட கணையினர் வட்டத் தோல்வா
டாங்கிய கையர் வைவேற் றளிர்க்கையர் பிணாத்தெய் வம்போ
லோங்கிய வாயத் தாரு மேறினா ருடனத் திண்டேர்.

(இ-ள்.) பூரித்த குயங்களை வீக்கிய கச்சினை யுடையவர்கள் - தங்கள் கண்போலத் தைக்க வளைவாகிய வில்லிற்பூட்டிய அம்புகளை யுடையவர்கள் - கேடகத்தையும் வாளாயுதத்தையுந் தாங்கிய கையையுடையவர்கள் - கூர்மையாகிய வேற்படைதரித்த மாந்தளிர்போன்ற (செந்நிறம் வாய்ந்த) கையையுடையவர்கள் (ஆகிய) பெண்தெய்வம்போலும் அழகில் மிக்க ஆயத்தாரான மெய்க்காவலருள் பலர் அத் தடாதகைப்பிராட்டியாரோடும் அந்தத் திண்ணிய இரதத்தில் ஏறினார்கள். எ-று.

ஆயம் = கூட்டம். (அ)

கிடைப்பன வுருளாற் பாரைக் கீண்டுபா தலத்தி னெல்லை
யடைப்பன பரந்த தட்டா லடையவான் றிசைக ளெட்டு
முடைப்பன வண்ட முட்டி யொற்றிவான் கங்கை நீரைத்
துடைப்பன கொடியாற் சாரி சுற்றுவ பொற்றிண் டேர்கள்.

(இ-ள்.) இடசாரி வலசாரியாகச் சுழன்றுவரும் பொன்னாலாகிய வலிய தேர்கள் (தமக்குப்) பூட்டிய சக்கரங்களால் நிலத்தைப் பிளந்து பாதலத்தின் எல்லையை அடைக்காநின்றன; விசாலமாகிய தட்டினால் பெரிய அட்டதிசைகளையும் (ஒருசேர) உடைக்காநின்றன. துவசங்களால் ஆகாயத்தை முட்டி அவ்வாகாய கங்காசலத்தைப் பொருந்திச் சுவறச்செய்வன. எ-று. (௯)

செருவின்மா தண்டந் தாங்கிச் செல்லும்வெங் கூற்றமென்ன
வருவிமா மதநீர் கால வரத்தவெங் குருதிக் கோட்டாற்
கருவிவான் வயிறு கீண்டு கவிழுநீர் வாயங் காந்து
பருகிமால் வரைபோற் செல்வ பரூஉப்பெருந் தடக்கை யானை.

(இ-ள்.) பருத்தல் பொருந்திய பெரிய கைகளையுடைய யானைகள் அருவியாற்றைப்போல பெரிய மதநீர் பொழிய, செவ்விய உதிரந் தோய்ந்த கொடிய தந்தங்களால் (உலகினுக்குத்) துணைக்காரணமாகிய மேகத்தின் வயிற்றைக் கிழித்து (அதிலிருந்து) சொரியும் நீரை வாயைத் திறந்து பருகி, போர்க்களத்திலே பெரிய தண்டாயுதத்தை யேந்திச் செல்லுங் கொடிய இயமனைப்போலவும், பெரிய மலைகள் (கால் பெயர்ந்து) செல்வதுபோலவும் (ஒருபக்கலிற்) செல்லாநிற்கும். எ-று. (௧0)

ஒலியவார் திரையி னன்ன வொழுங்கின யோக மாக்கள்
வலியகா லடக்கிச் செல்லு மனமெனக் கதியிற் செல்வ
கலியநீர் ஞாலங் காப்பான் கடையுக முடிவிற் றோற்றம்
பொலியும்வாம் புரவி யொன்றே போல்வன புரவி வெள்ளம்.

(இ-ள்.) ஒலிபொருந்திய கடல்சூழ்ந்த பூலோகத்தை(கலியினின்றுநீக்கிப்) பாதுகாததற்பொருட்டு, கலியுகமுடிவிலே அவதாரஞ்செய்யுந் தாவிச் செல்லுங் குதிரை யொன்றே பல்வகை நிறவேறுபாடுற்று வந்தாற் போன்ற குதிரைக்கூட்டங்கள், ஒலியையுடைய நெடிய அலைபோன்ற ஒழுங்கினையுடையன. யோகசாதனஞ் செய்வோர்களது வலிதங்கிய காற்றையடக்கி யொருவழிப்பட்டுச் (சிவத்திற்) செல்லும் மனம் போல, ஒருவழிப்பட்டு விரைந்து செல்லும் நடையினை யுடையன. எ-று.

தடாதகைப்பிராட்டியார் திக்குவிஜயஞ் செய்யப் புறப்பட்டபொழுது அவருடன்சென்ற குதிரைகள் இறைச்சலிட்டு நீண்டு வரிசையாகச்சென்றமையின், "பரிநிரைதிரையாய்த்துள்ள" என இந்நூலிலேயே பின்னர் வருவதற்கேற்ப, இறைந்து செல்லும் நெடிய அலைபோன்றிருந்தன வென்பார் "ஒலியவார்திரையி னன்னவொழுங்கின" என்றும், யோகிகள் உச்வாச நிச்வாசங்களைத் தம்வயப்படுத்தி, விடயவாதனையிற் செலுத்தாது சிவத்திற் செலுத்தும் மனதுபோல, பாகரது கைவசப்பட்டுத் தமதிச்சையின்படி செல்லாது அவர் செலுத்தும்வழி சென்றனவென்றும், அவ்வாறு செல்வுழி, பல்வகைவேகத்தினுஞ் சிறந்த மனோவேகமாகச் சென்றனவென்றும் உணர்த்த "வலியகா லடக்கிச் செல்லு மனமெனக் கதியிற் செல்வ" என்றும், உலகமானது ஓயாதிரையுங் கடலாற் சூழப்பட்டிருத்தலின் "கலியநீர் ஞாலம்" என்றும், அவ்வுலகிலுள்ள மாந்தர் கலிகாலக் கொடுமையாற் பல்வகைத் துயருற்று வருந்துகையில், அவர்கள் துன்பத்தை யொழித்துச் சுகமடைய, திருமால் கலிகாவதாரமெனக்

குதிரைவடிவுடன் அவதரிப்பாராகலின் "ஞாலங்காப்பான் கடையுகமுடிவிற் றேற் றம்புரியும் வான்புரவி" என்றும், அவ்வகைய திருமாலாகிய புரவியே பல்வே றுருக் கொடு விளங்கினது போலுங்குதிரைத்தொகுதி விளங்கின வென்பார் "புரவி யொன்றே போன்றன புரவி வெள்ளம்" என்றுங் கூறினர்.

திருமால் புரவியாகவருவது.

முன்னொருகாலத்தில்தேவர்கட்கும் அசுரர்கட்கும் பெரும்போர்நிகழ்ந்தது. அதில் தேவர்கள் அசுரரோடு போர்புரிய ஆற்றாமல் திருமாலிடஞ்சென்று முறையிட, அவர் கருடவாகனரூடராய்ப் பஞ்சாயுதங்களையுந்தாங்கி அசுரர்களையெதிர்த்து ஹதஞ்செய்தனர். அவர்செய்யுங்கொடுமைக்குத்தப்பிச்சில அசுரர் ஓடினர். அதுகண்டு அச்சுதன் அவர்களைத்துரத்திக்கொண்டு பின்செல்ல அவர்கள் பிருகுமுனிவரது ஆசிரமத்தையடைந்து அவர் மனைவி கியாதி யென்பவர்பால் அடைக்கலம்புக, விண்டு அவ்வாசிரமத்தில் நுழைய, கியாதி திருமாலைக்கண்டு வணங்கிநிற்ப, "நீ கொடியோர்க்கு அடைக்கல மளித்தாய்" எனக்கோபித்துத் தன்கைச்சக்கரத்தால் கியாதியின் சிரத்தைத் துணித்தனர். கியாதி இறைச்சலிட்டு நிலமிசைவிழ, அவ்விறைச்சலாற் பிருகுமுனிவர் நிஷ்டைகலைந்து நடந்தயிருத்தாந்தங்களை யுணர்ந்து துயர்க்கடலிலாழ்ந்து கண்செவந்து இதழ் துடித்து கோபாக்கினி சிந்தும்படி மாதவனைநோக்கி "அடா பாவி! நீ உன்மாமியென்றுகருதாது அவள் சிரசைத்துணித்தாய். சைவசமயமே சற்சமயமும், சிவபெருமானே லோகநாயகனும், யாங்கள் சிவபிரானையன்றி வேறொருவரையும் அன்புடன் பணியாதவர்களும் சததியமானால் நீ பத்துப் பிறவியடைந்து பரிதபிக்கக்கடவாய்" என்று சபித்து, சுக்கிரபகவானால் உயிர்பெற்றொழிந்த கியாதியோடு உயிர்வாழ்ந்திருந்தனர். இது நிற்க: சாபமேற்ற திருமால் சிவலிங்கார்ச்சனையால் அதனை யொழிக்கக்கருதிப் பாசுபதவிரதம்பூண்டு உடல் முழுதும் திருவெண்ணீறு சண்ணித்து உருத்திராக்கமாலைபூண்டு நெடுங்காலம் சிவார்ச்சனை செய்துகொண்டிருந்தனர். அவர் தவத்திற்களிகூர்ந்த சிவபெருமான் இடபாரூடராய்க் காட்சியளித்து "யாதுவரம் வேண்டும்" என, "அண்ணலே! பிருகுமுனிவன் சாபம் என்னைத் துன்புறுத்தாவண்ணம் அருள்புரிக" எனப் பிரார்த்திக்க, "நம்மடியார் கூறியவைபிழைபடா. ஆயினும் எம்மை யருச்சித்தபலனால் அப்பத்துப் பிறவியும் உலகோபகாரமாகுக. அவற்றுள் ஐந்திற்றண்டமும் ஐந்தில் அனுக்கிரகமும் புரிவோம்" என்றருள்செய்து அந்தர்த்தானமாயினர். இதில் கடைப்பட்டது கலிகாவதார மென்பர். மற்றைய அவதாரங்களை இடம்வந்துழி விளக்கிக் கூறுவாம். இதனை,

காஞ்சிப்புராணம் - அரிசாபபயந் தீர்த்தபடலம்.

"கண்டு மாழ்கினன் றுயரின் மூழ்கினன் கண்கள் சேந்தன னிதழ்து டித்தனன்
மண்டு வெங்கனற் பொறிதெ றிப்பவம் மாத வன்றனை வெகுண்டு நோக்கியே
யொண்டி றற்கரத் தரிவை தன்னைமற் றுனக்கு மாமியைத் தறுக ணாளனாய்
மிண்டி னற்கொலை செய்து வீட்டினாய் வெய்ய பாவிநீ யுய்யு மா றெவன்.

எடுத்தி யம்பிய சைவமே யெவற் றுள்ளு முத்தம மென்னில் யாங்களுங்
கடுத்த தும்பிய கண்ட னாடிக் கமல மன்றிவே றறிகி லேமெனிற்
றொடுத்து ரைக்குமிச் சத்தி யத்தினாற் றுயரு ழந்துநீ நரக வல்வினை
மடுத்த வெம்பிறப் பொருப தெய்துக வழுவு பாதகக் குழிசி யாயினாய்.

நின்ற னக்கடித் தொண்டு பூண்டவர் நெறிய லாப்புறத் தாற்று நூல்வழித்
துன்று தீக்கையுற் றென்று முப்புரஞ் சுட்ட வெம்பிரான் றிருவ டிப்பிழைத்.

தொன்று மூன்றுதண் டேந்தி யீனரா யுலப்பி லாதவெந் நிரைய மூழ்குக
மன்ற வங்கவர்க் கண்டு ளோர்களும் மறலி யூரினைக் குறுகி மாய்கவே.
எவ்வ மேமிகுந் தமோகு ணம்பயின் றிழிந்த யோனியின் மீன மாதியாம்
வெவ்வி னைப்பவந் தோறு மின்னலே விரவு வாயென வெய்ய சாபமிட்
டவ்வி யத்தொகை யிரிய நூறுமப் பிருகு வெள்ளியா லாவி பெற்றெழு
நவ்வி வாள்விழி மனைவி தன்னொடு நாரி பாகனை வழுத்தி வைகினன்." எனவும்,

"பெருகு மன்பினு லெம்மை நீ வழிபடு பேற்று
லிருமை சான்முனி சபித்திடு மையிரு பிறப்புந்
திரிபு றுதல கினுக்குப காரமாந் தெளிநீ
யருளு மைந்தினி லைந்தினிற் றண்டமும் புரிவேம்

நடுவி கந்திடா நம்மடித் தொழும்பரா னுட்டப்
படுவ தொன்றெது வஃதவ்வப் பயன்றனைப் பயந்தே
விடுவ தல்லது பிழையுறு தின்றுநீ மெலிய
வடுமிச் சாபமு மனுபவித் தல்லது விடாதால்." எனவும் வருவனவற்றானறிக. ()

காலி னுங்கடி து செல்லுஞ் செலவினர் கடுங்கட் கூற்ற
மேலினு மிகையுண் டாயின் வெகுண்டுவெந் கண்டு மீளும்
பாலினர் பகுவாய் நாகப் பல்லினும் பில்கு மால
வேலினர் வியா வென்றி வீக்கிய கழற்கால் வீரர்.

(இ-ள்.) (ஒருகாலத்திலும்) அழியாத வெற்றியால் வீரகண்டாமணி தரித்த காலையுடைய வீரர்கள் வாயுவேகத்தைக்காட்டிலும் விரைந்துசெல்லும் நடையையுடையவர்கள் கோபக்கண்களையுடைய இயமன்பேரிலுங் குற்றமிருக்குமாயின் அவனைப் பகைத்து முதுகுபார்த்துத் திரும்புந் தன்மையுடையவர்கள் பிளவுபட்ட வாயையுடைய பாம்பின் (விஷஞ் சொரியும்) பல்லைப்பார்க்கிலும் சிந்தும் விஷத்தையுடைய வேற்படை தாங்கினவர்கள். எ-று.

இதுமுத லிரண்டுபாடல்கள் ஒரு தொடர்.

வெந்=முதுகு. இது வெரிந் என்னுஞ்சொல். ஈண்டுஇடைக்குறையாயிற்று.

எண்புதைத் தெழுந்த வீர ரிவுளிதேர் யானை வெள்ள
மண்புதைத் தனப தாகை மாலைவெண் கவிகை பீலி
விண்புதைத் தன நுண் டூளி வெயில்விடு பரிதிப் புத்தேள்
கண்புதைத் தனபே ரோதை கடலொலி புதைத்த தன்றே.

(இ-ள்.) அளவுகடந்து (இவ்வண்ணமாகத் தடாதகைப்பிராட்டியாருடன்) எழுந்த வீரர்களும் புரவிகளும் இரதங்களும் கஜங்களுமாகிய கூட்டங்கள் பூலோகத்தை (முழுதும்) மறைத்தன. துவசங்களும் மலர்மாலை சூட்டிய வெண்கொற்றக் குடைகளும் மயிற்குஞ்சங்களும் ஆகாயத்தை (முழுதும்) மறைத்தன. (இவற்றின் செல்லுகையா லெழுந்த) நுண்ணிய தூசிப்படலம் வெயில்வீசுஞ் சூரியனது கண்களை மறைத்தன. (இவற்றின் ஆர்ப்பரிப்பா லெழுந்த) பேரொலியானது சமுத்திர வோசையைக் கீழ்ப்படுத்தியது. எ-று.

வெள்ளம் என்னுஞ் சொற்பொருள் பிரிந்து வீரர் முதலிய பெயர்களுடன் கூடி வீரர்க்கூட்டம் இவுளிக்கூட்டம் என நிற்றலின் புதைத்தன வென்னும் அஃறிணைப்பன்மைவினைமுற்றுப்பயனிலை கொண்டது. (கரு)

தேரொலி கலினப் பாய்மான் செலவொலி கொலைவெண் கோட்டுக்
காரொலி வீர ரார்க்குங் கனைபொலி புனைதார்க் குஞ்சி

வாரொலி கழற்காற் செங்கண் மள்ளர்வன் றிண்டோள் கொட்டும்
பேரொலி யண்ட மெல்லாம் பிளந்திடப் பெருத்த தன்றே.

(இ-ள்.) இரதங்கள் செல்கின்ற ஒலியும், கடிவாளம்பூண்டு செல்கின்ற குதிரைகளின் ஆர்ப்பரிப்பும், கொலைத்தொழில் பொருந்திய தாவள்யமான தந்தத்தை யுடைய மேகம் (போன்ற கரிய உருவுடைய யானைகளின்) ஓசையும், வீரர்கள் ஆரவாரிக்கும் மிக்ககோஷமும், வெள்ளிய மாலையணிந்த சிகையையும், நீண்ட ஒலிபொருந்திய வீரக்கழலணிந்த கால்களையும், செவந்த கண்களையுமுடைய வீரர்கள் தமதுவலிய தோள்களைக்கொட்டிக் கர்ச்சிக்கும் பெரிய அதிர்ப்பும் அண்டங்களெல்லாம் பிளவு படும்படி அதிர்ந்தன. எ-று. (கச)

பரந்தெழு பூழி போர்ப்பப் பகலவன் மறைந்து முந்நீர்
கரந்தவன் போன்று மாக் கங்குல்வந் திறுத்த தேய்ப்பச்
சுரந்திரு ணிறைய முத்தின சோதிவெண் குடையும வேந்தர்
நிரந்தபூண் வயிர வாளு நிறைநிலா வெறிக்கு மன்றே.

(இ-ள்.) (இத்தகைய விசேடங்களால் யாண்டும்) பரவி யெழுந்த புழுதி போர்த்தலால், சூரியன் மறைந்து கடலில் ஒளித்தவன்போல மறைய இருள் வந்து குடியிருந்ததைப்போல இருளானது அதிகரித்து நிறைய முத்தால் அலங்கரித்த கிரணத்தையுடைய வெள்ளைக்குடைகளும் அரசர்களேந்திய பூணமைந்த வயிரத்தினாற் செய்த வாளாயுதங்களும் (அவ்விருளைப் போக்க) நிறைந்த நிலாவை வீசாநிற்கும்.

முந்நீர் என்றது ஆற்றுநீர் ஊற்றுநீர் வேற்றுநீர் என மூன்றுநீரையுடையது எனப் பொருள்கூறுவதுமன்றி, சிருட்டி திதி சங்காரமாகிய முத்தொழில்செய்யவல்ல நீர் என்றும் பொருள் கூறுவர். இது பண்புத்தொகை நிலைக்களத்துப் பிறந்த அன்மொழித்தொகைக் காரணப்பெயர். (கரு)

தேர்நிரை கலனாய்ச் செலப் பரிநிரை திரையாய்த் துள்ள
வார்முர சொலியாய்க் கல்ல வாட்கலன் மீனாய்க் கொட்பத்
தார்நிரை கவரிக் காடு நுரைகளாய்த் ததும்ப வேழங்
கார்நிரை யாகத் தானை கடல்வழிக் கொண்ட தன்றே.

(இ-ள்.) தேரின் வரிசைகள் மரக்கலங்களாய்ச் செல்லவும், குதிரையின் வரிசைகள் அலைகளாய்த்துள்ளவும், வார்கட்டிய பேரிகையோசை பேரொலியாய்க் கல்லென்றொலிக்கவும், வாளாயுதங்கள் மீனாய்ச்சுழலவும், (வெண்மையாகிய) மலர் மாலை வரிசைகளைப்போல விளங்குஞ் சாமரைக்காடுகள் நுரைகளாய் மேலெழுந்தோங்கவும், யானைகள் (கடனீர் பருகவருகின்ற) மேகங்களின் வரிசைகளாய் நெருங்கவும், சேனையாகிய சமுத்திரம் வழி நடந்து சென்றது. எ-று.

இச்செய்யுள் முற்றுருவகவணி. (கசு)

கள்ளவிழ் கோதை மாத ரெடுத்தெறி கவரிக் காடு
துள்ளவந் தணர்வா யாசி யொருபுறந் துவன்றி யார்ப்பத்
தெள்விளி யமுத கீத மொருபுறந் திரண்டு விம்ம
வள்ளைவார் குழையெம் மன்னை மணித்திண்டேர் நடந்த தன்றே.

(இ-ள்.) தேனுடன் விகசித்த மலர்மாலையணிந்த மாதர்கள் எடுத்து வீசுஞ் சாமரைக்காடு (ஒருபக்கலில்) துள்ளவும், வேதியர்கள் தமது வாயாற்கூறும் ஆசீர்வசனங்கள் ஒருபக்கலில் மிகுந்து ஒலிக்கவும், தெள்ளிய அமுதம்போன்ற இசைப்பாட்டுகள் ஒருபக்கலில் திரண்டொலிக்கவும், வள்ளைத்தண்டுபோன்ற நெடியகாதை

யுடைய எமது தாயாகிய தடாதகைப்பிராட்டியாரது நவமணிகளிழைத்த திவ்விய இரதமானது சென்றது. எ-று. (௬௭)

மீனவன் கொடியுங் கான வெம்புலிக் கொடியுஞ் செம்பொன்
மானவிற் கொடியும் வண்ண மயிற்றழைக் காடுந் தோட்டுப்
பானலங் கருங்கட் செவ்வாய் வெண்ணகைப் பசுந்தோ ணிம்பத்
தேனலம் பலங்கல் வேய்ந்த செல்விதேர் மருங்கிற் செல்ல.

(இ-ள்.) வலிய மீனக்கொடியும், காட்டிற் சஞ்சரிக்கும் வெவ்விய புலிக் கொடியும், செம்பொன்னாலாகிய பெரிய விற்கொடியும், அழகிய மயிலிறகாற்செய்த புஞ்சக்காடுகளும் (ஆகிய இவை) இதழ்களையுடைய நீலோற்பல மலரையொத்த அழகிய கரியகண்களையும் செவந்தவாயையும் வெள்ளிய புன்முறுவலையும் (மூங்கில்போன்ற) பசிய தோள்களையுமுடைய வண்டுகளொலிக்கும் வேப்பமலர் மாலையணிந்த தடாதகைப்பிராட்டியாரது இரதத்தின் இருபக்கலிலுஞ்செல்லவும். எ-று.

மீனக்கொடி என்றது மீனெழுதிய கொடியென்றும் இதுபாண்டியர் மரபிற்கு உரியதென்றும், புலிக்கொடி - புலி யெழுதிய கொடி யென்றும் இது சோழராசனுக்கு உரியதென்றும், விற்கொடி-வில்லெழுதிய கொடி யென்றும் இது சேரராசனுக்கு உரியதென்றும் உணர்க. (௬௮)

மறைபல முகங்கொண் டேத்தி வாயதடு மாறி யேய்ப்ப
நிறைபரம் பரைநீ யெங்க ணிருபர்கோன் மகளாய் வைய
முறைசெய்து மாசு தீர்ப்பா யடியனேன் முகத்து மாசுங்
குறையென நிழற்றுந் திங்கள் கொள்கைபோற் கவிகை காப்ப.

(இ-ள்.) வேதங்கள் பலமுகங்கொண்டு துதிசெய்து (தமது உணர்வுக் கெட்டமுடியாது) வாய்தடுமாறி இளைக்கும்படி பரிபூரண சிவசத்தியாகிய நீ எங்களது மன்னர் மன்னனாகிய மலயத்துவஜபாண்டியன் திருமகளாய் (அவதரித்துச்) செங்கோல்செலுத்தி உலகிலுள்ள குற்றத்தையொழிப்பாய் (ஆதலின்) அடியேனது முகத்திலுள்ள குற்றத்தையும் ஒழிப்பாயாகவென்று வந்து நிழல்செய்யுஞ் சந்திரனது கொள்கைபோல (ஒருபக்கலில்) வெண்குடை நிழல்செய்யவும். எ-று.

"எங்கள் நிருபர்கோன்" என்றது சந்திரன் பாண்டியர் மரபிற்கு முதல்வனாகலின். (௬௯)

அங்கய னோக்கி மான்றேர்க் கணித்தொரு தடந்தே ரூர்ந்து
வெங்கதிர் வியாழச் சூழ்ச்சி மேம்படு சுமதி யென்போ
னங்கைதன் குறிப்பு நோக்கி நாற்பெரும் படையுஞ் செல்லச்
செங்கையிற் பிரம்பு நீட்டிச் சேவகஞ் செலுத்திச் செல்வான்.

(இ-ள்.) அழகிய சேற்கெண்டை போலுங் கண்களையுடைய தடாதகைப் பிராட்டியாரது குதிரைபூட்டிய தேருக்குச்சமீபமாக ஒருபெரிய தேரைத் தான்செலுத்தி, விரும்புங் கிரணத்தையுடைய பிரகற்பதி முனிவன்போன்ற ஆலோசனையையும் மேம்பாட்டையுமுடைய சுமதியென்னும் முதல்மந்திரி, அப்பிராட்டியாரது திருவுள்ளக்குறிப்பையுணர்ந்து, பெரிய நால்வகைச்சேனையும் (விரைந்து) செல்ல, தனது செவந்த கையிலேதாங்கிய பிரம்பை நீட்டி, சேவகத்தினைச்செலுத்தி (ஒருபக்கலிற்) செல்லவும். எ-று.

சேவகம் - அதிகாரம். (௭௦)

அலகிறற் கருவிச் சேனை யாழ்கட லனைத்துந் தன்போன்
மலர்தலை யுலக மன்றி மகபதி யுலக மாதி
யுலகமும் பிறவுஞ் செல்ல வுலப்பிலா வலிய தாக்கித்
திலகவா ணுதலாண் மன்னர் திருவெலாங் கவரச் சென்வாள்.

(இ-ள்.) எண்ணிறந்த நால்வகைச்சேனையாகிய ஆழ்ந்த கடல்முழுவதும் தம்மைப்போலப் பரந்த இடத்தையுடைய இப்பூலோகமன்றி, இந்திரலோக முதலிய லோகங்களிலும் பிறவிடங்களிலுஞ்செல்ல, அழியாத வலிமையுடையனவாகச்செய்து திலகமணிந்த ஒள்ளிய நெற்றியையுடைய தடாதகைப்பிராட்டியார் அரசர்களது செல்வங்களையெல்லாங் கொள்ளைகொள்ளும்படி சென்றருளினார். எ-று.

கருவிச்சேனை - இருபெய ரொட்டுப் பண்புத்தொகை. கருவியென்பது சேனைக்கோர் காரணப்பெயர். இதனை "பொருள்கருவி காலம் வினையிடனோ டைந்தும் - இருடீர வெண்ணிச் செயல்" என்பதில், கருவி சேனைமேனிற்றலா னுணர்க.

கயபதி யாதி யாய வடபுலக் காவல் வேந்தர்
புயவலி யடங்கவென்று புழைக்கைமாப் புரவி மான்றேர்
பயன்மதி நுதல்வே லுண்கட் பாவைய ராய வோடு
நயமலி திறையுங் கொண்டு திசையின்மே லோட்டம் வைத்தாள்.

(இ-ள்.) வடதேசங்களை அரசுபுரிந்த கஜபதிமுதலான மன்னர்களது தோள்வலி அடங்கும்படிஜெயித்து, துவாரந்தங்கிய துதிக்கையையுடைய யானைகள் குதிரைகள் இரதங்கள் (ஆகிய இவற்றையும்) அர்த்த சந்திரன்போன்ற நெற்றியையும் வேல்போன்ற கண்களையுமுடைய மாதர் கூட்டத்துடன் இன்பமிகுந்த இறைப்பொருளையும் (அவர்கள்கொடுக்கக்) கொண்டு திக்குப்பாலகர்மேல் போருக்கு எழ எண்ணங்கொண்டனர். எ-று.

கயபதியாதியாய காவலர் —கஜபதி - துரங்கபதி - நரபதி முதலியோர்.

பயல்=பாதி. அர்த்தசந்திரனெனினும் அஷ்டமிச்சந்திரனெனினும்...

வார்கழல் வலவன் றேரை வலியகா லுதைப்ப முந்நீ
ரூர்கல னொப்பத் தூண்ட வும்பர்கோ னனிகந் தெப்திப்
போர்வினை யாடு முன்னர்ப் புரந்தரன் மிலைந்த தும்பைத்
தார்விழ வாற்றல் சிந்தித் தருக்கழிந் தகன்று போனான்.

(இ-ள்.) நீண்ட வீரகண்டாமணிதரித்த தேர்ப்பாகன், கடுங்காற்றடிக்கக் கடலில்விரைந்து ஓடும் மரக்கலம்போலத் தேரைவிரைந்து செலுத்த, இந்திரனது சேனையோடுகலந்து போர்புரிய ஆரம்பிப்பதன் முன்னரே, (போர்புரியவந்த) இந்திரன் (தான்)அணிந்துவந்த தும்பைமாலைவிழவும், தனது வீரங்கெட்டுச் செருக்கன்று (புறமுதுகிட்டு) போர்க்களத்திலிருந்து ஓடிப்போனான். எ-று.

"அதிரப் பொருவது தும்பை யாகும்" என்றபடி தும்பை மாலை அவன் போர்புரிய அணிந்துவந்த மாலையெனக் கொள்க.

வலவன்=இரதசாரதி. அனிகம்-சேனை. (௨௩)

இழையிடை நுழையா வண்ண மிடையிற வீங்கு கொங்கைக்
குழையிடை நடந்து மீளுங் கொலைக்கணார் குழுவுந் தான
மழைகவிழ் கடாத்து வெள்ளை வாரண மாவுங் கோவுந்
தழைகதிர் மணியுந் தெய்வ தருக்களுங் கவர்ந்து மீண்டாள்.

(இ-ள்.) (இவ்வாறு புறங்கொடுத்தோடிய தேவேந்திரனது அமராவதியிலிருக்கும்) நூலிழை இடையே நுழையாதபடி இடைமுறியப் பருத்த தனங்களையும், குண்டலமணிந்த காதளவுஞ் சென்று திரும்புங் கொலைத்தொழிலமைந்த கண்களையுமுடைய அரம்பாஸ்திரீகள் கூட்டங்களையும், மதசலத்தை மேகம்போலக்கவிழ்க்கும் மதச்சுவட்டினையுடைய வெள்ளையானையையும், காமதேனுவையும், மிக்க கிரணத்தையுடைய சிந்தாமணியையும், தெய்வீகமமைந்த (பஞ்ச) தருக்களையுங் கவர்ந்துகொண்டு (அவ்வமராவதியைவிட்டு) திரும்பினார். எ று.

வெள்ளைவாரணம் - ஐராவதம். இது நான்கு கொம்புகளை யுடைய யானை. கோ=பசு அல்லது குதிரை. பசுவெனக்கொண்டு காமதேனுவென்றுவது, குதிரையெனக்கொண்டு உச்சைச்சிரவமென்றுவது பொருள் கொள்க. மணி - சிந்தாமணி. இவையும் பஞ்சதருக்களும் அரம்பாஸ்திரீகளுமே இந்திரலோகத்திலுள்ள செல்வங்களாகலின் தேவியார் அவற்றைக் கவர்ந்து திரும்பினார் என்றார். (உச)

கலிநிலைத்துறை.

இவ்வாறு மற்றைத் திசைக்காவலர் யாரை யும்போய்த்
தெவ்வாண்மை சிந்தச் செருச்செய்து திறையுங் கைக்கொண்
டவ்வாறு வெல்வா ளௌமூன் றரணட்ட மேருக்
கைவார்சிலை யான்கயிலைக்கிரி நோக்கிச் செல்வாள்.

(இ-ள்.) இவ்வண்ணமாக (மற்றைத்திக்குகளிலுஞ்) சென்று அங்குள்ள (ஏனைய) திக்குப்பாலகர் யாவரையும், பகைவன்மையொழியப் போர்புரிந்து (அவர்கள் கொடுக்குந்) திறையையும் பெற்றுக்கொண்டு அவ்வண்ணமேவெல்லுவோளைப்போல, மும்மதிலையுஞ் செயித்த மேருமலையாகிய நெடிய வில்லைத் தாங்கிய திருக்கரத்தையுடைய சிவபெருமான் (வீற்றிருக்கும்) கைலாயகிரியை நோக்கிச்சென்றருளினார். எ-று.

"இவ்வாறு போய் மற்றைத்திசைக் காவலர் யாரையும்" எனவும், "அவ்வாறு வெல்வாளென மூன்றரண் அட்ட வார் மேரு சிலை கையான்" எனவும் அன்வயஞ் செய்க. சிலையான் என்பத னிறுதியிலுள்ள விகுதியைப் பிரித்துக் கை என்பதனோடு கூட்டிக்கொள்க. மூன றரண் என்பத னிறுதியில் முற்றும்மை தொகுத்தல். (உரு)

சலிக்கும் புரவித் தடந்தேருடைத் தம்பி ராட்டி
கலிக்கும் பலதூ ரியங்கைவரை தெய்வத் திண்டேர்
வலிக்கும் பரிமள்ளர் வழங்கொலி வாங்கி நேரோ
யொலிக்கும் படிகிட்டின ரூழிதோ றோங்கு மோங்கல்.

(இ-ள்.) செல்லுகின்ற குதிரைபூட்டிய பெரிய தேரையுடைய தடாதகைப் பிராட்டியார் ஒலிக்கின்ற பல வாத்தியங்களும் யானைகளும் தெய்வத்தன்மையும் வலிமையுமுடைய தேர்களும் வலிக்குங் குதிரைகளும் வீரர்களும் கோஷிக்குங் கோஷத்தை, ஊழிக்காலந்தோறும் சற்று உயரும் திருக்கைலைமலையானது கவர்ந்து அவ்வகையே ஒலிக்க அடைந்தனர். எ-று.

ஒலிக்கும்படி என்பதில் படி அகரவீற்று வினையெச்சத்தை யுணர்த்தும் ஓரிடைச்சொல். ஒலிக்கவென்பதுபொருள். கைவரை-கையையுடைய மலைபோன்றது. அதாவது யானை. (உசு)

வானோர் கயிலை மலையான்மக டன்னை நீத்துப்
போனாள் வந்தாளென் றருவிக்கட் புனலுக் கந்நீ

ரானு வொலியா லனைவாவென் றழைஇத்தன் றேசு
நூரனு நகையாற் றழீஇயெதி ரேற்பச் சென்றாள்.

(இ-ள்.) ஆகாயமட்டும் பொருந்திய திருக்கைலாயகிரியானது, மலையரசன் புத்திரியாராகிய பார்ப்பதியார் (முன்பு) தன்னை விட்டுப் பிரிந்து சென்றனர். (இப்பொழுது) வந்தனரென்று, அருவியாகிய கண்ணீர் பொழிந்து நீங்காத அந்த நீரினொலியால் அன்னையே! வருக என்றழைத்து தனது வெள்ளொளியாகிய புன்சிரிப்பால் தழுவி யெதிர்கொள்ள, சென்றருளினார். எ-று. (உஎ)

கிட்டிப் பொருப்பைக் கிரியோடு கிரிக டாக்கி
முட்டிப் பொருதா லெனவேழ முழங்கிப் பாயப்
புட்டிற் புறத்தார் மறத்தார்கணை பூட்டு வில்லார்
வட்டித் துருமே றெனவார்த்து வளைந்து கொண்டார்.

(இ-ள்.) (தடாதகைப்பிராட்டியாருடன் சென்ற வீரர்கள்) திருக்கைலாயகிரியை நெருங்கி, மலைகளோடு மலைகள் தாக்கி (ஒன்றோடொன்று) முட்டிப் போர் புரிந்தாற்போல யானைகள் முழங்கி (ஒரு பக்கலிற்) பாய, அம்பறாத்தூணி கட்டிய முதுகினையுடையவரும் வீரத்தையுடையவரும் அம்புபூட்டிய வில்லினை யுடையவருமாய் (வெல்லுவோமென்று) சபதங்கூறி இடியேற்றைப்போல வீரகோஷஞ் செய்து சூழ்ந்துகொண்டார்கள். எ-று. (உஅ)

ஓடித் திருமா மலைகாவல ரும்ப ரார்க்கு
நாடிப் பணிதற் கரிதாகிய நந்தி பாதங்
கூடிப் பணிந்தித் திறங்கூறலுங் கொற்ற வேனந்
தேடிக் கிடையா னுளந்தேர்ந்தன னந்தி யெந்தை.

(இ-ள்.) சிறந்த கைலாயமலையைக் காவல்பூண்டவர்கள் (சேனைமுற்றுகை செய்ததை யறிந்து) ஓடி, தேவர்களுக்குங் காலமுணர்ந்து வணங்குதற்கரிய திருநந்திதேவரது திருவடியையடைந்து வணங்கி, இச்செய்தியைச் செப்ப, என் தந்தையாராகிய நந்தியெம்பெருமான், வெற்றியையுடைய பன்றிவடிவாகச் சென்ற திருமால் தேடியுங் கிடைத்தற்கரியவனாய் நின்ற சிவபெருமானது திருவுள்ளக்குறிப்பை யறிந்தனர். எ-று.

ஏனந் தேடிக் கிடையான் கதை.

முன்னொரு பதுமகற்பத்தில், பிரமன் தேவர் முதலிய எழுவகைத் தோற்றங்களையுஞ் சிருட்டித்து, தானே பரம்பொருளென் றிறுமாந் துலாவி வருகையில் திருப்பாற்கடலில் யோகநித்திரைசெய்யும் விஷ்ணுமூர்த்தியைக் கண்டு மார்பிற் றட்டி யெழுப்பி "நீயார்" என்று வினவ, விஷ்ணு "யானுன் றந்தை" என, பிரமன் "எல்லாப் பொருள்களையும் படைப்பவன் யானே" என்று பலவிதவாக இழித்துப் பேச, விண்டு கோபங் கொண்டனர். இருவரும் அநேககாலம் போர் செய்தனர். அப்பொழுது நாரதர் ஆங்கு வந்து "நீங்க ளிருவரும் போர் செய்தா லுலக மழியும். பரம்பொருளாகிய சிவபெருமான் சிறிதுபொழுதில் அக்கினித்தூணாகத் தோன்றுவர்" என்று கூறிச் செல்லவும், அதனைக் கவனியாது இறுமாப்பாற் போர்புரிகையில், சிவபெருமான் இருவருக்கும் இடையே சோதித்தம்பமாக நின்று அசரீரியாய் "இதனடிமுடியைக் கண்டோரே மேலோர்" என் றருளியதைக் கேட்டு, விஷ்ணு "அடிதேடுவேன்" என்று கூறிப் பன்றியாகிப் பூமியைத் தோண்டியும், பிரமன் "முடிகாணுவேன்." என்று அன்னமாகிப் பறந்துஞ் சென்றனர். திருமால் பாதலமேழுங் கடந்

தும் அடிகாணுமற் றிரும்பினர். பிரமன் மேலேழுலோகங்களையுங் கடந்தும் முடிகாணுது தளர்ந்து சில சித்தர் சொல்லால் மனந்திரும்பி, பூலோக மடைந்து விண்டுவை நோக்கி "நாமிருவரும் இப் பெருமானை யருச்சித்து அவனது திருவருளால் தரிசிப்போம்" என, இருவரு முடன்பட்டுப் பூசிதததுத் தவஞ்செய்கையில், சிவபெருமான் பிரசன்னராகி அவர்கட்கு வரமளித்து, அச் சோதியுள் அந்தர்த்தானமாயினர். சோதி சிறிது சிறிதாகச் சுருங்கி மலையாயிற்று. அதுவே அருணுசல மென்பர் என்பதாம். இதனை,

கந்தபுராணம் - அடிமுடி தேடுபடலம்.

"தீண்டுநில னிருவிசும்பிற் கிளர்ந்துமடி முடியுணரோ
மீண்டுமவன் றன்னருளான் மிடல்பெற்று வந்தனமா
லீண்டுசிவன் றனைவழிபட் டிருவருமன் னவன்றோற்றங்
காண்டுமென யானுரைப்பக் கண்ணனுமங் கதற்கிசைந்தான்.
வேண்டு நல்வரங் கேண்மினீ ரென்றலும் விசும்பிற்
றூண்ட வம்புரி பகவநின் சரணமே யரணுப்
பூண்டி டுந்தலை யன்பரு ளென்றலும் புரிந்து
காண்ட குந்தழற் சோதியு ளிமைப்பினிற் கலந்தான்." — என்பதனுனறிக. (உக)

வென்றிக் கணத்தை விடுத்தான்கன மீது பெய்த
குன்றிக் கணம்போற் சுழல்கண்ணழல் கொப்ப ளிப்பச்
சென்றிக் கனைய மொழியாள்பெருஞ் சேனை யோடு
மொன்றிக் கடலுங் கடலும்பொரு தொத்த தன்றே.

(இ-ள்.) வெற்றியுடைய பூதகணங்களை யேவினுர். (அப்பூதகணம்) மேகத்தினிடத்தில் வைத்த குன்றிமணிகளின் தொகுதிபோலச் சுழலுங் கண்கள் கோபாக்கினி சிந்தச் சென்று, கடலுங் கடலுந் தம்முள் போர்புரிதல்போல, கரும்பின் சுவையையொத்த இனிய சொற்களையுடைய தடாதகைப்பிராட்டியாரது பெரிய சேனையோடுங் கலந்து (போர்செய்தது.) எ-று. (௩0)

சூலங்கண் மழுப்படை தோமர நேமி பிண்டி
பாலங்கள் கழுக்கடை வாட்படை தண்ட நாஞ்சி
லாலங் கவிழ்க்கின்ற வயிற்படை வீசி யூழிக்
காலங் கலிக்குங் கடல்போன்ற களம ரார்ப்பு.

(இ-ள்.) சூலாயுதங்களும், மழுவாயுதங்களும், தோமரங்களும், சக்ராயுதங்களும், எறியாயுதங்களும், கழுக்கடைகளும், வாளாயுதங்களும், தண்டாயுதங்களும், கலப்பைகளும், விஷத்தைச்சிந்தும் வேல்களும் (ஆகிய இவற்றை) ஒருவர்மேலொருவர் வீசி, வீரர்கள் ஆர்ப்பரிக்கும் வீரகோஷமானது ஊழிக்காலத்தில் (நிலைபெயர்ந்து) ஒலிக்கும் கடலோசைபோன்றன. எ-று.

தோமரம் - பெரிய ஈட்டி. பிண்டி பாலம் - எறியாயுதம். கழுக்கடை - சிறிய ஈட்டி. நாஞ்சில் - கலப்பை. (௩க)

எறிகின்றன வோச்சுவ வெய்வன வாதி யாகச்
செறிகின்றன பல்படை செந்நிறப் புண்ணீர் மூழ்கிப்
புறிகின்றன வும்பிழைக் கின்றவும் பட்டுத் தாக்கி
முறிகின் றனவு முயன்றூர்வினைப் போக மொத்த.

(இ-ள்.) எறிகின்றனவும் ஓச்சுவனவும் எய்வனவு முதலாகப் பொருந்திய பல ஆயுதங்கள் செவந்த நிறத்தையுடைய உதிரநீரில் மூழ்கி அப்புறப்படுவனவும் மேலே படாது போகின்றனவும், மேலே பட்டுத் தாக்கி (இடையே) முறிகின்றனவுமா யிருத்தல், இருவினையில் முயன்றோர்க்கு வரும் போகங்களை யொத்திருந்தன. எ-று.

எறிகின்றன ஓச்சுவ எய்வன—வினையாலணையும்பெயர்கள். (௬௨)

தெரிசிக்க வந்த சிலதேவர் சிறைப்பு ளூர்தி
வெருவிப் பறந்த வொழிந்தோரவிலங் கூர்தி மானங்
கருவிப் படையாற் சிதைபட்டன கால னூர்தி
குருதிப் புனலுக் கதுகொற்றவை யுண்ட தென்ன.

(இ-ள்.) தெரிசிக்கும்படிவந்த (தேவர்களுள்) சில தேவரது கருடன் முதலிய பறவைவாகனங்கள் (ஆங்குப் பெரும்போர் நிகழ்வதால்) அச்சமுற்றுப் பறந்து போயின. அவரொழிந்த மற்றைத்தேவரது மிருகமாகிய வாகனங்களும் விமானங்களும் ஆயுதங்களால் உருவழிந்தன. (பூர்வத்தில்) காளிகாதேவி உயிருண்ட மகிடாசுரன் உதிரங் கக்கியதுபோல இயமனது வாகனமாகிய எருமைக்கடா உதிரநீரைக் கக்கியது. எ-று.

ஊர்தி - வாகனம். நடத்தப்படும் பொருண்மேனிற்றலால் செயப்படுபொருளில் வந்த தொழிற்பெயர். விலங்கூர்தி ஐராவதமுதலிய மிருகங்கள் எனக்கொள்க.

பொருகின்றது கண்டு விச்சாதரர் போகம் வீடு
தருகின்றவ னைத்தொழ வானெறி சார்ந்து நேரோ
வருகின்றவர் வேறு வழிக்கொடு போவ ரன்புக்
குருகின்றளிர் மெல்லடி யாரொடு மூற்ற மஞ்சா.

(இ-ள்.) போகத்தையும் மோக்ஷத்தையும் அனுக்கிரகஞ் செய்யும் சிவபெருமானைப் பணிய, ஆகாயமார்க்கமாக நேரே (திருக்கைலைமலையை யடைய) வருகின்ற விச்சாதரர்கள் (ஆண்டு) போர்புரிதலைப்பார்த்து (தங்கட்கு அதனால் நேரிடும்) இடையூற்றுக்குப் பயந்து, (தம்மேல்கொண்ட) அன்பால் மனமுருகும் இனிய தளிர்போன்ற மெல்லிய பாதங்களையுடைய மாதர்களோடும் வேறு வழிக்கொண்டு அத்திருக்கைலைமலைக்குச் செல்வார்கள். எ-று.

வினைக்கீடாகப் போகத்தையும், மலபரிபாகத்தால் மோக்ஷத்தையுங் கொடுப்போன் இறைவனாகலின் "போகம் வீடு தருகின்றவன்" என்றார். (௬௪)

திங்கட்படை செங்கதி ரோன்படை சீற்ற மேற்ற
வங்கிப்படை தீம்புன லான்படை நார சிங்கத்
துங்கப்படை சிம்பு ணெடும்படை சூறைச் செல்வன்
வெங்கட்படை பன்னக வெம்படை மாறி விட்டார்.

(இ-ள்.) சந்திராஸ்திரத்திற்குச் சூரியாஸ்திரமும், கோபமிகுந்த ஆக்கினேயாஸ்திரத்திற்கு இனிய வருணாஸ்திரமும், உயர்ந்த நாரசிங்காஸ்திரத்திற்கு நெடிய சரபாஸ்திரமும், கொடிய முனையையுடைய வாயவியாஸ்திரத்திற்குக் கொடிய சர்ப்பாஸ்திரமும் (ஒருவர்மேலொருவர்) மாறிப்பிரயோகித்தார்கள். எ-று.

சந்திராஸ்திரத்திலுஞ் சூரியாஸ்திரஞ் சிறந்ததாதலாலும், அக்கினியையவிப்பது சலமாதலாலும், நாரசிங்கத்தைச் செயித்தது சரபத்திருவுருவமாதலாலும், வாயுவைப்புசுணஞ்செய்வது சர்ப்பமாதலாலும், முறையேசெலுத்தி அவற்றைக்கண்டித்தனர் என்க. சரபம் - எண்காற்புள்.

நரசிங்கத்தைச் சரபனூர் செயங்கொண்டது.

தேவர் முனிவர்களைத் துன்பப்படுத்திவந்த இரணியனைச் சங்கரிக்கும்படி திருமால் தன்னொரு கூற்றினை அவன் புதல்வன் பிரகலாதனனுகச் சனிப்பித்து அப் பிள்ளை வித்தியாப்பியாசஞ் செய்கையில் இரணியன் கட்டளைப்படி உபாத்தியாயர் "இரணியநம:" எனப் போதிக்க அப் பிள்ளை அது சொல்லாமையால், உபாத்தியாயர் இரணியனுக் கறிவிக்க, அவனும் பலவித தண்டங்களைச் செய்தும் பிரகலாதனன் "நாராயணயநம:" எனவே கூற, இரணியன் வெகுண்டு "நீ கூறுகின்ற நாராயணன் எங்கிருக்கின்றான்" என, பிரகலாதனன் "எங்குமுள்ளான்" என, அருகிருந்த இத்தூணிலு முள்ளானோ வென்று கேட்டு ஆமெனச் சொல்ல, அதனை யுதைக்க, திருமால் அத் தூணிலிருந்து நரவடிவமுஞ் சிங்கவடிவமுங் கூடிய நாரசிங்காவதாரஞ்செய்து அவனைக கிழித்தெறிந்து அவனுதிரத்தை யுண்டு அதனால் வெறிகொண்டு உலகத்தை யழிக்குந்தறியாயிருப்பது கண்ட தேவர்கள் சிவபிரானூர்பால் விண்ணப்பிக்க அவர் சரபத் திருவுருவேற்று நரசிங்கத்தை ஹதஞ்செய்தனர். விண்டு பண்டைய வுணர்வுற்றுச் சிவபூசைசெய்து தேவர் முனிவர் கேட்க நாரசிங்கபுராணமோதி வைகுந்த மடைந்து வாழ்ந்திருந்தனர். என்பது. இதனை,

காசிகண்டம்.

(Grantha verse, 3 lines) எனவும்,

காஞ்சிப்புராணம்.

"நன்று விரண்டு திருவடியு நனிநீள் வாலு முகமிரண்டுங்
கொன்னர் சிறகு முருத்திரமுங் கொடும்பே ரார்ப்பு மெதிர்தோற்றச்
செந்நீர் பருகிச் செருக்குநர மடங்க லாவி செகுத்ததுரிகொண்
டொன்னூர் குலங்கண் முழுதழித்த வுடையான சரபத் திருவுருவம்"—எனவும்
வருவனவற்று னறிக. (கூ௩)

கொட்புற் றமராடுமிக கொள்கையா தமமி னநதி
நட்புற்றவர் கைப்படை தூட்பட ஞான மூர்த்தி
பெட்புற் றருள வருமெங்கள் பிராட்டி வெய்ய
கட்புற் றரவிற் கணைமாரிக ளூற்றி நின்றாள்.

(இ-ள்.) (இவ்வண்ணம் இடசாரி வலசாரியாகச்) சுழன்று போர்புரியும் இக்கொள்கையையுடைய வீரர்தொகுதியுள், திருநந்தி தேவரது சேனுவீரர்கள் (தங்கள்) கையிற்றூங்கிய (பலவகை) ஆயுதங்கள் பொடியாக, ஞானசொரூபியாகிய சிவபெருமான் விருப்பங்கூர வந்தருளும் எங்கள் தலைவியாராகிய தடாதகைப்பிராட்டியார் புற்றிலிருந்து கொடியகண்களையுடைய சர்ப்பஙகள் வெளிவருவதுபோல (அம்பறாத்தூணியிலிருந்து எடுத்தது) சரவருஷங்களைச் சொரிந்துநின்றனர். எ-று.

கொடுமை-மைசுறும், ஈற்றயல் உகரமுங்கெட்டுப் பெயர்விகுதி புணர்ந்தது.

கையிற் படையற்றனர் கற்படை தொட்டு வீரர்
மெய்யிற் படுகென்று விடுக்குமுன் வீரக் கன்னி
பொய்யிற் படுநெஞ் சுடையார்தவம் போல மாய
வெய்யிற் படுவச் சிரவேலை நிமிர்த்து வீசி.

(இ-ள்.) தங்கள் கையிற்றாங்கிய ஆயுதங்கள் பொடிபட நின்ற சிவகணங்கள் (தடாதகைப்பிராட்டியாரது) சேனைவீரர் சரீரத்திற் றாக்குகவென்று, கற்களாகிய ஆயுதங்களைத்தொட்டு வீசுவதன்முன்னர், பொய்ந்நெறியிற் றலைப்பட்ட மனமுடையார் (மேற்கொண்ட) தவத்தைப் போல (அக் கற்படைகள்) சிதையும் வகையாக வீரத்தன்மையுடைய அத்தடாதகைப்பிராட்டியார் நெய்பூசிய வச்சிராயுதத்தை ஓங்கி வீசி. எ-று.

இதுமுதலிரண்டு பாடல்கள் குளகம். (௬ள)

துண்டம் படவே துணித்தக்கண வீரர் தம்மைத்
தண்டங் கொடுதாக் கினர்சாய்ந்தவர் சாம்பிப் போனா
ரண்டங் கள்சரா சரம்யாவையுந் தானே யாக்கிக்
கொண்டங்கு நின்றாள் வலிகூற வரம்பிற் றாமோ.

(இ-ள்.) துண்டுதுண்டாக (அவற்றைச்) சேதித்து அந்தத் திருநந்தி கணங்களைத் தண்டாயுதத்தாலடித்தனர். (அதனால்) அவ்வீரர்கள் புறங்கொடுத்துச் சோர்ந்து போனார்கள். அண்டங்களையும் (அவற்றிலுள்ள) சராசரங்களையும் தானே சிருஷ்டி செய்துகொண்டு (அவற்றுள்) சர்வ வியாபியாக நிறைந்திருக்குஞ் சிவசத்தியினது வலிமை (ஒருவர்) எடுத்துக்கூற அளவுபடுமோ? (அளவுபடாது.) எ-று. (௬அ)

படையற்று விமான மும்பற்றற வற்றுச் சுற்றுந்
தொடையற் றிகன்மூண் டெழுதோள்வலி யற்றுச் செற்ற
மிடையற்று வீர நகையற்றட லேறு போலு
நடையற் றடைவார் நிலைகண்டன னந்தி யண்ணல்.

(இ-ள்.) (தங்கள் கையிற்றாங்கிய) ஆயுதங்கள்துணிபட்டும், (எறிச்செலுத்தி வந்த) விமானங்களும் சிறிதுமின்றித் தூள்பட்டும், (போர்க்குவருகையில்) அணிந்த தும்பைமாலை நீங்கியும், மேற்கொண்டு போருக்கெழுந் தோளாண்மை யொழிந்தும், (இயற்கையாயுள்ள) கோபம் இடையில் அழிந்தும், வீரச்சிரிப்பு அகன்றும், கொலைத் தொழிலையுடைய ஆண்சிங்கம்போலு முள்ள (பெருமித) நடை விலகியும், (திருக்கைலையை நோக்கித் திரும்பி) வருகின்ற (தமது கணவீரர்களது) நிலைமையைத் திருநந்திதேவர் பார்த்தருளினார். எ-று. (௬௯)

உடையா னடிதாழ்ந் திவையோதலு மோத நீத்தச்
சடையா னிளவா ணகைசெய்து தருமச் செங்கண்
விடையான் சிலையா னிகல்வென்றி விளைக்குந் தெய்வப்
படையா னெழுந்தா னமராடிய பாரிற் சென்றான்.

(இ-ள்.) (யாவரையும் அடிமையாக) உடைய சிவபெருமானது திருவடியைப்பணிந்து இந்நிலைமைகளையெடுத்து விண்ணப்பஞ்செய்யவும், அலைகள்பெருந்திய கங்காநதியைத்தரித்த சடையையுடைய அச்சிவபெருமான் ஒள்ளிய புன்னகை செய்து, செவ்ந்தகண்களையுடைய தருமவிடையை யுடையவனும் (பினாகமென்னும்) வில்லினாற் போரில் ஜெயத்தைவிளைவிக்குந் தெய்வத்தன்மையுடைய பாசுபதாஸ்திரத்தையுடையவனுமாகிய அப்பெருமான் (போர்க்கோலங்கொண்டு) எழுந்து போர்க்களத்திற் சென்றருளினார். எ-று. (௭0)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

மேவி யாகவப் பாரிடைப் பாரிட வீரரை யமராடி
யோவி லாவலி கவர்ந்தது மன்றினி யுருத்தெவ ரெதிர்ந்தாலுந்

தாவி லாவலி கவரவு மடங்கலின் றனிப்பிணு வெனநிற்குந்
தேவி யார்திரு வுருவெழுஞ் சேவகச் செய்கையு மெதிர்கண்டான்.

(இ-ள்.) (இறைவர் அவ்வாறு) போர்க்களத்திலே அடைந்தருளி, பூதகண வீரர்களோடு போரிட்டு (அப் பூதகணங்களி னின்று) அகலாத வீரங்கள்முழுவதும் கொள்ளைகொண்டதுமன்றி, இன்னமும் போர்புரிதற்குக் கோபித்து யாவரொதிர்த் தலும (அவர்களது) அழிய த வீரத்தன்மையையுங் கொள்ளைகொள்ள ஒப்பில்லாத பெண்சிங்கத்தைப்போல நின்றருளிய (தனது) தேவியாரது திருவுருவப்பொலிவை யும், நடத்தியருளிய வீரச்செய்தியின் மிகுதியையும் பார்த்தருளினுர். எ-று. (சக)

ஒற்றை வார்கழற் சரணமும் பாம்பசைத் துடுத்தவெம் புலித்தோலுங்
கொற்ற வாண்மழுக் கரமும்வெண் ணீறணி கோலமுந் நூன்மார்புங்
கற்றை வேணியுந் தன்னையே நோக்கிய கருணைசெய் திருநோக்கும்
பெற்ற தன்வலப் பாதியைத் தடாதகைப் பிராட்டியு மெதிர்கண்டாள்.

(இ-ள்.) நெடிய (வெற்றி மிகுந்த) ஒற்றையாகிய வீரக்கழலணிந்த திருவடி யும், சர்ப்பக்கச்சாலிறுகவுடுத்திய வெவ்விய புலித்தோலாடையும்,வெற்றியையுடைய ஒள்ளிய மழுப்படைதாங்கிய திருக்கரமும், திருவெண்ணீற்றையணிந்த திருக்கோல த்தையுடைய உபவீதம்பூண்ட திருமார்பும், நெருங்கிய சடாமுடியும், தம்மையே எப் பொழுதும் நோக்குகின்ற கிருபைசெய்யுந்திருக்கண்களும், (ஆகியஇவற்றை) உடைய தமது வலப்பாகமாகிய சிவபெருமானைத் தடாதகைப்பிராட்டியாரும் எதிரே பார்த் தருளினுர். எ-று. (சஉ)

கண்ட வெல்லையி லொருமுலை மறைந்தது கருத்தினுண் மடமச்சங்
கொண்ட மைந்திடக் குனிதர மலர்ந்தபூங் கொம்பர்போ லொசிந்தொல்கிப்
பண்டை யன்புவந் திறைகொளக் கருங்குழற் பாரமும் பிடர்தாழக்
கெண்டை யுண்கணும் புறவடி நோக்கமண் கிளைத்துமின் னெனநின்றாள்.

(இ-ள்.) (சிவபெருமானைத்) தரிசித்த அந்தக்ஷணத்திலேயே (இடையே யுள்ள) ஒருதனம் மறைதலால், மனதில் நாணமும் மடமும் அச்சமுங் குடிகொள்ள வளையும்படி மலர்ந்த பூங்கொம்புபோல ஒசிந்து துவண்டு (சிவபிரானிடத்திலுள்ள, பழமையகிய அன்பானது வந்து (ஒருபக்கலில்) குடிகொள்ளவும், கரிய அளகபார மும் பிடரியிற் சரிந்து தாழவும், சேற்கெண்டையைச்செயித்த கண்களும் புறவடியை நோக்கி நிற்கவும், நிலத்தைத் திருவிரலாற்கீறி மின்னல்போல நின்றருளினுர். எ-று.

நின்ற மென்கொடிக் ககல்விசும் பிடையர னிகழ்த்திய திருமாற்ற
மன்ற றிந்தமு தறிவனுஞ் சுமதிசீ றடிபணிந் தன்னுயிக்
கொன்றை யஞ்சடைக் குழகனே நின்மணக் குழகனென் றனுமன்பு
துன்ற நின்றவட் பார்த்தருட் சிவபரஞ் சோதிமற் றிறுகூறும்.

(இ-ள்.) (இவ்வண்ணம்) நின்றருளிய மெல்லிய பூங்கொடிபோன்ற தடா தகைப்பிராட்டியாருக்கு, பரந்த ஆகாயத்தில் அன்று சிவபெருமான் திருவாய்மலர்ந் தருளிய (அசரீரியாகிய) திருவார்த்தையை அறிந்துள்ள பேரறிவாளனுகிய சுமதியென் பவன் (தடாதகைப்பிராட்டியாரது) சிறிய திருவடியை நமஸ்கரித்து, தாயே! கொன் றைமாலைதரித்த அழகிய சடையையுடைய இந்தச் சிவபெருமானே நினது மண நாயகன் என்றுசொல்லவும், அன்புமீதூர நின்றருளிய அப்பிராட்டியாரைப்பார்த்துக் கிருபாரூபியாகிய அச்சிவபெருமான் இவ்வண்ணஞ்சொல்லுகின்றார். எ-று.

அன்று அகல் விசும்பிடை யர னிகழ்த்திய திருமாற்றம் என்றது.
" மன்னவரின் றிருமகட்கு மைந்தர்போற் சடங்கனைத்தும் வழாது வேதஞ்
சொன்னமுறை செய்துபெயர் தடாதகையென் றிட்டுமுடி சூட்டு வாயிப்
பொன்னனையா டனக்கிறைவன் வரும்பொழுதோர் முலைமறையும் புந்தி மாழ்கே
லென்னவர னருளாலோர் திருவாக்கு விசும்பிடைநின் றெழுந்த தன்றே." என்று,
தடாதகைப்பிராட்டியார் திருவவதாரப் படலத்தில், தேவியார் மும்முலைக்கன்னியா
யவதரித்தமைகண்ட மலயத்துவசன " முலை மூன்றாய் முகிழ்த்து மாற்றார் நகவந்த
தென்னேயோ " என்று மனம்வருந்தி நிற்கையில், இறைவர் அசரீரியாய்க் கூறிய
திருவாக்கு.

குழகன்=பேரழகன். (௪௪)

என்று தொட்டுநீ திசையின்மேற் சயங்குறித் தெழுந்துபோந் தனையாமு
மன்று தொட்டுநம் மதுரைவிட் டுனைவிடா தடுத்துவந் தனமுன்னைத்
தொன்று தொட்டநான் மறையுரை வழிவரு சோமவா ரத்தோரை
நன்று தொட்டநாண் மணஞ்செய வருதுநின் னகர்க்குநீ யேகென்றான்.

(இ-ள்.) எந்தத்தினந்தொடங்கி, நீ அஷ்டதிக்குகளிலுஞ்சென்று (போர்
புரிந்து) வெற்றிபெற நினைத்துப் புறப்பட்டு வந்தனையோ, அந்தத்தினந்தொடங்கி
நமது மதுராபுரியைவிட்டு உன்னை (சிறிதும்) பிரியாது நாமும் அடுத்துவந்தோம்.
அநாதிதொட்டுள்ள நான்கு வேதங்கள்கூறிய முறைப்படி வருகின்ற சோமவாரத்தில்,
நல்ல முகூர்த்தங்கூடிய காலத்திலே உன்னைத்திருமணஞ் செய்யவருகின்றோம். உன்
னுடைய நகரமாகிய மதுரைக்கு நீ செல்கவென்று திருவாய்மலர்ந்தருளினர். எ-று.

தேவியார் தாக்ஷாயணியாகத் திருக்கோலங் கொண்டபொழுதும், பர்வத
ராஜ புத்திரியாராகத் திருவவதாரஞ் செய்தகாலத்தும், இறைவர் மணம்புரிந்த தினம்
சோமவாரமேயாம். அதுபோல இப்பொழுது பாண்டியகுமாரியாக வெழுந்தருளிய
ஞான்றும் அவரை மணஞ்செய்வது அதுவேதினமென்று குறிப்பிப்பார் " நான்மறை
யுரைவழிவரு சோமவாரம் " என்றார். (௪௫)

என்ற நாதன்மே லன்பையு முயிரையு மிருத்தியா யஞ்சூழக்
குன்ற மன்னதேர் மேற்கொடு தூரியங் குரைகட லெனவார்ப்ப
நின்ற தெய்வமால் வரைகளும் புண்ணிய நீத்தமு நீத்தேகி
மன்ற னன்மது ராபுரி யடைந்தனண் மதிக்குல விளக்கன்னாள்.

(இ-ள்.) என்றருளிச்செய்த சிவபெருமான்பேரில், அன்பையும் தமது உயி
ரையும் (நிலைபெற) வைத்து, மெய்க்காவலராகிய தோழிமார் கூட்டம் புறத்திற்சூழ,
மலையைப்போன்ற இரதத்தின்பேரிலேறியருளி, பலவாத்தியங்களும் சத்திக்கின்ற
சமுத்திரம்போலொலிக்க (இடையே) நின்ற தெய்வீகம்பொருந்திய பெரியமலைகளும்
புண்ணிய நதிகளுங் கடந்துசென்று, (சோலையிலுள்ள மலர்களின்) மணம்பொருந்
திய பெரியமதுரை நகரத்தை யடைந்தருளினர் சந்திரகுலத்திற்கோர் தீபம்போன்ற
தடாதகைப்பிராட்டியார். எ-று. (௪௬)

மங்கை நாயகி மங்கல மெதிர்கொள வந்துவா னிழிசெல்வம்
பொங்கு மாளிகை புகுந்தன ளாகமேற் புதுமணத் திறந்தீட்டி
யெங்கு மோலையுய்த் தமைச்சர்மங் கலவினைக் கியைவன வமைக்கின்றார்
சங்கண் மாநக ரெங்கணுங் கடிமுர சானைமே லறைவித்தார்.

(இ-ள்.) மங்கையர்க்கரசியாராகிய தடாதகைப்பிராட்டியார் அஷ்டமங்கலங்களையும் எதிர்கொண்டு வருவோர் கொண்டுவரத் (தமது) நகருட்சென்று, விண்ணுலகினின்றுந் தாம் கவர்ந்துவந்த செல்வங்களோடு விளங்குந் திருக்கோயிலையடைந்தருள, அதன்மேல், மந்திரிகள் அக்காலையில் நிகழும் திருமணச்செய்தியை யெழுதி எத்தேசங்களுக்குந் திருமுகஞ்செலுத்தித் திருமணத்திற்குவேண்டும் உபகரணங்களைச் சேகரிபபவர்கள், அழகிய இடம்பரந்த பெரிய மதுராபுரியிலெங்கும் (உள்ளோர் அறிந்து தங்கடங்கள் வீடுகளை அலங்கரிக்க) கலியாண முரசத்தை யானைமேலேற்றி (வள்ளுவர்களால்) அறைவித்தார்கள். எ-று. (சஎ)

மேற்படி - வேறு.

கன்னிதன் மணமுர சறைதலுங் கடிநக ருறைபவர் களைகெடத்
துன்னிய வுவகையர் கடவுளைத் தொழுகைய ருடலமு கிழ்ப்பெழப்
பன்னிய துதியின ரியலெழின் மகளிரை யழகுசெய் பரிசென
வின்னிய லெழில்வள நகரொலாஞ செயல்வினை யணிபெற வெழில்செய்வார்.

(இ-ள்.) தடாதகைப் பிராட்டியாரது திருக்கலியாணத்திற்காகப் பேரிகை யறையவும், காவல்சூழ்ந்த மதுரையில்வசிப்போர் அளவுகடந்து மேலெழுந் தோங்கிய சந்தோஷமுடையவர்களும், சோமசுந்தரக் கடவுளைப்பணியுங் கையையுடையவர்களும், தமது சரீரமுற்றும் புளகரும்பத் தோத்திரங் கூறுகின்றவர்களும், இயற்கையாகவே அழகுமிக்க பெண்களை (ஆபரண முதலியவற்றால்) அலங்காரஞ்செய்யுந் தன்மைபோல (இயற்கையாகவே கட்புலனுக்கு) இன்பந்தர வமைந்த அழகையும் வளப்பத்தையுமுடைய மதுரைநகரி லுள்ள தத்தம் வீடுகளை யெல்லாம் கைத்தொழிலில் வல்ல தொழில்களால் அழகுபெற அலங்காரஞ்செய்யத் தொடங்கினார்கள். எ-று. ()

கோதையொ டும்பரி சநதனக் குப்பைக ளைந்தனர் வீசுவார்
சீதள மென்பனி நீர்கடுய்ச் சிந்தின பூழிய டக்குவார்
மாதரு மைந்தரு மிறைமகண் மன்றன் மகிழ்ச்சி மயக்கினாற்
காதணி குழைதொடி கண்டிகை கழல்வன தெரிகிலர் தொழில்செய்வார்.

(இ-ள்.) தாம் பரித்து நீக்கிய மலர்மாலைகளுஞ் சந்தனங்களுமாகிய குப்பைகளைக் களைந்து (தெருப்புறத்திற் கொண்டுபோய்) எறிவார்கள். தண்ணிய மென்மணங்கமழும் பனிநீரைத் தூவி (நிலத்திற்) சிந்தி மேலே கிளம்பும் புழுதிகளை அடக்குவார்கள். மாதர்களும் புருஷர்களும் தடாதகைப்பிராட்டியாரது திருக்கலியாணத்தின் பொருட்டெழுந்த சந்தோஷமயக்கத்தினாலே, செவிகளிலணிந்த குண்டலங்களும் (கையிலணிந்த) வளையல்களும், (கழுத்திலணிந்த) கண்டிகைகளும் (தெறித்துக்) கழன்றுபோவன தெரியாதவராய் நகரலங்காரஞ்செய்யத்தொடங்கினார்கள். எ-று.

அந்நகரவாசிகள் செல்வமிகையுடன் வாழ்வோரென்பது குறிக்க அவர்வீதிகளிற் படுங் குப்பைகள் "கோதையொடும்பரி சந்தனக்குப்பை" என்றும், நிலமிசையெழுந்த புழுதியை யடக்க நீரைத்தெளிக்காது "சீதள மென்பனி நீர்கள்தூய்ச் சிந்தின பூழி யடக்குவார்" என்றுங் கூறினர். தடாதகைப்பிராட்டியாரது திருமணஞ் சமீபித்த பெருங்களிப்பால் உடல்பூரித்தனராகலின் குண்டலம்-தொடி-கண்டிகை முதலிய ஆபரணங்கள்தெறித்துப் புறம்வீழ்தலையுணராது நகரலங்கரித்தலை மேற்கொண்டனரென்பார் "மாதரு மைந்தரு மிறைமகண் மன்றன் மகிழ்ச்சி மயக்கினாற்-காதணி குழைதொடி கண்டிகை கழல்வன தெரிகிலர் தொழில்செய்வார்" என்றார். (சகூ)

மங்கல மென்றெனை வினவுவார் வருமதி நாளென வுரைசெய்வார்
தங்களை யொல்லை தழீஇக்கொள்வார் தாங்கரு மோகை தலைக்கொள்வார்

திங்களி னெல்லையு மாறுநா ளாறுக மென்று செலுத்துவார்
நங்கைய ருங்கடி காணவோ துடித்தன தோள்க ணமக்கென்பார்.

(இ-ள்.) திருமணமகோற்சவம் என்றையதினமென்று (ஒருவரையொருவர்) வினவுவார்கள். வருஞ் சோமவாரதினமென்று சொல்கின்றவர்களை (கேட்டவர்கள்) விரைந்து தழுவிக்கொள்வார்கள். தாங்குதற்கரிதாகிய களிப்புமீக் கொள்வார்கள். சோமவாரமட்டும் (உள்ள) நாள்கள் ஆறு (ஆறும் அவை கழிவன) ஆறு யுகங்களென்று சொல்லிக் கழிப்பார்கள். தடாதகைப்பிராட்டியாரது அரிய திருக்கலியாணத்தைப் பார்த்து மகிழ்வுகொள்ளவோ நமக்குத் தோள்கள் துடித்தன என்பார்கள்.

பித்திகை வெள்ளை புதுக்குவார் பெட்புறு வார்களும் பெட்புறச்
சித்திர பந்தி நிறுத்துவார் தெற்றிகள் குங்கும நீவுவார்
வித்திய பாலிகை மென்றழை விரிதலை நீர்நிறை பொற்குடம்
பத்தியின் வேதி நிரப்புவார் தோரணம் வாயில் பரப்புவார்.

(இ-ள்.) சுவர்த்தலங்களை (சங்குசுட்டசாந்தினால்) வெள்ளையிட்டுப் புதுக்குவார்கள். (யாவரும் விரும்பத்தக்க) சிற்பத்தொழிலில் தேர்ந்தவர்களும் விரும்பும்படி சித்திரவரிசைகளை நிறுத்துவார்கள். திண்ணைகளிற் குங்குமக்குழம்புகளைப் பூசுவார்கள். (அவ்வாறு குங்குமக்குழம்பு பூசிய) திண்ணைகளில், முளை யெழும்பிய பாலிகைகளையும் மெல்லிய தழைவிரிந்த தலையையுடைய நீர்நிறைந்த பொன்னாலாகிய பூரணகும்பங்களையும் வரிசையாக நிரப்புவார்கள். தோரணங்களை (வீட்டு) வாயில்களிற் கட்டுவார்கள். எ-று. (௬௧)

நீளிடை மணிமறு கெங்கணு நெடுநெடைக் காவண நாட்டுவார்
பாளைகொள் கமுகு சுவைக்கழை பழுக்குலை வாழை யொழுக்குவார்
கோளிறை கொண்டென வாடிகள் கோத்தணி வார்மிசை கொடிநிரை
வாளரி யெழுபரி யடிபட மதநிகை நிரையென வைப்பரால்.

(இ-ள்.) பெரிய இடங்களையுடைய அழகிய தெருக்கடோறும் நெடிய நடைப்பந்தல்களைப் போடுவார்கள். பாளைகள் பொருந்திய பாக்கு மரங்களையும் மதுரம் பொருந்திய கரும்புக்கழிகளையும், பழுத்த குலைகளையுடைய வாழை மரங்களையும் வரிசையாகக் கட்டுவார்கள். (சூரியன் முதலிய) கோள்கள் குடிவந்திருப்பதுபோலக் கண்ணாடிகளைக் கோத்து (வரிசையாகக்) கட்டுவார்கள். ஒளிபொருந்திய சூரியனது எழுபுரவிகள் அடிபடும்படி சம்மட்டியின் ஒழுங்குபோல, மேலே கொடிகளை வரிசையாகக் கட்டுவார்கள். எ-று.

சூரியன் முதலிய கோள்கள் ஒன்பது. அவையே நவக்கிரகங்கள். (௬௨)

பூவொடு தண்பனி சிந்துவார் பொரியொடு பொற்சுணம் வீசுவார்
பாவைவி ளக்குநி றுத்துவார் பைந்தொடை பந்தரி னாற்றுவா
ராவண மென்னவ யிர்ப்புற வணிமறு கெங்கணு மரதனக்
கோவையு மரகத மாலையுங் கோப்பமை யாரமுந் தூக்குவார்.

(இ-ள்.) மலர்களுடன் தட்பமாகிய பனிநீரைச் சிந்துவார்கள். (நெற்)பொரியுடன் பொன்னிறமமைந்த வாசனைப் பொடிகளை வாரியிறைப்பார்கள். பதுமைகள் தாங்கும் தீபங்களை வரிசையாக நிறுத்தி வைப்பார்கள். பசிய பூமாலைகளைப் பந்தல்களில் தொங்கும்படி கட்டுவார்கள். (கண்டோரெல்லாம்) கடைவீதியென்று சந்தேகமுற, அழகிய தெருக்கடோறும் இரத்தினக் கோவைகளையும் மரகதமாலைகளையுங் கோவையாக அமைந்த முத்துச்சரங்களையுந் தொங்கவிடுவார்கள். எ-று. (௬௩)

அடுகரி சிந்துர மப்புவா ரழன்மணி யோடை மிலைச்சுவார்
கடுநடை யிவுளி கழுத்தணி காலணி கலனை திருத்துவார்
சுடர்விடு தேர்பரி பூட்டுவார் தொடையொடு கவரிக டூக்குவார்
வடுவறு பொற்கல நவமணி மங்கல தீப மியற்றுவார்.

(இ-ள்.) (தம்மையெதிர்த்தோரைக்) கொல்லும் யானை (நெற்றி) களுக்குச் சிந்தூரம் பூசுவார்கள்; நெருப்புப்போலச் செவ்வொளிவீசும் மாணிக்கங்கள் பதித்த பட்டங்களைக் கட்டுவார்கள். கடுநடையோடு செல்லுங் குதிரைகளுக்குக் கழுத்தணி களையுங் காலணிகளையுஞ் சேணங்களையும் ஒழுங்குபட அணிவார்கள். ஒளி வீசும் இரதங்களிற் குதிரைகளைப் பூட்டுவார்கள். மாலைகளோடு சாமரைகளையும் (அவ்விரத ங்களில்) தொங்கவிடுவார்கள். குற்றமற்ற பொன்னாலாகிய தட்டுகளில் (வரிசையாக) மங்கலமாகிய நவரத்தினதீபங்களை வைப்பார்கள். எ-று.

ஓடை - நெற்றிப்பட்டம். கலம் - தேர்த்தட்டு. கலனை - சேணம். (ருச)

பழையன கலனை வெறுப்பராற் புதியன பணிகள் பரிப்பாராற்
குழைபனி நீரளை குங்குமங் குவிமுலை புதைபட மெழுகுவார்
மெழுகிய வீரம் புலர்த்துவார் விரைபடு கலவைக ளப்புவா
ரழகிய கண்ணடி நோக்குவார் மைந்தரை யாகுல மாக்குவார்.

(இ-ள்.) (அம்மதுராபுரியில் வசிக்கும் மாதர்கள்) பழைமையாயணிந்துள்ள னவாகிய ஆபரணங்களை நீக்குவார்கள். புதிதாய்ச் செய்யப்பட்டனவாகிய ஆபரணங் களைப் பூண்பார்கள். பனிநீரோடு குழைத்தமைந்த குங்குமக்குழம்பைக் குவிந்த குசங் கள் புதைபடப் பூசுவார்கள். (அவ்வாறு) பூசிய (குங்குமக்குழம்பின்) ஈரத்தை (வாசப் புகைகளால்) உலர்த்துவார்கள். வாசனை பொருந்திய சலவைச்சாந்தை யப்பி, அழகு அமைந்த கண்ணாடிகளைப் பார்ப்பார்கள். (இவ்வாறு ஒவ்வொருவரும் அலங்காரஞ் செய்துகொண்டு தங்கடங்கள்) கணவர்களை (மையல் பூட்டி) வருத்துவார்கள். (ருரு)

அஞ்சனம் வேல்விழி தீட்டுவா ராடவர் மார்பிடை நாட்டுவார்
பஞ்சுகள் பாத மிருத்துவார் பரிபுர மீது திருத்துவார்
வஞ்சியர் தேற லருந்துவார் மருங்குற வாட வருந்துவார்
கொஞ்சிய கனிமொழி கழறுவார் குழுவொடு குரவைகள் குழறுவார்.

(இ-ள்.) வஞ்சிக்கொடி போன்ற மாதர்கள் (தமது) வேலாயுதம் போன்ற விழிகளில் மைதீட்டுவார்கள். புருஷர்கள் மார்பில் (அக்கண்ணாகிய வேலை) நாட்டுவா ர்கள். கால்களிற் செம்பஞ்சுக்குழம்பைப் பூசுவார்கள். அப்பாதத்தின்மேல் சிலம்பு களை ஒழுங்குபட அணிவார்கள். மதுபானஞ் செய்வார்கள். (அம் மதுவெறியால்) இடையானது தளர நடந்து வருந்துவார்கள். (தமது கணவருடன்) கொஞ்சுதல் பொ ருந்திய (சுவை) கனிந்த வார்த்தைகளைப் பேசுவார்கள். மாதர்கூட்டத்துடன் குரவை யாடற்கண்ணுள்ள பாடல்களை (மயக்கத்தால்) தடுமாறிப் பாடுவார்கள். எ-று.

குரவையாடல் என்பதை

"குரவை யென்ப தெழுவர் மங்கையர்
செக்கிலை மண்டிலக் கடகக்கை கோத்துத்
தங்கிலை கொட்பகின் றாடலாகும்" என்னுஞ் சூத்திரத்தானறிக. (ருசு)

இன்னர மிதுன மெனச்செல்வார் கிளைகெழு பாணொடு விறலியர்
கன்னிய ரரசை வணங்குவார் கடிமண மெய்து களிப்பினு

மின்னிசை யாழொடு பாடுவா ரீர்ந்தன துகில்விரித் தேந்துவார்
சென்னியின் மீதுகொண் டாடுவார் தேறலை யுண்டு செருக்குவார்.

(இ-ள்.) விறலியர் வீணையின் நரம்பிலெழுந்த இசையுடன், வீணை யேந்திய மிதுனராசிபோலச் சென்று, கன்னியர்க்கரசியாராகிய தடாதகைப்பிராட்டியாரை நமஸ்கரிப்பார்கள். விளக்கமமைந்த திருமணமகோற்சவம் நிகழுஞ் சந்தோஷத்தினால் வீணையிலெழுந்த இனிய இசையுடன் (ஒற்றுமைபடப்) பாடுவார்கள். (அப்போது அவர்களுக்குப் பரிசாகக்) கொடுக்கும் பொருளை வஸ்திரம் விரித்து ஏந்துவார்கள். சிரசின்பேரில் வைத்துக்கொண்டு (ஆனந்தத்தால்) ஆடுவார்கள். மதுவைக் குடித்துக் களிப்பார்கள். எ-று.

"விறலியர் கிளைகெழு பாணொடு கின்னர மிதுனமெனச் செல்வார்" என அன்வயங்கொள்க. கிளைகெழுபாணொடு என்பதற்கு உரிமைச்சுற்றமாகவமைந்த தத்தமக்குரியபாணர்களுடன் எனப் பொருள்கூறுவது மொன்று. (கஎ)

மன்னவர் மகளிரு மறையவர் மகளிரும் வந்துபொன் மாலையைத்
துன்னினர் சோபனம் வினவுவார் தோகைதன் மணவணி நோக்குவார்
கன்னித னேவலர் வீசிய காசறை கற்பூர வாசமென்
பொன்னறுங் கலவையின் மெய்யெலாம் புதைபட வளனொடும் போவரால்.

(இ-ள்.) அரசமாதர்களும் வேதியமாதர்களும் (கூட்டங் கூட்டமாக) வந்து காஞ்சனமாலையையடைந்து திருக்கலியாணமகோற்சவத்தை வினவுவார்கள். தடாதகைப்பிராட்டியாரது திருமண அலங்காரங்களைக் கண்டு மகிழ்வார்கள். (அக்காலத்தில்) பிராட்டியாரது ஏவல் செய்வோர் வீசிய மயிர்ச்சாந்தினாலும் பச்சைக்கர்ப்பூரவாசங் கலந்த மெல்லிய பொன்னிறமுள்ள நறிய கலவைகளாலும் (தமது) உடல் முழுதும் மறைபட அவ்வளப்பத்தோடும் (தங்கடங்கள்) வீடுகளுக்குப் போவார்கள். எ-று.

அங்க னகஞ்செய் தசும்பின வாடை பொதிந்தன தோடவிழ்
தொங்கல் வளைந்தன மங்கையர் துள்ளிய கவரியி னுள்ளன
கங்கையும் வாணியும் யமுனையுங் காவிரி யும்பல துறைதொறு
மங்கல தூரிய மார்ப்பன மதமலை மேலன வருவன.

(இ-ள்.) கங்காதீர்த்தமும் சரசுவதிதீர்த்தமும் யமுனாதீர்த்தமும் காவிரிதீர்த்தமும் பலதுறைகளிலுமிருந்து அழகிய பொன்னாலாக்கப்பட்ட குடங்களில் நிறைக்கப்பட்டனவும், (அவற்றின்பேரில்) வஸ்திரங்களாற் பொதியப்பட்டனவும், இதழ்கள் விரிந்த மலர்மாலைகளால் வளைந்தணியப்பட்டனவும், மாதர்கள்வீசுங் கவரியினுள் அடங்கினவும், மதஞ்சொரியும் யானையினது மத்தகத்தின்பேரில் உள்ளனவுமாகி, மங்கலவாத்தியங்கள் ஒலிக்க (ஒருபக்கலில்) வாராநின்றன. எ-று.

கங்கை யமுனை சரசுவதி காவிரித்தீர்த்தங்களைக் கூறியதனானே, அவற்றிற்கினமாயுள்ள கோதாவரி நருமதை சிந்து முதலியவற்றையும் உடன்கொள்க. (கக)

அங்கவர் மனைதொறு மணவினை யணுகிய தூழனிய ரொனமறைப்
புங்கவ ரினிதுண வறுசுவைப் போனக மடுவினை புரிகுவா
ரிங்கடு வனபலி யடிகளுக் கெனயதி களையெதிர் பணிகுவார்
சங்கர னடியரை யெதிர்கொள்வார் சபரியை விதிமுறை புரிகுவார்.

(இ-ள்.) அம்மதுரையிலுள்ள அவரவர்கள் வீடுகளிலெல்லாம் திருமணத்தொழில் வந்தாற்போல ஆரவாரங்களை யுடையவர்களாய் வேதநூலாராய்ந்த பிராமணர்கள் குறைவின்றிப் புசிக்கும்படி அறுசுவையோடுகூடிய (கறிகளையும்) அன்னங்களை

யுஞ் சமைக்குந்தொழிலைச் செய்வார்கள். சுவாமிகளுக்குப் பிக்ஷை இவ்விடத்திற் சமைக்கிறோமென்று யதிகளை எதிர்சென்று (விருந்துக்கழைத்துப்) பணிவார்கள். சிவனடியார்களை எதிர்கொண்டு (அவர்களை) ஆகம முறைப்படி பூசை செய்வார்கள். எ-று.

சபரியை=பூசை. சபர்யா என்னும் வடமொழித்திரிபு. (௬0)

இன்னண நகர்செய லணிசெய வினையிலி மணமகன் மணவினைக்
கன்னியு மனையவ ளென்னினிக் கடிநகர் செயுமெழில் வளனையா
மென்னவ ரியநகர் செயலெழி லினையென வுரைசெய்வ தெவனிதன்
முன்னிறை மகடமர் மணவணி மண்டப வினைசெயு முறைசொல்வாம்.

(இ-ள்.) இவ்வண்ணமாக நகரை அலங்கரித்தலால் (இம்மணவினைக்குரிய) மணநாயகனும் சமானமில்லாதவன். தடாதகைப்பிராட்டியாரும் அத்தகையினரென்றால், இக்காவல்பூண்ட மதுராபுரியின் அலங்காரப்பொலிவுக்கு எந்த அரியநகரத்தின் அலங்காரப்பொலிவை ஒப்புஎன்று நாமெடுத்துச்சொல்வது என்னவிருந்தது (சிறிதுமில்லை) இம்மதுரை நகரை அலங்கரித்தற்குமுன்னரே தடாதகைப் பிராட்டியாரது சுற்றத்தார் திருக்கலியாணமண்டபத்தை அலங்காரஞ்செய்யும் முறையை இனியெடுத்துச் சொல்லுவாம். எ-று.

"என்னவரியநகர் செயலெழிலினையென வுரைசெய்வது எவன்" என்றது, இம்மணவினைக்குரிய நாயகனும் நாயகியும் ஒப்பற்றவராகலின் அவர்கள் மணவினை நிகழுந் திருநகரும் ஒப்பற்றதே யெனக்குறிப்பித்தலாம். (௬௧)

மேற்படி வேறு.

கருவி வான்முகி லூர்தியைப் பொருதநாள் கலைமதி மருமாட்டி
செருவில் வாங்கிய விமானமா லைகளெனத் தெய்வத வரையெல்லா
மருவி யந்நகர் வைகிய தம்பிறை மடமக ளனைக்காண்பான்
றருவி நின்றென நட்டன ரெட்டிவான் றொடுநிலை நெடுந்தேர்கள்.

(இ-ள்.) சந்திரவங்கிசத்திற் றோன்றிய தடாதகைப்பிராட்டியார் உலகத்திற்குத் துணைக்காரணமாகிய மேகத்தை வாகனமாகவுடைய தேவேந்திரனைப் போர்செய்து செயித்தகாலத்தில், போரிற்கவர்ந்த விமானங்களை வரிசைபடவைத்ததுபோலவும், தெய்வத்தன்மைபொருந்திய மலைகளெல்லாம்வந்து அம்மதுராபுரியிலெழுந்தருளிய, தங்கள் தலைவனுகிய மலையரையன் புத்திரியாரைக் காணும்படி சமயந்தேடி (வரிசைபட) நிற்பதுபோலவும், எட்டி ஆகாயத்தையளாவும் நெடியநிலைத்தேர்களை (வரிசைபட) நிறுத்தினூர்கள். எ-று. (௬௨)

பளிக்கி னேழுயர் களிறுசெய் தமைத்தபொற் படியது பசுஞ்சோதி
தெளிக்கு நீலத்தி ளுளிக ணிரைமணித் தெற்றிய துற்றோர்சாய்
வெளிக்கு ளாடிய வோவியப் பாவைபோன் மிளிர்பளிங் காற்சோதி
தளிர்க்கும் பித்திய திடையிடை மரகதச் சாளரத் ததுமாதோ.

(இ-ள்.) ஏழுமுழமுயர்ந்த (அரச) யானைகளை (இருபக்கலிலும்) பளிங்கினூற்செய்து (அதன்பேரில்) அமைத்த பொன்னுலாகிய படிகளையுடையதும் பசியகிரணத்தைவீசும் நீலமணிகளால் யாளிகளை வரிசைபடச் செய்தமைத்த இரத்தினங்கள் பதித்த திண்ணைகளையுடையதும்,அடுத்துவந்தவர்களது சாயல்கள் வெளிப்புறத்தில் அசைவாடிநிற்குஞ் சித்திரப்பதுமைகள்போல ஒளிவீசும் பளிங்கினூற் செய்த கிரணம்வீசும்

சுவர்த்தலங்களையுடையதும் இடையிடையில் பச்சைரத்தினங்களாற் செய்த சன்னல்களையுடையதும். எ-று,

இதுமுத லிரண்டு பாடல்கள் குளகம்.

எழுயர்களிறு என்றது அரசயானை. அதன் எனையவிலக்கணங்களையும், திவாகரநிகண்டு.

"காலோர் நான்குந் தனிக்கையுங் கோசமும்
வாலுறுப் போடேழு மாநிலந் தோயப்
பாலுஞ் சங்கும் போலுங்கா லுகிரது
காலினு ஞான்ற வொருதனிக் கையினும்
வாயினும் வாலினு மருப்பினுங் கோறல்
வல்லதுமதில் மூன்று முழச்சுற் றுடைத்தாய்
எழு முழமுயர்ந் தொன்பது முழநீண்டது
தீயுமிழ் சிறுகண்ணுஞ் செம்புகரு முடைத்தாய்
முன்புயர்ந்து பின்பணிந்த தாயின்
அவ்வியல் யானையை யரசுவா வென்ப" என்னுஞ் சூத்திரத்தானறிக. ()

பல்லு ருச்செய்த பவளக்கா லாயிரம் படைத்ததிந் திரநீலக்
கல்லு ருத்தலைப் போதிய தாடகக் கவின்கொளுத் தரமேல
தல்லு ருக்கிய செம்மணித் துலாத்ததா லமுதுடற் பசுந்திங்கள்
வில்லு ருக்குகன் மாடம தாகிய வேள்விமண் டபஞ்செய்தார்.

(இ-ள்.) பலவித ரூபமாகச்செய்தமைத்த ஆயிரம் பவளத்தூண்களையுடையதும், (அவற்றிற்குமேலே) இந்திர நீல ரத்தினத்தினல் வடிவமையச் செய்தமைத்த போதிகைகளை யுடையதும், பொன்னாற்செய்த அழகுமிக்க உத்தரங்களை மேலே யுடையதும், இருளையோட்டுஞ் செவந்த மாணிக்கங்களாற்செய்த துலாங்களையுடையதும், அமுதநிறைந்த உடலையுடைய தண்ணிய சந்திரனது கிரணங்கள் உருக்குதற்கெல்லையாகிய சந்திரகாந்தக் கல்லாற்செய்த மேனிலையையுடையதுமாகிய திருக்கலியாண மண்டபஞ்செய்தமைத்தார்கள். எ-று. (சுச)

முத்திற் பாளைசெய் தவிர்மர கதத்தினன் மொய்த்தபா சிலைதுப்பின்
கொத்திற் றீம்பழம் வெண்பொனாற் கோழரை குயின்றபூ கமுந்துப்பின்
றொத்திற் றூங்குபூச் செம்பொனாற் பழுக்குலை தூக்கிப்பொன் னாற்றண்டு
வைத்துப் பாசொளி மரகத நெட்டிலை வாழையு நிரைவித்தார்.

(இ-ள்.) முத்தினாலே பாளைகளமைத்து, பிரகாசிக்கின்ற மரகதத்தினாலே நெருங்கிய பசிய இலைகளும் பவளக்கொத்தினாலே இனிய பழங்களும் வெள்ளியினாலே கொழுவிய தாருகளுஞ் செய்தமைத்த கமுககளையும், பவளக்கொத்தினாலே தொங்குகின்ற பூக்களோடு செவந்த பொன்னினாலே பழுத்த குலைகளைத்தொங்கவிட்டும், பொன்னினாலே தண்டுசெய்தமைத்தும் பசிய வொளியையுடைய மரகதத்தினல் நீண்ட இலைகளும் (அமைந்த) வாழைகளையும், (அத்திருக்கலியாண மண்டபத்திலே) வரிசைபடக்கட்டினார்கள். எ-று. (சுரு)

பித்தி மாதவி சண்பகம் பாதிரி பிறவுமண் டபஞ்சூழப்
பத்தி யாவளர்த் தளிகள்வாய் திறந்துபண் பாடவின் மதுக்காலத்
தத்தி யாய்மணங் கவர்ந்துசா ளரந்தொறுந் தவழ்ந்தொழு கிளந்தென்ற
றித்தி யாதிற்கு மதுத்துளி தெளித்திடச் செய்தன ருய்யானம்.

(இ-ள்.) பித்தியும் மாதவியும் சண்பகமும் பாதிரியும் மற்றுள்ள மரங்களும் திருமண்டபத்தைச்சூழ வரிசையாகவளர்த்து, வண்டுகள் வாய்திறந்து பண்பாடவும், (மலர்கள்) இனிய தேன்றுளிசிந்தவும், அவற்றுட்சென்று ஆராய்ந்து நறுமணங்களைக் கொள்ளைகொண்டு சன்னல்கடோறுந் தவழ்ந்துசெல்லும் இளந்தென்றற் காற்றுனது தித்திக்கின்ற தேன்றுளிகளைச் சிந்தவும், பூந்தோட்டங்களைச் செய்தமைத்தார்கள்.

பித்தி = சிறுசண்பகம். மாதவி = குறுக்கத்தி. உய்யானம் = பூந்தோட்டம்.

வேள்விச் சாலையும் வேதியுங் குண்டமு மேகலை யொடுதொன்னூற்
கேள்விச் சார்பினுற் கண்டுகண் ணடிவிடை கிளர்சுடர் சீவற்ச
நீள்விற் சாமரம் வலம்புரி சுவத்திக நிறைகுட மெனவெட்டு
வாள்விட் டோங்குமங் கலத்தொழில் செய்பொறி வகையினு னிருமித்தார்.

(இ-ள்.) அனுதியாசவள்ள ஆகமமுறைப்படி யாகசாலையும் வேதிகைகளும் ஹோமகுண்டமும் மேகலைகளுடன்வகுத்து, கண்ணடி - இடபம்-பிரகாசிக்குந்தீபம்-சீவற்சம்-மிக்க கிரணங்களையுடைய சாமரம்-சங்கு-சுவத்திகம் - பூரணகும்பம் என்று கூறப்பட்ட கிரணத்தைவிட்டு விளங்கும் அஷ்டமங்கலங்களையுஞ் சித்திரமாகத் தொழில்செய்வகையினால் நிருமித்துவைத்தார்கள். எ-று.

வேதிகை - யாகத்திற் கலசம்வைக்கும்படி ஏற்படுத்துந் திண்ணை. மேகலை-ஓமகுண்டத்தின் வரம்பு. ஸ்ரீவற்சம் - பெண்குழந்தையை இடையில் வைத்திருக்கும் ஓர் பெண்வடிவம். சுவஸ்திகம்-மண்டபவடிவம் அல்லது மேழிவடிவம். (சுஎ)

மணங்கொள் சாந்தொடு குங்குமப் போதளாய் மான்மதம் பனிநீர்தோய்த்
திணங்கு சேறுசெய் திருநிலந் தடவிவா னிரவிமண் டலநாணப்
பணங்கொ ளுரகமா மணிவிளக் கிருகையும் பாவைக ளெடுத்தேந்தக்
கணங்கொ டாரகை யெனநவ மணிகுயில் கம்பலம் விதானித்தார்.

(இ-ள்.) மணங்கமழுஞ் சந்தனத்துடன் குங்குமப் பூவையுங் கஸ்தூரியையுங் கலந்து பனிநீரிற்கரைத்து ஒன்றுபடக்குழம்பாக்கிப் பெரியதரைமெழுகி, ஆகாயத்திலுள்ள சூரியமண்டலமும் (மன) நாணமெய்தும்படி, படம் பொருந்திய சர்ப்பங்களின் பெரிய (சிரோ) ரத்தினங்களாகிய தீபங்களை (தமது) இரண்டுகைகளிலும் பதுமைகள் எடுத்தேந்திநிற்கக் கூட்டங்கொண்ட நக்ஷத்திரங்கள் (உதயமானுற்) போல நவரத்தினங்களை இடையிடையே கோவைசெய்தமைத்த (ஒளிபொருந்திய) கம்பலங்களை விரித்தார்கள். எ-று. (சுஅ)

செம்பொற் கோயின்முன் சேண்டொடு காவனந் திசையெலாம் விழுங்கச்செய், தம்பொற் பாலிகைப் பாண்டில்வாய் முளைதெளித் தம்புயத் தவனாதி, யும்பர்க் கேற்றபொற் கம்பல மேல்விரித் துள்ளுறத் தவிசிட்டுத்,தும்பைத் தாழ்சடை யான்றமர்க் காதன ஞசூழவிட் டதனுப்பலன்.

(இ-ள்.) செம்பொன்னாலாகிய திருக்கலியாண மண்டபத்தின் முன்னே ஆகாயமளாவிய பந்தல்.எட்டுத்திசைகளையும் விழுங்கப்போடவித்து, அழகிய பொன்னாற்செய்த வட்டமாகிய பால்கையில் முளைகளைத் தெளித்து, பிரமன்முதலிய தேவர்களுக்குத் தக்க பொன்னாலாகிய கம்பலத்தை மேலே விரித்து அதனுள்ளே பொருந்த ஆதனமிட்டு, தும்பைமாலை யணிந்த நெடிய சடையை யுடைய சிவபெருமானது தமர்களாகிய அடியாருக்கு ஆசனங்களைச் சுற்றுமிட்டு அதன்மத்தியில். எ-று.

பாண்டிற்பாலிகை-வட்டவடிவாகிய பாலிகை. தமர் = சுற்றத்தார். (சுகூ)

கற்ப கந்தரு வயிரவா ளரிப்பிடர் கதுவப்பொற் குறடேற்றி
யெற்ப டேந்துகி ராற்குடஞ் சதுரமா வியற்றிய வெருத்தத்தூண்
விற்ப டும்பளிக் குத்தரந் துப்பினல் விடங்கமே னிலமூன்றுப்
பொற்ப நூல்வழி விமானம்பன் மணிகளாற் பொலியச்செய் துள்ளாக.

(இ-ள்.) கற்பக விருக்ஷமானது கொடுத்த வயிரத்தினுற் செய்த ஒள்ளிய சிங்கத்தின் பிடரியிற்பொருந்தப் பொன்னுற் குறடெழுப்பி, ஒளிவீசும் பவளத்தினுலே சதுரமாகக் குடஞ்செய்தமைத்த கழுத்தையுடைய தூண்களை (நிறுத்தி) ஒளிவீசும் பளிங்காலமைத்த உத்தரங்களையும், பவளங்களாற் செய்தமைத்த கொடுங்கைகளையும் பரப்பி, (இவ்வண்ணம்) மேல்நிலம் மூன்ருக அழகுசெய்ய, சிற்பநூல்வழியே பல இரத்தினங்களால் விமானத்தை விளங்கச்செய்து, அதனுள்ளாக. எ-று.

விடங்கம் - கொடுங்கை. (எ0)

அங்க மாறுமே கால்களாய் முதலெழுத் தம்பொற்பீ டிகையாகித்
துங்க நான்மறை நூல்களே நித்திலந் தொடுத்தசை தாம்பாகி
யெங்க ளூபக னெம்பெரு மாட்டியோ டிருப்பதற் குருக்கொண்டு
தங்கி ஞலென நவமணி குயின்றபொற் றவிசது சமைத்திட்டார்.

(இ-ள்.) அங்கங்க ளாறுமே கால்களாகியும், பிரணவமே அழகிய பொற்பீடமாகியும், பரிசுத்தமாகிய நான்கு வேத நூல்களே முத்தினுற் செய்தமைத்த அசைகின்ற (நான்கு) வடங்களாகியும், எங்கள் இறைவராகிய சிவபெருமான் எமது தடாதகைப்பிராட்டியாருடன் வீற்றிருந்தருளுவதற்கு (அவை) அவ்வடிவங் கொண்டு தங்கினுற்போல, நவரத்தினங்கள் பதித்த பொன்னுலாகிய ஆதனம் ஒன்றைச் செய்து அமைத்தார்கள். எ-று. (எக)

புரந்த ரன்றரு கற்பகம் பொலந்துகில் பூண்முத லியநல்கச்
சுரந்த ருந்பெற லமுதனை வகையறு சுவையுணு முதலாகப்
பரந்த தெய்வவான் பயப்பச்சிந் தாமணி பற்பல வுஞ்சிந்தித்
திரந்து வேண்டுவ தரத்தர வீட்டிரு ரிந்திர நகர்நாண.

(இ-ள்.) தேவேந்திரன் (திறையாகக்) கொடுத்த கற்பகவிருக்ஷமானது பீதாம்பரங்கள் - ஆபரணங்கள் முதலிய பல பொருள்களையுங் கொடுக்கவும், காமதேனுவானது பெறுதற்கரிய அமுதம் போன்ற அறுசுவையமைந்த ஐவகையுணவுகள் முதலாக மிக்க வுணவுகளைக் கொடுக்கவும், நினைத்து யாசித்து வேண்டிக்கொள்ளும் பற்பல பொருள்களையுஞ் சிந்தாமணியானது கொடுக்கவும், இந்திரனது (அமராவதியாகிய பொன்) நகரமும் நாணமடையும்படி வாங்கிச் சேகரித்தார்கள். எ-று.

ஐவகையுணவு—உண்ணல்-தின்னல்-நக்கல்-பருகல் என்னு நான்கனுடன் உறிஞ்சுதல் என ஒன்று கூட்டிக்கொள்க. (எஉ)

தென்னர் சேகரன் றிருமக டிருமணத் திருமுகம் வரவேற்று
மன்னர் வந்தெதிர் தொழுதுகைக் கொண்டுதம் மணிமுடி மிசையேற்றி
யன்ன வாசகங் கேட்டனர் கொணர்ந்தவர்க் கருங்கலந் துகிணல்கி
முன்ன ரீர்த்தெழு களிப்புற மனத்தினு முந்தினர் வழிக்கொள்வார்.

(இ-ள்.) பாண்டியர் வமிசத்திற் கோர் கிரீடமாய் விளங்கும் மலயத்துவஜ பாண்டியனது புத்திரியாராகிய தடாதகைப்பிராட்டியாரது திருமணச் செய்தி வரைந்த திருமுகத்தின் வருகையை மன்னர்கள் வந்து எதிரேற்று (அதனைப்) பணிந்து (தங்கள்) கையில் வாங்கித் தமது இரத்தின மழுத்திய கிரீடத்தின்பேரில் வைத்துக்

கொண்டு, அத்திருமுகத்தில் எழுதியுள்ள வாசகத்தை (கணிகன் வாசிக்க)க் கேட்டு (அதனைக்) கொண்டுவந்தவர்கட்கு அரிய ஆபரணங்களையும் வஸ்திரங்களையுங் கொடுத்து, (தம்மை) முன்னே இழுத்துச் செல்லுஞ் சந்தோஷமானது மீக்கொள்ள மனோவேகத்தினும் விரைந்து வழிச்செல்வா ராயினர். எ-று. (எ௩)

கொங்கர் சிங்களர் பல்லவர் வில்லவர் கோசலர் பாஞ்சாலர்
வங்கர் சோனகர் சீனர்கள் சாளுவர் மாளவர் காம்போச
ரங்கர் மாகத ராரியர் நேரிய ரவந்தியர் வைதர்ப்பர்
கங்கர் கொங்கணர் விராடர்கண் மராடர்கள் கருநடர் குருநாடர்.

(இ-ள்.) கொங்க நாட்டாரும், சிங்களநாட்டாரும், பல்லவ நாட்டாரும் வில்லவநாட்டாரும், கோசலநாட்டாரும், பாஞ்சால நாட்டாரும், வங்கநாட்டாரும், சோனகநாட்டாரும், சீனநாட்டாரும், சாளுவநாட்டாரும், மாளவநாட்டாரும், காம்போசநாட்டாரும், அங்கநாட்டாரும், மாகதநாட்டாரும், ஆரியநாட்டாரும், நேரியநாட்டாரும், அவந்திநாட்டாரும், வைதர்ப்பநாட்டாரும், கங்கநாட்டாரும், கொங்கநாட்டாரும், விராடநாட்டாரும், மராடநாட்டாரும், கருநடநாட்டாரும், குருநாட்டாரும்.—எ-று.

இதுமுதல் இரண்டுபாடல்கள் ஒருதொடர். (எச)

கலிங்கர் சாவகர் கூவிள ரொட்டியர் கடாரர்கள் காந்தாரர்
குலிங்கர் கேகயர் விதேகர்கள் பௌரவர் கொல்லர்கள் கல்யாணர்
தெலுங்கர் கூர்ச்சரர் மச்சர்கண் மிலேச்சர்கள் செஞ்சையர் முதலேனைப்
புலங்கொண் மன்னருந் துறைதொறு மிடைந்துபார் புதைபட வருகின்றார்

(இ-ள்.) கலிங்கநாட்டாரும், சாவகநாட்டாரும், கூவிளநாட்டாரும், ஒட்டியநாட்டாரும், கடாரநாட்டாரும், காந்தாரநாட்டாரும், குலிங்கநாட்டாரும், கேகயநாட்டாரும், விதேகநாட்டாரும், பௌரவநாட்டாரும், கொல்லநாட்டாரும், கலியாணநாட்டாரும், தெலுங்கநாட்டாரும், கூர்ச்சரநாட்டாரும், மச்சநாட்டாரும், மிலேச்சநாட்டாரும், செஞ்சையநாட்டாரும் முதலாகியநாடுகளிலுள்ள மன்னர்களும் வழிகள்தோறும் நெருங்கிப் பூமியானது முழுவதும் மறையும்படி வருகின்றார்கள். எ-று. ()

இந்த கைப்பல தேயமன் னவர்களு மெண்ணிடம் பெறாதீண்டிப்
பைத்த வாழிபோ னிலமகண் முதுகிறப் பரந்ததா னையராகித்
தத்த நாட்டுள பலவகை வளனொடுந் தழீஇப்பல நெறிதோறு
மொய்த்து வந்தனர் செழியர்கோன் றிருமகண் முரசதிர் மணமூதூர்.

(இ-ள்.) இத்தன்மையுடைய பலநாட்டரசர்களும் எள்ளிடமில்லாமல் நெருங்கி, பரந்த சமுத்திரம்போலப் பூமிதேவியின் முதுகு முறியும்படி (எவ்விடத்தும்) பரந்த சேனையையுடையவராகித் தங்கள் தங்கள் நாட்டிலுள்ள பலவகைப்பொருள்களையுங்கைக்கொண்டு, பலவழிதோறும்நெருங்கி, பாண்டியர்களுக்கரசனாகிய மலயத்துவஜபாண்டியனது புத்திரியாராகிய தடாதகைப்பிராட்டியாரது திருமண முரசு ஒலிக்கும் தொன்றுதொட்டுள்ள மதுரை நகரையடைந்தார்கள். எ-று. (எ௫)

வந்த காவல ருழையர்சென் றுணர்த்தினர் வருகென வருகுய்ப்பச்
சந்த வாளரிப் பிடரணை மீதறந் தழைத்தருள் பழுத்தோங்குங்
கந்த நாண்மலர்க் கொம்பினைக் கண்டுகண் களிப்புற முடித்தாமஞ்
சிந்த வீழ்ந்தருள் சுரந்திடத் தொழுதுபோய்த் திருந்துதம் மிடம்புக்கார்.

(இ-ள்.) (இவ்வண்ணமாக) வந்த மன்னர்களது (வருகையை) வாயில் காப்பாளர் சென்று (தடாதகைப்பிராட்டியாருக்குத்) தெரிவித்தார்கள். (பிராட்டியார்)

வரக்கடவர்களெனக் கட்டளையிட (அதனையவர்கட்குணர்த்தி) அருகிற்செலுத்த, அழகிய ஒள்ளிய சிங்கங்களின் பிடரியின்பேரிலுள்ள ஆசனத்தின்மேல் (எழுந்தருளிய) தருமந்தழைத்து அருள்கனிந்துவிளங்கும் (அன்பாகிய) வாசனைபொருந்திய அன்றலர்ந்த மலர்களையுடைய பூங்கொம்புபோன்ற அப்பிராட்டியாரை (தமது) கண்கள் களிப்படையத் தரிசித்து, தமதுகிரீடங்களிலணிந்த மாலைகள் (பூமிமேல்) விழச் சாஷ்டாங்கமாகப் பணிந்து (அப்பிராட்டியார்) திருவருள்செய்யச் சென்று (விடுதியாக விடப்பட்ட) தங்கள் திருந்திய இடங்களை யடைந்தார்கள். எ-று.

அறத்தைத் தளிர்களாகவும் அருளைக் கனிகளாகவும் உருவகஞ்செய்து அன்பை உருவகஞ்செய்யாமையால் இது ஏகதேசவுருவகவணி. (எஎ)

வரைவ ளங்களும் புறவினில் வளங்களு மருதத்தண் பணைவேலித்
தரைவ ளங்களுஞ் சலதிவாய் நடைக்கலந் தருவளங் களுமீண்டி
யுரைவ ரம்பற மங்கலம் பொலிந்ததிவ் வூரினி நால்வேதக்
கரைக டந்தவன் றிருமணஞ் செயவரு காட்சியைப் பகர்கின்றேன்.

(இ-ள்.) குறிஞ்சிநிலப் பொருள்களாலும் முல்லைநிலப் பொருள்களாலும் தட்பமாகிய மருதநிலப் பொருள்களாலும், கடலிற் செல்லும் மரக்கலங்கள் தரும் பொருள்களாலும் இம்மதுராபுரி சொல்லளவையற்று நெருங்கி அட்டமங்கலங்களோடும் விளங்கியது. நான்கு வேதங்களின் எல்லையையுங் கடந்த சிவபெருமான் (தடாதகைப்பிராட்டியாரைத்) திருமணம்புரியும்படி எழுந்தருளிய திருத்தோற்றத்தை இனி எடுத்துச் சொல்லுகின்றேன். எ-று.

நால்வேதக் கரை கடந்தவன் என்றது சொல்லளவிற் கெட்டாதவனெனக் குறிக்க. மருதப்பணை-வேலித்தரை-என்பன ஒருபொருட் பன்மொழிகள். (எஅ)

ஏக நாயகி மீண்டபின் ஞாட்பிகந் திரசித கிரியெய்தி
நாக நாயக மணியணி சுந்தர நாயக னுயிர்க்கெல்லாம்
போக நாயக னாகிப்போ கம்புரி புணர்ப்பறிந் தருணந்தி
மாக நாயகன் மாலய னுருத்திரர் வரவின்மேன் மனம்வைத்தான்.

(இ-ள்.) ஒப்பற்ற தடாதகைப்பிராட்டியார் (மதுராபுரிக்குத்) திரும்பிய பின்னர், சர்ப்பங்கட்கெல்லாந் தலைமைத்தன்மையுடைய ஆதிசேடனாகிய ஆபரணத்தைத்தரித்த சோமசுந்தரக்கடவுள் போர்க்களத்திலிருந்து நீங்கி வெள்ளிமலை (ஆகிய திருக்கைலாயகிரி)யையடைந்து, போகநாயகனாய் உயிர்களெல்லாவற்றிற்கும் போகந் தந்தருளுங் குறிப்பைக் கிருபையுடைய திருநந்திதேவர் அறிந்து, விண்ணுலகத்திற்கு நாயகனாகிய இந்திரன் - திருமால் - பிரமன் - உருத்திரர்கள் (ஆகிய இவர்போல்வாரது) வருகையின்பேரில் திருவுள்ளங்கொண்டருளி. எ-று.

"போகநாயகனாகிப் போகம்புரிபுணர்ப்பு" என்றது இறைவன் யோகநிஷ்டைசெய்து சனகனாதி முனிவர்கட்கு ஞானநிலையுணர்த்தியபொழுது உலகமுழுவதும் ஞானநெறியினின்றதும், இறைவன் திருவிழிகளைத் தேவியார் திருவிளையாடலாகத் தமது திருக்கரத்தாற் பொத்தியபொழுது உலகமுழுதும் இருண்மயமானதும், இறைவனை அருச்சுனனடித்த வில் அடியும் அரிமர்த்தன பாண்டியனடித்த பிரம்படியும் தேவமானவமிருகபக்ஷி முதலிய எல்லோருக்கும் பட்டதும்போல, தானொர்பற்றிலனாயினும் உலகமாந்தர்கட்குப் போகம் புணர்ப்பிக்கு நிமித்தம் போகநாயகனாகத் திருக்கோலங்கொண்டு நடித்துத் தகைப்பிராட்டியாரைத் திருமணஞ்செய்யத் திருவுள்ளங் கொண்டார் என்னுங் குறிப்புணர்த்தியது.

இறைவர் தேவியோடு கூடி நின்றபொழுதே அகில காரியங்களும் நிறைவேறுமன்றிப் பிரிந்திருக்குங்காலத்து யாவும் நிகழா வென்பதை,

"ஆகமங்க ளெங்கே யறுசமயந் தானெங்கே
போகங்க ளெங்கே புணர்ப்பெங்கே—பாகத்
தருள்வடிவுந் தானுமா யாண்டிலனே லந்தப்
பெருவடிவை யாரறிவார் பேசு"—என்றதனுனறிக. (எகூ)

சங்கு கன்னனை யாதிய கணுதிபர் தமைவிடுத் தனனன்னுர்
செங்க ணேற்றவர் மாலயன் முதற்பெருந் தேவர்வான் பதமெய்தி
யெங்க ளுபகன் றிருமணச் சோபன மியம்பினு ரதுகேட்டுப்
பொங்கு கின்றபே ரன்புபின் றள்ளுறப் பொள்ளென வருகின்ருர்.

(இ-ள்.) சங்குகன்னனை முதலாகவுள்ள கணத்தலைவர்களை யனுப்பினுர். அவர்கள் செவந்த கண்களையுடைய உருத்திரர்கள்-திருமால்-பிரமன் முதலிய பெரிய தேவர்கள் (வசிக்கும்) பெரிய பதவிகளுக்குச் சென்று, எங்கள் இறைவராகிய சிவபெருமானது திருக்கலியாணமகோற்சவத்தைச் சொன்னுர்கள். அந்தச் (சந்தோஷ) செய்தியைக் கேட்டு (தம்மை) மேற்கொண்டு விழுங்குகின்ற பெரிய அன்பானது பின்னே நின்று (பிடர்பிடித்துத்) தள்ள விரைந்து வரத்தொடங்கினுர்கள். எ-று.

செங்கணேற்றவரென்றது சங்கரிக்குந் தொழிலின ராகலிற் கோபக்கண்ணையுடையவரென்றும், செவந்த கண்ணையுடைய ஏறு ஆகிய இடபவாகன முடையாரென்றும் பொருள்படும். (அ0)

அஞ்சு கோடியோ சனைபுகைந் திருமடங் கழனறவர் தமைப்போலி
ரஞ்சு தீயுருத் திரர்புடை யுடுத்தவ ரழற்கணுற் பூதங்க
ளஞ்சு றாறுருத் திரரண்டத் துசசிய ரியயன் முதற்றேவ
ரஞ்சு மாணையு மாற்றலும் படைத்தவ ரடுகுறட் படைவீரர்.

(இ-ள்.) அஞ்சுகோடி யோசனைதூரம் புகைந்து பத்துக்கோடி யோசனை தூரம் தீக்கொழுந்துவிட்டெரியுங் காலாக்கினி யுருத்திரதேவரும், அவரைப்போல (அவரைச் சூழ்ந்துள்ள) பத்துக் காலாக்கினி யுருத்திரர்களும், (அப் பதின்மருள் ஒவ்வொருவரையும்) புடைசூழ்ந்து சேவித்து நிற்கும் ஒவ்வொருகோடி யுருத்திரர்களும், தீயைச்சொரியுங் கண்களையுடைய நான்குவகைப் பூதங்களும், அண்டத்துச்சியில் வசிப்பவராகிய எல்லோரும் அஞ்சத்தக்க நூறு ருத்திரர்களும், திருமாலும் பிரமனும் முதலிய தேவர்கள் பயப்படும் ஆக்கினையையும் வல்லமையையும் படைத்த (எதிர்த்தோரைக்) கொல்லும் பூதப்படைவீரர்களும். எ-று.

இதுமுதற் பதினெரு செய்யுள்கள் ஒருதொடர். இதனுல் இறைவர் திருமணத்திற்குவந்த தேவர்களது வருகை கூறப்பட்டது.

சிவதருமோத்தரம் - கோபுரவியல்.

"அண்டகடா கக்கனமூண் டொருகோடி யதனடியுட்
கண்டிடுகெ காலாங்கி யுருத்திரர்க்குக் கனகமனை
யுண்டதற்குன் னதங்கோடி யோசனையீ ரைங்கோடி
மண்டியமெய்த் தழற்கொழுந்தைங் கோடியுறும் வளர்புகையும்.

யோசனையா யிரமனையு ளரியணையி னுயரந்தான்
யோசனையீ ராயிரமென் றதன்விரிவை யுணர்ந்திடுகெ

தேசுடைய காலாங்கி யுருத்திரர்தந் திருமேனி
யோசனையு முண்டழலா லயுதமென வுன்னுகவே.
தரித்துடையர் வலக்கரத்திற் றயங்கொளிவாள் சரத்தினையும்
பரித்துடைய ரிடக்கரத்திற் பலகையினைத் தனுவினையு
முருத்திரர்க ளொருபதின்ம ருறைவரவ ருழையவர்போ
லுருத்திரர்க ளொவ்வொருவர்க் கொருகோடி பரிச்சிதமே.—என்றபடி.

கீழண்டகடாகத்தில், காலாக்கினி யுருத்திரதேவநாயனார் கோடியோசனையுள்ள பொன்மயமான ஆலயத்தில் ஆயிரயோசனை யுயரமும் இரண்டாயிர யோசனை விசாலமுமுள்ள சிங்காசனத்தில் தமது திருமேனியில் அக்கினிச்சுவாலை பத்துக்கோடி யோசனையும் அந்தச்சுவாலையின்புகை ஐந்துகோடி யோசனையு முடையாராய் வீற்றிருப்பர். இந்தக் காலாக்கினி யுருத்திரதேவநாயனாரைச் சூழ்ந்து அவரைப்போலப் பத்து ருத்திரர்கள் இருப்பார்கள். அவ்வுருத்திரர்கள் பதின்மருள் ஒவ்வொருவரையும் ஒவ்வொரு கோடி யுருத்திரர்கள் பரிவாரமாகச் சூழ்ந்து சேவித்திருப்பார்கள்" எனக் கொள்க.

"நூறு ருத்திரர் அண்டத்துச்சியர்" என்றது, பொன்மயமான அண்டகடாகப்புறம்பே இந்திரதிக்குமுதலிய பத்துத்திக்குகளிலுமுறையேயுள்ள பப்பத்து ருத்திரர்களை. அவர்கள்பெயரும் முறையுமாவன:—

இந்திர திக்கிலுள்ள பதின்மர்:—கபாலீசன்-அசன்-புத்தன்-வச்சிரதேகன்-பிரமதத்தனன்-விபூதி-அவ்வியன்-சாத்தா - பிநாகி - திரிசோதியன் எனவும், அக்கினி திக்கிலுள்ள பதின்மர்:— உருத்திரன் - உதாசனன் - பிங்கலன் - காதகன் - அயன் - சுவலன் - தகனன் - வெப்புரு - பிரமாந்தகன் - க்ஷயாந்தகன்எனவும், இயமதிக்கிலுள்ள பதின்மர்:—யாமியன் - மிருத்தியு - அரன் - தாதா - விதாதா - கத்திரு-காலன்-தன்மன் - சங்யோத்தா - வியோக்கிருதன் எனவும், நிருதிதிக்கிலுள்ள பதின்மர் :—நிருதி - மாரணன் - அரந்தா - குரூரதிருஷ்டி - பயாந்தகன் - ஊர்த்துவகாயன்-விரூபாக்ஷன் - தூமிரு - லோகிதன் - தெங்கிட்டிருணன் எனவும், வருண திக்கிலுள்ள பதின்மர் :—பெலன் - அதிபெலன் - பாசஅத்தன் - மகாபெலன் - ஸ்வேதா - ஜெயபத்திரன் - தீர்க்கவாகு - செலாந்தகன் - வடவாமுகன் - தீமான் எனவும், வாயுதிக்கிலுள்ள பதின்மர் :—சீக்கிரன் - லகு - வாயுவேகன் - தீக்ஷணன் - சூக்குமன்-க்ஷயாந்தகன் - பஞ்சாந்தகன் - பஞ்சசிகன் - கபர்த்தி - மேகவாகனன் எனவும், குபேரதிக்கிலுள்ள பதின்மர்:—நிதீசன் - ரூபவான் - தன்னியன் - சௌமியன் - சௌமியதேகன் - பிரமத்தனன் - சுப்பிரகடன் - பிரகாசன் - இலக்குமிவரன் - சோமேசன்-எனவும், ஈசானதிக்கிலுள்ளபதின்மர் :—வியாத்தியாதீபன் - ஞானபுகன் - சருவன்-வேதபாரகன் - மாத்துருவிருத்தன் - பிங்கலாக்ஷன் - பூதபாலன் - பெலீப்பிரியன் - சர்வவித்தியாதிபன் - தாதா எனவும், அண்டகடாகவோட்டுக்குக் கீழே விஷ்ணுதிக்கிலுள்ள பதின்மர் :—அனந்தன் - பாலகன் - வீரன் - பாதாளாதிபதி - விபு- இடபத்துவசன் - உக்கிரன் - சுப்பிரன் - உலோகிதன் - சருவன் எனவும், அண்டகடாகத்தின்மேலே பிரமதிக்கிலுள்ள பதின்மர் :—சயம்பு - விபு - கெணத்தியக்ஷன் - திரியக்ஷன் - திரீதேசகவாதகன் - சன்வாகன் - விவாகன் - நபன் - லீபசு - விலக்ஷணன் - எனவும், பெயர்பெறுவர். இவரைப்பற்றிய மற்றைய விஷயங்களையு முணரவேண்டுவோர் காமிகாகமமுதலிய சிவாகமக்கடலிலும், சிவதருமோத்தரத்திலும், வடமொழிக் காந்தபுராணத்தும் பரக்கக் காண்க. ஈண்டு விரிவுகருதிவிடுத்தாம்.

அநாசிருதர் - அநாதர் - அநந்தர் - வியோமரூபர் - வியாபக னென்னும் மூர்த்திக ளைவருள், பிரளயகாலாக்கினியுருத்திரதேவநாயனார் அநந்தருடைய மூர்த்தியே

தமாய்ப் பிரமாண்டத்தை யதிஷ்டித்து எழுந்தருளியிருப்பவர் எனக்கொள்க. ஏனைய நால்வரது மூர்த்திபேதங்களைப்பற்றிப் பின் வருமிடத்துக்கூறுவாம். (அக)

புத்தி யட்டகர் நாலிரு கோடிமேற் புகப்பெய்த நரகங்கள்
பத்தி ரட்டியுங் காப்பவர் பாரிடப் படையுடைக் கூர்மாண்டர்
சத்தி யச்சிவ பரஞ்சுட ருதவிய சதவுருத் திரரன்ன
ருய்த்த வித்தவி னைம்பது கோடிய ருருத்திரர் கணநாதர்.

(இ-ள்.) புத்திதத்துவத்திலுள்ள (சூக்கும)புவனம் எட்டின் அதிபதிகளும், இருபத்தெட்டுக்கோடி நரகங்களையுங் காப்பவர்களும், பூதப்படையை யுடைய கூர் மாண்டரும், உண்மைவடிவாயுள்ள சிவபெருமானருளிய நூறு ருத்திரர்களும், அவ் வுருத்திரர் தந்தருளிய நூறுகோடியராகிய உருத்திரர்களும், சிவகணநாதர்களும்.

"புத்தியட்டகர்" என்றது.—புத்திதத்துவத்திலுள்ள பைசாசம்-ராக்ஷசம்-யாக்ஷம் - காந்தர்வம் - மாகேந்திரம் - சௌமியம் - பிராசேசுவரம்-பிராமம் என்னும் சூக்ஷுமபுவனங்களெட்டின் அதிபதிகளாகிய அனந்தர் - சூக்ஷமர் - சிவோத்தமர்-ஏக நேத்திரர் - ஏகருத்திரர் - த்ரிமூர்த்தி - ஸ்ரீகண்டர் - சிகண்டி என்னும் எண்மர்.

நாலிருகோடிமேற்புகப்பெய்தபத்திரட்டி என்பது இருபத்தெட்டுக்கோடி அதாவது எட்டுக்கோடி யென்னுந் தொகையை மேலே கொண்ட இருபது என்னும் எண் என்று பொருள்படும்.

"நாலிரு கோடிமேற் புகப்பெற்த நரகங்கள் பத்திரட்டி என்றது—காலாக்கினி யுருத்திரதேவநாயனுர் புவனத்திற்குமேலுள்ளன. அவை அதிபாதக முதலிய பாவங்களைச் செய்தோர் வசித்தற்கு இருபத்தெட்டுத் தளங்களாகக் கட்டின நிலைமாடங்கள்போல ஒன்றின்மே லொன்றுயிருக்கு மென்ப. இதனை,

சிவதருமோத்தரம் - கோபுரவியல்.

"இனையபுரி மிசைநிரய மெழுநான்கு கோடியுறு
நினையினவை யெழுநான்கு நிலைமடமே யெனநிலவுந்
துனியுறுவ ரவைதன்னிற் றுரிசறவற் றினுக்களவு
முனிலிருநூ ருயிரமு முப்பஃது கோடியுமே." என்றதனு னறிக.

"நரகங்கள் காப்பவர்" என்றது.—அவ் விருபத்தெட்டுக்கோடி நரகங்களைக் காப்போர். காலாக்கினியையும் பிரளயகாலசூரியதேஜஸும் கருமுகமும் மழுக் கரமும் உடைய கூர்மாண்டதேவநாயனுர் அந்நரகங்களின் மேற்பாகமாகிய கனகபூமியில் அந் நரகங்கட்கும் அவற்றைக் காப்போர்க்கும் அதிபராயுள்ளவர். இதனை ஷை கோபுரவியல்,

"மேலாய கனகபுரி வீற்றிருப்பர் கூர்மாண்டர்
காலவழ லிரவியுருக் காளமுக மழுவுங்கை
கோலமுறு வட்டவிழி கொண்டுடைய ரவர்தம்மைப்
போலுமுருத் திரர்பலரும் புடையடைவர் போற்றிசைத்தே." என்ப

தனுனறிக. இவர் வியோமரூபருடைய மூர்த்திபேத மென்க. கூஷ்மாண்டர் என்றது கூர்மாண்டர் என நின்றது.

"சத வுருத்திரர்" என்றது மந்திரம் - பதம் - வன்னம்-புவனம்-தத்துவம்-கலை என்னும் ஆறத்துவாக்களில் முறையா யமர்ந்துள்ளவர். ஈரைம்பதுகோடி யுருத்திரர்கள் பிரமாண்டதரவுருத்திரர்களுக்கு உள்ளிட்டவர்கள். இவர்பெயர்முதலியன எடுத்தெழுத அளவில்லை. (அஉ)

பட்ட காரிவா யரவணி பவர்பசு பதியுருத் திராதி
யட்ட மூர்த்திகண் மேருவி னவிர்சுட ராடகர் தோடேந்து
மட்ட ருமலர் மகன்செருக் கடங்கிட மறங்கிய விதிதேற்ற
நிட்டை யாலவ னெற்றியிற் றோன்றிய நீலலோ கிதநாதர்.

(இ-ள்.) விஷம்பொருந்திய வாயையுடைய சர்ப்பாபரணம் பூண்ட பவர் - பசுபதி - உருத்திரர் முதலிய அட்டமூர்த்திகளும், மேருமயமாய் விளங்கும் கிரணத்தையுடைய ஆடகேச்சுரரும், இதழ்களைத் தாங்கிய தேனொழுக்கருத தாமரைமலரில் வாசஞ்செய்யும் பிரமனது இறுமாப்பகல (அவன்) மறந்த சிருஷ்டித்தொழிலைத் தெளிவிக்க, நிஷ்டையினால் அவன் நெற்றியில் உதித்த நீலலோகித உருத்திரரும். எ-று.

"பவர் பசுபதி யுருத்திரராதி அஷ்டமூர்த்திகள்"—பவர் - பசுபதி - உருத்திரர் - சர்வர் - ஈசானர் - பீமர் - மகாதேவர் - உக்கிரர் எனப்படுவர். இவர் பெயர் முதலியன வேறுபடவும் வாயுசங்கிதை கூறும்.

"ஆடகர்" என்றது—பாதாளத்துக்கு மேலுள்ளபுவனத்தில் ஆயிரயோசனையுயரமுள்ள பொன்மயமான திருக்கோயிலுள் அசுரரும் நாகரும் அரக்கரும் சேவிக்க வீற்றிருக்கும் ஆடகேசுரரை - இவர் பிரபாவத்தை,

சிவதருமோத்தரம் - கோபுரவியல்.

"அதன்மேலே நவலக்க மாடகநா யகர்பதிதான்
புதுமைதிகழ் மனைபொன்னால் யோசனையா யிரம்புகலிற்
கதமுடைய தயித்தியர்கள் கட்டரவர் வெட்டரக்கர்
விதிமுறையிற் பதம்பணிய வீற்றிருப்ப ராடகரே"—என்பதனானும்.
இவர் வியாபகருடைய மூர்த்திபேத மென்க.

உருத்திரர் பிரமன் நெற்றியில் தோன்றியதாவது,

முன்னொரு கற்பத்தில், பிரமன் திரிலோகங்களையுஞ் சிருட்டித்து, தானே பரமென் றிறுமாந்து சிவபிரானை மறந்து, மேலுஞ் சராசரங்களைச் சிருட்டிக்க, அவை பெருகாமை கண்டு மனம் வருந்துகையில், திருமால் அவன் மனதைத்தேற்றிச் "சிவபெருமானை நோக்கித் தவஞ்செய்க" என, அவ்வாறே அவன் தவஞ்செய்தும் பயன் படாது வருந்தி அழுகையில் அவன் கண்ணீர்த்துளிகள் பசாசுகளாய் நெருங்க, அது கண்டு மூர்ச்சிக்க, சிவபெருமான் அவன் கனவில் தோன்றி "உன்சிருட்டி கைகூடும் வண்ணம் நமது பதத்திலுள்ள உருத்திரர்களை யனுப்புவோம்" என்று மறைந்தனர். பிரமன் கனவு உணர்ந்தெழுந்து நிஷ்டைகூடிச் சிவபெருமானைச் சிந்திக்க, பெருமான் திருவருளால், பதினொரு உருத்திரர்கள் அவன் நெற்றியினின்று வெளிப்பட்டு வந்து நிற்க, அப்பிரமன் அவர்களைப்பார்த்து "நீங்கள் என் நெற்றியிலிருந்து வந்த காரணம் யாது" என்று வினவ, "உன் சிருட்டித் தொழில் கைகூடச் சிவாக்கினையால் தோன்றினோம்" என்றுகூறி அஃது கைவரச் செய்தனர் என்பது - இதனை,

கந்தபுராணம் - உருத்திரர் கேள்விப்படலம்.

"நிற்றலு மவரை நோக்கி நெற்றியந் தலத்தி னீயி
ருற்றதை யெவன்கொ லென்ன வுஞ்செயன் முடியு மாற்றான்
மற்றெமை விடுத்தா னம்ப னாதலின் வந்தே மென்றார்
பற்றலர் புரமூன் றட்ட பண்ணவன் படிவங் கொண்டோர்.
பரமன துருவாய் நின்றோர் பதினொரு வோரு மிவ்வா
றருள்செய விரிஞ்சன் கேளா வன்பினொ லென்பால் வந்தீர்

விளைவுட னுயிர்க டம்மை விதிக்குதி றொன்னத் தத்த
முருவுபோற் பதினோர் கோடி யுருத்திரர் தொகையைத் தந்தார்."—என்
பதனுனறிக.

இவ்வாறு தோன்றிய பதினொரு உருத்திரர்களில் ஒருவர் நீலலோகிதர். ஏனையோர் பெயரும் அடுத்த செய்யுளிற் கூறுவாம். (௩௩)

பால மேற்றசெந் தழல்விழி யுருத்திரர் பதினொரு பெயர்வாகைச்
சூல மேற்றகங் காளக பாலியர் துரகத நெடுங்காரி
நீல மேற்றபைங் கஞ்சுகப் போர்வையி னெடியவர் நிருவாணக்
கோல மேற்றவ ரெண்மர்ஞா ளிப்புறங் கொண்டகேத் திரபாலர்.

(இ-ள்.) நெற்றியினிடத்தில், செவந்த தீவிழிகளையுடைய ஏகாதச உருத்திரர்களும், வெற்றிபொருந்திய சூலப்படை தாங்கிய முழுவெலும்பைத் தரித்தவரும், கபாலத்தைத் தரித்தவருமாகிய சிவகணத்தலைவர்களும், குதிரையை (வாகனமாக) உடைய நெடிய சாத்தனும், கரிய பசிய சட்டையைத் தரித்த நெடிய சிவகணத்தலைவர்களும், நிருவாண கோலமுடையவராய்ச் சுவானத்தை வாகனமாகக் கொண்ட க்ஷேத்திர பாலகராகிய எண்வகையினரும். எ-று.

ஏகாதச உருத்திரர்கள்—மகாதேவர் - அரர்-உருத்திரர் - சங்கரர்-நீலலோகிதர் - ஈசானர் - விசையர் - வீமதேவர்-பவோற்பவர்-கபாலி-சௌமியர் எனப்படுவர்.

ஞாளி=நாய். க்ஷேத்திரபாலர்=வைரவர்.

எண்மர் க்ஷேத்திரபாலர்—அசிதாங்தகர் - ருரு - சண்டர் - குரோதனர்-உன்மத்தர் - கபாலி - பீஷணர் - சங்கரர் எனப்படுவர். அன்றியும், மகாவைரவர் - உக்கிரவைரவர் - சண்டவைரவர் - குரோதவைரவர் - உன்மத்தவைரவர் - கபாலவைரவர் - பீஷணவைரவர் - ஸாஹாரவைரவர் - எனவுங் கூறுவர். இவ்வைரவர் இலக்கணங்களை விவேகசிந்தாமணியுட்காண்க. (௩௪)

செய்ய தாமரைக் கண்ணுடைக் கரியவன் செம்மலர் மணிபீடத்
தையன் வாசவ னாதியெண் டிசைப்புறத் தமரரெண் வசுதேவர்
மையில் கேள்விசா லேழெழு மருத்துகண் மருத்துவ ரிருவோர்வான்
வெய்ய வாள்வழங் காறிரண் டருக்கரோர் வெண்சுடர் மதிச்செல்வன்.

(இ-ள்.) செவந்த தாமரைமலர்போலும் விழிகளையுங் கரிய திருமேனியையுமுடைய விஷ்ணுமூர்த்தியும், செந்தாமரை மலராகிய அழகிய பீடத்திலே வசிக்கும் பிரமதேவனும், இந்திரன்முதலிய அஷ்டதிக்குப்பாலகர்களும், அஷ்ட வசுக்களும், குற்றமற்ற நூற்கேள்வியில் மிகுந்த ஏழ் என்னுந் தொகைபெற்ற ஏழுமருத்துக்களும், அசுவினி தேவர் இருவரும், ஆகாயத்திலிருந்து வெவ்விய கிரணத்தை எறிக்கும் பன்னிரண்டு சூரியர்களும், வெள்ளிய கிரணத்தையுடைய ஒரு சந்திரனும். எ-று.

அஷ்டதிக்குப் பாலகர்—இந்திரன் - அக்கினி - யமன்-நிருதி - வருணன் - வாயு - குபேரன்-ஈசானன் எனப்படுவர். இவர் முறையே கிழக்குமுதல் தென் கிழக்கிறுவாயுள்ள எட்டுத் திக்குகளுக்குந் தலைவர் என்க.

அஷ்டவசுக்கள்—அனலன் - அணிலன் - ஆபச்சைவன் - சோமன்-தரன் - துருவன் - பிரத்தியூசன் - பிரபாசன் எனப்படுவர்.

ஏழெழு மருத்துகள்—நாற்பத்தொன்பது வாயுக்கள் எனப்பொருள் கூறினும் பொருந்தும்.

மருத்துவ ரிருவோர்—அச்சுவினி தேவர்கள். இவர் குதிரை வடிவாகவந்த சூரியன், இருமூக்கினின்றுந் தோன்றினவர். இவர் வரலாறு.

சூரியன் மனைவியாகிய சஞ்ஞிகை அவனுடன் சிறிதுகாலம் கூடி வாழ்ந்து வைவச்சுதமனுவையும், இயமனையும், யமுனை யென்னும் பெண்ணையும் பெற்று, அச் சூரியனது உடல் வெப்பத்திற்கு ஆற்றாளாய்த் தனது சாயலை ஓர்பெண்ணாகச்செய்து ஆங்கிருத்தி, தனது தந்தையாகிய தொவ்ஷ்டா என்பவனிடஞ் சென்று நடந்த விருத் தாந்தத்தைச் சொல்ல அவன் கோபிக்கக்கண்டு மீட்டுஞ் சூரியன்பாற் செல்ல அஞ்சி உத்தரகுரு வென்னுமிடத்திற் றவஞ்செய்துகொண்டிருந்தனள். இஃதிவ்வாறிருக்கச் சாயாதேவி சூரியனைக் கூடி, சாவணி யென்னும் மனுவையும், சனியையும், பத்திரை யென்னும் பெண்ணையும் பெற்றுத் தன் மக்கள்மேல் விருப்பம் பாராட்டி, சஞ்ஞிகை யீன்ற மூவரையுந் துன்புறுத்தக்கண்ட இயமன் மனம்பொறாது தன்தாயென்றுகருதி உதைக்க, அவள் 'உதைத்த கால் புழுசொரியக்கடவது' என்று சபித்தனள். இயமன் தன் தந்தையை யடைந்து, மூத்தவர்கள் மூவரையும் வெறுப்பதும் இளையவர் மூவரை யும் அன்பு பாராட்டுவதும், மேல் நடந்ததுமாகிய எல்லாவற்றையு மறிவித்து 'அவள் உனது காலிற் புழுவாகிச் சிறிது தசையைத் தின்னக்கடவள்' என்று சாபம் நீக்கப் பெற்றனன். சூரியன் கோபித்துச் சாயாதேவியையடைந்து என்னெனக்கேட்க, ஒன் றுங் கூறாமையால் நடந்தவற்றை யோகதிருஷ்டியாலறிந்து, தன் மாமனாகிய தொவ்ஷ் டாவிடஞ் சென்று "என் மனைவி யெங்குளாள்" என்று கேட்க, தொவ்ஷ்டா "அவள் உன் வெம்மைக் காற்றாமல் உத்தரகுருவிற் பெட்டைக்குதிரை வடிவுடன் தவஞ்செய் கின்றாள். அவளிடம் சிறிது வெப்ப மடங்கியிருக்க வேண்டுகிறேன்" என விடுப்ப, சூரியன் ஆண்குதிரை வடிவேற்று அவள் தவஞ்செய்யுமிடத்துச் சென்று, "தவஞ்செ ய்பவள் யார்" என வினவ, சஞ்ஞிகை பயந்து தவமொழிந்து ஓடினள். சூரியனும் பின்தொடர்ந்து ஓடினன். அப்பொழுது அவன் மூக்கின்வழியாக வீரியஞ்சிந்த அதி னின்று இரு மருத்துவர் பிறந்தனர். பிறகு சூரியன் சஞ்ஞிகையை யழைத்துக்கொ ண்டு போயினன் என்பது. இதனை,

காசிகண்டம்.

"இரவி யடைந்தென் மனைக்கிழத்தி யாண்டை யாளென் றுரைத்திடலும்
பொருவி னினது கதிர்வெம்மைக் காற்ற ளாகிப் பெரும்போக
மருவி நுசருத் தரகுருவிற் பெட்டைப் பரியின் வடிவாகி
யரிய பெருமா தவமினிதொன் றாற்ற நின்ற ளாயிழையே.

அம்ம லோதி யிடத்துறையி னழற்று நினது கொடியகதிர்
வெம்மை யடக்கல் வேண்டுமென விடைகொண் டேகிப் பூண்சுமந்த
பொம்மன் முலையாங் கிருந்துதவம் புரித ளேக்கி யிருள்சீக்குஞ்
செம்மற் கதிர்வா னவனவள்பாற் பரியி னுருவிற் சென்றடைந்தான்.

மருவு பொழுதிற் குழைகிழித்து மதர்க்குங் குவளைக் கருநெடுங்கட்
புரிமென் கூந்தல் யார்கொலெனப் புரியு மருமா தவநீங்கி
வெருவி யோடப் பின்றொடரும் வேலைத் தாது மூக்கின்வழிச்
சொரித லோடு மருத்துவரோ ரிருவ ரதனிற் றேன்றினரால்." என வருஞ்

செய்யுள்களா னறிக.

துவாத சாதித்தர்—தாத்துரு - சக்கரன் - அரியமன் - மித்திரன்-வருணன் - அஞ்சுமான் - இரணியன் - பகவன் - திவச்சுவான் - பூடன் - சவித்துரு - துவஷ்டன் எனப்படுவோர். இவருள் மாதம் ஒவ்வொன்றிற்கு ஒவ்வொருவராகப் பிரகாசிப்பர் என்

றும், பிரளயகாலத்துப் பன்னிருவரும் ஒருங்கே கரேமாகக்காய்வவொன்றும் மேலோர் கூறுப. (அகு)

கையுங் கால்களுங் கண்பெற்றுக் கதிபெற்ற கடும்புலி முனிச்செல்வன்
பைய ராமுடிப் பதஞ்சலி பாற்கடல் பருகிமா தவன்சென்னி
செய்ய தாள்வைத்த சிறுமுனி குறுமுனி சிவமுணர் சனகாதி
மெய்யு ணர்ச்சியோர் வாமதே வன்சுகன் வியா தனு ரதன்மன்னோ.

(இ-ள்.) கைகளிலும் கால்களிலும் கண்கள் (கொடுக்கப்) பெற்று நற்கதியடைந்த விளக்கத்தையுடைய வியாக்கிரபாத முனிவரும், பாம்பின்பணாமுடியையுடைய பதஞ்சலிமுனிவரும், திருப்பாற்கடலைக் குடித்துக் கிருஷ்ணமூர்த்தியின் சிரசின்பேரில் தமதுசெவந்த திருவடியைச்சூட்டி (தீக்ஷைசெய்தருளிய) உபமன்னியு முனிவரும், குறுமுனிவராகிய அகத்தியமுனிவரும், சிவத்தை உள்ளபடியறிந்த சனகர்முதலிய மெய்யுணர்வுற்ற (நான்கு) முனிவர்களும், வாமதேவமுனிவரும், சுக முனிவரும், வியாசமுனிவரும், நாரதமுனிவரும். எ-று.

கையுங் கால்களுங் கண்பெற்ற புலிமுனியென்றது.

மத்தியந்தன முனிவரது தவப்புதல்வராகிய மழமுனிவர் தமது தந்தையார் பால் விடைபெற்று, சிவபெருமானது நடனதரிசனங்காணத் திருத்தில்லை வனத்தை யடைந்து சிவார்ச்சனை செய்ய, வண்டுபடுதல் முதலிய குற்றங்களொழிந்த மலர் கொய்தற்குப் பொழுது புலருமுன் சென்று மரங்களேறிற் பனியாற் கைகளுங் கால் களுஞ் சருக்குமே இரவில் கண்தெரியாதே என்று மனம் வருந்த, சிவபெருமான் அவருக்குக் காட்சிதந்து " யாதுவரம்வேண்டும் " என, மழமுனிவர் " சுவாமி ! கை யுங்காலும் புலிபோலப்பெற்று அவற்றிற் கண்களிருக்கவேண்டும் " என, இறைவர் அவ்வாறே பிரசாதித்துச்சென்றனர். அதுமுதல் அவர் வியாக்கிரபாதர் எனப் பெய ரெய்தினர். தாம் விருப்பியவண்ணமே சிவபூசை செய்துகொண்டிருந்து திருநடனந் தரிசித்தனர் என்பது. இதனை,

கோயிற்புராணம் - வியாக்கிரபாதச்சருக்கம்.

" ஆலந் தருவா னமுதா மொழியா லருமா முனியர்ச் சனையிச் சையினிற்
சீலந் திகழ்வாய் மைமகிழ்ந் தனநீ சிந்தித் தவரம் பலசெப் பெனவென்
காலுங் கரமும் புலியின் மலியக் கண்ணங் கவைதங் கவிரங் கிமுதற்
கோலந் திகழ்பூ சைகொளென் றுவரங் கொண்டா னவையெந் தைகொடுத் தனனே.
விண்ணு டருநா டருமே லவனே விரவா வரமுந் தருவா னெனநற்
கண்ணு றுமரும் புபெரும் புனன்மெய்க் காலா றெனவா றருகா தன்மையான்
மண்ணு ரவணங் கவணங் குடனே மறைவா னிறைவான் வழிமே வியபின்
பண்ணு ரவியாக் கிரபா தனெனும் பாவார் பெயரோ தினபா ரிடமே." என்பதனு னறிக.

பையராமுடிப் பதஞ்சலியென்றது.

க்ஷீராப்தியில் யோகநித்திரை செய்யுந்திருமால் ஒருநாள் துண்ணென் றெழுந்து " அரகரசங்கர " என்று சிரமேற் கைகூப்பி ஆநந்தக் கண்ணீர் துளித்து அசைவற்றிருக்கக்கண்ட அவரது சயனமாயிருந்த ஆதிசேடன் " தேவரீர் இவ்வா றிருக்கக் காரணம் யாது " என்றுவினவ, திருமால் " எமதிறைவர் தாருகவனத்தில் நடித்தருளிய இன்பத்தழுந்தினேன்" என், தானும் அந்நடனத்தைத் தரிசிக்கவிரும்பி அத்திருமால்பால் விடைபெற்று, திருக்கைலையிலொருபுறந் தவஞ்செய்து சிவபெருமா

ளுல், அத்திரிமுனிவரும் அவர்மனைவி அநுசூயையுமியற்றியதவத்தால் அவ்வநுசூயையின் அஞ்சலியிற்றோன்றி விழுந்தகாரணத்தால் பதஞ்சலியென்னுந் திருநாமத்தோடு திருத்தில்லைவனமடைந்து வியாக்கிரபாதமுனிவருடன் திருநடனதரிசனஞ் செய்தருளினர். இவர் சிரமுந் தாளும் சர்ப்பவடிவாதலின் இப்பெயர்பெற்றனர். என்பது இதனை, கோயிற்புராணம் - பதஞ்சலிச்சருக்கத்தானறிக.

உபமன்னியுமுனிவர் பாற்கடல் பருகியதாவது

வியாக்கிரபாதமுனிவர், தன்தந்தை மத்தியந்தனமுனிவர் விருப்பின்படி வசிட்டமுனிவர் சகோதரியை மணம்புரிந்து பெற்ற உபமன்னியுமுனிவர் வசிட்டர் பத்தினியாராகிய அருந்ததியாரிடம் காமதேனுவின் பாலுண்டு வளர்ந்து பின் தனது தந்தையின் பன்னசாலைக்குவந்து அவர்கொடுக்கும் உணவு காமதேனுவின்பால்போலில்லாமையால் அழுது சிவபெருமான் தந்தருளிய திருப்பாற்கடலைப்பெற்று உண்டு களித்தனர் என்பது இதனை,

கூர்மபுராணம் - உபமன்னியுபேறுபெற்ற அத்தியாயம்.

"பாலன்றிது வெனநின்றழு மைந்தன்றுயர் பாரா
வேலங்கமழ் குழலாளிரு கண்மாரி யிறைப்ப
மாலொன்றிய மனனோடுதன் வறுமைக்குள முருகி
யாலந்திகழ் கண்டன்றிரு வருளுன்னி யிருந்தான்.

பாலுக்கழு சிறுவன்றுயர் பாராமகிழ் வோடு
மாலைப்பிறை பவளம்பொரு சடைமீதணி வள்ளல்
ஆலிற்றுயி னெடுமாலுறை பாலாழியை யருளால்
வேலைக்கட லகன்ஞாலம் வியப்பெய்தவ ளித்தான்.

தன்முன்றிலி னிடையெய்திய பாலாழி தனைக்கண்
டென்னன்பி னிரங்காவிது தந்தானெனி லீசன்
பன்னுந்தவ முனிவோர்குறை பகராதன வல்லான்
மன்னும்புரி சடையண்ணல் வழங்காதவு முளவோ" என்பதனானறிக.

மாதவன் சிரமேல் தாள்வைத்ததாவது.

கண்ணன் ஒருகாலத்தில், உபமன்னியு முனிவரையடைந்து சாஷ்டாங்கமாகப்பணிந்து எந்தையே! யான்கடைத்தேறும்படி அனுக்கிரகஞ் செய்யவேண்டும் "என்று பிரார்த்தித்து, அவரால் திருவடிதீக்ஷையும், ஸ்ரீபஞ்சாக்ஷர உபதேசமுஞ்செய்யப்பெற்று, அதுமுதல் சிவபூசையிற்சிறந்த அன்புசெலுத்திப் பல அரியபெரிய வரங்களைப் பெற்றனனென்பது, இதனை,

திருத்தொண்டர்புராணம் - திருமலைச்சிறப்பு.

"அத்தர் தந்த வருட்பாற்க டலுண்டு
சித்த மார்ந்து தெவிட்டி வளர்ந்தவன்"—என்றும்,

"யாத வன்றுவ ராக்கிறை யாகிய
மாத வன்முடி மேலடி வைத்தவன்" என்றும்,

காஞ்சிப்புராணம்-தான்தோன்றீசப்படலம்.

"பிருகுமா முனிவன் சாபப் பிணிப்பினாற் பிறந்து வீயு
மருமலர்த் துளவோன் கண்ண னுயனுண் மனித யாக்கை

யருவருப் பெனவாங் செய்தி யத்தகு முனிவன்றன்பாற்
றிருவடித் தீக்கை யுற்றுத் தேகசுத் தியினைப் பெற்றான்."—என்றும் வருவனவற்றா னறிக. (அசு)

எழுவ ரன்னையர் சித்தர்விச் சாதர ரியக்கர்கின் னரர்வேத
முழுவ ரம்புணர் முனிவர்யோ கியர்மணி முடித்தலைப் பலநாகர்
வழுவில் வான்றவ வலியுடை நிருதர்வாள் வலியுடை யசுரேசர்
குழுவொ டிம்பயில் பூதவே தாளர்வெங் கூளிக ளரமாதர்.

(இ-ள்.) சத்தமாதர்களும், சித்தர்களும், வித்தியாதரர்களும், யக்ஷர்களும், கின்னரர்களும், வேதநூலின் அளவையறிந்த முனிவர்களும், யோகவான்களும், மாணிக்கம் விளங்கும் பணமுடிகளையுடைய (நாகலோகத்திலுள்ள) பலநாகரும், குற்றமில்லாத பெரிய தவவல்லமையுடைய இராக்ஷதரும், வாட்படையின் வன்மைபொருந்திய அசுரேசரும், கூட்டங்களாகச் சஞ்சரிக்கும் பூதவேதாளங்களும், வெய்யகூளிகளும், அரம்பாஸ்திரீகளும். எ-று. (அஎ)

ஆண்டி ளுடைய னம்பரு வந்திங்க ளாறிரண் டிருபக்க
மீண்டு மைம்பொழு தியோகங்கள் கரணங்க ளிராப்பக லிவற்றோடும்
பூண்ட நாழிகை கணமுதற் காலங்கள் பொருகட னதிதிக்கு
நீண்ட மால்வரை திக்கய மேகமின் னிமிர்ந்தவைம் பெரும்பூதம்.

(இ-ள்.) (அறுபது) வருஷங்களும், (இரண்டு) அயனங்களும், (ஆறு) ருதுக்களும், (பன்னிரண்டு) மாதங்களும், (இரண்டு) பக்ஷங்களும், நெருங்கிய ஐம்பொழுதுகளும், (இருபத்தேழு) யோகங்களும், (பதினொரு) கரணங்களும், இரவும், பகலுமாகிய இவற்றோடும், பொருந்திய நாழிகைகளும், க்ஷணம், முதலாகிய காலங்களும் (கரையுடன்) மோதும் (சத்த) சமுத்திரங்களும், (எழு) நதிகளும், (எட்டு) திக்குகளும், நெடிய பெரிய (அஷ்ட) குலபர்வதங்களும், (எட்டு) திசையானைகளும், (எழு) மேகங்களும், மின்னல்களும், உயர்ந்த பெரிய பிரிதிவிமுதலிய பஞ்சமகா பூதங்களும். எ-று.

அறுபது வருஷங்கள்—பிரபவமுதலியன. இரண்டு அயனங்கள்—உத்தராயணம் - தக்ஷிணயனம். ருதுக்கள் ஆறு - வசந்தருது - கிரீஷ்மருது - வருஷருது - சரருது - இமந்தருது - சசிருது. பன்னிரண்டு மாதங்கள் - சித்திரை முதலியன. இரண்டுபக்ஷங்கள் - பூர்வபக்ஷம் - அமரபக்ஷம். இருபத்தேழு யோகங்கள் - விஷ்கம்பம் முதலியன. கரணம் பதினொன்று - பவம் பாலவமுதலியன. ஏனைய தொகைகள் முன்னர் விளக்கப்பட்டுள்ளன. (அஅ)

மந்தி ரம்புவ னங்கடத் துவங்கலை வருணங்கள் பதம்வேதந்
தந்தி ரம்பல சமயநூல் புறந்தழீஇச் சார்ந்தநூ றருமாதி
முந்தி ரங்கிய சதுவிதஞ் சரியையே முதலிய சதுட்பாத
மிந்தி ரங்குநீர் முடியவ ரடியவ ரிச்சியா வெண்சித்தி.

(இ-ள்.) (எழுகோடி) மகாமந்திரங்களும், (இருநூற்றிருபத்துநான்கு) புவனங்களும், (முப்பத்தாறு) தத்துவங்களும், (பஞ்ச) கலைகளும், (ஐம்பத்தொரு) அக்ஷரங்களும், (எண்பத்தொரு) பதங்களும், (நான்கு) வேதங்களும், (இருபத்தெட்டு) சிவாகமங்களும், (அகமும் அகப்புறமுமாகிய) பல சமய நூல்களும், புறமும் புறப்புறமுமாகிய சார்ந்துள்ள பலசமய நூல்களும், முதற்பட்ட தருமமுதலாகச் சொல்லப்பட்ட நால்வகைப் புருஷார்த்தங்களும், சரியைமுதலிய நான்கு பாதங்களும், சந்திரனையும் சத்திக்கின்ற (கங்கா) சலத்தையுமணிந்த முடியையுடைய சிவபெருமானது அடியவர்கள் விரும்பாத அஷ்டசித்திகளும். எ-று. (அகூ)

ஆயி ரங்கட லனையவாய்ப் பரந்தெழு மாயிர மனிகத்து
ளாயி ரங்கதி ரனையரா யுருத்திர ரந்தரத் தவரண்ட
மாயி ரந்தகர் பட்டெனத் துந்துபி யாயிரங் கலந்தார்ப்ப
வாயி ரஞ்சத கோடியோ சனைவழி யரைக்கணத் திடைச்செல்வார்.

(இ-ள்.) அளவில்லாத கடல்களொப்பனவாகிப் பரந்தெழுந்த கணக்கில்லாத சேனைகளுள், (தோன்றிய) எண்ணிறந்த சூரியர்களைப்போன்றவராய் உருத்திரர்களும் தேவர்களும், பல்லாயிர அண்டங்களும் உடைபட்டனவென்று சொல்லும்படி அனேக வாத்தியங்கள் தம்முட் கலந்தொலிக்க, இலக்ஷங்கோடி யோசனைவழியை அரைக்ஷணப்பொழுதில் (கடந்து) செல்லத் தொடங்கினார்கள். எ-று.

ஆயிரஞ்சதமென்பது பண்புத்தொகைநிலைத் தொடராதலால், ஆயிரமாகிய சதமென்று பொருள்பட்டு இலக்ஷத்தை யுணர்த்தியது. (௬௰)

சித்தந் தேர்முனி வேந்தருந் தேவருஞ் சிவனுருத் தரித்தோருந்
தத்தந் தேர்முத லூர்தியர் வார்திகழ் சந்தன மணிகொங்கைக்
கொத்தந் தேமலர்க் குழன்மனை யாரொடுங் குளிர்விசும் பாறுச்சென்
றத்தந் தேரிடை யாள்பங்க னணிவரைக் கணியராய வருகின்றார்.

(இ-ள்.) மனந்தெளிவுற்ற முனிவரர்களும், தேவர்களும், சிவசாரூப்பியமடைந்த உருத்திரர்களும், தத்தமக்குரிய தேர்முதலிய வாகனங்களை யுடையவராய், கச்சுவிளங்கும் சந்தனக்குழம்பணிந்த அழகிய முலைகளையும் அழகிய தேன்றுளிக்கும் பூங்கொத்தையணிந்த கூந்தலையுமுடைய (தத்தம்) மனைவிமாருடன், குளிர்ந்த ஆகாயமேவழியாகச்சென்று, அந்த நூலிழைபோன்ற (நுண்ணிய) இடையையுடைய உமாதேவியாரை இடப்பாகத்திலுடைய சிவபெருமானது அழகிய திருக்கைலாயகிரிக்குச் சமீபித்தவர்களாகி வருகின்றார்கள். எ-று. (௬௧)

இழிந்த வூர்தியர் பணிந்தெழும் யாக்கைய ரிறைபுகழ் திருநாம
மொழிந்த நாவினர் பொடிப்பெழு மெய்யினர் முகிழ்த்தகை முடியேறக்
கழிந்த வன்பினர் கண்முதற் புலன்கட்குங் கருணைவான் சுவையூறப்
பொழிந்த வானந்தத் தேனுறை திருமலைப் புறத்துவண் டெனமொய்த்தார்.

(இ-ள்.) (இவ்வகையாக வந்தவர்கள் தங்கடங்களது) வாகனங்களினின்றும் இறங்கினவர்களாய் (சாஷ்டாங்கமாக) நமஸ்கரித்து எழும் சரீரத்தையுடையவர்களாய், சிவபெருமானது பிரதாபங்களையும் (அவரது) திருநாமங்களையும் எடுத்துக்கூறும் நாவினையுடையவர்களாய், புளகம் அரும்புந்தேகமுடையவர்களாய், குவித்த கைகள் தமது சிரசின்மேலேற,மிக்க அன்பினையுடையவர்களது கண்முதலிய பஞ்சேந்திரியங்கட்குங் கிருபையென்னும் பெரியசுவையூறும்படி பொழிந்த ஆனந்தத்தேனாகிய சிவபெருமான் வீற்றிருக்குந் திருக்கைலாயகிரியின் சாரலில்வந்து, வண்டுகள் போல (ஆர்ப்பரித்து) நெருங்கினார்கள். எ-று. (௬௨)

விரவு வானவர் நெருக்கற வொதுக்குவான் வேத்திரப் படையோச்சி
யரவு வார்சடை நந்தியெம் பிரானவ ரணிமணி முடிதாக்கப்
பரவு தூளியிற் புதைபடு கயிலையம் பருப்பதம் பகல்காலு
மிரவி மண்டலத் தொடுங்குநா ளொடுங்கிய விந்துமண் டலமானும்.

(இ-ள்.) (தரிசனத்திற்குவந்து) நெருங்கிய தேவர்களது நெருக்கமற வொதுக்கும்பொருட்டு, சர்ப்பத்தையணிந்த நெடிய சடையையுடைய எமது பெருமானாகிய நந்திதேவர் வேத்திரப்படையைவீசி, அந்தத்தேவர்களணிந்த இரத்தினகிரீடங்களில் தாக்குவதால் (உதிர்ந்து) பரவிய இரத்தினத்துகளிற் புதைபட்ட (அந்த) திருக்

கைலாயமலை ஒளிவீசுஞ் சூரியமண்டலத்தில் அமாவாசை காலத்தில் ஒடுங்கியசந்திர மண்டலத்தை யொத்திருக்கும். எ-று.

இரத்தினப்பொடி சூரியமண்டலமாகவும், கைலைமலை சந்திரமண்டலமாக வுங்கொள்க. வேத்திரம்=பிரம்பு. (கரு)

வந்த வானவர் புறநிற்ப நந்தியெம் வள்ளலங் குள்ளெய்தி
யெந்தை தாள்பணிந் தையவிண் ணவரெலா மீண்டின ரெனவீண்டுத்
தந்தி டென்னவந் தழைத்துவேத் திரத்தினாற் றராதரந் தெரிந்துய்ப்ப
முந்தி முந்திவந் திறைஞ்சினர் சேவடி முண்டக முடிசூட.

(இ-ள்.) வந்த தேவர்கள் புறத்தில் நிற்க, எமது வள்ளலாராகிய திருநந்தி தேவர் அப்பொழுது திருச்சந்நிதானத்தி னுள்ளேசென்று, எமது தந்தையாகிய சிவபெருமானது திருவடிகளை நமஸ்கரித்து, ஐயனே! தேவர்கள்யாவரும் வந்து நெருங்கினார்கள் என்று விண்ணப்பஞ் செய்ய, (சிவபெருமான்) அவர்களை இவ்விடத்துத் தருக வென்று கட்டளையிட, (திருநந்திதேவர் அவர்களை) வந்து விளித்து, (தமது திருக்கரத் திற்றாங்கிய) பிரம்பாயுதத்தால் (அவரவர்கள்)தாரதம்மிய முணர்ந்து (சுட்டி)செலுத்த, (அத்தேவர்கள் சிவபெருமானது) செவ்விய திருவடித்தாமரைகளை (தமது) முடிகள் சூட, ஒருவர் பின் ஒருவராகப் பணிந்தார்கள். எ-று. (கசு)

தீர்த்தன் முன்பணிந் தேத்துகின் றார்களிற் சிலர்க்குத்தன் றிருவாயால்
வார்த்தை நல்கியுஞ் சிலர்க்கருண் முகிழ்நகை வழங்கியுஞ் சிலர்க்குக்கண்
பார்த்து நீண்முடி துளக்கியுஞ் சிலர்க்கருட் பரிசிறந் தெழுந்தண்டங்
காத்த கண்டனோர் மண்டபத் திடைபுக்குக் கடிமணக் கவின்கொள்வான்.

(இ-ள்.) சிவபெருமான்தமது திருமுன்னர் நமஸ்கரித்துத் தோத்திரஞ் செய்பவர்களுள், சிலருக்குத் தமது திருவாயினால் வார்த்தை யருளியும், சிலருக்குக் கிருபை புரியும் புன்னகை யரும்பியும், சிலருக்குத் திருநோக்கருளியும், சிலருக்கு நெடிய திருமுடியை அசைத்தருளியும், (பல்லாயிரங்கோடி) அண்டங்களை (விடவேகத்தா லழியாது) காத்தருளிய ஸ்ரீ கண்டத்தையுடைய அச்சிவபெருமான் (இவ்வாறு) அருட்கொடை யளித்து, (அங்கிருந்து) எழுந்து ஒரு மண்டபத்தினிடத்தில் எழுந்தருளித் திருமணக்கோலங் கொண்டருளக்கருத. எ-று.

தீர்த்தன்=பரிசுத்தன். கொள்வான் என்பதில் வான் - நிகழ்கால வினையெச்சப் பொருளது. (கஎ)

ஆண்ட நாயகன் றிருவுளக் குறிப்புணர்ந் தளகைநா யகனுள்ளம்
பூண்ட காதன்மேற் கொண்டெழு மன்புந்தன் புனிதமெய்த் தவப்பேறு
மீண்ட வாங்கணைந் தெண்ணிலா மறைகளு மிருவரு முனிவோருந்
தீண்ட ருந்திரு மேனியைத் தன்கையாற் றீண்டிமங் கலஞ்செய்வான்.

(இ-ள்.) (பல வுயிர்களையும்) அடிமை கொண்டருளிய சிவபெருமானது திருவுள்ளக்குறிப்பை யறிந்து, அளகாபுரிக் கிறைவனாகிய குபேரன், மனதிலுண்டான ஆசைமீக்கொள்ளும்படி எழுந்த அன்பும், தனதுபரிசுத்தமாகிய மெய்த்தவப்பலனும், வந்து ஒன்றுசேர, அத்திருமண்டபத்திற் சென்று, கணக்கிறந்த வேதங்களும், திருமாலும் பிரமனும் முனிவர்களும் பரிசித்தற்கரிய திருமேனியைத் தனது கைகளாற் பரிசித்துத் திருமணக்கோலஞ் செய்யத் தொடங்கினன். எ-று.

என்ணிலா மறைகளு மிருவரு முனிவோருந்-தீண்டருந் திருமேனியைக் குபேரன் தன்கையாற் றீண்டிமங்கலஞ் செய்தது இவன் அரனதுதோழ னாகலின் என்க. (கசு)

பூந்து கிற்படாங் கொய்சகத் தானையின் போக்குகோ வணஞ்சாத்தி
யேந்தி ரட்டைஞாண் பட்டிகை யிறுக்கிவண் டிசைக்குநாண் மலர்க்குஞ்சி
வேய்ந்து கற்பகப் புதுமலர்ச சிகழிகை மிலைந்துநீ றணிமெய்யிற்
சாந்த மான்மதந் தண்பனி நீரளாய்த் தடக்கையான் மட்டித்தான்.

(இ-ள்.) அழகிய வஸ்திரத்தைக் கொய்சகத்தானையாகவும், பின்புறத்திற் போக்குகின்ற கோவணமாகவுஞ்சாத்தி, (அதன்பேரில்) அழகுமிக்க இரட்டையாயுள்ள அரைஞாணொடு (அரைப்) பட்டிகையையும் இறுக்கிச்சாத்தி, வண்டுகளொலிக்கும் அன்றலர்ந்த (புதிய) மலர்களையணிந்த சிகையைக்கொணடையாக அலங்கரித்து, கற்பகவிருக்ஷத்தினது புதிய மலராற்றொடுத்த மாலையை (அதன்பேரிற்) சூட்டி, திருவெண்ணீற்றையணிந்த திருமேனியில், சந்தனத்துடன் (மிருகமதமாகிய) கஸ்தூரியையுந் தடபமாகிய பனி நீரையுங் கலந்து (தனது) விசாலமான கையினாற் பூசினான். எ-று.

கொய்சகத்தானை - கொசுகியவஸ்திரம். அரைப்பட்டிகை - உதரபந்தனம். இது அரையிலுடுத்த வஸ்திரம் சரியாமல் மேலேயுடுப்பதோர் கொசுகியவஸ்திரம் அல்லது பட்டிகையென்க. (கஎ)

இரண்டு செஞ்சுடர் நுழைந்திருந் தாலென விளமணிக் குழைக்காதிற்
சுருண்ட தோடுபொற குண்டலந் திணியிருடு றெந்துதோட் புறந்துள்ள
மருண்ட தேவரைப் பரமென மதிப்பவர் மையல்வல் லிருண்மான
விருண்ட கண்டமேன் முழுமதி கோத்தென விணைத்தகண் டிகைசாத்தி.

(இ-ள்) அழகிய (சங்க) குண்டலமணிந்த இரண்டு திருச்செவியிலும், இரண்டு செந்நிறம் வாய்ந்த சூரியர்கள் குடிகொண்டிருந்தாற்போல, சுருண்டவடிவாகச் செய்த பொன்னாலாகியதோடும், பொன்னாலாகிய குண்டலமும், செறிந்த இருளையோட்டித் தோட்புறத்தில் அசைந்தாட (தரித்தும்), (ஆணவமலத்தால் தாமே பரமென்று) மருட்சியடைந்த தேவர்களைப் பரமென்று மதிப்பவர்களது மயக்கமாகிய வலிய இருளைப்போலக் கறுத்த கண்டத்தின்பேரில், பூரணசந்திரனைக் கோவைசெய்தாற்போல, இணைத்துச்செய்த (முத்து) கண்டிகையைத் தரித்தும். எ-று.

“மணிகுழை இணைக்காதில், இரண்டுசெஞ்சுடர் நுழைந்திருந்தா லென” என அன்வயங்கொள்க.

மருண்டதேவரைப் பரமெனமதிப்பவர் கதியை,

தாயுமானவர் பாடல்.

“அல்லலாந் தொழில்படைத்தே யடிக்கடி யுருவெடுத்தே
மல்லன்மா ஞாலங்காக்க வருபவர் கடவுளென்னிற்
றொல்லையாம் பிறவிவேலை தொலைந்திடா திருணீங்காது
நல்லது மாயைதானு நானென வந்துநிற்கும்” என்பதனாலும்,

சிவதத்துவ விவேகம.

“மூளரியோன் முதலாஞ் சுரரொலாம் பூத முதலவற் றேடுதித் துள்ளோ
ரளவிலுங் தலைமை,யாளரென் றவரை யகற்றிமால் விடையவ னினையே

வளமுறு மெல்லாத் தலைமையு முடையோன் வருமுதற் காரண னல்லோ
ருளமுறு தியானப் பொருளெனச் சிகைதேர்ந் துரைப்பவு மயங்குவார் சிலரோ"
என்பதனாலுமறிக. (கஅ)

வலங்கி டந்தமுந் நூல்வரை யருவியின் வயங்குமார் பிடைச்சென்னித்
தலங்கி டந்தவெண் டிங்களூற் றமுதெனத் தரளமா லிகைசாத்தி
யிலங்கி டந்தமா லிகைபரப் பிடையினைத் திருண்முகம் பிளந்தாரங்
கலங்கி டந்தபாற் கடன்முளைத் தெழுமிளங் கதிரெனக் கவின்செய்து.

(இ-ள்.) வலப்புறத்திற் கிடந்தசையும் உபவீதமானது (மலையினின்றிழியும்) அருவிபோலவிளங்கும் மார்பகத்தில், சடாமுடியிற் குடிகொண்ட வெள்ளிய சந்திரன் ஊற்றும் அமுதம்போல முத்துமாலையைச் சாத்தியும், (அத்திருமார்பில்) விளங்கும் அந்த (முத்து) மாலைப்பரப்பின் நடுவில், இருள் முகத்தை யோட்டிய மாணிக்கவடத்தை, மரக்கலங்கள்விளங்குந் திருப்பாற்கடலில் முளைத்தெழுந்த இளஞ்சூரியன்போலத்தரித்து அழகுசெய்தும். எ-று.

கடலில் மரக்கலமிருத்தல் பற்றியும், சூரியன் கடலிலுதித்தல் பற்றியும், இனம்நோக்கிக் "கலங்கிடந்த பாற்கடல் முளைத்தெழுங்கதிர்" எனப்பட்டது. (கக)

திசைக டந்தநாற் புயங்களிற் பட்டிகை சேர்த்துவா ளுறிக்குந்தோ
ணசைக டந்தநல் லார்மனங் கவர்ந்துயிர் நக்கவங் கதஞ்சாத்தி
யசைக டங்கலுழ் வாரண வுரிவைநீத் தணிகொளுத் தரீயம்பெய்
திசைக டந்தமந் திரபவித் திரமெடுத் தெழில்விர லுழைவித்து.

(இ-ள்.) திக்குகளைக்கடந்த நான்கு திருத்தோள்களிலும் பட்டிகைகளைத் தரித்தும், ஒளிவீசும் அத்திருத்தோள்களில் (காம) விருப்புடையமங்கையர் மனதைக் கொள்ளைகொண்டு, (அவர்களது) உயிரைப்பருகும் அங்கதங்களைத் தரித்தும், மதத்தைச்சொரிகின்ற அசைகின்ற யானைத்தோலாகிய போர்வையை நீக்கி அழகுபொருந்திய உத்தரீயத்தைச் சாத்தியும், சொல்லளவைக்கடந்த மந்திரவடிவாகிய பவித்திரத்தையெடுத்து அழகியவிரலில் தரித்தும். எ-று.

அங்கதம் - வாகுவலயம். (சoo)

உடுத்த கோவண மிசைப்பொலந் துகிலசைத் துரகமைந் தலைநால
விடுத்த போல்வெயின் மணித்தலைக் கொடுக்குமின் விடவிருபுறந் தூக்கித்
தொடுத்த தார்புயந் தூக்கிநூ புரங்கழல் சொற்பதங் கடந்தன்பர்க்
கடுத்த தாளிலிட் டிருநிதிக் கோமக னருந்தவப் பயன்பெற்றான்.

(இ-ள்.) உடுத்துள்ள கோவணவுடையின்பேரில், (பொற்றுகில் ஆகிய) பீதாம்பரத்தை யிறுகக்கட்டி, சர்ப்பமானது ஐந்துதலைகளையுந் தொங்கவிட்டதுபோல ஒளிவீசும் மாணிக்கத்தாற்செய்த தலைக்கொடுக்குகளைப் பிரகாசிக்கும்படி (அப்பீதாம்பரத்தின்பேரில்) இருபுறத்திலுந் தொங்கவிட்டு, (மலரால்) தொடுத்த மாலைகளைப் புயங்களில் அசையச்சாத்தி, சொல்லளவையைக்கடந்து அடியவர்களுக்குச் சமீபித்த திருவடியிற் சிலம்பையும் வீரகண்டையையுந்தரித்து (இவ்வண்ணம் இறைவனைச் சர்வாலங்காரமுஞ்செய்து) இருநிதிக் கிறைவனாகிய குபேரன் செய்தற்கரிய தவங்களாலாகிய பயன்களை (ஒருசேரப்) பெற்றனன். எ-று.

இருநிதி - சங்கநிதி பதுமநிதி என்பன. கொடுக்கு - கொய் சகம். (சoக)

செங்கண் மாலய னிந்திரன் முதற்பெருந் தேவர்க்கும் யாவர்க்கு
மங்க லந்தரு கடைக்கணு யகமொரு மங்கலம் புனைந்தான்போற்

சங்கை கொண்டுகும் போதரன் முதுகின்மேற் சரணம்வைத் தெதிர்போந்த
துங்க மால்விடை மேற்கொடு நடந்தனன் சுரர்கள்பூ மழைதூர்த்தார்.

(இ-ள்.) செவந்த (தாமரைபோன்ற) விழிகளையுடைய திருமால் - பிரமன் - இந்திரன் முதலாகிய பெரியதேவர்களுக்கும் மற்றுள்ளோர்களுக்கும் மங்கலத்தைத் தருகின்ற திருக்கடைக்கண்ணையுடைய சிவபெருமான் தானொரு மங்கலங்கொண்டருளினவனைப்போல எண்ணங்கொண்டு, கும்போதரனது முதுகின்பேரில் திருவடியைவைத்து, எதிரேவந்த உயர்ந்த மால்விடையின்பேரில் ஆரோகணித்து நடந்தருளினார். எ-று.

"மங்கலம் புனைந்தான்போற் சங்கைகொண்டு" என்றது, பிரமன் முதலிய எல்லாவுயிர்கட்கும் மங்கலந்தருவோன் தனக்கொருமங்கலம் வேண்டாமையின்.

கும்போதரன் முதுகின்மேற் சரணம்வைத்து மால்விடையேறினர் என்றது இதுவே இறைவர் விடையேறும் இயற்கையாகலின், இதனை,

கந்தபுராணம்.

"வன்மை பெற்றகும் போதரன் மொய்ம்பிடை வைத்துச்
சின்ம யத்தனி மால்விடை யேறினன் சிவனே"—என்பதனுனறிக. (௧0௨)

அந்த ரத்தவ ரந்தர துந்துபி யைந்துமார்த் தனர்சூழ
வந்த ரக்கரு மியக்கரும் பூதரு மங்கல வியங்கல்லக்
கொந்த லர்க்கருங் குழலர மடந்தையர் கொளைவல்லிஞ் சையர்தாளந்
தந்த சைத்திட மலர்ந்தபூங் கொம்பர்போற் சாய்ந்தசைந் தனராட.

(இ-ள்.) தேவர்கள் தேவதுந்துபி ஐந்தையும் முழக்கிப் புடைசூழ்ந்துவரவும், அரக்கரும் இயக்கரும் பூதர்களும்வந்து மங்கலவாத்தியங்களைக் கல்லென்றொலிக்கவும், இசைப்பாட்டில் வல்ல வித்தியாதரர்கள் தாளம்போட்டாட்டுவிக்க, (கொத்தாக) அலர்ந்த பூங்கொம்பு போலப் பூங்கொத்தை யணிந்த கரிய அளகபாரத்தையுடைய தெய்வமாதர்கள் சாய்ந்தசைந்து (ஒருபக்கலில்) நடிக்கவும். எ-று.

கொம்பர்-மொழியிறுதிப்போலி. ஆர்த்தனர் அசைந்தனர் என்னும் வினைமுற்றுகள் வினையெச்சப்பொருளில் வந்தன. கொளை = இசை. (௧0௩)

துங்க மாயிரங் கருவியா யிரமலைத் தூங்கிருண் முழைதோறுஞ்
சிங்க மாயிரம் வாய்திறந் தார்த்தெனச் சிரங்களாயிரந் திண்டோ
ளங்க மாயிர மாயிர முடையவ னாயிர முகந்தோறுஞ்
சங்க மாயிர மாயிர மாயிரந் தடக்கையும் பிடித்தூத.

(இ-ள்.) பரிசுத்தமாய்ச் சத்திக்கும் அருவிகளையுடைய மலையிலுள்ள இருள் குடிகொண்ட ஆயிரங்குகைள்தோறும் ஆயிரஞ்சிங்கங்கள் வாய்திறந்து கர்ச்சித்தாற்போல, ஆயிரஞ்சிரங்களையும் ஈராயிரம் திண்ணியபுயங்களையுமுடைய பாணுகம்பன் (தனது) ஆயிரம் வாய்கள்தோறும் ஆயிரஞ்சங்குகளைவைத்து, நெடிய இரண்டாயிரங் கைகளாலும் பிடித்து (ஒருபக்கலில்) ஊதவும். எ-று.

இச்செய்யுளின் முதல்வரியை "துங்கமாய் இரங்கு அருவி ஆயிரம்" எனப் பதம்பிரிக்க. (௧0௪)

போக்குமாயவன் புணர்ப்பையுமிருண்மலப் புணர்ப்பையுங்கடந்தெம்மைக்
காக்கு நாயக னருச்சனை விடாதருட் கதியடைந் துளவாணன்

றாக்கு நேர்பட வாயிரங் கரங்களாற் றொம்மென முகந்தோறுந்
தாக்க வேறுவே றெழுகுட முழாவொலி தடங்கட லொலிசாய்ப்ப.

(இ-ள்.) ஒழிக்கத்தக்க மாயையின்வலிய பிணிப்பையும் ஆணவமலசம்பந்தத்தையு மொழித்து, எம்மைப்பாதுகாக்குஞ் சிவபெருமானை அருச்சனைசெய்யுந் தொழிலைக் கைவிடாமல் (அவனது) திருவருளால் முத்தியடைந்த வாணனுவன் பாடலுக்கு ஒப்பாக (தனது) ஆயிரங்கைகளாலும், முகங்கள்தோறும்மோத,தொம்மென்று வெவ்வேறு ஓசையாயெழுங் குடமுழாவினது ஓசையானது (ஒருபக்கல்) பெரிய கடலோசையைக் கீழ்ப்படுத்தவும். எ-று. (க0டு)

முனிவ ரஞ்சலி முகிழ்த்தசெங் கையினர் மொழியுமா சியருள்ளங்
கனிவ ரும்பிய வன்பினர் பரவுபட் கருத்தொடு வழிக்கொண்டோர்
துனிவ ருங்கண நாதர்கொட் டதிர்கரத் துணையினர் மழைபோலப்
பனிவ ருங்கண ராடிய தாளினர் பாடுநா வினரேத்த.

(இ-ள்.) முனிவர்கள் அஞ்சலியாகக்கூப்பிய செவந்தகையையுடையவர்களாகியும், சொல்லுகின்ற ஆசீர்வசனங்களையுடையவர்களாகியும், மனத்திற்கனிந்து தோன்றிய அன்பினை யுடையவர்களாகியும் (ஒருபக்கலில்) தோத்திரஞ்செய்யவும், இணங்கியமனத்துடன் வழிக்கொண்டு நடக்கின்ற துன்பமில்லாத சிவகணநாதர்கள் கொட்டியதிர்க்கும் இரண்டுகைகளை யுடையவர்களாகியும், மழைபோல ஆனந்தபாஷ்பத்தைச் சிந்துங் கண்களையுடையவர்களாகியும், (ஆனந்தக்கூத்து) ஆடுகின்றகால்களையுடையவர்களாகியும், (இறைவனைத்துதித்துப்) பாடுகின்ற நாவினையுடையவர்களாகியும், (ஒருபக்கலில்) துதித்துவரவும். எ-று. (க0சு)

இந்தி ரன்மணிக் களாஞ்சிகொண் டொருமருங் செய்தமெல் லிலைவாசந்
தந்தி லங்குபொன் னடப்பைகொண் டீசனோர் சார்வர மருத்தூக்கோ
வந்தி ரங்கொலி யாலவட் டம்பணி மாறவா ரழறூபந்
தந்து நேரநீர்க் கடவுள்பொற் கோடிகந் தாமரைக் கரந்தூக்க.

(இ-ள்.) (அஷ்டதிக்குப்பாலகருள்) தேவேந்திரன் நவமணிகளிழைத்த களாஞ்சியைத்தாங்கி ஒருபக்கலில் வரவும், ஈசானமூர்த்தி மெல்லியவெற்றிலைச் சுருளையும் வாசனைத்திரவியமுந்தந்து விளங்கும் பொன்னுலாகிய அடைப்பையையேந்தி ஒருபக்கலில் வரவும், வாயுதேவன் வந்து ஒலிக்கும் ஒலியையுடைய ஆலவட்டம் பணிமாறி (ஒருபக்கலில்) வரவும், நிறைந்த அக்கினிதேவன் தூபத்தைத்தந்து (ஒருபக்கலில்)வரவும்,வருணபகவான் அழகிய பூந்தட்டைத் தாமரைமலர்போன்ற தனது கைகளிற்றாங்கி (ஒருபக்கலில்) வரவும். எ-று.

காளாஞ்சி-தம்பலப்படிக்கம். அடைப்பை - வெற்றிலைப்பாக்குப்பை. மருத்து - வாயு, கோடிகம் - தட்டு. மெல்லிலையென்பதற்கு மெல்லிய இலையெனப்பொருள்கூறுதலேயன்றி, மெல்லுகின்ற இலையெனக்கொண்டு வெற்றிலையெனப் பொருள் கூறினும் பொருந்தும். (க0எ)

நிருதி யாடிகொண் டெதிர்வர வடிக்கடி நிதிமுகந் தளகைக்கோன்
கருதி யாயிரஞ் சிதறிடத் தண்டிநன் காஞ்சுகர் வினைசெய்யப்
பரிதி யாயிரம் பணுடைவி யுரகரும் பன்மணி விளக்கேந்தச்
சுருதிநாயகன் றிருவடி முடியின்மேற் சுமந்துபின் புறஞ்செல்ல.

(இ-ள்.) நிருதியானவன் கண்ணாடிகொண்டு (ஒருபக்கலில்) எதிரே வரவும், குபேரன் திரவியத்தை அடிக்கடியள்ளி (திருமணவைபவத்தை) நினைத்து எண்

ணிறந்து (ஒருபக்கலில்) வீசிவரவும், தண்டாயுதத்தைத் தாங்கிய இயமன் கஞ்சுகமாக்கள்போல (ஒருபக்கலில்) நெருக்கத்தைவிலக்கி வரவும், சூரியகிரணம்போல விளங்கும் ஆயிரம்பணாமுடிகளையுடைய நாகர்களும் பல இரத்தின தீபங்களையேந்தி (ஒருபக்கலில்) வரவும், வேதபுருஷன் சிவபெருமானது திருவடியைத் தனது முடியின் பேரிற் சுமந்து பின்பாரிசத்தில் வரவும். எ-று.

பண+அடவி=பணாடவி. இது தீர்க்கசந்தி. அடவி=காடு.　　　　(கo௮)

கங்கை காவிரி யாதிய நவநதிக் கன்னியர் குளிர்தூங்கப்
பொங்கு வார்திரைக் கொழுந்தெனக் கவரிகள் புரட்டவெண் பிறைக்கீற்றுத்
துங்க வாளெயிற் றிருளுடற் குழிவிழிச் சுடரழற் செம்பங்கிச்
சங்க வார்குழைக் குறியகுண் டோதரன் றண்மதிக் குடைதாங்க.

(இ-ள்.) கங்கை காவிரி முதலிய ஒன்பது தீர்த்தங்களாகிய பெண்கள் குளிர்ச்சிமிக (தமதிடத்து) விளங்கும் நீண்ட அலைகளின் கொழுந்துபோலச் சாமரைகளை (ஒருபக்கலில்) வீசவும், வெள்ளிய பிறைக்கீற்றுபோன்ற உயர்ந்தவெள்ளிய பற்களையும், இருள்போன்ற (கரிய) வுடலையும், குழிந்த விழிகளையும், விளங்குகின்ற நெருப்புபோன்ற செந்நிறம் வாய்ந்த மயிர்களையும், சங்காலாகிய நீண்ட குண்டலத்தையுமுடைய குறிய வடிவம்பொருந்திய குண்டோதரன் தண்ணிய சந்திரன்போன்ற (வெண்கொற்றக்) குடையை (ஒருபக்கலில்) தாங்கவும். எ-று.　　　　(கoக)

இடிக்கும் வானுரு மேறுயர் நெடுங்கொடி யெகினவெண் கொடிஞால
முடிக்கு மூழிநா ளுளர்கடுங் காலென மூச்செறி விடநாகந்
துடிக்க வாயிடு முவணவெண் கொடிமுதற் சூழ்ந்துசே வகஞ்செய்யுங்
கொடிக்கு ழாத்திறைட் கொடியர சாய்விடைக் கொடிபுடை பெயர்ந்தாட

(இ-ள்.) (தேவேந்திரனது) இடிக்கின்ற பெரிய இடியேறுகிய உயர்ந்த நெடிய கொடியும், (பிரமதேவனது) வெண்மைதங்கிய அன்னக்கொடியும், உலகத்தையழிக்கும் ஊழிக்காலத்தில் வீசுகின்ற சண்டமாருதம்போலப் பெருமூச்சுவிடும் விஷத்தையுடைய சர்ப்பங்கள் துடிக்கும்படி வாயாற்கவ்வும் வண்மையையுடைய (விஷ்ணுமூர்த்தியினது) கருடக்கொடியும், (ஆகிய இவை) முதலிய துவசங்கள் புறஞ்சூழ்ந்து சேவகஞ்செய்யவும், அத்துவசக்கூட்டத்துள்ளே (சிவபெருமானது) இடபக்கொடியானது (அக்கொடிகளுக்கு) அரசாய் ஒருபக்கலில் அசைந்தாடவும். எ-று.　　　　(க௧o)

கண்ணு தற்பிரான் மருங்கிரு கடவுளர் கப்புவிட் டெனத்தோன்றும்
வண்ண முத்தலைப் படையெடுத் தொருகுட வயிறுடைப் பெரும்பூதம்
பண்ண வப்பதி னெண்படைக் கலமுந்தன் பக்கமாச் சேவிப்ப
வண்ணன் முச்சுடர் முளைத்தொரு வரைநடந் தனையதோர் மருங்கெய்த.

(இ-ள்.) திருநெற்றிக்கண்ணையுடைய சிவபெருமானது (இரண்டு) பக்கங்களிலும் (பிரமனுந் திருமாலுமாகிய) இரண்டு கடவுளர் கிளைவிட்டாற்போன்று விளங்கித் தோன்றுஞ் செந்நிறம் வாய்ந்த மூன்று கவராயுள்ள சூலத்தைக் குடம்போலும் வயிற்றையுடைய கும்போதரனென்னும் ஒரு பெரிய பூதமானது ஏந்தி, தெய்வத்தன்மையையுடைய பதினெண்வகைப்பட்ட ஆயுதங்களும் தன்பக்கமாகச் சேவித்துவரவும், பெருமை பொருந்திய (சூரிய-சோம-அக்கினிகளாகிய) முச்சுடர் முளைத்த ஒரு மலை நடந்துவருதல்போலவும் ஒருபக்கலில் வரவும். எ-று.

சிவபெருமானுக்கு வலப்பக்கலிற் பிரமனும் இடப்பக்கலில் விஷ்ணுவும் தோன்றினா ரென்பதை,

வாதுளாகமம்.

[illegible]
[illegible]
[illegible]

அநுஸாஸநீகபர்வம்.

[illegible]
[illegible]
[illegible]
[illegible]

கூர்மபுராணம்.

"மைந்த நின்னையென் வலப்புறத் தீன்றன னறிய
பைந்து ழாய்மது வண்ணனை யெனதிடப் பாலிற்
றந்த ளித்தன னீவிர்வெங் கரிமுகன் றழல்மேற்
கந்த னேயெனக் கருணையி னுச்சியி மோந்துரைத்தான்" எனவருவதனுணர்க.

பந்த நான்மறைப் பொருட்டி ரட் டெனவட பாடல்செய் தெதிர்புட்ப
தந்த னேத்தவா னுயிருண வுருத்தெழு தழல்விடத் தெதிர்நோக்கு
மந்த மாதியி லானிழல் வடிவமா யாடியி னிழல்போல
வந்த சுந்தரன் சாத்துநீ றொடுதிரு மாலையு மெடுத்தேந்த.

(இ-ள்.) பந்தத்தையுடைய நான்குவேதங்களின் பொருள்களைத் திரட்டினாற்போல வடமொழிப்பாடல்களாற் புட்பதந்தர்(ஒருபக்கலில்) எதிரே தோத்திரஞ்செய்யவும், தேவர்களது உயிரைப் பருகக் கோபித்தெழுந்த காலாக்கினிபோன்ற விஷத்தினெதிரே சென்ற இறுதியு முதலுமில்லாத சிவபெருமானது திருமேனியின் நிழலாய்க் கண்ணாடியின் நிழல்போல வந்த சுந்தரர் (இறைவர்) சாத்தியருளுந் திருநீற்றுடன் திருப்பள்ளித்தாமத்தையும் எடுத்தேந்தி (ஒருபக்கலில்) வரவும். எ-று.

சிவபெருமான் ஒருகாலத்தில் தமக்கு முன்னே வைத்திருந்த நிலைக்கண்ணாடியில், தமது திருமேனியின் பொலிவைக்கண்டு "சுந்தரம் வருக" என வெளிவந்த சுந்தரவடிவமே சுந்தரமூர்த்திகளானதாலும், அவர் திருக்கைலாயகிரியில் எம்பெருமான் தரித்தற்குரிய திருவெண்ணீற்றுப் பெட்டகமும், திருநந்தனவனத்திலுள்ள நல்ல மலர்களைக் கொய்து அவற்றாற் சமைத்த இறைவர் அணியத்தக்க திருப்பள்ளித்தாமமுந் திருக்கரத்தேந்திநிற்கும் அகம்படிமைத் திருத்தொண்டு பூண்டவராதலாலும், திருப்பாற்கடலில் தோன்றிய ஆலாலவிஷத்தை இறைவர் கட்டளைப்படி சென்று தமது திருக்கரத்தடக்கிக் கொண்டுவந்து திருவமுதுசெய்யக் கொடுத்தவராதலாலும் "அந்த மாதியி லானிழல் வடிவமாய் ஆடியி னிழல்போல வந்த சுந்தரன்" என்றும், "வானுயி ருணவுருத் தெழுதழல் விடத்தெதிர் நோக்கு சுந்தரன்" என்றும், "சாத்துநீ றொடுதிரு மாலையு மெடுத் தேந்த" என்றுங் கூறினர்.

புஷ்பதந்தர்-ஓர்முனிவர். இவர் நாஸ்திகம் பேசிய தோஷ நீங்கத் தமது தந்தங்களையே புஷ்பமாகக்கொண்டு சிவபெருமானை யருச்சித்து, அப்பெருமானது திருவருளால், புஷ்பதந்தமுடையவராய்த் தெய்வீகம்பெற்றவர். (ககஉ)

அன்னத் தேரின னயல்வலப் பாங்கரு ளராவலி கவர்சேன, வன்னத் தேரினன் மாலிடப் பாங்கரு மலர்க்கரங் குவித்தேத்தப், பொன்னத் தேமலர்க் கொன்றையான் வெள்ளியம் பொருப்பொடு மெழீஇப்போந்தா, லென்னத் தேரணி மதுரைமா நகர்ப்புறத் தெய்துவா னவ்வேலை.

(இ-ள்.) அன்னத்தைவாகனமாக வுடைய பிரமதேவன் வலப்பக்கலிலும், சர்ப்பங்களின் வலிமையைக் கொள்ளைகொள்ளும் நிறமமைந்த கருடனை வாகனமாக வுடைய திருமால் இடப்பக்கலிலும், (தமது) தாமரைமலர் போன்ற கைகளைக் குவித்துத் தோத்திரஞ் செய்துவரவும், சிறந்த பொன்னிறம் பொருந்திய தேன் பொதிந்த கொன்றைமாலை தரித்த சிவபெருமான் அழகிய (திருக்கைலாய மென்னும்) வெள்ளி மலையுடன் எழுந்துவந்தாற்போல (இடபவாகனத்தின்பேரில்), நிலைத்தேரின் வரிசையையுடைய பெரிய மதுராபுரியின் புறத்து எழுந்தருளிவருகின்றனர். அக்காலத்தில்.

"கார்மா மிசைக்கா லன்வரிற் கலபத்
தேர்மா மிசைவந் தெதிரப்படுவாய்" என்ற அருணகிரிநாதர்போல, வாகனங்களிற் சிறந்தது தேராகலின் "அன்னத்தேரினன் - சேனத்தேரினன்" என்றனர். "பொன்னத் தேமலர்" என்பதை ந பொன் அம் தேம் மலர் எனச் சொல் வகை செய்க. ந என்பது சிறப்பென்னும் பொருடருவதோர் இடைச்சொல். இதனை, நக்கீரனார் நப்பூதனார் என வரும் வழக்கா னறிக. (௧௧௩)

மேற்படி வேறு.

தேவர்க டேவன் வந்தான் செங்கண்மால் விடையான் வந்தான்
மூவர்கண் முதல்வன் வந்தான் முக்கணெம் பெருமான் வந்தான்
பூவல ரயன்மால் காணாப் பூரண புராணன் வந்தான்
யாவையும் படைப்பான் வந்தா னென்றுபொற் சின்ன மார்ப்ப.

(இ-ள்.) (பிரமாதி) தேவர்கட்குத் தேவனாகவுள்ள சிவபெருமான் வருகின்றான். செவந்த (தாமரைபோலுங்) கண்களையுடைய திருமாலாகிய இடபவாகனத்தையுடைய இறைவன் வந்தருளினான். (பிரம விஷ்ணு ருத்திரராகிய) திரிமூர்த்திகட்குந் தலைமையாகவுள்ள சங்கரன் வந்தருளினான். (சூரியசோமாக்கினிகளென்னும் முச்சுடர்களாகிய) திரிநேத்திரங்களையுடைய எமது பெருமான் வந்தருளினான். மலர்ந்த தாமரைப்பூவில் வாசஞ்செய்யும் பிரமதேவனுந் திருமாலுங் காண்டற்கரிய பரிபூரணனாகிய பழையவன் வந்தருளினான். எல்லாவற்றையுஞ் சிருட்டி செய்பவன் வந்தருளினான் என்று, பொன்னாலாகிய சின்னங்கள் (ஒருபக்கலில்) ஒலித்துவரவும். எ-று.

சிவபெருமானே திருமால் பிரமன் முதலிய தேவர்கட்குந் தேவனாக விளங்கி மகாதேவனென்னுந் திருநாமம் வாய்ந்திருத்தலின் "தேவர்கடேவன்" என்றும், செந்தாமரை மலர்போலுங் கண்களையுடைய திருமாலே இடபமாகவர அவ்வாகனத்தை ஏற்போனாகலின் "செங்கண்மால் விடையான்" என்றும், முதல்வர் மூவருக்கும் முதல்வனாகி நின்று கற்பகாலங்கடோறும் பிரம விஷ்ணுக்களைப்படைத்துக் கற்பாந்தங்களில் தம்மிடத் தொடுக்கிக்கொண்டு என்றுமொன்றும் முழுமுதற்கடவுளாக விளங்கலின் "மூவர்கண் முதல்வன்" என்றும், ஏனைய இருவிழிகளையுடைய சில தேவர் போலாது சூரிய சோமாக்கினிகளென்னும் முச்சுடர்களையே மூன்றுவிழிகளாகவுடையவனும் எமக்குநாயகனுமாகலின் "முக்கணெம்பெருமான்" என்றும், தாமரைமலரில் வசிக்குஞ் சதுமுகனும் திருமாலும் மமதையாற் பரமென் றிருமாந்தமையின் அவ்விரு பெருந் தேவருங் காணமுடியாதவனும் சர்வ வியாபியும் யாவர்க்குந் தொல்லோனுமா

கலின் "பூவல ரயன்மால் காணாப் பூரண புராணன்" என்றும், ஊழிக்காலங்கடோ றும் இரணிய கருப்ப பியிலிகாதி சர்வலோகத்தையுஞ் சிருட்டிக்கும் பெருமானாகலின் "யாவையும் படைப்பான்" என்றுங் கூறினர்.

படைப்பான் எனக் கூறியதனானே "ஒருமொழி யொழிதன் னினங் கொளற்குரித்தே" என்றபடி ஏனையதிதி-சங்காரம்-திரோபவம்-அனுக்கிரகங்களையும் உடன்கொள்க.

செங்கண்மால் விடையான் என்றதில், திருமாலாகிய ஈரடியால் மூவுலகளந்தவனை விடைவடிவாக்கி வாகனமாகக் கொண்டாலன்றி, அடியார் வேண்டியவுடன் விரைந்து செல்கைமுடியாதாகலின், விண்டுவிடையாக்கப்பட்டான் எனவோர் புதை பொருளுங் காண்க. (கக௪)

பெண்ணினுக் கரசி வாயிற் பெருந்தகை யமைச்ச ரேனை
மண்ணினுக் கரசர் சேனை மன்னவர் பிறரு மீண்டிக்
கண்ணினுக் கினியான் றன்னைக் கண்டெதிர் கொண்டு தாழ
விண்ணினுக் கரச னூரின் வியத்தகு நகரிற் புக்கான்.

(இ-ள்.) (திருமகள் கலைமகள் முதலிய) பெண்களுக் கரசியாராகிய தடாதகைப்பிராட்டியாரது வாயிலிலிருக்கும் பெருந்தன்மை பொருந்திய (சுமதி முதலிய) மந்திரிமார்களும் மற்றைய பூமிகளுக்கு அரசராயுள்ளவர்களும் சேனாபதிகளும் பிறரும் (மதிற்புறத்தில்) நெருங்கி, கட்புலனுக்கு இனிய திருமணக்கோலங் கொண்டருளிய பெருமானை எதிர்கொண்டு தரிசித்துப்பணிய, (சிவபெருமான் தன்னை எதிர்கொள்ள வந்தவருடன்) இந்திரனது பொன்னுலகத்தினும் வியக்கத்தக்க (செல்வம் பொருந்திய) மதுராபுரிக்குட் புகுந்தருளினார். எ-று. (ககரு)

முகிறவழ் புரிசை மூதூர் முகப்பெரு வாயி னீந்தி
யகிறவழ் மாட வீதி வலம்பட வணைவா னாக
நகிறமை பொலங்கொம் பன்ன நன்னகர் மகளி ரம்பொற்
றுகிறழை மருங்கு லாயத் தொகைபுறந் தழுவச் சூழ்ந்தார்.

(இ-ள்.) மேகங்கள் தவழும் மதில்சூழ்ந்த பழைமையாகிய மதுராபுரியின் முகத்திலுள்ள பெரிய கோபுரவாயிலைக் கடந்து, அகிற்புகை தவழும் மாடங்களையுடைய வீதியில் வலமாக (திருப்பவனி) எழுந்தருள, அந்நல்ல நகரிலுள்ள தனங்களாகிய அரும்புகளரும்பிய பொற்கொம்புபோன்ற பெண்கள் அழகிய பீதாம்பர முடுத்த இடையையுடைய தோழியர் கூட்டம் புறத்தில் நெருங்கிவரச் சூழ்ந்தார்கள்.

மணமகன் இன்னானென்பது தோன்ற மங்கலத்தால் வீதியிடத்துப் பவனி வருவதைத்தொழ, அந்நகரத்துப் பெண்கள் போந்தாரென்பார், "நகிறமை பொலங் கொம் பன்னமகளிர் ஆயத்தொகை புறந்தழுவச் சூழ்ந்தார்" என்றார்.

"நகிறவழ் பொலங் கொம்பன்னார்" என்றது எழுபருவமுடைய மாதருள் பேதைநீங்கலாக அறுவரை. இவ்வாறு பவனிவருவோனைச் சிறப்பித்துப் பாடும் பிரபந்தம் உலாவெனப்படும். ஆதியுலா தெய்வீகவுலா முதலியனபோலும். இதனை,

இலக்கண விளக்கம்.

"குழக னைக்கலி வெண்பாக் கொண்டு
விழைதொல் குடிமுதல் விளங்க வுரைத்தாங்
கிழைபுனை நல்லா ரிவர்மணி மறுகின்

மற்றவன் பவனி வரலேழ் பருவம்
உற்றமா ளுர்தொழப் போந்த துலாவாம்"—என்னும் பாட்டியற் சூத்திரத்தானுணர்க. (கககூ)

தமிழ்முதற் பதினெண் டேத்து மகளிருந் தாரு நாட்டி
னமிழ்தமன் னவரு முல்லை யம்புயங் குமுத நீலங்
குமிழ்நறுங் கோங்கு காந்தள் கோழிணா ரசோகம் வாச
முமிழ்தர மலர்ந்த நந்த வனமென வொருங்கு மொய்த்தார்.

(இ-ள்.) தமிழ் முதலாகிய பதினெண் (வகைப்பாஷைகள் வழங்கும்) நாடுகளிலுமுள்ள பெண்களும், கற்பக விருட்சம்பொருந்திய அமரருலகத்திலுள்ள தேவ அமிர்தம்போன்ற மாதர்களும், முல்லை-தாமரை-அல்லி - நீலோற்பலம் - குமிழ் - நறுமணங்கமழுங் கோங்கு - காந்தள் - மதர்த்த மலர்க்கொத்தையுடைய அசோகு (ஆகிய இத்தகைய மலர்கள்) வாசனைவீச விகசித்துள்ள நந்தனவனம்போல ஒன்றாக நெருங்கினார்கள். எ-று.

முல்லை பற்களாகவும், தாமரை முகமாகவும், அல்லி வாயாகவும், நீலோற்பலம் கண்களாகவும், குமிழ் மூக்காகவும், கோங்கு முலைகளாகவும், காந்தள் கரங்களாகவும், அசோகு உடலின் நிறமாகவுங்கொண்டு, மாதர் தொகுதியை நந்தனவனமாகக் குறிப்பு உருவகஞ் செய்தார். ஒருங்கு மொய்த்தார் என்றதனால், பதினெண் தேயத்து மாதர்களாகிய மண்ணுலக மாதர்களுடன் விண்ணுலக மாதர்களையுமுடன்கொள்க.

தேயத்து என்னுஞ் சொல் தேத்து என நின்றது. (ககஎ)

எம்மைநீர் விடுதி ரேயோ வென்பபோற் கலையுஞ் சங்கும்
விம்மநாண் மடனு முங்க ளெஞ்சுடை வெளியா ருக
வும்மைநீத் தோடு மந்தோ வுரைத்தன முரைத்தோ மென்று
தம்மைநூ புரங்கால் பற்றித் தடுப்பபோ லார்ப்பச் சென்றார்.

(இ-ள்.) எங்களை நீர் விட்டுவிடுகின்றீரோ என அரற்றுதல்போல (இடையினின்று சோரும்) மேகலாபரணமும் (கையினின்று கழலும்) வளையலும் ஒலிக்கவும், நாணமும் மடமையும் உங்கள் மனத்தைப் பரந்த வெளியாகக்கொண்டு ஐயோ! உங்களை விட்டோடும் (நாங்கள்) சொன்னோம்சொன்னோமென்று, பாதசரங்கள் தம்மைப் பாதங்களைப் பிடித்துத் தடுத்தல்போல ஒலிக்கவும் (தெருக்களிற் பவனிகாணும்படி) சென்றார்கள். எ-று.

கலையென்று கூறியது மேகலையை - இது முதற்குறையாய் வந்ததென்க.

நீங்கள் அவனைக்கண்டு காமுறின் அவனருள்செய்யான்; நாணம்மடம் முதலியவற்றை யிழப்பீர்களாதலிற் செல்லவேண்டாமென்று, அரற்றுதல்போலப் பாதசரங்கள் ஒலித்தனவென்பது கருத்து.

இச்செய்யுள் எதிர்வினை விலக்கணி. (ககஅ)

கடியவிழ் கமலக் காடு பூத்ததோர் கருணை வாரி
யடிமுதன் முடியீ ருக வலர்விழிக் குவளை சாத்திக்
கொடியசெம் பதுமப் போது குழன்மிசைச் சூடு வார்போற்
றொடியணி கரங்கள் கூப்பித் துதியென வினைய சொல்வார்.

**(இ-ள்.) வாசனையுடன் மலர்ந்த தாமரைக்காடு புட்பித்த ஒப்பற்ற கிருபைக் கடலாகிய சிவபெருமானது திருவடிமுதல் திருமுடி யிறுதியாக, தமது கண்களாகிய குவளைமலர்களைச் சாத்தி, கொடியையுடைய செந்தாமரை மலர்களைத் தமது அளக**

பாரத்தின்பேரிற் சூடுகின்றவர்களைப்போல, வளையல் அணிந்த கைகளைக் குவித்து, தோத்திரஞ்செய்கின்றவர்களைப்போல இவ்வகைய வார்த்தைகளைச் சொல்லத் தொடங்கினார்கள். எ-று.

குவளை சாத்திப் பதுமப்போது சூடுவர் என முடித்துக்கொள்க.

சிவபெருமானைக் கருணைவாரி யென்றும்,அப்பெருமானது திருமுகம்-திருக்கண்-திருவாய் - திருக்கரம் - திருவுந்தி - திருவடி முதலியவற்றைக் கமலக்காடு என்றும், அவற்றிற்கேற்ப ஆங்கு நெருங்கிய மாதரது விழிகள் குவளையென்றும், கைகள் செந்தாமரை யென்றுங் கொள்க. (கககூ)

நங்கையென் னோற்றாள் கொல்லோ நம்பியைத் திளைத்தற் கென்பார்
மங்கையை மணப்பா னென்னோ வள்ளலு நோற்றா னென்பா
ரங்கடி மதுரை யென்னோ வாற்றிய தவந்தா னென்பா
ரிங்கிவர் வதுவை காண்பா னென்னநா நோற்றா மென்பார்.

(இ-ள்.) தடாதகைப்பிராட்டியார் இச் சிறந்தநாயகனைக் கலத்தற்கு என்ன தவஞ் செய்தனரோவென்று (சிலர்) சொல்லுவர். இந்த வள்ளற்றன்மை வாய்ந்த மகாபுருஷனும் இத் தடாதகைப்பிராட்டியாரை மணம்புரிய யாது தவஞ் செய்தானோ வென்று (அவருக்கெதிராகச் சிலர்) சொல்லுவர். அழகிய விளக்கம் பொருந்திய இம் மதுராபுரி (இவர்கள் திருமணம் இங்கு நிகழ) செய்ததவம் யாதோவென்று (சிலர்) சொல்லுவர். (அஃதிருக்கட்டும்) இம் மதுரைநகரத்தில் இவர்களது திருமண வைபவத்தைக் காண நாமென்னதவஞ் செய்தோமோவென்று (சிலர்) சொல்லுவர். எ-று. (கஉ0)

தென்னவன் வருந்தி மேனாட் செய்தவப் பேறாய் பெற்ற
தன்மகள் வதுவை காணத் தவஞ் செய்தா னிலனே யென்பார்
கன்னித னழகுக் கேற்ற வழகனிக் காளை யென்பார்
மன்னவ னிவனே யன்றி வேறிலை மதுரைக் கென்பார்.

(இ-ள்.) மலயத்துவசபாண்டியன் பூர்வத்தில் வருந்திச்செய்த தவப்பலனாற் பெற்ற தனது (செல்வப்) புதல்வியாகிய தடாதகைப்பிராட்டியாரது திருக்கலியாணத்தைப் பார்க்கத் தவஞ்செய்யாமற்போயினனேயென்று (சிலர்) சொல்லுவர். (தடாதகைப்பிராட்டியாராகிய) கன்னியாருடைய (சிறந்த) அழகுக்குத் தக்க அழகுடையவன் இப்புருஷனென்று (சிலர்) சொல்லுவர். இவ்வழகனே மதுரைநகரிற்கு மன்னவனல்லாது பிறரொருவரும் இல்லையென்று (சிலர்) சொல்லுவர். எ-று. (கஉக)

நங்கைதன் னலனுக் கேற்ப நம்பியைத் தந்த திந்தத்
துங்கமா மதிநூல் வல்ல சுமதிதன் சூழ்ச்சி யென்பா
ரங்கவ டவப்பே றென்பா ரன்னைதன் கன்னிக் கன்றி
யிங்கிவன் மருக னாக வெத்தவ முடையா ளென்பார்.

(இ-ள்.) பெண்கள் நாயகியாராகிய தடாதகைப்பிராட்டியாரது அழகுக்குத் தக்க ஆடவர் நாயகனாகிய இப்புருஷனைக் கொடுத்தது, உயர்ந்த மதிநூலில் வல்லமை வாய்ந்த (இந்தச்) சுமதியினது ஆலோசனையேயென்று (சிலர்) சொல்லுவர். அப்பெருமாட்டியினது தபோபலனென்று (சிலர்) சொல்லுவர். காஞ்சனமாலை தனது குமாரத்தியை (பெறுதற்கு தவஞ்செய்தது) அன்றி, இப்பொழுது இப்புருஷனை மருகனாயும் பெறுதற்கு யாதுதவஞ் செய்தனளோவென்று (சிலர்) சொல்லுவர். எ-று. (கஉஉ)

பூந்துகி னெகிழ்ப்பர் சூழ்வர் புணர்முலை யலைப்பர் பூசு
சாந்தினை யுகுப்பர் நாணந் தலைக்கொண்டார் போலச் சாய்வர்

கூந்தலை யவிழ்ப்பர் வாரிக் கூட்டுவர் முடிப்பர் மேனி
மாந்தளி ரொங்கு மாரன் வாளிகள் புதையச் சோர்வார்.

(இ-ள்.) (சிலர்) அழகிய துகிலைச் சரியச்செய்து (பின்பு) தரிப்பர். (சிலர்) நெருங்கிய முலைகளை வருத்துவர். (சிலர்) பூசிய சந்தனக்குழம்பை உதிர்ப்பார்கள். (சிலர்) நாணம் மீக்கொண்டவர்போலத் தலையிறங்குவர். (சிலர்) கூந்தலை யவிழ்த்து வாரிக் கூட்டி (பின்பு) முடிப்பர். (சிலர் தத்தம்) மேனிகளாகிய மாந்தளிர்சடோறும் மன்மதபாணங்கள் புதைக்க (அறிவும் உடலும்) சோர்ந்து மயங்குவர். எ-று. (கஉரு)

தண்ணளி யொழுக்கஞ் சார்ந்த குணத்தினைச் சார்ந்து மிக்க
வண்ணமென் மலர்க ளென்னே வாளியாய்த் தைத்த வென்பார்
கண்ணறுங் கூந்தல் வேய்ந்த கடியவிழ் நீலத் தாரும்
வெண்ணகை யரும்பு முல்லைத் தாமமும் வெறுத்து வீழ்ப்பார்.

(இ-ள்.) தட்பமிக்க ஒழுக்கத்தைப் பொருந்திய குணத்தினை யடுத்தும் [தண்ணிய வண்டுகளாகிய நேரோயுள்ள மன்மதனது வில்லின் நாணினை யடுத்தும்] இந் நிறம்வாய்ந்த மெல்லிய மலர்கள் பாணங்களாய்த்தைத்தன; இஃதென்ன அதிசய மென்று (சிலர்) சொல்லுவர். தேனின் நறுமணங்கமழும் (தமது) கூந்தலில் தரித்த வாசனையுடன் விகசித்த நீலோற்பல மாலையையும், வெண்மை தங்கிய (தமது) தந்த பந்திபோல அரும்பிய முல்லைமாலையையும் வெறுத்து (சிலர்) நீக்குவர். எ-று.

"தண்ணளி யொழுக்கஞ் சார்ந்த குணத்தினைச் சார்ந்தும்" என்பதைச் செம்மொழிச்சிலேடையாகக் கொள்க.

மெலிவாற்றாத பெதும்பைப்பருவப் பெண்கள் "நீலத்தாரும் முல்லைத்தாம மும் வெறுத்து வீழ்ப்பார்" என்றது, அவை மன்மதபாணங்களாதலின் தம்மைத்துன் புறுத்துவதுபற்றி யென்க. (கஉசு)

விம்மிச்செம் மாந்த கொங்கை மின்னனார் சிலர்வீற் காமன்
கைம்மிக்க கணையே யாண்டு கலங்கிய மயக்காற் றங்கண்
மைம்மிக்க நெடுங்கண் மூரல் வதனமு மவனம் பென்றே
தம்மிற்றம் முகத்தை நோக்கார் தலையிறக் கிட்டுச் செல்வார்.

(இ-ள்.) பூரித்திறுமாந்த குசங்களையுடைய மின்னல்போன்ற பெண்களிற் சிலர் (கருப்பு) வில்லைத்தாங்கிய மன்மதனது கையினின்று போந்த (மண) மிக்க பா ணங்களாலடிபட்டு, அறிவழிந்த (காம)வெறியால், தங்கடங்கள் மைக்கோல மிகுந்த நீண்ட கண்களையும் பற்களையும் முகங்களையும் (முறையே நீலோற்பலம் - முல்லையரு ம்பு-தாமரையாகிய) அம் மன்மதனது பாணங்களென்று நினைத்து, தங்களுள் ஒருவர் முகத்தை யொருவர் பாராராகித் தலையிறக்கிச் செல்வார்கள். எ-று.

இச்செய்யுள் மெலிவாற்றாத மங்கைப்பருவமாதர்களின் செயல்களென்க.

மன்மதபாணங்களை, "வனசஞ் சூத மசோகு முல்லை - நீலமென மதன் பெய்கணை யைந்தே" என்னுஞ் சூத்திரத்தானறிக.

அப்பாணங்களை அவன் பிரயோகிக்கு முறையை,

"நெஞ்சி லரவிந்த நீள்சூதங் கொங்கையினிற்
றுஞ்சும் விழியி லசோகமாம்—வஞ்சியர்தஞ்
சென்னியிலே முல்லை திகழ்நீல மல்குலிலே
யென்னவே யெய்யுமியல் பாம்" என்பதனாலும்,

அப்பாணங்கள் செய்யும் அவத்தைகளை,

"நினைக்கு மரவிந்த நீள்பசலை மாம்பூ
வனைத்திடருண் டாக்கு மசோகு—வனத்திலுறு
முல்லை கிடைகாட்டு மாதே முழுநீலங்
கொல்லுமத னம்பின் குணம்" என்பதனாலுமறிக. (கஉ௫)

பற்றிய பைம்பொன் மேனிப் பசப்பது தேறு ரண்ண
லொற்றைமால் விடையின் மேற்கொண் டிருந்துநம் முளத்து மேவப்
பெற்றன மிதென்கொன் மாயம் பேதைமீர் பெருமா னீண்ட
கற்றைவார் சடைப்பூங் கொன்றை யிதுவன்றோ காண்மி னென்பார்.

(இ-ள்.) பசிய பொன்னிறம்போன்று தத்தம்மேனிகள் பசத்தலை (காம மயக்கத்தாற் சிறிதும்) தெளியாதவராகி, சிவபெருமான் ஒரு பெரிய இடபவாகனத் தின்மே லாரோகணித்திருந்தும், நமது மனத்திலும் வந்தருளப் பெற்றோம். மாதர் காள்! இஃதென்னமாயம். அவ்விறைவனது நெருங்கிய நெடிய சடையிலுள்ள கொன்றைமலர் இம்மேனியிற் றோன்றிய பசப்பல்லவோ (நம்முள்ளத்திலும் வந்தருளினு னென்னுங் குறிகாட்ட நின்றது. அதனை நீங்களும்) காணுங்களென்று (சிலர்) சொல்லுவார்.—எ-று.

இச்செய்யுள் மெலிவாற்றாத மடந்தைப்பருவமாதர்களின்செயல்களென்க.

திங்களென் றெழுந்து நம்மைச் சுடுவதென் செந்தீ யென்பார்
புங்கவன் சென்னி மீதுங் கிடப்பதே போலு மென்பா
ரங்கவர்க் கிந்த வெப்ப மிலைகொலென் றயிர்ப்பா ராற்றக்
கங்கைநீர் சுமந்தா னென்பா ரதனையுங் காண்மி னென்பார்.

(இ-ள்.) சந்திரனென்று பெயர்கொண்டெழுந்து (இது) நம்மைச்சுட்டுத் துன்புறுத்துவதுயாதுகாரணம்? (ஆதலால் இதுசந்திரனன்று) செந்நெருப்பேயென்று (சிலர்) சொல்லுவர். (பெண்காள்! நீங்கள் சொல்லும் செந்நெருப்பு) இந்தச்சிவபெருமான் சடைமுடியின்பேரிலும் இருக்கின்றது போலுமென்று (சிலர்) சொல்லுவர். (நமக்குள்ளதுபோல இத்தீயினால்) அவனுக்கு இந்தவெப்பம் இல்லைபோலுமென்று (சிலர்) சந்தேகிப்பர். அதைப்பொறுக்கு நிமித்தமே கங்காசலத்தைத் (திருமுடிமேல்) தாங்கியிருக்கின்றானென்று (சிலர்) சொல்லுவர். அந்தக் கங்கைநீரையும் பாருங்களென்று (சிலர்) சொல்லுவர்.—எ-று.

இச்செய்யுள் இரவில் வருந்துங் காமநோயைக்குறித்தது. இதனை இரவுநீடு பருவரல் என்னுந்துறை யென்பர். (கஉ௭)

கலையொடு நாணம் போக்கிக் கருத்தொடு வண்ணம் வேறு
புலையொடு மெழுகிட் டென்ன வுருகுகண் ணீர ராகிக்
கொலையொடு பயில்வேற் கண்ணார் குரிசிறன் பவனி நோக்கி
யலையொடு மதியஞ் சூடு மையன்மெய் யன்ப ரொத்தார்.

(இ-ள்.) கொலைத்தொழிலிற் பயிலும் வேற்படை போன்ற விழிகளையுடைய மாதர்கள் சிவபெருமானது பவனிவருதலைக்கண்டு, தமது வஸ்திரத்துடன் நாணமுங்கழன்று, தமதுமனத்துடன் நிறமும்வேறுபட்டு உலையிலிட்டமெழுகு (உருகிப்பாய்வது) போல, (மனம்) உருகி (ஊற்றெடுக்கும்) கண்ணீரையுடையவராகி, அலைகள்பொருந்திய கங்காசலத்துடன் சந்திரனைச் (சடைமுடியிற்) சூடிய அப்பெருமானது மெய்யன்பரைப் போன்றார்கள்.—எ-று.

சிவதரிசனத்தால் மலபந்தமொழிதலும் மனநெக்குடைதலும் உடல்பனித்தலும் ஆனந்த பாஷ்பஞ் சொரிதலும் மெய்யன்பர்க் கியற்கையாதலின், இம்மாதரும் அவரைப்போன்றிருந்தாரென வுவமிக்கப்பட்டனர். (கஉஅ)

நட்டவர்க் கிடுக்க ணெய்த நன்றிகொன் றவர்போற் கையில்
வட்டவாய்த் தொடியுஞ் சங்கு மருங்குசூழ் கலையு நீங்க
விட்டபொற் சிலம்பிட் டாங்கே நன்றியி னிகவார் போற்கா
லொட்டியே கிடப்ப நின்ற ருகுத்தபூங் கொம்ப ரன்னார்.

(இ-ள்.) (தமக்கு முன்னொருசமயத்தில் நன்றிசெய்துள்ள) நண்பர்களுக்கு விபத்துநேர (அவரை விட்டுப்பிரியும்) நன்றிமறந்தவர்போல, (தமது) கையிலணிந்த வட்டமாகிய வடிவம்வாய்ந்த தொடியும் வளையலும் இடையி லணிந்த வஸ்திரமுஞ் சோரவும், (நண்பருக்கு விபத்து சம்பவித்தபொழுது) அவர்செய்த நன்றியைப்பாராட்டி அவரைவிட்டுப் பிரியாதவர்களைப்போல இட்டபொன்னாலாகிய சிலம்பு இட்டபடியே கிடக்க, (மலர்ந்த) பூக்களைச் சிந்திநிற்கும் பூங்கொம்பை யொத்தவர்களாய் (அம்மாதர்கள்) நின்றார்கள்.—எ-று. (கஉகூ)

மின்னகு வேற்க ணாளோர் விளங்கிழை விடைமே லையன்
புன்னகைப் போது நோக்கப் போதுமுப் புரமும் வேனின்
மன்னவன் புரமுஞ் சுட்ட தல்லவோ கெட்டேன் வாளா
வின்னவை சுடாது போமோ வேழையேன் புரமு மென்றாள்.

(இ-ள்.) பிரகாசிக்கின்ற வேற்படைபோன்ற விழிகளையுடைய ஒருபெண், இடபத்தின்பேரில் ஆரோகணித்தருளிய சிவபெருமானது புன்சிரிப்பாகியபோதும், திருவிழியாகிய போதும், (முறையே) திரிபுரத்தையும், வேனிற்காலத்திற் கிறைவனாகிய மன்மதனது தேகமாகிய புரத்தையுஞ் சுட்டனவல்லவா? ஆ கெட்டேனே! இவை ஏழையேனது உடலாகிய புரத்தையுஞ் சுடாமல் வாளாப்போகுமோவென்று ஒருத்தி கூறினள்.—எ-று.

"கலையொடு நாணம் போக்கி" என்னுஞ் செய்யுள்முதல் இதுவரையில், மூன்று செய்யுள்கள் பேரிளம்பெண் பருவத்தார் செயல்களென்க. போது=மலர்.

கெட்டேன் என்றது இடைச்சொல். வியப்புப்பொருளது. (கஙo)

உழைவிழி யொருத்தி தன்க ணுருவெளி யாதத் தோன்றுங்
குழகனை யிரண்டு செம்பொற் கொங்கையு மொன்றாய் வீங்கத்
தழுவுவா ளூற்றங் காணு டடமுலை யிரண்டே யாகி
யிழையிடை கிடக்க நீங்கி யிருக்கைகண் டிடைபோ லெய்த்தாள்.

(இ-ள்.) மான்போன்ற கண்களையுடைய ஒருத்தி, தனது கண்களுக்கு உருவெளியாகப்புலப்படுஞ் சிவபெருமானை, செம்பொன்னின் நிறம்வாய்ந்த இரண்டு முலைகளும் (காமமேலீட்டால்) ஒன்றாய் விம்மத்தழுவுகின்றவள் (தனதுகைகளுக்கு) பரிசங் கிட்டாதவளாய், (தனது) பரந்த குயங்கள் (மெலிந்து) நூலிழையிடையே கிடக்கப்பிரிந்து (முன் ஒன்றாய் விம்மியனபிறகு) இரண்டாக இருத்தலைப்பார்த்து, (நமது விருப்பங் கைகூடாமற்போயிற்றே யென்று) தனது இடைமெலிந்திருப்பது போல உடலும் மெலிந்தனள்.—எ-று.

இது மடந்தைப்பருவப்பெண் செயலென்க. (கஙக)

வாரிருங் கொங்கை யாளோர் மாதராள் வானோ ருய்யக்
காரிருள் விடமுண் டன்று கறுத்ததே யன்று கொன்றைத்

தாரிருஞ் சடையார் கண்டந் தையன்மீர் தமது நெஞ்சங்
காரிரும் பென்றே காட்டக் குறியிட்ட கறுப்பே யென்றாள்.

(இ-ள்.) கச்சுபூட்டிய பெரிய தனங்களையுடைய ஒருமாது, பெண்களே! கொன்றை மாலையையணிந்த பெரியசடாடவியையுடைய சிவபெருமானாரது ஸ்ரீகண்டம் (க்ஷீராப்திமர்த்தனஞ்செய்த) அப்பொழுது (எழுந்த) கரியஇருள்போன்ற விஷத்தைத் தேவர்கள் பிழைக்கும்படி ஆபோசனஞ்செய்து கறுப்பேறினதேயல்ல. (நம்மிடத்தில்) தமது இதயம் கரிய இரும்புபோலக் கடினமுடையதென்று காட்டவே அடையாளமாக இட்ட கருமையாமென்று கூறினள்.—எ-று. (கசுஉ)

பொன்னவிர் சடையான் முன்னே போனதென் னெஞ்சு தூதா
யன்னது தாழ்த்த தென்னென் றழுங்குவா ளொருத்தி கெட்டே
னென்னது னெஞ்சம் போன தென்றன ளொருத்தி கேட்ட
மின்னனாள் வேற்கண் சேந்தாள் விளைத்தன ளவளும் பூசல்.

(இ-ள்) பொன்போல விளங்குஞ் சடைமுடியையுடைய சிவபெருமானது திருமுன்னர் என்னுடைய மனமானது தூதாகச்சென்றது. அஃது (திரும்பி என்னிடம் வரக்) காலதாமதப்பட்டது யாதுகாரணம்? என்று ஒருத்தித்துன்பமுறுவாள். (அதனைக்கேட்டவேறு) ஒருத்தி, கெட்டேன்! எனது மனமுந் தூதாகச்சென்றது (அதுவும் என்னிடம் மீட்டும் வந்திலது) என்றனள். (அதனைக்) கேட்ட மின்னல் போன்ற அப்பெண் (யான் கருதிக்காமுற்ற நாயகனிடத்து நீவிருங் காமுறுதலாமோ வென்று) வேல்போன்ற தனதுகண்கள் செவந்து அவளும் அவளோடு போர் செய்தனள்.—எ-று.

சேந்தாள் என்பது முற்றெச்சம். (கசுகூ)

செப்பிளங் கொங்கை யாளோர் தெரிவைநீர் திருநோக் கெம்பால்
வைப்பதென் மதன்போ லெம்மைச் சுடுவதே மதனுக் காவி
யப்பொழு தளித்தாற் போலெம் மாவியு மளித்தா லின்று
மெய்ப்புக ழுமக்குண் டின்றேற் பெண்பழி விளையு மென்றாள்.

(இ-ள்.) செப்புக்கலசம்போன்ற இளமைதங்கிய தனங்களையுடைய ஒரு மாது, நீர் எம்மிடத்து உமதுதிருநோக்கத்தைவைப்பது யாது நிமித்தம்? மன்மதனை (சுட்டெரித்தது) போல எம்மையும் சுட்டெரித்தற்காகவா? (அந்த) மன்மதனுக்கு அப்பொழுதே உயிர் அளித்தாற்போல இப்பொழுது எங்கள் பிராணனையும் அளித்தால், உமக்கு உண்மையாகிய புகழ் உண்டு; இல்லையாயின், உமக்குப் பெண்பழி விடாது சம்பவிக்கும் என்றனள். எ-று. (கசுச)

கவனமால் விடையான் றன்னைக் கடைக்கணித் திலனென் றங்கோர்
சுவணவான் கொடியோ ரோவத் தொழில்வல்லான் குறுக நோக்கி
யிவனைநீ யெழுதித் தந்தால் வேண்டுவ வீவ னென்றா
ளவனையா ரெழுத வல்லா ரென்றன னுவி சோர்ந்தாள்.

(இ-ள்.) விரைந்துசெல்லும் மால்விடையையுடைய சிவபெருமான் தன்னைச் சிறிதுந் திருக்கடைக்கண் நோக்காது சென்றனனென்று, ஒரு பெரிய பொற்கொடிபோன்ற ஒருத்தி, அவ்விடத்திற் சிற்பத்தொழிலிற் கைதேர்ந்தவன் ஒருவன் வர (அவனைப்) பார்த்து, நீ இந்தப் பேரழகனைச் சித்திரித்துக் கொடுப்பாயாகில் உனக்குவேண்டும் பொருள்களை (அவாவடங்க)க் கொடுப்பேனென்றனள். (அச்சிற்பன்) அவனை யெழுதித்தரவல்லவர் யாவர்? என்றான். (அவன்சொன்னதைக்கேட்டு) உயிர் சோர்ந்து மூர்ச்சித்தாள். எ-று.

இறைவனை நேரிற் காண்டற் கமைதி யில்லாமையின், சித்திரத்தாயினும் பொறித்து நோக்கி மனங்களிக்க விரும்பினவள் அவனது பேரழகு எழுதவமையா தெனக் கேட்டு ஆவிசோர்ந்தாளென்பது கருத்து. (௧௩௫)

வலத்தயன் வரவு காணாள் மாலிடங் காணாள் விண்ணோர்
குலத்தையுங் காணாள் மண்ணோர் குழாத்தையுங் காணாள் ஞானப்
புலத்தவர் போலக் கண்ட பொருளெலா மழுமான் செங்கைத்
தலத்தவன் வடிவாக் கண்டா ளொருதனித் தையன் மாது.

(இ-ள்.) வலப்புறத்திற் பிரமா வருதலையும் பாராமல், திருமால் இடப்பா ல்வருதலையும் பாராமல், தேவகூட்டங்கள் வருதலையும் பாராமல், மானுடர்தொகுதி வருதலையும் பாராமல், தான்பார்த்தபொருளை யெல்லாம் மழுவையும் மானையுமேந்திய செவந்த திருக்கரங்களையுடைய சிவபெருமானது திருவுருவமாகவே, மெய்யுணர்ச்சி யுடையவர்போல், ஒப்பில்லாத வொருபெண் (காமவிச்சையால், தனது கட்புலனுக் குத்) தோன்றக்கண்டனள். எ-று.

இறைவன்மீது மனநாட்டம் மிக்கமைத்தனளாகலின், கண்டனவெல் லாம் அவன் வடிவமேயாகக் கண்டனளென்றார். இதனை "எங்குஞ் சிவமொழிய வில்லை யவன்றன்னை" என்றும், "எங்கெங்கு நீயாயிருக்கும் பெருமைதனையென் னென்றுரைப்பேண்டா! கன்னிவனநாதா" என்றும் மேலோர்கூறியவாற்றா னறிக.

முன்பெற்றங் காலிற் செல்ல வண்ணலை முன்போய்க் காண்பான்
பின்பற்றி யாசைப் பாசம் பிணித்தெழ வோடு வாளோர்
பொன்பெற்ற முலையாள் கொம்ப ருகுமலர் போலத் தாளின்
மின்பெற்ற காஞ்சி தட்ப விலங்கொடு நடப்பா ளொத்தாள்.

(இ-ள்.) இடபவாகனமானது காற்றைப்போல (விரைந்து) முன்னேசெல் லுதலால், சிவபெருமானை முன்னேபோய்க்காணும்படி,பின்னேயிருந்து ஆசையாகிய கயிறுகட்டிக்கொண்டு செல்ல, (முன்னே) ஓடுகின்றவளாகிய பொன்னாற்செய்தது போன்ற தனங்களையுடைய ஒருபெண், கொம்பினின்று சொரிகின்ற மலர்போல (இடையினின்றுஞ் சோர்ந்த) ஒளிமிகுந்த காஞ்சியென்னும் ஆபரணமானது தனது காலில் (விழுந்து) தடுக்க, அதனால் விலங்குடன் நடந்துசெல்லும் ஒருத்தியை யொத் திருந்தாள். எ-று.

கொம்பு - கொம்பர். இது மொழியிறுதிப்போலி.

மனத்திற் காமத்தளையுற்றாளென்பதைப் புறத்துங்காட்டக்காலிற்றளைநேரி ட்டதுபோலும் இடையினின்று சோர்ந்த காஞ்சியென்னும் ஆபரணம் காலில் விளங் கியது. (௧௩௭)

விதுக்கலை மிலைந்து செங்கண் விடையின்மேல் வருமா னந்த
மதுக்கட லினைக்கண் வாயான் முகந்துண்டு மகளி ரெல்லாம்
புதுக்கலை சரிவ தோரார் புரிவளை கழல்வ தோரார்
முதுக்குறை வகல்வ தோரார் மூழ்கினார் காம வெள்ளம்.

(இ-ள்.) சந்திரகலையை (சடாபாரத்தில்) அணிந்து, செவந்த கண்களையு டைய இடபவாகனத்தின்பேரில் வந்தருளும் பேரானந்தத்தைத்தருந் தேன்கடலை, பெண்களெல்லாம் தமது கண்ணாகிய வாயால் முகந்து பருகி, தமது இடையிலுடுத்த புதிய ஆடைகள் சோருவதை யறியாமலும், முறுகிய கைவளையல்கள் கழல்வதை யுணராமலும், பேரறிவு (தம்மினின்று) நீங்குதலைத்தெரியாமலும், காமமாகிய வெள்ள த்திலே அமிழ்ந்தார்கள். எ-று.

மகளிரெல்லாம் என்றதனுனே, பல பருவப்பெண்களையும் பொதுமையிற் கொள்க. மதுவுண்டோன் அம்மயக்கத்தால் தன்பொருளும் அறிவும் சோர்தலை உணராது அழிதல்போல, ஆனந்த மதுவுண்டெழுந்த காமமயக்கத்தினுல், கலைமுதலியன சோர்ந்து அறிவழிந்தனர் என்றார். (௩௩௮)

பைத்தழ கெறிக்கு மாடப் பந்திமே னின்று காண்பார்
கைத்தலங் கூப்பி யாங்கே கண்களு நோக்கி யாங்கே
சித்தமுங் குடிபோய்ச் சொல்லுஞ் செயலுமாண் டங்கண் மாண
வைத்தமண் பாவை யோடு வடிவுவே றற்று நின்றார்.

(இ-ள்.) ஒளிபரந்து அழகுவீசும் மாடவரிசைகளின்பேரிலிருந்து காணும் பெண்கள் தமதுகைகள் குவித்தவண்ணமும் கண்கள்பார்த்தவண்ணமுமாக (நின்று) (தமது) மனம் (அவரிடம்) குடிபோக, சொல்லுஞ் செயலுமிழந்து, அவ்விடத்து மாட்சிமைப்படவைத்த மண்பாவையுடன் தமதுவடிவமும் வேறுபாடற்று நின்றார்கள்.

மண்பாவையென்றது சுதையாற்செய்தபாவை என்பர் பரிமேலழகர். இதனை, "மண்மாண் புனைபாவை யற்று" என்னுந் திருக்குறளிற் காண்க. (௩௩௯)

அன்பட்ட புரமுங் காம னுகமுஞ் சுட்ட தீயிம்
மின்பட்ட சடிலத் தண்ணன் மெய்யென்ப தறியார் நோக்கிப்
பொன்பட்ட கலனு மெய்யும் பொரிகின்றா ரவனைப் புல்லி
னென்பட்டு விடுமோ வைய வேழைய ராவி யமமா.

(இ-ள்.) (சிவபெருமானிடத்தில்) அன்புநீங்கிய திரிபுரத்தாரையும் மன்மதனது உடலையும் சுட்டெரித்த நெருப்பு இந்தமின்னல்போலுஞ் சடாடவியையுடைய சிவபெருமானது திருமேனியே என்பதை அறியாதவராகி (ஆசையுடன்) பார்த்து, பொன்னுலாகிய ஆபரணமும் தமது சரீரமும் பொரிகின்றவர்களானார்கள். அச் சிவபெருமானது திருமேனியைத் தழுவின் பெண்களது உயிர்கள் என்னபாடுபடுமோ? (நாமறியோம் என்பர்) எ-று.

ஐய என்பது இரக்கப்பொருளில்வந்த தோர் இடைச்சொல். (௩௪௦)

கொடிகள்பூத் துதிர்ந்த போதிற் கொம்பனார் கலையுஞ் சங்குந
தொடிகளுஞ் சுண்ணத் தூளுஞ் சுரர்பொழி மலரு நந்தி
யடிகள்கைப் பிரம்பு தாக்கச் சிந்திய வண்ட வாணர்
முடிகளின் மணியுந் தாருங் குப்பையாய் மொய்த்த வீதி.

(இ-ள்.) கொடிகள்மலர்ந்து உதிர்ந்த பூக்களைப்போல, பூங்கொம்புபோன்ற மாதர்களது (சோர்ந்த) வஸ்திரமும், வளையலும், தொடியும், சுண்ணப்பொடியும், தேவர்கள் சொரியும் புஷ்பமாரியும், திருநந்திதேவர் திருக்கரத்தேந்திய பிரம்புபடச் சிதறிய தேவர்களது மகுடத்தினின்று சிந்திய இரத்தினங்களும், கற்பகமாலைகளும் வீதிகளில் (குப்பைகளாக) நெருங்கின. எ-று.

தொடி என்பது ஒருவகைக் கையணி. (௩௪௧)

துன்னிய தருப்பை கூட வரசிலை துழாவித் தோய்த்துப்
பொன்னியல் கலச நன்னீர் பூசுரர் வீச வன்னார்
பன்னியர் வட்ட மாக வானவிற பதித்தா லென்ன
மின்னிய மணிசெய் நீராஞ் சனக்கலம் விதியாற் சுற்ற.

(இ-ள்.) வேதியர்கள் பொன்னாற்செய்த கலசத்திலுள்ள நல்லநீரில், நெருங்கிய தருப்பையுடன் அரசிலையைச் சேர்த்துத் தோய்த்து (ஒருபக்கவில்) வீசவும்,

அவ்வேதியரது பத்தினிகள் இந்திரவில்லை வட்டவடிவமாக வைத்தாற்போல விளங்காநின்ற இரத்தினங்களை வட்டமாகவைத்த நீராஞ்சனத்தட்டினையேந்தி முறைப்படி (ஒருபக்கலில்) சுற்றவும். எ-று.

அஞ்சனம் - ஆலாத்தி. (கசச)

கொடிமுர சாடி செம்பொற் குடமணி நெய்யிற் பூத்த
கடிமல ரனைய தீப மங்குசங் கவரி யென்னும்
படிவமங் கலங்க ளெட்டுமே பரித்துநே ரெதிர்முகக் கொம்பர்
வடிவினார் வந்து காட்ட மாளிகை மருங்கிற் செல்வான்.

(இ-ள்.) கொடி - முரசு - கண்ணாடி - செவ்விய பொன்னாலாகிய கலசம் - மணி - நெய்யிலேற்றிய வாசனைபொருந்திய மலர்போன்ற தீபம் - அங்குசம் - சாமரை என்னும் இவற்றின் வடிவமாகச்செய்த அஷ்டமங்கலங்களையும், தமைமலர்ந்த பூங்கொம்புபோல வடிவத்தையுடைய மாதர்கள் எதிர்வந்து (ஒருபக்கலில்) காட்டவும், திருமாளிகையின் பக்கலிற் செல்கின்றார் (சிவபெருமான்). எ-று. (கசரு)

செப்புரங் கவர்ந்த கொங்கை பரமையாப் பாதிய நாட்டந்
துப்புர வன்பி னார்க்கு ஞானமெய்ப் போத நல்கு
முப்புரங் கடந்தா னற்றை முழவமுறை யியம்பக் காந்த
கர்ப்புர விளக்க நேர்ந்து வலமுறை மூன்று போந்தான்.

(இ-ள்.) திருவிளங்கு நெஞ்சு செய்யும் உறுமையுடைய அன்பையுடைய அடியார்கட்கு, பரிசுத்தமாகிய உண்மைஞானத்தைப் பிரசாதிக்கின்ற திரிபுரதகனராகிய சிவபெருமான், செப்புக்கலசத்தைக் கொள்ளைகொண்ட குயங்களையுடைய தெய்வப்பெண்கள் கர்ப்பூரவிளக்கினையேந்தி வாத்தியங்கள் முழங்கும்படி தம்மை மூன்றுபிரதக்ஷிணஞ்செய்யத் திருப்பூத்தருளினார். எ-று. (கசசு)

கோயின்முன் குறுக வெய்தி மைம்புலக் குறும்பு தேய்த்த
தூயநால் வேதச் செல்வர் வாழ்த்தொலி துதிக்க நந்தி
சேயிருந் தடக்கை பற்றச் செங்கணே றிழிந்து நேர்ந்து
மாயனு மயனு நீட்டும் பங்கய மிருபாற் பற்றி.

(இ-ள்.) திருக்கோயிலின்முன்னே சென்றருளி, ஐம்புலன்களாகிய குறும்புகளைச் சிதைத்த பரிசுத்தமாகிய நான்குவேதங்களைப் பழகிய பிராமணர்கள், ஆசீர்வசனத்தைக்கூற, திருநந்திதேவரது செவ்விய நீண்ட திருக்கரங்களைப் பிடித்துச் செவ்விய கண்களையுடைய இடபவாகனத்தினின்றும் இறங்கி, திருமாலும் பிரமதேவரும் நேரேவந்து இருபக்கலிலும் நீட்டிய தாமரைமலர்போன்ற கைகளைப் பற்றிக்கொண்டு.

இதுமுதல் மூன்றுபாடல்கள் குளகம். (கசஎ)

எதிர்ந்தரு மறைகள் காணா திளைத்தடி சுமந்து காணு
முதிர்ந்தவன் புருவ மான பாதுகை முடிமேற் சாத்திய
பதிந்தவர் தலைமேற் கொண்டு பாசவல் வினைதீர்ந் துள்ளம்
பொதிந்துபே ரின்ப நல்கும் பொன்னடிப் போது சாத்தி.

(இ-ள்.) அரிய வேதங்களுந்தேடிக் காணாமல் மெலிந்து, திருவடிகளைச் சுமந்தாயினும் இனிக் காணவேண்டுமென்னும் அன்புடன் முதிர்ந்த வடிவேற்றுவந்த திருப்பாதுகையின் முடிமேல், (தங்கள்) சிரசுகளின்மேல்கொண்டு சூட்டித் திருவருட்பதிவினையடைந்தவரது ஆணவமலமாகிய வலிய பிணிப்பையகற்றி (அவர்களது)

இதயத்தை யகலாமல், பேரின்பந் தந்தருளும் பொன்போலும் அரிய திருவடிகளைச் சாத்தியருளி. எ-று.

வேதமே பாதுகையாக வந்ததை இந்நூலில் "மறையே நமது பீடிகையா மறையே நமது பாதுகையாம்" எனப் பின்வருஞ் செய்யுளா னறிக. (கசசு)

பையர வுரியி னன்ன நடைப்படாம் பரப்பிப் பெய்த
கொய்யவிழ் போது நீத்தங் குரைகழ லடிநனைப்பத்
தெய்வமந் தார மாரி திருமுடி நனைப்பத் தென்ன
ருய்யவந் தருளு மைய னுள்ளெழுந் தருளு மெல்லை.

(இ-ள்.) படத்தையுடைய பாம்பின்றோலைப்போன்ற (வெண்மையும் நுண்மையும் வாய்ந்த) நடைப்பாவாடையை விரித்து, (அதன்மீது) பரப்பிய காம்பரிந்த இதழ்விரிந்த மலர்கள் (சிந்தும்) தேன்வெள்ளமானது சத்திக்கின்ற வீரக்கழலணிந்த திருவடிகளை நனைக்கவும், (தேவர்கள் சிந்தும்) தெய்வீகம் பொருந்திய மந்தாரபுஷ்ப மாரி திருமுடியை நனைக்கவும், பாண்டியர் கடைத்தேறும்படி வந்தருளும் சிவபெருமான் திருக்கோயிலுக்குள் எழுந்தருளுங் காலத்தில். எ-று. (கசஎ)

மங்கல மகளி ரோடுங் காஞ்சன மாலை வந்து
கங்கையின் முகந்த செம்பொற் கரகநீ ரனையார் வாக்கத்
திங்களங் கண்ணி வேய்ந்த சிவபரஞ் சோதி பாத
பங்கயம் விளக்கி யந்நீர் தலைபெய்து பருகி நின்றாள்.

(இ-ள்.) மங்கலநாண் அணிந்த மாதர்தொகுதியுடன் காஞ்சனமாலையார் வந்து, கங்காதீரத்தில் முகந்துவந்த செம்பொன்னாலாகிய கரகத்திலுள்ள தீர்த்தத்தை (தம்முடன்வந்த) அம்மாதர்கள் ஒழுக்க, சந்திரனை அழகிய சிரோமாலையாகத் தரித்த சிவபெருமானது திருவடித்தாமரைகளை விளக்கி, அந்த (பாதோதக)தீர்த்தத்தைச் சிரமேற் றெளித்து உட்கொண்டு நின்று. எ-று.

இதுமுத லிரண்டுபாடல்கள் குளகம்.

நின்றாள் என்பது முற்றெச்சம். (கசஅ)

பாதநாண் மலர்மே லீரம் புலரவெண் பட்டா னீவிச்
சீதமென் பனிநீ ராட்டி மான்மதச் சேறு பூசித்
தாதவிழ் புதுமந் தாரப் பொன்மலர் சாத்திச் சென்னி
மீதிரு கரங்கள் கூப்பி வேறுநின் றிதனைச் சொன்னாள்.

(இ-ள்.) அன்றலர்ந்த தாமரைமலர்போன்ற திருவடியின்பேரிலுள்ள ஈரம் புலரும்படி வெண்பட்டாற் றுடைத்து, குளிர்ச்சிதங்கிய மெல்லிய பனிநீரினால் திருமஞ்சனஞ்செய்து, கஸ்தூரிகூட்டியசந்தனக்குழம்புபூசி, மகரந்தத்தோடலர்ந்த புதிய மந்தாரத்தினது பொன்னிறம்பொருந்திய மலர்களைச்சூட்டி (ஒருபக்கலில்) ஒதுங்கி நின்று (தமது) சிரசின்பேரில் இருகைகளையுங் கூப்பி இவ்வாறு சொல்லுகின்றார். ()

அருமையா லடியேன் பெற்ற வணங்கினை வதுவை செய்தித்
திருநகர்த் திருவுங் கன்னித் தேயமுங் கைக்கொண் டாள்கென்
றுரைசெய்தா ளதற்கு நேர்வா ருண்ணகை யுடைய ராகி
மருகனா ரியங்க ளார்ப்ப வதுவைமண் டபத்தைச் சேர்ந்தார்.

(இ-ள்.) அருந்தவப்பலனால் அடியேன்பெற்றதெய்வவடிவமைந்த (என்னு) கன்னிகையைத் திருமணம்புரிந்து, இந்தச் சிறப்பமைந்த நகரத்திலுள்ள செல்வத்தையுங் கன்னிநாடாகிய பாண்டிநாட்டையுங்கைக்கொண்டு அரசாளவேண்டுமென்று

கூறினார். மருகனார் அதற்கு உடன்பட்டவராகிப் புன்னகையோடு கூடினவராய் வாத்தியங்கள் முழங்கத் திருக்கலியாணமண்டபத்தைச் சேர்ந்தருளினார். எ-று.

காஞ்சனமாலையாரும் அவர் கணவருஞ் செய்த அருந்தவப்பயனால் உலகமாதாவாகிய பிராட்டியாரைப் புதல்வியாராகப் பெற்றமையின் "அருமையால் பெற்ற" என்றும், சிவபிரானிடத்துந் தேவியாரிடத்தும் அகமும் புறமுமொப்ப அக்காஞ்சனமாலையார் அன்புபூண் டொழுகு மியல்பினராகலின் "அடியேன்" என்றும், தடாதகைப்பிராட்டியார் உலகமாதருட் பெண்ணரசியாராக விளங்குவதுடன் தேவமாதருள்ளுஞ் சிறந்தாராக விளங்குதலின் "அணங்கினை" என்றும், "தொன்றுதொட்ட நான்மறையுரைவழிவரு சோமவாரத்தோரை நன்று தொட்டநாண் மணஞ்செய வருதுநின் னகர்க்குநீ யேகு" என முன்னே பணித்து அவ்வாறே யெழுந்தருளினவராகலின் "வதுவைசெய்து" என்றும், பாண்டிமன்னராய்த் திருக்கோலங்கொண்டு மதுராபுரியில் வீற்றிருந்து பாண்டிநாட்டை யாண்டு பலவகைச் செல்வமுங் கொள்ளவேண்டியவராகலின் "திருநகர்த் திருவுங் கன்னித் தேயமுங் கைக்கொண் டாள்க" என்றும், இறைவர் இவ்வகைய செல்வத்தைத் தம தடியவர்க்குக் கொடுத்தருளும் இயல்பினராயினும் தாங் கொண்ட திருக்கோலத்திற் கேற்ப அதனை யங்கீகரித்தார் போல நடித்துத் திருப்புன்னகை கோட்டினராகலின் "அதற்கு நேர்வா ருண்ணகை யுடைய ராகி" என்றும், இறைவர் மருகராகி, பலவகை வாச்சியங்களு மொலிப்பத் திருமணமண்டப மடைந்தன ராகலின் "மருகனு ரியங்க ளார்ப்ப வதுவைமண்டபத்தைச் சேர்ந்தார்" என்றுங் கூறினர். (௧௫௦)

அருத்தநான் மறைக ளார்ப்ப வரிமணித் தவிசி லேறி
நிருத்தனுங் கிருந்து சூழ நின்றமா லயனை யேனை
யுருத்திரா தியரைப் பினனு மொழிந்தவா னவரைத் தத்தந்
திருத்தகு தவிசின் மேவத் திருக்கடை நாட்டம் வைத்தான்.

(இ-ள்.) நிருத்தமூர்த்தியாகுஞ் சிவபெருமான், பொருளமைந்த நான்கு வேதங்களுங் கோஷிப்ப, இரத்தினங்களிழைத்த சிங்காதனத்தின்பேரிலேறி அங்கு வீற்றிருந்து, தன்னைப் புடைசூழ நின்ற திருமால் பிரமதேவர் (அவர் நீங்கிய) மற்ற உருத்திரர்முதலானோரையும் பின்னும் அவர்நீங்கியதேவர்களையும், அவரவருக்குத் தகுதியாகிய சிறப்பினையுடைய ஆசனங்களிலிருக்கத் திருக்கடைக்கணோக்கஞ் செய்தருளினார். எ-று. (௧௫௧)

விண்டல வாசோ ரேனோர் மிடைதலான் ஞாலச் செல்வி
பண்டைய ளன்றி யின்று பரித்தனள் பௌவ மேழு
முண்டவன் றன்னைத் தானின் றுத்தரந் திருத்தி னோ
வண்டர்நா யகன்ற னானை வலியினோ வறியே மம்மா.

(இ-ள்.) ஆகாயவாசிகளாகிய அமரர்களும், அவர் நீங்கிய ஏனைய உலகங்களிலுள்ளவர்களும் ஒன்று சேருதலால், பூமிதேவியானவள் முன்போல (ஒருபக்கத்திற்) சாயாது, இன்று (சமமாகச்) சுமந்திருந்தாள். (அவ்வாறிருந்தது) சத்தசமுத்திரத்தையும் ஆசமனீயஞ்செய்த அகத்தியமுனிவரை (முன் தென்றிசையி லிருத்தியது போல) தான் இப்பொழுது வடதிசையி லிருத்தினரோ (அப்படிக்கில்லாது) தேவர் தலைவனாகிய சிவபெருமானது ஆக்கினையின் வல்லமையினால் இருப்பதோ (அதனை நாம்) அறியோம். எ-று.

உமாதேவியார் பர்வதராச புத்திரியாராகத் திருவவதாரஞ் செய்ய, அவரை இறைவர் திருமணம் புரிகையில், தேவர் முனிவர் முதலானோர் இதுபோல இமாசலத்தில் ஒன்றுகூடப் பூமிதேவி சுமையாற்ற முடியாமல் தென்பாலுயர்ந்தும் வடபால் தாழ்ந்தும் இருக்கக்கண்ட இறைவர் அகத்திய முனிவரை நோக்கி "நீரே யெம்போல்வீர்; நீர் தென்றிசையிலிருப்பின் உலகஞ் சமனாக விளங்கும்" எனக் கட்டளையிட, அகத்தியமுனிவர் "அடியேன் தேவரீரது திருமணத்தைத் தரிசிக்கவேண்டும்" எனப் பிரார்த்திக்க, இறைவர் "அவ்வாறே திருமணக்காட்சி தருவோம்" என்று அநுக்கிரகித்துத் தென்றிசைக்கேகவிடுத்தனர். அதனால் பூமி பண்டுபோல் சமனாக விளங்கியது. என்பது சரிதம். (கருஉ)

மாமணித் தவிசில் வைகி மணவினைக் கடுத்த வோரை
தாம்வரு மளவும் வானத் தமனிய மனைய கொம்பன்னார்
காமரு நடன நோக்கிக் கருணைசெய் திருந்தா ளியாற்
கோமகள் வதுவைக் கோலம் புனைதிறங் கூறலுற்றேன்.

(இ-ள்.) பெரிய இரத்தினங்களழுத்திய சிங்காதனத்தில் வீற்றிருந்தருளி, திருமணச்சடங்குக்கு உகுந்த முகூர்த்தம் வருமெல்லையும், தேவலோகத்திலுள்ள பொன்னிறம் பொருந்திய பூங்கொம்பைப்போன்ற அரம்பாஸ்திரீகள் நடிக்கின்ற விருப்பத்தைச் செய்யும் நடனத்தை நோக்கிக் கிருபை செய்திருந்தருளினார். இதன்மேல், தடாதகைப்பிராட்டியார் திருமணக்கோலம் புனைகின்ற வகையினை எடுத்துச்சொல்லத் தொடங்கினேன். எ-று. (கருங)

மாசறுத் தெமையா னந்த வாரிநீ ராட்டிப் பாலடைத்
தேசுரு விளக்க வல்ல சிவபரம் பரையைச் செம்பொ
னாசனத் திருத்தி நானந் திமிர்ந்துகுங் குமச்சே றப்பி
வாசநீ ராட்டி னார்கள் மதிமுகக் கொம்ப னார்கள்.

(இ-ள்.) (ஆணவாதி) மலக்குற்றத்தை யகற்றி, எம்மைப் பேரானந்தக் கடல் நீரில் மூழ்குவித்து, அருளுருவாகச் செய்யவல்ல சிவசத்தியாராகிய தடாதகைப்பிராட்டியை, சந்திரனைப்போன்ற முகத்தையுடைய பூங்கொம்புபோன்ற (வண்ணப) பெண்கள், செவந்த பொன்னாலாகிய ஆதனத்தில் எழுந்தருளச்செய்து, கஸ்தூரி திமிர்ந்து குங்குமக் குழம்பையப்பி வாசமூட்டிய நீரால், திருமஞ்சனஞ் செய்வித்தார்கள். எ-று.

மாசு என்றது ஆன்மாவிற் கட்டுண்ட ஞானத்தை மறைத்த ஆணவாதி குற்றங்கள் என்றும், அதனை யறுத்தல் என்றது தீக்ஷைமுறைப்படி கலாசோதனையால் அக்குற்றங்களினின்றும் எடுத்தொழித்தல் என்றும், ஆனந்தவாரி நீராட்டல் என்றது வாதனைபற்றி யெழும்மலபோத நீக்கத்தில் அறிவானந்தத்து மூழ்கச்செய்தல் என்றுங் கொள்க. (கருச)

முரசொடு சங்க மேங்க மூழ்கிநுண் டூசுஞ் சாத்தி
யரசிய லறத்திற் கேற்ப வந்தணர்க் குரிய தானம்
விரைசெறி தளிர்க்கை யார வேண்டுவ வெறுப்பத் தந்து
திரைசெய்நீ ரமுத மன்னா டிருமணக் கோலங் கொள்வாள்.

(இ-ள்.) பேரிகையுடன் (வலம்புரிச்) சங்கம் முழங்கத் திருமஞ்சனமாடி மெல்லிய ஆடையுடுத்து, (தாம் திருவவதாரஞ்செய்த) க்ஷத்திரியகுல தருமத்திற்குப் பொருந்த, பிராமணர்கட்குரிய தானங்களாக (அவர்கள்) விரும்பும் பொருள்களை அவா

வரும்படி, வாசமிக்க தளிர்போன்ற திருக்கரங்களால் நிரம்பத்தந்து, (பாற்) கடலிற் றோன்றிய தேவாமிர்தம்போன்ற தடாதகைப்பிராட்டியார் திருமணக்கோலங் கொள்ளத்தொடங்கினார். எ-று. (கருரு)

செம்மலர்த் திருவும் வெள்ளைச் செழுமலர்த் திருவுந் தங்கள்
கைம்மலர்த் தவப்பே றின்று காட்டுவார் போல நங்கை
யம்மல ரனிச்ச மஞ்சு மடியிற்செம் பஞ்சு தீட்டி
மைம்மலர்க் குழன்மேல் வாசக் காசறை வழியப் பெய்தார்.

(இ-ள்.) செந்தாமரைப்பூவில் வாசஞ்செய்யும் இலக்குமியும், செழிய வெண்டாமரைமலரில் வாசஞ்செய்யுஞ் சரசுவதியும், தங்கள் கைத்தாமரைகள் செய்த தவப்பலனை இப்பொழுது (அலங்கரித்தலால்) காட்டுவார் போல, தடாதகைப்பிராட்டியாரது அழகிய அனிச்சமலர்களை மிதிக்க அஞ்சும் (மெல்லிய) திருவடியில், செம்பஞ்சுக் குழம்பு தீட்டி, மேகம்போன்ற மலரணிந்த (கரிய) கூந்தலின்மேல் வாசனைமிகுந்த மயிர்ச்சாந்தை வழிய அப்பி. எ-று (கருசா)

கொங்கையின் முகட்டுச் சாந்தங் குளிர்பனி நீரிற் றோய்த்துத் தீட்டிப்
பங்கய மலர்மே லன்னம் பவளவாய் திறந்து வாய்விட் டார்ப்பத்
தங்கிய வென்ன வார நூபுரந் தழுவிச் சேந்த
பூங்கதிர்ப் பாத சாலங் கிண்கிணி யணையப் பெய்தார்.

(இ-ள்.) திருத்தனத்தின் உச்சியிற் சந்தனத்தைப் பனிநீரிற் கலந்து திமிர்ந்து, தாமரைப் புட்பத்தின்மீது அன்னங்கள் (தமது) பவளம்போன்ற செவ்வந்த வாயைத்திறந்து ஒலிக்கத்தங்கியிருந்தாற்போலப் பொருந்தும்படி சிலம்புகளொலிக்கவும், செந்நிறம்பொருந்திய அழகிய கிரணத்தையுடைய பாதசாலமும் கிண்கிணியுஞ் சத்திக்கவும் திருவடிகளின்மேற் சூட்டி. எ-று.

பாதசாலம் என்பது பரியகம். இதனை,

"பொன்னிதழ் பொதிந்த பன்னிற மணிவடம்
பின்னிய தொடரிற் பெருவிரன் மோதிரந்
தன்னொடு தொடக்கிய தமனியச் சிலம்பின்
புறவாய்ச் சூழ்ந்து புணர்வைப் பதுவே"—என்னுஞ் சூத்திரத்தானறிக.

எண்ணிரண் டிரட்டி கோத்த விரிசிகை யிருபத் தொன்றிற்
பண்ணிய கலாப மீரேழ் பருமநா லிரண்டிற் செய்த
வண்ணமே கலையி ரண்டிற் காஞ்சியில் வகையோ ரைந்தும்
புண்ணியக் கொடிவண் டார்ப்பப் பூத்தபோற் புனையப் பூட்டி.

(இ-ள்.) முப்பத்திரண்டு கோவைகளாகக் கோத்த விரிசிகையும், இருபத்தொரு கோவைகளாகச்செய்த கலாபமும், பதினான்கு கோவைகளாகக் கோத்த பருமமும், எட்டுக் கோவைகளாகக் கோத்த மேகலையும், இரண்டு கோவைகளாகக் கோத்த காஞ்சியும் (ஆகிய) இவ்வகைப்பட்ட ஐந் தாபரணங்களையும், வண்டுகளொலிக்கப் புண்ணியக்கொடியொன்றுபூத்திருத்தல்போல, இடையில் ஒலிக்கப்பூட்டி. எ-று.

விரிசிகை முதலிய ஐந்தணிகளின் கோவைத் தொகையை,

"எண்கோவை மேகலை காஞ்சி யிருகோவை
பண்கொள் கலாபமிரு பத்தொன்று—கண்கொள்
பருமம் பதினான்கு முப்பத் திரண்டு
விரிசிகை யென்றுணரற் பாற்று"—என்னும் வெண்பாவிலும் மாறுபடாது கூறியதா னறிக. (கருஎ)

பொன்மணி வண்டு வீழ்ந்த காந்தளம் போது போல
மின்மணி யாழி கோத்து மெல்விரற் செங்கைக் கேற்ப
வன்மணி வைர யாப்புக் கடகமுந் தொடியும் வானத்
தென்மணி கரங்கள் கூப்ப விருதடந் தோளி லேற்றி.

(இ-ள்.) பொன்னிறமும் நீலநிறமும்* பொருந்திய வண்டுகள் மொய்த்த, அழகிய காந்தள்மலரின் இதழ்கள்போல, மெல்லிய விரல்களில் விளங்கும் நீலரத்தின மிழைத்த பொன்மோதிரத்தையிட்டு, செவந்த கைகளுக்குப் பொருந்த வலிய வைர ரத்தினத்தாற்செய்த தலைப்பூட்டுள்ள கடகங்களையுந் தொடியையும் பணைத்த இரண்டு திருத்தோள்களில், ஆகாயத்திலுலாவுஞ் சூரியன் (தனது) கிரணங்களாகிய கைகளைக் குவித்து வணங்க அணிந்து. எ-று.

* சூரியன் வணங்குவது கடகம் தொடி இவற்றின் ஒளிகளுக்குத் தனது ஒளி மழுங்கினான் என்பது தோன்றக் கூறியது. (௧௧௯)

மரகத மாலை யம்பொன் மாலைவித் துரும மாலை
நிரைபட வான விலலி னிழலபட வாரத் தாமம்
விரைபடு களபச் சேறு மெழுகிய புளகக் கொங்கை
வரைபடு மருவி யன்றி வனப்புநீர் நுரையு மான.

(இ-ள்.) வாசனை பொருந்திய கலவைக்குழம்பு பூசிய புளகமரும்பிய திருத்தனத்தில், மரகதமாலையும் அழகிய பொன்மாலையும் பவளமாலையும் இந்திரதனுசைப் போல ஒளிவீச வரிசைவரிசையாகவும், முத்துமாலையானது மலையினின்றிழியும் அருவியை (ஒத்திருத்தலும்) அல்லாது, அழகிய வெள்ளத்தில் எழுந்த நீர்நுரையையும் ஒத்திருக்கவும். எ-று. (௧௨௦)

உருவமுத் துடுவா யம்முத் துடுத்தபல் காசு கோளாய்
மருவவக் காசு சூழ்ந்த மாமணி கதிராய்க் கங்குல்
வெருவவிட் டிமைக்கு மார மேருவின் புறஞ்சூழ்ந் தாடுந்
துருவசக் கரம்போற் கொங்கை துயல்வர விளங்கச் சூட்டி.

(இ-ள்.) தோற்றத்தையுடைய முத்துக்கள் நக்ஷத்திரங்களாகவும், அம்முத்துக்களைச் சூழ்ந்த பலவகை இரத்தினங்கள் கோள்களாகவும் பொருந்தவும், அவ்விரத்தினங்கள் சூழ்ந்த பெரிய நடுநாயகமணி சூரியனாகவும், (இவ்வாறு கைபுனைந்த) இருளஞ்சியோட வொளிவிளங்கும் பதக்கமானது மேருவின் புறத்தைச் சூழ்ந்து செல்லும் துருவசக்கரத்தைப்போலத் திருத்தனத்தின்பேரில் தொங்கியசைய (இரத்தினமாலைகளாகிய) அணிகள் விளங்க அணிந்து. எ-று.

தேவியார்பூண்ட ஆபரணங்களில், துருவசக்கரம் ஆரமென்றும், அத்துருவசக்கரத்துளமைந்த நக்ஷத்திரங்கள் முத்தென்றும், சந்திரன்முதலிய கோள்கள் வைரமுதலிய இரத்தினங்களென்றும், சூரியன் அவ்விரத்தினங்களின் நடுவில்வாய்ந்த மாணிக்கமென்றுங் கற்பித்தனர்.

இச்செய்யுள் உவமவுருவகவணி. (௧௨௧)

கொடிக்கய லினமாய் நின்ற கோட்சுறு வேறும வீறுந்
தொடிக்கலை மதியுந் தங்கோன் றொல்குல விளக்காய்த் தோன்றும்
பிடிக்கிரு காதி னூடு மந்தணம் பேசு மாபோல்
வடிக்குழை மகரத் தோடு பரிதிவான் மழுங்கச் சேர்த்து.

(இ-ள்.) துவசத்தில் வரைந்த கயலுக்கு இனமாகநின்ற வலிய ஆண்மகர மும், (காளுக்குநாள்) அதிகரிக்குங் கலைகளையுடைய வட்டமாகிய சந்திரனும், தமது தலைவனாகிய மலயத்துவசபாண்டியனது தொன்றுதொட்டுள்ள மரபினுக்கு ஓர் தீப மாக அவதரித்த தடாதகைப்பிராட்டியாரது இரண்டு திருச்செவியின்கண்ணும் (வந்து தம்முட்கலந்து) இரகசியம் பேசும்வகைபோல நீட்சியமைந்த மகரகுண்டலம் பூட்டிய தோட்டினை, சூரியனது ஒளி மழுங்கும்படி அணிந்து. எ-று.

சுறவை மகரகுண்டலமாகவும், மதியைத் தோடாகவுங் கொள்க.

பாண்டியர் மரபிற்குரிய கொடியாகிய கயலும், அம்மரபின் முதல்வனாகிய சந்திரனுங் கலந்து இரகசியம்பேசுவதுபோலவிளங்க, மகரகுண்டலம்பூட்டிய தோடு அணிந்தனர் என்பது கருத்து. (கசஉ)

மழைக்குமா மதிக்கு நாப்பண் வானவிற் கிடந்தா லொப்ப
விழைக்குமா மணிசூழ் பட்ட மிலம்பக மிலங்கப் பெய்து
தழைக்குமா முகிலை மைந்தன் றளையிடல் காட்டு மாபோற்
குழைக்குநீர்த் தகர ஞாழற் கோதைமேற் கோதை யார்த்து.

(இ-ள்.) மேகத்திற்கும் பூரணசந்திரனுக்கும் மத்தியில், இந்திரதனுசு விள ங்கினாற்போல, பெரிய இரத்தினங்களிழைத்த ஒளிசூழ்ந்த பட்டத்தையும் இலம்பகத் தையும் (நெற்றியில்) விளங்கத் தரித்து, சூல்கொண்ட பெரிய மேகத்தை (அவரது) குமாரராகிய உக்கிரபாண்டியர் (பின்பு) தளையிடுதலை (முன்பே) காட்டுவதுபோல, பனிநீரிற் குழைத்த சாந்தையணிந்த கூந்தலின் புறத்துப் பூமாலையைச்சூட்டி. எ-று.

தளை=விலங்கு. மேகம் கூந்தலாகவும், பூமாலை தளையாகவும் உவமிக்கப் பட்டன. (கசங)

கற்பகங் கொடுத்த விந்தக் காமரு கலன்க ளெல்லாம
பொற்பமெய்ப் படுத்து முக்கட் புனிதனுக் கிறி லாத
வற்புத மகிழ்ச்சி தோன்ற வழகுசெய் தமையந் தோன்றச
சொற்கலை யாளும் பூவின் கிழத்தியுந் தொழுது நோக்கி.

(இ-ள்.) கற்பகவிருக்ஷமானது கொடுத்த இந்த விருப்பந்தரும் ஆபரணங் களையெல்லாம் அழகுபெறத் திருமேனியிலுள்ள உறுப்புகளிற் பூட்டி, மூன்று திருக் கண்களையுடைய பரிசுத்தராகிய சிவபெருமானுக்கு அழிவில்லாத இன்பமானது ஜனி க்கும்படி (பிராட்டியாரை) அலங்காரஞ்செய்து (திருமணஞ் செய்தற்குரிய முகூர்த்த) காலம்வர, புகழமைந்த சரஸ்வதியும், இலக்குமியும் பணிந்து (தமது அலங்காரத்தைப்) பார்த்து. எ-று. (கசச)

சுந்தர வல்லி தன்னைச சோபன மென்று வாழ்த்தி
வந்திரு கையுந் தங்கண் மாந்தளிர்க் கைக ணீட்டக்
கொந்தவிழ் கோதை மாது மறமெலாங் குடிகொண் டேறு
மந்தளிர்ச் செங்கை பற்று வெழுந்தனன் மறைக ளார்ப்ப.

(இ-ள்.) சுந்தரவல்லியாகிய தடாதகைப்பிராட்டியாரை சோபனம் என்று மங்கலவாழ்த்துக்கூறி, இருபக்கலிலும் வந்துதங்களது மாந்தளிர்போன்ற (மெல்லிய) இருகரங்களையும் நீட்ட, பூங்கொத்தலர்ந்த அளகபாரத்தையுடைய தடாதகைப்பிராட் டியும், முப்பத்திரண்டறங்களுங் குடிகொண்டு வளரும் அழகிய தளிர்போலச் செந் நிறம் பொருந்திய திருக்கரங்களாற் பிடித்து, வேதங்கள் கோஷிக்க (அங்கிருந்து) எழுந்தருளினர். எ-று. (கசரு)

### கலிவிருத்தம்.

அறைந்தன தூரிய மார்த்தன சங்க
நிறைந்தன வானவர் நீண்மலர் மாரி
யெறிந்தன சாமரை யேந்திழை யார்வாய்ச்
சிறந்தன மங்கல வாழ்த்தெழு செல்வம்.

(இ-ள்.) மங்கலவாத்தியங்கள் (ஒரு பக்கலில்) ஒலித்தன. சங்கம் (ஒரு பக்கலில் ஒலித்தன. தேவர்கள் (சொரியும்) மணமிக்க புஷ்பமாரி எங்கும் நிறைந்தன. கவரிகள் (எங்கும்) வீசப்பட்டன. மங்கலவாழ்த்தாயெழுந்த பொலிவு மாதர்களது வாயினின்று (ஒரு பக்கலில்) சிறந்து விளங்கின. எ-று.

இழை = ஆபரணம். இழைக்கப்பட்டது என்னுங் காரணக்குறியது. இழையார் - ஆபரணம் பூண்டவர். மகளிர் என்க. (௧௬௬)

அடைந்தனள் சுந்தரி யம்பொ னடைப்பை
யெடுத்தன ளாடி திலோத்தமை யேந்திப்
பிடித்தனள் விந்தை பிடித்தனள் பொற்கோ
லடுத்த நெருக்கை யொதுக்கி நடந்தாள்.

(இ-ள்.) சுந்தரியானவள் (ஒருபக்கலில்) வந்து அழகிய பொன்னாலாகிய அடைப்பையை எடுத்துவரவும், திலோத்தமையானவள் கண்ணாடியைப் பிடித்து (ஒரு பக்கலில்) ஏந்திவரவும், வீரலக்ஷ்மி பொற்கட்டமைந்த பிரம்பைத் தாங்கிச் சூழ்ந்த நெருக்கத்தை யொதுக்கி (ஒருபக்கலில்) நடக்கவும். எ-று.

சுந்தரி - இந்திராணி. (௧௬௭)

கட்டவிழ் கோதைய ரம்பை களாஞ்சி
தொட்டன ளூர்வசி தூமணி யால
வட்ட மசைத்தனள் வன்ன மணிக்கா
சிட்டிழை கோடக மேனகை கொண்டாள்.

(இ-ள்.) முறுக்கவிழ்ந்த மலர்மாலைதரித்த அரம்பையானவள் களாஞ்சியை (ஒருபக்கலில்) தாங்கிவரவும், ஊர்வசியானவள் பரிசுத்தமாகிய இரத்தினங்களிழைத்த ஆலவட்டத்தை (ஒருபக்கலில்) வீசிவரவும், மேனகையென்பவள் நிறம்பொருந்திய இரத்தினங்களை (வரிசையாக) வைத்துப்பதித்த பூந்தட்டை (ஒருபக்கலில்) ஏந்திவரவும். எ-று.

இச்செய்யுளிற் கூறிய அரம்பை - ஊர்வசி - மேனகை என்பவர்களும் முன் செய்யுளிற்கூறிய திலோத்தமை என்பவளும் தேவதாசிகள். இவர்கள் திருப்பாற் கடல்கடைகையில்தோன்றித் திருமாலினால் தேவேந்திரனுக்குக் கொடுக்கப்பட்டவர்கள். இவர்களைத் தொகையால் அறுபதினாயிரம்பேர் என்பர் இதுவேயன்றி ஊர்ப்பசி என்பதற்குப் பிரமன தொடையிற் றோன்றினவள் எனப் பொருள் கூறுவாருமுளர்.

கோடிகம் = பூந்தட்டு. (௧௬௮)

கொடிகளெனக்குளிர் போதொடு சிந்தும்
வடிபனி நீரினர் வீசுபொன் வண்ணப்
பொடியின ரேந்திய பூமபுகை தீபத்
தொடியணி கையினர் தோகையர் சூழ்ந்தார்.

(இ-ள்.) கொடிகள்போலக் குளிர்ந்த மலருடன் சிந்தும் வடித்த பனிநீரைத் தாங்கினவர்களும், சிந்துகின்ற பொன்னிறம் பொருந்திய சுண்ணப்பொடியை ஏந்தி

னவர்களும், வாசந்தங்கிய புகையையும் தீபத்தையுந் தாங்கின வளையல்தரித்த கையை யுடையவர்களுமாகிய மாதர்கள் (ஒருபக்கலில்) சூழவும். எ-று. (௧௬௯)

தோடவி ழோதியா சோபன கீதம்
பாடவி னைப்பனி நீரொடு சாந்த
மேடவிழ் மென்மல ரிட்ட படந்திற
பாடக மெல்லடி யைப்பையப் பையா

(இ-ள்.) இதழ்கள்விகசித்த (மலர்மாலைபணிந்த) கூந்தலையுடைய மாதர்கள் சோபனப்பாட்டுகள் பாடவும், வாசந்தங்கிய பனிநீருடன் கலந்த சந்தனக்குழம்பை (தெளித்து) இதழ்விரிந்த மெல்லிய மலர்கள் பரப்பிய நடைப்பாவடையின்பேரில், பாடகத்தை யணிந்த மெல்லிய திருவடிகளை மெல்லவைத் தொதுங்கி. எ-று.

நடைப்பாவடையாகப் பரப்பிய மலர்களுக்கஞ்சித் திருவடியை மெல்லப் பெயர்த்து நடந்தனர் என்பார், "எடவிழ் மென்மலரிட்ட படத்திற் பாடகமெல்லடி யைப் பையவையா" என்றார். (௧௭0)

செம்மல ராளொடு நாமக டேவி
கைம்மலர் பற்றின கல்வியொ டாக்க
மிம்மையி லேபெறு வாரகிது போதென்
*றம்மணி நூபுர மார்ப்ப நடந்தாள்.

(இ-ள்.) செந்தாமரை மலரில் வீற்றிருக்குந் திருமகளுடன், நாமகளாகிய கலைமகளது தாமரைமலர்போன்ற திருக்கரங்களை (தடாதகைப் பிராட்டியார் தமது திருக்கரங்களாற்) பற்றுதலால், கல்விப்பொருளுடன் செல்வப்பொருளையும் (ஒருங்கே) இப்பிறவியிலே பெற நினைப்போர்க்கு, (அவற்றையடைய) இதுதான் சமய மென்று, அழகிய இரத்தினங்கள் பதித்த சிலம்புகளொலிக்க நடந்து. எ-று. (௧௭௧)

ஒல்கினண் மெல்ல வொதுங்கின ளன்பு
பிலகி யிருந்த பிரானரு கெய்தி
மெல்கி யெருத்த மிசைத்தலை தூக்கிப்
புல்கிய காஞ்சி புலம்ப விருந்தாள்.

(இ-ள்.) துவண்டு மெல்ல வொதுங்கி, (தன்பேரில்) அன்புநிறைந்திருந்த சிவபெருமான் பக்கலில் அடைந்து மென்மைகுணநிரம்பி, பிடரியின்பேரில் (தமது) திருச்சிரம்வைத்து இடையிலணிந்த காஞ்சியென்னும்ஆபரணம் ஒலிக்கும்படி (தடாதகைப் பிராட்டியார்) இருந்தருளினார். எ-று.

அரசியல் நடத்துந்தன்மையொழிந்து இல்வாழ்க்கைக்குரிய பெண்டன்மை யடைந்தமையின் "மெல்கி" என்றார். புலம்ப விருந்தாளென்றது இருந்தருளும் போதுங் காஞ்சி ஒலிக்குமாதலின் என்க. (௧௭௨)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

அற்பக விமைக்குஞ் செம்பொ னரதன பீடத்தும்பர்ப்
பொற்பக லாத காட்சிப் புனிதனோ டிருந்த நங்கை
யெற்பகல் வலங்கொண் டேகு மெரிகதிர் வரையி னுச்சி
கற்பக மருங்கிற் பூத்த காமரு வல்லி யொத்தாள்.

(இ-ள்.) இருள்கெடப் பிரகாசிக்குஞ் செம்பொன்னாலாகிய இரத்தின மிழைத்தபீடத்தின்மேல், பொலிவு நீங்காத தோற்றத்தையுடைய சிவபெருமானுடன் வீற்றிருந்தருளிய தடாதகைப்பிராட்டியார், சூரியன் பிரதக்கணஞ்செய்து செல்லும்

பிரகாசிக்கின்ற கிரணத்தையுடைய மகமேருவின் உச்சியில், கற்பகவிருக்ஷத்தின் பக்கத்திற் பூத்துப்படர்ந்த விருப்பந்தருங் காமவல்லிக்கொடியைப் போன்றிருந்தனர்.

பொற்பீடம் மகமேருவாகவும், சிவபெருமான் கற்பகவிருக்ஷமாகவும்; தடாதகைப்பிராட்டியார் காமவல்லியாகவுங் கொண்டுகூட்டி ஒப்புமைக் கூட்டவணியாகக் கொள்க. (௧௭௩)

பண்ணுமின் னிசையு நீருந தண்மையும் பாலுமப் பாலி
னண்ணுமின் சுவையும பூவு நாறறமு மணியு மங்கேழ்
வண்ணமும் வேறு வேறு வடிவுகொண் டிருநதா லொத்த
தண்ணனு முலக மீன்ற வமமையு மிருநத தமமா.

(இ-ள்.) சிவபெருமானும் உலகமாதாவாகிய தடாதகைபபிராட்டியாரும் (வெவ்வேறாகநெருங்கி) இருந்த திருக்காட்சியானது, பணணும் அபபண்ணுடன் அபேதமாகநின்ற இனிய இசையும், சலமும் அச்சலத்துடன் பொருந்திய தட்பமும், பாலும் அப்பாலுடன் கலந்துளளசுவையும், மலரும் அம்மலரிற்பிரியாதுள்ள வாசனையும், மாணிக்கமும் அம்மாணிக்கததிற்பொருந்திய அழகிய நிறமும், வேவ்வேறுவடிவங்கொண்டு வீற்றிருந்த தோற்றத்தை யொத்திருந்தது. எ-று.

பண் - நீர் - பால் - பூ மணி என்பன சிவபெருமானையும், இசை - தட்பம்- சுவை - மணம் - நிறம் என்பன தடாதகைப பிராட்டியாரையும் உணர்த்தின. இவை முறையே பிரிக்கப்படாதபொருள்கள். இவற்றைப்பிரிந்துநின்று வேறுவடிவுகொண் டிருந்தாற்போல உவமித்தார். இவ்வுவமம் இறைவரும் இறைவியும் ஒரு காரணம் பற்றிப் பிரிந்திருப்பினும் தம்முட் பிரிந்திலரென்பதை யுணர்த்தியது. (௧௭௪)

விண்ணுளார் திசையி னுள்ளார் வேறுளா ரிலததி னுள்ளார்
மண்ணுளார் பிறரும வேள்வி மண்டபத தடங்கி யென்றும
பண்ணுளா ரோசை போலப் பரநதெங்கு நிறைநத மூன்று
கண்ணுளா ரடியி னீழல கலந்துளார் தமமை யொத்தார்.

(இ-ள்.) தேவலோகத்தி லுள்ளவர்களும், அஷ்டதிக்குகளி லுள்ளவர்களும் (இவையொழிந்த) ஏனை இடங்களி லுள்ளவர்களும், பாதலலோகத்தி லுள்ளவர்களும், பூலோகத்தி லுள்ளவர்களும், மற்றவர்களும், திருமண மகோற்சவ மண்டபத்தில் (தம்முட்பேதமின்றி ஒன்றாக) அடங்கி, பண்ணில் எப்பொழுதும் (பிரியாமல்) நிறைந்த ஓசைபோலப் பரவி, எங்கும் நிறைந்த மூன்றுகண்களையுடைய சிவபெருமானது திருவடிநீழலில் (தம்மிற் பேதமின்றி) கலந்த அடியவரைபபோன்றிருந்தார்கள். எ-று.

தேவர் மானவர் நாகர் முதலானோர் ஆண்டு ஒன்றுகூடிப் பேதமற்று இருந்தது சிவபெருமானது திருவடியடைந்த முத்தான்மாக்கள் பேதமின்றி விளங்குதல் போலு மிருந்தது என்பது கருத்து. (௧௭௫)

ஆயபோ தாழி யங்கை யண்ணல்பொற் கரக நீராற்
சேயவான் சோதி யாடற் சேவடி விளக்கிச் சாநதந்
தூயபோ தவிழச் சாத்தித் தூபமுஞ் சுடருங் கோட்டி
நேயமோ டருச்சித் தைய னிறையருள் பெற்று நின்றான்.

(இ-ள்.) இப்படியிருக்குஞ்சமயத்தில், (சுதரிசனமென்னுஞ்) சக்ராயுதத்தை அழகிய கையிற்றாங்கிய திருமால், பொன்னாற்செய்த கரகத்திலுள்ள நீரால், செவ்வந்த பெரிய ஒளிப்பிழம்பாகிய சிவபெருமானது திருநடம் பயிலுஞ் செவ்விய திருவடிகளை விளக்கி, சந்தனத்தையுங் குற்றமற்ற மலரையும் மணம் வீசச் சாத்தி, தூபத்தை

யுந் தீப்த்தையும் (விதிப்படி) சுற்றி, அன்புடன் அருச்சனைபண்ணி,சிவபெருமானது நிறைந்த திருவருளையடைந்து நின்றனர். எ-று. (கஎசு)

விண்டலத் தவரு ளாதி வேதியன் பாத தீர்த்த
முண்டகத் தவனு மாலு முனிவரும புரந்த ராதி
யண்டரு நந்தி தேவு மடிகணத் தவரு மேனைத்
தொண்டரும் புறம்பு முள்ளு நனைத்தனா சுத்தி செய்தார.

(இ-ள்.) (வைகுந்தம் சத்தியலோகம்) முதலிய விண்ணுலகத்தி லுள்ளவர்களுள் முதற்பட்ட பிராமணனாகிய சிவபெருமானது திருவடியை விளக்கிய (பாத) தீர்த்தத்தினால், தாமரைமலரில வாசஞ்செய்யும் பிரமதேவரும், திருமாலும், முனிவர்களும், இந்திரன் முதலாகிய தேவாகளும், திருநந்திதேவரும், சிவகணத்தவர்களும், மற்றை அடியார்களும், தமது புறம்பும உளளும் நனைத்து (தம்மை) பரிசுத்தஞ் செய்தார்கள். எ-று.

"புறம்பும் உள்ளும் நனைத்தனா" என்றது, மேலோரது திருவடிகளை யபிடேகித்த பாதோதகத்தை வீணிற்போககலாகா தாதலின், இறைவர் திருவடிகளை விளக்கிய சலமாகிய பாததீர்த்தத்தை, ஆங்கிருந்த தேவர் முனிவர்முதலானோர் சிரமேற் புரோக்ஷித்துக் கொணடதுடன உட்கொண்டுபெருகினர் எனக் கொள்க.*

அடிகணத்தவா எனபதற்கு (அநநந்திநாயனுரை) அடுத்த சிவகணத்தவர் என்றும், பொருள்கூறப பொருநதும். (கஎஎ)

அத்தலை நின்ற மாயோ னாதிசெங் கரத்து நங்கை
கைத்தலங் கமலப போது பூத்ததோ ராகாந்த ளொபப
வைத்தரு மனுவா யோதிக் கரகநீ ா மாரி பெய்தான்
றொத்தலர் கண்ணி விண்ணோா தொழுதுபூ மாரி பெய்தார்.

(இ-ள்.) அவ்விடத்திலிருந்த விஷ்ணுமூர்த்தியானவர் ஆதி மூர்த்தியாகிய சிவபெருமானது செவந்ததிருககரததில், தாமரைமலரிலே மலர்ந்த ஒருகாந்தண் மலரைப்போல, தடாதகைபபிராட்டியாரது திருக்கரஙகளைவைத்து, தமது திருவாயால் துரியமந்திரமஒதி, கரகததிலுள்ளநீரை (தாரை) வார்த்தார். பூங்கொத்தலர்ந்த மாலையையணிநத தேவாகள் பணிநது புஷ்பமாரி வருஷித்தாாகள். எ-று.

காத்தற் கடவுளாகிய திருமால் தேவருள் க்ஷத்திரியராகலின் க்ஷத்திரிய வேடம்பூண்ட சுந்தரேசரது திருககரததிற பிராட்டியாரைத் தத்தஞ்செய்தனர் என்பது. இனம்பற்றிப பிரமாவை வைசியனென்றும், இந்திரனைச் சூத்திரனென்றுங் கொள்க.

ஆடினா ரரம்பை மாதா விஞ்சைய ரமுத கீதம
பாடினா ரரவென் றார்த்துப பரவினா முனிவா வானோர்
மூடினார் புளகப் போர்வை கணத்தவா முடிமேற் செங்கை
சூடினார் பலரு மன்றற் றொடுகட லின்பத் தாழ்ந்தாா.

(இ-ள்.) அரம்பாஸ்திரீகள் (ஒருபக்கலில) நிருத்தஞ்செய்தார்கள். வித்தியாதரர்கள் அமுதம்போன்ற இசைப்பாடலை (ஒருபககலில்) பாடினார்கள். முனிவர்கள் ஹாரஹரவென்று கோஷித்துத் தோத்திரஞ்செய்தார்கள். தேவர்கள்புளகமாகிய போர்வையிற் பொதிந்தார்கள். சிவகணத்தவர்கள் (தமது) முடியின்மேரிற் செவந்த கைகளைக் கூப்பி அஞ்சலிசெய்தார்கள். (இவரோயன்றித் தேவர் மானவர்முதலிய) பலரும், திருமணமஹோற்சவமாகிய சந்தோஷ சாகரத்தில் அமிழ்ந்தார்கள் எ-று.

தொடேடல் - சகரரால் தோண்டப்பட்ட கடல் என்பது.

கடல் சகரரால் தோண்டப்பட்ட தாவது.

முற்காலத்தில் அயோத்திநகரையரசுபுரிந்த சகரனென்பவன் விடுத்த அசுவ——புரவியை இந்திரன் கண்டு மனம்பொறாதவனாகி வஞ்சனையாற் பிடித்துப் பாதலத்திற் கடுந்தவம் புரிந்திருக்குங் கபிலமுனிவர் பக்கலிற் கட்டிப்போயினன். அவ்வரசன் புதல்வராகிய சகரர் அறுபதினாயிரவருந் தந்தை கட்டளைப்படி அக்குதிரையை உலகமுழுவதுந் தேடிக் காணாது, பூமியைத் தோண்டிப் பாதலத்தை யடைந்து அங்கு அருந்தவம்புரியுங் கபிலமுனிவர் பக்கலிலிருக்கக்கண்டு, இம்முனிவனே குதிரையைக் கொணர்ந்தவனென்று வைதனர்; அதனால், முனிவர் கோபித்து விழித்துப் பார்க்க, சகரர் அறுபதினாயிரவருஞ் சாம்பராயினர். இது கேள்வியுற்ற சகரன் வருந்தித் தன் பௌத்திரனாகிய அம்சுமான் என்பவனாற் புரவியை வருவித்து யாகத்தைப் பூர்த்திசெய்தனன். அவர்கள் பரம்பரையிற் றோன்றிய பகீரதன் பெருந்தவஞ்செய்து, ஆகாயகங்கையை வருவித்து இறந்துகிடந்த தன்மூதாதைகளாகிய சகரரது உடலெரிந்த சாம்பலை நனைத்து அவர்களை நற்கதியடையச்செய்தனன் என்பது. இவ்வாறு கடல்சகரர் தோண்டிய காரணத்தாற் சாகரம் எனவு மொருபெய ரெய்தியது என்பதாம். இதனை,

கூர்மபுராணம் - இராமனவதரித்த வத்தியாயம.

“ மீட்டுமவ் வேள்வியில் விடுத்த வாம்பரி
பூட்டுவி லிந்திரன் புணர்பபின் வௌவுறு
வாட்டமில் கபிலமா முனிவன் வான்றவ
மீட்டுறு சாலையி னொளித்திட் டேகினன்.

தள்ளரும் பெரும்புகழ்ச் சகரர் வாம்பரி
யெள்ளரும் பெரும்புவி யெங்குங் காண்கிலார்
பள்ளநீர் வேலையைத் தொட்டுப பாதலத்
துள்ளுறை கபிலன்மாட் டுறைதல் கண்டனர்.

தெள்ளிதிற் காண்டலுஞ் சினவு மைந்தரைத்
தள்ளரு முனிமொழி சாம்ப ராக்கலும்
வள்ளறன் மைந்தரை வரவு காண்கலா
துள்ளநொந் தஞ்சுமான் செல்கென் றேதலும்”—என்பதனா னறிக.

புத்தனா ரெறிந்த கல்லும் போதென மிலைந்த வேத
வித்தனா ரடிக்கீழ் வீழ விண்ணவர் முனிவ ரேனோர்
சுத்தநா வாசி கூறக் குங்குமத் தோயந் தோய்ந்த
முத்தவா லரிசி வீசி மூழ்கினார் போக வெள்ளம்.

(இ-ள்.) சாக்கியநாயனார் எறிந்த கல்லையும் மலராகத் தரித்தருளிய வேதகாரண ராகிய சிவபெருமானாரது திருவடியின்கீழ் விழ, தேவர்களும் முனிவர்களும் (அவரொழிந்த) மற்றையோரும் (தமது) பரிசுத்தமாகிய நாவினால் ஆசீர்வசனங் கூற, குங்குமநீரிற் கலந்த முத்தம்போன்ற வெள்ளிய அரிசியை வீசி, இன்பப்பெருக்கில் மூழ்கினார்கள். எ-று.

புத்தனார் கல்லெறிந்ததாவது.

இவர் சங்கமங்கை யென்னும் பதியில் வேளாளகுலத்திற் றோன்றி, சர்வான்மாக்களிடத்தும் அன்புடையவராய், பிறவியை யொழிக்கக் கருதி, காஞ்சிநகரத்

லைச்சேர்ந்து ஞானசாஸ்திரங்களை விசாரிப்பவராய்ப் பவுத்தமதப் பிரவேசஞ்செய்து அந்தச் சமயநூல்களையும் புறச்சமயநூல்களையும் விசாரித்து, அவை யுண்மைப்பொரு ளுடையன வல்லவென் றுணர்ந்து, சிவபெருமானது திருவருளுங் கைகூட, சைவசம யமே உண்மைப்பொருளென் றுணர்ந்து, எந்தநிலையிலிருந்து எவ்வேடங் கொண்டா லும், சிவபக்தி மாறாதிருப்பதே சாலுமென்று, தான் கொண்ட பவுத்தவேட மாறாது, சிவலிங்கத்தைத் தரிசனஞ்செய்து போசனஞ்செய்யவேண்டுமென்னும் நியதி யுட் கொண்டு, வெள்ளிடையிலி லிருக்கும் ஒரு சிவலிங்கத்தைக் கண்டு மகிழ்ச்சியின் மிகுதியால் செய்வது இதுவெனத் தெரியாது, அங்கிருக்கக் கண்ட ஒரு செங்கல்லை யெடுத்து அச் சிவலிங்கமூர்த்தத்தின்பேரி லெறிந்தனர். பரமசிவம் அதற்கு மகிழ்வுற் றிருந்தார். இவர் மறுநாள்முதல் தான் செய்தது ஞாபகத்திற்கு வர, நாம் இவ்வாறு செய்தது சிவகடாக்ஷமே யாதலால், இதுவே தொண்டாகச்செய்யவேண்டு மென்று, நாடோறும் அன்புடன் இவ்வாறு கல்லெறிதலாகிய பூசையைச் செய்துவருவார். ஒரு நாள் மறந்து போசனஞ் செய்ய உட்காருகையில், கல்லெறிய மறந்த விஷயத்தை ஞா பகங்கொண்டு, உடனே யெழுந்து அதி விரைவாக ஓடிவருகையில், சிவபெருமான் கிருபைகூர்ந்து இடபாரூடராய்க் காட்சியளித்து சிவலோக மருளினர். என்பதாம். இதனை,

திருத்தொண்டர் புராணம்.

"நாடோறுஞ் சிவலிங்கங் கண்டுண்ணு மதுநயந்து
மாடோர்வெள் ளிடைமன்னுஞ் சிவலிங்கங் கண்டுமன
நீடோடு களியுவகை நிலைமைவரச் செயலறியார்
பாடோர்கற் கண்டதனைப் பதைப்போடு மெடுத்தெறிந்தார்.

அகநிறைந்த பேருவகை யடங்காத வாதரவான்
மகவுமகிழ்ந் துவப்பார்கள் வன்மைபுரி செயலினால்
இகழ்வனவே செய்தாலு மிளம்புதல்வர்க் கின்பமே
நிகழுமது போலதற்கு நீள்சடையோர் தாமகிழ்வார்.

அங்கொருநா ளருளாலே யயர்ந்துண்ணப் புகுகின்றார்
எங்கள்பிரான் றனையெறியா தயர்த்தேன்யா னெனவெழுந்து
பொங்கியதோர் காதலுடன் மிகவிரைந்து புறப்பட்டு
வெங்கரியி னுரிபுனைந்தார் திருமுன்பு மேவினார்.

கொண்டதொரு கல்லெடுத்துக் குறிகூடும் வகையெறிய
உண்டிவினை யொழிந்தஞ்சி யோடிவரும் வேட்கையொடுங்
கண்டருளுங் கண்ணுதலார் கருணைபொழி திருநோக்காற்
றொண்டரெதிர் நெடுவிசும்பிற் றுணைவியொடுந் தோன்றினார்." — என

வருந் திருவிருத்தங்களா னறிக. (கஅ0)

அம்மையோ டப்ப னென்ன வலர்மணம் போல நீங்கார்
தம்மருள் விளையாட் டாலே யாற்றநாட் டமியர் போல
நம்மனோர் காணத் தோன்றி நன்மணம் புணர ஞால
மும்மையு முய்ந்த தென்னுத் தத்தமின் மொழிய லுற்றார்.

(இ-ள்.) (உயிர்கட்கெல்லாம் அறிவைப் பிறப்பிக்கும்) அம்மையும் அப்பரும் என்று சொல்லப்பட்ட பூவும் மணமும் போலப் பிரியாதவராகிய சுந்தரேசப்பெருமா னும், தடாதகைப்பிராட்டியாருந் தமது திருவருள் விளையாட்டினாலே, நெடுங்காலம்

பிரிந்தவர்போல நம்போலியர் தரிசிக்கப் புலப்பட்டு, இப்பொழுது திருமணஞ் செய்தருள, (இதனாலே) திரிலோகங்களும் பிழைத்தனவென்று தங்கள் தங்களுள்ளே (அனைவரும்) சொல்லித் துதித்தார்கள். எ-று.

"அம்மை யோடப்பனாகி அலர்மணம்போல நீங்கார்" என்றது—ஆன்மாக்களுக்கு அணுக்களுக்கீடான தனு கரண புவன போகங்களை முறைப்படிவிரித்துக்கூட்டி உபகரிக்கும்பொருட்டுச் சிவசத்தியாகி நிற்றலின் " அம்மை " என்றும், அம்முறைப்படி சத்தியின் வழியொடுக்கி அச்சத்தியையுந் தன்னின் வேறின்றிச் சத்திசிவமாகியுந் தான் நிற்றலின் " அப்பன் " என்றும், பொருள் வேறுபாடன்றிச் சொல்வேறுபாடின்றாகலின் "அலர்மணம்போல்" என்றும், சொல் வேறுபாடன்றிப் பொருள் வேறுபாடு இன்றாகலின் " நீங்கார் " என்றுங் கூறினர் என்க. (௧௮௬)

காமரு சுரபித் தீம்பால் கற்பகக் கனிநெய் கன்ன
லாமரு சுவைய வின்ன நறுமது வருக்கஞ் செம்பொ
னாமணி வட்டத் திண்காற் பாசனத் தமையப் பெய்து
தேமரு கொன்றை யானைத் திருக்கைதொட் டருள்க வென்றார்.

(இ-ள்.) விருப்பஞ்செய்யுங் காமதேனுவினது மதுரம்பொருந்திய பாலும், கற்பகவிருக்ஷங்கொடுத்த வாழைக்கனியும், நெய்யும், சர்க்கரையும் (கலந்த) நாவிற்கு உருசியைக்கொடுக்கும் இத்தகைய நறுமணங் கமழும் மதுவர்க்கத்தையும், செவந்த பொன்னாலாகிய இரத்தினங்கள் பதித்த வட்டவடிவமைந்த திண்ணிய காலமைந்த பாத்திரத்திலே பொருந்தப்பெய்து, தேன்நிறைந்த கொன்றைமாலையைத்தரித்த சுந்தரேசப் பெருமானைத் திருவமுது செய்தருளுகவென்று பிரார்த்தித்தார்கள். எ-று.

திருக்கை தொட்டருள்க வென்றது சைவபரி பாஷை. காமரு தேமரு என்பதனிறுதியில் உகரவீறு தொக்கது. பர்க்கம்=சேர்க்கை. இச்சொல் வர்க்கம் வருக்கமென வருந்தன்மையது (௧௮௭)

அங்கைவைத் தமுது செய்தாங் ககமகிழ்ந் தட்ட மூர்த்தி
கொங்கவிழ் குமுதச் செவ்வாய் கோட்டிவாண் முறுவல் பூத்தான்
புங்கவர் முனிவர் கற்பின் மகளிரும் போதின் மேய
மங்கைய ரிருவ ரோடு மங்கலம் பாட லுற்றார்.

(இ-ள்.) அட்டமூர்த்தியாகிய சோமசுந்தரக்கடவுள் திருக்கரத்தாற் பரிசித்துத் திருவமுது செய்தருளினாற்போல மனங்களித்து, வாசனையோடலர்ந்த ஆம்பல் போன்ற செவந்த வாயைக்குவித்து ஒள்ளிய புன்னகை செய்தருளினார். தவத்தாலுயர்ந்தவராகிய சத்த விருடிகளின் பத்தினிமாராகிய கற்புடைய மாதரும் (செந்தாமரை-வெண்டாமரை) மலர்களில் வாசஞ்செய்யும் (திருமகள் - கலைமகள் என்னும்) இருவரும், மங்கலவாழ்த்துப்பாடத்தொடங்கினார்கள். எ-று.

போது-மலர். சிறப்புநோக்கித் தாமரையெனக் கொள்ளப்பட்டது. இதனை, " பூவினுக் கருங்கலம் பொங்கு தாமரை " என்னுந் திருஞானசம்பந்தமூர்த்திசுவாமிகள் திருவாக்கானும், " பூவிற் சிறந்தது பொறிவாழ் பூவே " என்னும் ஆன்றோர் கூற்றானு மறிக. (௧௮௮)

மாக்கடி முளரி வாணன் மைந்தரோ டொருங்கு வைகி
மைக்கனி னெடுமா லாரத் துடனைவயா னுறுகெ யார்த்தி
வாக்கிட லார மாந்தி வலஞ்சுழித் தகடு வீங்கித்
தேக்கிடு மொலியி னார்த்து நிமிர்ந்தது தெய்வச் செந்தீ.

(இ-ள்.) (மலர்களிற்) சிறந்த வாசனைபொருந்திய தாமரையில்வசிக்கும் பிரமதேவர் (தமது) புத்திரர்களான (சனகர் முதலிய) வர்களுடன் ஒருசேரவிருந்து, (எழு நாக்குகளில்,) உவியுள்ள ஈவாற்சுவை பார்க்கும்படி சுருக்கு சுருவங்களால் நறுமணங் கமழும் நெய்யை நிரப்பிவார்க்க, செவந்த அக்கினிபகவான் நிரம்பவுண்டு, வலப்புறஞ் சுழிவிட்டு, வயிறுநிரம்பித் தேக்கெறியும் ஓசைபோலச் சடசடவென்று ஒலித்து ஓங்கி யெழுந்தான். எ-று. (௧௨௪)

சுற்றுநான் மறைக ளார்ப்பத் தூரியஞ் சங்க மேங்கக்
கற்றநான் முகத்தோன் வேள்விச் சடங்குநூல் கரைந்த வாற்றான்
முற்றமங் கலநாண் சாத்தி முழுதுல கீன்றாள் செங்கை
பற்றினன் பற்றி லார்க்கே வீடருள் பரம யோகி.

(இ-ள்.) சுற்றிலும், நான்குவேதங்களுங் கோஷிக்கவும், (பலவகை) வாத்தியங்களுஞ் சங்கங்களும் முழங்கவும், (வேதநூல்களை) உணர்ந்த நான்கு திருமுகங்களையுடைய பிரமதேவர், நூல்களிற் கூறிய முறைப்படி, திருமணமகோற்சவத்திற்குச் செய்யவேண்டிய சடங்குகளைச் செய்துமுடிக்க, (அகப்பற்று - புறபபற்று என்னும் இருவகைப்)பற்றுகளில்லாதவர்க்கு மோக்ஷவீட்டை அனுக்கிரகிக்குஞ் சிவபெருமான், திருமாங்கல்யதாரணஞ் செய்து சமஸ்தலோகங்களையும் பெற்றதாயாகிய தடாதகைப்பிராட்டியாரது செவ்விய திருக்கரத்தைப் பிடித்தருளினர். எ-று.

"பற்றிலார்க்கே வீடருள் பரமயோகி மங்கலநாண் சாத்தி முழுதுல கீன்றாள் செங்கைபற்றினன்" என முடித்துக்கொள்க.

அநாதி முத்தராகிய சுந்தரேசப்பெருமான் யோகமூர்த்தியாய் யோகிகட்கு யோக முத்தியருளி, போகமூர்த்தியாய்ப் போகிகட்குப் போகமு மருளுவாரென்பார் "பற்றிலார்க்கே வீடருள் பரமயோகி யுலகீன்றாள் செங்கைபற்றினன்" என்றார். ()

இணரெரித் தேவுந் தானே யெரிவளர்ப் பவனுந் தானே
யுணவுகொள் பவனுந் தானே யாகிய வொருவன் வையம்
புணர்வுறு போக மூழ்கப் புருடனும் பெணணு மாகி
மணவினை முடித்தா னன்னான் புணர்ப்பையார் மதிக்க வல்லார்.

(இ-ள்.) பல சுடரையுடைய அக்கினிதேவனுந் தானே-அக்கினியை வளர்ப்பவனுந் தானே -(அவ்வக்கினி மூலமாக) அவிகொள்வோனுந் தானே யாகிய சோமசுந்தரக்கடவுள், உலகத்திலுள்ளோர் கலத்தல் தொழிலிலுள்ள போகத்தை யனுபவிக்கும்படி (புருடவடிவும் பெண்வடிவுமாகிய) சுந்தரேசப்பெருமானும் தடாதகைப் பிராட்டியாருமாகி மணவினை (ஆகிய ஓமச்) சடங்கினை முடித்தருளினர். அவ்வண்ணமானரது செயல்களை அளந்தறியவல்லவர் எவர்? (ஒருவருமிலர்). எ-று.

"இணரெரித்தேவுந்தானே யெரிவளர்ப்பவனுந்தானே யுணவுகொள்பவனுந்தானே" என்பதை,

காஞ்சிப்புராணம்.

"வேள்வியுந் தானே வேள்விப் பொருள்களுந் தானே வெய்ய
வேள்விவேட் பவனுந் தானே வேள்விகொ ளிறையுந் தானே
வேள்வியின் பயனுந் தானே யென்பது விளக்கி யெம்மான்
வேள்விசெய் திக்கை யுற்றான் விளங்கருட் சத்தியோடும்" என்பதனுனறிக.

பின்புதன் பன்னி யோடு பிறைமுடிப் பெருமான் கையி
னன்பொரி வாங்கிச் செந்தீ நாமடுத் தெனைத்து மான

தன்படி யுணர்ந்த வேத முனிவர்க்குத் தக்க தான
மின்பகர் ததும்ப நல்கி யெரிவல முறையால் வந்து.

(இ-ள்.) இளஞ் சந்திரனை யணிந்த சடாமுடியையுடைய சுந்தரேசப்பெருமான், பிறகு தமது பத்தினியாராகிய தடாதகைப்பிராட்டியாருடன், தமது திருக்கரத்தில், நல்ல நெற்பொரிகளைவாங்கி, செவ்விய அக்கினிதேவனது நாவிற்பெய்து, யாவுந்தாமேயாக விளங்கிய தமது திருவுருவத்தையறிந்த வேதநூல்களைக் கற்றமுனிவர்களுக்கு (அவரவர்தன்மைக்கு) ஏற்றபடி தானங்களை மனமகிழ்ச்சிமிக்கூரக் கொடுத்தருளி, யாகத்தீயை முறைப்படி வலமாகப் பிரதக்ஷிணஞ்செய்து. எ-று. (௧௮௭)

மங்கலம் புனைந்த செம்பொ னம்மிமேன் மணுட்டி பாத
பங்கய மலரைக் கையாற் பரிபுர சிலம்பப் பற்றிப்
புங்கவன் மனுவா லேறறிப் புண்ணிய வசிட்டன் றேவி
யெங்கெனச் செங்கை கூப்பி யெதிர்வர வருட்கண் சாத்தி.

(இ-ள்.) சோமசுந்தரப்பெருமான், மங்கலத் தொழில்பட அலங்கரித்த செம்பொன்னாலாகிய அம்மியின்பேரில, தமதுதேவியாருடைய திருவடியாகிய தாமரைமலரை, சிலம்புகளொலிக்கத் திருக்கரத்தாற்பற்றி, [இந்தக்கல்லிலே நிற்கக்கடவாய், இந்தக்கல்லைப்போல (நம்மிடம்) நிலையாயிருக்கக்கடவாய் என்னும் பொருளுடைய வைதிக] மந்திரம் (ஓதி) முறைப்படிவைத்து, புண்ணியவடிவான வசிஷ்டமுனிவர் பத்தினியாகிய அருந்ததி எங்கேயென, (அவ்வருந்ததியார்) செவந்தகைகளைக்குவித்து எதிரேவர, திருவருணோக்கம்வைத்து. எ-று.

அக்கினிவலம் வருகையில், இறைவர் வலததிருக்கரத்தால் தேவியார் திருக்கரத்தைப் பற்றியிருத்தலின், இடத்திருக்கரத்தால் தேவியாரது திருவடியைப்பற்றி அம்மியேற்றினரெனக் கொள்க. (௧௮௮)

விதிவழி வழாது வேள்வி வினையெலா நிரம்ப விங்ங
னதிர்கட லுலகந் தேற வாற்றிநான் மறைக ளார்ப்பக்
கதிர்மணி நகையார வாழ்த்தக் காமனைக் காய்ந்த நம்பி
மதிநுதன் மங்கை யோடு மணவறை தன்னிற் புக்கான்.

(இ-ள்.) இவ்வண்ணமாக விதிமுறைதவறாமல், திருமணச்சடங்குகளெல்லாம் முடிவுபெற, ஒலிக்குங் கடல்சூழ்ந்த உலகத்திலுள்ளோர் தெளிந்துய்யச் செய்தருளி, நான்குவேதங்களும் (ஒருபக்கலில்) ஒருங்கே கோஷிக்கவும், ஒளிவீசும் முத்துப்போன்றபற்களையுடைய பெண்கள் (ஒருபக்கலில்) வாழ்த்துப் பாடல்பாடவும், மன்மதனை யெரித்தருளிய சிவபெருமான், (அட்டமிச்) சந்திரன்போன்ற நெற்றியையுடைய பிராட்டியாருடன், திருமணவறையிற் புகுந்தருளினார். எ-று.

"காமனைக்காய்ந்த நம்பி மதிநுதன் மங்கையோடு மணவறை தன்னிற் புக்கான்" என்பது—தமக்கோர் காம இச்சையிலதொன்பதும், ஆன்மாக்களின் விருப்பின்வழியே லீலாமாத்திரையாய் நடித்தருளினரென்பதுந் தோன்றக் கூறியதாம். ()

மனிதரு மிமையா தையன் மங்கல வனப்பு நோக்கிப்
புனிதவா னவரை யொத்தா ரவர்க்கது புகழோ வெந்தை
கனிதரு கருணை நாட்டம் பெற்றவர் கடவு ளோராற்
பனிதரு மலரிட் டேத்தி வழிபடற் பால ரன்றோ.

(இ-ள்.) மானுடரும் இமைகொட்டாமல், சோ[illegible]சுந்தரப்பெருமானது திருமணப்பொலிவைக்கண்டு (கண் இமைகொட்டாத) பரிசுத்தமாகிய தேவர்களை ஒத்

திருந்தனர், (அமரரையொத்திருந்தனர் என்னும்) அது அவர்கட்குப் புகழாகுமோ? யெமது தந்தையாகிய சுந்தரேசப்பெருமானது முதிர்ந்த கிருபாநோக்கத்தை யடைந்த வர்கள், தேவர்களாற் குளிர்ந்த மலர்கொண் டருச்சித்து, வணங்கி வழிபட் டுபசரிக் குந் தன்மையுடையவரல்லவா? எ-று.

“வெள்ளிய செங்கண்விடையா னடிக்கமலத் துள்ளிய மெய்யன் புடையா ருருவுந்த்துத் தள்ளியசெல்வம்” என இந்திர தி பதவிகளுஞ் சிவனடியவர்க்கொரு பொருளன வன்றென்றும் “ஐயனதருளைப்பெற்றோர் மூன்று வையமுத்தொழிலுஞ் செய்யவல்லவ ரவரோ” என்றும், இந்நூலிலேயே கூறியதற் கியைய, “அவர் கடவு ளோராற் பணிதரு மலரிட் டேத்தி வழிபடற் பால ரன்றே” என்றார். (௧௧௦)

மானுட ரிமையோ ரென்னும் வரம்பில ராகி வேள்வி
தானிட ரகல நோக்கித் தலைதலை மயங்கி நின்றார்
கானிட நடனஞ் செய்யுங் கண்ணுத லருட்க ணோக்கா
லூனிட ரகலு நாளி லுயர்ந்தவ ரிழிந்தோ ருண்டோ.

(இ-ள்.) மானுடர் தேவர் என்னும் எல்லை யில்லாதவர்களாய், திருமணப் பொலிவை (பிறவி)த் துன்பமொழியப்பார்த்து இடங்கள்தோறுங் கலந்து நின்றார் கள். திருநடனஞ்செய்தருளுந் திரிநேத்திரராகிய சிவபெருமானது அருணோக்கத்தால், முத்தியடையுங்காலத்தில், உயர்ந்தவர் தாழ்ந்தவர் (என்னும் பேதம்ஒருசிறிதும்) இல் லையல்லவா? எ-று.

ஊன் இடர் அகலும் நாள் - பிறப்பு ஒழியுங்காலமாகலின், முத்திபடையுங் கால மென்றாம். கானிடம் - மயானம். இது சர்வசங்காரகாலத்தில் யாவும் யாவரும் அழிந்து, திருமால் பிரமன் என்னும் இருபெருந் தேவருமிறந்த மகாமயானம் என்க. இவ்வகைய மகாமயானத்தில், தாம்தனியாய்நின்று நிருத்தஞ்செய்வாரெனவும், அதனை அவரதுவாமபாகத்திலுள்ள தேவியார் காண்பரெனவும் நூல்கள் கூறும். இதனை,

மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ்.

“நாளவட் டத்தளிம நளினத்தொ டுந்துத்தி நாகணையும் விட்டொரொட்டு
நாட்டத்த னும்பரம வீட்டத்த னுந்துஞ்சு நள்ளிருளி னுப்பணண்ட
கோளவட் டம்பழைய நேமிவட் டத்தினொடு குபபுற்று வெற்பெட்டுமேழ்
குட்டத்தி னிறகவிழ மூதண்ட வேதணட கோதண்ட மொடுசக்கிர
வாளவட் டஞ்சுழல மட்டித்து நட்டமிடு மதுமத்தர் சுத்தநித்த
வட்டத்தி னுக்கிசைய வொற்றிக்க னத்ததன வட்டத்தை யொத்திட்டதோர்
தாளவட் டங்கொட்டு கைபபாணி யொபபவொரு சப்பாணி கொட்டியருளே
தமிழொடு பிறந்துபழ மதுரையில் வளர்ந்தகொடி சப்பாணி கொட்டியருளே”

என்பதனானறிக. (௧௧௧)

மணவறைத் தவிசி னீங்கி மன்றல்மண் டபத்திற் போந்து
கணமணிச் சேக்கை மேவிக் கருநெடுங் கண்ணன் வாணி
துணைவனே முதல்வா னோர்க்குஞ் சூழ்கணத் தொகைக்கு மென்றுந்
தணவறு செல்வந் தந்தோன் சாறுசால் சிறப்பு நல்கி.

(இ-ள்.) கரியநெடிய திருமால் - கலைமகள் கணவராகிய பிரமதேவர் முத லாகிய தேவர்களுக்கும், எம்மைப்புறஞ் சூழ்ந்த சிவகணங்களுக்கும் எப்பொழுதும் (அவர்கள்) தம்மினின் நீங்காத செல்வந் தந்தருளிய சுந்தரேசப்பெருமான் திரு மணவறையிலிட்ட திருப்பீடத்தினின்று நீங்கி, திருக்கலியாண மண்டபத்தில்வந்து,

நவரத்தினத் தொகுதிகளிழைத்த சிங்காதனத்தில் வீற்றிருந்து, திருமணமகோற்சவத் திற்கமைந்த வரிசைகளை (அவரவர்கள்) தகுதிக்கேற்பக்கொடுத்தருளி. எ-று. (கஉ௩)

ஏட்டுவாய் முளரி யான்மா லேனைவா னவருந் தத்த
நாட்டுவாழ் பதியிற் செல்ல நல்விடை கொடுத்து வேந்தர்க்
காட்டுவா னாடிக் காட்டுந தன்மைபோ லரசு செய்து
காட்டுவா னாகி யையன் றிருவுளக் கருணை பூத்தான்.

(இ-ள்.) இதழ்கள் பொருந்திய தாமரைமலரில் வசிக்கும் பிரமதேவரும் திருமாலும்மற்றையதேவர்களும் தங்கடங்கள்நாடுகளாகிய செல்வம்பொருந்திய பதவிகளிற்செல்ல விடையளித்தருளி, (பரதநூல்விதிப்படி) ஆட்டுதலில்வல்லவன் (முன்னர்) ஆடிக் காட்டுந் தன்மை போல, சோமசுந்தரக் கடவுள் உலக மன்னர்களுக்கு அரசியல் நடத்திக்காட்டுவோராய் (அரசியல் செய்யத்) தமது திருவுள்ளத்தில் கருணை கொண்டருளினர். எ-று.

தருமமுதலிய சதுர்வித புருஷார்த்தங்களைத் தரத்தக்க வேதமுதலிய நூல்களைத் தாம் வகுத்திருப்பினும், ஆன்மாக்கள் அவற்றின்வழி உய்த்துணர்ந் தொழுக இயலாதாகலின், தாமேவந்தருளி அரசியல் செலுத்திக் காட்டினாரென்பார் "ஆட்டுவானாடிக்காட்டுந் தன்மைபோல் அரசுசெய்து காட்டுவானாகி" என்றார். (கஉ௩)

எழுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

அதிர்விடைக் கொடியங் கயற்கொடி யாக வராக்கலன் பொற்கல னாகப்
பொதியவிழ் கடுக்கை வேம்பல ராகப் புலியதள் பொலந்துகி லாக
மதிமுடி வைர மணிமுடி யாக மறைகிடந் தலமபுமா மதுரைப்
பதியுறை சோம சுந்தரக் கடவுள் பாண்டிய னாகிவீற் றிருந்தான்.

(இ-ள்.) சத்திக்கின்ற இடபக்கொடி அழகிய மீனக்கொடியாகவும், நாகாபரணம் பொன்னாபரணமாகவும், முருக்கவிழ்ந்த கொன்றைமலர்மாலை வேப்பமலர் மாலையாகவும், புலித்தோலாடை பீதாம்பரமாகவும், சந்திரனையணிந்த சடாமுடி அழகிய வைரமுடியாகவும், வேதங்கள் நீங்காது கோஷிக்கும் பெரிய மதுரையாகிய திருப்பதியில் வீற்றிருந்தருளுஞ் சோமசுந்தரக்கடவுள் சவுந்தர பாண்டியராய்த் திருக்கோலங்கொண்டு வீற்றிருந்தருளினர். எ-று.

இச்செய்யுளின் கருத்தை "சடைமறைத்துக் கதிர்மகுடந் தரித்துநறுங் கொன்றை யந்தார் தணந்து வேப்பந்-தொடைமுடித்து விடநாகக் கலனகற்றி மாணிக்கச் சுடர்ப்பூணேந்தி - விடைநிறுத்திக் கயலெடுத்து வழுதிமரு மகனாகி மீன நோக்கின் - மடவரலை மணந்துலக முழுதாண்ட சுந்தரனை வணக்கஞ் செய்வாம்" என்னுந் தோத்திரச் செய்யுளினுங் கூறியிருப்பது காண்க. (கஉச)

அறுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

விண்டவழ் மதியஞ் சூடுஞ் சுந்தர விடங்கப் புத்தேள்
கொண்டதோர் வடிவுக் கேற்பக் குருதிகொப் பளிக்குஞ் சூலத்
திண்டிறற் சங்கு கன்னன் முதற்கணத் தேவர் தாமும்
பண்டைய வடிவு மாறிப் பார்த்திவன் பணியி னின்றார்.

(இ-ள்.) ஆகாயத்திற் றவழ்ந்துசெல்லுஞ் சந்திரனைச் (சடையிற்) சூடிய பேரழகராகிய சுந்தரேசப்பெருமான் தாம் கொண்டருளிய ஒப்பில்லாத (அரசர்) திருக்கோலத்திற் கேற்ப, உதிரத்தைக் கொப்பளிக்குஞ் சூலப்படையை எந்திய வன்மைமிக்க சங்குகன்னன் முதலாகிய சிவகணத்தலைவர்களும், தமது பழைய வடிவங்கள்

மாறி (அரசர் பணிசெய்தற்குரிய அமைச்சர் முதலிய வடிவங்கொண்டு) அச்சவுந்தர பாண்டியராஜனது பணிவிடையி லிருந்தனர். எ-று.

சங்கு கர்ணன் - சங்கம்போன்ற காதினையுடையான், இவன் ஒருகாலத்தில் திருமாலுடன் போர்புரிந்து அவர் ஆற்ரு தோடுகையில், "ஶங்ககர்ண-மஹேஶ ந ஹி ந ஹி ..." என்றபடி, அவரது சிகையை அறுத்துவிட்ட ஆற்ற லுடையவனுகலின், "திண்டிறற் சங்குகன்னன்" என்ருர். (கசுரு)

தென்னவன் வடிவங் கொண்ட சிவபர னுலகங் காக்கு
மன்னவர் சிவனைப் பூசை செய்வது மறையா றென்று
சொன்னது மன்ன ரெல்லாந் துணிவது பொருட்டுத் தானு
மந்நகர் நடுவூ ரொன்ரே ரணிநகர் சிறப்பக் கண்டான்.

(இ-ள்.) பாண்டியர் திருவுருபபெற்ற சுந்தரேசபபெருமான், பூமியைக் காவல்பூண்ட அரசர்கள் சிவபெருமானை வழிபட்டு அர்ச்சித்தல் வேதமுறையென்று தாம் திருவாய்மலர்ந்தருளியதை, அரசர்களெல்லாரும் ஐயமின்றிக் கைக்கொள்ளும் பொருட்டு (சவுந்தரபாண்டியராகவிளங்கும்) சோமசுந்தரக்கடவுளும், அம்மதுராபுரி யில் நடுவூரொன்று ஒப்பற்ற அழகிய திருநகரம் (ஒன்று) சிறபபுற்றுவிளங்க வகுத்தரு ளினர். எ-று.

சிவபரன்ருனும் எனக் கூட்டுக.

சிவபெருமானே அந்தணனுக விளங்கலின் "மன்னவர் சிவனைப் பூசை செய்வது மறையாறு" என்ருர். (சுகசு)

மெய்ம்மைநூல் வழியே கோயில் விதித்தருட் குறிநி றீஇப்பே
ரிம்மையே நன்மை நக்கு மிறையென நிறுவிப பூசை
செம்மையாற் செய்து நீப வனத்துறை சிவனைக் கால
மும்மையுந் தொழுது வைய முழுவதுங் கோன டாத்தும்.

(இ-ள்.) (பினபு அந்த நடுவூரிலே சௌந்தரபாண்டியர்) உண்மையாகிய சிற்பநூல் முறைப்படி திருக்கோயிலை வகுத்து, (ஆன்மார்த்தமாக) அருள்வடிவான சிவலிங்கத்தைப் பிரதிட்டைசெய்து, இபபிறப்பிலேயே (வழிபாடு செய்வார் எண்ணி யாங்கு அனுக்கிரகித்தலால்) *இஷ்டபல பிரதேசுவரர் எனத் திருநாமஞ் சூட்டி, ஆகம முறைப்படி பூசைசெய்து, கடம்பவனத்தில் எழுந்தருளிய சொக்கலிங்கப்பெரு மானைத் திரிகாலமும் பணிந்து, உலகமுற்றுந தமது செங்கோல் செல்ல நடத்துவா ராயினர். எ-று.

பூசை செம்மையாற் செய்து என்றது அரசர் சிவார்ச்சனை செய்யவேண்டு மெனத் தாம் விதித்தருளிய விதியை நிலைநிறுத்தற்பொருட்டுத் தாமும் அதனைமுறை ப்படி கைக்கொண்டருளினர் என்பது இதனை,

கல்லாடம்.

" மூலனுன் றணைந்த சிலைநுதற் றிருவினை
யருமறை விதிக்கத் திருமணம் புணர்ந்து
மதிக்குலம் வாய்த்த மன்னவ னுகி
மேதினி புரக்கும் விதியுடை நன்ன
னடுவூர் நகர்செய் தபவர் துடைக்கு

* அச்சாந்திரியத் செய்த தேவியார் பிரதிட்டை நடுவூர் நாயகி என்பர்.

மருட்குறி திறவி யருச்சனை செய்த
தேவர் நாயகன் ''—என மாறுபடாது கூறுவதும் காண்க. (௩௧௨)

…மா லாதிப் புனிதரு முனிவ ரேனோர்
யாவருந் தனையே பூசித் திகபர மடைய நின்ற
மூவருண் மேலா முக்கண் மூர்த்தியே பூசை செய்த
தாவர லிங்க மேன்மைத் தகுதியா ரளக்க வல்லார்.

(இ-ள்.) தாமரைப்பூவில் வாழும் பிரமதேவர் திருமால் முதலாகிய பரிசுத்த முடைய தேவர்களும் முனிவர்களும் மற்ற யாவருந் தம்மையே பூசித்து, இம்மை மறுமைப்பயன்களை யடைய நின்றருளிய திரிமூர்த்திகளுக்கும் மேலாக நின்ற திரிநேத்திரங்களையுடைய சுந்தரேசப்பெருமானே பூசைசெய்தருளிய நிலைபெற்ற இகாபீஷ்டப்பிரதேசுவரருடைய மேன்மைத்தன்மையை யாவர் அளவிடற் பாலர்? (ஒருவருமிலர்.)

"மூவருக்கு மேலாம்" என நிற்றற் பாலது "மூவருள் மேலாம்" என உருபுமாறி நின்றது. (௩௧௩)

மேற்படி - வேறு.

மனித்த ருக்கர சாகித்தெவ் வேந்தர்க்கு மடங்கலாய் மடநல்லார்க்
கினித்த வைங்கணைக் காளையாய் நிலமகட் கிளர்த்துழா யணிமாலா
யனித்த நித்தமோ ராந் திகபரத் தாசைநீத் தகந்தெளிந் தவர்க்கொன்றாய்த்
தனித்த மெய்யறி வானந்த மாம்பரத் தத்துவ மாய்நின்றான்.

(இ-ள்.) (இங்ஙனம் பாண்டியராஜ வேடம்பூண்ட சுந்தரேசர்) மானுடருக்கு அரசராகியும், பகைமன்னர் (ஆகிய யானை) கட்குச் சிங்கமாகியும், இளமைதங்கிய மாதர்கட்கு இன்பந்தரும் பஞ்சபாணங்களையேந்திய மன்மதராகியும், பூமிதேவிக்குப் பூங்கொத்து நிறைந்த துளவமாலையணிந்த திருமாலாகியும், நித்தியம் அநித்தியம் (இவையென முன்னர்) ஆராய்ந்து (அநித்தியமாகிய) இம்மை மறுமைப்பயன்களில் விருப்பமொழிந்து மனத்தூய்மை கொண்டவர்க்கு ஏகமாகிய பதிப்பொருளாகியும், ஒப்பற்ற சச்சிதானந்த சொரூபமாகிய பரத்துவப்பொருளாகியும் நின்றருளினர். எ-று. ()

திருமணப்படலம்
முற்றிற்று.

---

ஆக திருவிருத்தம் - ௭௧௮.

---

ஆறுவது

# வெள்ளியம்பலத்திருக்கூத்தாடியபடலம்.

---

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

உலகிய னிறுத்து வான்வ ரொருபாகு சுடர்வ…ன் றிங்கட்
குலமணி விளக்கை வேட்டுக் கோமுடி கவித்துப் பாராண்
டி…குறு தோற்ற மீதான் முனிவரா ரிருவர் தேற
வலகிலா னந்தக் கூத்துச் செய்தவா றனைய அறிவும்.

(இ-ள்.) உலகியல் நிலைநிறுத்தற்பொருட்டு, ஒப்பில்லாத பரஞ்சுடராகிய சிவபெருமான் (சவுந்தரபாண்டியராகி) வந்து, சந்திரவமிசத்திற்கு ஒரு மாணிக்கத்

தீபம்போன்ற தடாதகைப்பிராட்டியாரைத் திருமணஞ்செய்து சிறந்த கிரீடந்தரித்து, இராஜரீகஞ்செய்து விளங்கிய சரித்திர மிதுவாகும். (இனி அவ்விறைவர்) பதஞ்சலி வியாக்கிரபாதர் என்னும் முனிசிரேஷ்டரிருவருந் தரிசித்துய்ய, குற்றமில்லாத ஆனந்தத் திருக்கூத்தை (வெள்ளியம்பலத்தில்) செய்தருளிய திருவிளையாடலைச் சொல்லத்தொடங்கினும். எ-று. (௪)

புண்ணிய மலர்மென் கொம்பை வேட்டபின் புவனந் தாங்குங்
கண்ணுதன் மூர்த்தி யாய கவுரியன் மணத்தில் வந்த
மண்ணியல் வேந்தர் வானோர் மாதவர் பிறரு முண்ண
நண்ணுதி ரென்னலோடு நண்ணுவார் விரைவி னெய்த.

(இ-ள்.) தரும சொரூபமாகிய மெல்லிய பூங்கொம்புபோன்ற தடாதகைப் பிராட்டியாரைத் திருமணமுடித்தபிறகு உலகத்தை யரசுபுரியும் நெற்றிக்கண்ணை யுடைய சிவபெருமானாகிய சவுந்தரபாண்டியரது திருமணத்திற்குவந்த மண்ணுலகத் தையாளும் மன்னவரும், தேவர்களும், பெரியதவசிகளும், ஏனையோரும் உண்ணக் கூடிவீர்களென்று ஆஞ்ஞாபித்தவளவில், (உண்ண) புகுவோர் சீக்கிரத்தில் வருதற் பொருட்டு. எ-று.

இதுமுத லிரண்டு பாடல்கள் குளகம். (௨)

பொன்னவிர் கமலம் பூத்த புனிதநீ ராடித் தத்த
நன்னெறி நியம முற்றி நண்ணினர் புலிக்கா லோனும்
பன்னக முனியுந தாழ்ந்து பரவியம் பலத்து ளாடு
நின்னரு ளாடல்கண் டுண்ப தடியேங்க ணியம மென்றார்.

(இ-ள்.) விளங்குகின்ற பொற்றாமரை மலர்கள் புஷ்பித்த பரிசுத்தமாகிய தீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்து தங்கள் தங்களுக்குரிய நித்திய கர்மானுஷ்டானங்களை முடித்துவந்து சேர்ந்தார்கள். வியாக்கிரபாதமுனிவரும் பதஞ்சலி முனிவரும் (இறைவனைப்) பணிந்து துதித்து, பொன்னம்பலத்துள் நிருத்தஞ்செய்யுந் தேவரீரது திருநடனத்தைத்தரிசித்துப் புசிப்பது அடியேங்களது நியமமென்று சொன்னார்கள்.

நியமம்-மேற்கொண்டகடன். (௩)

என்னலு மந்தக் கூத்தை யிங்குநாஞ் செய்துந் தில்லைப்
பொன்னக ருலக மெல்லா முருவமாம் புருடற் குள்ள
மின்னதாந் துவாத சாந்த மென்றிறை யருளிச் செய்ய
மன்னவ வேனை யங்கம் யாவென மன்னன் சொல்வான்.

(இ-ள்.) என்றுசொல்லவும், (சிவபெருமான்) அந்நடனத்தை நாமிங்கே செய்கின்றோம். தில்லையென்னும் அழகிய நகரமானது உலகமுழுவதும் வடிவமாகக் கொண்ட விராட்புருஷனுக்கு இருதயத்தானமாகும். இம்மதுராபுரி துவாதசாந்தத் தானமாகும் என்று, சிவபெருமான் திருவாய்மலர்ந்தருள, பாண்டியர்கோலங்கொண்ட இறைவரே! மற்றைய வுறுப்புகளெவையென்று வினவ, சவுந்தரபாண்டியர் சொல்லுகின்றார். எ-று. (௪)

அனைக்குமே லுலகே ழென்று மனைக்குக்கீ ழுலகே ழென்று
முனைக்கலா வுலக மெல்லா முருவமாம் புருடற் கிந்தத்
தனைக்குமே லனந்தர் தெய்வத் தானமுண் டனைத்துங் கூறின்
வனைக்குறு நிலதா னங்கள் வகுத்துரை செய்யக் கேண்மின்.

(இ-ள்.) இடைக்குமேலே யேழுலகங்க ளென்றும் இடைக்குக் கீழே யே ழுலகங்களென்றுஞ் சொல்லுதலால், உலகமெல்லாந் தனதுவடிவமாகிய விராட்புருட னுக்கு இந்தப் பூமியின்பேரில் எண்ணில்லாத தெய்வஸ்தலங்க ளுள்ளன. அவையெ ல்லாவற்றையுங் கூறப்புகின் அளவுபடா. (ஆதலின்) சில ஸ்தலங்களை யெடுத்துச் சொல்லக் கேட்பீர்களாக. எ-று

துவாதசாந்த மென்றது பிரமரந்திரத்திற்குமேல் உன்மனிசத்திக் கதீதமாய் விளங்கும் நிராமயஸ்தானமென்பர். ஈண்டு மதுரைப்பதியைத் துவாதசாந்தமென்றது உலகபுருஷனுக்குத் துவாதசாந்தத்தானமாக விளங்கலின் என்க. (ரு)

திருவளர் ஆரூர் மூலந் திருவானைக் காவே நாபி
மருவளர் பொழில்சூ ழண்ணா மலைமணி பூர நீவி
ரிருவருங் கண்ட மன்ற மிதயமாந் திருக்கா ளத்தி
பொருவருங் கண்ட மாகும் புருவமத் தியமாங் காசி.

(இ-ள்.) (சிவஞானச்) செல்வம் வளருகின்ற திருவாரூர் மூலாதாரத் தான மாம். திருவானைக்கா சுவாதிட்டானத்தானமாம். வாசனை வளருகின்ற சோலைசூழ்ந்த திருவண்ணாமலை மணிபூரகத்தானமாம். நீங்களிருவருந் தரிசித்த பொன்னம்பலம் அநா கத ஸ்தானமாம். அழகிய சீகாளத்தி சமானமில்லாத விசுத்தித்தானமாம். காசிபுருவ மத்தியிலுள்ள ஆக்கினேஸ்தானமாம். எ-று.

திருவானைக்காவே குய்யம் எனவும் பாடாந்தரம். (சு)

பிறைதவழ் கயிலைக் குன்றம் பிரமரந் திரமாம் வேத
மறைதரு துவாத சாந்த மதுரையீ ததிக மென்ன
முறையினா லெண்ணின் முன்னர்த் தோன்றிய முறையா லென்றக்
கறையறு தவத்த ரோடு கவுரியன் கோயில் புக்கான்.

(இ-ள்.) சந்திரன் தவழுந் திருக்கைலாயமலை பிரமரந்திரத் தானமாம். வே தங்கள் முறையிடுகின்ற மதுரை துவாதசாந்தத் தானமாம். இந்த மதுரை யென்னகா ரணத்தாற் சிறந்தது என்றால் (எல்லாவற்றிற்கும்) முற்படத் தோன்றிய காரணத் தால் (சிறந்தது) என்று சவுந்தரபாண்டியர் கூறி, குற்றமற்ற தவத்தையுடைய அவ்விரு முனிவரோடுந் திருக்கோயிலை யடைந்தனர். எ-று. (எ)

தன்னரு ளாதனா னீந்த தன்னையே தேடிப் போந்த
மின்னவிர் கயிலை தானோ விடையுரு மாறி மன்றாய்
மன்னிய தேயோ திங்கண் மண்டல மேயோ வென்னப்
பொன்னவிர் விமானக் கீழ்பால் வெள்ளியம் பொதுவுண் டாக

(இ-ள்.) தனது திருவருளால், தன்னினின்று நீங்கிய சிவபெருமானையே தேடிவந்தடைந்த ஒளிவீசுகின்ற திருக்கைலாய மலையோ? (அல்லது) இடபவாகனமா னது தனது வடிவமாறி (வெள்ளி) அம்பலமாய் நிலைபெற்று நின்றதோ? சந்திரமண் டலந்தானோ? என்று கண்டோர் சொல்லும்படி, பொன்னாற்செய்து விளங்கும் விமா னத்தின் (சமீபமாகக்) கீழைத்திசையில் அழகிய வெள்ளியம்பலம் ஒன்றுண்டாக. (அ)

மின்மயில் பரிதிப் புத்தேள் யாற்கடல் விளங்கி யாங்குப்
பின்பதன் மிசைமா ணிக்கப் பீடிகை தோன்றிற் றன்ன
தன்யார்த முனைமே யாகு மல்லது வேதச் சென்னி
யென்பதா மலைமே யன்றி யாவேனு மிசைக்கற் பாற்றே.

(இ-ள்.) ஒளிவீசுகின்ற சூரியன் திருப்பாற்கடலிற் றோன்றிப் பிரகாசித்தற்போல, பின்னர் அவ்வெள்ளியம்பலத்தின்பேரில், மாணிக்கப் பீடமொன்று தோன்றியது. அப்பீடம் அடியவர்களது இதய தாமரையே யாகும். அல்லது (வேறாக இருந்தால்) வேதத்தின் முடியேயாகும். அவ்வாறு கூறுவதேயன்றி (பிறிது) யாதென்று அறிவுடையோரால் எடுத்துச்சொல்லும் பகுதியுடையது. எ-று. (௯)

அன்னதோர் தவிசி னும்ப ராயிரங் கரத்தா லள்ளித்
துன்னிருள் விழுங்குங் கோடி சூரிய ரொருகா லத்து
மன்னின ருதித்தா லொப்ப மனமொழி பக்கங் கீழ்மேற்
பின்முதல் கடந்த ஞானப் பேரொளி வடிவாய்த் தோன்றி.

(இ-ள்.) அவ்வகைபபட்ட ஒருமாணிக்கபீடத்தின்பேரில், ஆயிரங் கைகளாலள்ளி நெருங்கிய இருளை யுண்ணுங் கோடி சூரியர் ஏககாலத்தில் நிலைபெற்று உதயமானாற்போல, மனமும் வாக்கும் சமீபமுங் கீழும் மேலும் பின்னும் முன்னும் (முதலிய (இவற்றைக்) கடந்த உண்மை ஞானமாகிய பெரிய தேஜோரூபமாய் (சவுந்தரபாண்டியர்) கட்புலனுக்குத் தோன்றி. எ-று.

இதுமுதல் எட்டுப்பாடல்கள் குளகம். (௧௦)

முந்துறு கணங்கண் மொந்தை தண்ணுமை முழக்கஞ் செய்ய
நந்திமா முழவந் தாக்க நாரண னிடக்கை யார்ப்ப
வந்துகந்தருவ நூலின் மரபுளி யிருவர் பாட
வைந்துதுந் துபியுங் கல்லென் றார்கலி முழக்கங் காட்ட.

(இ-ள்.) (தேவர் குழாத்துள்) முற்பட்டு விளங்குஞ் சிவகணங்கள் மொந்தை தண்ணுமை என்னும் வாத்தியங்களை (ஒருபக்கத்தில்) முழக்கவும், திருநந்திதேவர் பெரியமத்தளத்தை (ஒருபக்கத்தில்) தட்டவும், திருமால் இடக்கை யென்னும் வாத்தியத்தை (ஒரு பக்கத்தில்) ஒலிக்கவும், காந்தர்வ நூலின்படி தும்புரு நாரதர் (ஒருபக்கத்தில்) வந்துபாடவும், பஞ்சதுந்துபிகளுங் கல்லென்று (ஒலிக்குறிபபுடன்) கடன் முழக்கத்தை (ஒரு பக்கத்தில்) காட்டவும். எ-று. (௧௧)

மதுமுகத் தலர்ந்த வெண்டா மரைமகள் சுருதி கூட்டச்
சதுமுகத் தொருவன் சாம கீதயாழ் தடவிப் பாட
விதுமுகத் தருகு மொய்க்கு மீனென ஞான வெள்ளிப்
பொதுமுகத் தமரர் தூறும் பூமழை யெங்கும் போர்ப்ப.

(இ-ள்.) தேனசொரியும் முகத்துடன் விகசித்த வெண்டாமரை மலரில் வீற்றிருக்குஞ் சரஸ்வதியம்மை (ஒருபக்கலில்) சுருதிகூட்டவும், நான்கு முகங்களையுடைய பிரமதேவர் வீணை (எடுத்து,கட்டமைந்த நரம்புகளைத்)தடவி (ஒருபக்கலில்) சாமகீதம்பாடவும், சந்திரமண்டலத்தின் அருகில் நெருங்கிய நக்ஷத்திரங்களைப்போல ஞானமயமாகிய வெள்ளியம்பலத்தில் தேவர்கள்சொரியும் புஷ்பமாரி எவ்விடத்தும் (ஒரு பக்கலில்) போர்க்கவும். எ-று. (௧௨)

பொருங்கட னிறத்த செந்தீப் பொங்குளைக் குறளன்மீது
பெருங் கடல் வடவைச் செங்கண் பிதுங்கமேற் றிரிந்து நோக்கி
முருங்கட லெரியிற் சீற முதுகிற வலத்தா ளூன்றிக்
கருங்கடன் முளைத்த வெய்யோன் காட்சியிற் பொலிந்து நின்று.

(இ-ள்.) (கரையுடன்) மோதுகின்ற கடலிற்றோன்றிய வடவாமுகாக்கினி போலச் செவந்தவிழிகள் பிதுங்கவும், மேலே சுழன்றுபார்த்து உலகினை அவ்வடவா

முகாக்கினிபோலக் கோபிக்கவும், பெரிய அக்கடலிற்றோன்றிய செந்நிறம் பொருந்திய அவ்வடவைபோல நிறம் வாய்ந்து விளங்கும் புறமயிரையுடைய முயலகன்மேல் (அவன்) முதுகுநொறுங்க வலது திருவடியை யூன்றி, கரிய கடலிற் றோன்றிய சூரியனது தோற்றம்போல விளங்கிகின்றது. எ-று.

"பொருங்கடல் வடவைச் செங்கண்பிதுங்க, மேல்நிரிந்து நோக்கிமுருக்கு அடல் எரியிற்சீற, பெருங்கடல் செந்தீநிறத்த பொங்கு உளைகுறளன்மீது, முதுகிறவலத்தாளூன்றி" என வசனக்கிரமங்கொள்க.

முருக்கு - முருங்கு என மெலிந்தது. எண்ணும்மைகள் விகாரத்தால் தொக்கின்றன. (கூ)

கொய்புஞ்செங் கமலப் போது குவிந்தென வெடுத்துக் கூத்துச்
செய்யும்புண் டரிகத் தாளுந் திசைகடந் துளவி ளைந்து
கையுந்திண் படையுந் தெய்வ மகளிர்மங் கலநாண் காத்த
மையுண்ட மிடறுஞ் சங்க வார்குழை நுழைந்த காதும்.

(இ-ள்.) கொய்தற்குரிய செந்தாமரைமலரானது குவிந்தாற்போலத்தூக்கி, திருநடனஞ்செய்தருளும் தாமரைமலர்போன்ற திருவடியும், திசைகளைக்கடந்த பத்துத் திருக்கரங்களும் (அத்திருக்கரங்களிற்றாங்கிய) திண்ணிய ஆயுதங்களும், (திருமகள் - கலைமகள் முதலிய) தேவமாதர்களது மங்கலநாண்களைக் காத்தருளிய கருநிறம்பொருந்திய ஸ்ரீகண்டமும், நெடியசங்ககுண்டலமணிந்த திருச்செவியும். எ-று.

தெய்வமகளிர் மங்கல நாண்காத்த மிடறு என்பதை.

கந்தபுராணம் - திருக்குற்றாலப்படலம்.

"செற்றால முயிரனைத்து முண்டிடவே நிமிர்ந்தெழலுஞ் சிந்தை மேற்கொள்
பற்றாலங் கதுநுகர்ந்து நான்முகனே முதலோர்தம் பாவை மார்கள்
பொற்றாலி தனையளித்தோன்" புகழ்போற்றி முகின்மேனிப் புத்தேள் வைகுங்
குற்றால மாவதொரு வளநகராக் குறுமுனிவன் குறுகி னானால் — என்பதினுணர்க. (கச)

செக்கரஞ் சடையுந தேசார் வெண்டிரு நீறுந் தெய்வ
முக்கணு முரகக் கச்சு முள்ளெயி றிமைக்கு மார்பு
மைக்கருங் கயற்க ணங்கை வல்லியி னொதுங்கி நிற்கும்
பக்கமு மவண்மேல் வைத்த பார்வையு நகையுந் தோன்ற.

(இ-ள்.) செவ்விய அழகமைந்தசடையும், ஒளிபொருந்திய வெள்ளிய திருநீறும், தெய்வத்தன்மைபொருந்திய திரிநேத்திரங்களும், சர்ப்பக்கச்சும், முட்போன்ற கூரிய (வராக) தந்தம் விளங்குந் திருமார்பும், கயல்போலும் மையெழுதிய கரிய கண்களையுடைய உமாபிராட்டியார் (காம) வல்லிக்கொடிபோல (ஒருபக்கலில்) ஒதுங்கிநிற்கும் (வாம) பாகமும், அவ்வுமாபிராட்டியார்பேரில் வைத்த திருநோக்கமும், திருப்புன்னகையுந்தோன்றவும். எ-று.

இறைவர் வராக தந்தத்தை யணிந்ததாவது.

இரணியாக்ஷன் என்னும் அசுரனொருவன் உலகத்தைப் பாய்போலச் சுருட்டிச் சமுத்திரத்தில் வீழ்ந்து மறைந்தனன். தேவர்கள் அதுகண்டு பயந்து திருமாலிடஞ் சென்று முறையிட, விண்மூர்த்தி அவர்களை யஞ்சவேண்டாமென்று திடப்படுத்தி, பிருகுமுனிவரால் முன்னொருகாலம் பெற்ற சாபத்தின்படி வராகவடி

தெற்றுக் கடலேழையுங்கலக்கிப் பின்னர் புழுதியாக்கி, இரணியாக்ஷனைக்கண்டு அவனைக் கொம்பினாலே கிழித்துக் கொன்று சுருண்டிருந்த பூமியைக் கொம்பின் நுனியுற்றுங்கி ஆதிசேடனது உச்சியில் விரித்தனர். அதனால் வராகம் மமதையுற்று அஷ்டகுலபர்வதங்களை யிடித்துத்தள்ளியும் பல வுயிர்களையும் வாயிற்பெய்து குதட்டியும், சத்தமேகங்களும் நாகலோகமும் அஷ்டகஜங்களும் அச்சமெய்தி நடுங்க ஆர்ப்பரித்துக் கர்ச்சித்தும், நவநாகங்களும் உச்சிநடுங்கத் தரையை மோந்தும், பூமியைக் குத்தித்தோண்டியும், கட்கடையில் ஊழித்தீயைச் சிந்தியும் உலாவியது. இமையவர் இது கண்டு பெரும்விபத்தாயிற்றே யென்று வேறொன்றுஞ் செய்யமாட்டாதவராய்த் திருக்கைலாயமடைந்து சிவபெருமானுக்கு முறையிட்டுத் தங்களைக் காக்கவேண்டுமெனப் பணிய, சிவபெருமான் வேடுவவுருவேற்று வராகத்தையடைந்து தமது திருக்கரத்திருந்த சூலப்படையால், அதன் நெற்றியிற் குத்தி நிலத்திலழுத்தி ஒரு கொம்பைப் பறித்தனர். அதனால் அகந்தையழிந்த வராகம் ஐயனைத் துதிக்க மற்றோர்கொம்பையும் பறிக்காது விடுத்தனர். அப்பொழுது தேவர்கள் " இன்னுமொருதரம் திருமால்இறுமாப் பெய்தாவண்ணம் பறித்த கொம்பைத் தமதுடலிற் றரிக்கவேண்டும்" என வேண்ட அவ்வாறே மார்பிலணிந்து திருக்கைலை சேர்ந்தனர். திருமால் சிவார்ச்சனை செய்து பாவமொழிந்து, தேவமுனிவர் கேட்க வராகபுராணமோதி வைகுந்தஞ் சேர்ந்தன ரென்பது. இதனை,

கந்தபுராணம.

" கண்டு கண்ணுத லவன்மருப பொன்றினைக் கரத்தாற்
கொண்டு வல்லையிற் பறித்தலு முணாவுமுன் குறுக
விண்டு மற்றதும் பறிப்பணிங் கிவனென வெருவிப்
பண்டு போலநின் றேததலும் போயினன் பரமன்.

அன்று கொண்டதோர் மருபபினைச சின்னமா வணிந்தா
னின்று மங்கவன் மாாபிடைப பிறையென விலங்கும்" எனவும்,

காஞ்சிப்புராணம.

" சுழிக்கும் புனலேழ் கடல்சுவற்றி மலைக ளேழுந் துகள்படத்தீ
விழிக்குங் கடவுட் பன்றியினை விறல்வே டுருக்கொண் டெழுந்தருளி
யழித்தங் கொருவெண் கோடுபறித் தணிந்து மற்றை யிடக்கோடு
பழிச்சுந் துதிகேட் டொழிரங்கி விடுத்த பகவன் றிருவுருவம்" எனவும் வருவனவற்றா னறிக. (கஞ)

கங்கையா றலமபு மோசை கடுக்கைவண் டிரங்கு மோசை
மங்கல முழவி னோசை மந்திர வேத வோசை
செங்கையா டெரியி னோசை திருவடிச சிலம்பி னோசை
யெங்கணு நிரம்பி யன்ப ரிருசெவிக் கமுத மூற்ற.

(இ-ள்.) (சடாடவியிற்சூடிய) கங்காநதியானது ஒலிக்கும் ஒலியும், கொன்றைமாலையில் வண்டுகள் ரீங்காரஞ்செய்யும் ஒலியும், மங்கலம்பொருந்திய மத்தளங்களின் ஒலியும், மந்திரம் வாய்ந்த வேதங்களின் ஒலியும், செவ்விய திருக்கரத்திற் கொழுந்துவிட்டெரியுந் தீயின் ஒலியும், திருவடியிலணிந்த (வேதமாகிய) சிலம்பின் ஒலியும், எவ்விடத்தும் நிரம்பி அடியவர்களது இரண்டு செவிகளுக்கும் (பேரின்பமாகிய) அமிர்தத்தை வார்க்கவும். எ-று. (கசு)

ஆடினு னமல மூர்த்தி யஞ்சலி முகிழ்த்துச் சென்னி
சூடினு ரடியில் வீழ்ந்தார் சுருதியா யிரநா வாரப்
பாடினுர் பரமா னந்தப் பரவையிற் படிநதா ரன்பு
நீடினுர் நிருத்தா னந்தங் காண்பது நியமம் பூண்டார்.

(இ-ள்.) நிர்மலமூர்த்தியாகிய சுந்தரேசப்பெருமான் (இவ்வகைவைபவங்களுடன்) ஆனந்தக் கூத்தாடியருளினர். ஆனந்தத்திருநடனத்தைத் தரிசிப்பதே நியமமாகமேற்கொண்ட (பதஞ்சலிமுனிவர் வியாக்கிரபாதமுனிவர் என்னும்) முனிவர்களிருவரும், (தமது) இருகரங்களையுஞ் சிரமேலேற்றி அஞ்சலியாகக் குவித்தார்கள். திருவடியின்கீழ் (சாஷ்டாங்கமாக) ப்பணிந்தார்கள். எண்ணிறந்த வேதவாக்கியங்களை (தமது) நாவாரப்பாடினுர்கள். எ-று. (கஎ)

முனிவர்கந் திருவர் வானேர் தானவர் மோன யோகர்
புனிதகிம் புருட ராதிப் புலவரு மிறைஞ்சி யன்பின்
கனிதரு மின்பத் தாழ்நதார் திருமணங் காண வநத
மனிதருங் காணப் பெற்ருர் மாதவர் பொருட்டான் மன்றே.

(இ-ள்.) (பதஞ்சலியார் வியாக்கிரபாதரென்னும், இருமுனிவர்கள் நிமித்தத்தினுல், முனிவரும் கந்தர்வரும் தேவரும் அசுரரும் மௌனநிலையடைந்தயோகிகளும் பரிசுத்தம்பொருந்திய கிம்புருஷர் முதலிய (இசைநூலில் வல்ல தெய்வப்) புலவரும் அன்புடன் பணிந்து, சுவைமிகுந்த பேரின்பப பிரவாகத்திலே அழுந்தினுர்கள். திருமணத்தைத் தரிசிக்கவந்த மானுடர்களும் (இத் திருநடனத்தைத்) தரிசிக்கப்பெற்ருர்கள். எ-று. (கஅ)

அனந்தனு முனிவா வேநத னளவிலா னநத மூறி
மனந்தனி னிரமபி மேலும வழிவது போல மார்பம
புனைந்தபுண் ணியவெண ணீறு கரைந்திடப் பொழிகண் ணீறு
நனைந்திரு கரமுங் கூபபி நாதனைப் பாடு கின்ருன்.

(இ-ள்.) ஆதிசேடராகிய முனிவர்களுக்கரசராகிய பதஞ்சலியார் அளவில்லாதபேரின்ப ஊற்றெடுத்து மனத்தில் நிரமபி (அடங்காது) மேலேவழிவதுபோலச்சொரியும் ஆனந்த பாஷ்பம், மார்பிற்றரித்த புண்ணியமாகிய வெள்ளிய திருநீறு கரையநனைக்க, இரண்டுகைகளையுங் குவித்து, சுந்தரேசப்பெருமானை (பின்வருமாறு) துதிசெய்கின்ருர். எ-று.

ஆதிசேடரே பதஞ்சலிமுனிவரென்பது முன்னர் விளக்கியுள்ளது. ஆங்குக் கண்டுகொள்க. (கக)

பராபர முதலே போற்றி பததியில் விளைவாய் போற்றி
சராசர மாகி வேருய் நின்றதற் பரனே, போற்றி
கராசல வுரியாய் போற்றி கனகவம பலத்து ளாடு
நிராமய பரமா னந்த நிருத்தனே போற்றி போற்றி.

(இ-ள்.) எல்லாத்தேவர்கட்கும் முதற்றேவனுய்நின்றபெருமானே! போற்றி (அடியாரது) பத்தியாகிய பயிரின்பயனுய் நிற்பவனே! போற்றி. சரமும் அசரமும் ஆகியும் அவற்றின் வேருகியும் நின்றவனே! போற்றி. யானைத்தோலைப் போர்வையாக உடையவனே! போற்றி. பொன்னம்பலத்தில் நடனஞ்செய்தருளிய (பிறவிப்)பிணியொழிக்கும் பேரின்பத் திருநடனத்தை யுடையவனே! போற்றி போற்றி. எ-று.

கராசலம் - கையையுடைய மலை ; யானை.

போற்றி என்பதற்குக் காக்க எனப பொருள்கொள்க. (௨௦)

ஒன்றாகி யைநதா யையைந் தருவாகி வருவாய் போற்றி
யின்றாகிச் சென்ற நாளா யெதிர்நாளா யெழுவாய் போற்றி
நன்றாகித் தீய தாகி நடுவாகி முடிவாய் மன்று
ணின்றாடும் பரமா னந்த நிருத்தனே போற்றிபோற்றி.

(இ-ள்.) ஏகமூர்த்தமாகியும் பஞ்சமூர்த்தமாகியும் இருபத்தைந்து மூர்த்தமாகியும் (ஆன்மாக்கள்பொருட்டு) வந்தருள்வோய் ! போற்றி. நிகழ்காலமாகியும் இறந்த காலமாகியும் எதிர்காலமாகியும் விளங்குகின்றவனே ! போற்றி. நன்றாகியும் தீயதாகியும் நடுநிலைமையாகியும் (முத்தி) முடிவாகியும் பொன்னம்பலத்துள் நின்று நிருத்தஞ் செய்தருளும் பேரின்ப மயமாகிய திருககூத்துடையவனே போற்றி ! போற்றி..எ-று.

ஒன்று என்றது சகளமும் நிஷ்களமும் சகள நிஷ்களமுங் கடந்துநின்ற சுத்த சிவமாகிய ஏகமூர்த்தம்.

ஐந்து என்றது பரமசிவன் - அநாதத சிவன்-சதாசிவன்-மகேசன்-உருத்திரனாகிய பஞ்சமூர்த்தங்கள்.

ஐயைந்து என்றது சந்திரசேகரர் - உமாமகேசர் - ரிஷபாரூடர் - சபாபதி- கலியாணசுந்தரர் - பிக்ஷாடனர் - காமாரி - அந்தகாரி - திரிபுராரி - ஜலந்தராரி - விதித்துவம்சர் - வீரபத்திரர் - நரசிங்க நிபாதனர் - அர்த்த நாரீசுவரர் - விக்கிராதரர்-கங்காளர் - சண்டேசானுக்கிரகர் - நீலகண்டர் சக்கிராபயப்பிரகாதர் - கஜமுகானுக்கிரகர் - சோமாஸ்கந்தர் - ஏகபாதர் - அனந்த சுகபிருது - தக்ஷிணாமூர்த்தி - லிங்கோற்பவர் என்னும் பஞ்சவிம்சதி மூர்த்தங்கள்.

" இன்றாகிச் சென்ற நாளாய் எதிர்நாளாய் " என்றது, ஆன்மாக்கட்குப் பிராரத்துவம் சஞ்சிதம் ஆகாமியஙகளாய் நின்று அவ்வவ் வினைபபயன்களை யூட்டுதலின் என்க. (௨௧)

அடியரோம் பொருட்டு வெள்ளி யம்பலத் தாடல் போற்றி
பொடியணி தடந்தோள் போற்றி புரிசடை மகுடம் போற்றி
கடியவிழ் மலர்மென் கூந்தற் கயலவிழி பாகம போற்றி
நெடியதற் பரமா னந்த நிருத்தனே போற்றி போற்றி.

(இ-ள்.) அடியேங்கள் காரணமாக வெள்ளியம்பலத்தில் நடித்தருளிய திருநடனம் போற்றி. திருவெண்ணீற்றினை யணிந்த விசாலமாகிய திருத்தோள்கள் போற்றி. பொற்புரிபோன்ற சடாமகுடம் போற்றி. மணத்துடன் விகசித்த மலரணிந்த மெல்லிய அளகத்தையுடைய அஙகயற்கண்ணம்மையார் வாழும் வாமபாகம் போற்றி. என்றும் அழியாத தற்பரமானந்த மயமாகிய திருநடனத்தை யுடையவனே ! போற்றி போற்றி. எ-று. (௨௨)

என்றுநின் றேத்தி னன்பின் னிருவரை நோக்கி வெள்ளி
மன்றுணின் றாடாநின்ற மறைமுதல கருணை கூர்ந்து
நன்றுநீர் வேட்ட தென்னென் றருள்செய நாதன் பாதந்
துன்றுமெய் யன்பிற் றாழ்ந்து தொழுதுநின் றிதனைச் சொல்வார்.

(இ-ள்.) என்றுகூறி, (அன்புருவாக) நின்று பதஞ்சலி முனிவர் துதிசெய்தனர். வெள்ளியம்பலத்திலிருந்து திருநடனஞ் செய்தருளும் வேதமுதல்வராகிய சவுந்தரபாண்டியர், பிறகு (பதஞ்சலி முனிவர் வியாக்கிரபாத முனிவர் என்னும்) இருவ

யையுங் கிருபைமீக்கொண்டு நீர் மிகவும் விரும்பியது யாதென்று திருவாய்மலர்ந்தருள, (அவ்விரு முனிவரும்) அப்பெருமானது திருவடியில் நிறைந்த அன்புடன் வணங்கித் துதிசெய்து இதனைச் சொல்லத்தொடங்கினர். எ-று. (௨௩)

எந்தையித் திருக்கூத் தென்று மிந்நிலை நின்றி யார்க்கும்
பந்தவெம் பாச நீங்கப் பரிந்தருள் செய்தி யென்ன
செந்தமிழ்க் கன்னி நாடு செய்தமா தவப்பே றெய்தத்
தந்தன மென்றான் வேதந் தலைதடு மாற நின்றான்.

(இ-ள்.) எமது தந்தையாகிய சுந்தரபாண்டியரோ! எக்காலமும் இவ்வானந்தத் தாண்டவத்துடன் இவ்வெள்ளியம்பலத்தில் வீற்றிருந்து, யாவருக்கும் பந்தமாகிய கொடிய பாசத்தொடர்பு நீங்கத் திருவுளமிரங்கி அருள்செய்யவேண்டுமென்று குறையிரப்ப, வேதங்கள் தட்டழிந்து மயக்கமெய்த நின்ற சுந்தரேசப்பெருமான் செந்தமிழ்க்கு வாசத்தானமாகிய பாண்டிநாடு செய்த பெருந்தவப்பயன் கைகூட, தந்தருளினோமென்று (அவ்வாறே) அனுக்கிரகஞ் செய்தனர். எ-று.

செந்தமிழ்க் கன்னிநாடு என்பது பாண்டிநாடு. இதிற் செந்தமிழ் நாடென்றது "சந்தனப் பொதியச் செந்தமிழ் முனியுஞ் - சவுந்தர பாண்டிய னெனுந்தமிழ் நாடனுஞ்-சங்கப் புலவருந் தழைத்தினி திருக்கும்-மங்கலப் பாண்டி வளநாடென்ப" என்னுஞ் சூத்திரத்தானறியற் பாலது. கன்னிநாடு என்றது தடாதகைப்பிராட்டியார் தமது கன்னிப்பருவத்தில் அரசுசெய்த காரணம்பற்றி வழங்கியது இதனை.

"வளைசெய் பூண்முலைத் தடாதகை மடவரற் பிராட்டி
விளைசெய் தார்முடி வேய்ந்துதண் குடைமனு வேந்தன்
களைசெய் நூல்வழி கோல்செலக் கன்னியாம் பருவத்
தரசு செய்தலாற் கன்னிநா டாயதந் நாடு" என்னும் இந்நூற் செய்யுளானறியற்பாலது. (௨௪)

அராமுனி யீது வேண்டு மாதியெம் பெருமவிந்த
நிராமய பரமா னந்த நிருத்தநேர் கண்டோ ரெல்லாந்
தராதல மிசைவந் தெய்தாத் தனிகதி பெறுதல் வேண்டும்
பராபர வென்று தாழ்ந்தான் பகவனு மதற்கு நேர்ந்தான்.

(இ-ள்.) பதஞ்சலிமுனிவர் (பின்வரும்) இதனை வேண்டுகின்றார். ஆதிமூர்த்தியாகிய எம்பெருமானே! பராபரனே! இந்த நிராமய பரமானந்த தாண்டவத்தை நேரிற்றரிசித்தவர் எல்லோரும் பூமியின்பேரில் மீண்டும் பிறவாத ஒப்பற்ற சிவகதியைப் பெறுதல்வேண்டும் என்று வரங்கேட்டு நமஸ்கரித்தனர். சிவபெருமானும் அதற்கு இசைந்தருளினர். எ-று.

நிராமயம்-நோயின்மை. நோய் என்றதை ஈண்டுப் பிறவியெனக் கொள்க. பகவன் என்பது அறுகுணச் செல்வனென்று பொருள் இவ்வாறு குணங்களும் முன் விளக்கப்பட்டுள்ளன. (௨௫)

ஆர்த்தனர் கணத்தோர் கைகோத் தாடினா ரலர்பூ மாரி
தூர்த்தனர் விண்ணோர் கண்ணீர் துளும்பினர் முனிவ ராகம்
போர்த்தனர் புளக மண்மிற் புதைந்தனர் விழுந்து வார்பேறற்
பார்த்தனர் புல்லிக் கொண்டார் பரவியவ் விருவர் தம்மை.

(இ-ள்.) கணநாதர்கள் ஆரவாரித்துக் கைகோத்து (குரவைக்கூத்து) ஆடினார்கள். தேவர்கள் மலர்ந்த புஷ்பமாரியைச் சொரிந்தார்கள். முனிவர் (ஆனந்த

மேனிட்டால்) கண்ணீர் துளித்து உடலிற்புளகம்போர்த்து அன்பு வெள்ளத்தில் மூழ்கி அவ்விரு பெருமுனிவரையும் பணிந்து (கண்களால்) விழுங்குவார்போலப் பார்த்துத் (தனித்தனி) தழுவிக்கொண்டார்கள். எ-று.

ஆர்த்தனர் - துளும்பினர் - போர்த்தனர் - புதைந்தனர் - பார்த்தனர் - என்னும் வினைமுற்றுக்கள் வினையெச்சப்பொருளில் நின்றன. (௨௬)

மேற்படி-வேறு.

அனித்த மாகிய பூதமைம் பொறிபுல னாதியா றாறுகி
னித்த மாயையோ டிருவினைத் தொடக்கினு மிருளினும் வேறாகித்
தனித்த யோகிக ளகநிறைந் தாடிய தனிப்பெருந் திருக்கூத்தைக்
குனித்த வண்ணமாக் கண்டவர்க் கிகபரங் கொடுத்தவ ணுறைகின்றான்.

(இ-ள்.) அழியும் இயற்கையுடைய ஐம்பூதங்களும் ஐம்பொறிகளும் ஐம்புலன்களுமுதலிய முப்பத்தாறு தத்துவங்களாய், இனிப்பிக்கும் மாயையுடன் இருவினைத் தொடக்கினின்றும் ஆணவமலத்தினின்றும் நீங்கி, ஒப்பில்லாத யோகவான்களது உள்ளத்தில் நிறைந்தாடியருளிய ஒப்பற்ற பெரிய திருநடனத்தை, நடித்தவிதமாகத் தரிசித்தவருக்கு இகபரசுகங்களை அனுக்கிரகித்து அவ்வெள்ளியம்பலத்தில் எழுந்தருளியிருக்கின்றார். எ-று.

பூதம் ஐந்து—பிருதிவி - அப்பு - தேயு - வாயு - ஆகாயம். ஞானேந்திரியம் ஐந்து—மெய் - வாய் - கண் - மூக்கு - செவி. கன்மேந்திரியம் ஐந்து—வாக்கு - பாதம் - பாணி - பாயுரு-உபத்தம். அந்தக்கரணம் நான்கு—மனம் - புத்தி - சித்தம் - அகங்காரம்.

பூதங்களைந்தும், ஞானேந்திரியமைந்தும், கன்மேந்திரியமைந்தும், அந்தக்கரண நான்குங் கூடிய இருபத்துநான்கும் ஆன்மதத்துவமாம். இனி இவ்வான்ம தத்துவம் இருபத்து நான்குடன், வித்தியா தத்துவம் ஏழும், சிவதத்துவம் ஐந்துங் கூடத் தத்துவம் முப்பத்தாறாகலின் "ஆறாறுகி" என்றார்.

வித்தியாதத்துவம் ஏழு—காலம் - நியதி - கலை - வித்தை-ராகம்-புருடன் - மாயையெனவும், சிவதத்துவம் ஐந்து—சுத்தவித்தை - ஈசுரம் - சாதாக்கியம் - சத்தி - சிவமெனவுங் கொள்க. (௨௭)

குனிவி லாதிரைத் தினந்தொடுத் தெதிர்வரு கொடுவிலா திரையெல்லை
புனித வாடக முளரிதோய்ந் தத்தனிப் பொதுநடந் தரிசித்தங்
கினித மர்ந்துநூற் றெண்மடங் கைந்தெழுத் தெண்ணியிந் நிலைநிற்குங்
கனியு மன்பின ரெண்ணியாங் கெய்துவர் கருதிய வரமெல்லாம்.

(இ-ள்.) மார்கழிமாதம் திருவாதிரை நட்சத்திரந் தொடங்கி மேல்வரும் மார்கழிமாதம் திருவாதிரைநட்சத்திரம் வரையில், பரிசுத்தமாகிய பொற்றாமரைத்தீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்து அவ்வொப்பில்லாத வெள்ளியம்பலத்தில்(செய்தருளுந்) திருநடனத்தைத் தரிசித்து அச்சந்நிதியிலினிதாகவிருந்து ஸ்ரீ பஞ்சாக்ஷரத்தை நூற்றெட்டுருச் சபித்து, இந்தக் கிரமத்தில் வழுவாமல் நிற்கும் முதிர்ந்த அன்பினையுடைய அடியார்கள் (தாம்) எண்ணியவுரத்தையெல்லாம் (ஒருசேர) அடைவார்கள். எ-று.

குனிவில், கொடுவில்,—என்பன வளைந்தவில் எனப் பொருட்படுவன. வில் என்றது தனுர்மாதமாதலின் மார்கழி யென்றும். (௨௮)

வெள்ளியம்பலத் திருக்கூத்தாடியபடலம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம் - அ௨௫.

உ

சிவமயம்.

## எழாவது

# குண்டோதரனுக்கு அன்னமிட்டபடலம்.

---

கலிநிலைத்துறை.

பன்ன கேசனு மடுபுலிப் பாதனும் பணிய
மின்னு வார்சடை மன்னவன் வெள்ளிமன் றுடல்
சொன்ன வாறிது பசித்தழல் சுடவொரு பூத
மன்ன மாமலை தொலைத்தவா றெடுத்தினி யறைவாம்.

(இ-ள்.) பதஞ்சலிமுனிவரும் வியாக்கிரபாதமுனிவரும் வணங்கும்படி, பிரகாசிக்கின்ற நெடிய சடைமுடியையுடைய சவுந்தரபாண்டியர் வெள்ளியம்பலத் திருக்கூத்தாடிய திருவிளையாடலைச் சொன்ன சரித்திரம் இதுவாகும். பசியாகிய நெருப்பு சுடுதலால் (குண்டோதரனென்னும்) ஒரு பூதமானது பெரிய மலையளவாகிய அன்னத்தை (உண்டு) ஒழித்த திருவிளையாடலை யினி யெடுத்துக் கூறுவாம். எ-று.

பன்னகேசன் என்பதைப் பன்னக ஈசன் என்றாவது பன்னகம் கேசன் என்றாவது சொல்வகை செய்க. அடுபுலி என்றது கொல்லும் புலி எனப் பொருடரும். இது சாதிப்பொதுமைபற்றி வந்த அடை. (க)

கன்னி யர்க்கர சாயினை நறுமணம் புகுந்த
மின்னி யற்சடை மாதவர் வேதியர் மற்றை
யெந்நி லத்துள மன்னவர் யாவர்க்கு முறையே
பொன்னி யற்கலத் தறுசுவைப் போனக மருத்தா.

(இ-ள்.) பெண்கள் நாயகியாராகிய தடாதகைப்பிராட்டியாரது திருமணத்திற்கு வந்த மின்னல்போலும் சடையையுடைய சிறந்த தவசிகள்-அந்தணர்-மற்றையோர்-எல்லாத்தேசத்தரசர்கள் (முதலிய) யாவருக்கும்அவரவர்க்குத்தக்கபடி பொன்னாற்செய்த பாத்திரங்களில் அறுசுவையோடு கூடிய உணவுகளை யுண்பித்து. எ-று.

இதுமுதல் இரண்டு பாடல்கள் குளகம். (உ)

பூசு கின்றவு முடுப்பவும் பூண்பவும் பழுக்காய்
வாச மெல்லிலை யேனவு மம்முறை வழங்காத்
தேச மன்னவ ரேனையோர் செல்லுநர்ச் செலுத்தி
யீச னன்புறு கற்பினா ளிருக்குமவ் வேலை.

(இ-ள்) பூசத்தக்க கலவைகளும், உடுக்கத்தக்க ஆடைகளும், பூணத்தக்க பணிகளும், தாம்பூலமும் பிறவும் அம்முறைப்படியே வழங்கி, பலதேச மன்னவர்களும் பிறருமாகிய செல்லத்தக்கவர்களைச் செல்ல விடையளித்து, இறைவரிடத்தில் அன்புபொருந்திய தடாதகைப்பிராட்டியார் வீற்றிருக்கு மச்சமயத்தில். எ-று.

பழுக்காய்-பாக்கு. வாசம்மெல் இலை-வாசனையுள்ள மெல்லிய வெற்றிலை.

மடைவல் லார்தொழிற் புலவர்வந் தடியிணை வணங்கி
யடிய ரேமட்ட போனக மாயிரத் தொன்று



குண்டோதரனுக்கு அன்னமிட்டபடலம்.

னிடைய தாயினுந் தொலைந்தில தியாங்கண்மேற் செய்யக்
கடவ தேதெனப் பிராட்டிதன் கணவர்முன் குறுகா.

(இ-ள்.) வண்மைபொருந்திய மடைத்தொழிலிற் கைதேர்ந்தவர்கள் வந்து (பிராட்டியாரது) உபயபாதங்களைப் பணிந்து அடியேங்கள் சமைத்த அன்னம் (முதலாயின) ஆயிரத்தி லொருகூறேனும் செலவழிந்ததில்லை. (ஆதலின்) யாங்க ளினிச் செய்யக்கடவதியாது? என்று விண்ணப்பிக்க, தடாதகைப்பிராட்டியார் தனது நாயகராகிய சவுந்தரபாண்டியர்முன் அடைந்து. எ-று. (௪)

பணிந்தொ துங்கிநின் றடிகண்முப் பத்துமுக் கோடி
கணங்க டம்மொடு மிங்கெழுந் தருள்வது கருதி
யிணங்கு மின்சுவைப் போனக மெல்லையின் றாக்கி
யுணங்கு [illegible]டெஞ்சிய தெனைத்தென வுரைக்கின்.

(இ-ள்.) வணங்கி ஒருபுறமாக நின்று, தேவரீர் முப்பத்துமுக்கோடிதேவர் முதலிய சிவகணங்கள் முதலானவருடன், இங்கெழுந்தருள்வதை நினைத்து இன் சுவை பொருந்திய உணவு அளவில்லாமற் சமைத்துப்புசித்து மிகுந்தது உலர்கின்றது எவ்வளவெனக் கூறப்புகின். எ-று. (௫)

இமையக் குன்றமு மடைகலா யிதன்புறங் கிடந்த
சிமையக் குன்றுக ளீட்டமுஞ் சேர்ந்தென நிமிரச்
சமையக் கொட்டிய வாலரிப் புழுக்கலுஞ் சாதக்
கமையக் கொட்டிய கறிகளின் வருக்கமு மனைத்தே.

(இ-ள்.) இமையமலையும், சமீபித்து இதன்புறத்துள்ள சிறு குன்றுகளின் தொகுதியும் சேர்ந்தாற்போல, உயர்வுதோன்றச் சமைத்துக் கொட்டிய வெள்ளொளி பொருந்திய அன்னமும், அவ்வன்னத்துக்குத் தகுதியாகக்கொட்டியுள்ள கறிகளின் வகையும் அவ்வளவிருக்கின்றன. எ-று.

இமயக்குன்றுபோல அன்னமும் ஏனையகுன்றுகள்போலக் கறிவகைகளும் என நிரனிறையாகக் கொள்க. (௬)

என்ற போதிறை யெம்பிரான் றேவியா ரிடத்தி
லொன்று மன்பினு லொருவிளை யாடலை நினைத்தோ
தன்ற னிக்குடைப் பாரிடத் தலைவன தாற்ற
லன்றி யாவரு மறிந்திடக் காட்டவோ வறியேம்.

(இ-ள்.) என்று தடாதகைப்பிராட்டியார் கூறியபொழுது சவுந்தரபாண்டியராகிய எம்பெருமான் பிராட்டியாரிடத்திற் பொருந்திய அன்பினால், ஒரு திருவிளையாடல்செய்யக்கருதியோ (அல்லது) தனது ஒப்பற்றகுடையைத்தாங்கும் (குண்டோதரனென்னும்) பூதநாயகனது வல்லபத்தை அப்பொழுது எல்லோரும் அறியும்படி காட்டக்கருதியோ அறியோம். எ-று. (௭)

சிறிது வாணகை செய்துமூ வேந்தரிற் சிறந்த
மறுவின் மீனவ னரும்பெறன் மகளெனக் கரிதிற்
பெறுவ தேதுவான் றருவுநின் பணிசெயப் பெற்றங்
குறைவ தேற்பிறர் திருவெலா முன்னதே யன்றே.

(இ-ள்.) ஒள்ளிய புன்னகைபுரிந்து மூன்று மன்னவர்களிலுஞ் சிறந்த குற்றமில்லாத (மலயத்துவச) பாண்டியனது பெறுதற்கரிய புத்திரியாகிய உனக்கு அரிதிற் பெறக்கூடியது யாது? (எல்லாம் சுலபமே) கற்பகவிருக்ஷமும் உன்கட்டளையைச்

செய்யப்பெற்று இங்குவசிக்குமாகில் எனையோரது செல்வமுழுவதும் உன்னதேயாகு மல்லவோ. எ-று. (அ)

அளவி லாதநின் செல்வத்தின் பெருக்கையா மறிய
விளைவு செய்தனை போலுநின் விருந்துணப் பசியாற்
களைய டைந்தவ ராகிநங் கணத்தினுட் காணேந்
தளவ மூரலா யாஞ்செயத் தக்கதே தென்றான்.

(இ-ள்.) முல்லையரும்புபோன்ற தந்தபந்தியையுடையாளே! கணக்கில்லாத உன் செல்வமிகுதியை நாமறியும்படி யெடுத்துப் பிரஸ்தாபித்தனைபோலும். உனது விருந்தைப் புசிக்கும்படி பசியினாற் களையடைந்திருப்பவர்களாக, நமது கணத்தவர்களில் ஒருவரையுங் காணேம், நாம் இதற்குச் செய்யத்தக்கது ஏது? என்று கூறினர்.

அடுக்க நின்றகுண் டோதர னகட்டிடை வடவை
மடுக்க வுன்னினா னதுவந்து வயிற்றெரி பசியாய்த்
தொடுக்க வாலமுண் டாங்குடல் சோர்ந்துவேர்த் தாவி
யொடுக்க முற்றைய பசியினா லுயங்கினே னென்றான்.

(இ-ள்.) சவுந்தரபாண்டியர், சமீபமாக நின்ற குண்டோதரனது வயிற்றில் வடவாமுகாக்கினியைப் பிரவேசிக்கும்படி திருவுளஞ்செய்தருளினார்; அவ்வக்கினி வயிற்றில் வந்து கொடும்பசியாகத் துன்புறுத்த, விஷமுண்டவன்போல உடல் பதைத்து வேர்த்து உயிர் ஒடுங்கி, ஐயனே! பசியால் வருந்தினேன் என்றான். எ-று. (கo)

குடையெ டுக்குமிக் குறியதாட் குறட்கொரு பிடிசோ
றிடுமி னப்புறஞ் சோறுமா லெனத்தொழு தெல்லா
முடைய நாயகி போயினாள் குறியனு முடனே
நடைத ளர்ந்துகண் புகைந்துவாய் புலர்ந்திட நடந்தான்.

(இ-ள்.) நமது குடையைத் தாங்கும் இக்குறுங்காலையுடைய குண்டோதரனுக்கு ஒரு பிடிசோறு இடுங்கள் அப்புறஞ் சொல்லுகின்றோம் எனத் திருவாய்மலர்ந்தருள, எல்லாப்பாக்கியங்களையுமுடைய பிராட்டியார் பணிந்து (அந்தப்புறஞ்) சென்றனர். குறிய வடிவினையுடைய குண்டோதரனும் நடை தளரவும் கண்கள் (அக்கினியைப்போல) புகையவும் வாய் உலரவும் பின்னே நடந்துபோயினான். எ-று. (கக)

படைக்க ணேவல ரிறைமகள் பணியினாற் பசிநோய்
தொடுத்த வன்றனைக் கொண்டுபோய்ச் சொன்றிமுன் விடுத்தா
ரடுத்தி ருந்தமை கண்டன ரன்னமா மலையை
யெடுத்த யின்றது மடிசிலங் கிருந்ததுங் காணார்.

(இ-ள்.) அன்னம் படைத்தலாகிய தொழிலை மேற்கொண்ட ஏவலாளர் அங்கயற்கண்ணம்மையாகிய தடாதகைப்பிராட்டியாரது கட்டளையினால், பசிநோயால் வருந்துகின்ற குண்டோதரனைக்கொண்டுபோய், (மலைபோலுள்ள) சாதத்தின்முன் விடுத்தார்கள். (அவன் அதனை) அடுத்திருந்ததையே பார்த்தார்கள். (அல்லாமல்) பெரிய அன்னமலையை வாரிப் புசித்ததும் அவ்விடத்தில் அவ்வன்னமலை யிருந்ததுங் காணாதவராயினர். எ-று.

படைக்கணேவலர் என்பதை, படை கண் ஏவலர் எனச் சொல்வகைசெய்து வாட்படைபோலுங் கண்களையுடைய தொழிலாளரெனக் கூறினும் பொருந்தும்.

சிலம்பு நூபுரச் சீறடிச் சேடியர் சில்லோ
ரலம்பு வால்வளைக் கைநெரித் ததிசய மடைந்தார்
புலம்பு மேகலை யார்சிலர் பொருக்கென வெருண்டார்
கலம்பெய் பூண்முலை யார்சிலர் கண்புதைத் திருந்தார்.

(இ-ள்.) ஒலிக்கின்ற பாதசரமணிந்த சிறிய அடியையுடைய பணிப்பெண்களிற் சிலர் சப்திக்கின்ற வெள்ளிய வளையல் பூண்ட (தமது) கைகளை நெரித்து ஆச்சரியப்பட்டார்கள். சத்திக்கின்ற மேகலாபரணமணிந்த மங்கையர் சிலர் விரைந்து மயங்கினார்கள். ஆபரணம் பூண்ட குயங்களையுடைய பெண்கள் சிலர் கண்களைப் புதைத்து (அப்பாற்பட்டுப்) போனார்கள். எ-று.

கலம் பூண்-என்பன ஒருபொருட் பன்மொழி. (௪௩)

முரவை போகிய முரிவில்வான் முரல்பால் வறைபல்
கருனை தீம்பய றடுதுவை பலவகைக் கறிகள்
விரவு தேம்படு பாறயி ரிழுதுதேன் வெள்ளம்
வரைவி லாதன மிடாவொடு வாரிவாய் மடுத்தான்.

(இ-ள்.) தவிடு ஒழிந்த (முனை) முரிதலில்லாத வெள்ளிய (அரிசியாலாகிய) அன்னத்தையும், திரட்டுப்பாலையும், பொரிக்கறியையும், இனிய பயற்றோடு கலந்து சமைத்த புளிங்கறியையும், (இன்னும்) பலவகைக் கறிகளையும், இனிமைகலந்த பாலுந் தயிரும் வெண்ணெயுந் தேனுமாகிய வெள்ளத்தையும் அளவில்லாதன (ஆகப் பிறபண்டங்களையும்) மிடாக்களோடு வாரிவாரி வாயில் விடுத்தான். எ-று. (௪௪)

பல்ப ழக்குவை வேற்றுருப் பண்ணியங் கன்னன்
மெல்சு வைத்தண்டு தெங்கிவை யன்றியும் வேவா
வல்சி காய்களின் வருக்கமு நுகர்ந்துமா ருமை
லெல்லை தீர்நவ பண்டமு மெடுத்துவாய் மடுத்தான்.

(இ-ள்.) பலவகைப்பட்ட பழக்குவியல்களையும், வெவ்வேறு உருவமாகச் செய்த பலகாரங்களையும், சருக்கரையையும், மெல்லத்தக்க இனியகரும்பையும், தேங்காயையும் (புசித்து) இவையல்லாமலும் சமையற்றொழில் முடியாத சோற்றையும், காய்களின் றொகுதியையும் புசித்து, (பசி) தணியாமல் அளவில்லாத நவதானியங்களையும் வாரி யெடுத்து வாயில் விடுத்தான். எ-று. (௪௫)

பாரித் துள்ளவிப் பண்டமும் பருஉக்குறுங் கையால்
வாரித் தன்பெரு வயிற்றிடை வைப்பவுந் துடுவை
பூரித் தாகுதி பண்ணிய தழலெனப் பொங்கிக்
கோரித் தொன்பது வாயிலும் பசித்தழல் கொளுத்த.

(இ-ள்.) நிறைந்துள்ள இந்நவதானியங்களையும் பருத்த குறுகிய கைகளால் வாரித் தனது பெரியவயிற்றில்விடவும், சுருக்குசுருவங்களால் நெய் நிறைத்து ஆகுதி செய்த யாகாக்கினிபோல பசியாகிய அக்கினி சுவாலித்து அதிகரிக்கப்பட்டு நவத்துவாரங்களிலுங் கொளுத்தாநிற்க. எ-று.

இதுமுதல் இரண்டுபாடல்கள் குளகம். (௪௬)

அலங்க லோதிகண் டதிசய மடைந்துதன் னன்பி
னலங்கொ ளுநயகன் முன்புபோய் நாணமுட் கிடப்ப
விலங்கு பூங்குழல் சுவன்மிசை யிறக்கியிட் டொல்கி
நிலங்கி ளைத்துநின் றுணிலை கண்டன னிருபன்.

(இ-ள்.) மாலையணிந்த கூந்தலையுடைய தடாதகைப்பிராட்டியார் (இதனை) பார்த்து (எப்பொழுதுங் கண்டறியாத) ஆச்சரியமுற்று, தாம் கொண்டருளிய அன்பால், தமது நாயகர்முன் சென்று நாணம் தமது திருவுள்ளத்திற் பொதிந்திருக்கவும், விளங்குகின்ற மலரை யணிந்த அளகபாரமானது பிடரியின்மேற்சரிந்து கிடக்கத்

துவண்டு (தமது பெருவிரலால்) நிலத்தைக் கிளைத்துநின்றனர். சவுந்தரபாண்டியர் (அந்த) நிலையைக் கண்டனர். எ-று. (௧எ)

அஞ்சி லோதியை வினவுவா னறிகலான் போலக்
குஞ்சி யாரழ லன்னவக் குடவயிற் றவனுண்
டெஞ்சி யுள்ளவேற் பூதங்க ளின்னமும் விடுத்துன்
னெஞ்சு வப்பவே யருத்துது மென்னலு நிமலே.

(இ-ள்.) அழகிய வட்டத் தகட்டணியை யணிந்த தடாதகைப்பிராட்டியாரை (தாமொன்றும்) அறியார்போலவினவுகின்ற சவுந்தரபாண்டியர் நிறைந்த நெருப்புப்போலும் (செந்நிறமுற்று) விளங்குஞ் சிகையையுடைய அந்தக் குண்டோதரன் உண்டு மிகுந்தபொருள் இருப்பனவாயின், இன்னமும் (நமது குற்றேவல் செய்யும்) பூதங்களையனுப்பி உனதுமனம் மகிழ்வெய்த உண்பிக்கின்றோம் என்று திருவாய் மலர்ந்தருளவும், தடாதகைப்பிராட்டியார். எ-று. (௧அ)

ஐய வின்னுமிக் குறட்பசி யடங்கிடா வேறு
வெய்ய பாரிட வீரரை விடுத்தியே லெடுத்து
வையம் யாவையும் வயிற்றிடை வைப்பரோ யதனாற்
செய்ய காலருத் திரப்பெயர் தேற்றமா முனக்கே.

(இ-ள்.) ஐயனே; இன்னும் இக்குண்டோதரனுடைய (சும்) பசி யடங்கவில்லை - இன்னும் வேறு பூதகணவீரர்களை விடுப்பீராயின், உலகமுழுவதையும் வாரியெடுத்துத் தமதுவயிற்றில்வைப்பார்கள். (இதனால்)செந்நிறம்பொருந்திய காலருத்திரனென்று கூறுந்திருநாமம் நிச்சயமாகும். எ-று. (௧௯)

சங்க வார்குழைக் குறண்மகன் றன்செய லுனே
யிங்கு வந்துரை செய்திட வறிதியென் றிறைமுன்
மங்கை நாயகி குமுதவாய் மலர்பொழு தெயிற்றுத்
திங்கள் வாய்முழை யான்பசித் தீசுட வந்தான்.

(இ-ள்.) சங்காலாகிய நெடிய குண்டலமணிந்த குண்டோதரன் தனது (தீப்பசியின்) செயலை அவனே யிங்குவந்து முறையிட அறிவீர் என்று தமது இறைவருக்குமுன், மங்கையர்க்குநாயகியாராகிய பிராட்டியார் தமது குமுதம்போன்ற திருவாயாற் கூறுங்காலத்தில், (வக்கிர) தந்தமாகிய (பிறைச்) சந்திரனையும் வாயாகிய (மலைக்) குகையையும் உடைய (அக்குண்டோதரன்) பசித்தீயானது தன்னைச்சுடுதலால் மெலிந்துவந்தனன். எ-று. (௨௦)

நட்ட மாடிய சுந்தர நங்கையெம் பிராட்டி
யட்ட போனகம் பனிவரை யனையவாய்க் கிடந்த
தொட்டு வாய்மடுத் திடவுமென் சுடுபசி தணியா
திட்டு ணாதவர் வயிறுபோற் காந்துவ தென்றான்.

(இ-ள்.) (பதஞ்சலி வியாக்கிரபாத முனிவர்பொருட்டு) திருநடனஞ்செய்தருளிய சுந்தரேசப்பெருமானே! பெண்களுட் சிறந்தவராகிய எமது பிராட்டியார் சமைப்பித்தருளிய அன்னவகைகள் இமாசலம்போல்வனவாகிக் கிடந்தன. (அவற்றையெல்லாம்) எடுத்துப் புசிக்கவும் என்னைச்சுட்டுவருத்தும் பசிப்பிணி தணியாமல், பிறருக்குக் கொடுத்துத் தாமும் புசியாது சேமித்தவர்கள் (அன்னை யிழந்தபொழுது) வயிறு (எரிவது) போல என்வயிறு எரியாநின்றது, என்று முறையிட்டான். எ-று.



அன்னக்குழியும் வைகையுமழைத்தபிட்சி

ஐயர் மூப்புரத் திட்டதீக் கடும்பசி யுருவாய்ப்
பொய்ய னேன்வயிற் றிடைக்குடி புகுந்ததோ வென்னுங்
கையெ றிந்திடு மண்டங்கள் வெடிபடக் கதறு
மைய கோவெனு முயிர்த்திடு மாவிசோர்ந் தயருமே

(இ-ள்.) வஞ்சனையாளரது திரிபுரத்தில் ஊட்டியதீயானது கொடியபசியின் வடிவாய்ப் பொய்ம்மையேனது வயிற்றிற் குடிபுகுந்ததோ என்று கதறுவான்; தனது கையை (ஒன்றோடொன்று) எடுத்துத் தாக்குவான்; (பல்லாயிரகோடி) அண்டங்கள் (முற்றும்) பிளவுறும்படி வாய்திறந்து அலறுவான்; ஐயோ என்று அழுவான்; பெருமூச்செறிவான்; உயிர்தளர்ந்து சோருவான. எ-று. (௨௨)

குண்டோதரனுக்கு அன்னமிட்டபடலம் முற்றிற்று.

ஆ-திருவிருத்தம் - அ௪அ.

---

எட்டாவது.

# அன்னக்குழியும் வைகையுமழைத்தபடலம்.

கலிநிலைத்துறை.

வேதநாயகன் பாரிட வேந்தனுக் கமையா
வோத னாதிக ளருத்திய தன்மையி துவையும
போத ராமையா லமைவுறப் போனகக் குழிதந்
தோர்ந மாநதி யருத்திய செய்தியு முரைப்பாம.

(இ-ள்.) வேதங்களுக் கிறைவராகிய சுந்தரேசப்பெருமான் பூதராஜனாகிய குண்டோதரனுக்கு (வயிறு) நிரம்பாத அன்னமுதலியவற்றை (தம்மனைவியாரால்) உண்பித்த* திருவிளையாடல் இது. அவ்வன்ன முதலியவையும் போதாமையால் (அவன் வயிறு) நிரம்ப அன்னக்குழி தந்தருளி, (அவன்) பசியைத்தணித்து (அவன் தாகந் தணியும்படி) வெள்ளமாகிய பெரியவைகைநதியை (தமது சடையினின்று விடுத்து) உண்பித்த திருவிளையாடலையும (இனியெடுத்துக) கூறுவாம். எ-று.

உவையும் என்பதிலுள்ள உகரசசுட்டு சேய்மை அண்மை யென்னுமிரண்டிற்கும் இடையிலாதலால், சேய்மைபொருளது. (௧)

கவன மால்விடை யாளியின் கடிகமழ் தென்றற்
பவன மாமலை யாட்டியைப் பார்த்துளே நகைத்துத்
தவன மாபசி யுடையவன் றன்பொருட் டன்ன
புவன மாதினை நினைத்தன ளினைக்குமுன் போந்தாள்.

(இ-ள்.) விரைந்துசெல்லுந் திருமாலாகிய இடபத்தையுடைய சோமசுந்தரக்கடவுள் பிறகு மணங்கமழுந் தென்றற்காற்றையுடைய பொதியமலைக்கரசியாராகிய தடாதகைப்பிராட்டியாரைப் பார்த்து, தமக்குள்ளே புன்முறுவல்செய்து தாகத்தையும் பெரும்பசியையுமுடைய குண்டோதரனுக்காக, அன்னந்தரும் பூமிதேவியை நினைத்தருளினர்! (அவளும் அன்னவடிவமாய்) நினைக்குமுன்னே வந்தருளினள்.

அன்னபுவனமாதினை யென்பதற்கு (தமதுசத்தியாகிய) அன்னபுவனத்திற் குரிய அன்ன பூரணியை நினைத்தருளினர், எனக்கூறுதலும் ஒன்றும். (ங)

நாற்ற டந்திசைத் தயிர்க்கட னனந்தலை நிலங்கீண்
டேற்றெ ழுந்துநாற் கிடங்கரா யுதித்தெழுந் தாங்கு
மாற்ற ருஞ்சுவைத் தீந்தயிர் வாலரிப் பதத்தோ
டேற்றெ ழுந்தது நாற்குழி யிடத்திலும் பொங்கி.

(இ-ள்.) தயிர்க்கடலானது பூமியின் மத்தியைக்கிழித்து நான்கு பெருந் திசைகளிலும் ஊற்றெடுத்தோங்கி நான்கு குழிகளாய்த்தோன்றி யெழுந்ததுபோல, நீங்காத சுவையையுடைய தயிரானது வெள்ளிய அரிசியாலாக்கிய அன்னத்துடன் நான்கு குழிகளிலும் பொங்கி ஓங்கியெழுந்தது. எ-று.

எழுந்தது என்னுஞ்சொல் எழுந்து எனத்தொக்கு நின்றது. (ச)

குரும திக்குல மன்னவன் மருகனக் குண்டப்
பெருவ யிற்றிரு பிறையெயிற் றெரிசிகைப் பேழ்வா
யொருகு டைக்குடை வீரனை யுன்பசி தணியப்
பருகெ னப்பணித் தருளலும் பாரிடத் தலைவன்.

(இ-ள்.) வெண்ணிறம்பொருந்திய சந்திரகுலத் தரசனாகிய மலயத்துவச பாண்டியனது மருகராகிய சவுந்தரபாண்டியர், ஆழமாகியபெரியவயிற்றையும் இரண்டு பிறைச்சந்திரன்போலும் விளங்கும் வக்கிரதந்தங்களையும், அக்கினிபோன்ற (செந் நிறம்பொருந்திய) சிகையையும், பிளந்த வாயையும், குடை (தாங்குவதை)யும் உடைய ஒப்பற்ற அந்தக்குண்டோதரனை (நோக்கி) உன்பசிநோய் தீரும்படி உண்க எனக் கட்டளையிட்டருள, பூதகணத்தலைவனாகிய குண்டோதரன். எ-று. (ரு)

அத்த யிர்ப்பதக் கிடங்கரி லலைகடல் கலக்கு
மத்தெ னக்கரம் புதைத்தெடுத் தெடுத்துவாய் மடுத்துத்
துய்த்தி டப்பசி விடுத்தது சுருதிநா யகன்றாட்
பத்தி வைத்துவீ டுணர்ந்தவர் பழவினைத் தொடர்போல்.

(இ-ள்.) அவ்வாறுதோன்றிய தயிர்ச்சோற்றுக்குழிகளில் அலைகள் பொரு ந்திய கடலைக்கலக்கும் மத்துப்போலத் தனது கைகளைவிடுத்து வாரியெடுத்து வாயிற் போட்டுப்புசிக்க, வேதங்களை யோதினவராகிய சுந்தரேசப்பெருமானது திருவடியின் கீழ்ப்பத்திசெய்து மோக்ஷத்தையடைந்தவரது பழவினைத்தொடக்கு (ஒழிதல்)போல, (அக்குண்டோதரனது) பசிநோய்விட்டு ஒழிந்தது. எ-று.

சுருதிநாயகன் தாள்பத்திவைத்து வீடுணர்ந்தவர் என்றதால் ஆகாமியமும் ஒழிந்தவர்களெனக்கொள்க. எடுத்தெடுத்து என்னும் அடுக்கு ஆராமைப்பொருளது.

வாங்கி வாங்கிவாய் மடுத்தலு முடம்பெலாம் வயிறாய்
வீங்கி னன்றரை கிழிபடப் பொருப்பென வீழ்ந்தா
னீங்கு நீளுயிர்ப் பிலனுடல் புரண்டன னீர்வேட்
டாங்கு நீர்நிலை தேடுவா னுயினு னெழுந்தான்.

(இ-ள்.) (குண்டோதரன் அன்னத்தையெல்லாம்)வாரிவாரி வாயிற்போட்ட வுடன், தேகமுழுவதும் வயிறுபோலப்பூரித்து விம்மி, மலை(விழுந்தாற்)போலப் பூமி பிளவுறும்படி (நிற்கமுடியாமல்) விழுந்து, உச்சுவாசிக்கும் நெட்டுயிர்ப்பற்று, சரீரம்புர

ண்டு (தாகத்தால்) தண்ணீரை விரும்பி அந்நகரத்திலுள்ள (வரி மடுமுதலிய) நீர் நிலைகளைத்தேடும்படி யெழுந்திருந்தான். எ-று.

தேடுவானுயினன் என்பது ஒருசொல். (௬)

ஆவி யன்னவர்ப் பிரிந்துவா ழணங்கனார் போலக்
காவி நாண்மலர்த் தாமரைக் கடிமலர் வாட
வாவி யோடையுங் குளங்களும் வறப்பவாய் வைத்துக்
கூவ னீணிலை நீர்களும் பசையறக் குடித்தான்.

(இ-ள்.) தமது உயிர்போன்ற கணவரைப் பிரிந்துவாழுந் தெய்வமாதரை யொத்த பெண்கள் (வாடுவது)போல, அன்றலர்ந்த நீலோற்பல மலர்களும் வாசம் பொருந்திய தாமரைமலர்களும் வாட்டமடைய, வாவிகளும் ஓடைகளும் குளங்களும் நீர்வற்ற வாய்வைத்து உருஞ்சி, கிணறுகளும் நெடிய நீர்நிலைகளாகிய மடுக்களும் நீர்ப் பசையறும்படி பருகினன். எ-று.

வாவி-நடக்குங்கிணறு. நீர் நிலை-நிலை நீர். இது இலக்கணப்போலி. (எ)

அனைய னாகியு நீர்நசை யாற்றலன் வருந்தும்
வினைய னாகிவா னதிச்சடை வேதியன் பாதத்
தினைய நாதனுந் தன்றிரு முடியின்மீ திருக்கு
நனைய நாண்மல ரோதியைப் பார்த்தொன்று நவில்வான்.

(இ-ள்.) (குண்டோதரன்) அவ்வாறு பருகினவனாகியும் நீர்வேட்கை தணியாமல்வருந்துந் தன்மையனாகி, ஆகாயகங்கையைச் சடையிலணிந்த சிவபெருமானது திருவடிக்கீழ்வந்துவருந்த, அச்சிவபெருமானும் தமது திருமுடியின்மேல் பொருந்தி யுள்ள குளிர்ச்சிதங்கிய அன்றலர்ந்த மலர்களையணிந்த கூந்தலையுடைய கங்கையைப் பார்த்து ஒன்று திருவாய்மலர்ந்தருளுகின்றார். எ-று. (அ)

தேங்கு நீர்த்திரை மாலிகைச் செல்விநீ யிந்த
வாங்கு நீர்த்தடம் புரிசைசூழ் மதுரையின் மாடோ
ரோங்கு நீத்தமா யொல்லென வருதியென் றுரைத்தா
னீங்கு நீர்த்திரு மாதவ ளொருமொழி நிகழ்த்தும்.

(இ-ள்.) நிறைந்த நீர்மயமாகிய அலைகளையே மாலையாகவுடைய செல்வி யாகிய கங்கையே! நீ இந்தவளைவாகிய அகழி சூழ்ந்த விசாலமான மதில்புடைசூழப் பெற்ற மதுரை நகரத்தின் பக்கலில், உயர்வாகிய வொரு தீர்த்தமாகவிரைவில் வரக் கடவாய் என்று திருவாய்மலர்ந்தருளினர். (அதுகேட்டு இறைவர் சடையினின்றும்) நீங்குகின்ற கங்காதேவி அப்பொழுது ஒரு வார்த்தை சொல்லுகின்றாள். எ-று. (௯)

அன்று மெம்பிரா னாணையாற் பகீரதன் பொருட்டுச்
சென்று நீயொரு தீர்த்தமாய்த் திளைப்பவர் களங்க
மொன்று தீவினைத் தொடக்கறுத் தொழுகெனப் பணித்தா
யின்று மோர்நதி யாகெனப் பணித்தியே லென்னை.

(இ-ள்.) முற்காலத்தும் எம்பெருமானது திருவாணையினால், பகீரதன் நிமித்தமாக நீ யொருதீர்த்தமாய்ச் சென்று (உன்பால்) மூழ்குவோரது குற்றம்பொருந்திய தீவினைச்சம்பந்தங்களையொழித்து விளங்கக்கடவாயென்று கட்டளையிட்டருளினீர். இப்பொழுதும் ஒரு நதியாகக்கடவாயென்று தேவரீரென்னைக் கட்டளையிடுவீராயின். எ-று.

இதுமுதல் மூன்றுபாடல்கள் ஒருதொடர்.

பணித்தியேல் என்னும் வினையெச்சம் மூன்றாவதுசெய்யுளில்வரும் பணித்தருளென்னும் வினைமுற்றைக்கொண்டது. (௧௦)

தெரிசித் தோர்படிந் தாடினோர் செங்கையா லேனும்
பரிசித் தோர்பவத் தொடர்சசியின் பற்றுவிட் டுள்ளத்
துருசித் தோாவுறு பத்தியு மிசசையு முணர்வாய்
விரிசித் தோர்வுறு மெய்புணர் வால்வரும வீடும்.

(இ-ள்.) தெரிசித்தவர்களும், மூழ்கி ஸ்நானஞ் செய்தவர்களும், செவ்விய கையினாலாயினும் தொட்டவர்களும், பிறவித்தொடக்கின் சம்பந்தத்தைவிட்டு மனத்தில் இன்பமூற்றெடுக்கச் சிந்தித்தலால் வருஞ் சிவபத்தியும் சிவஞானமும், அறிவாய் எங்கும் வியாபித்த தேவரீரையுணரும் ஞானத்தால் வருஞ் சிவகதியும். எ-று.

உருசித்து-செயவெனெச்சத்திரிபு. (௧௧)

தந்தி டப்பணித் தருளெனுத் தடம்புனற் செல்வி
சுந்த ரபபெருங் கடவுளை வரங்கொண்டு தொழுது
வந்த ளப்பிலா வேகமோ டெழுந்துமா நதியா
யந்த ரத்துநின் றிழிபவ ளாமென வருமால்.

(இ-ள்.) (ஆகிய இவற்றை) கொடுக்கும்படி கட்டளையிட்டருளுவீர் என்று பெரியநீர்மயமாகியகஙகாதேவி,மஹாதேவராகியசுந்தரேசபபெருமானைவரம்பெற்றுப் பணிந்து வந்து, மிக்க வேகத்தோடு எழுந்து பெரிய நதிரூபமாய் ஆகாயத்திலிருந்து இறங்கி வருகின்றவள்போல வருகின்றாள். எ-று (௧௨)

கலிவிருத்தம்.

திரைவளையணி கரமுடையவள் செழுமணிநகை யுடையா
ளுரைவளை துகி லுடையவள்கொடி நுணுகிடையவ ளறனீள்
விரைவளைகுழ லுடையவள்கயல் விழியுடையவள் வருவாள்
வரைவளைசிலை யவன்முடிமட வரன திவடி வினுமே.

(இ-ள்.) மேருமலையை வளைந்தவில்லாகவுடைய சுந்தரபாண்டியராகிய சிவபெருமானது சடைமுடியிலுள்ள கங்காதேவி நதிரூபமாய்வரும்பொழுதும், அலைகளை வளையலணிந்த கைகளாகவும், செழுமைபொருந்திய முத்துக்களைப் பற்களாகவும், நுரைகளைச்சூழ்ந்த ஆடையாகவும்,பூஙகொடியை நுண்ணிய இடையாகவும்,கருமணற் படிவை நீண்மெணங்கமழ்ந்து (கடை) வளைந்த அளகமாகவும், கயலைக்கண்களாகவும் உடையவளாய் வருகின்றாள். எ-று.

இதுமுதற் பத்துச்செய்யுள்களால் வைகையின் வரவு வருணிக்கப்பட்டது.

விரைபடுமகி லரைபொரிதிமில வெயிலவிடுமணி வரையோ
டரைபடமுது சினையலறிட வடியொடுகெடி தகழாக்
குரைபடுகழ லிறவுளர்சிறு குடியடியொடு பறியாக்
கரைபடவெறி வதுவருவது கடுவிசைவளி யெனவே.

(இ-ள்.) மணம்பொருந்திய அகிலும், பொருக்குப் பொருந்திய அடியையுடைய வேங்கையும், பிரகாசத்தை வீசுகின்ற மலைகளோடு (தாக்கி) அரைபடவும், (அம்மரங்களின்) பெருங்கிளைகள் ஒலிக்கவும், அம்மரங்களை அடியோடு விரைவாகப் பறித்தும், சத்திக்கின்ற வீரக்கழலணிந்த குறிஞ்சிநிலமாக்களது சிறுவீடுகளை அடி

யோடு கல்லியும், கரைகளிற் செல்லும்படி வீசுவதாகிய அந்நதி மிக்கவேகத்தை யுடைய சண்டமாருதம் என்றுசொல்லும்படி வருகின்றது. எ-று. (கச)

பிணையொடுகலை பிடியொடுகரி பிரிவிலவொடு பழுவப்
பணையொடுகரு முசுவயிறணை பறழொடுதழு வியதன்
றுணையொடுகவி பயின்மரநிரை தொகையொடுமிற வுளர்வெங்
கணையொடுசிலை யிதவெறுடுமெறி கவணொடுகொடு வருமால்

(இ-ள்.) பிரிவில்லாதனவாகிய பெண்மானோடு ஆண்மானையும், பெண் யானையோடு ஆண்யானையும், காட்டிலுள்ள ஓமரத்தைக்கிளைகளோடும், கரியமுசுவை வயிற்றிலேபற்றிய குட்டியோடும், தழுவிய அதன் பெண்குரங்கோடும், குரங்குகள் உலாவுகின்ற மரங்களை வரிசையாகிய தொகுதியோடும், வேடர்களது வில்லைக் கொடிய பாணங்களோடும், (தினைப்புனத்திலுள்ள) பரணோடும், (கல்லைவைத்து) வீசுங்கவணோடும் வாரிக்கொண்டு வரும். எ-று. (கரு)

அடியிறநெடு வரையுதைவன வகழ்வனவகழ் மடுவைத்
திடரிடுவன மழைசெருகிய சினைமரநிரை தலைகீழ்
படவிடிகரை தொடர்நடுவன படுகடலுடை முதுபார்
நெடுமுதுகிரு பிளவுறவரு நெடுநதியின வலையே.

(இ-ள்.) (சகரரால்) உண்டாக்கிய சாகரத்தை யாடையாகவுடைய பழமை யாகிய பூமியின் நெடியமுதுகு இரண்டுதுண்டாக(பிளவுபடும்படி) வருகின்ற பெரிய அந்நதியினது அலைகள் நெடிய மலைகளை அடிகெடும்படி மோதித்தோண்டுகின்றன. தோண்டிய மடுக்களை மேடுசெய்கின்றன. மேகங்கள் படிந்த கொம்புகளையுடைய மரங்களை யிடிந்தகரையில் வரிசையாய்த் தலைகீழாக நடுகின்றன. எ-று.

உதைவன என்பது முற்றெச்சம். (கசு)

பிளிறொலியின முதுமாமகழ் பெருவலியின வசையா
வெளிறடுவன வெறிமணியின விரைசெலவின மதமோ
டொளிறளியின நுரைமுகபட முடையனவென வரலாற்
களிறனையது மதுவிதழிகள் கவிழ்சடையணி குடிநீர்.

(இ-ள்.) (சிவபெருமானது) தேனொழுகும் கொன்றை மலர்மாலைகள் தொங்குகின்ற சடையிலணிந்த கங்கையானது, ஒலிக்கும் பேரொலியுடையதென்றும், ஆலமரங்களை அடியோடு பெயர்க்கும் பெரிய வலியினையுடையதென்றும், அசையாத விளாமரங்களை முரிக்கின்றது என்றும், (கரைப்புறத்தில்) எறிகின்ற முத்துமணிகளை யுடையதென்றும், விரைந்து செல்லும் வேகத்தையுடைய தென்றும் (யானையின்) மதத்தோடுபொருந்திய ஒளிகொள்ளும் வண்டுகளுடையனவென்றும், நுரையாகிய முதன்மையுள்ள ஆடையுடையனவென்றும் வருகையினால், [குமுறும் ஒலியினை யுடையதாகியும் பெரியமரங்களை வேரோடுகல்லும் பெரிய வலிமையை யுடையதாகியும், அசையாத கட்டுத்தறியை முறிப்பதாகியும், பிரகாசிக்கின்றமுத்துக்களையுடைய (கொம்புகள் பொருந்திய) தாகியும், விரைந்துசெல்லுங் கதியையுடையதாகியும், மும்மதங்களுடன் (அவற்றையுண்ணவந்து) விளங்கும் வண்டுகளுடையதாகியும் நீர் நுரை போல வெண்மை பொருந்திய முகபடா முடையதாகியுமுள்ள] யானையை யொத்திருந்தது. எ-று.

முதுமரம் என்பது ஆலமரம். வெள்ளில் என்பது வெளில் எனத் தொக்குநின்றது. வெள்ளில்=விளாமரம். வெளில்=யானை கட்டுந் தறி.

இச்செய்யுள் செம்மொழிச்சிலேடையணி. (கஎ)

நீடியபில முறுநிலையின நிருமலன்மதி முடிமீ
தாடியசெய லினவெயிலுமி ழருமணிதலை யினநீள்
கோடியகதி யினநிரைநிரை குறுகியபல காலி
ளோடியவலி யினவளையுட லுரகமுமென வருமால்.

(இ-ள்.) ஆழ்ந்த பாதலத்திற்பொருந்தும் ஆழமுடையதாகியும், சிவபெருமானது சந்திரனை யணிந்த சடாமுடியின்பேரில் விளங்குஞ் செயலினையுடையதாகியும், கிரணத்தைவீசும் விலைமதித்தற்கரிய நவமணிகளைத் தன்னிடத்துடையதாகியும், மிகவும் வளைந்துசெல்லும் வேகத்தையுடையதாகியும், வரிசைவரிசையாக நெருங்கிய பல கால்களின்வழியே விரைந்துசெல்லும் வன்மையுடையதாகியுஞ் செல்லுதலால், [ஆழ்ந்த பிலத்துவாரத்திற் பொருந்தும் நிலையுடையதாகியும், சிவபெருமானது சந்திரனைச் சூடிய சடைமுடியின்பேரில் ஆடுஞ்செயலை யுடையதாகியும், ஒளிவீசுகின்ற பெறுதற்கரிய இரத்தினத்தை உச்சிக்கொண்டையிலுடையதாகியும், மிகவும் வளைந்துசெல்லும் நடையுடையதாகியும், வரிசைவரிசையாக நெருங்கிய பல கால்களால் விரைந்துசெல்லும் வன்மையுடையதாகியுமுள்ள] வளைந்த வுடலையுடைய சர்ப்பம் வருகைபோல் வாராநிற்கும். எ-று.

இதுவும் செம்மொழிச்சிலேடையணி. (௧௮)

மண்ணகழ்தலின் வளையணிகரு மாவனையது மிசைபோய்
விண்ணளவலி னவுணர்களிறை விடுபுனலொடு நெடுகரு
மண்ணலையனை யதுசுவையிழு தளையளையுறு செயலாற்
கண்ணனையனை யதுநெடுகிய கடுகியகதி நதியே.

(இ-ள்.) விரைந்து செல்லும் வேகத்தையுடைய அந்த நதியானது பூமியைத் தோண்டிச்செல்லுதலால், (பாஞ்சசன்னியம் என்னும்) சங்கை யணிந்த வராகமூர்த்தியை யொத்திருந்தது. மேலே சென்று விண்ணுலகத்தைத்தொடுதலால், அசுரர்களுக் கிறைவனாகிய மாவலி யென்பவன் தத்தஞ்செய்த நீருடன் திரிவிக்கிரம ரூபங்கொண்ட வாமனமூர்த்தியை யொத்திருந்தது. மதுரம்பொருந்திய வெண்ணெயையும் தயிரையுங் கலந்துவருஞ் செய்கையால், கிருஷ்ணமூர்த்தியை யொத்திருந்தது. எ-று.

திகழ்தருகரி பரிகவரிகள் செழுமணியொடு வருமா
றிகழ்தருகுட புலவரசர்க ணெறிசெய்துகவர் திருவோ
டகழ்தருபதி புகுமதிகுல வரசனையதை யலதேற்
புகழ்தருதிறை யிடவருகுட புலவரசனு நிகரும்.

(இ-ள்.) விளங்குகின்ற யானைகளையுங் குதிரைகளையுஞ் சாமரங்களையுஞ் செழிய இரத்தினங்களையுங் கொண்டுவருகின்ற நதியானது, பெருமை விளங்கும் மேலைத்திசை மன்னவரைத் தமது வழிப்படுத்தி அபகரித்த செல்வத்துடன், அகழியாற் சூழப்பெற்ற மதுரைப்பதியிற் பிரவேசிக்கின்ற சந்திரவமிசத்திற்றோன்றிய பாண்டிய மன்னனை ஒத்திருந்தது. அல்லதாயின், புகழ்பொருந்திய (அம் மதுரைப்பதிக்குத்) திறைசெலுத்த வரும் மேலைத்திசைமன்னவனை யொத்திருந்தது. எ-று. (௨௦)

ஆரொடுமட லவிழ்பனையொடு மரநிகரிலை நிம்பத்
தாரொடுபுலி யொடுசிலையொடு தருகயலொடு தழுவாப்
பாரொடுதிசை பரவியதமிழ் பயிலரசர்கள் குழுமிச்
சீரொடுபல திருவொடுவரு செயலனையது நதியே.

(இ-ள்.) அந்த நதியானது ஆத்திப்பூமாலையோடும், இதழ்கள் விரிந்தபனம் பூமாலையோடும், அரம்போலும் இலையையுடைய வேப்பம்பூமாலையோடும், புலிகளோ

டும், வில்லோடும், சேல்மீன்களோடுந் தழுவி (வருதலால்) மண்ணுலகோடு அஷ்ட திக்குக்களிலும் பரவிய புகழையுடைய தமிழ் பயின்ற (சேர-சோழ -பாண்டிய) மன்னர்கள் (மூவரும்) கூடிச்சிறந்த பல செல்வங்களுடன் வருஞ்செய்கையை யொத்திருந்தது. எ-று. (உக)

கலிநிலைத்துறை.

கல்லார் கவிபோற் கலங்கிக் கலைமாண்ட கேள்வி
வல்லார் கவிபோற் பலவான் றுறைதோன்ற வாய்த்துச்
செல்லாறு தோறும் பொருளாழ்ந்து தெளிந்து தேயத்
தெல்லாரும் வீழ்ந்து பயன்கொள்ள விறுத்த தன்றே.

(இ-ள்.) (நூல்களைக்) கல்லாதவர் (இயற்றிய) செய்யுள் (தெளிவுபடாதது) போல அந்நதி (முதலிலே) கலங்கி, மாட்சிமைப்பட்ட நூற்கேள்வியில் வல்லார் (இயற்றிய) செய்யுள்போல (பின்பு) உயர்ந்த பல நீர்த்துறைகள் தோன்றப்பெற்று, செல்லுந் துறைதோறும் (மணி பொன் முதலிய) பொருள்களோடு ஆழமுடையதாய், தெளிந்து (தமிழ்த்) தேயத்திலுள்ள யாவரும் மூழ்கி (விளைவு முதலியவும் அறம் முதலியவும் ஆகிய) பயன்கொள்ளச் சேர்ந்தது. எ-று.

இச் செய்யுளில் வான்றுறை - பொருள் - பயன் என்பன செம்மொழிச் சிலேடைப்பொருளன. வான்றுறை - அகப்பொருட் புறப்பொருட்டுறைகள்; சிறந்த நீர்த்துறைகள். பொருள் - பொருள் மணி முதலியன; எண்வகைப்பொருள்கோள். பயன் - இம்மை மறுமைப்பயன்; அறமுதலியனவெனக் கொள்க. (உஉ)

வண்டோதை மாறா மலர்வேணியின் வந்த நீத்தங்
கண்டோத நஞ்சுண் டருள்கண்ணுதல் மூர்த்தி பேழ்வாய்
விண்டோ தணியாதென் விடாவென வெம்பி வீழ்ந்த
குண்டோ தரனை விடுத்தானக் குடிஞை ஞாங்கர்.

(இ-ள்.) சமுத்திரத்திற்றோன்றிய ஆலாலவிடத்தைப் புசித்தருளிய திரிநேத்திரங்களையுடைய சிவபெருமானாகிய சவுந்தரபாண்டியர், வண்டின் ஒலி நீங்காத (கொன்றை) மலர்மாலை சூடிய தமது சடையினின்று வந்த (அந்நதி) வெள்ளத்தை நோக்கி, பெரிய வாயைத்திறந்து, ஐயோ! எனது தாகம் நீங்கவில்லையென்று ஒலிட்டு வெம்பி வீழ்ந்த குண்டோதரனை அந்நதியினிடத்தே விடுத்தருளினார். எ-று. (உ௩)

அடுத்தா னதியின் னிடைபுக்கிருந் தாற்ற லோடு
மெடுத்தான் குறுங்கை யிரண்டுங்கரை யேற நீட்டித்
தடுத்தான் மலைபோ னிமிர்தண்புனல் வாயங் காந்து
மடுத்தான் விடாயுங் கடலுண்ணு மழையு நாண.

(இ-ள்.) (அக்குண்டோதரன்) அடுத்து அந்நதியினிடத்தேபோயிருந்து வலிமையோடும், குறுகிய இரண்டு கைகளையு மெடுத்துக் கரையின்பேரில் ஏற்றி, நீரைத் தடுத்து மலைபோல வருகின்ற பெரிய வெள்ளமாகிய தண்ணியசலத்தை வாயைத் திறந்து, தாகவிடாயுங் கடல்நீரைப் பருகும் மேகமும் நாணும்படி பருகினான். எ-று.

தீர்த்தன் சடைநின் றிழிதீர்த்த மருந்தி வாக்குக்
கூர்த்தின்பு கொண்டு குழகன்றிரு முன்ன ரெய்திப்
பார்த்தன் பணிந்த பதமுன்பணிந் தாடிப் பாடி
யார்த்தன் புருவாய்த் துதித்தானள வாத கீதம்.

(இ-ள்.) பரிசுத்தராகிய சிவபெருமானது சடையினின்றிறங்கிய அத்தீர்த்தத்தைப்பருகி, வாக்குமிகுத்து மகிழ்ச்சியுற்று அந்தச்சவுந்தரபாண்டியரது திருச்சந்

நிதியையடைந்து,முன்னர் அருச்சுனன்வழிபாடுசெய்த திருவடிகளில் அன்புருவாகப் பணிந்து ஆனந்தக்கூத்தாடி அளவில்லாதகீதங்களைமுழக்கத்துடன் பாடித்துதித்தான்.

பாட்டின் பொருளா னவன்பாரிட வீரன் பாடல்
கேட்டின்ப மெய்திக் கணங்கட்குக் கிழமை நல்கி
மோட்டின் புனன்மண் முறைசெய் திருநதா னளகக்
காட்டின் புறம்போய் மடங்குங் கயற்கண்ணி யோடும்.

(இ-ள்.) (குண்டோதரன்துதித்த) பாட்டின் பொருளாயுள்ள சுந்தரபாண்டியர் பூதவீரனாகியகுண்டோதரனது பாடலைக்கேட்டு மகிழ்ச்சிமிகுந்து பூதகணங்களுக்கிறைவனாகும் உரிமையைக்கொடுத்தருளி, கூந்தலாகிய காட்டின் புறஞ்சென்று திரும்புங் கயல்போன்ற கண்களையுடைய தடாதகைப்பிராட்டியாரோடும் நிறைந்த நீர்மயமாகிய கடல்சூழ்ந்த நிலவுலகத்தை முறைபபடி செங்கோல் செலுத்தியிருந்தருளினர். எ-று. (௨௬)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

தீர்த்த னிதழிச் சடைநின்று மிழிந்து வரலாற் சிவகங்கை
தீர்த்த னுருவந் தெளிவோர்க்கு ஞானந் தரலாற சிவஞான
தீர்ததங் காலிற் கடுகிவரு செய்தி யாலே வேகவதி
தீர்த்தங் கிருத மாலையென வைகை நாமஞ் செபபுவரால்.

(இ-ள்.) சிவபெருமானதுகொன்றைமாலைதரித்த சடையினின்றும் இறங்கி வருவதாற் சிவகங்கையென்றும், அபபெருமானது திருவுருவத்தைத் தெளிந்துணர்ந்தோர்க்கு ஞானத்தைக்கொடுத்தலாற் சிவஞான தீர்ததமென்றும், (சண்ட) மாருதம் போல விரைந்துவருஞ் செயலால் வேகவதி தீர்த்தமென்றும், (செய்யபபட்ட மாலை போல மதுராபுரியைச்சூழ்ந்துவருதலால்) கிருதமாலையென்றும் வைகைக்குத் திருநாமங்கூறுவர். எ-று. (௨௭)

அன்னக்குழியும் வைகையு மழைத்த படலம்
முற்றிற்று.
ஆ திருவிருத்தம் - அ௭௫.

---

ஒன்பதாவது

# எழுகடலழைத்தபடலம்.

கொச்சகக்கலிப்பா.

முடங்கன்மதி முடிமறைத்த முடித்தென்னன் குறட்கன்னக்
கிடங்கரொடு நதியழைத்த கிளர்கருணைத் திறனிதுமேன்
மடங்கல்வலி கவர்ந்தான்பொன் மாலைபடிந் தாடவெழு
தடங்கடலு மொருங்கழைத்த தன்மைதனைச் சாற்றுவாம்.

(இ-ள்.) வளைவாகிய (பிறைச்) சந்திரனையணிந்த சடைமுடியை மறைத்தருளிய கிரீடமணிந்த சுந்தரபாண்டியர், குண்டோதரபூதத்திற்கு அன்னக்குழியும் வைகையும் அழைத்த விளங்குகின்ற கிருபைபொருந்திய திருவிளையாடல் இதுவாகும். இனி நரசிங்கத்தின் வல்லமையை யொழித்தருளிய அச் சுந்தரபாண்டியர் காஞ்சனமாலைமுழ்கி ஸ்நானஞ்செய்ய, பெரிய சத்தசாகரங்களையும் ஏககாலத்திலழைத்தருளிய திருவிளையாடலைக் கூறுவாம். எ-று.

மடங்கல் வலிகவர்ந்தானென்பதற்கு எமனதுவன்மையை மார்க்கண்டேய முனிவருக்காக ஒழித்தவர் எனப்பொருள் கூறினும் பொருந்தும் (௪)

ஓதவரும் பொருள்வழுதி யுருவாகி யுலகமெலாஞ்
சீதளவெண் குடைநிழற்றி யறச்செங்கோல் செலுத்துநாள்
போதவரும் பொருளுணர்ந்த விருடிகளும் புனிதமுனி
மாதவரும் வரன்முறையாற் சந்தித்து வருகின்றார்.

(இ-ள்.) சொல்லுதற்கரிய பரம்பொருளாகிய சோமசுந்தரப் பெருமான் பாண்டியர் வடிவங்கொண்டு உலகமுழுவதையுந் தண்ணிய வெண்கொற்றக்குடையால் நிழல்செய்து தருமநூலின்படி செங்கோல் செலுத்துங்காலத்தில், அரிய ஞான நூற்பொருள்களை யுணர்ந்த இருடிகளும் பரிசுத்தமாகிய பெருந்தவஞ்செய்த முனிவர்களும் (அச்சவுந்தரபாண்டியனை) வரன்முறைப்படி சந்தித்து வருகின்றவர்களாயினார்கள். எ-று. (௫)

வேதமுனி கோதமனுந் தலைப்பட்டு மீள்வானோர்
போதளவில் கற்புடைய பொன்மாலை மனைபுகுந்தான்
மாதவளும் வரவேற்று முகமனுரை வழங்கிப்பொன்
னாதனமிட் டஞ்சலிசெய் தரியதவத் திறங்கேட்பாள்.

(இ-ள்.) (அவர்களுள்) வேதநூற்பொருள்களையுணர்ந்த கௌதம முனிவரும் சந்தித்துத் திரும்புகின்றவர் ஒருகாலத்தில், கற்பினையுடைய காஞ்சனமாலையின் அரமனைக்குப் போயினார். அக்காஞ்சனமாலையும் (அம்முனிவரது) வருகையை யெதிர்கொண்டு உபசாரவார்த்தைகள் கூறிப் பொன்னாலாகிய ஆசனமிட்டுக் கைகுவித்துப் பணிந்து, அரிய தவத்தினது வேறுபாடுகளை வினவுகின்றவளாயினாள். எ-று. (௬)

கள்ளவினைப் பொறிகடந்து கறைகடந்த மறைச்சென்னி
யுள்ளபொருள் பரசிவமென் றுணர்ந்தபெருந் தகையடிகே
டள்ளரிய பவமகற்றுந் தவமருள்செய் கெனக்கருணை
வெள்ளமென முகமலர்ந்து முனிவேந்தன் விளம்புமால்.

(இ-ள்.) வஞ்சனையுடைய கன்மம் (இந்திரியமுதலிய தத்துவகாரணமாகிய) மாயை மலம் (இவற்றை) கடந்து வேதத்தினுச்சியில் விளங்கும் பரசிவமே யுண்மைப் பொருளென்றுணர்ந்த பெருந்தன்மையையுடைய சுவாமிகளே! தள்ளக்கூடாத பிறவியை யொழிக்குந் தவத்திறங்களை அருள் செய்யவேண்டும் என்று வினவ, கிருபா வெள்ளம்போல முகமலர்ச்சியுடையராய் முனிசிரேஷ்டராகிய கௌதம முனிவர் சொல்லுகின்றார். எ-று.

பொறியென்பது ஆகுபெயராகலின் இனம்பற்றி ஏனைய தத்துவமுங்கொள்ளப்பட்டன. (௭)

தவவலியா னுலகீன்ற தடாதகைக்குத் தாயானாய்
சிவபெருமான் மருகனெனுஞ் சீர்பெற்றாய் திறன்மலயத்
துவசனருங் கற்புடையாய் நீயறியாத் தொல்விரத
மவனியிடத் தெவரறிவா ராயினுமி யம்பக்கேள்.

(இ-ள்.) வலிமைதங்கிய மலயத்துவசபாண்டியனுக்குரிய அரியகற்புடைய மனைவியே! உனது தபோபலத்தால் உலகமாதாவாகிய தடாதகைப்பிராட்டியாருக்குத் தாயுமாயினை; சோமசுந்தரப்பெருமானை மருகனென்றழைக்குஞ் சிறப்பும் பெற்றனை; (அத்தன்மைபொருந்திய) நீ யறியாத பழமையாகிய தவம் பூமியிலே யாவரறிவர்? ஆயினும் (யாம்) கூறுவதுங் கேட்பாயாக. எ-று. (௮)

மானதமே வாசிகமே காயிகமே யெனவகுத்த
வீனமில்சீர்த் தவமூன்று மிவற்றின்மா னதந்தரும
தானமிசை மதிவைத்த றயவுபொறை மெய்சிவனை
மோனமுறத் தியானித்த லைந்தடக்கன் முதலனந்தம்.

(இ-ள்.) மானதமும் வாசிகமும் காயிகமும் என்று (நூல்களால்) வகுக்கப்பட்ட குற்றமில்லாத சிறப்பினையுடைய தவங்கள் மூன்றுவகைப்படும். இவற்றுள், மானதமாவன தருமதானங்கள் செய்தலிற் கருத்துவைத்தல் - (உயிர்களிடத்து) இரங்கல்-(பிறர்செய்த தீங்கை) பொறுத்தல் - மெய்பேசல் - பிறிதுசங்கற்பமின்றிச் சிவபெருமானைச் சிந்தித்தல்-ஐம்பொறிகளையடக்கல் முதலாகப்பலவாம். எ-று.

மானதம் - மனத்தாற் செய்யப்படுவது. வாசிகம்-வாக்காற்செய்யப்படுவது. காயிகம்-தேகத்தாற் செய்யப்படுவது.

முதலிய என்பதினால் ஸ்ரீபஞ்சாக்ஷரஞ் செபித்தல் முதலியனவுங் கொள்க.

வாசிகமைந் தெழுத்தோதன் மனுப்பஞ்ச சாந்திமறை
பேசுசத வுருத்திரந்தோத திரமுரைததல் பெருந்தருமங்
காசகல வெடுததோதன் முதலனந்தங் காயிகங்க
ளீசனருச் சனைகோயில் வலஞ்செய்கை யெதிர்வணங்கல்.

(இ-ள்.) வாசிகமாவன திருவஞ்செழுத்தைச் செபித்தல்- பஞ்சசாந்தி மந்திரம் ஸ்ரீ நமகசமங்கள் (இவற்றைச்செபித்தல்) வேதங்களிற் கூறிய சதவுருத்திரமந்திராதிதோத்திரங்களை எடுத்துச்சரித்தல் - பலவிததுதிகள் செய்தல்-பெரும்புண்ணியங்களைக் குற்றமகல வெடுத்துக்கூறுதல் முதலாகப் பலவாம். காயிகமாவன சிவபூசை செய்தல் சிவாலயத்தைப் பிரதக்ஷிணஞ் செய்தல்-சிவசந்நிதியிற் பணிதல். எ-று.

இதுமுதல் நான்குபாடல்கள் ஒருதொடர். (எ)

நிருத்தனுறை பதிபலபோய்ப் பணிதல்பணி நிறைவேற்ற
றிருத்தன்முடி நதியாதி தீர்த்தயாத் திரைபோய்மெய்
வருத்தமுற வாடலிவை முதற்பலவவ் வகைமூன்றிற்
பொருத்தமுறு காயிகங்கள் சிறநதனவிப் புண்ணியத்துள்.

(இ ள்.) நிருத்தமூர்த்தியாகிய சிவபெருமான் வீற்றிருக்கும் க்ஷேத்திரங்கள் பலவற்றினுஞ் சென்றுவணங்குதல்- (சிவாலயத்) திருப்பணிகளை முடிப்பித்தல்-சிவபெருமானது திருமுடியினின்று மிறங்கிய கங்கைநதிமுதலிய தீர்த்தங்களுககு யாத்திரைபோய் உடல் இளைக்கும்படி மூழ்குதல் இவை முதலாகப் பலவாம். அம்மூவகையுள்ளே (மன வாக்குக்களோடு கூடி) காயத்தாற் செய்யப்படுவென சிறந்தனவாம். இககாயிக புண்ணியங்களில். எ-று.

இவைமுதற்பலவென்றதால், சிவாலயத்தில் திருவலகிடுதல் திருநந்தவனம் வைத்தல் திருப்பள்ளித்தாமங்கொய்தல்திருமஞ்சனமெடுத்தல்முதலியனவுங்கொள்க.

திருத்தயாத் திரையதிக மவற்றதிகஞ் சிவனுருவாந்
திருத்தமாங் கங்கைமுதற் றிருநதிக டனித்தனிபோய்த்
திருத்தமா டுவதரிதத் திருநதிக ளவைவந்து
திருததமாய் நிறைதலினு லவற்றதிகந் திரைமுந்நீர்

(இ-ள்.) தீர்த்தயாத்திரை மேம்பட்டனவாம். அவற்றினும், சிவபெருமானது (அஷ்டமூர்த்தத்தில் ஒருமூர்த்தமாக நின்ற) நீர் வடிவு ஆகிய பரிசுத்தமான கங்கை முதலிய நதிகளிலே தனித்தனியே சென்று மூழ்குவது மேம்பட்டதாம். அரிதாகிய

(கங்கை முதலிய) அந்நதிகள்வந்து திருத்தமாக நிறைதலினால் அந்நதிகளில் மூழ்குவனவற்றினும் கடலில் மூழ்குதல் மேம்பட்டதாம். எ-று.

திருநதிகளவை யென்பதில், அவை பகுதிப்பொருள்விகுதி. (௯)

என்றுமுனி விளம்பக்கேட் டிருந்தகாஞ் சனமாலை
துன்றுதிரைக் கடலாடத் துணிவுடைய விருப்பினளாய்த்
தன்றிருமா மகட்குரைத்தாள் சிறிதுள்ளந் தளர்வெய்திச்
சென்றிறைவற் குரைப்பலெனச் செழியர்தவக் கொழுந்தனையாள்.

(இ-ள்.) என்று கௌதமமுனிவர் கூறக்கேட்டிருந்த காஞ்சனமாலை, நெருங்கிய அலைகள் பொருந்திய கடலில் மூழ்கத் துணிவுள்ள காதலுடையவளாய், தனது சிறந்த செல்வப்புத்திரியாகிய தடாதகைப்பிராட்டியாருக்குக்கூறினாள். பாண்டியரது தவத்திற்குக் கொழுந்துபோல அவதரித்த அத் தடாதகைப்பிராட்டியார் (தனது தாயின் பிரிவுக்கு ஆற்றாமல்) சிறிது மனத்தளர்ச்சியடைந்து, (பின்னர் இதனை) எனது நாயகருக்கு அறிவிப்பல் என்று சென்று. எ-று.

இதுமுதல் இரண்டுபாடல்கள் குளகம். (௧0)

தன்றன்னை யுடையபெருந் தகைவேந்தர் பெருமான்முன்
சென்றன்ன மெனநின்று செப்புவாள் குறள்வீரற்
கன்றன்னக் குழியினொடு மாறழைத்த வருட்கடலே
யின்றன்னை கடலாட வேண்டினா ளென்றிரந்தாள்

(இ-ள்.) தம்மை மனைவியாகவுடைய பெருந்தகையாகிய சவுந்தரபாண்டியராஜர் சந்நிதியின்முன் சென்று அன்னம்போலும் நின்று விண்ணப்பிக்கின்றவர்- முன்னே குறிய குண்டோதரனுக்கு அன்னக் குழியுடன் வைகை நதியும் வருவித்து (பசிதாகங்கள் தணித்து) அருளிய கிருபாசமுத்திரமே! இப்பொழுது என்னுடைய மாதாசமுத்திரஸ்நானஞ் செய்ய விரும்புகின்றாளென்றுகுறையிரந்தனர். எ-று.

குறள்வீரற்கு அன்றன்னக் குழியினொடும் ஆறழைத்த வருட்கடலே எனப் பிராட்டியார் விளித்து இப்பொழுது என் தாய் கடலாடவேண்டினாள் எனக் கூறியதனால் அதனை ஈண்டு வருவித்துதவுதல் வேண்டுமென்னும் பிரார்த்தனையைக் குறிப்பித்தாராயிற்று. (௧௧)

தேவிதிரு மொழிகேட்டுத் தென்னவராய் நிலம்புரக்குங்
காவிதிகழ் மணிகண்டர் கடலொன்றோ வெழுகடலுங்
கூவிவர வழைத்துமென வுன்னினார் குணபாலோர்
வாவியிடை யெழுவேறு வண்ணமொடும் வருவனவால்.

(இ-ள்.) பாண்டியத் திருக்கோலந் தாங்கிப் பூமியைக் காக்கின்ற நீலோற்பலமலர்போலும் விளங்கும் ஸ்ரீகண்டத்தையுடைய சுந்தரேசப்பெருமான் பிராட்டியாரது திருவார்த்தையைக் கேட்டு (உன்னுடைய மாதா ஸ்நானஞ்செய்ய விரும்புகின்ற) ஒருகடலோ எழுகடலையும் கூவி வரவழைப்போம் என்று திருவுள்ளத்தில் நினைத்தருளினார். (உடனே மதுரைப்பதியின்) கீழ்த்திசையிலுள்ள ஓர்வாவியிடத்தில் எழு வேறு வகை நிறங்களோடு (எழுகடலும் தம்மிடம்விட்டு) வாராநின்றன. எ-று. (௧௨)

துண்டமதித் திரளனைய சுரிவளைவாய் விடவுதைத்து
வெண்டவள நுரைததும்பச் சுறாவேறு மிசைக்கொட்பத்
தண்டரள மணித்தொகுதி யெடுத்தெறியுந் தரங்கநிரை
யண்டநெடு முகடுரிஞ்ச வார்த்தெழுந்த கடலேழும்.

(இ-ள்.) சந்திரதுண்டக் கூட்டம்போன்ற, சுரிமுகச்சங்கங்கள் முழுப்பட ஒலிக்கவும் வெண்மை மிக்க நுரைகள் ததும்பவும், ஆண் சுறாமீன்கள் மேலே சுழலவும், தண்ணியமுத்துக்கூட்டங்களையெடுத்து எறிகின்ற அலைவரிசைகள் நெடிய அண்டத்துச்சியைத் தடவவும், சத்தசமுத்திரங்களும் முழங்கி யெழுந்துவந்தன. எ-று. ()

காணுமா நகர்பனிப்பக் கலிமுடிவி னயன்படைப்புக்
கோணுமா றெழுந்ததெனக் கொதித்தெழுந்த கடலரவம்
பூணுநா யகனகில புவனமெலாங் கடந்ததிரு
வாணையா லவனடிசென் றடைந்தார்போ லடங்கியதால்.

(இ-ள்.) (அவ்விறைச்சலைக்) காண்கின்ற மதுரைமாநகரத்தார் நடுங்கும்படி கலியுகமுடிவிலே பிரமதேவரது சிருஷ்டிப்பொருள்கள் நிலைகுலையும்படி யெழுந்தது போலப் பொங்கியெழுந்த எழுகடல்கள், சர்ப்பத்தை யாபரணமாக அணிந்த சிவபெருமானது (வைகுந்த முதலிய) எல்லா உலகங்களினுஞ் செல்லும் சிறந்த ஆகஞையால், அச்சிவபெருமானது திருவடிக்கீழ்ச்சென்று கலந்தவர்போல அடங்கின. எ-று.

தன்வண்ண மெழுகடலின் றனிவண்ண மொடுகலந்து
பொன்வண்ண நறும்பொகுட்டுப் பூம்பொய்கை பொலிவெய்தி
மின்வண்ணச் சடைதாழ வெள்ளிமணி மன்றாடு
மன்வண்ண மெனவெட்டு வண்ணமொடும் வயங்கியதால்.

(இ-ள்.) பொன்னிறம்பொருந்திய நன்மணங்கமழும் பொகுட்டையுடைய அழகிய அந்தத்தாமரைத்தடாகமானது தனது நிறத்துடன் (தன்னிடத்தொடுங்கிய) எழுகடல்களின் ஒப்பற்ற நிறங்களோடுங் கலந்து, அழகுற்ற மின்னல் போலும் பிரகாசிக்கின்ற சடையையுடைய அழகிய வெள்ளியம்பலத்தில் நிருத்தஞ்செய்யுஞ் சிவபெருமானது அஷ்டமூர்த்தங்களின் நிறங்கள்போல எண்வகை நிறங்களோடுவிளங்கியது. எ-று. (௧௫)

எழுகடலழைத்தபடலம்
முற்றிற்று.
ஆ திருவிருத்தம் - அ௬௦.

---

பத்தாவது

## மலயத்துவசனை யழைத்த படலம்.

---

கலிவிருத்தம்.

எழுகட லழைத்தவா றியம்பி னுமினிச்
செழுமதி மரபினோன் சேணிழிந்துதன்
பழுதில்கற் பில்லொடும் பரவை தோய்ந்தர
னழகிய திருவுரு வடைந்த தோதுவாம்.

(இ-ள்.) (சிவபெருமான் காஞ்சனமாலை நீராடுதற்காக) எழுகடலையும் வரவழைத்த திருவிளையாடலைக் கூறினோம். இனி, குறைவின்றி நிறைந்த சந்திரகுலத்திற் றோன்றிய மலயத்துவசபாண்டியன் சொர்க்கலோகத்தினின்றும் இறங்கி, குற்றமில்லாத கற்பினையுடைய தனது மனைவியுடன் அவ்வெழுகடலில் மூழ்கி, சிவபெருமானது அழகிய சாரூப்பியம் பெற்ற திருவிளையாடலை (யாம்) கூறுவாம். எ-று. (௧)



மலயத்துவசனை யழைத்தபடலம்.

புரவலன் றடாதகைப் பூவை யோடும்வந்
துரவுநீர்க் கடன்மருங் குடுத்த சந்தன
மரவமந் தாரமா வகுளம் பாடலம்
விரவுநந் தனத்தரி யணையின் மேவினன்.

(இ-ள்.) சவுந்தரபாண்டியர் தடாதகைப் பிராட்டியாருடன் எழுந்தருளி, பெரிய நீர்மயமான எழுகடல் தீர்த்தத்தின்கரையிற் சூழ்ந்துள்ள சந்தனமரம்-குங்கும மரம் - மந்தாரவிருக்ஷம் - மாமரம் - மகிழமரம் - பாதிரிமரம் (முதலியவை) விளங்குந் திருநந்தன வனத்தில் ஓர் சிங்காசனத்தில் எழுந்தருளியிருந்தார். எ-று.

நந்தவனம்-நந்தன மென நின்றது. (௨)

தாதவிழ் மல்லிகை முல்லை சண்பகப்
போதுகொய் திளைஞருஞ் சேடிப் பொற்றொடி
மாதருங் கொடுத்திட வாங்கி மோந்துயிர்த்
தாதர மிரண்டற வமரு மெல்லையில்.

(இ-ள்.) மகரந்தத்துடன் விகசித்த மல்லிகையும் முல்லையும் சண்பகமும் (ஆகிய) மலர்களை, தோழரும் பொன்னலாகிய தொடி யணிந்த தோழிப்பெண்களுங் கொய்து கொடுக்கவாங்கி, வாசனைபார்த்து ஒற்றுமைப்பட்ட அன்புடன் (சவுந்தர பாண்டியரும் தடாதகைப்பிராட்டியாரும்) எழுந்தருளியிருக்குங்காலத்தில். எ-று.

இளைஞரும் சேடிப் பொற்றொடி மாதரும் என்றதில் - இளைஞர் சவுந்தர பாண்டியருக்கும், சேடியர் பிராட்டியாருக்குங் கொய்து கொடுத்தனரெனக்கொள்க.

தன்னமர் காதலி தன்னை நோக்கியே
மன்னவ னுன்பொருட் டேழு வாரியு
மிந்நக ரழைத்தன மீண்டு போந்துநின்
னன்னையை யாடவா னழைத்தி யாலென.

(இ-ள்.) சவுந்தரபாண்டியர் தம்மால் விரும்பப் பெற்ற தேவியாராகிய தடாதகைப்பிராட்டியாரைப் பார்த்து, உனக்காகச் சத்தசமுத்திரங்களையும் இம்மது ரைப்பதியில் வருவித்தோம்; இத்தீர்த்தத்தில்வந்து உனது மாதாவைஸ்நானஞ்செய்ய அழைப்பாய் என்று திருவாய்மலர்ந்தருள. எ-று. (௪)

இதுமுதல் மூன்றுபாடல்கள் குளகம்.

மடந்தையு மன்னையைக் கொணர்ந்து வாவிமா
டடைந்தன ளாகமற் றவள்பு ராணநூற்
படர்ந்தகேள் வியர்தமை நோக்கிப் பௌவநீர்
குடைந்திடும் விதியெவன் கூறு மென்னவே.

(இ-ள்.) தேவியாரும் தமது மாதாவை அழைத்துவந்து எழுகடற்றீர்த்தத் தின் அருகேசேர, அக்காஞ்சனமாலை நூற்கேள்வியையுடைய பௌராணிகர்களைப்பா ர்த்து, சமுத்திரநீரில் ஸ்நானஞ்செய்யும் விதியாது? கூறுதிர் என்று வினவ. எ-று. (௫)

கோதறு கற்பினுங் கொழுநன் கைத்தலங்
காதலன் கைத்தல மன்றிக் கன்றின்வா
லாதலிம் மூன்றிலொன் றங்கை பற்றியே
யோதநீ ராடுதன் மரபென் றோதினார்.

(இ-ள்.) (அதற்குப்பௌராணிகர்கள்) குற்றமற்ற கற்பினையுடைய காஞ் சனமாலையே! தன்னுடைய கணவன்கை அல்லது தன்னுடைய புத்திரன்கை (அல்

லது) பசுவின் ஆண்கன்றின்வால் (ஆகிய) இம்மூன்றில் ஒன்றைத்தன்கையாற்பிடித்து, சமுத்திரதீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்வது விதி என்று கூறினர்கள். எ-று. (௬)

மறையவர் வாய்மைபொன் மாலை கேட்டுமேற்
குறைவறத் தவஞ்செயாக் கொடிய பாவியேற்
கிறைவனுஞ் சிறுவனு மில்லை யேயினிப்
பெறுவது கன்றலாற் பிறிதுண் டாகுமோ.

(இ-ள்.) பௌராணிக வேதியரது வாய்மொழியைக் காஞ்சனமாலைகேட்டு, முற்பிறப்பிற் குறைவு அகல (நல்ல) தவத்தைச்செய்யாத கொடும்பாவியேனாகிய எனக்கு நாயகனும் புத்திரனும் இல்லையே. இனியான் (தொட்டெழுக்கப்) பெறுவது கன்றின்வாலல்லாமற் பிறிதொன்றுளதாகுமோ? (இல்லை.) எ-று. (எ)

ஆதலாற் கன்றின்வால் பற்றி யாடுகோ
மாதரா யென்றுதன் மகட்குக் கூறலும்
வேதன்மால் பதவியும் வேண்டி னார்க்கரு
ளாதனா ருயிர்த்துணை யாய நாயகி.

(இ-ள்.) பெண்ணே! ஆகையால், கன்றின் வாலைப்பற்றி ஸ்நானஞ் செய்வேனோ? என்று (காஞ்சனமாலை) தனது புத்திரியாருக்குக்கூறவும் (அதற்கு) விரும்பினவர்களுக்குப் பிரமதேவர் திருமால் (முதலானோரது) பதவிகளும் அனுக்கிரகிக்கும் சவுந்தரபாண்டியரது உயிர்த்துணையாராகிய பிராட்டியார். எ-று. (அ)

தன்னுயிர்க் கிழவனை யடைந்து தாழ்ந்துதன்
னன்னைதன் குறையுரை யாட வாண்டகை
மன்னவன் வலாரியோ டொருங்கு வைகிய
தென்னவன் மேன்மனஞ் செலுத்தி னானரோ.

(இ-ள்.) தம்முயிர்க்கு உரிமை பூண்ட அச்சுந்தரபாண்டியராஜனை அடைந்துபணிந்து, தமது மாதாவின் குறையை விண்ணப்பஞ்செய்ய (அதற்கு)ப் பேராற்றலுடைய சவுந்தரபாண்டியர் இந்திரனுடன் ஒரே ஆதனத்தில் வீற்றிருந்த மலயத்துவசபாண்டியன்மீது திருவுளஞ்செலுத்தினர். எ-று.

வலாரி-இந்திரன். வலாசுரனையழித்தவன் என்றுபொருள். இது மாணிக்கம் விற்றபடலத்தான் விளங்கும். (௯)

மேற்படி வேறு.

சிலையத் திரியார் திருவுள் ளமுணர்ந்
தலையத் திரியட் டவனா தனநீத்
துலையத் திரியொத் தவிமா னமொடு
மலையத் துவசச் செழியன் வருமால்.

(இ-ள்.) மேருமலையை வில்லாகவுடைய சவுந்தரபாண்டியரது திருவுள்ளக் குறிப்பினை யுணர்ந்து, சஞ்சரிக்கின்ற மலைகளின் சிறகுகளை அரிந்த இந்திரனது ஆசனத்திலிருந்து நீங்கி, அசைகின்ற யானைபோன்ற விமானத்தில், மலயத்துவசபாண்டியன் வருகின்றான். எ-று.

விமானமொடு என்பதில் ஒடு உருபுமயக்கம். அலையத்திரியட்டவன் என்றதற்கு அலை-அம்-திரி-அட்டவன் எனச் சொல்வகை செய்து அலைகள் பொருந்திய சமுத்திரத்திற் றோன்றிய இருபத்துநான்கு போகங்களைப் பெற்றவன் எனப் பொருள்கூறுவாருமுளர். திரி அட்டம் - மூவெட்டு.

உலையத்திரி யொத்த என்பதற்கு, கொல்லன் உலைமுகத்திலுள்ள துருத்தி போன்ற எனப்பொருள் வரைவாருமுளர். (௧0)

மண்பே றடைவான் வருமேழ் கடல்வா
யெண்பே றடையா வருளின் னமுதைப்
பெண்பே றதனாற் பெறுபே றிதெனக்
கண்பே றடைவா னெதிர்கண் டனனே.

(இ-ள்.) மண்ணுலகத்தார் பயன்பெறும்படி வந்துசேர்ந்த எழுகடற் றீர்த்தக்கரையில், மலயத்துவச பாண்டியன் தடாதகைப்பிராட்டியாரைப் பெற்றதனால் அடையும்பேறு ஈதென்று கண்ணுனதுபயன்பெறும்பொருட்டு, எண்ணிறந்த இனிய அருளமிர்தமாகிய தனது மருகனை நேரே கண்ணுற்றான். எ-று. (௧௧)

வந்தான் மருகன் சரணம் பணிவான்
முந்தா முனமா மனெனும் முறையா
லந்தா மரையங் கையமைத் தமகட்
டந்தா னையெதிர்ந் துதழீஇ யினனால்.

(இ-ள்.) சமீபத்தில்வந்த மலயத்துவசபாண்டியன், மருகராகிய சுந்தரபாண்டியரது திருவடிகளை நமஸ்கரிக்க முற்படுமுன், மாமனென்கிற முறையினால், அழகிய தாமரை மலர்போன்றகரங்களை யமைத்துத்தடுத்து, புத்திரியாராகிய தடாதகைப்பிராட்டியாரைக்கொடுத்த அம் மலயத்துவசபாண்டியனை (சுந்தரபாண்டியர்) எதிர்ந்து தழுவிக்கொண்டனர். எ-று. (௧௨)

ஆத்தன் றிருவுள் ளமகிழ்ந் தருளாற்
பார்த்தன் புநிரம் பியபன் னியொடுந்
தீர்த்தம் புகுந்தா டியசெல் கவெனப்
பூத்தண் பொருனைப் புனனா டவனும்.

(இ-ள்.) (அவ்வாறு தழுவிய) ஆப்தராகிய சவுந்தரபாண்டியர், மனமகிழ்வுற்று (மலயத்துவசனை) நோக்கி, உம்முடைய அன்புதழைத்த பத்தினியாருடன் இத்தீர்த்தத்திலிறங்கி ஸ்நானஞ்செய்யச் செல்லக்கடவீர் என்று திருவாய்மலர்ந்தருள, மலர்களைநெருங்கிய தாமிரபர்ணியினது நீர்வளம்பொருந்திய பாண்டிநாட்டையுடைய அம்மலயத்துவசனும். எ-று.

இதுமுதல் இரண்டுபாடல்கள் குளகம். (௧௩)

முன்னைத் தவமெய் திமுயன் றுபெறு
மன்னப் பெடையன் னவள்வந் தெதிரோ
தன்னைத் தழுவத் தழுவிக் கிரிவேந்
தென்னக் குறையா மகிழ்வெய் தினனே.

(இ-ள்.) ஜன்மாந்தரத்தில் தவஞ்செய்து முயன்றுபெற்ற அன்னப்பேடு போன்ற (நடையையுடைய) தடாதகைப்பிராட்டியார் எதிரேவந்து தன்னைத்தழுவ, தானும் (பிராட்டியாரைத்) தழுவி, (மலயத்துவசன்) பர்வதராசன்போல நிறைந்த மகிழ்ச்சியடைந்தான். எ-று. (௧௪)

தண்டே டயொழிவேள் விதவக் குறையாற்
கண்டே னிலனென் றுகருத் தவலா
முண்டே யஃதிவ் வுவகைக் களிதேன்
வண்டே யெனவுண் டுமறந் தனனால்.

(இ-ள்.) குளிர்ச்சி பொருந்திய தேன்போன்ற சொல்லையுடைய புத்திரியாரே! (உமது) திருமணத்தை (நான்செய்த) தவத்தில் (உண்டான) குறைபாட்டினாற் காணுதொழிந்தேனென்று என் மனத்திற் கவலையுளது. அக்கவலையை இச்சந்தோஷமாகிய களிப்பைத்தருந் தேனை வண்டுபோலப் பருகி (யான்) மறந்தேன். எ-று.

உவகையென்றது - திருமணத்திருந்த திருக்கோலம்போலப் பெருமானும் பிராட்டியாருமாக உடனிருந்த திருக்கோலம். உவகையைத் தேனென்றதற்கேற்ப, தன்னை வண்டென்று உருவகஞ்செய்தார். (௧௫)

சேணுற் றவனைச் சிலநாள் கழியக்
காணுற் றவள்போ னிறைகற் புடையாள்
பூணுற் றுமலர்ந் ததொர்பொற் கொடிபோ
னாணுற் றெதிர்நண் ணியிறைஞ் சினளால்.

(இ-ள்.) (சிலநாள்பிரிந்து) தூரத்திற்சென்ற கணவனை அச்சிலநாள்கழியக் காணப்பெற்றவள்போல, கற்பின் நிறைவையுடைய காஞ்சனமாலை (கண்டு மங்கல சூத்திரமுதலிய) ஆபரணங்களையணிந்து மலர்ந்த ஒரு பொற்கொடியைப்போல நாணமுற்று எதிர்வந்து (மலயத்துவசனை) பணிந்தனள். எ-று.

பூணுற்று என்பதற்கு மங்கிலிய மணிந்து எனப் பொருள் கொண்டது எற்றுக்கெனின், மங்கலநாணணியாது மற்றையாபரண மணித லின்மையா லென்க. இதனை ஆலாசியமகத்துவத்தில்

ஸூத்ராலங்காரயோரேவ தக்ஷிணாத்ரவஹம்பதி।
ஶிவாம்பரயோராஶிவ மங்கலஸூத்ரரக்ஷணோஜ்ஜ்வலா। என வருதல் காண்க.

மங்கலநாணைச் சிறிதுகாலம் இடையே நீக்கியிருந்த காஞ்சனமாலை மீட்டும் அதனை யணிதல் முறையோவெனின், முறையேயாம். அதற்குத் திருஷ்டாந்தமாகப் பூர்வசரித மொன்று காட்டுதும்.—

ஆரியவர்த்தநாட்டில், சித்திரவன்மனென்னும் அரசன் தன்புத்திரி சீமந்தனி வாழ்வைச் சோதிடநூலார்பாற் கேட்க, ஒருவர் பதினுயிரவருடம் வாழ்ந்திருப்பாளென்றும் ஒருவர் பதினுன்காம் வருடத்தில் வாழ்விழப்பாளென்றுங் கூறினர். இதனைச் சீமந்தனி தோழியாற் கேட்டுணர்ந்து தனது வாழ்வு நீடித்திருக்கச் சோமவார விரத நோற்கையில், தனது கணவன் சந்திரசேனமகாராஜன் தனது துணைவரோடு யமுனுநதியில் ஓடம்விட்டு விளையாடுகையில், அவ்வோடங்கவிழ்ந்தது. அவன் துணைவ ரிறந்தனர். சந்திரசேனன் தன் மனைவி நோற்குஞ் சோமவாரவிரத புண்ணியத்தால் நாகலோகமடைந்து வாழ்ந்திருந்தான். ஓடங்கவிழ்ந்தசெய்தி கேள்வியுற்ற சீமந்தனி மங்கலநாணிழந்து தான்கொண்ட விரதத்தைக் கைவிடாது நடத்திவருகையில், மூன்றுவருடங்கழித்து, சந்திரசேனன் தன்னைப் பாதுகாத்த தக்ஷனிடம் விடைபெற்று நாகலோகம் விட்டு நிலவுலகடைந்து தன் மனைவியை மீட்டும் மணம்புரிந்து வாழ்ந்திருந்தனன் என்பது போதுமான சான்று. இதனை, பிரமோத்தரகாண்டம் - சோமவாரவிரத முரைத்த அத்தியாயத்திற் காணலாம். (௧௬)

மஞ்சோ தியகாஞ் சனமா லைகையிற்
பைஞ்சோ தியிளங் குபவித் தியாய்ச்
செஞ்சோ திமுடிச் சிவநா மவெழுத்
தஞ்சோ திநெடுங் கடலா டுமரோ.

(இ-ள்.) மேகம்போலுங் கூந்தலையுடைய காஞ்சனமாலை (தனது) கையில், பசிய கிரணம்விளங்கும் பவித்திரமுடையவளாய், செவ்விய கிரணத்தையுடைய சடாமுடிபொருந்திய சிவபெருமானுரது திருநாமமாகிய ஸ்ரீபஞ்சாக்ஷரத்தை யுச்சரித்து, நெடிய எழுகடற்றீர்த்தத்தில் மூழ்கத்தொடங்கினாள். எ-று.

பவித்திரம்.—பாவத்தை நீக்கி முத்தியை யளிப்பது என்னும் பொருளது. பைஞ்சோதிவிளங்கு என்றதால், தருப்பையாற் செய்த பவித்திர மென்க. (௧எ)

துங்கக் கலைவே தியர்தொன் மறைநூற்
சங்கற் பவிதிப் படிதன் றுணைகை
யங்கைத் தளிர்பற் றியகத் துவகை
பொங்கப் புணரிப் புனலா டினளே.

(இ-ள்.) உயர்ந்த (வேதமுதலிய) நூல்களையுணர்ந்த வேதியர்கள் அநாதியாகிய வேதநூல்முறைப்படி (செய்யும், சங்கற்பவிதிப்படி தனது துணைவனுகிய மலயத்துவசபாண்டியன் கைகளை, தனது அழகிய கைகளாகிய தளிராற் பற்றி, மனத்தில் மகிழ்ச்சிமிக எழுகடற்றீர்த்தத்தி லாடினாள். எ-று. (௧அ)

குடைந்தார் கரையே றினர்கொன் றைமுடி
மிடைந்தார் கருணைக் கண்விழிக் கமல
முடைந்தா ரனைமா ருதரங் குறுகா
தடைந்தா ருமைபா கரருட் படிவம்.

(இ-ள்.) (காஞ்சனமாலையும் மலயத்துவசபாண்டியனும்) நீராடிக் கரையேறி, கொன்றைமாலையைத் தரித்த சடாமுடியை யுடைய சுந்தரேசப்பெருமானது கிருபாநோக்கமாகிய தாமரைகளாற் காணப்பட்டு, தாய்மார்கள் கருப்பத்திலடையாது, உமாதேவியாரை வாமபாகத்திலுடைய அச்சுந்தரேசப்பெருமானது அருளுருவத்தையடைந்தார்கள். எ-று.

குடைந்தார் ஏறினர் என்பன முற்றெச்சங்கள். அருட்படிவம் என்றது சிவசாரூப்பியம். உமைபாகரருட்படிவம் என்றதால், காஞ்சனமாலை உமைவடிவையும் மலயத்துவசன் சிவவடிவையும் பெற்றனரெனக் கொள்க. இது அடுத்த செய்யுளால் நன்குவிளங்கும்.

விழிக்க மலம் உடைந்தார் எனச் சொல்வகை செய்து திருவருணோக்கத்தால் மலபந்தமொழிந்து முத்தபதவிக்குப் பாத்திரராயினர் எனப் பொருள் கூறினுமிழுக்காது. (௧௯)

ஒண்கொண் டன்மிடற் றொளிரும் மொருநா
லெண்கொண் டபுயத் தெழிலும் மழல்சேர்
கண்கொண் டநுதற் கவினும் பொலியா
மண்கண் டவியப் பவயங் கினனால்.

(இ-ள்.) ஒள்ளிய மேகம்போலும் (கருநிறம்பொருந்திய) சீகண்டத்தின் பிரகாசமும், ஒப்பில்லாத நான்கு என்னும் எண்கொண்ட திருப்புயங்களின் எழுச்சியும், அக்கினிக்கண்பொருந்திய நெற்றி யழகோடும், (மலயத்துவசபாண்டியன்) பொலிந்து, மண்ணுலக மாந்தர்கள் பார்த்து அதிசயமீக்கூர விளங்கினான். எ-று.

எழில்-எழுச்சி. எழு பகுதி, இல் தொழிற்பெயர் விகுதி. (௨௦)

விண்ணின் றுவழுக் கிவிழுங் கதிர்போற்
கண்ணின் றநுதற் கருணா கரன்வா

மெழண்ணின் றபுரத் தினிழிந் திமையா
மண்ணின் றமெதார்தெய் வவிமா னமரோ.

(இ-ள்.) ஆகாயத்திலிருந்து வழுக்கி(பூமியின்பேரில்)விழுஞ்சூரியன்போல, (அக்கினிக்)கண்பொருந்திய நெற்றியையுடைய கிருபைக்கு வாசஸ்தானமாகிய சிவ பெருமான் வீற்றிருக்கும் (திருமால்முதலியோர்) எண்ணத்தில் நிலைபெற்று நின்ற சிவலோகத்தினின்றும், ஒருதெய்வவிமானமானது நிலவுலகிலிறங்கி விளங்கிநின்றது.

அத்தெய் வவிமா னமடுத் திடலு
முத்தெய் வதமுக் கணவன் பணியா
னத்தெய் வதருக் கரனங் கையொடு
மெத்தெய் வதமுந் தொழவே றினனால்.

(இ-ள்.) அந்தத் தெய்வவிமானம்வர, (சோம சூரி யாக்கினிகளென்னும்) மூன்று தெய்வங்களை மூன்றுகண்களாகவுடைய சுந்தரேசப்பெருமானது கட்டளைப் படி, சிறந்த திவ்வியகற்பகதாருபோன்ற (கொடைக்) கையையுடைய மலயத்துவச பாண்டியன் (தனது மனையாட்டியாகிய) காஞ்சனமாலையுடன் எல்லாத்தேவர்களும் பணிய (அவ்விமானத்தில்) ஏறினன். எ-று.

நத்தெய்வதரு என்றதில் நகரவிடைச்சொல் சிறப்புப்பொருட்கண்வந்தது. நக்கீரனார் நப்பாலத்தனார் என்பவற்றின் நகரம்போல. (௨௨)

தேமா ரியெனும் படிசிந் தநறும்
பூமா ரிபொழிந் ததுபொன் னுலகந்
தூமா மறையந் தரதுந் துபிகா
ராமா மெனவெங் குமதிர்ந் தனவால்.

(இ-ள்.) (அவ்வாறு ஏறியவுடன்) பூலோகத்திலுள்ளவர்கள், இனியமழை யென்று சொல்லும்படி, விண்ணுலகத்திலுள்ளவர்கள் (எங்கும்) சிதறப் புஷ்பவருஷம் பொழிந்தார்கள். பரிசுத்தமாகிய வேதங்களும் அந்தரதுந்துபிகளும் (கேட்டோர்) மேகத்தின் முழக்கமாம் முழக்கமாமென்று சொல்லும்படி எவ்விடத்திலும் ஒலித் தன. எ-று.

பொன்னுலகம் சொல்லால் அஃறிணையாதல்பற்றிப் பொழிந்தது என அஃறிணை முடிபுகொடுக்கப்பட்டது. அந்தரதுந்துபி என்றது தேவவாச்சியம். (௨௩)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

எழுந்தது விமானம் வான மெழுந்ததுந் துபியு நாணி
விழுந்தது போலு மென்ன வரவொலி யெங்கும் விம்மத்
தொழுந்தகை முனிவ ரேத்தச் சுராதிகள் பரவத் திங்கட்
கொழுந்தணி வேணிக் கூத்தர் கோநகர் குறித்துச் செல்வார்.

(இ-ள்,) அவ்விமானம் மேலெழுந்தது. ஆகாயத்திற்றோன்றிய தேவதுந் துபியின் கோஷமும் வெட்கி (பூமியில்) விழுந்ததுபோலுமென்று (கேட்டோர்) கூற, அரகரவென்னும் பேரொலி எவ்விடத்தும் நிரம்பவும், (எத்தகையினரும்) பணியுந்தன் மையையுடைய முனிவர்கள் வாழ்த்தவும், தேவர் முதலானோர் துதிசெய்யவும், இளம் பிறையணிந்த சடாமுடியையுடைய சிவபெருமானாரது சிறந்த நகரத்தைநோக்கிச் செல்வாராயினர். எ-று.

கோநகர் என்பதற்கு மால் அயன் முதலானோர் பதவிகளிற் சிறந்த நகரம் எனப்பொருள்கூறினும் பொருந்தும். (௨௪)

முன்புதன் னுருவாய் வைய முறைபுரி கோல்கைக் கொண்டு
பின்புதன் னுருவந் தந்த மருகனும் பெருகு கேண்மை
யன்புதந் தருகு நின்ற தடாதகை யணங்கு மீண்டு
பொன்புனை குடுமிக் கோயில் புகுந்துநன் கிருப்பக் கண்டார்

(இ-ள்.) (அவ்வாறுசெல்வோர்) முன்பு தனது வடிவமாய்ப் பூலோகத்தை மனுமுறைப்படி பாதுகாக்குஞ் செங்கோலைக்கைப்பற்றி, பின்பு தமது திருவுருவத்தைத் தந்தருளிய சுந்தரபாண்டியரும் மிகுந்த நண்புடன் அன்புசெய்து அவர்பக்கலிலிருந்த தடாகைப்பிராட்டியாரும் (அவ்வெழுகடற் றீர்த்தத்தருகிலிருந்த திருநந்தனவனத்தினின்றுந்) திரும்பி, பொன்னாற்செய்த சிகரத்தையுடைய திருக்கோயிலுட் புகுந்து மகிழ்கூர்ந்திருக்கத் தரிசித்தார்கள். எ-று.

பின்புதன்னுருவந்தந்த என்பதனைத் தடாதகையணங்கு என்பதனோடு மொட்டுக. முன்பு தன்னுருவம் என்றது பாண்டியர் திருவுருவமும், பின்பு தன்னுருவம் என்றது சிவபெருமான் றிருவுருவமுமெனக் கொள்க.

இச்செய்யுள் பரிவருத்தனையணி "பொருள்பரி மாறுதல் பரிவருத் தனையே" என்றார் தண்டியாசிரியர். (௨௫)

முன்னைவல் வினையால் யாக்கை முறைதடு மாறித் தோற்ற
மன்னிய மனிதர் போலப் பண்டைய வடிவ மாறி
யன்னையே மகளா யீன்ற வப்பனே மருக னாக
வென்னையா நோற்றோ மியார்க்கு மியற்றருந் தவந்தா னென்னா.

(இ-ள்.) அநாதியாகிய வலிய பாச கன்மத்தினாலே, பலவகைப்பட்ட சரீரங்களில் (செல்லுவது) ஒழிந்து (மக்கட்பிறப்பில்) தோன்றிய மானுடரைப்போல, (தமதிச்சையால்) முன்னுள்ள திருவுருவமாறி, (சர்வலோக) மாதாவாகிய உமையே (தமக்குப்) புத்திரியும், (எல்லாவுயிர்களையும்) தந்தருளிய அப்பனே (தமக்கு) மருமகனாகவும், எவர்க்குஞ் செய்தற்கரிய தவங்களுள் என்னதவத்தை யாஞ் செய்து முடித்தோமோ? என்று கருதி. எ-று.

இதுமுத லிரண்டுபாடல்கள் குளகம்.

என்ன என்றது வினாவிடைச்சொல்லடியாகப் பிறந்த குறிப்பு வினையாலணையும்பெயர்.

யாக்கை முறைதடுமாறலாவது பிதாமாதாபுத்திரபுத்திரிக்கிரமந் தடுமாறல்.

பலவகைப்பட்ட சரீரங்களில் தடுமாறிப் பிறத்தல் எனப் பொருள் கூறின் எழுவகைத்தோற்ற மெண்பத்துநான்குலக்ஷம் யோனிபேதமாகிய பிராணிகளென்க. அவற்றை,

"ஊர்வ பதினொன்று மொன்பது மானுட
நீர்ப்பறவை நாற்காலோர் பப்பத்து—சீரிய
பந்தமாந் தேவர் பதினா லயன்படைத்த
வந்தமில்சீர்த் தாவரநா லைந்து" என்பதனானறிக. (௨௬)

கன்றகலான்போ லையன் கனைகழல் விடாது பற்றி
யொன்றிய வன்பு பின்னின் றீர்த்தெழ வுள்ளத் தோடுஞ்
சென்றிரு கண்ணு முட்டி யடிக்கடி திரும்பி நோக்கக்
குன்றுறழ் விமானந் தன்னை யஞ்சலி கூப்பிச் செல்வார்.

(இ-ள்.) கன்று நீங்கிய பசுவானது (தனது கன்றை அடிக்கடி திரும்பிப் பார்ப்பது) போல, சுந்தரேசரது சத்திக்கின்ற வீரக்கழலணிந்த திருவடியை விடாது (பற்றுக்கோடாகப்) பற்றி, ஒற்றுமைப்பட்ட அன்பு பின்னின்று இழுத்தலால், மனத்துடன் இருகண்களும் போய் முட்டி அடிக்கடி திரும்பிப்பார்க்க, பொன்மலை போன்ற விமானத்தை (தமது கரங்களைக்)குவித்து அஞ்சலிசெய்து செல்லாநின்றார்.எ-று.

அஞ்சலி என்னும் வினைப்பகுதி வினையெச்சப் பொருளில் வந்தது. (உஎ)

மேற்படி-வேறு.

புவலோகங் கடந்துபோய்ப் புண்ணியருக் கெண்ணிறந்த போக மூட்டுஞ்
சுவலோகங் கடந்துபோய் மகாலோகஞ் சனலோகந் துறந்து மேலைத்
தவலோகங் கடந்துபோய்ச் சத்தியலோ கங்கடந்து தண்டு ழாயோ
னவலோகங் கடந்துலக நாயகமாஞ் சிவலோக நண்ணி னாரே.

(இ-ள்.) (அவ்வாறு செல்கின்றவர்) புவலோகத்தைக் கடந்துபோய், புண்ணியமுடையோர்க்கு அளவில்லாத போகங்களைப் புசிப்பிக்குஞ் சுவலோகத்தைக் கடந்துபோய், (அதன்மேலுள்ள) மகாலோகத்தையும், சனலோகத்தையுங் கடந்துபோய், (அவற்றின்மேலுள்ள) தவலோகத்தையுங் கடந்துபோய், சத்தியலோகத்தையுங் கடந்துபோய், தட்பமாகிய துளவமாலையணிந்த திருமாலினது நவலோகத்தையுங் கடந்துபோய், இவ்வுலகங்களுக்கு (எல்லாம்) இறைமைத்தன்மை பூண்ட சிவலோகத்தையடைந்தனர். எ-று.

பூலோகத்தின்மேல் பதினைந்திலக்ஷயோசனை யுயரத்திற் சந்திரசூரியர் முதலியோர் வசிக்கும் பதவியாகிய புவலோகமும், அப்புவலோகத்தின்மேல் எண்பத்தைந்துலக்ஷயோசனையுயரத்தில் தேவர் முனிவர் சேவிக்க இந்திரன்வசிக்கும் பதவியாகிய சுவலோகமும், அச்சுவலோகத்தின்மேல் இரண்டுகோடியோசனையுயரத்தில் மரீசி மார்க்கண்டர் சித்தர் முதலியோர் வசிக்கும் பதவியாகிய மகாலோகமும், அம்மகாலோகத்தின்மேல் எட்டுக்கோடியோசனை யுயரத்தில் கவ்வியவாகனர்-அனலர்-சோமர்-யமர்-அரியமணர்-அக்கினிவாக்கர் முதலிய பிதிர்த்தேவர்களும் நிருத்தர் நால்வரும் அத்தசியசாரமும் மதனமுதலாயினரும் இருக்கும் பதவியாகிய சனலோகமும், அச்சனலோகத்தின்மேல் பன்னிரண்டுகோடியோசனை யுயரத்தில் சனகர் சனந்தர் சனாதர் சனற்குமாரர் சங்கு திரிசங்கு ரிபு என்னும் எழு முனிவர்களும் அருந்தவத்தமர்ந்திருக்கும் பதவியாகிய தவலோகமும், அத்தவலோகத்தின்மேல் பதினாறுகோடியோசனையுயரத்தில் பிரமபதவியாகிய சத்தியலோகமும், அச் சத்தியலோகத்தின்மேல் நான்குகோடியோசனை யுயரத்தில் சர்வான்மாக்களையும் பாதுகாத்துக்கொண்டிருக்கும் விஷ்ணுவின் பதவியாகிய நவலோகமும், அதற்குமேல் ஆறுகோடியோசனையுயரத்தில் திருமால் பிரமன் முதலியோர் சேவிக்க உமாதேவியாருடன் சிவபெருமானார் வீற்றிருக்குஞ் சிவலோகமு மிருக்குமென்பர்.

இதனை, சிவதருமோத்தரம்-கூர்மபுராணம்-வடமொழி ஸ்காந்தபுராணத்தாலும் உணர்க. (உஅ)

அறக்கொடியின் னிறைமகனை யடிபணிந்து தனையீன்றார்க் காதிவேத, மறைப்பொருடன் வடிவளித்த வருளின்மன நிறைமகிழ்ச்சி வாய்கொள்ளாமற், புறப்படுவ தெனவிரண்டு திருச்செவிக்குஞ் செங்குமுதம் பொதிந்த தீந்தே, னிறைப்பதெனப் பன்முறையாற் றுதிசெய்து தொழுதொன்று நிகழ்த்தா நின்றாள்.

(இ-ள்.) தருமவல்லியாகிய தடாதகைப்பிராட்டியார் பின்னர்த்தமது இறைவராகிய சுந்தரபாண்டியரது திருவடிகளைப்பணிந்து, தம்மைப் பெற்றவர்க்கு (எல்லா நூல்களுக்கும்) முதலாயுள்ள வேதங்களின் உட்பொருளாகிய தமது திருவுருவங் கொடுத்தருளிய அருளால் (தமது) மனத்தில் நிறைந்த மகிழ்ச்சியானது (தமது) திருவாயுளடங்காமல் (ஊற்றெடுத்துவெளி) புறப்படுவதுபோல, (அவரது) இரண்டுதிருச்செவிகளிலும், (தமது திருவாயாகிய) செவ்வாம்பலில் நிறைந்த இனிய தேனை நிறைத்தல்போல, பலவிதமாகத் துதிசெய்து பணிந்து ஒன்று சொல்லத்தொடங்கினர். எ-று.

செவிக்கும் என்றது செவியிலும் என நிற்றற்பாலது. (உக)

எண்ணிறந்த தேவர்க்கும் யாவர்க்கும் பயன்சுரக்கு மிமையோர் நாட்டுப், புண்ணியவான் றன்புனிற்றுக் கன்றுக்குங் குறைவேதென் பொருட்டென் னீன்ற, வெண்ணியது கடலொன்றே யெழுகடலு மீண்டழைத்தா யீன்ற ளாட, விண்ணிருந்த கணவனையும் விளித்துனருள் மிகவளித்துன் மேனு டந்தாய்.

(இ-ள்.) எண்ணில்லாத தேவர்கட்கும் மற்றையோர்க்கும் (அவரவர் விரும்பிய) பலன்களைக்கொடுக்குந் தேவலோகத்திலுள்ள புண்ணியவடிவமாகிய காமதேனுவினது இளங்கன்றுக்கு யாது குறையுளது? என்னைப்பெற்ற மாதா (நீராடற்பொருட்டுக்) கருதியது கடல் ஒன்றே. (அங்ஙனமிருக்க) என் நிமித்தமாக எழுகடலையும் இவ்விடத்தில் அழைத்தருளீர். (அன்றியும்) என்னையீன்ற அம்மாதா (தன் கணவனைக்கைப்பற்றிக்) கடலாட அமரருலகத்திலிருந்த மலயத்துவசபாண்டியனையும் அழைத்து, உமது அருள்வடிவாகிய சாரூப்பியத்தை யனுக்கிரகித்து உமது சிவலோகத்தையுந் தந்தருளினீர். எ-று. (௩0)

தென்னர்மர பிறந்ததெனப் படுபழியி லாழவருஞ் செவ்வி நோக்கிப்
பொன்னவிர்தார் முடிபுனைந்து கோலோச்சி வருகின்றாய் போலு மேலு
மிந்நிலைமைக் கிடையூறு மினியின்றே யெனத்தலைவி யியம்ப லோடுந்
தன்னிறைவி யுட்கோளை யகங்கொண்டு மகிழ்ந்திருந்தான் றமிழர் கோமான்

(இ-ள்.) பாண்டியர் மரபு (மலயத்துவசபாண்டியனுடன்) ஒழிந்ததென்று சொல்லப்படும் பழியில் அழுந்தவருங்காலத்தை யுணர்ந்து, பொன்னாற்செய்துவிளங்கும் வெற்றிமாலையணிந்த கிரீடந்தரித்துச் செங்கோல் செலுத்திவராநின்றீர்போலும். இனி இந்நிலைமைக்கு இடையூறு இல்லையே என்று, தடாதகைப்பிராட்டியார்கூற, பாண்டியர்கட்குத் தலைவராயுள்ள சுந்தரபாண்டியர் தமது மனைவியாரது உட்கிடையைத் (தாம்) திருவுளத்திலோர்ந்து அருள்கூர்ந் திருந்தனர். எ-று.

இந்நிலைமைக் கிடையூறுமினியின்றே என்றது அடியடியாய் இவ்வரசியல் வீழாது செலுத்தற்குப் புத்திரப்பேறு வேண்டுமே என்னும் பொருளைக்குறிப்பாலுணர்த்தியது. இது கருதியே 'தன்மனைவியுட்கோள்' என்று குறிப்பித்தார். (௩க)

மலயத்துவசனை யழைத்த படலம்

முற்றிற்று.

ஆ_ திருவிருத்தம் - கஉக.

---

உ

சிவமயம்.

## பதினொன்றாவது

# உக்கிரபாண்டியர் திருவவதாரப் படலம்.

கலிநிலைத்துறை.

மன்ன வன்குல சேகரன் றிருமகன் மனைவி
தன்னொ டெங்கட லாடிய தகுதியீ தந்தத்
தென்ன வன்றனித் திருமக டிருவுளங் களிப்ப
வுன்ன ருந்திற லுக்கிர னுதித்தவா றுரைப்பாம்.

(இ-ள்.) குலசேகர பாண்டிய ராசனுடைய சிறந்த புதல்வனாகிய மலயத்துவசபாண்டியன் தன்மனைவியாகிய காஞ்சனமாலையுடன் எழுகடற்றீர்த்தத்திலாடிய திருவிளையாடல் இதுவாகும். அந்தமலயத்துவசபாண்டியனது ஒப்பில்லாத பெருஞ்செல்வியாராகிய தடாதகைப்பிராட்டியார் திருவுளங்களிகூர (பகைவர்) நினைத்தற்கரிய வெற்றிவாய்ந்த உக்கிரகுமாரபாண்டியர் திருவ்வதாரஞ்செய்த திருவிளையாடலை (இனியாம்) கூறுவாம். எ-று. (௧)

அறுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

தண்ணிலா மௌலி வேய்ந்த சுந்தர சாமி ஞாலத்
தெண்ணிலா வைக றன்ன நிழலடி நிழல்போல் யார்க்குந்
தெண்ணிலாக் கவிகை நீழல் செய்தருட் செங்கோ லோச்சி
யுண்ணிலா வுயிர்தா னாகி முறைபுரிந் தொழுகு நாளில்

(இ-ள்.) தட்பமாகிய பிறையைச்சூடிய சடைமுடிதரித்த சுந்தரபாண்டியர் பூமியில் எண்ணில்லாதகாலம், தமது திருவடிகளின் நிழல்போலக் குடிகள் அனைவர்க்குந் தெள்ளியசந்திரன்போலும் (வெண்கொற்றக்) குடையால் நிழல்செய்து, (இன்பம் அடைவித்துக்) கிருபையுடன்செங்கோல்செலுத்தி, உடம்பினுள்விளங்கும் உயிர்போன்று (ஒருவரும் வருந்தாமல் அவரவர்க்குற்ற துன்பந்துடைத்து) மனுமுறைப்படி அரசுசெய்து வருங்காலத்தில். எ-று.

எண்ணிலாவருடமெனக் கூறியிருப்பினும், வடமொழியிலுள்ள ஆலாசிய மகத்துவத்தில் அறுபதினாயிரவருடம் அரசுபுரிந்ததாகக் கூறப்பட்டுள்ளது. அதனை,

வாஷயாமாஸ ஷஷ்டி ஸஹஸ்ராஸ்ஸமா ஸுகம்।
ஸந்துஷ்டகத்ருப்தஶா ராஜலோகா விஶாலயா தாம்॥ எனவருஞ் சுலோகத்தானறிக. (௨)

கரியவன் கமலச் செம்மன் மறைமுதற் கலைகள் காண்டற்
கரியவ னன்பர்க் கென்று மெளியவ னருகு மேன்மை
தெரியவன் பகன்ற சிந்தைத் தென்னவன் றனக்குங் கற்பிற்
குரியவ டனக்குங் காதன் மகனென வுமையைத் தந்தான்.

(இ-ள்.) கருநிறம் பொருந்திய திருமாலுந் தாமரைமலரில் வசிக்கும் பிரமதேவரும் வேதமுதலிய கலைகளுங்காணுதற்கரியவனும், அடியவர்களுக்கு எப்பொழு



II

உக்கிரபாண்டியன் திருவவதாரப்படலம்.

தும் (காணுதற்கு) எளியவனுமாகிய சிவபெருமான், தனது மேம்பாட்டை (யாவரும்) அறிய, அன்புநிறைந்த வுள்ளத்தையுடைய மலயத்துவசபாண்டியனுக்கும் (அவனது) இல்வாழ்க்கைக்குரிய மனைவியாகிய காஞ்சனமாலைக்கும், விருப்பந்தரும் புதல்வியாக உமாதேவியாரை (முன்பு) தந்தருளினர். எ-று. (௫)

மற்றதற் கிசையத் தானு மருமக னாகி வைய
முற்றும்வெண் குடைக்கீழ் வைக முறைசெய்தா னாக மூன்று
கொற்றவர் தம்மிற் றிங்கட் கோக்குடி விழுப்ப மெய்தப்
பெற்றது போலு மின்னும் பெறுவதோர் குறைவு தீர்ப்பான்.

(இ-ள்.) (உமாதேவியாரை அவருக்குப் புத்திரியாகக் கொடுத்தருளிய) அதற்கியையத் தாமு மருகராகி, உலகமுழுவதுந் தமது வெண்கொற்றக்குடையின் நீழலிலிருக்கச்செங்கோல்செலுத்திவருதலால் (தமிழ்நாட்டு) மூவேந்தருள்ளே சிறந்த சந்திரவமிசம் மேம்பாடுறப்பெற்றது. இன்னும் (அம்மரபு) பெறுவது ஒருகுறைவு தீர்ப்பவராயினர். எ-று.

போலும் உரை யசை யிடைச்சொல். (௬)

ஒன்றினைச் செய்கை செய்யா தொழிகைவே றொன்று செய்கை
யென்றிவை யுடையோ னாகி யீறிலாப் பரம யோகி
நன்றுதீ திகழ்ச்சி வேட்கை நட்பிகல் விளக்கு மாயை
வென்றவன் செய்யு மாயை விருத்தியா ரளக்க வல்லார்.

(இ-ள்.) (ஆன்மாக்கட்காக) ஒன்றைச்செய்தலும், (அதனை) செய்யாதொழிதலும், (கருதாத) பிறிதொன்றைச் செய்தலும், என்று கூறப்பட்ட இவ்வகைய குணங்களையுடையவரும், பிறப்பிறப்புகளில்லாத பரமயோகியும், நன்மையுந் தீமையும், வெறுப்பும் விருப்பும், உறவும் பகையும் (ஆகிய இவற்றைச்) செய்யும் மாயையை (இயல்பாகவே) நீங்கினவருமாகிய சுந்தரேசப்பெருமானது மாயாவிருத்தியை, அளவிடற்பாலர் யாவர்? (ஒருவருமிலர்.) எ-று.

ஒன்றினைச்செய்கை - கர்த்தத்துவமும், செய்யாதொழிகை அகர்த்தத்துவமும் வேறொன்றுசெய்கை அன்னியதா கர்த்தத்துவமும் ஆம். இம்மூன்றும் பிரபுத்துவ சாமர்த்தியகுணங்கள்.

ஒன்றினைச் செய்கை செய்யா தொழிகை வேறொன்று செய்கை என்பதை

"ஒன்றை நினைக்கி னதுவொழிந்திட் டொன்றாகு
மன்றி யதுவரினும் வந்தெய்து—மொன்றை
நினையாத முன்வந்து நிற்பினு நிற்கு
மெனையாளு மீசன் செயல்"—என்னும் ஔவையார் திருவாக்கானறிக. (௭)

இந்திர சால விச்சை காட்டுவா னென்னத் தன்பாற்
செந்தழ னாட்ட மீன்ற செல்வனைக் கருப்ப மெய்தா
தந்தமி லுயிரு ஞால மனைத்தையு மீன்ற தாயாஞ்
சுந்தர வல்லி தன்பாற் றோன்றுமா றுள்ளஞ் செய்தான்.

(இ-ள்.) இந்திரஜாலவித்தையைக் காட்டுகிறவனைப்போல, தம்பாலுள்ள செவந்த அக்கினிக்கண் தந்தருளிய புத்திரனை, கருப்பத்திலடையாமல், எண்ணிறந்த உயிர்களையும் உலகங்களையும் எல்லாவற்றையும் பெற்றருளிய உலகமாதாவாகிய தடாதகைப்பிராட்டியாரிடத்து உதிக்கும்படி சங்கற்பஞ் செய்தருளினர். எ-று.

கருப்பம் எய்தாது என்றது உமாதேவியார் கருப்பமடையாமல் மூத்தபிள்ளையார் முதலியோரைத்தந்தருளியதும் என்றும் கன்னியராயிருத்தலும்பற்றி யென்க. கருப்பக்குறிதோன்றுவது பிறருக்குக் காணப்பட்டு அதன்வழி உதிக்காமையின் 'இந்திரஜாலவிச்சை காட்டுவானென்ன' என்றார்.

செந்தழலுட்டமீன்ற செல்வர் எனக் கூறியதனால், நெற்றிக்கண்ணினின்றும் பிறந்த வீரபத்திரனெனவுஞ் சிலர் கூறுப. ஆயினும் வடமொழிப்புராணத்தில் ஆறு திருமுகங்களையுடைய முருகக்கடவுளே ஒரு திருமுகத்துடன் திருவவதாரஞ் செய்தருளினர் எனக் கூறப்பட்டுளது. இதனை,

அபிஷேகமஹோத்ஸவஞ்ச தாரகாரிஷடாநநஃ ।

ஸகாநநஸ்ஸமஜாதஃ ஸ்ரீ ஹாலாஸ்யேச்வராஜ்ஞயா ॥ என்பதனானறிக. (௬)

அங்கவன் வரவுக் கேற்ப வாயமும் பிறருந் தாழ்ந்து
மங்கைநின் வடிவுக் கேற்பக் கருவுரு வனப்புஞ் சீரும்
திங்கடோ றுற்று மன்றற் செவ்வியுங் காண வாசை
பொங்கிய தெங்கட் கென்றார் புனிதையப் படிபோ லானாள்.

(இ-ள்.) அப்புத்திரனது வருகைக்கு மனம்பொருந்தப்பணிந்து பிராட்டியாரே! உமது திருவுருவத்துக்குத் தக்கதாகக்கருப்போற்பத்தியின் பொலிவையும், (அப்பொலிவால்விளங்கும்) அழகையும், மாதந்தோறும் (அதுகாரணமாக) செய்து வருஞ்சடங்கின் பொலிவையுங்கண்டுகளிக்க, எங்களுக்கு ஆசைமிக்கது. என்று, தோழியரும் பிறரும் (பிராட்டியாரை) இரந்தார்கள். பிராட்டியாரும் அவ்வேண்டுகோளுக்கு இசைந்தருளினர். எ-று.

புனிதையப்படிபோலானாள் என்றது பிறர்கண்கட்குக் கருப்பமடைந்தார் போலக் காணப்பட்டனர் என்க. (௭)

கருமணிச் சிகரச் செம்பொற் கனவரை யனைய காட்சித்
திருமுலை யமுதம் பெய்த செப்பிரண் டனைய வாக
வருமுலை சுமந்து மாய்ந்த மருங்குலும் வந்து தோன்ற
வருள்கனிந் தனையா ளுவிற் கின்சுவை யார்வம் பொங்க.

(இ-ள்.) (சூசுகமாகிய) கரியமணியாலாகிய சிகரத்தையுடைய செவந்தபொன் மலைபோன்ற தோற்றத்தையுடைய அழகிய தனங்கள் அமுதத்தை நிரப்பிய இரண்டு செப்புக்களை ஒப்பனவாக விளங்கவும், வளருகின்ற தனபாரங்களைச் சுமந்து சுருங்கிய இடையும் (கட்புலனுக்கு) தோன்றவும், அருள்பழுத்தாற்போன்ற பிராட்டியார்க்கு இனிய சுவையின்மேல் விருப்பம் வரவும். எ-று.

இதுமுதல் ஏழுபாடல்கள் குளகம்.

கனகம் - கனம் என இடைகுறைந்தது. கனிந்தா லென்பது ஈறு தொக்கது.

சூசுகம்=முலைக்காம்பு. (௮)

என்னவு மெளிய வேனு மரியன வென்ன வேட்டா
லன்னவும் போக பூமி யரும்பெற லுணவு நல்கிப்
பன்னக ரமுதுந் திங்கட் படுசுவை யமுதுந் தெய்வப்
பொன்னக ரமுது மாசை புதைபடக் கணங்க ணல்க.

(இ-ள்.) (காணப்பட்ட) எப்பொருளும் எளியனவாயிருந்தாலும், (அவை) அரியபொருள் என்று விரும்புவார். அவ்வெளியபொருள்களையும், போகபூமியிலுள்ள

கிடைத்தற்கரிய உணவுகளையுங் கொடுத்து, பல நகரங்களிலுள்ள அமுதம்போன்ற உணவுகளையும், சந்திரனிடத்திற்றோன்றிய சுவைகனிந்த அமுதையும், தேவர்களது பொன்னுலகத்திலுள்ள அமுதத்தையும், (பிராட்டியார்) விருப்பம் நிரம்பச் சிவகணங்கள் (கொண்டுவந்து) கொடுக்கவும். எ-று.

போகபூமி - ஆதியரிவஞ்சம், நல்லரிவஞ்சம், ஏமதவஞ்சம், ஏமவஞ்சம், தேவகுருவஞ்சம், உத்தரகுருவஞ்சம், என அறுவகைப்படும். (கூ)

புண்ணிய முனிவர் வேத பண்டிதர் போந்து வேந்தர்க்
கண்ணிய சடங்கு மூதூ ரருங்கடி வெள்ளத் தாழ
வெண்ணிய திங்க டோறு மியற்றவிக் கன்னித் தேயம்
பண்ணிய தருமச் சார்பாற் படுபயன் றலைப்பா டெய்த.

(இ-ள்.) புண்ணிய சொரூபிகளாகிய முனிவர்களும் - வேதமுணர்ந்த அந்தணர்களும்வந்து, மன்னவர்க்கு விதித்த சடங்குகளைப் பழமையாகிய மதுரைநகரத்திலுள்ளோர் பெறுதற்கரிய திருவிழாவென்னும் பெருக்கில் அழுந்திக்களிக்க, வரையிட்ட மாதங்கள்தோறுஞ்செய்துமுடிக்கவும், இந்தக்கன்னிநாடானது (தான்) செய்த தருமநெறியால் வந்தபலனையடையவும். எ-று.

திங்கடோறு மியற்றுஞ் சடங்கு என்றது.

கருப்பந்தரிக்கும்படி செய்யுங் கிரியையாகிய கருப்பாதானமும், ஆண்மகவு பிறக்கும்படி மருந்துபிழியுங் கிரியையாகிய புஞ்சவனமும், மூன்றிடத்து விளர்ப்புள்ள பன்றிமுள்ளினால் தலைமயிரை வகிர்ந்துசெய்யுங் கிரியை யாகிய சீமந்தமும், சீமந்தத்துளடங்குங் கிரியையாகிய விண்டுபலியுமாம், இவற்றுள், புஞ்சவனம்-இரண்டாவது அல்லது நான்காவது மாதத்திற் செய்யப்படுவது. சீமந்தம்-நான்காவது அல்லது எட்டாவது மாதத்திற் செய்யப்படுவது.

புஞ்சவனம் - வாமதேவ மந்திரத்தினால் ஆயிரந்தரமாவது நூற்றெட்டுத்தரமாவது ஓமஞ்செய்து அம்மந்திரத்தால் ஆலந்தளிர் பால் உளுந்து இவற்றைக்கொண்டு கருப்பவதியின் நாசியிற் பிழிதலாம். சீமந்தம்-வியாகிருதி அகோரமந்திரங்களால் நூற்றெட்டுத்தரம் ஓமஞ்செய்து தருப்பை அத்தி அரக்கொம்பு பன்றிமுள் இவற்றைக்கூட்டி வித்தியாங்க மந்திரத்தால் நெற்றிமுதல் மேனோக்கியிழுத்தலாம். விண்டுபலி-வயிற்றிலுள்ள பிண்டம் வலிமைபெறச் செய்தல். அது இருடிகேசாதி திருநாமங்களால் விண்டுவைக் காலைமாலைகளில் ஆவாகனஞ்செய் தருச்சித்து, அகோர வியாகிருதி மந்திரங்களால் நூற்றெட்டு ஓமங்களும், விண்டுமந்திரத்தால் ஆறு ஓமங்களும், நெய்யினால் ஆறு ஓமங்களுஞ் செய்து முடிவில் எட்டுப் பிரமசாரிக்கு அன்னங் கொடுத்தலாம். (௪௦)

மாசறத் துறந்தோ ருள்ள மானவான் களங்க நீங்க
வீசர்தங் கிழமை யென்னு மிந்துவா திரைநாள் செய்த
பூசையின் பயன்றூ னெய்த வெரிபசும் பொற்கோள் வந்து
தேசொடு கேந்தி ரத்திற் சிறந்தநல் லோரை வாய்ப்ப.

(இ-ள்.) சிவபெருமானுக்குரிய கிழமை யென்னும் திங்கள், குற்றமறத்துறந்தோரது இதயத்தைப்போலத் (தனது) தேகத்திலுள்ள பெரிய களங்க மொழியவும், திருவாதிரை நக்ஷத்திரம் தான் செய்த பூசையின் பலனை அடையவும், பிரகாசிக்கின்ற பசிய பிரகஸ்பதிவந்து விளக்கத்தோடு கேந்திரத்திலேறிய நல்ல முகூர்த்தம் வாய்க்கவும். எ-று.

கேந்திரம் - உதயம் எழாமிடம் நான்காமிடம் பத்தாமிடம் வட்டத்தின் மத்தி இவ்விடங்களினிற்றல் என்பர். (கக)

முந்தைநான் மறைக டாமே முழங்கமந் தார மாரி
சிந்தநாண் மலர்பூத் தாடு மின்னெனத் திசைக டோறு
மந்தர மகளி ராடத் துந்துபி யைந்து மார்ப்ப
விந்தையுந் திருவும் வெள்ளைக் கிழத்தியும் வீறு வாய்ப்ப.

(இ-ள்.) (நூல்களுக்கெல்லாம்) முற்பட்ட நான்குவேதங்களுந் தாமே ஆர்ப்பரித்து முழங்கவும், (தேவர்கள்) மந்தாரபுஷ்பமழையைச் சொரியவும், திசைகள்தோறும் புதிய மலர்கள் பூத்து அசைகின்ற மின்னல்போல (வடிவமைந்த) ஆகாயத்திலுள்ள அரம்பாஸ்திரீகள் நடிக்கவும், தேவதுந்துபி ஐந்தும் ஒலிக்கவும், வீரலக்ஷ்மியும் திருமகளும் வெண்டாமரையிலுள்ள கலைமகளும் இறுமாப்படையவும். எ-று.

மலர்கள் அவயவங்களாகவும் மின்னல் மேனியாகவுங் கூறப்படுதலின் வடிவமைந்த என வருவிக்கப்பட்டது. இவரது திருவவதாரத்தால், விந்தையுந் திருவும் வெள்ளைக் கிழத்தியுங் களிப்படைவர் என்பதுபற்றி வீறுவாய்ப்ப என்றார். (கஉ)

அந்தணர் மகிழ்ச்சி தூங்க வடுத்தவர் வளர்க்கு முன்னர்
மந்திர வேள்விச் செந்தீ வலஞ்சுழித் தெழுந்தார்த் தாடச்
சிந்துர நுதன்மா வெட்டுஞ் சேடனும் பொறையெய்ப் பாற
விந்திரன் மேருப் புத்தேள் புனலிறைக் கிடத்தோ ளாட.

(இ-ள்.) வேதியர்கள் களிதுளும்ப அடுத்து அவர்கள் (நெய்யைச்சொரிந்து) வளர்ப்பதற்குமுன்னே, மந்திரவிதிப்படி செய்யும் யாகத்திலுள்ளசெந்நெருப்பு வலப்பால் சுழித்து (கொழுந்துவிட்டு) ஓங்கி எழுந்து ஒலித்துவிளங்கவும், சிந்தூரமெழுதிய நெற்றியையுடைய அஷ்டகஜங்களும்ஆதிசேடனும் உலகத்தைச் சுமத்தலாலுள்ள இளைப்பு நீங்கவும், இந்திரனுக்கும் மேருமலைக்கும் வருணராஜனுக்கும் இடத்தோளாடவும்.

இளைப்பாற என்றது பூபாரத்தைத் தன்றோள்மேற் சுமத்தலால் என்றும், இந்திரன் முதலியோர்க்கு இடத்தோளாட என்றது அவர்கள் சிறுக்கொழித்தலால் என்றுங் கொள்க. (கூ)

ஆலத்தை யமுத மாக்கு மண்ணலு மணங்குங் கொண்ட
கோலத்துக் கேற்பக் காலைக் குழந்தைவெங் கதிர்போ லற்றைக்
காலத்தி லுதித்த சேய்போற் கண்மழை பிலிற்று நிம்ப
மாலைத்தோட் செழியன் செல்வ மகள்வயிற் றோன்றி னாளே.

(இ-ள்.) ஆலாலவிஷத்தைத் திருவமுதுசெய்தருளிய சிவபெருமானும் உமாதேவியாரும் (தாம்) கொண்டருளிய திருக்கோலத்திற்கேற்க, உதயகாலத்திற்றோன்றிய இளஞ்சூரியன்போலவும், அக்காலத்தில் அவதரித்த முருகக்கடவுள்போலவும், தேன்மழை சொரியும் வேப்பமலர்மாலை அணிந்த தோள்களையுடைய மலயத்துவசபாண்டியனது செல்லப்புத்திரியாராகிய தடாதகைப்பிராட்டியாரிடத்தில் (செந்தழல்நாட்டமீன்றசெல்வர்) திருவவதாரஞ் செய்தருளினார். எ-று. (கச)

எடுத்தனள் மோந்து புல்லி யேந்தினள் காந்தன் கையிற்
கொடுத்தனள் வாங்கி வீங்கு கொங்கைநின் றிழிபால் வள்ளம்
விடுத்தனள் குமுதப் போதில் வெண்ணிலா வெள்ளம் போல்வாய்
மடுத்தன ளருத்தி னாடன் மைந்தனை யெம்பி ராட்டி.

(இ-ள்.) எங்கள் பிராட்டியார் (அங்ஙனம் அவதரித்த) தமது குமாரனை (திருக்கரத்தால்) எடுத்து, (உச்சி) மோந்து தழுவி ஏந்தித் (தமது) தலைவரது திருக்கரத்திற் கொடுத்து (மீண்டும்) வாங்கி, விம்மிய (தமது) திருத்தனங்களினின்று மொழுகும் பாலை வள்ளத்திற் சொரிந்து, ஆம்பல் மலரில் வெள்ளிய நிலவின் பெருக்குப் (படிதல்) போலத் திருவாயிற் புகட்டி உண்பித்தனர். எ-று.

எடுத்தனள் - ஏந்தினள் - கொடுத்தனள் - விடுத்தனள் - மடுத்தனள் என்னும் வினைமுற்றுகள்வினையெச்சங்களாய் ஒன்றனையொன்று கொண்டு அருத்தினள் என்னும் வினைமுற்றின் முதனிலை கொண்டன.

"கொங்கைநின் றிழிபால்வெள்ளம்" எனவும் பாடங்கூறுவர்.

தேவியார் உண்ணாமுலையாராகலின், பாலை வள்ளத்திற்பெய்து அருத்தினர் என்பதே சிறப்புடைத்து. இதனை,

கந்தபுராணம் - சரவணப்படலம்.

"ஆதி நாயகன் கருணையா யமலமாய்ப் பரம
போத நீரதா யிருந்ததன் கொங்கையிற் பொழிபா
லேதி லாததோர் குருமணி வள்ளமீ தேற்றுக்
காதன் மாமகற் கன்பினா லருத்தினள் கவுரி.
கொங்கை யூறுபா லருத்தியே குமரனைக் கொடுசென்
றெங்க ளையகன் முன்னரோ யிறைஞ்சுவித் திடலு
மங்கை யாலவன் றனையெடுத் தகலமே லணைத்துப்
பொங்கு பேரரு ணீர்மையா லிருத்தினன் புடையில்" என்பதனானறிக.

சலத்தலைக் கிடக்கைப் புத்தே டருநிழல் வாழ்க்கைப் புத்தே
ளலர்த்தலை யிருக்கைப் புத்தே ளாதிப்புத் தேளிர் வேதப்
புலத்தலைக் கேள்வி சான்ற புண்ணிய முனிவ ரோனோர்
குலத்தலை மகளி ரோடுங் கோமகன் கோயில் புக்கார்.

(இ-ள்.) க்ஷீராப்தியிற் சேஷசயனத்தில் அறிதுயிலமர்ந்திருக்கும் விஷ்ணுமூர்த்தி-(பஞ்ச) தருக்களின் நீழலில் அரசிருக்கை செய்யுந் தேவேந்திரன்-தாமரை மலராகிய அத்தாணியில் (சிருட்டிசெய்து) வாழும் பிரமதேவர் முதலிய தேவர்களும், வேதத்தின்கண் மிக்க கேள்வியால் நிறைந்த புண்ணியவடிவமாகிய முனிவர்களும், மற்றையோரும் (தத்தமக்குரிய) பன்னியரோடும், சவுந்தரபாண்டியரது திருக்கோயிலுட் சென்றார்கள். எ-று. (கக)

குடபுலத் தரசும் பொன்னிக் குளிர்புனற் கோழி வேந்தும்
வடபுலத் தரசர் யாருங் குறுநில வாழ்க்கைச் செல்வத்
தடல்கெழு தொண்டைத் தண்டா ரரசொடு மனிகஞ் சூழக்
கடல்கணாற் றிசையும் பொங்கி வருவபோற் கலிப்ப வந்தார்.

(இ-ள்.) மேலைத்திசைக்கு மன்னனாகிய சேரராசனும், காவிரியாற்றினது தண்ணிய நீர்சூழ்ந்த உறையூர்க்கரசனாகிய சோழராசனும், வடதிசையிலுள்ள (கஜபதி நரபதி முதலிய) வேந்தர் யாவரும், சிற்றூர் அரசியல் வாழ்வின் செல்வத்தில் வெற்றி மிக்க தொண்டைநாட்டிலுள்ள தண்ணிய மாலையணிந்த அரசனோடும், சேனைகள் புடைசூழக் கடல்கள் நான்குதிசைகளினின்றும் பொங்கிவருவனபோல (பல வாச்சியங்களும்) கல்லென்றொலிக்க வந்தார்கள். எ-று.

"குறுநில வாழ்க்கைச் செல்வத் தடல்கெழு" என்றது, குறுநில மன்னவர் பலருந் தனக்குத் திறையளக்க வுள்ளவன் தொண்டைமன்னனெனக் குறிப்பித்தது.

கோழி=உறையூர். (௧௯)

மன்னனைத் தேவி தன்னை முறையினால் வழுத்தி வாழ்த்தி
நன்னர்கோ ளாகி யோகை நவின்றுவெண் மழுமா னீத்த
தென்னவர் பெருமான் றேவி திருமுகக் கருணை பெற்றுப்
பொன்னடி பணிந்து தம்மூர் போகுவா ரினைய சொல்வார்.

(இ-ள்.) (அவ்வாறு வந்தவர்கள்) சவுந்தரபாண்டியனாயும் பிராட்டியாரையும் முறைப்படி துதித்து வாழ்த்தி, (அவர்களால்) மகிழ்கூர்ந்து ஏற்றுக்கொள்ளப்பட்டவராய்ச் சந்தோஷசெய்தி வினவி, நிணந்தோய்ந்த மழுவையும் மானையும் ஒழித்து (மானுடத்திருக்கோலங் கொண்டு) வந்தருளிய சவுந்தரபாண்டியர் தடாதகைப்பிராட்டியார் (இவர்களது) திருமுகங்களிலுள்ள அருட்பார்வையைப்பெற்று, (அவர்களது) பொன்போன்ற (அரிய) திருவடிகளைவணங்கித் தம்மூரிற்செல்லும் மன்னர்கள் இத்தன்மையான சொற்களைச் சொல்லுவாராயினர். எ-று.

கோள்=கொள்ளப்படுபொருள். "நன்னர்கோளாதி" என்றும் பாடம்.

வழுதியர் பெருமான் றன்பாற் கந்தனே வந்தா னென்பார்
பழுதறு கற்பி னுடன் பாக்கிய மிதுவே யென்பா
ரழகினுன் மதனும் பெண்மை யவாவுறு மிவன்கோ லாணை
யெழுகட லுலகோ வைய மேழையுங் காக்கு மென்பார்.

(இ-ள்.) பாண்டியர் பெருமானாகிய சவுந்தரபாண்டியரிடத்தில், முருகக்கடவுளே (குமாரராக) அவதரித்தருளினுரென்று (சிலர்) சொல்லுவார்கள். குற்றமற்ற கற்பினையுடைய தடாதகைப்பிராட்டியாரது பாக்கியம் இதுவல்லவாவென்று (சிலர்) சொல்லுவார்கள். (தன்னின்மிக்க) பேரழகினால் மன்மதனும் பெண்தன்மையை விரும்பும் இக்குமாரனுடைய செங்கோலின் ஆணை எழுகடல் சூழ்ந்த இந்நிலவுலகின்மட்டுமோ (காப்பது) சத்தலோகங்களையும் பாதுகாக்குமென்று (சிலர்) சொல்லுவார்கள்.

மனிதர்வான் றவமோ தென்பார் வைகுவோர் தவமோ வானப்
புனிதர்வான் றவமோ வெள்ளிப் பூசுரர் தவமோ கேள்வி
முனிவர்வான் றவமோ வீறு முதலிலா முதல் வனுள்ளக்
கனிதரு கருணை போலிக் காதலன் றோற்ற மென்பார்.

(இ-ள்.) அந்தமும் ஆதியுமில்லாத சுந்தரேசப்பெருமான் திருவுள்ளத்திற் கனிந்து தோன்றிய திருவருள்போல இப்புத்திரனது திருவவதாரம் (இப்பூமியிலுள்ள) மனிதர்கள் செய்த உயர்தவப்பேறோ? (அன்றி) பாண்டிநாட்டிலுள்ளோர் செய்த தவப்பேறோ? விண்ணுலகிலுள்ளவர்கள் செய்த பெருந்தவப்பேறோ? யாககாரியஞ்செய்யும் அந்தணர் தவப்பேறோ? நூற்கேள்வியில் வல்ல முனிவர்கள் செய்த பெருந்தவப்பேறோ? என்று, (சிலர்) சொல்வார்கள். எ-று. (௨௦)

தருமமா தவத்தின் பேறோ வருத்தமா தவத்தின் பேறோ
பெருமைசால் காம நோற்ற பெருந்தவப் பேறோ வெய்தற்
கருமையாம் வீடு நோற்ற வருந்தவப் பேறோ விந்தத்
திருமக னென்று தம்மில் விளும்பமகிழ் சிறப்பச் சென்றார்.

(இ-ள்.) இந்தச் செல்வக்குமாரன் (அவதாரம்) தருமஞ்செய்துமுடித்த பெருந்தவப்பயனோ? பொருள் செய்துமுடித்த பெருந்தவப்பயனோ? பெருமை மிக்க

காமம் நோற்றுபெரிய நோன்பின்பயனோ? அடைதற்கரிய மோக்ஷம் நோற்றுமுடித்த அரிய நோன்பின்பயனோ? என்று, (ஒருவர்க்கொருவர்) தம்முள் வினவி, மகிழ்ச்சி மீக்கூரப் போயினார்கள். எ-று.

தருமாதி புருஷார்த்த சதுஷ்டயமும் இக் குழந்தையால் மேவிடு மாதலின், அவை தனித்தனியே நோற்ற தவப்பலனு லவதரித்ததுபோலும் என்றார். (உக)

அவ்வவர் மனைக டோறு மங்கல வணிக ளாகக்
கௌவைமங் கலங்க ளார்ப்பக் கடிநக ரெங்கும் பொங்க
நெய்விழா வெடுப்பக் கேள்வி நிரம்பிய மறையோர்க் கீந்த
தெய்வமா தான நீத்தந் திரைக்கட லடுத்த தம்மா.

(இ-ள்.) அவரவர் வீடுகளிலெல்லாம் அலங்காரங்க ளுடைய சுபங்களாகக் கொண்டு, முழக்கத்தையுடைய மங்கலவாத்தியங்கள் முழங்கவும், காவலுள்ள மதுராபுரி முழுவதுங்களிகூர எண்ணெய்விழாக் கொண்டாடவும், நூற்கேள்வியில் நிறைந்த அந்தணர்க்குத் தந்த பெரிய தானவெள்ளம் (உவட்டெடுத்து) அலையையுடைய கடலிற்புகுந்தது. எ-று.

நீத்தம் என்றது தானைவார்க்கு நீரை. (உஉ)

சுண்ணமும் பொரியுந் தூவெள் ளரிசியுந் தூர்வைக் காடுந்
தண்ணறுஞ் சிவிறிவீசு தண்பனி நீருஞ் சாந்து
மெண்ணெயு நானச் சேறும் பசையற வெடுத்து வாரிக்
கண்ணக னகர மெங்குங் கழுவின தான வெள்ளம்.

(இ-ள்.) அந்தத் தானவெள்ளம் (மகிழ்ச்சியாலே சிந்திய) பொற்சுண்ணமும் நெற்பொரியும் புனிதமாகிய வெள்ளிய அரிசியின் குப்பையும் அறுகின்குப்பையும் (ஆகியவற்றை) துருத்தியால் வீசிய தட்பமாகிய நறுமணங்கமழுங் குளிர்ந்த பனிநீரையுஞ் சந்தனக்குழம்பையும் எண்ணெயையுங் கஸ்தூரிக்குழம்பையும் பசையற வாரியெடுத்து இடமகன்ற மதுராபுரி முழுவதுஞ் சுத்திசெய்து சென்றது. எ-று.

தானவெள்ளம் என்றதற்கு ஆண்டு வந்திருந்த யானைகளின் மதநீர் வெள்ளம் எனப் பொருள்கூறினும் பொருந்தும். கழுவினது என்பதில் துவ்வீறு தொகுத்தல் விகாரம்.

சுண்ண முழலியவை குப்பையாகச் சுமந்திருத்தலின் தானநீர் அவற்றையெடுத்து வாரிக் கழுவினது என்றார். (உ௩)

செம்பொன்செய் துருத்தி தூம்பு செய்குழல் வட்ட மாக
வம்பொன்செய் சிவிறி வெண்பொ னண்டைகொண் டாரந்தூங்கும்
வம்பஞ்சு முலையி னுரு மைந்தரு மாறி யாட
வம்பஞ்சு மாறி மாறி யனங்கனு மாடல் செய்தான்

(இ-ள்.) செம்பொன்னாற்செய்த நீர்த்துருத்தியையும் (முகத்தில்) துவாரஞ்செய்த குழலையும், வட்டமாக அழகிய பொன்னாற்செய்த (நீர்தூவுந்) துருத்தியையும், வெள்ளியாற் செய்த ஒருவகை (நீர்தூவுங்) கருவியையுங்கொண்டு, முத்தாரமானது தொங்கி யசையும் கச்சு அஞ்சுந் தனங்களையுடைய பெண்களும் புருடரும் மாறிமாறி (ஒருவர்மே லொருவர் நீர்தூவி) விளையாட, பஞ்சபாணங்களையும் மாறி மாறி (அந்த நாயகி நாயகர்மீது அவர்கட்கு மோகமுண்டாக) மன்மதனும் பிரயோகஞ்செய்தான்.

வம்பு = கச்சு. முலைக்குக் கச்சு அஞ்சுவது அம் முலைகள் பூரிக்கும்போது தமக்குத் துன்பு மெய்துமென்னும் எண்ணத்தா லென்க.

மாறிமாறி ஆடலாவது துருத்தியுஞ் சிவிறியு மேந்திய சிறுமியர், குழலும் அண்டையு மேந்தி நீர் தூவலும், குழலும் அண்டையுந் தாங்கிய ஆடவர் துருத்தியுஞ் சிவிறியு மேந்திநீர் தூவலுமாம். (௨௪)

இன்னணங் களிப்ப மூதூ ரிந்துவா திரைநன் னாளிற்
பொன்னவன் கேந்தி ரித்த புனிதலக் கினத்திற் போந்த
தென்னவர் பெருமான் சேய்க்குச் சாதகச் செய்தி யாதி
மன்னவர்க் கியன்ற வேத மரபினால் வயங்க வாற்றி.

(இ-ள்). இந்தப்பிரகாரம் பழமையாகிய மதுராபுரியானது மகிழ்ச்சியின் மூழ்க, பாண்டியர் பெருமானாராகிய சுந்தரபாண்டியர் சோமவாரத்தில் நல்ல திருவாதிரை நக்ஷத்திரத்தில் பிரகற்பதி கேந்திரித்த புனிதமாகிய லக்கினத்தில் அவதரித்த (தமது) புத்திரருக்கு, சாதகன்ம முதலியவற்றை க்ஷத்திரியகுலத்திற்குப் பொருந்தக் கூறிய வேதநூன் முறைப்படி விளங்கச்செய்து. எ-று.

இதுமுத லிரண்டுபாடல்கள் குளகம்.

சாதகன்ம மென்றது—அத்திரமந்திரத்தால் நூறு ஹோமஞ்செய்து வாமமந்திரத்தால் புத்திரன்முகத்தை எதிர்நோக்கிப் பஞ்சப்பிரமமந்திரங்களை யுச்சரித்து உச்சியை மோந்து புருடமந்திரத்தை வலக்காதிற் செலுத்தல். ஆதி யென்றது - உத்தாபன மெனக. அது அசுத்தமாகிய அறையினின்றுஞ் சுத்தமாகிய உயர்விடத்திற் குழந்தையைச் சேர்ப்பிக்குங்கிரியை. (௨௫)

கரியவெண் டிரைநீர்ச் செல்வன் கல்லிற கரிந்த வென்றித்
தெரியல னுலகந் தாங்கு தெய்வத வரைக்கோ னாதித்
தரியலர் வீரஞ் சிந்தத் தருக்கழிந் தச்சந் தோற்றற்
குரியகா ரணத்தா னும முக்கிர வருமனென்றான்.

(இ-ள்.) பெரிய வெண்மைதங்கிய அலைகளையுடைய கடற்செல்வனாகிய வருணனும், மலைகளின் சிறகையரிந்த வெற்றிமாலையைத் தரித்த இந்திரனும், உலகத்தை (அசையவொட்டாமல்) தாங்குந் தெய்வத்தன்மை யுடைய மகமேரு அரசனும் முதலிய பகைவர்கள் (தமது) வீரங்கெட்டழிய இறுமாப்பொழிந்து (தன்னைக் கண்டவுடனே) அச்சந்தோன்றச் செய்தற்குரிய காரணத்தினால் உக்கிரவருமன் என்று நாமகரணஞ் செய்தருளினர். எ-று.

உத்தாபனத்திற்குப்பின் செய்யவேண்டியது நாமகரணம். அதாவது பேரிடுதலிற் செய்யுங் கிரியை. வருமன் - க்ஷத்திரியனுக்குரிய பட்டப்பெயர். (௨௬)

நாலாகு மதியிற் சந்தி மிதிப்பது நடத்தி யாறும்
பாலாகு மதியி லன்ன மங்கலம் பயிற்றி யாண்டின்
மேலாகு மதியிற் கேச வினைமுடித் தைந்தா மாண்டி
னூலாறு தெரிந்து பூண னூற்கடி முடித்துப் பின்னர்

(இ-ள்.) நான்காவது மாதத்திலே, (பிரவாசக்கிரியையாகிய) சந்திமிதித்தல்செய்து, ஆறாவதுமாதமாகிய பகுதியிலே அன்னப்பிராசனக்கிரியையை முடித்து, பதின்மூன்றாவது மாதத்திலே சவுளக்கிரியை முடித்து, ஐந்தாவது வருடத்திலே வேதநூலின் விதிவழுவாமல் உபநயனக்கிரியை முடித்து, பின்னர். எ-று.

பிரவாசம் - குழந்தையை யெடுத்துக்கொண்டு ஆலயத்திற்குச் செல்லுதலாகிய கிரியை. சவுளம் - மயிர்வினைக்குச் செய்யுங் கிரியை. உபநயனம் - பரசிவத்தைத் தரிசிப்பித்தற்குச் சமீபமாகிய வழியை யுண்டாக்குங் கிரியை. (௨௭)

பதநிரை பாழி சாகை யாரணம் பணைத்த வேத
முதனிலைக் கலையும் வென்றி முரிவிற் கலையும் வாளு
மதநிரை யொழுகு மையன் மாநிரை வையம் பாய்மா
விதநிரை யேற்ற மற்று முணர்த்தினன் வியாழப் புத்தேள்.

(இ-ள்.) பதம் நிரை பாழி சாகை ஆரணம் இவை நிரம்பிய வேதமுதலிய வரிசையாகிய வித்தைகளையும், வெற்றியும் வலியும் பெற்ற தனுர்வித்தையும், வாள் வித்தை (முதலிய ஆயுதவித்தை)யும், வரிசையாக மதநீர் ஒழுகப்பெற்ற மதமயக்க முடைய யானையேற்றத்தையும், வரிசைபட அலங்கரித்த தேரேற்றத்தையும், பல வண்ணப்பட்ட வரிசையையுடைய குதிரையேற்றத்தையும், மற்ற வித்தைகளையும் (உணரத்தக்க நூல்களையும்) பிரகஸ்பதிமுனிவர் பயிற்றுவித்தனர். எ-று.

பதம் நிரை பாழி சாகை ஆரணம் என்பன வேதத்தின் பிரிவுகள் என்பர் அன்றியும், காண்டோபக்கிரமணக் கிரியை எனவுங் கூறுவர். காண்டோபக்கிரமண மாவது வேதபாகங்களை அத்தியயனஞ்செய்ய ஆரம்பிக்குங் கிரியையாம்.

பதம் - வாசகம். நிரை - பூர்வபதத்தை யனுசரித்து உத்தரோத்தரபதத்தை யுச்சரிக்குங் கிரமம். பாழி - இரண்டு பதத்தை யெடுத்துக்கொண்டு பூர்வபதத்தை யொருமுறை யுச்சரித்து உத்தரபதத்தை இரண்டுமுறை யுச்சரித்து மீட்டும் பூர்வபதத்தை இரண்டுமுறை யுச்சரித்து உத்தரபதத்தை யொருமுறை யுச்சரிக்குஞ் சடை. சாகை - சத்தகாண்டங்களின் வேறுயுள்ளது. ஆரணம் - அச்சாகையிற் பத்துப்பிரஸ் நங்கள் கூடியது. பணைத்த என்றதற்கு இவ்வுறுப்புகளால் நிரம்பிய எனப் பொருள் கொள்க.

வேதமுதல் நிலைகலை என்றது ஆறு அங்கங்கள். அவை மந்திரம்-வியாகரணம்-நிகண்டு-சந்தோபிசிதம்-நிருத்தம்-சோதிடம் எனப்படும். (உஅ)

குருமுகத் தறிய வேண்டு மென்பதோர் கொள்கை யாலே
யொருமுறை கேட்டாங் கெண்ணெண் கலைகளு மொருங்கு தேறி
யரனல தொருவ ராலுந் தேற்றுவ தருமை யாலப்
பரனிடைத் தெளிந்தான் பாசு பதாத்திரப் படையு மன்னோ.

(இ-ள்.) (நூல்களைக்) குருமுகமாகவே (ஆராய்ந்து) அறியவேண்டு மென்னும் ஒரு கொள்கையினால், ஒருமுறை கேட்டபடியே அறுபத்துநான்கு கலைகளையும் ஒருசேர (ஐயம்-திரிபு-அறியாமை யின்றி)த் தெளிந்து, சிவபெருமானன்றி மற்றொருவராலுந் தெளிவித்தற்கருமையால், அச்சிவபெருமான் (ஆகிய சுந்தரபாண்டியர்) இடத்தில், பாசுபதாஸ்திரப் பயிற்சியையும் ஆராய்ந்தறிந்தார். எ-று.

பாசுபதம் - பசுபதியாற் கொடுக்கப்படுவது. அஸ்திரம் எனினும் படையெனினும் ஒன்று. அவை மீண்டியைந்து வந்தமையின் இருபெயரொட்டுப் பண்புத்தொகையென்க. (உகூ)

எல்லையில் கலைக ளெல்லா மகவைநா லிரண்டின் முற்றத்
தொல்லறி வுடைய னாகிக் குரவரைத் தொழுது போற்ற
வல்லவ னாகி யன்னார் மகிழ்ச்சிகொள் கலனாய் வென்றிச்
செல்வவேற் றினோரு ரோடுந் திருவிளை யாடல் செய்வான்.

(இ-ள்.) அளவில்லாத நூலுணர்ச்சி யெல்லாவற்றையும், எட்டு வயதிற் [illegible] நிரம்பத்தொன்மையாகவுள்ள முற்றறிவுடையராகி, (ஆய்ந்தறிதலுடையராகி) இரு (முது) குரவரையும் வழிபட்டுத் துதித்து வாழ்த்த வன்மையையுடையராகி,

(அவ்விருமுது) குரவருடைய மகிழ்ச்சிக்கோர் பாத்திரமாய், வெற்றிச் செல்வத்தையுடைய ஆண்சிங்கம்போன்ற இளைஞரோடும் (சென்று) திருவிளையாடல் செய்து வருவாராயினர். எ-று.

தொல்லறிவுடையோ னென்றது நுதற்கண்ணிற் பிறந்த புத்திரனாகலின்.

புகர்மத வேழ முட்டிப் போர்விளை யாடி வென்றுந்
தகரொடு தகரைத் தாக்கித் தருக்கம ராடி வென்றும்
வகிர்படு குருதிச சூட்டு வாரண மாடி வென்று
நகைமணிப் பலகை செம்பொ னான்குறுப் பாடி வென்றும்.

(இ-ள்.) புள்ளிபொருந்திய (முகத்தையுடைய) மதநீர்சொரியும் யானைகள் தம்முள்போர்செய்ய விடுத்து வெற்றிகொண்டும், ஆட்டுக்கடாக்களோடு ஆட்டுக்கடாக்களைப் பொருத்தித் தருக்குடன் போர்செய்யச்செய்து வெற்றிக்கொண்டும், பிளவுபட்ட வுதிரம்போலுஞ் சூட்டையுடைய சேவல்கள் (தம்முள் போர்செய்ய) பொருத்தி வெற்றிகொண்டும், விளங்குகின்ற இரத்தினங்கள் பதித்த பலகையின் வரையுள்ளமைந்த செம்பொன்னாலாகிய நான்கு உறுப்புகளைத் தொட்டு விளையாடி வெற்றிகொண்டும். எ-று.

நகைமணிப் பலகையென்பது சதுரங்கம். அதிலுள்ள நான்கு வுறுப்புகள் இரதம் கஜம் துரகம் காலாள். வாரணமென்னும் பல பொருள் பயக்கும் ஒரு சொல் 'வகிர்படு குருதிச்சூட்டு' என்னும் விசேடணத்தாற் சேவலை யுணர்த்திற்று. (௬௧)

காற்றினுங் கடிய மாவிற் காவதம் பலபோய் மீண்டுங்
கூற்றினுங் கொடிய சீற்றக் குஞ்சர முகைத்தும வைகை
யாற்றினுய் யானத் தாவி யகத்தினு ளின்பந் துய்த்தும்
வேற்றிறன் மைந்த ரோடு மல்லமர் விளைத்து வென்றும்.

(இ-ள்.) வாயு வேகத்தினும் விரைந்து செல்லுங் குதிரையின்மேற் பல காத தூரஞ்சென்று திரும்பியும், இயமனைக்காட்டிலுங் கொடுந்தொழில் புரியுங் கோபத்தையுடைய யானையைச் செலுத்தியும், வைகையாற்றின் கண்ணும் பூந்தோட்டத்தின கண்ணும் தடாகத்தின் கண்ணும் (விளையாடி) இன்பநுகர்ந்தும், வேற்படையினால் வெற்றிபொருந்திய இளைஞரோடும் மற்போர்செய்து வெற்றிகொண்டும். எ-று.

வைகையாற்றிலும் தடாகத்திலும் நீர்விளையாடுதலும் பூந்தோட்டத்தில் பூகொய்து ஆடலும் உடைமையால் 'வைகையாற்றி னுய்யானத்தாவி யகத்தினு ளின்பந் துய்த்து' என்றார். (௬௨)

சந்தவெற் படைந்து வேட்டஞ் செய்துமச் சைல வாழ்க்கை
யந்தண ராசி கூற வவர்தொழில் வினவு மன்னோர்
கந்தமென் கனிவி ருந்தூண் கைதழீஇக் களித்து மீண்டு
மிந்தவா றைம்மூ வாண்டு கழியமே லெய்து மால்டில்.

(இ-ள்.) சந்தனமரங்கள் நெருங்கிய பொதியமலையை யடைந்து வேட்டையாடியும், அப்பொதியாசலத்தில் வசிக்கும் முனிவர்கள் ஆசீர்வாதங் கூற அவர்கள் செய்யுந் தவத்தொழில் (இடையூறின்றி முடிதலை) வினவியும், அம்முனிவர்கள் (மனமகிழ்ந்து) கொடுத்த கிழங்கும் மெல்லிய பழங்களும் ஆகிய விருந்துணவைக்கைக்கொண்டு களித்தும், (தமது திருக்கோயிலுக்குத்) திரும்பியும், இவ்வண்ணம் பதினைந்து வருடங் கழிய, மேல்வரும் (பதினாறும்) வயதில். எ-று. (௬௩)

சூர்முதற் றடிந்த தங்க டோன்றலே யிவனென் றெண்ணிக்
கார்முக மயிலும் வேலுங் கைவிடாக் காக்கு மாபோல்
வார்முக முலையி னாரும் வடிக்கணு மருங்கு மொய்ப்பக்
கூர்முக வேலா னின்ன கொள்கைய னாகத் தாதை.

(இ-ள்.) சூரபன்மனாகிய மாமரத்தின் வேரையறுத்த தங்களிறைவராகிய முருகக்கடவுளே இவனென்று நினைத்து, கருநிறம் பொருந்திய முகத்தையுடைய மயிலும் வேலாயுதமும் பிரியாமற் காக்குந் தன்மைபோல, கச்சின் முகத்திலடங்கிய தனங்களையுடைய மாதர்களும் (அவர்கள்) மாவடுவின் பிளவுபோன்ற கண்களும் (தமது) பக்கங்களிலே நெருங்கக்கூர்மையாகிய நுனியுள்ள வேற்படை தாங்கிய உக்கிரகுமார பாண்டியர் இக்காளைப் பருவமுடையவராக, சுந்தரபாண்டியர். எ-று.

இச்செய்யுளில் மாதரை மயிலும், அவர் கண்ணை வேலுமாக உவமித்தார்.

சூர்முதல் தடிந்ததாவது.

முருகக்கடவுள் சூரபன்மனோடு யுத்தஞ்செய்கையில் அவன் கொண்ட பற்பல மாயவடிவங்களை யெல்லாஞ் சங்கரித்து வருகையிற் கடலில் பெரிய மாமரவடிவாக நின்றனன். அதனை யுணர்ந்து தமது திருக்கரத்திலுள்ள சத்தியாகிய வேலாயுதத்தைச் செலுத்தி அம்மாமரவடிவை யுமாய்த்தனர். என்பதாம். இதனை,

கந்தபுராணம் - சூரபன்மன்வதைப்படலம்.

"வன்னியி னலங்கல் கான்று வான்றழை புகையி னல்கிப்
பொன்னென வினர்க ளீன்று மரகதம் புரையக் காய்த்துச்
செந்நிற மணிக ளென்னத் தீம்பழங் கொண்டு கார்போற்
றுன்னுபல் கவடு போக்கிச் சூதமா யவுண னின்றான்.

விடம்பிடித் தமலன் செங்கண் வெங்கன லுறுத்திப் பாணி
யிடம்பிடித் திட்ட தீயிற் றோய்த்துமுன் னியற்றி யன்ன
வுடம்பிடித் தெய்வ மிவ்வா றுருகெழு செலவி னேகி
மடம்பிடித் திட்ட வெஞ்சூர் மாமுத றடிந்த தன்றே." என்பதனு னறிக.()

பங்கயச் செவ்வித் தாகிக் கண்மனம் பருகு காந்தி
யங்கழற் காலுஞ் சொன்ன வடைவினிற் றிரண்டு நீண்ட
சங்கையும் வட்டந் தோன்றாச் செழுமுழந் தாளு நால்வாய்த்
துங்கவிர்ங் கவுண்மால் யானைத் துதிக்கைபோற் றிரள்க வானும்.

(இ-ள்.) (அன்றலர்ந்த) தாமரை மலர்போலும் அழகினை யுடையதாகிக் (கண்டவருடைய) கண்ணையும் மனத்தையுங் கொள்ளை கொள்ளும் ஒளிபொருந்திய அழகிய வீரக்கழலணிந்த காலையும், (சாமுத்திரிக நூலில்) கூறிய முறையே திரண்டு நீண்ட கணைக்காலையும், (எலும்பின்) வட்டவடிவு தோன்றாமல் தசைபொருந்திய முழங்காலையும், தொங்கி யசைகின்ற வாயையும் உயர்ந்த மதநீரின் குளிர்ச்சிபொருந்திய கபோலத்தையும் மதமயக்கத்தையுமுடைய யானையினது துதிக்கைபோலத் திரண்டு விளங்குந் தொடையையும். எ-று. (௩௭)

சிறுகிய வயிறுந் தாழ்ந்த நாபியுஞ் செவ்வி நோக்கு
மறுவில்கண் ணடியி னன்ன கடிப்பகல் வரைகொண் மார்பு
வெறியிசை வினைத் தண்டி னிணைக்குரீன் டிடுமிந்த கையும்
வெறிபுதார் கிடந்த மேரு வெற்பிரண் டனைய தோளும்.

(இ-ள்.) சிறுகிய வயிற்றையும், ஆழ்ந்துள்ள உந்தியையும், அழகை நோக்கற்குரிய (கருவியாகிய) குற்றமற்ற கண்ணாடிபோல ஒளி (மிக்க) அகன்ற மலையை யொத்த மார்பையும், (நரம்பை) தடவுதலால் இசையெழும் வீணாதண்டம்போலத் தம்முள் ஒத்து நீண்டு (முழந்தாள்தொட) நிமிர்ந்த கைகளையும், வாசனைபொருந்திய மாலையணிந்த இரண்டு மகமேரு (இருந்தாற்) போன்ற (பணைத்த) தோள்களையும். எ-று. (௩௬)

வலம்புரி யென்ன வாய்ந்த கண்டமு மலராண் மன்னும்
பொலம்புரி கமல மன்ன வதனமும் பொதுவா னோக்கி
நிலம்புரி தவப்பே றன்னான் வடிவெலா நின்று நின்று
நலம்புரி நூலா னோக்கிச் சோதிப்பா னடிக்க வல்லான்.

(இ-ள்.) வலம்புரிச் சங்கைப்போல விளங்குங் கண்டத்தையும், திருமகள் நிலைபெற்றுவசிக்கும் பொன்னிறம்பொருந்திய தாமரை மலரையொத்த முகத்தையும், இந்திரஜாலவித்தை செய்யவல்ல சுந்தரபாண்டியர் பொதுவிலக்கணத்தாற் பார்த்தருளி, பூமிதேவிசெய்த தவப்பலனை யொத்த உக்கிர குமாரபாண்டியருடைய அவயவங்க ளெல்லாவற்றையும் உற்றுப்பார்த்துச் சாமுத்திரிக நூலிற் சொல்லிய சிறப்பிலக்கண மரபாற் சோதிக்கத் தொடங்கினர். எ-று.

நலம்புரி நூல்-என்றது ஈண்டு அவயவங்களி னிலக்கணங்கூறு நூல். (௩௭)

உன்னத மாறு நீண்ட வுறுப்பைந்து சூக்கந் தானு
மன்னது குறுக்க நான்கா மகலுறுப் பிரண்டே மூகச்
சொன்னது செவப்பு மூன்று கம்பீரந தொகுத்த வாறே
யின்னவை விரிக்கி னெண்ணான் கிலக்கண வுறுப்பா மென்ப.

(இ-ள்.) உயர்ந்த வுறுப்புகளாறும், நீண்ட வுறுப்புகளைந்தும், சிறுகிய வுறுப்புகள் ஐந்தும், குறுகிய வுறுப்புகள் நான்கும், அகன்ற வுறுப்புகளிரண்டும், செவந்த வுறுப்புகளேழும், ஆழ்ந்தவுறுப்புகள் மூன்றும், ஆக முப்பத்திரண்டு உறுப்புகள் இலக்கணமுடையனவென்றுகூறுவர். (இனி) தொகுத்துக்கூறிய முறையே இவற்றை விரித்துக் கூறப்புகின். எ-று.

இது முதல் நான்கு கவிகளாற் புருடசாமுத்திரிகங் கூறுகின்றார்.

இரண்டு அகன்றும் நான்கு குறுகியும் என்பதற்குப் பதிலாக, சில நூல்கள் மூன்றகன்றும் மூன்று குறுகியும் இருக்குமெனக் கூறும். இதனை.

காசிகண்டம்.

"ஐந்துநீண் டைந்து நேர்ந்தே யாறிட முயர்ந் தேழ்சேந்து
மூந்துமூன் றகன்று மூன்று குறுகிமூன் றாழ்ந்தி ருக்கு
மந்தமில் குணங்கண் முப்பா னிரண்டொடு மமர்ந்த மாந்த
ரிந்திர திருவி னோங்கி யினிதுவீற் றிருப்பர் மாதோ"—என்பதனானறிக. (௩௮)

வயிறுதோ ணெற்றி நாசி மார்புகை யடியிவ் வாறு
முயரில்வான் செல்வ னாகு மொளிகவர் கண்க போலம்
புயல்புரை வள்ளற் செஙகை புதுமணங் கவருந் துண்டம்
வியன்முலை நடுமார் பைந்து நீண்டவேல் விளைக்கு நன்மை.

(இ-ள்.) வயிறு-தோள் - நெற்றி - நாசி-மார்பு - கையடி யென்னும் இவ்வாறுறுப்புகளும் உயர்ந்திருந்தால் மேம்பட்ட செல்வ முடையவனாவான், ஒளியைக் கிரகிக்கின்ற கண்-கன்னம்-மேகம்போலும் ஈகையையுடைய செவந்தகை- புதியமண

த்துக்கிரகிக்கின்ற மூக்கு - முலைகளின் மத்தியமாகிய அகன்றமார்பு என்னும் இவ் வைந்துறுப்புகளும் நீண்டிருக்குமாயின் நன்மையைத்தரும். எ-று.

கையடி என்றது முழங்கையிலிருந்து சிறுவிரலின் கடைவரையிற் கொண் டதென்றுங் கணுக்கையிலிருந்து அவ்வெல்லை கொண்டதென்றுங்கூறுப. (௩௯)

நரியபூங் குஞ்சி தொக்கு விரற்கணுநகம்பல் லைந்துஞ்
சிறியவே லாயுள் கோசஞ் சங்கைநா முதுகிந் நான்குங்
குறியவேற் பாக்கி யப்பே றுஞ்சிரங் குளமென் றுய்நதோ
ரறியுமிவ் வுறுப்பி ரண்டு மகன்றவே லதுவு நன்றாம்.

(இ-ள்.) நறுமணங்கமழும் மலரணிந்த சிகை-விரல்கள் - கணு -நகம்-பல்- என்னும் இவ்வைந்துறுப்புகளுஞ்சிறுத்துச் சூக்குமமாயின் ஆயுள்(வளரும்). கோசம்- கணைக்கால் - நா - முதுகு என்னும் இந்நான்குறுப்புகளுங் குறுகியிருக்குமாயின், செல்வப்பலனுறும். தெளிந்தோ ருணருகின்ற தலை-நெற்றியென்னு மிவ்விரண்டுறுப் புகளும் அகன்றிருக்குமாயின் அவ்வகற்சியும் நன்மையாம். எ-று. (௪0)

அகவடி யங்கை நாட்டக் கடையித ழண்ண நாக்கு
நகமிவை யேழுஞ் சேந்த நன்மையாற் பெறுமா லின்ப
மிகல்வலி யோசை நாபி யென்றிவை மூன்று மாழ்ந்த
தகைமையா லெவர்க்கு மேலா நன்மைசா றக்கோ னென்று.

(இ-ள்.) உள்ளங்கால்-உள்ளங்கை-கடைக்கண்-உதடு-மேல்வாய்-நாக்கு - நகம்என்னு மிவ்வேழுறுப்புகளும் நன்றாகச் செவந்திருந்தால் மிக்கஇன்பமடைவான். மிக்க வலிமை - ஓசை - நாபி என்று சொல்லப்பட்ட இம்மூன்றும் ஆழமுடைய தன்மையால் எல்லோருக்கும் மேலாகிய நன்மைமிக்கவனுவான் என்று கருதி. (௪௧)

எல்லையின் மூர்த்தி மைந்த னிலக்கண நிறைவி னோடு
நல்லவாங் குண னு நோக்கிப் பொதுவற ஞாலங் காக்க
வல்லவ னாகி வாழ்நா ணனிபெற வல்ல னென்று
வல்லணி மிடற்றான் பின்னு மனத்தினு லளந்து சூழும்.

(இ-ள்.) அளவிடற்கு முடியாத சுந்தரபாண்டியர் தமது புத்திரருடைய (அவயவங்கண் முப்பத்திரண்டின்) இலக்கண நிறைவோடு நல்லனவாகிய குணங் களையும் ஆராய்ந்து பார்த்து உலகம் பொதுத்தன்மை நீங்க (தனக்கேயுரிமையாக்கி)க் காக்கவும் வல்லவனாய், பெரிதும் நீட்டித்த ஆயுள்பெறவும் வல்லவனென்று கருதி, நீலகண்டத்தையுடைய அப்பெருமானார் பின்னுந்திருவுளத்தால் அளவிட்டு ஆலோசித் தார். எ-று. (௪௨)

இத்தகு பண்பு சான்ற நீர்மையா லிசைமை நீதி
வித்தக நல்ல வுள்ள முடைமைமெய் வீறு தெய்வ
பத்திமை யுலகுக் கெல்லா மகிழ்ச்சிசெய் பண்பு சாந்த
சித்தமெவ் வுயிர்க்கு மன்பு செய்கைநல் லீகை கல்வி.

(இ-ள்.) இவ்வகைப்பட்ட தகுதியாகிய குணங்கள் மிக்கு அமைந்திருக் குந் தன்மையால், சீர்த்தி-நீதி-ஞானம் - நன்மனம் - உண்மை - பெருமை- ஈசரபக்தி- உலகத்துக்கெல்லாம் மகிழ்ச்சி யுண்டாகும் குணம் - சித்தசாந்தி - எல்லாஜீவர்க ளிடத்துங் கருணைசெய்தல்-நல்லகொடை-கல்வி. எ-று.

இதுமுதல் மூன்று செய்யுள்கள் ஒரு தொடர். (௪௩)

வெல்லுதற் கரியார் தம்மை வெல்லுத றேவ ரானுஞ்
செல்லுதற் கரிய தேத்துஞ் சென்றிடு திறையுங் கோடல்
புல்லுதற் கரிய ஞால மாலைபோற் புயத்தி லேந்திச்
சொல்லுதற் கரிய கீர்த்தி யுலகெலாஞ் சுமப்ப வைத்தல்.

(இ-ள்.) தேவர்களாலுஞ் செல்லற்கரிய தேசங்களுக்குஞ் சென்று (அத் தேவர்களால்) ஜெயித்தற்கரிய பகைவரைச் செயங்கொள்ளல் - (அவர்கள்) கட்டும் இறையையுங் கைக்கொள்ளல் - அடைதற்கரியவுலகத்தை மாலைபோலப் புயத்தில் தாங்கி (அளவுபடுத்தி)ச் சொல்லுதற்கரிய (தனது) பிரதாபத்தை உலகமுழுவதும் சுமக்க நிலை நிறுத்தல். எ-று.

தேம் - இடப்பெயர்ச்சொல். அது உருபேற்குமிடத்து மகர ஈறும் அத்துச சாரியையின் அகரமுங்கெட்டு தேத்து என நின்றது. (௪௪)

என்றிவை யாதி யாய வியற்குண முடைய னாகி
நன்றிசெய் துலகுக் கெல்லா நாயக னொருவ னாகி
நின்றிடு மிவற்குப் பின்னர் நீண்முடி கவித்து முன்னர்
மன்றல்செய் கென்று சூழ்ந்து மதிஞரோ டுசாவி னானே.

(இ-ள்.) என்று சொல்லப்பட்ட இவைமுதலாகிய பெருந்தகைமைகளை இயற்கைக்குணங்களாக உடையனாகி (உயிர்களுக்கு) நன்மையைச்செய்து உலகமுழுவதுக்குந் தாெனாருவனே இறைவனாய் நிற்கும் இவனுக்கு, ஒளிமிக்க கிரீடத்தைப பின்னே சூட்டுவோம், திருமணத்தைமுன்னே செய்வோம்என்று ஆலோசித்துச்சுமதி முதலிய மந்திரிகளோடு ஆலோசித்தருளினார். எ-று.

கவித்தும் என்பது-எதிர்காலத்தன்மைப பன்மை வினைமுற்று. (௪௫)

உக்கிரபாண்டியர் திருவவதாரப்படலம்

முற்றிற்று.

ஆக திருவிருத்தம் - ௧௩௧௩.



## பன்னிரண்டாவது

# உக்கிரபாண்டியருக்கு வேல்வளைசெண்டு கொடுத்தபடலம்.

அறுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

உருக்குந் திறலுக் கிரகுமர னுதய மிதுவான் மதியுநதிப்
பெருக்குங் கரந்த சடைக்கற்றைப் பெருந்தேர்ச் செழியர் பிரானவற்குச்
செருக்குஞ் செல்வ மணமுடித்துச் செவ்வேல் வளைசெண் டளித்துள்ளந்
தருக்கு முடிதந் தரசுரிமை தந்த செயலுஞ் சாற்றுவாம்.

(இ-ள்.) (பகைவரை)கெடுக்கும் வலியுடைய உக்கிரகுமாரபாண்டியர் திரு வவதாரஞ்செய்த திருவிளையாடல் இதுவாம் - வெள்ளிய பிறைச்சந்திரனையும் கங்கா நதியின் பெருக்கையும் இரண்டசடைக்கற்றையும் மறைத்த [illegible] பாண்டியர் அவ்வுக்கிரபாண்டியருக்கு, செல்வத்தாற்களிக்குந் திருமணஞ்செய்வித்து,

செவ்வியவேலும்வளையும், செண்டும் ஆகிய படைகளைக்கொடுத்து, மனங்களித்தற்குக் காரணமாகிய திருமுடிசூட்டித் (தமது) அரசுரிமையையுங் கொடுத்தருளிய திருவிளையாடலை (யாம்இனி) கூறுகின்றோம். எ-று. (க)

வையைக் கிழவன் றன்னருமைக் குமரன் றனக்கு மணம் புணர்ச்சி
செய்யக் கருதுந் திறநோக்கி யறிஞ ரோடுந் திரண்டமைச்சர்
மையற் றழியா நிலத்திருவு மரபுங் குடியும் புகழ்மையுநம்
ஐயற் கிசையத் தக்ககுலத் தரசர் யாரென் றளக்கின்றார்.

(இ-ள்.) சுந்தரபாண்டியர் தமது அருமைக் குமாரராகிய உக்கிரபாண்டியருக்குத் திருமணஞ்செய்யத் திருவுள்ளங்கொள்ளுந்தன்மையைநோக்கி, பூமி-செல்வம்-மரபு-உயர்குடி-கீர்த்தி-முதலியவற்றோடு நம்முடைய சுந்தரபாண்டியருக்கு ஒப்பாகத் தக்க குலத்தையுடைய அரசர்யாவரென்று மந்திரிகள் அறிஞர்களுடன்கூடி அளவிட்டறியத்தொடங்கினார்கள். எ-று.

வையைக்கிழவன் - வைகைநதியைத் தனது நாட்டிலுடையவன். (உ)

தீந்தண் புனல்சூழ் வடபுலத்து மணவூ ரென்னுந் திருநகர்க்கு
வேந்தன் பரிதி திருமரபின் விளங்குஞ் சோம சேகரனென்
றாய்ந்த கேள்வி யவனிடத்துத் திருமா தென்ன வவதரித்த
காந்தி மதியை மணம்பேச விருந்தா ரற்றைக் கனையிருள்வாய்.

(இ-ள்.) மதுரம்பொருந்திய தட்பமாகிய நீர்சூழ்ந்த வடநாட்டிலே மணவூரென்னுஞ் சிறப்புப்பொருந்திய நகரத்திற்கு அரசனாகிய சூரியன் மரபிலே (தோன்றி) விளங்குகின்ற சோமசேகரன் (எல்லாவற்றிலுஞ் சமானமானவன்) என்றுகருதி, சிறந்தநூல் கேள்வியையுடைய அவனிடத்தில், திருமகள்போல அவதரித்த காந்திமதிதேவியைத் திருமணம்பேசக்கருதியிருந்தார்கள். அற்றைத்தினம் நெருங்கிய இருளையுடைய இரவில். எ-று.

மணவூர் - என்பதைக் கலியாணபுரமென்பர். (ங)

வெள்ளைக் களிற்றின் பிடர்சுமந்த குடுமிக் கோயின் மேயவிளம்
பிள்ளைக் கதிர்வெண் மதிமௌலிப் பெருமா னிரவி மருமானும்
வள்ளற் கரத்தான் கனவிலெழுந் தருளி வானோர் நனவிற்குங்
கள்ளத் துருவாந் திருமேனி காட்டி யிதனை விளம்புவார்.

(இ-ள்.) வெண்மையாகிய அஷ்டகஜங்கள் பிடரியிற் சுமக்குஞ் சிகரம்பொருந்திய இந்திரவிமானத்தி லமர்ந்தருளிய மிகவும் இளமையாகிய காந்திபொருந்திய வெள்ளிய சந்திரனைச்சூடிய முடியையுடைய சுந்தரேசப்பெருமான், சூரிய மரபினனாகிய கொடைக்கையையுடைய அச்சோமசேகரனது சொப்பனத்தி லெழுந்தருளித் தேவர்களது சாக்கிரத்துக்கும் மறைத்தவடிவாகிய தமது திருமேனியைக் காட்டி, இதனை அருளிச்செய்கின்றார். எ-று. (ச)

அன்ன மிறைகொள் வயன்மதுரைச் சிவன்யா மரச நீயீன்ற
பொன்னை யனையா டனைமதுரா புரியிற் கொடுபோய் மறுபுலத்து
மன்னர் மகுட மணியிடற மழுங்குங் கழற்கானற் சுந்தரனாந்
தென்னர் பெருமான் குமரனுக்குக் கொடுத்தி யென்று செப்புதலும்.

(இ-ள்.) அரசனே! அன்னப்பறவைகள் தங்குகின்ற வயல்சூழ்ந்த மதுராபுரியில் வீற்றிருக்கும் சிவபிரான் யாம், நீ பெற்ற திருமகள் போன்ற புத்திரியாகிய காந்திமதியை, மதுரை நகரத்திற் கொண்டுபோய், மறுதேசத்து அரசர்களது மகுடங்

களித்து பதித்த இரத்தினங்கள் இட்டுதலாக் தேய்ந்த வீரக்கழலணிந்த பாண்டியர் பெருமானாகிய சுந்தரபாண்டியரது புத்திரனுக்குத் (திருமணஞ்செய்து) கொடுப்பா யாக என்று திருவாய்மலர்ந்தருளவும். எ-று.

இதுமுதல் மூன்றுபாடல்கள் குளகம். (௬)

உள்ளக் கமல முககமல முடனே மலர விருதடங்க
ணள்ளற் கமல மலர்ந்துதன தங்கைக் கமல முகிழ்த்தெழுந்து
வள்ளற் பரமன் கருணையெளி வந்த செயலை நினைந்தன்பின்
வெள்ளத் தழுந்தி யெழுந்திரவி வேலை முளைக்கும் வேலையினில்.

(இ-ள்.) உடனே அககமலமும் முககமலமும் விகசிக்கும்படி, பரந்த விரண்டு கண்களாகிய தாமரைகள் மலர்ந்து தன் கரகமலங்களைக் குவித்து எழுந்து கருணாமூர்த்தியாகிய சிவபெருமானது திருவருள் எளிதாகக் கிடைத்த தன்மையைச சிந்தித்து, அன்புப்பெருக்கில் மூழ்கி யெழுந்து சூரியன்(கீழ்க)கடலிலே உதயமாகுங காலைப்பொழுதில். எ-று.

அள்ளல் கமலம் - சேற்றிலுண்டாகிய தாமரை. (௭)

நித்த நியமக் கடனிரப்பி நிருப னமைச்ச ரொடுநான்கு
பைத்த கருவிப் படையினொடு பலவே றியமுங் கலிபபத்தன்
பொய்த்த மருங்குற் றிருமகளைப் பொன்ன ஞரோ டிரதமிசை
வைத்து மணஞ்சேர் திருவினொடு மதுரை நோககி வழிக் கொண்டான்.

(இ-ள்.) அச் சோமசேகரன் நித்திய கர்மானுஷ்டானங்களை முடித்து மந்திரிமார்களுடனும், நான்காகப்பரந்த ஆயுதங்களை யேந்திய சேனைகளோடும், வெவ்வேறாகிய வாத்தியங்களும் முழங்க, நுண்ணிய இடையினையுடைய தன் செல்வப புத்திரியாகிய காந்திமதியைத் திருமகள்போன்ற சேடியர்களுடன் இரதத்தின்மீ தேற்றி, திருமணத்துக் குரிய செல்வத்துடன் மதுரைத் திருநகரை நோக்கிவரத தொடங்கினன். எ-று. (௮)

நென்ன லெல்லை மணம்பேச நினைத்த வாறே யமைச்சர்மதி
மன்னர் பெருமான் றமரோடு மணவூர் நோக்கி வழிவருவா
ரன்ன வேந்தன் றனைக்கண்டா ரடல்வேற் குமர னனையானெந்
தென்னர் பெருமான் குமரனுக்குன் றிருவைத் தருதி யெனவவையான்.

(இ-ள்.) நேற்றைப் பொழுது திருமணம்பேச வெண்ணியவகையே சந்திர மரபிற்றோன்றிய சுந்தரபாண்டியர் சுற்றத்தாரோடு மணவூரைநோக்கி வருகின்றவர்க ளாகிய மந்திரிகள் அச்சோமசேகர ராசனைப்பார்த்து, வெற்றிபொருந்திய வேற்படை யைத்தாங்கிய முருகக்கடவுளைப் போன்றவரும் எமது சுந்தரபாண்டியரது புத்திரரு மாகிய உக்கிரகுமார பாண்டியருக்கு உம்முடைய புத்திரியைத்தருவீரென்று வினவ, (அதற்கு) அச்சோமசேகரன். எ-று.

கண்டார் என்பது முற்றெச்சம். (௯)

குலனுங் குடியுங் கனவின்கட் கொன்றை முடியார் வந்துரைத்த
நலனுங் கூறி மணநேர்ந்து நயப்ப வதனை நன்மதியோர்
புலனென் றுழையர் தமைவிடுத்துப் பொருளைத் துறைவற் குணர்த்திவரு
வலனுந் துயில்வேன் மன்னனொடு மதுரை மூதூர் வந்தனைந்தார்.

(இ-ள்.) கொன்றை மாலையைத்தரித்த சந்திரசேகரப்பெருமான் (சொப்பன [illegible]

யும் மேம்பாட்டையும் எடுத்துச் சொல்லி (அவர்கள்வினவிய) மணவினைக்குடன்பட்டு விரும்பாநிற்க (அவர்களுடன்பட்ட) அச்செய்தியை நல்ல அறிவின் முதியோர்கள் மேம்பட்ட தூதுவரைச்செலுத்தி,தாமிரபர்ணியை நீர்த்துறையாகவுடைய சுந்தரபாண்டியருக்கு விண்ணப்பித்து, தம்மோடுவரும் வெற்றிபொருந்திய கூர்மையாகிய வேற்படைதாங்கிய சோமசேகரச் சோழனோடும் மதுரையாகிய தொன்றுதொட்டுள்ள நகரத்தைவந்து சேர்ந்தார்கள். எ-று. (௯)

இரவி மருமான் மதிமருமா னெதிரே பணியத் தழீஇமுகமன்
பரவி யிருக்கை செலவுய்த்துப் பாண்டி வேந்த னிருந்தான்மேல்
விரவி யமைச்சர் திருமுகங்கள் வேந்தர் யார்க்கும் விடுத்துநகர்
வரைவு நாள்செய் தணிசெய்ய மன்றன் முரச மறைவித்தார்.

(இ-ள்.) சோமசேகரச்சோழன் சவுந்தரபாண்டியர் எதிரேசென்று பணிய, பாண்டி நாட்டுமன்னவராகிய அச்சுந்தரபாண்டியர் (அவனை) தழுவி உபசார வார்த்தைகள் சொல்லி விடுதியிற்செல்ல அனுப்பினர். அதன்மேல் மந்திரிகள் கலந்து திருமணமகோற்சவநாள் நியமித்து மன்னவர்கள் யாவர்க்குந் திருமுகங்களனுப்பி மதுராபுரியில் (அலங்கரிக்க) கல்லியாண முரசை (வள்ளுவரால்) அறையச்செய்தார்கள்.

மாடம் புதுக்கிப் பூகதமுங் கதலிக் காடு மறுகெங்கு
நீட நிரைத்துப் பாலிகையு நிறைபொற் குடமு முறைநிறுத்தி
யாடு கொடியுந் தோரணமும் புனைவித் தழகுக் கழகாகக்
கூட நெருங்கு நகரைமணக் கோலம் பெருகக் கொளுத்தினார்.

(இ-ள்.) (தங்கள் தங்களது) மாடங்களை (சுண்ணமுதலிய வற்றால்) புதிதாக்கி, கமுகமரங்களையும் வாழைமரக்காடுகளையும் வீதிகளெங்கும் வரிசைபடக்கட்டி முளைப்பாலிகைகளையும் பொன்னாலாகிய பூரணகும்பங்களையும் முறைப்படி (வேதிகைகளில்) நிறுத்தி, ஆடுகின்ற துவசங்களையும் தோரணங்களையும் (வீடுகள்தோறுங் கட்டி) அலங்கரித்து அழகுக்கு அழகு செய்பவராக யானைக்கூடங்கள் நெருங்கிய மதுரைமாநகரத்தை மணக்கோலம்பெருக அலங்கரித்தார்கள். எ-று. (௧௧)

தென்ற லுடன் றிருமகளைத் தேவர் பெருமான் மணம்புரிய
மன்ற லழகா லொருநகரொப் பதிக மின்றி மதுரைநக
ரன்று தானே தனக்கொப்ப தாகும் வண்ண மணியமைத்தா
ரின்று தானே தனக்கதிக மென்னும் வண்ண மெழிலமைத்தார்.

(இ-ள்.) தென்றற்காற்று தோன்றுதற்குரிய பாண்டிநாட்டு மன்னனாகிய மலயத்துவசன் புத்திரியாரைத் தேவநாயக ராகிய சுந்தரபாண்டியர் திருமணஞ்செய்ய அத்திருமணப்பொலிவால் வேறொருநகரம் (தனக்கு)சமானாதிகரகிதமாய் மதுரை நகரமானது அப்பொழுது தனக்குத்தானே ஒப்பாகும்படி அலங்கரித்தார்கள். இப்பொழுது தனக்குத்தானே யதிகம் என்று சொல்லும்படி யலங்கரித்தார்கள். எ-று. ()

கலிவிருத்தம்.

முன்னர் மாலே முடியணி சுந்தரத்
தென்ன ரேற்றின் றிருமுகங் கண்டுதாழ்ந்
தன்ன வாசக முட்கொண் டயற்புல
மன்னர் மாதவர் யாரும் வருவரால்.

(இ-ள்.) தமதுமுன்னர் மலர்மாலைசூழ்ந்த மகுடமணிந்த சுந்தரபாண்டியருடைய திருமுகத்தைக்கண்டு பணிந்து அத்திருமுகத்தில் வரைந்தவாசகத்தைத் தம்

முட்கொண்டு பிறதேசத்திலுள்ள மன்னர்களும் தபோதனர்களும் (மற்றுமுள்ள) யாவரும் வருகின்றார்கள். எ-று.

தென்னர் ஏறு-பகைவராகிய யானைகளுக்குள் ஆண்சிங்கம்போன்றவர். ()

புரவி வெள்ளமும் போர்க்கரி வெள்ளமும்
வரவிற் கால்வலி மள்ளரின் வெள்ளமும்
விரவி யாழிய வெள்ளமு முள்ளுற
விரவி தன்வழித் தோன்றல்வந் தெய்தினான்.

(இ-ள்.) குதிரைச்சேனை வெள்ளமும் போர்புரியும் யானைச்சேனைவெள்ளமும் விரைந்துசெல்லுதலிற் காற்றுப்போலும் வன்மையுடைய பதாதிச்சேனைவெள்ளமும் (தம்முள்) கலந்து சமுத்திரவெள்ளமும் நிலத்துட்புக, சூரியன் மரபின் வந்த சோழராசன் வந்தடைந்தான். எ-று. (௧௪)

கோடு வில்லொடு மேகக் குழாங்கண்மின்
னீடு வாளொடு நேர்ந்தென மார்புதாழ்ந்
தாடு குண்டலக் காதுடை யாடவர்
சேட னீகத்துச் சேரன்வந் தீண்டினான்,

(இ-ள்.) மேகக்கூட்டங்கள் வளைந்தவில்லோடும் மின்னலாகிய நெடிய வாட்படையோடும் வந்ததுபோல மார்புவரையில் தாழ்ந்து (அசைந்து) ஆடாநின்ற குண்டலமணிந்த காதினையுடைய வீரர்களாகிய பெரியசேனையுடன் சேரராசன்வந்து நெருங்கினான். எ-று. (௧௫)

கடலு முள்ளமுங் காற்றும்பல் வண்ணமு
முடலங் கொண்டன வந்துறு வாம்பரிப்
படுக டற்குட் பரிதியிற் றோன்றினா
னடுப ரிப்பதி யாகிய வேந்தனே.

(இ-ள்.) சமுத்திரமும் மனமும் காற்றும் பலநிறங்களும் (ஒவ்வொரு) உடல் பெற்று வந்தாற்போலவந்து விரைந்து தாவிச்செல்லுங் குதிரைச்சேனையையுடைய ஆழ்ந்த சமுத்திரத்தில் கொலைத்தொழி லமைந்த துரகபதியாகிய அரசன் சூரியனைப்போலக் கண்களுக்குப் புலப்பட்டு விளங்கினான். எ-று.

துரகபதி யென்பவன் - வடபுலத்துப் பெருவேந்தருள் ஒருவன் ஏனையோர் கயபதி - நரபதி யெனப்படுவர்.

கடல் உடல் கொண்டன என்றது குதிரைச்சேனை அளவின்மை மேலும், உள்ளமும் காற்றுமுடல் கொண்டன என்றது - விரைவின்மேலும், பலவண்ணமும் உடல் கொண்டன என்றது - குதிரைகளின் நிறங்கள் மேலும் நின்றன.

படுகடல் என்பதற்கு - தோண்டப்பட்ட கடல் எனினும் பொருந்தும். கொண்டன என்பது-கொண்டால் அன்ன என்பதின் தொகுத்தல். (௧௬)

அலகி லாவுத யந்தொறு மாதவ
ரலகி லாருதித் தென்னப்பொன் னோடைசே
ரலகி லானைய னீகமொ டெய்தினா
னலகி லாற்றற் கயபதி யண்ணலே.

(இ-ள்.) எண்ணிறந்த உதயகிரிகள்தோறும் எண்ணிறந்த சூரியர்கள் உதயமானாற்போல, பொன்னோலாகிய நெற்றிப்பட்டமணிந்த எண்ணிறந்த யானைச்சேனையுடன் எண்ணிறந்த வன்மையையுடைய கயபதியரசன் வந்துதோன்றினான். எ-று.

தொக்க மள்ள ரடிப்படு தூளிபோய்த்
திக்க டங்கவி ழுங்கித் திரைக்கட
லெக்கர் செய்ய வெழுந்தியங் கல்லென
நக்க வேற்கை நரபதி நண்ணினான்.

(இ-ள்.) நெருங்கியவீரர்கள் காலாலெழுந்த தூளிகள் எங்கும்பரந்து அட்ட திக்குகள்முழுமையும் விழுங்கி அலைகளையுடைய கடலை மேடுசெய்யவும், (எங்கும்) எழுந்து வாத்தியங்கள் கல்லென்று ஒலிக்கவும், பிரகாசிக்கின்ற வேலையேந்திய கையையுடைய நரபதியரசன் வந்துசேர்ந்தான். எ-று. (சஅ)

மீன வேலையிற் கந்துக மேற்கொடு
கூனல் வார்சிலை வஞ்சக் கொடுஞ்சமர்க்
கான வாழ்க்கைய ரட்டக் கரும்படை
மான வேற்குறு மன்னவர் நண்ணினார்.

(இ-ள்.) மீன்களையுடைய சமுத்திரம்போலக் குதிரையின்மேல் ஏறி வளைந்த வார்பூட்டிய வில்லினாற்செய்யும் வஞ்சகமாகிய கொடிய போருக்கே அமைந்த வாழ்வையுடைய அரட்டராகிய பெரிய பதாதிகளையுடைய மாட்சிமைபொருந்திய வேற்படைதாங்கிய குறுநிலமன்னவர்கள் வந்தடைந்தார்கள். எ-று. (கசு)

சீனர் சோனகர் சிங்களர் கொங்கணர்
மான வேல்வள மாளவர் சாளுவர்
தான மானிரைச் சாவக ராதியா
மேனை நாட்டுள மன்னரு மீண்டினார்

(இ-ள்.) சீனநாட்டினரும் சோனகநாட்டினரும் சிங்களநாட்டினரும் கொங்கண நாட்டினரும் பெருமை பொருந்திய வேற் படையினால் ஜெயங்கொள்ளும் மாளவநாட்டினரும் சாளுவநாட்டினரும் மதமொழுக்குகின்ற யானைகளின் வரிசைகளையுடைய சாவகநாட்டினரும்முதலாகிய ஏனையநாடுகளிலுள்ள வேந்தர்களும் வந்து சேர்ந்தார்கள். எ-று. (உ௦)

நூலொ டுந்துவக் குண்டு நுடங்குமான்
றோலர் தூங்கு சுருக்குடைத் தானையர்
கோல முஞ்சியர் கிஞ்சுகக் கோலினர்
நாலு நூல்பயி னாவினர் நண்ணினார்

(இ-ள்.) உபவீதத்தோடு கட்டப்பட்டுத்துவளும்(கிருஷ்ணசலமாகிய) மான் றோலையுடையவரும், தொங்குகின்ற சொருகுதலையுடைய ஆடையை யணிந்தவரும், அழகியமுஞ்சிப்புல்லாலாகிய அரைநாணைத் தரித்தவரும், முண்முருக்கந் தண்டை (கையில்) ஏந்தினவர்களும் நான்கு வேதங்களையும் பயின்ற நாவினையுடையவருமாகிய பிரமசாரிகளும் வந்துசேர்ந்தார்கள். எ-று. (உக)

வட்ட நீர்க்கலக் கையினர் வார்ந்துதோள்
விட்ட குண்டலக் காதினர் வேட்டதீத்
தொட்ட கோலினர் வேள்வியிற் சுட்டநீ
றிட்ட நெற்றிய ரில்லொடு நண்ணினார்

(இ-ள்.) (உறியிற்பொதிந்த) வட்டமாகிய கமண்டலத்தையேந்திய கையையுடையவரும் நீண்டு தோள்வரையில் (தொங்கும்படி) குண்டலமணிந்த காதினையுடையவரும் யாகஞ்செய்வதற்குக் கருவியாகிய தீக்கடைகோலேந்தினவர்களும்

யாகாக்கினியில் நீற்றிய திருவெண்ணீற்றை யணிந்த நெற்றியை யுடையவருமாகிய வானப்பிரஸ்தர்கள் (தமது) பத்தினிமாருடன் வந்தடைந்தார்கள். எ-று. (உஉ)

முண்ட நெற்றியர் வெண்ணிற மூரலார்
குண்டி கைக்கைய ர் கோவணம் வீக்கிய
தண்டு கையர்கற் றுவரர் மெய்யினைக்
கண்டு பொய்யினைக் காய்ந்தவர் நண்ணினார்

(இ-ள்.) திரிபுண்டரமணிந்த நெற்றியையுடையவரும், வெண்ணிற மிக்க பற்களையுடையவரும், கமண்டலந்தாங்கிய கையையுடையவரும், கோவணத்தைக்கட்டிய தண்டத்தைப்பற்றிய கையையுடையவரும், செங்கல்லிற் றோய்த்த வுடையை யுடையவரும், மெய்ப்பொருளையுணர்ந்து பொய்ப்பொருளை வெறுத்தவர்களு மாகிய சந்நியாசிகள் வந்துநெருங்கினார்கள். எ-று.

சம் - எல்லாம், நியாசம் - வெறுத்தல். (உ௩)

தீந்தண் பாற்கடல் செந்துகிர்க் காட்டொடும்
போந்த போன்மெயிற் புண்ணியப் பூச்சினர்
சேந்த வேணியர் வேதச் சிரப்பொரு
ளாய்ந்த கேள்விய ருந்தவ ரெய்தினார்.

(இ-ள்.) இனியதட்பமாகிய க்ஷீராப்தியானது செவந்த பவளக்காட்டோடும் வந்ததுபோலத் (தமது) திருமேனியில் விபூதிப்பூச்சினையுடையவரும், செவந்த சடையையுடையவரும், வேதத்தின் உச்சியிலுள்ள (உண்மைப்) பொருளாகிய பரசிவத்தை ஆராய்ந்தறியுஞ் சிவாகமநூற்கேள்வியை யுடையவருமாகிய அரிய சைவதபோதனர்கள் வந்து நெருங்கினார்கள். எ-று.

பாற்கடல் புண்ணியப் பூச்சாகவும், பவளக்காடு சேந்தவேணியாகவுங் கொண்டு கூட்டி ஒப்புமைக் கூட்டஅணியாகக்கொள்க. (உச)

ஆதி சைவர் முதற்சைவ ரைவருங்
கோதி லாவகச் சைவக் குழாங்களும்
பூதி மேனியர் புண்ணிய வைந்தெழுத்
தோது நாவின ரொல்லைவந் தெய்தினார்.

(இ-ள்.) ஆதிசைவர் முதலாகவுள்ள ஐவகைச்சைவர்களும், குற்றமில்லாத அகச்சமயிகளாகிய சைவர் (முதலிய அறுவகைக்) கூட்டத்தாரும், விபூதியையணிந்த மேனியையுடையவரும், புண்ணிய சொரூபமாகிய ஸ்ரீ பஞ்சாக்ஷரத்தை ஜெபிக்கும் நாவினையுடையவருமாய் விரைவில் வந்தடைந்தார்கள். எ-று.

ஆதிசைவர் முதற்சைவர் ஐவர் என்றது—அநாதி சைவராகிய சதாசிவமூர்த்தியின் பஞ்சமுகத்திற்றோன்றிய * பஞ்சருஷி கோத்திரத்திலுதித்தவர் ஆதிசைவர் - பிரமாவின் முகத்திற்றோன்றி ஆதிசைவரிடத்தே சிவதீக்ஷை பெற்ற வைதிகப் பிராமணர்கள் மகாசைவர்-சிவதீக்ஷைபெற்ற க்ஷத்திரியரும் வைசியரும் அநுசைவர் - சிவதீக்ஷை பெற்ற சற்சூத்திரராகிய வேளாளர் அவாந்தரசைவர் - சிவதீக்ஷை பெற்ற அனுலோமர் பிரவரசைவர் எனப்படுவோர். அநாதிசைவர் - ஆதிசைவர் - மகாசைவர் - அநுசைவர் - அவாந்தரசைவர் - பிரவரசைவர் - அந்திய சைவரென எழுவகையராகப் பிறரால் கொள்ளப்பட்டிருப்பினும்,அவருள் அநாதிசைவர் சதாசிவமூர்த்தியாதலாலு

* பஞ்சருஷிகள் - கௌசிகர் காசிபர் பாரத்துவாசர் கௌதமர் அகத்தியர் எனப்படுவோர்.

ம், அநுலோமர் ஒழிந்த ஏனையோராதலாலும் அவர்களைநீக்கி " ஆதிசைவர்முதற்சைவ ராவரும் " என்றார். இதனை,

அரியசதா சிவனென்போ னநாதிசைவ னவன்பா
லவதரித்த சிவமறையோ ராதிசைவ ரிவர்பால்
உரியசிவ தீக்கைபெற்ற பூசுரர்மா சைவ
ருயர்ந்தவர சர்வணிக ரநுசைவ ராவார்
பெரியகுவ ளைப்புயத்தோ னவாந்தரசை வன்சீர்
பெறுசவன்ன ருதியநு லோமர்பிர வரராம்
விரியவணி மிசையொழிந்தோ ரந்தியசை வத்தோர்
விரிந்திடுமேழ் சைவவித மிவையெனநூல் விளம்பும் " என்பதனானறிக

அகச்சைவக்குழாங்கள் என்றது சைவம் - பாசுபதம் - மாவிரதம் - காளா மூகம் - வாமம் - வைரவமென்னும் அறுசமயத்தவர்களை. (௨௩)

வெண்க ளிற்றவன் வேரியந் தாமரைப்
பெண்க ளிப்புறு மார்பன் பிரமனே
டொண்க ளிப்புற வும்பர் முதற்பதி
னெண்க ணத்தவர் யாவரு மீண்டினார்.

(இ-ள்.) வெண்ணிறம் பொருந்திய ஐராவதமென்னும் யானையை வாகன மாகவுடைய தேவேந்திரனோடும், வாசனைபொருந்திய அழகிய தாமரை மலரில் வசிக்கும் திருமகள் களித்துவாழும் மார்பையுடைய திருமாலோடும், பிரமதேவரோடும் களிப்புமிக்கூர,தேவர்முதலாகவுள்ள பதினெண்கணத்தவர்கள் எல்லோரும் (வந்து) சேர்ந்தார்கள். எ-று.

உம்பர் முதற்பதினெண்கணத்தவர் இவர் என்பதை,

சீகாளத்திப் புராணம்.

கருடர்கந் தருவர் தாரா கணந்தயித் தியர்கள் விச்சா
தரரிராக் கதரோ சித்தர் தாபத ரசுர ரோகிம்
புருடர்கின் னரரி யக்கர் பூதர்வே தாளர் தேவ
ருரகரா காச வாச ரொடுபோக புரியு ளாரோ " எனவும்,

" கின்னரர் கிம்புருடர் விச்சா தரர்கருடர்
பொன்னமர் பூதர் புகழியக்கர்—மன்னு
முரகர் சுரர்சா ரணர்முனிவர் மேலாம்
பரகதிசேர் சித்தர்பா லர்

காந்தருவர் தாரகைகள் காணுப் பசாசுக
ளேந்துபுகழ் மேய விராக்கதரோ—டாய்ந்ததிறல்
போகா வியல்புடைய போகபூமி யாருடனே
யாகாய வாசிகளா வார் " எனவும் வருவனவற்றானறிக. (௨௪)

அணைந்து கோயி லடைந்தரிச் சேக்கைமேற்
குணங்க டந்தவன் கோமள வல்லியோ
டிணங்கி வைகுறு மிருக்கைகண் டேத்தினார்
வணங்கி னார்வணங் கும்முறை வாழ்த்தினார்.

(இ-ள்.) (இவ்வாறுவந்து) சேர்ந்து திருக்கோயிலையடைந்து சிங்காதனத் தின்மேலில் (இராசதம் தாமசம் சத்துவம் என்னும்) மூன்றுகுணங்களையுங் கடந்த சுந்தர

பாண்டியர் தடாதகைப்பிராட்டியாருடன் பொருந்தி வீற்றிருப்பதைக் கண்டு துதித்துப் பணிந்து, தம்முடைய தகுதிக்கேற்ப முறையாக வாழ்த்தினார்கள். எ-று.

கோமளவல்லி - இளங்கொடி. (௨௭)

விரைசெய் தார்முடிச் சுந்தர மீனவன்
சுரர்கள் மாதவர் வேந்தர்க்குத் தொன்முறை
வரிசை நல்கி யிருந்தனன் மன்னவன்
திரும கன்மணஞ் செய்திறஞ் செப்புவாம்.

(இ-ள்.) வாசனைவீசும்மாலைதரித்த கிரீடம்பூண்ட சவுந்தரபாண்டியர் (திருமால் முதலிய) தேவர்களுக்கும், பெரிய தபோதனர்களுக்கும், மன்னர்களுக்கும், பழமையாகிய முறைப்படி (அவரவர்க்குத்தக்க) சிறப்புச்செய்திருந்தருளினார். அச்சுந்தரபாண்டியருடையசெல்வப்புத்திரராகிய உக்கிரகுமாரபாண்டியருடைய திருமணம் நிகழும்வகையை (இனிச்) சொல்லுவாம். எ-று. (௨௮)

சோம சேகரன் றோகை னைப்பெலாங்
கோம கன்கண் டெப்பவக் கொள்கைகள்
டேம மேனிய னூல்வழி யார்க்குமத்
தேமன் கோதை யுறுப்பிய றேற்றுவான்.

(இ-ள்.) சோமசேகரச் சோழனுடைய புத்திரியாகிய காந்திமதிதேவியின் அழகையெல்லாம் சுந்தரபாண்டியர் கண்டுகளிகொள்ள, பொன்மேனியாராகிய பிரகஸ்பதிமுனிவர், அக்குறிப்புணர்ந்து சாமுத்திரிக நூலின்படி அக்காந்திமதிதேவியினுடைய அவயவங்களின் இலக்கணத்தைத் தெளிவிக்கின்றார். எ-று.

தேமன்கோதை - தேன் நிலைபெற்ற கூந்தலையுடையவள். தோகை - மயிலின் சாயலையுடையவள். (௨௯)

எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

பெருகநீண் டறவுங் குறுகிடா தாகிப் பிளந்திடாக் கடையவாய்த் தழைந்து, கருவிவான் வண்டின் கணமெனக் கறுத்துக் கடைகுழன் றியன்மணங் கான்று, புரையறச் செறிந்து நெறித்துமெல் லென்று புந்திகள் கவரநெய்த் திருண்ட, மருமலர்க் குழலா டன்பதிக் கினிய மல்லல்வான் செல்வமுண் டாகும்.

(இ-ள்.) மிகநீளாமலும் குறுகாமலும் (நுனி) பிளவுபடாமலும் பொலிவுற்று, கூட்டமாகியமேகமும் வண்டும்போலக்கறுத்து நுனியிலேகுழைந்து, இயற்கைமணம் வீசிக் குற்றமற நெருங்கி நெளிந்து மிருதுவாகிச் சூக்குமமாய் நெய்ப்பசைகொண்டு, இருள்போலும் நிறம்பொருந்திய மணங்கமழும் மலர்மாலையணிந்த அளகமுடையவள் தன் நாயகனுக்கு மிகமேம்பட்ட நல்லசெல்வம் உண்டாகும். எ-று.

இதுமுதற் பதின்மூன்று செய்யுள்களால் ஸ்திரீ சாமுத்திரிகங் கூறுகின்றார்.

கருவிவான் என்றது - உலகுக்கு முதற்காரணமாகிய மேகம். (௩0)

திண்மத வேழ மத்தகம் போலத் திரண்டுயர் சென்னியா ளவடனுண்மகிழ் கணவ னாயுநீண் டகில வுலகர சுரியனு மெட்டாந் தண்மதி போன்று மயிர்நரம் பகன்று தசைந்துழூ விழுவிடை யகன்ற வொண்மதி நுதறன் பதிக்குநற் றிருவோ டைப்பிலா ரோக்கிய முண்டாம்.

(இ-ள்.) வலிவுபொருந்திய மதப்பெருக்கையுடைய யானைமத்தகம்போலத் திரண்டு உயர்ந்த தலையையுடையவளின், மனமகிழ்கின்ற நாயகன் ஆயுள்மிகுந்து

அனைத்துலகையும் ஆளுதற்குரியவனுவான். அஷ்டமச் சந்திரன்போன்று மயிர்நரம்புக ளின்றித் தசையுடையதாகி மூன்று விரலளவு இடையேவிரிந்த வெள்ளிய சந்திரன் போலுந் திலகமணிந்த நெற்றியையுடையவளின் கணவனுக்கு நல்ல செல்வத்துடன் கெடுதலில்லாத ஆரோக்கியமு முண்டாகும். எ-று. (கூக)

கண்கடை செவந்தான் பாலென வெளுத்து நடுவிழி கழியவுங் கரிதா
யெண்கவி னடைந்து கோமள மாகி யிமைகரு மயிர்த்தெனி னினிய
வொண்கரும் புருவங் குனிசிலை யொத்த தத்தமி லொத்திரு தொளையும்
பண்கொள வுருண்டு துண்டமேற் போது பதுமமேற் பூத்தது போலும்.

(இ-ள்.) கடைக்கண் செவந்து (பசுவின்) பால்போல வெளுத்து இடைக் கண்மிகுதியுங் கரியதாகி மதிக்கத்தக்க அழகுபெற்று (பார்ப்போர்க்குப்) பொலி வாய் இமைகள் கருமயிருடையனவாயின் இனியவாம். ஒள்ளிய கரியபுருவங்கள் வளை ந்த வில்லைப்போன்றன (ஆகலின் நல்லன) நாசி இரண்டுதொளையுந் தம்முள்ளே ஒத்து அழகுபெறவுருண்டு தாமரைமலரின்மேல் எள்ளின்மலர் பூத்ததுபோலும் (முகத்தில் விளங்குதலின் நல்லதாம்.) எ-று. (கூஉ)

வள்ளைபோல் வார்ந்து தாழ்ந்திரு செவியு மடற்சுழி நல்லவாய் முன்னர்
தள்ளிய காது மினைகர மாகுந் தன்மையா னன்மையே தழைக்கு [ம்போற்
மொள்ளிய கபோலம் வட்டமாய்த் தசைந்திட் டுயர்ந்துகண் ணுடிமண் டல
மெள்ளிய ஆற்ற மினியது நன்றென் றேதினன் றிரைகடற் செல்வன்.

(இ-ள்.) இரண்டுசெவிகளும் வள்ளையிலைபோலத் தொங்கித்தாழ்ந்து மடலி ன் சுழிகள் நல்லனவாகி முன்பு தள்ளியனவாயிருத்தல்வேண்டும் (அவ்வகைப்பட்ட) செவிகள் அழகுசெய்யுந்தன்மைபற்றி நன்மையைப்பெருக்கும். ஒளிபொருந்திய கபா லமானது வட்டவடிவமாய்த் தசைப்பற்றுடையதாகிஉயர்ந்து கண்ணுடிவட்டம்போல மிக்க பரிசமானது (சருச்சனையகன்று காண்போருக்கு) இன்பத்தையே தருமாயின், அலைகள்பொருந்திய சமுத்திரத்திற் கிறைவனுகிய வருணன் அது நன்மையே விளைக் கும் என்று கூறினுன். எ-று.

சருச்சனை யென்பது - எண்வகை ஊறிலொன்று. அவை வெம்மை, தண் மை - மென்மை - வன்மை - திண்மை - நொய்மை - சீர்மை-சருச்சனை எனப்படும். இவையே தொடப்படும் பொருட்குரிய எண்குணங்கள். (கூங)

கொவ்வைவா யதரந் திரண்டிரு புடையுங் குவிந்துசேந் திரேகைநேர் கிடந்தா, லவ்வணி யிழைதன் னன்பனுக் கென்று நண்புரு வாகுமென் றுன்கும், வல்லொ ளெயிறு மிடைவெளி யின்றி வார்ந்துமேல் கீழிரண் டொ ழுங்குஞ், செவ்வநேர்ந் தாவின் பாலென வெள்கித் திகழினன் றென்பர்நூ றெளிந்தோர்.

(இ-ள்.) கொல்வைக்கனிபோலும் வாயின் இதழ் திரண்டு இருபக்கமுங் குவிந்து செந்நிறமுடையதாய் நேரில் இரேகையிருக்குமாயின் அவ்வழகிய ஆபரண மணிந்த பெண் தன்கணவனுக்கு எந்நாளும் நண்புருவமாக விளங்குவாள், வலிய ஒளிபொருந்திய முப்பத்திரண்டு பற்களும் இடைவெளியின்றி ஒழுங்கினவாகி மேல் கீழ் (ஆகிய) இருவரிசைகளும் செவ்விதாகத் தம்முளொத்துப் பசுவின் பால்போல வெண்ணிறமுடையனவாய் விளங்கினுல் நன்றென்று (சாமுத்திரிக) நூல்வல்லோர் கூறுவர். எ-று.

இடைவெளியின்றி என்றதற்கு,சந்துகளில்லாது நெருங்கி என்றுபொருள்.

மெல்லிதாய்ச் செவந்து கோமள மான நாவினாள் வேட்டவேட் டாங்கே
வல்லவந் தெய்த நுகர்ந்திடுந் தசைந்து வட்டமா யங்குல மிரண்டி
னெல்லைய தாகி மஞ்சுள மாகி யிருப்பது சுபுகநன் றென்ப
நல்லியங் கமலம் போன்மணந் திருடீர் தவிர்மதி போல்வது முகமே.

(இ-ள்.) மென்மையுடையதாய்ச் செவந்து முதிராத நாவினையுடையவள் விரும்பினவற்றை விரும்பியபடியே விரைவிற்கிடைக்க அநுபவித்திருப்பாள். மோவாய் தசைப்பற்றுடையதாகி வட்டமாய் இரண்டங்குல வளவினதாகி அழகினையுடையதாயிருத்தல் நன்றென்று கூறுவர். முகம் அகவிதழையுடைய அழகியதாமரை மலர்போல மணங்கமழ்ந்து களங்கமின்றி விளங்குஞ் சந்திரனைப்போல (குளிர்ந்த பார்வையுடையதாய்) விளங்குதல் (நன்மையென்று கூறுவர்.) எ-று.

சுபுகம்-மோவாய். (௬௫)

திரைவளைக் கழுத்துத் தசைந்துநால் விரலி னளவதாய்த் திரண்டுமூன் றிரேகை, வரைபடிற் கொழுந னகிலமன் னவனு மார்பகந் தசைந்துமூ வா று, விரலள வகன்று மயிர்நரம் பகன்று மிதந்ததேல் விழுமிதாம் வேய்த் தோள், புரையறத் தசைந்து மயிரகன் றென்பு புலப்படா மொழியவோ டமா மாம்.

(இ-ள்.) அலையெறியுஞ் சங்கம்போன்ற கழுத்து தசையுடையதாய் நாலங் குலவளவினதாய் உருட்சியாய் மூன்று ரேகையாகிய வரைகளிருக்குமாயின் (அப் பெண்ணின்) நாயகன் உலகமன்னவனுவான். மார்பிடம் தசையுடையதாய்ப் பதி னெட்டங்குலவளவுபரந்து மயிர்நரம்புகளின்று உயர்ந்திருக்குமாயின் நன்மையுடைய தாம். மூங்கில்போன்ற தோள்கள் குற்றமறத் தசையுடையனவாய் மயிரின்றி யெலும் பும் மொழியும் புலப்படாதது (ஆகலின்) அழகினையுடையதாம். எ-று.

மொழி - நரம்புகளின் முடிச்சு. (௬௬)

செங்கைநீள் டிருண்டு கணுக்கள்பெற் றடைவே சிறுத்திடிற் செல்வ மோ டின்பர், தங்குமவ் ளுகிர்சேந் துருண்டுகண் ணுள்ளங் கவர்வதாய்ச் சரசரப் பகன்று, லங்கவை நல்ல வகங்கைமெல் லெனச்சேந் திடைவெளி யகன்றிடை யுயர்ந்து,மங்கல மாய்ச்சில் வரைகளி னல்ல விலக்கண வரையுள மாகோ.

(இ-ள்.) செவந்த கைவிரல்கள்நீண்டுருண்டு கணுக்கள்பொருந்தி முறையே சிறுத்திருக்குமாகில் ஐசுவரியமும் மகிழ்ச்சியும் உண்டாம். கூரிய நகங்கள் செவந்து திரண்டு பார்த்தோரது கண்ணையு மனத்தையுங் கொள்ளை கொள்வதாய்ச் சருச்சரை யொழிந்திருந்தால் அவை நன்மையுடையனவாம். உள்ளங்கைகள் மெல்லியன என்று சொல்லச் செவந்து இடைவெளியின்றி யிடையே உயர்ந்து மங்களமாய்ச்சில ரேகைக ளில் நல்ல இலக்கணவரைகள் உள்ளன (ஆயின் நன்மையுண்டாம்.) எ-று. (௬௭)

முத்தணி தனங்கள் கடினமாய்த் தசைந்து வட்டமாய் முகிழ்த்திரு குட மே, ரொத்திறு மாந்தீர்க் கிடையற நெருங்கி யுள்ளன மெலிந்தமர்ந் துரோ ம, பந்திபெற் றயலே மயிர்நரம் பகன்ற பண்டியா ளுண்டிவேட் டாங்கே, துய்த்திடு நாபி வலஞ்சுழித் தாழ்ந்தாற் றொலைவிலாத் திருவளம் பெருகும்.

(இ-ள்.) முத்தாரமணிந்த தனங்கள் இறுகியனவாய்த் தசையுடையனவாய் வட்டவடிவினவாய் (தாமரை யரும்புபோல) அரும்பி இரண்டு குடங்கள் போன்று (யானைக்கொம்புபோல) இறுமாப்புற்று, ஈர்க்கு இடையேபுகாமல் நெருங்கியிருப்பன

(ஆதலின் நன்மையுடையன்) மெலிவுபொருந்தி உரோமவரிசைபெற்று அதன் பக்கத்து மயிரும் நரம்பும் ஒழிந்த வயிறுடையவள் விரும்பிய உணவை விரும்பியபடியே அநுபவிப்பாள். உந்திவலஞ்சுழித்து ஆழ்ந்திருக்குமாயின் அழிவில்லாத செல்வவளம் (எப்பொழுதும்) பெருகி நிற்கும். எ-று.

இறுமாந்து என்றது இறந்தகால வினையெச்சம். இறுமா - பகுதி. (௩அ)

இடைமயிர் நரம்பற் றிருபதோ டொருநான் கெழில்விர லளவொடு வட்ட
வடிவதாய்ச் சிறுகி மெலிவது நிதம்ப மத்தகம் யாமையின் புறம்போற்
படிவமே ரொத்த னன்றிரு குறங்கும் படுமயி ரென்பகன் றியானைத்
தடவுடைக் கையுங் கரபமுங் கதலித் தண்டுமொத் திருக்கினன் றென்ப.

(இ-ள்.) இடையானது மயிரும் நரம்பும் ஒழிந்து இருபத்துநான்கங்குல அளவோடு வ நன்றும் வினதாய்ச் சிறுத்து மெலிந்த தன்மையுடையது (ஆதலின் நன்றும்) நிதம்பவரியை யின் மத்தகமும் யாமையின் முதுகும்போல வடிவங்கள் நேரே சமமாயிருத்தலனவும் அ இரண்டு தொடைகளும் மயிரும் எலும்பும் பொருந்துத லொழிந்து யானையினது பருமனுடைய துதிக்கையையும் கையினடியையும் வாழைத்தண்டையும் போன்றிருந்தால் நன்றென்று கூறுவர். எ-று.

நிதம்பம் என்பது பின்புறச் சகனம். (௩௯)

அங்கமுண் மறைந்து வட்டமாய்த் தசைவ தணிமுழந் தாண்மயிர் நரம்பு
தங்கிடா தடைவே யுருட்சியாய்ச் சிறுத்துச் சமவடி வாயழ கடைந்த
சங்கமாஞ் சிரையென் பறத்தசைந் தியாமை முதுகெனத் திரண்டுயர்ந் தழகு
மங்கலம பொலிந்த புறவடி மடந்தை மன்னவன் பன்னியா மன்றே.

(இ-ள்.) அழகிய முழங்கால் எலும்புகள் வெளியே தோன்றாமல் வட்ட வடிவாய்த் தசையுடையது (ஆகலின் நன்று) கணைக்கால்கள் மயிரும் நரம்புமொழிந்து திரண்டு முறையே சிறுத்து (தம்மில்) ஒத்தவடிவினவாய் அழகியன (ஆதலின் நன்மை) நரம்பும் எலும்பும் ஒழியத்தசைப்பற்றுடையதாய், யாமையின் முதுகுபோலுந் திரண்டு மேலுயர்ந்து அழகினாலும் (கணனுக்கு) இனிமையினாலும் நிறைந்து விளங்கிய புறங்காலையுடைய பெண் அரசன் மனைவியாவள். எ-று.

சங்கை - கணைக்கால். (௪0)

அல்லியங் கமலக் கால்விர லுயர்ந்து தூயவா யழகவாய்க் கழுநீர்
மெல்லிதழ் நிரைத்தாங் கொழுங்குறத் திரண்டு வாலுகிர் வெண்மதிப் பிறவு
புல்லிய போன்று மெல்லிய வாகிப் புகரறத் தசைந்தன வகததாள்
சொல்லிய தசையு மென்மையுஞ் சமமுந் துகளறப் படைத்தன நன்றால்.

(இ-ள்.) அகவிதழையுடைய அழகியதாமரைமலர்போன்ற கால்களின் விரல்கள் (தம்முள்) உயர்ந்து குற்றமற்று அழகுபொருந்திக் குவளைமலரின் மெல்லிய இதழ்களை வரிசைபட வைத்தாற்போல வொழுங்காய்த் திரண்டு, வெள்ளிய நகங்கள் வெள்ளிய அர்த்த சந்திரனைக் கவ்வியனபோல மென்மைத்தன்மை யுடையனவாகிக் குற்றமறத் தசைப்பற்றுடையனவாயிருத்தலும், உள்ளங்கால் (நூலில்) கூறிய தசைப பற்றும் மென்மையுந் தம்முள் ஒத்தலுங் குற்றமறப் பெற்றிருத்தலும் நன்மை விளைக்கும். எ-று. (௪௧)

வண்ணமாந் தளிர்போற் செவந்தெரி பொன்போல் வைகலும் வெயர்வையற் றாக, முன்னமா யிருக்கிற் செல்வமுண் டாகு மொண் மணம் பாடலங் குவளை, தண்ணறு முளரி மல்லிகை நறுந்தண் சண்பகம் போல்வனவாகும், பண்ணவாங் கிளவி குயில்கிளி யாழிற் படின்வரும் பாக்கியமென்னு.

(இ-ள்.) தேகமானது செந்நிறம்வாய்ந்த மாந்தளிர் போலவும், விளங்கும் பொன்னைப் போலவுஞ் செந்நிறம் வாய்ந்து, எந்நாளும் வேர்வரும்பாமல் மெத்தென் றிருக்குமாயின் (என்றும்) செல்வமுண்டாகும். (அவ்வுடலின்) மிக்க வாசனையானது பாதிரி மலரும், நீலோற்பல மலரும், குளிர்ச்சிபொருந்திய தாமரை மலரும், மல்லிகை மலரும், நறுமணங்கமழுந் தட்பம்பொருந்திய சண்பக மலருமாகிய (இம்மலர்களின் வாசனைகளை) ஒத்திருக்கின்றது (ஆதலின்) நன்றாம். இசைவிரும்புஞ் சொற்கள்குயில்-கிளி - வீணை (ஆகிய இவற்றின்) இசைபோலும் இருந்தால் செல்வமுண்டாகும்.

இச்செய்யுளை,

" உண்ணமுஞ் செவப்பு முள்ளதாய் வேர்வை யொழிந்ததேற் செல்வமா மாகம்
வண்ணமார் பொன்போ னன்னிறம் வாய்தல் வண்மணம் பாடலங் குவளை
தண்ணறு முளரி மல்லிகை நறுந்தண் சண்பகம் போல்வது நன்றாம் "—என முதன்மூன்று வரியையும், இதற்கேற்ப முன் செய்யுளின் இறுதி வரியை " சொல்லிய தசைவு மென்மையுஞ் சமமுந் துகளிலா வழகுமே யன்றி " (௩) அவும் புதுப்பாடம் ஒன்று வடநூல் கண்டார் கொள்கை. (௬௨)

அறுசீர்க்கழி நெடிலடியாசிரியவிருத்தம்.

கருங்குழற் கற்றை தொட்டுச செம்மலர்க் காலி னெல்லை
மருங்குனல் கூர்ந்த கன்னி வடிவெலாம் வாக்கின் செல்வ
னொருங்குறு முணர்வாற் றெள்ளி யிம்பரின் றும்பர் தேத்து
மிரங்குமிக் குயில னண்மெய் யிலக்கண மரிய தென்றான்.

(இ-ள்.) நெருங்கிய கரிய கூந்தல் தொடங்கிச் செந்தாமரை மலர்போன்ற பாதத்தினளவும் வறுமை மிகுந்த இடையையுடைய காந்திமதி தேவியின் அவயவங்களை யெல்லாம் வாக்கின் செல்வராகிய பிரகஸ்பதி முனிவர் சாமுத்திரிக நூலுணர்ச்சியால் ஒருசேர ஆராய்ந்தறிந்து, கூவுகின்ற இந்தக் குயில்போன்ற (சொல்லையுடைய) வளது அவயவ லக்ஷணம் இவ்வுலகத்திலு மில்லை அவ்வுலகத்திலு மில்லை என்று கூறினார். எ-று.

இம்பர் உம்பர்—இடப்பெயர்ச் சொற்கள் இடவாகு பெயராய்ப் பெண் பாலாரைச் சுட்டி நின்றது. (௬௩)

அங்கது கேட்டார் யாரு மகங்களி தூளும்ப விப்பாற்
கொங்கலர் நறுந்தார்க் குஞ்சி யுக்கிர குமரன் போந்து
மங்கல வரிசை மான மத்தமான் சுமந்த வைகைச்
சங்கெறி துறைநீ ராடித் தருங்கடி வனப்புக் கொள்வான்.

(இ-ள்.) அவ்விடத்தில் அதனைக் கேட்டோர் எல்லோரும் மனங்களி தூங்க இப்புறம் மகரந்தத்தோடு விகசித்து நன்மணங்கமழும் மாலை சூட்டிய சிகையையுடைய உக்கிரகுமாரபாண்டியர் எழுந்து, மங்கல வரிசைகளுடன் மிக்க மதமயக்கத்தை யுடைய யானை சுமந்துவந்த சங்கினை வீசும் வைகைத்துறையின்கணுள்ள தீர்த்தமாடி (தமது) அரசச் செல்வத்துக்குரிய திருமணத் திருக்கோலங் கொள்ளத்தொடங்கினார்.

சாமரம் - நிறைகுடம் கண்ணாடி - தோட்டி-முரசு - விளக்கு-கொடி-இணைக்கயல் என்பன மங்கலவரிசைகள். (௬௪)

கட்டவிழ் கண்ணி வேய்ந்து மான்மதக் கலவைச் சாந்த
மட்டனஞ் செய்து முத்தாள் மாண்கலன் முழுதுந் தாங்கி

விட்டவிர் கலைவான் றிங்கள் வெண்கதிர்ச் செல்வன் போல்வந்
திட்டபூந் தவிசின் மேற்கொண் டிருந்தனன் சங்க மேங்க.

(இ-ள்.) முறுக்கவிழ்ந்த (மலர்) மாலை சூடி மிருகமதங்கலந்த சந்தனத்தை யப்பி, முத்துகளாற்செய்த மாட்சிமைப்பட்ட ஆபரண முற்றும்பூண்டு, விட்டுவிட்டுப் பிரகாசிக்கும் கிரணத்தையுடைய ஆகாயத்திலுலவும் பூரணச்சந்திரன் வந்ததுபோல (அலங்கார மண்டபத்திலிருந்து) வந்து மங்கலச்சங்கங்கள் கோஷிக்க (மணவறையில்) இட்ட அழகினையுடைய ஆசனத்தின்மே லிருந்தனர். எ-று. (௪௩)

அந்நிலை மணநீ ராட்டி யருங்கலப் போர்வை போர்த்த
கன்னியைக் கொணர்ந்து நம்பி வலவயிற் கவின வைத்தார்
பன்னியோ டெழுந்து சோம சேகரன் பரனும் பங்கின்
மன்னிய வுமையு மாக மதித்துநீர்ச் சிரகந் தாங்கி.

(இ-ள்.) அப்பொழுது வாசமூட்டிய நீரால் மூழ்குவித்து விலை உயர்ந்த ஆபரணமாகிய போர்வையாற் போர்க்கப்பட்ட காந்திமதி தேவியைக் கொண்டுவந்து ஆண்மக்களுட் சிறந்தவராகிய உக்கிரகுமாரபாண்டியர் வலப்புறத்திற் பொலிவுபெற வைத்தார்கள். சோமசேகரச் சோழன் தனது மனைவியோடு எழுந்து சிவபெருமானும் அச்சிவபெருமானது வாமபாகத்தினின்றும் நீங்காத உமாபிராட்டியுமாக (அவ்விருவரையும்) கருதிநீர் நிறைந்த கரகத்தை கையில்) ஏந்தி. எ-று.

மணநீராவது பத்துத் துவரிலும், ஐந்து வாசனையிலும், முப்பத்திருவகை ஓமாலிகையிலும் ஊரியநீர். அவற்றுள்,

பத்துத்துவர்—" பூவந் திரிபலை புணர்வன் கருங்காலி
நாவலொடு *நான்மர மாம் " எனப்படும்.

ஐந்து வாசனை—" கொட்டந் துருக்கந் தகர மகிலாரம்
ஒட்டிய வைந்தும் விரை." எனப்படும்.

முப்பத்திருவகை ஓமாலிகை.—

" இலவங்கம் பச்சிலைக் கச்சோல மேலந்
குலவிய நாகணங் கோட்டம்—நிலவிய
நாக மதர்வரிசி தக்கோல நன்னாரி
வேகமில் வெண்கோட்ட மேவுசீர்-போகாத
கத்தூரி வேரி விலாமிச்சை கண்டில்வெண்ணெய்
ஒத்தகடு நெல்லி யுயர்தான்றி—கொத்தலரும்
வண்ணக் கச்சோம ரேணுக மாஞ்சியுடன்
எண்ணுஞ் சயரோக மின்புழுகு—கன்னிமிளம்
புன்னைநறுந் தாது புலியுகிர் பூஞ்சரளம்
பின்னு தமாலம் பெருவகுளம்—பன்னும்
பதுமுகநுண் ணேலம் பைங்கோடு வேரி
கதிர்நகையா யோமாலி கை." எனப்படும். (௪௪)

மங்கல நீரா னம்பி மலரடி விளக்கி வாசக்
கொங்கலர் மாலை சூட்டிக் குளிர்மது பருக்க மூட்டி

*ஆல் அரச அத்தி இத்தி என்பன நான்மர மென்பர்.

நங்கைதன் கையைப் பற்றி நம்பிதன் கையி லேற்றிப்
புங்கவ ரறிய நன்னீர் மந்திரம் புகன்று பெய்வான்.

(இ-ள்.) மங்கலம் பொருந்திய (அக்கரக) நீரால் உக்கிரகுமாரபாண்டிய ருடைய தாமரை மலர்போன்ற பாதங்களை விளக்கி வாசம்பொருந்திய மகரந்தத்தோ டலர்ந்தமலர்மாலையைச் சூட்டிக் குளிர்ந்த மதுபர்க்கத்தை உண்பித்துக் காந்திமதி தேவியின் கையைப்பற்றி உக்கிரகுமாரபாண்டியர் கையில்வைத்து, தேவர் முதலி யோர் அறிய மந்திரங்கூறி நல்ல தாரை வார்ப்பவன். எ-று.

மதுபர்க்கம் என்பது பாலும் பழமுஞ் சர்க்கரையு நெய்யுங் கலந்தது. ()

இரவிதன் மருமான் சோம சேகர னென்பேர் திங்கண்
மரபினை விளக்க வந்த சுந்தர மாறன் மைந்த
னுரவுநீர் ஞாலந் தாங்கு முக்கிர வருமற் கின்றென்
குரவலர்க் கோதை மாதைக் கொடுத்தன னெனநீர் வார்த்தான்.

(இ-ள்.) சூரிய மரபினனாகிய சோமசேகரச் சோழன்என் பது என்னுடைய பெயர். சந்திரமரபை விளக்கும்படிவந்த சுந்தரபாண்டியருடைய புதல்வராகிய கடல் சூழ்ந்த உலகினை (புயத்தில்) தாங்கும்உக்கிரகுமாரபாண்டியருக்கு இப்பொழுது என் னுடைய புதல்வியாகிய மணக்கமழும் மலர்மாலையணிந்த காந்திமதி தேவியை (பலரு மறிய மணவினைமுடித்து)க் கொடுத்தேன் என்று தாரை வார்த்தான். எ-று. (சஅ)

உரவு = ஒலிக்கின்ற; அசைகின்ற.

மைந்துறு மடங்கற் றிண்கான் மணிவட வயிர வூச
லைந்துடன் பதஞ்செய் பஞ்சி யணையிறை டன்னத் தூவிப்
பைந்துகி லணையீ ரைந்து பவளவாய்ப் பசும்பொன் மேனி
யிந்திர மணிக்கட் பாவை விளக்குநான் கிரட்டி யென்ப.

(இ-ள்.) வலிமைபொருந்திய சிங்கத்தின் வலிய கால்போலுங் காலமைந்த முத்துவடம்பூட்டிய வயிர ரத்தினத்தாற்செய்த ஊஞ்சல்கள் ஐந்தோடும், பதஞ்செய்த பஞ்சுசெறித்த மெத்தையோடும் அன்னத்தின் (சிறையடியிலுள்ள மெல்லிய) மயிர்செ றித்த மெல்லிய வஸ்திரத்தா லமைந்த மெத்தைகள் பத்தும், பவளமே வாயாகவும் பசும்பொன்னே மேனியாகவும் இந்திரநீல ரத்தினமே கண்களாகவும் (இயற்றிய) பாவை விளக்குக்கள் எட்டும். எ-று.

இதுமுதல் நான்கு பாடல்கள் ஒருதொடர். (சக)

அட்டில்வா யடுக்குஞ் செம்பொற் கலங்கணூ றம்பொன் வாக்கி
யிட்டிழை மணிக்க ளாஞ்சி யேழுபொற் கவரி யெட்டு
விட்டொளிர் பசும்பொற் கிண்ணப் பந்திசூழ் விளங்க நாப்ப
ணட்டபொற் காலி னோடு நகைமணிக் கலநூ றென்ப.

(இ-ள்.) அடுக்களையில் அடுக்கும் அடுக்குகளாகிய செம்பொன்னாலாகிய பாத்திரங்கள் நூறும், சுவர்ணத்தால் (கருக்கட்டி) வார்த்து இரத்தினங்களை யிழைத்த களாஞ்சிகள் ஏழும், பொன்னாற் (காம்பு) செய்த சாமரைகள் எட்டும், ஒளிவீசும் பசும் பொன்னாலாகிய கிண்ண வரிசைகள் சூழ்ந்து விளங்க நடுவே நட்ட பொன்னாலாகிய காலோடு விளங்கும் இரத்தினங்க ளிழைத்த பாத்திரங்கள் நூறும். எ-று. (௫௦)

பெருவிலை யாரப் பேழை யாயிரம் பெற்ற நூண்டே
சருவிலைப் பட்டு வெவ்வே றமைத்தன பேழை முந்நூ

றுருவமு மெழுதிச் செய்து வோவியப் பாவை யன்னார்
திருமணிக் கலமேற் பெட்டிவற் சேடிய ரெழுநூற் றைவர்.

(இ-ள்.) உயர்ந்த விலையுள்ள முத்தாரம் (முதலிய ஆபரணங்கள்) இட்ட பெட்டிகளும், அளவிடற்கரிய விலைபெற்ற நுண்ணிய பருத்தியும், விலையறிதற்கரிய பட்டுமாகிய வெவ்வேறுடைகளை வைத்த பெட்டிகளும் வகையொவ்வொன்றிற்கு முந்நூறும், சிறந்த ரத்தினங்களிழைத்த ஆபரணங்களோடு, அமிர்தத்தினாலே உருவம் வரைந்த சித்திரப்பதுமைபோன்ற எவல்செய்யுந் தோழியர் எழுநூற்றைவர்களும்.

அன்னார் - உவமை யிடைச்சொல்லடியாகப் பிறந்த குறிப்பு வினைமுற்று. பெயரெச்சப் பொருளில் நின்றது. (௩௧)

விளைவொடு மூன்று மூதூர் மின்னுவிட் டெறியுஞ் செம்பொ
னளவிரு கோடி யின்ன வரும்பெறன் மகட்குச் செல்வ
வளமுக வரிசை யாக வழங்கினன் முழங்கி வண்டு
திளைமதுக் கண்ணிச் சோம சேகர மன்னன் மாதோ.

(இ-ள்.) விளைவோடுகூடிய மூன்று பழையகிராமங்களும், ஒளிவிட்டு விளங் குஞ் செம்பொன்னளவு இரண்டுகோடியும், இவைபோல்வன பிறவும் (ஆகியவற்றைத் தன்) பெறுதற்கரிய புத்திரிக்கு வண்டுகள் ஒலித்து மதுவில் திளைக்கும் மாலைசூடிய சோமசேகரச்சோழன் செல்வவளமிக்க வரிசைகளாகக் கொடுத்தான். எ-று. (௩௨)

ஆர்த்தன வியங்க ளெல்லா மமரர்மந் தார மாரி
தூர்த்தனர் வேள்விச் செந்தீச் சுழித்தது வலமாய்த் துள்ளி
வார்த்தன மடவார் நாவின் முளைத்தன வாழ்த்து மன்றல்
பார்த்தனர் கண்க ளெல்லாம் பெற்றன படைத்த பேறு.

(இ-ள்). எல்லாவாத்தியங்களும் ஒலித்தன ; தேவர்கள் மந்தாரபுஷ்பமாரி வருஷித்தார்கள் ; செவ்விய யாகாக்கினி வலப்புறமாகச் சுழித்து எழுந்தது ; கச்சணிந்த தனங்களையுடைய (மங்கலப்) பெண்கள் நாவில் வாழ்த்துப்பாடல் தோன்றின ; திருமணமகோற்சவத்தைப் பார்த்தவர்களுடைய கண்களெல்லாம் தாமடையும்பலனை யடைந்தன. எ-று. (௩௩)

பொதியவிழ் கடப்பந் தண்டார்ப் புயத்திளங் காளை யன்னான்
முதியவர் செந்தீ யோம்ப வின்னிய முழங்கக் காந்தி
மதியைமங் கலநாண் பூட்டி வரிவளைச் செங்கை பற்றி
விதிவழி யேனை மன்றல் வினையெலா நிரம்பச் செய்தான்.

(இ-ள்.) முறுக்கவிழ்ந்த தண்ணிய கடப்பமாலை யணிந்த தோளையுடைய முருகக்கடவுளைப்போன்ற உக்கிரகுமாரபாண்டியர் (வேதமுதலிய நூல்களில்) முதியோர் ஓமத்தை(விதிவழி)செய்யவும் இனியவாத்தியங்கள் (ஒருபக்கலில்) முழங்கவும் காந்திமதிதேவிக்கு மங்கலசூத்திரந் தரிப்பித்து, கீற்றுகள்பொருந்திய வளையலணிந்த செவந்த கையைப்பிடித்து வேதநூன்முறைப்படி யின்னுஞ் செய்யவேண்டிய மண வினைகள் எல்லாவற்றையுங் குறைவின்றிச் செய்துமுடித்தார். எ-று. (௩௪)

மேற்படி-வேறு.

எண்ணி லாத வளத்தினொடு மிரவி மருமான் மடப்பிடியைப்
பண்ணி லாவு மறையொழுக்கம் பயப்ப வேள்வி வினைமுடித்துத்
தண்ணி லாவெண் கலைமதியுந் தாரா கணமுந் தவழ்ந்துழல
விண்ணி லாவு மணிமாட வீதி வலமாய் வருமெல்லை.

(இ-ள்.) அளவிறந்த செல்வவளத்தோடுஞ் சூரியமரபிற் றோன்றிய சோமசேகரச் சோழனுடைய புத்திரியாகிய இளமைதங்கிய பிடியானைபோன்ற காந்திமதிதேவியை, சந்தநிறைந்த வேதவிதிதவறாமல் நிரம்பத் திருக்கலியாணமுடித்துக் குளிர்ந்த கிரணத்தையுடைய வெள்ளிய கலைபொருந்திய சந்திரனும் நக்ஷத்திரக்கூட்டமுந் தவழ்ந்து சுழன்றுவருந்த, விண்ணுலகமட்டும் உயர்ந்து விளங்கும் இரத்தினங்கள் பதித்த மாடங்கள்பொருந்திய வீதியைப் பிரதக்ஷிணமாக வருங்காலத்தில். எ-று. ()

மின்னேர் பொன்னந் தொடியினரு மென்செம் பஞ்சி யடியினரும்
பொன்னேர் மணிப்பூண் முலையினரும் புலம்பு மணிமே கலையினரு
மன்னே ரோதித் தாரினரு மாகிக் கண்ணு மனமுமவன்
முன்னே தூது நடப்பதென நடப்ப நடந்தார் முகிழ்முலையார்.

(இ-ள்.) மின்னல்போன்ற அழகிய பொன்னாலாகிய தொடியையணிந்த (கையையுடைய) வர்களும், மெல்லிய செம்பஞ்சுக்குழம்பூட்டிய கால்களையுடையவர்களும், பொன்னாற்செய்து தம்மொளொத்த இரத்தினங்கள்பதித்த ஆபரணங்களைத் தரித்த தனத்தையுடையவரும், ஒலிக்கின்ற அழகிய மேகலாபரண மணிந்தவரும், இருள்போன்ற கூந்தலிலணிந்த மாலையுடையவருமாகி, (தமது) கண்களும், மனங்களும், அவர்முன்னே தூதுசெல்லுதல்போல (அவை அவர்முன்னே) செல்ல, தாமரையரும்புபோன்ற தனங்களையுடைய அப்பெண்கள் தொடர்ந்து நடந்தார்கள். எ-று.()

சுருங்கு மிடையார் தன்பவனி தொழுது வருவார் தமக்கிரங்கி
மருங்குற் பாரங் கழிப்பான்போற் கலையைக் கவர்ந்தும் வளைத்தோண்மே
லொருங்கு பாரங் கழிப்பான்போல் வளையைக் கவர்ந்து முள்ளத்தே
நெருங்கு பாரங் கழிப்பான்போ னிறையைக் கவர்ந்து நெறிச்செல்வான்.

(இ-ள்.) மெலியும் இடையையுடையவராகித் தமது பவனியைத்தொழவருபவர்களுக்கு இரக்கங்கொண்டு, அவ்விடையின் சுமையை யொழிப்பவர் போல மேகலையைக் கொள்ளைகொண்டும், வளையலணிந்த கைகளில் ஒருசேரவுள்ள சுமையையொழிப்பார்போல வளையைக் கொள்ளைகொண்டும், உளத்தில் நெருங்கிய சுமையைக்கழிப்பவர்போல நிறையைக் கொள்ளைகொண்டும் வீதியிற் பவனிவருகின்றார்.

சுருங்குமிடையார் என்றது அளகந் தனமுதலியபாரத்தால் என்க. மேகலை கலை யெனக் குறைந்து நின்றது நிறையென்றது மனம் தீநெறியிற்செல்லாது நன்னெறியில் நிறுத்தல். (௬௭)

வான மதிசேர் முடிமறைத்த வழுதி மகனே யிவனென்று
லானை யெருத்திற் சிங்கவிள வடலே றென்ன வயல்வேந்தர்
சேனை தழுவ வரும்பவனிக் கொப்பே தொப்புச் செப்புங்கால்
யானை மகளை மணந்துவரு மிளையோன் பவனிச் செல்வமே.

(இ-ள்.) இவ்வுக்கிரகுமாரபாண்டியர் ஆகாயத்திற் றவழுஞ் சந்திரனையணிந்த முடியை மறைத்துவந்தருளிய சுந்தரபாண்டியருடைய புதல்வரோவென்று சொன்னால், யானையின்பிடரில் இளம்பருவத்தையுடைய வெற்றிபொருந்திய ஆண்சிங்கமானது (பவனிவருதல்) போல, மறுபுலத்து மன்னர்களுடைய சேனை புறத்திற்றழுவ வராநின்றபவனிக்கு உவமையாது? (யாதுமில்லை) உவமை கூறுமிடத்துத் தெய்வயானை நாச்சியாரை மணவினை முடித்து இளையபிள்ளையாராகிய முருகக்கடவுள் வலம்வரும் பவனிச்சிறப்பே (ஒத்திருக்கு மென்று கூறுவர்.) எ-று. (௬௮)

இம்மை தனிலு நன்மைதரு மீசன் றனையும் வாசவற்கு
வெம்மை தருவன் பழிதவிர்த்த விமலன் றனையு மங்கயற்க

னம்மை தனையும் பணிந்துமீண் டரசன் கோயி லடைந்தீன்றோர்
தம்மை முறையா லடிக்கமலந் தலையிற் பணிந்தான் றனிக்குமரன்.

(இ-ள்.) (தமது பிதாவினால் ஆன்மார்த்தமாகப் பிரதிஷ்டைசெய்த) இப் பிறப்பிலும் (வழிபடுவோருக்கு) நன்மைகளை அனுக்கிரகிக்கும் இகாபீஷ்டப் பிரதே சுவரனையும், தேவேந்திரனுக்கு (சம்பவித்த) கொடிய வலியபழியைத்தவிர்த்த சோம சுந்தரப் பெருமானையும், அங்கயற்கண்ணம்மையாரையும் உக்கிரகுமாரபாண்டியர் பணிந்து திரும்பி, சுந்தரபாண்டியருடைய திருக்கோயிலையடைந்து தம்மைப்பெற்ற இருமுதுகுரவரையும் முறைப்படி அவர்களது திருவடித்தாமரைகளைத் தமது தலையால் வணங்கினர். எ-று.

சிவபெருமான் சுந்தரபாண்டியராக வந்தபொழுது அரசர்கள் சிவபூசை செய்யவேண்டுமென்னும் நியதியைக்காக்க நடுவூரிற்செய்த சிவலிங்கப் பிரதிட்டை இகாபீஷ்டப் பிரதேசுவரனெனப்படும். இதனை இம்மையில் நன்மைதருவார் என்ப.

வாசவற்கு வன்பழிதவிர்த்த என்றது, இந்திரன் விருத்திராசுரனைக் கொ ன்றதாற் பெற்ற பிரமகத்தியை விலக்கியது. இது இந்திரன் பழிதீர்த்தபடலத்தின் சரிதமாகவின் முன்வந்துள்ள விடத்திற்கண்டுகொள்க. (௩௯)

ஆறு வாறு சுவையடிசி லயில்வோர் தம்மை யயில்வித்து
நாறு வரிசை வரன்முறையா னல்கி விடையு நல்கிப்பின்
வானு டவர்க்கும் விடைகொடுத்து மதிக்கோ னெழுகி வைகுநாட்
டேனுர் கண்ணித் திருமகனுக் கிதனைச் செப்பி யிதுசெய்வான்.

(இ-ள்.) சந்திரவமிசத்தரசராகிய சுந்தரபாண்டியர் நீங்காத அறுசுவைபொ ருந்திய கறியையும், அன்னத்தையும் உண்போருக்கு உண்பித்து (அவரவருக்குத் தக்க) பலவரிசைகளையுங் கிரமப்படி கொடுத்துஉத்திரவளித்தனுப்பி, பின்பு தேவர் களுக்கும் விடையளித்து, (செங்கோல்) செலுத்தி எழுந்தருளியிருக்குநாளில், தேன் பொருந்திய (வேப்ப) மாலையணிந்த (தமது) குமாரனுக்கு இதனைத் திருவாய்மலர்ந் தருளி இதனைச் செய்கின்றார். எ-று.

"இதனைச்செப்பி யிது செய்வான்" என்றது மேலைச்செய்யுளால் இனிது விளங்கும். (௪0)

மைந்த கேட்டி யிந்திரனுங் கடலு முனக்கு வான்பகையாஞ்
சந்த மேருத் தருக்கடையுஞ் சதவேள் விக்கோன் முடிசிதற
விந்த வளைகொண் டெறிகடலி லிவ்வேல் விடுதி யிச்செண்டா
லந்த மேருத் தனைப்புடையென் றெடுத்துக் கொடுத்தா னவைமூன்றும்.

(இ-ள்.) மகனே! கேட்பாயாக. தேவேந்திரனும்வருணனும் உனக்குப் பெ ரிய பகைஞராவர். அழகிய மேருமலை (ஒருகாலத்தில்) இறுமாப்படையும். (ஆதலின்) அவ்விந்திரன் முடிசிதறும்படி இந்தச்சக்கரங்கொண்டெறிவாய்; சமுத்திரத்தில் இந்த வேலைவிடுவாய்; அந்த மகமேருவை இந்தச் செண்டாயுதத்தால் அடியென்று, அந்த மூன்று ஆயுதங்களையும் (சுந்தரபாண்டியர்) எடுத்துக் கொடுத்தருளினர். எ-று.

சதவேள்விக்கோன் என்றது இந்திரனுக்கோர் பரியாயநாமம். நூறு அசுவ மேத யாகங்களைச் செய்தவனென்று பொருள். இதுபற்றியே சதக்கிருது எனவுங் கூறுப. (௪௧)

அன்ன மூன்று படைக்கலமுந் தொழுது வாங்கி யடலேறு
தன்னை நேரா யெதிர்நிற்குந் தனயன் றனையுக் கிரவழுதி
யென்ன வாதி மறைமுழங்க வியங்க ளேங்க முடிகவித்துத்
தன்ன தாணை யரசுரிமை தனிச்செங் கோலுந் தானல்கா.

(இ-ள்.) (சுந்தரபாண்டியர் கொடுத்த) அந்த மூன்றாயுதங்களையும் பணிந்து (கையேற்று) வாங்கி, வலிமைபொருந்திய சிங்கத்தைப் போன்று (தமது) திருமுன்னர் நிற்கும் புத்திரனை, உக்கிரபாண்டிய! என்று விளித்து, அநாதியாயுள்ள வேதங்கள் (ஒருபக்கலில்) முழங்கவும், வாச்சியங்கள் (ஒருபக்கலில்) கோஷிக்கவும் முடிசூட்டி, (எவ்வுயிரையும்) தனதாணைவழி நிற்கச் செய்யும் அரசுரிமையையும் ஒப்பற்ற செங்கோலையுந் தாம் கொடுத்தருளி. எ-று.

இதுமுதல் மூன்றுபாடல்கள் குளகம். (சுஉ)

சூட்சி வினையிற் பொன்னனைய சுமதி தன்னைத் தொன்னூலின்
மாட்சி யறிஞர் தமைநோக்கி வம்மி னிவனைக் கண்ணிமைபோற்
காட்சி பயக்குங் கல்வியும்போற் காப்பீ ரிதுநுங் கடனிம்ம
ணாட்சி யிவன தென்றினைய வரியே றனையான் றனைநல்கா.

(இ-ள்.) மந்திராலோசனைச் சபையில், பிரகஸ்பதி முனிவரைப போன்ற சுமதியையும், பழைமையாகிய நூலாராய்ச்சியிற் பெருமைபொருந்திய முதியோரையும்பார்த்து, வாருங்கள் இவ்வுக்கிரகுமாரனை (கண்களை)க் காக்குங் கண்ணிமைபோலவும், (தவறினகாலத்தில்) அறிவு உதவுங் கல்வியோலவுங் காக்கக்கடவீர். இது உங்கள் கடமையாகும். இந்நிலவுலகுரிமை இவனுடையது என்று, இளஞ்சிங்கவேறுபோன்ற அவ்வுக்கிரகுமார பாண்டியனை (அவர்கள் கைவசமாக)க் கொடுத்து. எ-று.

மேற்படி - வேறு.

வெய்யவேற் காளை யன்னான் றன்னையும் வேறு நோக்கி
யையவிவ் வையந் தாங்கி யளித்தன னெடுநா ளிந்த
மையறு மனத்தார் சொல்லும் வாய்மையா றொழுகி நீயுஞ்
செய்யகோன் முறைசெய் தாண்டு திருவொடும் பொலிக வென்றான்.

(இ-ள்.) கொடிய வேற்படைதாங்கிய காளைப்பருவமுடைய தமது புதல்வனையுந் தனித்துப் பார்த்தருளி, ஐயனே! நாம் பல காலமாக இந்த வுலகைச்சுமந்து பாதுகாத்துவந்தோம். நீயும் இந்தக் குற்றமற்ற மனத்தையுடைய சுமதி முதலியோர் கூறும் உண்மை வழிப்படி நடந்து, செங்கோலை மனுமுறை தவறாது நடத்தி, (இவ்வுலகத்தை) ஆண்டு, (மறுமன்னர் கப்பங்கட்டும்) பெருஞ்செல்வத்துடன் பொலிந்து விளங்கக்கடவாயென்று ஆசீர்வதித்தருளினார். எ-று. (சுச)

பன்னருங் கணங்க ளெல்லாம் பண்டைய வடிவ மாகத்
தன்னருட் டுணையாய் வந்த தடாதகைப் பிராட்டி யோடும்
பொன்னெடுங் கோயில் புக்குப் பொலிந்தன னிச்சை தன்னா
லின்னருட் படிவங் கொள்ளு மீறிலா வின்ப மூர்த்தி.

(இ-ள்.) (வடிவவேறாகிப் பணிசெய்திருந்த) சொல்லுதற்கரிய சிவகணங்கள்யாவும் (தமது) முன்னைய (நிஜ)வடிவமாக, தமது திருவருளே தமக்கோர் துணைவியாகக் கோலங்கொண்டருளிய தடாதகைப்பிராட்டியாரோடும், தமதிச்சையின்படி இனிய அருளுருவங் கொண்டருளிய முடிவில்லாத பேரின்ப மூர்த்தமாகிய சோமசுந்தரக்கடவுள் பொன்னாலாகிய நெடிய திருக்கோயிலுட்சென்று விளங்கினார். எ-று.



கடல்சுவறவேல்விட்டபடலம்.

கலிவிருத்தம்.

பின்ன ருக்கிரப் பெயர்த ரித்தவத்
தென்னர் கோமகன் றெய்வ நான்மறை
மன்னு நல்லறம் வளர வையகந்
தன்ன தாணையாற் றாங்கி வைகினான்.

(இ-ள்.) பின்பு உக்கிரனென்னும் திருநாமங்கொண்ட அப்பாண்டியர் பெருமானுர் தெய்வத்தன்மையையுடைய நான்கு வேதங்களும், நிலைபெற்ற நல்ல தருமங்களும் வளர்ந்தோங்கும்படி, பூலோகத்தைத் தமது ஆக்கினையின்படிநிற்கச் சுமந்து அரசியல் நடாத்தி வீற்றிருந்தனர். எ-று.

பின்னர் என்பது காலப்பொருளில் வந்ததோ ரிடைச்சொல். பின்-பகுதி, அர் - பகுதிப்பொருளில் வந்த விகுதி, னகரத்தோற்றம் சந்தி. (சுசு)

உக்கிரபாண்டியருக்கு வேல்வளை செண்டுகொடுத்தபடலம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம்-கஎ௱௨.

## பதின்மூன்ருவது
# கடல்சுவறவேல்விட்டபடலம்.

கலிவிருத்தம்.

வளையொடு செண்டுவேன் மைந்தற் கஞ்சுரும
பளையவேம் பணிந்தகோ னளித்த வாறிதத
தளையவிழ் தாரினன் றனயன் வேலைமே
லிளையவ னென்னவே லெறிந்த தோதுவாம்.

(இ-ள்.) அழகிய வண்டுகள்மொய்க்க வேப்பமலர் மாலையணிந்த சுந்தரபாண்டியர் (தமது) புத்திரராகிய உக்கிரகுமாரபாண்டியருக்குச் சக்கரத்தையும், செண்டையும், வேலையுங் கொடுத்தருளிய திருவிளையாடல் இதுவாகும். முறுக்கவிழ்ந்த மலர்மாலை தரித்த அச்சுந்தரபாண்டியர் புதல்வராகிய உக்கிரகுமாரபாண்டியர், சமுத்திரத்தின்பேரில் (மாமரமாகநின்ற சூரபன்மனுடைய நிலைகுலைய வேற்படைசெலுத்திய) முருகக்கடவுள்போல, வேலெறிந்த திருவிளையாடலை இனி (யாம்) கூறுவாம். (க)

திங்களி னுக்கிரச் செழியன் வெண்குடை
யெங்கணு நிழற்றவீற் றிருக்கு நாள்வயிற்
சங்கையில் லாதமா தரும வேள்விகள்
புங்கவர் புடைதழீஇப் போற்ற வாற்றுநாள்.

(இ-ள்.) உக்கிரகுமாரபாண்டியர் சந்திரன்போல வெண்கொற்றக்குடை எவ்விடத்தும் நிழல்செய்ய, (ஏகசக்கிராதிபதியாய்) கொலுவீற்றிருக்குங் காலத்தில், சங்கையில்லாத சிறந்த தருமங்களையும் யாககாரியங்களையும், தேவர்கள் (தம்) பக்கலிற் சூழ்ந்து துதிக்கச் செய்துவருநாளில். எ-று. (உ)

அரும்பரி மகந்தொ ணூற் றாறு செய்துழிச்
சுரும்பரி னிசைத்தருத் தோன்ற றண்ணாறு
விரும்பரி முரன்றுசூழ் வேம்பி னங்குழைப்
பொரும்பரி வீரன்மேற் பொறாது பொங்கினான்.

(இ-ள்.) செய்தற்கரிய அசுவமேதங்கள் தொண்ணூற்றாறு செய்தவிடத்து, வண்டுகளின் இசையுள்ள பஞ்சதருக்களின் நிழலில் அமரும் இந்திரன், தட்பமாகிய தேனைவிரும்பும் வண்டுகள் பண்பாடிப் புறம்பே சூழ்ந்த அழகிய வேப்பமலர்க்கொத் தினையணிந்த, (பகைவரொடு) போர்புரியும் குதிரைச்சேனையையுடைய உக்கிரகுமார பாண்டியர்பேரில் மனம்பொறாமற் சினந்தான். எ-று.

நூறு யாகங்களுஞ்செய்து முடித்தால், தனது இந்திரபட்டம் இமைப்பி லொழியுமென்று கருதி மனம்பொறாது பொங்கினான் எனக்கொள்க. (௩)

மன்னிய நாடெலாம் வளஞ்சு ரந்துவான்
பொன்னியனாடுபோற் பொலித லாலிந்த
மின்னிய வேலினான் வேள்வி செய்வதென்
றுன்னிய மனத்தனோர் சூழ்ச்சி யுன்னினான்.

(இ-ள்.) நிலைபெற்ற பூலோக முழுதும் பொன்னுலகுபோலச் செல்வம் பெருகி விளங்குதலினால், இந்தப்பிரகாசிக்கின்ற வேற்படைதாங்கிய உக்கிரகுமார பாண்டியன் யாகத்தைச்செய்வது (இதற்குக்காரணம்) என்று நினைத்த மனத்தை யுடையவனாய் ஒரு ஆலோசனைசெய்தான். (அதாவது) எ-று.

இது மேற் செய்யுளான் விளங்கும். (௪)

பொருங்கடல் வேந்தனைக் கூவிப் பொள்ளென
விருங்கட லுடுத்தபா ரேழு மூழிநா
ளொருங்கடு வெள்ளமொத் துருத்துப் போய்வலைந்
தருங்கடி மதுரையை யழித்தி யாலென்றான்.

(இ-ள்.) (கரையுடன்) மோதுகின்றசமுத்திரத்திற் கிறைவனாகிய வருணனை விளித்து, பெரியகடல் சூழ்ந்துள்ள நிலவுலகாகிய சத்ததீவுகளையும், ஊழிக்காலத்தில் ஒருசேர அழிக்கும் (கற்பாந்தப்) பிரளயத்தைப்போன்று கோபித்து விரைவாகச் சென்று சூழ்ந்து, செய்தற்கரிய காவல்பூண்ட மதுராபுரியை யழிப்பாயென்று கட் டளையிட்டான். எ-று.

சத்த தீவுகள்-நாவல்-இறலி-குசை-கிரவுஞ்சம் - புட்கரம் - தெங்கு - கமுகு எனப்படும். (௫)

விளைவது தெரிகிலன் வேலை வேந்தனும்
வளவயன் மதுரையை வளைந்திட் டிம்மெனக்
களைவது கருதினன் பேயுங் கண்படை
கொளவரு நனந்தலைக் குருட்டுக் கங்குல்வாய்.

(இ-ள்.) சமுத்திரத் தலைவனாகிய வருணனும் (இதனால் தனக்குமேலே) வருவதை ஆராயாதவனாகி, வளப்பம்பொருந்திய வயல் சூழ்ந்த மதுராபுரியை முற் றுகைசெய்து, விரைவாக அழிக்க நினைத்து, பேய்களுங்கண் டுயில்கொள்ளவும், (ஒளியையுடைய விழிக்கும்) குருட்டுத்தன்மை அடையவும் வரும் (இருண்மிகுந்த) அர்த்தராத்திரியில். எ-று.

தெரிகிலன்-கருதினன்-முற்றெச்சங்கள். (௬)

எழுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

கொதித்த லைக்க ரங்க ளண்ட கூட மெங்கு மூடுபோ
யதிர்த்த லைக்க வூழி நாளி லார்த்த லைக்கு நீத்தமாய்
மதித்த லத்தை யெட்டி முட்டி வருமொ ரஞ்ச னப்பொருப்
புதித்த லொத்து மண்ணும் விண்ணு முட்க வந்த துததியே.

(இ-ள்.) சமுத்திரமானது சினந்து அலையாகிய கைகள் அண்டகூடமெங்கும் ஊடுருவிச்சென்று ஆர்ப்பரித்து அலைக்க, ஊழிக்காலத்திலே கோஷித்து (நிலைபெயர்ந்து) அலைக்கவரும் பெருவெள்ளமாய், சந்திரமண்டலத்தை எட்டித்தடவி வராநின்ற ஒரு நீலமலையின் தோற்றத்தைப்போன்று பூலோகமுந் தேவலோகமும் நடுங்கும்படிவந்தது. எ-று. (எ)

வங்க வேலை வெள்ள மாட மதுரை மீது வருசெயல்
கங்குல் வாய திங்கண் மீது காரி வாய காருடல்
வெங்கண் வாள ராவி ழுங்க வீழ்வ தொக்கு மலதுகா
ரங்கண் மூட வருவ தொக்கு மல்ல தேது சொல்வதே.

(இ-ள்.) மரக்கலங்கள் செல்லுங் கடல்வெள்ளம், மாடங்களையுடைய மதுரைப்பதியின்பேரில் (அழிக்கக் கருதி) வருஞ்செயலானது, இராப்பொழுதிலுதித்த சந்திரன்பேரில் விஷநிறைந்த வாயையுடைய கரிய உடலையும், கொடிய கண்களையுமுடைய ஒள்ளிய இராகு (என்னும் பாம்பு) விழுங்கக்கருதி விரைந்து வருதலையொக்கும். அல்லது, மேகங்கள் அம்மதுரை நகரை மறைக்க வருதலையொக்கும். இவையன்றி எதை (ஒப்பிட்டுக்) கூறுவது. எ-று.

கார் அங்கண் மூடவருவது ஒக்கும் என்றதற்கு (சிவாக்கினையால்) நான்கு மேகங்களும் அவ்விடத்து நான்மாடக் கூடலாய் (இனி) வருஞ்செயலை நிகர்க்கும் எனவும் ஒரு சாரார் கூறுப. (அ)

வட்ட யாமை பலகை வீசு வாளை வாள்கண் மகரமே
பட்ட யானை பாய்தி ரைப்ப ரப்பு வாம்ப ரித்திரள்
விட்ட தோணி யிரத மின்ன விரவு தானை யொடுகட
லட்ட மாக வழுதி மேல மர்க்கெ ழுந்த தொக்குமே.

(இ-ள்.) வட்டமாகிய யாமைகள் கேடகங்களும், எறிகின்ற வாளைமீன்கள் வாள்களும், மகரமீன்கள் நெற்றிப்பட்ட மணிந்த யானைகளும், வீசும் அலைப் பரப்புகள் தாவுங் குதிரைக்கூட்டங்களும், (செல்லும்படி) விடுத்த தோணிகள் தேர்களுமாகக் கூடிய இத்தகைய நெருங்கியசேனையுடன் சமுத்திரமானது நேராக உக்கிரகுமாரபாண்டியர்பேரிற் போர்க்கெழுந்து வந்ததையொக்கும். எ-று.

அட்டம் என்றதற்கு நேர் என்றும், திசைச்சொல்லாகக் கொண்டால் குறுக்கு என்றும் பொருள்படும். (க)

இன்ன வாறெ ழுந்த வேலை மஞ்சு றங்கு மிஞ்சிசூழ்
நன்ன கர்க்கு ணக்கின் வந்து நணுகு மெல்லை யரையிரா
மன்ன வன்க னவின் வெள்ளி மன்ற வாணர் சித்தராய்
முன்னர் வந்தி ருந்த ரும்பு முறுவ றோன்ற மொழிகுவார்.

(இ-ள்.) இவ்வாறெழுந்த கடலானது, மேகங்கள் துயில் புரியும் மதில் புடைசூழ்ந்த நல்ல மதுராபுரியின் கீழ்த்திசையில் வந்துசேரும் நடுராத்திரிப்பொழுதில், வெள்ளியம்பலவாணராகிய சோமசுந்தரக்கடவுள், உக்கிரகுமாரபாண்டியர் கன

விற் சித்தமூர்த்தியாய் முன்வந்து (தோன்றி) அரும்பிய திருப்புன் முறுவல் விளங்கத் திருவாய்மலர்ந்தருளுகின்றார். எ-று.

வாணர்-வாழ்வோர். வாழ்-பகுதி, அர்-பலர்பால் விகுதி, நகரம்-எதிர்கால இடைநிலை. ழகரக்கேடும் நகரத்திரிபும் சந்தி. (௧0)

வழுதி யுன்ற னகர ழிக்க வருவ தாழி வல்லைநீ
யெழுதி போதி வென்றி வேலெ றிந்து வாகை பெறுகெனத்
தொழுத செங்க ரத்தி னன்று திக்கு நாவி னனெழீஇக்
கழுது றங்கு கங்கு லிற்க னவு ணர்ந்து காவலான்.

(இ-ள்.) பாண்டியனே! சமுத்திரமானது உனது மதுரை நகரை யழிக்கும்படி (இந்திரன் வேண்டுகோளால்) வராநின்றது. நீ விரைந்து எழுந்துசென்று (அதன்பேரில்) வெற்றிபொருந்திய வேற்படைவிடுத்து வெற்றிமாலை பெறக்கடவா யென்றுகூற, உக்கிரகுமாரபாண்டியர் குவித்த செவந்த கையையுந்தோத்திரஞ்செய்த நாவையுமுடையவராய் எழுந்து, பேயுங் கண்ணுறங்கும் நடுராத்திரியில் (இறைவர் உணர்த்திய) கனவின் திறத்தையறிந்து. எ-று.

இதுமுதல் நான்குபாடல்கள் குளகம்.

வல்லை-இடைச்சொல். வினையெச்சப் பொருளில்வந்தது. (௧௧)

கண்ணி றைந்த வமளி யிற்க ழிந்து வாயில பலகடந்
துண்ணி றைந்த மதிய மைச்ச ருடன்வி ரைந்து குறுகியே
மண்ணி றந்த தெனமு ழங்கி வருத ரங்க வாரிகண்
டெண்ணி றந்த வதிச யத்த னாகி நிற்கு மெல்லைவாய்.

(இ-ள்.) (உக்கிரகுமாரபாண்டியர்) கண்டுயில் கூருவதற்குத் தக்க படுக்கையினின்று நீங்கி, பலவாயில்களைக்கடந்து உள்ளத்தில் அறிவு நிறைந்த மந்திரிகளுடன் விரைந்துசென்று, பூமியழிந்ததென்று (கண்டோர் கூறத்தக்கதாய்) இறைந்துவரும் அலைகளையுடைய கடலைக்கண்டு அளவிறந்த ஆச்சரியமடைந்து நிற்குஞ் சமயத்தில். எ-று. (௧௨)

கனவில் வந்த சித்த வேடர் நனவில் வந்து காவலோ
னினைவு கண்டு பொழுது தாழ நிற்ப தென்கொ லப்பனே
சினவி வேலை போல வந்த தெவ்வை மான வலிகெட
முனைய வேலெ றிந்து ஞால முடிவு தீர்த்தி யாலென.

(இ-ள்.) சொப்பனத்தில் வந்தருளிய சித்தவேடங்கொண்ட மூர்த்திகள் சாக்கிரத்திலும் வந்தருளி, உக்கிரகுமாரபாண்டியருடைய உள்ளத்தையறிந்து, அப்பனே! பொழுது தாழ (யோசித்து) நிற்குங் காரணம் யாது? கோபித்துக் கடல்வடிவாகவந்த பகைஞனை மானமும் வலியுமழிய, கூர்மையுடைய வேற்படையை யெறிந்து (அக்கடலால்) உலகிற்குவந்தஅழிவையொழிக்க. என்றருளிச்செய்ய. எ-று.(௧௩)

எடுத்த வேல்வ லந்தி ரித்தெ றிந்த வேலை வேன்முனை
மடுத்த வேலை சுவ்வெ னவ றந்து மான வலிகெட
வடுத்து வேரி வாகை யின்றி யடிவ ணங்கு தெவ்வனைக்
கடுத்த வேல்வ லான்க ணைக் காலின் மட்ட தானதே.

(இ-ள்.) எடுத்த வேலாயுதத்தை வலப்பக்கலிற் சுழற்றி யெறிந்த காலத்தில்,வேலின் முனைதோய்ந்த கடலானது சுவ்வென்று வறந்து,தனது மானமும் வன்மையுங் கெட்டழிய அடைக்கலம்புகுந்து, வாசனைபொருந்திய வெற்றிமாலை (அணி

தல்) இன்றி (போரிற்றோத்துத் தமது பகைவரை)க் காலிற்பணியும் பகைவரையொத்து, வேற்படைதாங்கிய உக்கிரகுமாரபாண்டியருடைய கணைக்காலின் அளவுடைத்தாகியது. எ-று. (௧௪)

சந்த வேத வேள்வி யைத்த டுப்ப தன்றி யுலகெலாஞ்
சிந்த வேறு சூழ்ச்சி செய்த தேவர் கோனி னேவலால்
வந்த வேலை வலிய ழிக்க வஞ்ச கற்கு நன்றிசெய்
திந்த வேலை வலியி ழப்ப தென்று முள்ள தேகொலாம்.

(இ-ள்.) பண்பொருந்திய வேதமுறை தவறாமற் செய்யும் யாகத்தைத்தடுப்பதன்றி, உலகமுழுதுங் கெடும் வண்ணந் தீய ஆலோசனைசெய்த தேவேந்திரனுடைய கட்டளையால், வந்த கடலானது வலிகெட்டது. இந்தக்கடலானது வஞ்சகருக்கு உபகாரப்பட்டு (தனது) வலியிழத்தல் என்றும் உள்ள செயலேயாம். எ-று.

"இந்தவேலை வலியிழப்ப தென்றுமுள்ளதே" என்றது, சூரபன்மனுக்கு இடங்கொடுத்து முருகக்கடவுளுடைய வேற்படையால் வலியழிந்ததும், விருத்திராசுரனுக்கு இடங்கொடுத்து இந்திரன் வேண்டுகோளால் அகத்தியமுனிவர் ஆசமனஞ் செய்தலால் வலியிழந்ததும், உள்ளதாதலின் என்க. (௧௫)

அறுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

புண்ணிடை நுழைந்த வேலாற் புணரியைப் புறங்கண் டோன்பான்
மண்ணிடை நின்ற சித்தர் வானிடை நிறைந்து ஞானக்
கண்ணிடை நிறைந்து தோன்றுங் கருணையால் வடிவங் கொண்டு
விண்ணிடை யணங்கி னோடு விடையிடை விளங்கி நின்றார்.

(இ-ள்.) (பகைவர்களுடைய தேகத்திலுள்ள) புண்ணில் நுழைந்து செல்லும் வேற்படையினாற் கடலை முதுகுபார்த்த உக்கிரபாண்டியரிடத்து மண்மிசைச் சித்தமூர்த்தியாய் நின்ற சுந்தரேசப்பெருமான், ஆகாயத்தில் மறைந்து, ஞானக்கண்ணுக்கு நிறைந்து புலப்படும் (தமது) கிருபையால் திருவுருக்கொண்டு ஆகாயத்தினிடத்தில் உமாபிராட்டியாருடன் இடபவாகனத்தின்பேரில்விளங்கி நின்றருளினார்.

இச்செய்யுளைச்சேர, "தமிழின் தலைச்சங்கங் கடல் கொள்ளப்பட்டமையின் ஈண்டு இடைச்சங்கத்தை இப்பொழுது நாட்டினோம். இனிக்கடைச்சங்கம் கங்காதீரத்திலே உண்டாகும்" எனச் சித்தமூர்த்திகள் அருளி விண்ணிடைவிடையில் விளங்கினாரென்பது வடமொழிப்புராணம். இவ்வளவேயன்றி, வேறுசரித்திரவிளக்கமின்மையின் பரஞ்சோதி முனிவர் இதனை மொழி பெயர்த்திலர் போலும். இது கருதி இச்செய்யுளை மாற்றி

"புண்ணுடை வேலோ யாதித் தமிழ்ச்சங்கம் புணரி கொள்ள
மண்ணிடைச் சங்க மின்று வைத்தனங் கடைச்சங் கந்தான்
கண்ணிடைக் காணக் கங்கைக் கரையினு மென்று சித்தர்
விண்ணிடை யணங்கி னோடு விடையிடை விளங்கி நின்றார்" எனப் பாடங்கொண்டாருமுளர். (௧௬)

முக்கணும் புயங்க ணான்கு முளைமதிக் கண்ணி வேய்ந்த
செக்கரஞ் சடையுங் காள கண்டமுந் தெரிந்து தென்னன்
பக்கமே பணிந்தெ ழுந்து பரந்தபே ரன்புந் தானுந்
தக்கவஞ் சலிசெய் தேத்தித் தரைமிசை நடந்து செல்வான்.

(இ-ள்.) மூன்று திருக்கண்களும், நான்குதிருப்புயங்களும், இளஞ்சந்திரகலையாகிய மாலையாகத்தரித்த செவந்த அழகுடைய சடாமுடியும்,திருநீலகண்டமும், (ஆகிய இவற்றை) உக்கிரகுமாரபாண்டியர் தரிசித்து, அருகில் வணங்கி யெழுந்து, பரவிய பேரன்புந் தானும் தகுதியான அஞ்சலிசெய்துதுதித்து, நிலவுலகின்பேரிற் சமீபமாக நடந்து செல்கின்றார்.—எ-று.

தக்கவஞ்சலியென்றது அஷ்டாங்க பஞ்சாங்க திரியாங்க ஏகாங்க நமஸ்காரங்களாம். இவை முன்விளக்கப்பட்டுள்ளன. (௧௭)

துந்துபி யைந்து மார்ப்பப் பாரிடந் தொழுது போற்றத்
தந்திர வேத கீதந் ததும்பியெண் டிசையுந் தாக்க
வந்தர நாட ரேத்த வகல்விசும் பாற தாக
வந்துதன் கோயில் புக்கான் வரவுபோக் கிறந்த வள்ளல்.

(இ-ள்.) பஞ்சதுந்துபிகளும் (ஒருபக்கலில்) முழங்கவும், பூதகணங்கள் பணிந்து சூழ்ந்துவரவும், கலைகளமைந்த வேதகீதங்கள் நிறைந்து எட்டுத்திக்குகளிலும் பரவவும்,தேவர்கள் (ஒருபக்கலில்) தோத்திரஞ்செய்துவரவும், பிறப்பு இறப்புகளற்றவ ராகிய சோமசுந்தரப்பெருமான் அகன்ற ஆகாயமே வழியாகவந்து தமது திருக்கோயிலுள் எழுந்தருளினார்.—எ-று. (௧௮)

அஞ்சலி முகிழ்த்துச் சேவித் தருகுற வந்த வேந்த
னிஞ்சிசூழ் கோயி லெய்தி யிறைஞ்சினன் விடைகொண் டேகிப்
பஞ்சின்மெல் லடியா ரட்ட மங்கலம் பரிப்ப நோக்கி
மஞ்சிவர் குடுமி மாட மாளிகை புகுந்தான் மன்னோ.

(இ-ள்.) அஞ்சலி குவித்துத் தரிசித்துச் சமீபமாக வந்த உக்கிரகுமார பாண்டியர் திருமதில் சூழ்ந்த திருக்கோயிலை யடைந்து பணிந்து (எம்பெருமானிடத்து) விடைபெற்றுச் சென்று, பஞ்சைக் காட்டிலும் மிருதுவாகிய கால்களையுடைய மாங்கல்ய மாதர்கள் அஷ்ட மங்கலங்கள் தாங்கி எதிர்வரப்பார்த்து, மேகங்கள் தவழுஞ் சிகரத்தையும் மேன்மாடத்தையு முடைய (தமது) திருமாளிகையை யடைந்தனர். எ-று.

‘பஞ்சின் மெல்லடியார் அட்டமங்கலம் பரிப்ப’ என்றது, பகைவென்று வாகை சூடி வருவோராதலின் என்க. (௧௯)

வளையெயின் மதுரை மூதூர் மறிகட லிவற்றி னுப்பண்
விளைவய னகர மெல்லாம் வெள்ளியம் பலத்து ளாடுந்
தளையவிழ் கொன்றை வேணித் தம்பிரான் றனக்கே சேர்த்துக்
களைகணு யுலகுக் கெல்லா மிருந்தனன் காவல் வேந்தன்.

(இ-ள்.) வளைந்துள்ள மதில் புடை சூழ்ந்த மதுரையாகிய தொன்று தொட்டுள்ள நகரமும், அலைகள் மடங்கிவரும் (தென்) கடலுமாகிய இவற்றின் நடுவிலுள்ள, விளைவிளையுடைய வயல்கள் பொருந்திய நகரங்களையெல்லாம் வெள்ளியம்பலத்தில் திருநடனஞ்செய்யும் முறுக்கவிழ்ந்த கொன்றைமலர்மாலைசூடிய சடாடவியையுடைய சோமசுந்தரக்கடவுளுக்கே உரிமையாக்கிக் காவல் புரியும் உக்கிரகுமாரபாண்டியர் உலகத்திலுள்ள பிரிவுகட்கெல்லாம் பற்றுக்கோடாக வீற்றிருந்தனர். எ-று. (௨௦)

கடல்சுவற வேல்விட்ட படலம்.

முற்றிற்று.

ஆக திருவிருத்தம் - ௪௦௫௪.

சிவமயம்.

## பதினொன்காவது,

# இந்திரன் முடிமேல் வளையெறிந்த படலம்.

அறுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

மின்னவிர் மணிப்பூண் மார்பன் வேலையை வேலால் வென்று
பொன்னவிர் வாகை வேய்ந்த புகழுரை செய்தே னாக
நன்னக ராளி செம்பொ னகைமுடி சிந்த வந்த
மன்னவன் வளைகொண் டோச்சி வென்றதும் வகுத்துச் சொலவாம்.

(இ-ள்.) மின்னல்போலும் பிரகாசிக்கின்ற இரத்னாபரணம் பூண்ட மார்பையுடைய உக்கிரகுமாரபாண்டியர் கடலை (த்தமது) வேற்படையாற் செயங்கொண்டு பொன்போலப் பிரகாசிக்கும் வெற்றிமாலை யணிந்த புகழ்பொருந்திய திருவிளையாடலைக் கூறினேம். நல்ல பொன்னுலகத்தை யரசு செய்வோனாகிய இந்திரனுடைய செம்பொன்னாலாகிய விளக்கத்தையுடைய மகுடஞ் சிதற, அந்த வுக்கிரகுமார பாண்டியர் சக்கரம் எறிந்து செயங்கொண்ட திருவிளையாடலையும் (இனியாம்) விளக்கிக் கூறுவாம். எ-று. (க)

கோமக னிகழு நாளிற் கோணிலை பிழைத்துக் கொண்மூ
மாமழை மறுப்பப் பைங்கூழ் வறந்துபுற் றலைக டந்து
காமரு நாடு மூன்றுங் கையற வெய்த மன்னர்
தாமது தீர்வு நோக்கித் தமிழ்முனி யிருக்கை சார்ந்தார்.

(இ-ள்.) (இவ்வண்ணமாக) உக்கிரகுமார பாண்டியர் அரசுரிமை நடத்தி வருகையில், நவக்கிரகங்கள் (தத்தமக்குரிய) நிலையினின்று தவறி மேகங்கள் பெருமைமிகவருஷித்தல் ஒழிய விருப்பமிக்க (சேரசோழபாண்டியருடைய) மூன்றுநாடுகளும் பசிய பயிர்கள்தீய்ந்து புல்லின் தலைகளுலர்ந்து வறுமைமிக, அவ்வரசர் அவ்வறுமை யொழித்தலை நினைத்துத் தமிழ் முனிவராகிய அகஸ்தியருடைய இருக்கையாகிய பொதிய மலையை யடைந்தார்கள. எ-று. (உ)

முனிவனை யடைந்து வேந்தர் மூவருந் தங்க ணாட்டிற்
பனிவரு மாரி யின்றி வறந்தமை பகர மேருக்
குனிவரு சிலையாற் கன்பர் கோணிலை குறித்து நோக்கி
யினிவரு மாரி யில்லை யாதினா லென்று கேண்மின்.

(இ-ள்.) அரசர்கள் மூவரும் அகத்தியமுனிவனை யடைந்து தங்கள் நாடுகளிற் குளிர்ச்சியைத்தரும் மழையில்லாமையினால் வறுமை மிகுந்தமையைக் கூற, மேருமலையாகிய வளைந்த வில்லையுடைய சிவபெருமானுக்கு அன்பராகிய அகஸ்திய முனிவர் நவக்கிரகங்களின் நிலைமையை ஆலோசித்துப்பார்த்து இனிப் பெய்யுமழையில்லை. என்ன காரணத்தாலென்று சொல்லிக் கேளுங்கள். எ-று. (ங)

காய்சின வெய்யோன் சேயோன் முன்செலக் கதிர்கால் வெள்ளித்
தேசிகன் பின்பு சென்று நடக்குமிச் செயலான் முந்நீர்த்

ஆசின வுலகிற் பன்னீ ராண்டுவான் சுருங்கு மென்று
பேசின நூல்கண் மாரி பெய்விப்போற் சென்று கேண்மின்.

(இ-ள்.) (பயிர்களை) சுட்டு வருத்துங் கோபத்தையுடைய சூரியனும், அங்காரகனும் முன்னே செல்ல ஒளிவீசும் சுக்கிரன் அக்கோள்களுக்குப் பின்பு சென்று நடக்கும் இந்தக் காரணத்தால், சமுத்திரத்தை ஆடையாகவுடைய பூமியில் பன்னிரண்டு வருஷம் மழை குறையுமென்று நூல்கள் கூறின (ஆதலால்) மழை பெய்விக்கும் இந்திரனைச் சென்று (கண்டு அதுபற்றி) கேளுங்கள். எ-று. (ரு)

என்றவ னெதிர்யா மெவ்வா றேகுது மென்றா ரைந்தும்
வென்றவன் சோம வார விரதநீர் நோற்று வெள்ளி
மன்றவ னருளைப் பெற்று வான்வழிச் சென்மி னென்றக்
குன்றவன் சிலையா னோன்பின் விதியினைக் கூறு கின்றான்.

(இ-ள்.) என்று கூறிய அகத்தியமுனிவருக் கெதிரில், யாங்கள் (இந்திரனைக் காண ஆகாயவழியாக) எப்படிச் செல்வோமென்று வினவினார்கள். பஞ்சேந்திரியங்களையுஞ் செயித்த அவ்வகத்திய முனிவர் நீங்கள் சோமவார விரதத்தை நோற்று, வெள்ளியம்பலத்தில் நடிக்கின்ற இறைவரது திருவருளை யடைந்து, ஆகாயமார்க்கமாகச் செல்லுங்களென்று, அந்த மகமேருவாகிய வலிய வில்லையுடைய சிவபெருமானது (சோமவார) விரதத்தின் விதியினைச் சொல்லத்தொடங்கினார். எ-று. (சு)

உத்தம வானோர் தம்மு ளுத்தம னருத மீச
னுத்தம சத்தி மாரு ளுத்தமி யுருத்தி ராணி
யுத்தம விரதந் தம்மு ளுத்தமந் திங்க ணோன்பெ
னுத்தம மறைநூ லாதி யுரைக்குமிச் சோம வாரம்.

(இ-ள்.) உத்தமத் தன்மைவாய்ந்த (அரிபிரமேந்திராதி) தேவர்களுள் சிவபெருமானார் உத்தமராவர். உத்தமத்தன்மைவாய்ந்த (திருமகள் கலைமகள் முதலிய) சத்தியருள் உருத்திராணி உத்தமியாவாள். உத்தமத் தன்மைவாய்ந்த விரதங்களுள் சோமவாரவிரதம் உத்தமமென்று உத்தமத்தன்மைவாய்ந்த வேதமுதலாகிய நூல்கள் கூறும். இச்சோமவார விரதமானது. எ-று.

இச் சோமவார மென்பதை அடுத்த செய்யுளிற் கூட்டிக்கொள்க. (எ)

மந்தரங் காசி யாதி பதிகளில் வந்து நோற்கத்
தந்திடும் பயனிற் கோடி தழைத்திடு மதுரை தன்னி
லிந்தநல் விரத நோற்போர்க் கதிகம்யா தென்னிற் சோம
சுந்தர னுரிய வார மாதலாற் சோம வாரம்.

(இ-ள்.) மந்தரங் காசிமுதலிய க்ஷேத்திரங்களில் வாசஞ்செயது, அனுஷ்டிக்க (அவ்விரதம்) கொடுக்கும் பயனைக்காட்டிலும் மதுராபுரியிலிருந்து இந்த நல்ல விரதத்தை அனுஷ்டிப்பவருக்குக் கோடி மடங்கு (அதிக) பலனுண்டாகும். அதிக பலன் (கிடைத்தற்குக் காரணம்) யாது என்றால், சோமவாரமானது சோமசுந்தரப் பெருமானுக்கு உரிய வாரம் ஆதலால் (என்றறியுங்கள்.) எ-று.

சோமவாரம் சோமசுந்தரற்குரிய வாரமென்பதை,

**சோமவாரகற்பம்.**

உமையுடனே யொன்றி யுறுஞ்சிவன் சோம
னுமைசிவன்வா ரம்மதுவென் றோர்—என்பதனானுணர்க. (எ)

அங்கதி னதிகப் பேறுண் டருக்கனின் மதிதோய்ந் தொன்றித்
தங்கிய திங்க ளேனும்பு தகுதியி னேற்க வல்லார்க்
கிங்கதி னதிக நீதி யீட்டிய பொருள்கொண் டாற்று
மங்கல விரதப் பேறென் றனந்தமாய் வளரு மன்றே.

(இ-ள்.) சூரியனோடு சந்திரன் கலந்து பொருந்திய (அமாவாசையில் வந்த) சோமவாரவிரதத்தை (ஆகம) விதிப்படி அனுஷ்டிக்கவல்லவருக்கு, (மேற்கூறிய) அப்பலனிலு மதிகபலனுண்டு. நீதிமுறையாகத் தேடிய திரவியத்தைக்கொண்டு செய்யும் மங்கலந்தருஞ் சோமவாரவிரதபலன் இங்கு அப்பலனிலு மதிகமாம். ஒன்று அனந்தமாக வளரும். எ-று.

அமாவாசையோடு கலந்த சோமவார விசேஷத்தை,

**சோமவார சிவராத்திரி கற்பம்.**

" சந்திரவா ரத்துதயந் தங்கியமா வாசிதிதி
யந்தியயா மத்தினுமுற் றால்.
ஒருமூன்று கோடிசிவ ராத்திரியொ டொக்கும்
பரமசிவ னைப்பூசை பண்.
அருச்சித்தா ரிவ்வா றரித்துமல மெல்லாம்
பரித்திருப்ப ரீசன் பதம்." எனவருவனவற்றா லுணர்க. (அ)

நலமலி விரத நோற்கத் தொடங்குநா ளாவில்வாந் தேளிற்
சிலையினி லாத லன்றி யிரட்டிய தெரிசஞ் சேர்ந்த
மலமதி யொழித்து மற்றை மதியினு முந்தைப் பக்கத்
தலர்கதிர் வாரத் தல்லூ ணயின்றிடா வயலிற் றுஞ்சா.

(இ-ள்.) நன்மைமிகுந்த சோமவாரவிரதத்தை நோற்கத் தொடங்கும் (முகுர்த்தத்) தினத்தைச் சொல்வாம். விருச்சிக மாதத்திலும் தனுர்மாதத்திலும் (அனுஷ்டிக்கத் தொடங்குவது) அல்லாமல், இரட்டித்துவரும் அமாவாசை சேர்ந்த மலமாசத்தை யொழித்து மற்ற மாதங்களிலும் (அனுஷ்டிக்க ஆரம்பித்தால்) முற்பட்ட சுக்கிலபக்ஷத்திற் பரந்த கிரணத்தையுடைய ஞாயிற்றுக்கிழமை யிரவில் அன்னம் புசியாமலும், (மாதர்கள்) பக்கத்து நித்திரை செய்யாமலும். எ-று.

இதுமுதல் ஐந்து பாடல்கள் குளகம்.

தேள்-கார்த்திகைமாதம். சிலை-மார்கழிமாதம். அயலிற்றுஞ்சா என்பதற்கு மனைப் புறத்துச் சயனியாது என்பாரு முளர். அஃதொவ்வா தென்க. (௯)

வைகறை யெழுந்து சேற்கண் மணாளனை யுள்கி யற்றைச்
செய்கட னிறீஇக்கா மாதி சிந்தைநீத் தலர்பொற் கஞ்சப்
பொய்கையை யடைந்து கையிற் பவித்திரம் புனைந்து வாக்கு
மெய்கருத் தொருப்பா டெய்தச் சங்கற்பம் விதந்து கூறி.

(இ-ள்.) விடியற்காலத்தி லெழுந்து அங்கயற்கணம்மையார் தலைவராகிய சோமசுந்தரக்கடவுளைத் தியானித்து, அன்று செய்யும் நித்திய கடன்களை முடித்து, காமமுதலிய தீமைகளை (மனத்தினின்று) விலக்கி, விகசித்த பொற்றாமரைத் தீர்த்தத்தி லடைந்து கையில் பவித்திரந்தரித்து, மன வாக்குக் காயங்கள் ஒருசேரச் சங்கற்பஞ் சிறப்பித்துச் சொல்லி. எ-று.

வைகறை - அற்றைநாட் கழிந்தறுதல். பவித்திரம் - பாவத்தை யொழிப்பது.

சங்கற்பமாவது தானெடுத்த காரியம் முட்டின்று முடிந்து எளிதிற் பயன் கைகூடக் கூறுவது. (௧0)

கடம்படி முளைத்த முக்கட் கரும்பினை நினைந்து ஞாலத்
திடம்படு தீர்த்த மெல்லா மாடிய பயனை யீண்டுத்
திடம்படத் தருதி யென்னுத் திரைத்தடம் படிந்து வெண்ணீ
றுடம்பணிந் தக்க மாலை யொளிபெற விதியாற் றாங்கி.

(இ-ள்.) கடம்பவிருக்ஷத்தி னடியில் முளைத்தெழுந்த திரிநேத்திரங்களையுடைய கரும்புபோன்ற சோமசுந்தரப்பெருமானைத் தியானித்து, பூமியிற்பொருந்திய தீர்த்தங்களிலெல்லாம் ஸ்நானஞ்செய்த பலனை இந்தத் தீர்த்தத்தில் உறுதியாகத் தந்தருள் என்று அலையையுடைய அப்பொற்றாமரைத் தீர்த்தத்தில்மூழ்கி, வெள்ளிய திருநீற்றினை (ஆகமமுறைப்படி) உடலி லணிந்து, உருத்திராக்ஷ மாலைகளை ஒளிவீசத் தரித்து. எ-று.

சைவசமயநெறி.

"சிரநெற்றி காது திரண்ட கழுத்தி - னுரந்தோளி னுபிதனி லும்.
இரண்டுமுழங் கையி னிரண்டுமணி பந்தத் - திரண்டுமுழந் தாண்முதுகி னும்.
நெற்றியுரந் தோளணிக நீறிருமூன் றங்குலத்தின் - மற்றவற்றொன் றென்றே மதி.
தரிக்கதலை யாதியந்தஞ் சானுவீ சாதி - தரிக்கமற்றெல் லாஞ்சாதத் தால்."—என்றபடி, உச்சி - நெற்றி-காதுகள் - கழுத்து - மார்பு-தோள்கள் - உந்தி-முழங்கைகள்- மணிக்கட்டுகள் - முழந்தாள்கள் - முதுகு இவ்விடங்களில் விபூதி தரிக்கப்படும். திரிபுண்டரமாக நெற்றி - மார்பு - புயங்களில் அவ்வாறங்குலநீளமும், மற்ற வுறுப்புக்களில் ஒவ்வோரங்குல நீளமுந் தரிக்க. தலை - நெற்றி - மார்பு - நாபி - முழந்தாள்களில் முறையே ஈசான தற்புருட அகோர வாமதேவ சத்தியோசாத மந்திரங்களால் தரிக்க. விபூதியை இடக்கரத்தில் வைத்துச் சங்கிதா மந்திரத்தால் அபிமந்திரித்து வலக்கைப் பெருவிரல் அணிவிரல்களினாலே சலத்தையள்ளிவார்த்துக் குழைத்து, தோள்முதலிய தானங்களிலே முன்னர் வலப்பக்கத்தும் பின்னர் இடப்பக்கத்துந் தரிக்க எனவுணர்க.

உருத்திராக்கந் தரிக்குமுறை இடம் தொகை முதலியவற்றையுஞ் சைவசமயநெறியிற் காண்க. (௧௧)

வெள்ளைமந் தார முல்லை மல்லிகை வெடிவாய்ச் சாதி
கள்ளவிழ் மயிலை யாதி வெண்மலர் கவர்ந்து வேழப்
பிள்ளையை முந்தப் பூசித் திரந்துசங் கற்பம் பேசி
யுள்ளணைந் துச்சி மேற்பன் னிருவிர லுயர்ச்சிக் கும்பர்.

(இ-ள்.) வெண்ணிறம் பொருந்திய மந்தாரமலரும், முல்லைமலரும், மல்லிகைமலரும், வெடித்த வாயையுடைய சாதிமலரும், தேனுடன்விகசித்த இருவாட்சிமலரும் முதலிய வெள்ளிய மலர்களைக்கொய்து, சித்திவிநாயக மூர்த்தியை முற்பட அருச்சித்துக் குறையிரந்து (விரதம் முட்டின்றி முடிதல் வேண்டுமென்னும்) சங்கற்பங்கூறி, திருக்கோயிலினுட்சென்று, உச்சியின்மேலே பன்னிரு விரலுயர்ச்சியிலே விளங்குந் (துவாதசாந்தத்) தானத்திலே. எ-று. (௧௨)

சத்திய ஞான னந்தத் தத்துவந் தன்னை யுள்கி
வைத்ததன் வடிவங் கொண்டு மண்முதற் சிவமீ றான
வத்துவ விலிங்கந் தன்னை யாசன மூர்த்தி மூல
வித்தைமற் றுனு நூலின் விதியினாற் பூசை செய்க.

(இ-ள்.) சச்சிதானந்த வடிவராகிய சிவபெருமானைத் (தமது மனத்தில்) தியானித்துவைத்து, (மந்திர சுத்தியால்) அச்சிவரூபமாய் நின்று, பிருதிவிமுதல் நாத மீறாகிய அத்துவாவின் வடிவான சிவலிங்கப்பெருமானை, ஆசனமந்திர-மூர்த்திமந்திர-மூலமந்திரமுதலியவற்றால், ஆகம முறைப்படி பூசை செய்யக்கடவர். எ-று.

முன்னையசெய்யுளினிறுதியிலுள்ள "உச்சிமேற் பன்னிருவிர லுயர்ச்சிக்கும்பர்" என்றதுமுதல், இச்செய்யுளில் "சத்தியஞானனந்தத் தத்துவந் தன்னையுள்கி" என்பதுகாறும் மானதபூசை யென்க. பஞ்சசுத்தி சிவபூசைக்கு அங்கமாதலின் அகப்பூசையாகிய ஆன்மசுத்திக்கு முன், தானசுத்தி திரவிய சுத்திகள் கொள்க. சிவரூபமாயிருத்தல் மந்திரசுத்தி. பின்பு லிங்க சுத்திசெய்து பீடத்திலே சிவாசனம் பூசித்து அதன்மேலே இலிங்கத்திலே வித்தியா தேகமாகிய மூர்த்தியை நியாசஞ் செய்து சிவபிரானாகிய மூர்த்திமானைச் சிவமூலமந்திரத்தால் அவ்வித்திய தேகத்தில் ஆவாகனஞ் செய்து முறையே புறப்பூசை செய்தலாம். விடைபெற்றுப் புறப்பூசை நடத்துதலால் ஆசன-மூர்த்தி-மூலமந்திரங்களால் மூன்முறை பூசை செய்க எனப்பட்டது.

மண்முதற் சிவமீறான வத்துவலிங்க மென்றது, ஆன்மதத்துவம் அடிப்பாகமும், வித்தியா தத்துவம் நடுப்பாகமும், சிவதத்துவம் முடியுமாக விளங்குதல்பற்றி யென்க. இதனை, இந்நூலில்-வேதத்துக்குப் பொருளருளிச்செய்த படலம்.

"ஆதியி லான்ம தத்துவ மான வலர்மகன் பாகமு நடுவி
னீதியில் விச்சா தத்துவமான நெடியவன் பாகமு முடிவி
லோதிய சிவதத் துவமென லான வுருத்திர பாகமு மிதிக்கும்
பேதியிம் மூன்றி லெண்ணிறத் துவங்கள் பிறக்குமிம் மூன்றினுமுறையால்"

என்பதனு னறிக. (௩௩)

ஐந்தமு தாவி னைந்து நறுங்கனி யைந்து செந்தேன்
சந்தனம் தோயம் புட்பத் தண்புனன் மணிநீ ராட்டிச்
சுந்தர வெண்பட் டாடை கருப்புரச் சுண்ணஞ் சாந்தங்
கந்தமல் லிகைமுன் னான வெண்மலர்க் கண்ணி சாத்தி.

(இ-ள்.) பஞ்சாமிர்தம் - பஞ்ச கவ்வியம்-நறுமணங் கமழும் ஐங்கனிகள் - செவந்த தேன்-சந்தனக்குழம்பு-மலர்பெய்த தட்பமாகிய நீர் (ஆகிய இவற்றால்) அபிடேகித்து, அழகிய வெள்ளிய பட்டாடை - பச்சைக்கருப்பூரங் கலந்த கலவை-வெள்ளிய சந்தனக்குழம்பு - வாசமிக்க மல்லிகை முதலாகிய வெள்ளிய மலர்களா லாகிய கண்ணிமாலை (இவற்றைச்) சாத்தி. எ-று.

இதுமுதல் மூன்றுபாடல்கள் குளகம்.

ஐந்தமிர்தம்.—"சர்க்கரை தேன் பானெய் ததியென்ற வோரைந்தும்-அற்புதனுக் காட்டமிர் தம்" என்னுஞ் சிவராத்திரி கற்பத்தா னுணர்க. இது ரச பஞ்சாமிர்தமெனவும், இதனுடன் வாழைப்பழமும் பலாப்பழமும் மாம்பழமும் சேர்ப்பது பலபஞ்சாமிர்தமெனவுங் கூறுவர்.

நறுங்கனி ஐந்தாவன—எலுமிச்சம்பழம் - நாரத்தம்பழம் - தமர்த்தம்பழம்-குளஞ்சிப்பழம் - மாதுளம்பழம். இது சைவபூஷணத்திற்கண்டது. (௩௪)

காசணி பொலம்பூண் சாத்திக் கனைகழ லாதி யங்க
பூசனை செய்து சேற்கட் பூரணப் பரையை யவ்வா
றீசனைந் தெழுத்தைப் பெண்பாற் கிசையவுச் சரித்துப் பூசித்
தாசறு சுரபித் தீம்பா லட்டவின் னமுதினோடும்.

(இ-ள்.) இரத்தினமிழைத்த பொன்னாலாகிய திருவாபரணங்கள் சாத்தி, சத்திக்கின்ற வீரக்கழலணிந்த திருவடிமுதல் (கேச மீறாகிய) அவயவங்களைப் பூசை செய்து, சேற்கெண்டைபோலுங் கண்ணையுடைய பராசத்தியை, அவ்வண்ணமாக, சிவபெருமானுடைய ஸ்ரீபஞ்சாக்ஷரத்தை, பெண்பாலாகிய அப்பராசத்திக்குப் பொருந்த உச்சரித்துப் பூசைசெய்து, குற்றமற்ற இனிய பசுவின் பாலொடு கலந்து சமைத்த இனிய திருவமுதோடும். எ-று.

இது சத்தி பீடஸ்தலங்களி லொன்றாகலின், சிவசத்தி பூசையைப் பூர்வத்திற் செய்கவென ஆலாசிய மகத்துவங் கூறுகின்றது. (௧௫)

பண்ணிய வகைபா னீய நிவேதனம் பண்ணி வாச
நண்ணிய வடைக்காய் நல்கி நறுவிரைத் தூபந் தீப
மெண்ணிய வகையாற் கோட்டிக் கண்ணடி யேனை மற்றும்
புண்ணியன் றிருமுன் காட்டி வில்வத்தாற் பூசை செய்தல்.

(இ-ள்.) பலகாரவகைகளும் ஜலமும் (ஆகிய இவற்றை) நிவேதனஞ்செய்து, (தக்கோல முதலியவற்றுடன்) வாசனைத் திரவியங்கூட்டிய வெற்றிலையும், பாக்குந் தந்து, நறுமணங்கமழுந் தூபத்தையுந் தீபத்தையும் வரையறுத்த வகையால் வளைத்து, கண்ணாடியும், அது ஒழிந்த பிற உபசாரங்களையும், சிவபெருமான் திருமுன்காட்டி வில்வத்தா லர்ச்சிக்கக்கடவர். எ-று.

உபசாரம் ஐவகைப்படும் அவற்றுள். பண்ணியம்-காய்-வெற்றிலை - பாக்கு இவை பிருதிவி சம்பந்தம். பானீயம்- அப்புசம்பந்தம். தீபம் - கண்ணாடி - அக்கினி சம்பந்தம், தூபம்-வாய்வு சம்பந்தம் என்க. மற்றும் என்றதால் மணியோசை முதலிய ஆகாய சம்பந்தமுங் கொள்க. இவையே பஞ்சோபசாரமெனப்படும். (௧௬)

புரகர னிச்சா ஞானக் கிரியையாய்ப் போந்த வில்வ
மரமுத லடைந்து மூன்று வைகலூ ணுறக்க மின்றி
யரகர முழக்கஞ் செய்வோ ரைம்பெரும் பாத கங்கள்
விரகில்செய் கொலைக ளரு மாதலால் விசேடம் வில்வம்.

(இ-ள்.) சிவபெருமானுடைய இச்சா ஞான கிரியா சத்திகளின் வடிவமாய் வந்த வில்வமரத்தி னடியில்வந்து, மூன்று தினங்கள்ஆகார நித்திரையின்றி, ஹரஹர வென்னுங் கோஷஞ் செய்வோருடைய பஞ்சமகா பாதகங்களும், பேரறிவில்லாமையாற் செய்யுங் கொலைகளுந் தீரும். ஆகையால் (அர்ச்சிக்கத்தக்க) பொருள்களில் வில்வம் விசேடமாம். எ-று.

வில்வம் எல்லாவற்றிலும் விசேடம் என்பதை,

சோமவாரகற்பம்.

"வில்வத்தின் மிக்க விசிட்டமிலை பத்திரத்து
ளில்லை யலர்விதத்து மீங்கு."—என்பதனானுணர்க. (௧௭)

மடங்கிதழ் சுருங்கல் வாடி யுலர்ந்தது மயிர்ச்சிக் குண்டன்
முடங்குகாற் சிலம்பிக் கூடு புழுக்கடி முதலாங் குற்ற
மடங்கினுங் குற்ற மில்லை யுத்தம மாகும் வில்வந்
தடங்கைகொண் டீச னும மாயிரஞ் சாற்றிச் சாத்தல்.

(இ-ள்.) (பத்திர்புஷ்பங்களில்) இதழ் மடங்கிச் சுருங்கியிருத்தலும், வாடியுலர்ந்திருத்தலும், மயிர்ச் சிக்குண்டிருத்தலும், முடங்கிய கால்களுடைய சிலம்பிப்பூச்சிக்கூடுகட்டியிருத்தலும், புழுக்களின்கடியும், (ஆகிய) இவைமுதலாயுள்ளவை குற்ற

மாம். (வில்வத்திற்கு) அக்குற்றங்க ளடங்கியிருப்பினுங் குற்றங்களாகா. (எனெனில்) வில்வம் உத்தமமாகும், (அதனைக்கொண்டு) சிவபெருமானை ஸஹஸ்ரநாமங்கள் கூறி, நீண்ட கைகளா லருச்சிக்கக்கடவர். எ-று. (௧அ)

அடியனேன் செய்யுங் குற்ற மன்றைக்கன் றனந்த மாகுங்
கொடியநஞ் சமுதாக் கொண்டாய் குற்றமுங் குணமாக்கொண்டு
படியெழு தரிய மங்கை பங்கனே காத்தி யென்று
முடியுற வடிவில் வீழ்ந்து மும்முறை வலஞ்செய் தேத்தி.

(இ-ள்.) அடியேன் செய்யுங் குற்றங்கள் நாளுக்குநாள் எண்ணிறந்தனவா யுள்ளன. கொடிய விஷத்தையும், அமுதமாகக்கொண்ட பெருமானே! எழுதுதற் கரிய திருவுருவத்தையுடைய பார்ப்பதியாரை வாமபாகத்திலுடையவரே! அடியேன் செய்த குற்றங்களையுங் குணங்களாகக்கொண்டருளிக் காப்பீர் என்று,(தமது) தலைகள் தோயத் திருவடியின்மேல் விழுந்து மூன்றுதரம்பிரதக்ஷிணஞ்செய்து துதித்து. எ-று.

வன்மனங் கனாய நின்று வேண்டிய வரங்கள் வேண்ட
நன்மணப் பேறு மக்கட் பேறுநல் வாக்குக் கல்வி
பொன்மனக் கினிய போகந் தெவ்வரைப் புறகு காண்ட
லிம்மையி லரசு மற்று மெண்ணியாங் கெய்து மன்றே.

(இ-ள்.) (கருங்கல்போலும்) கடிய மனமானது (மெழுகுபோல்) இளக நின்று (தமக்கு) வேண்டிய வரங்களை யாசிக்க, நல்ல விவாகம் பெறுகையும், நல்ல புத்திரர் பெறுகையும், நல்லவாக்கும், கல்வியும், திரவியமும், மனத்திற்கினியபோகமும், பகைவரைப் புறங்காணலும், இப்பிறப்பில் அரசுரிமையும், பிறவும், எண்ணியபடி கிடைக்கும். எ-று.

மனக்கு என்பதில் மாடக்கு என்றாற்போல அத்துச்சாரியை தொக்கு நான் காம்வேற்றுமையுருபு புணர்ந்தது. (௨௦)

ஆதியிவ் விலிங்கந் தீண்டற் கருகரல் லாத வேத
வேதியர் முதலோ ரிட்ட விலிங்கத்திவ் விதியாலர்ச்சித்
தோதிய விரத நோற்க வர்ச்சனைக் குரிய ரல்லாச்
சாதியர் பொருணோர்ந் தாதி சைவராற் பூசை செய்தல்.

(இ-ள்.) முதன்மைபெற்ற (பரார்த்தமூர்த்தியாகிய) இந்தச் சிவலிங்கப் பெருமானைத் தீண்டி அருச்சிக்க அருகரல்லாத வைதிகப் பிராமணர் முதலியோர் இஷ்டலிங்கத்தில் (முன்னர்க்கூறிய) இவ்விதிப்படி அருச்சனைசெய்து, சோமவார விரதம் அனுஷ்டிக்கக்கடவர். சிவார்ச்சனைக்கு அருகரல்லாத (விராத்தியர் முதலிய சங்கர) சாதியர்கள் பொருள் கொடுத்து ஆதிசைவர்களாற் பூசைசெய்வித்தல்(முறை யாம்.) எ-று. (௨௧)

### எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

பொருவிலிவ் விரத மைவகைத் துச்சிப் போதினு ணிரவினு ணிரண்டு
மொருவுத லுறங்கா திருத்தலர்ச் சனைநால் யாமமு முனற்றுத லென்னக்
கருதினிவ் வைந்து மொன்றனுக் கொன்று கழியவு மதிகமா நோற்கும்
வருடமொன் றிரண்டு மூன்றுபன் னிரண்டு வருடம்வாழ் நாளள விவற்றுள்.

(இ-ள்.) சமானமில்லாத இவ்விரதம் உச்சிக்காலத்திலுண்ணுதலும், இராக் காலத்திலுண்ணுதலும், இவ்விரண்டு வகையையும் நீக்குதலும், சயனியாதிருத்தலும், நான்கு சாமங்களிலுஞ் சிவார்ச்சனை செய்தலுமென்று ஐந்துவகையாயுள்ளது. ஆரா யின் இவ்வைவகை விரதமும் ஒன்றற்கொன்று அதிக பலன் கொடுப்பனவாம். அனு

ஷ்டிக்கும் வருட அளவு. ஒருவருடமும், இரண்டுவருடமும், மூன்றுவருடமும், பன்னிரண்டுவருடமும், வாழுளளவுமாம். இக்காலவரையறையுள். எ-று.

இதுமுதல் மூன்றுபாடல்கள் குளகம்.

நோற்குங் கால அளவை. சோமவாரகற்பம்.

"ஆண்டொன் றிரண்டாதி யாறிரண்டல் லாவென்று
மீண்டியற்று வாம்விரத மென்று" என்பதனானுணர்க. (௨௨)

உடலள வெண்ணி நோற்பவர் முந்த வுத்தியா பனஞ்செய்து நோற்கக்
கடவரவ் வருடக் கட்டளைக் கிறுதி கழிப்பதுத் தாபன விதிதான்
மடலவிழ் மாலை மண்டபங் குண்ட மண்டலம் வகுத்துமா பதியைப்
படரொளி வெள்ளி முப்பது கழஞ்சிற் பதுமையா னிருமிதஞ் செய்து.

(இ-ள்.) (தமது) உடலின் இருக்கையளவைக் கருதி, (சோமவாரவிரதம் நோற்பவர்முற்பட உத்தியாபனஞ்செய்து, நோற்கக்கடவர். உத்தியாபனவிதியானது (மேற்சொல்லிய) அவ்வருஷங்களில் (தாம் மேற்கொண்ட) கால அளவையின் கிரமப்படி இறுதியிற் செய்யுங் கடன்களை முதலிற் செய்துமுடிப்பது. இதழவிழ்ந்த மாலை தொடுத்த மண்டபமும், குண்டமும், மண்டலமும் நியமித்து, சிவபெருமானை ஒளிவிளங்கும் முப்பது கழஞ்சு அளவின் வெள்ளியினால் திருவுருவம் நியமித்து.எ-று.

உத்தியாபனம் வருஷக்கட்டளைக்கு இறுதி கழிப்பதேயன்றி உடலளவு எண்ணி நோற்பவர்க்கு இல்லையென்பது நூற்றுணிபாகலின் முந்த உத்தியாபனம் என்றது விரதம் பூர்த்தியாதற்காக முன் செய்யுங் கிரியை.

முப்பது கழஞ்சு வெள்ளி உத்தமமாகலின் ஈண்டு அதனையே கூறினாரேனும், இயலாதார் இருபது கழஞ்சும் பத்துக்கழஞ்சுங் கொள்வதும் உண்டு.

மேற்கூறிய உத்தியாபன முதலியவற்றை முறையே,

சோமவாரகற்பம்.

"முடிக்கும் வினையிலைத்தம் மெய்ம்முடிவு காறு-மெடுத்தவிர தம்மியற்று வார்க்கு.
முடித்திகெ சங்கற் பனைநாண் முடிவிற்-படித்த விதிவிதத்தைப் பார்த்து.
இடைவிடு வாரு முடிவியற்று தாரு-மடையார் பலமென் றறிந்து" எனவும்,

"ஒருமுகங் கண்மூன் றொருநாற் புயத்துத்—திருவுருவஞ் செய்கசிவ னுக்கு
மழுமான் வரத மபயங் கரத்தி—னெழுமதியும் பின்னுசடை யின்
உமைக்குந் திருமுக மொன்றுற மேனி—யமைத்தோ ளிரண்டென் றறி
உற்பலந் தன்னை வலக்கையுற வோங்குவிக்க—மற்றையகை தாளொடுறவை"
"ஒருபான்க ளிட்டமுப் பானுத் தமமே—இருபான் கழஞ்சிடையென் றெண்"
எனவும், வருவனவற்றானறிக. (௨௩)

காலையி லாசான் சொல்வழி நித்தக் கடன்முடித் துச்சிதொட் டந்தி
மாலையி னளவும் புராணநூல் கேட்டு மாலைதொட் டியாமமோர் நான்குஞ்
சேலனகண்ணாள் பங்கனைப் பூசை செய்கவப் பூசனை முடிவின்
மூலமந் திரநூற் றெட்டுநூற் றெட்டு முறையினா லாகுதி முடித்தல்.

(இ-ள்.) உதயகாலத்தில், ஆசிரியன் சொற்படி நின்று, நித்தியகருமங்களை முடித்து,உச்சிக்காலமுதல் மாலைக்காலமட்டுஞ் சிவபுராணங்கேட்டு,மாலைக்காலந்தொடங்கி நான்குசாமங்களிலுஞ் சேற்கெண்டைபோன்றகண்ணையுடைய பிராட்டியாரை வாமபாகத்திலுடைய சிவபெருமானைப் பூசைசெய்யக்கடவர். அந்தப்பூசைமுடிவில் மூலமந்திரம் நூற்றெட்டில் நூற்றெட்டுதரம் ஆகுதிசெய்து முடிக்கக்கடவர். எ-று.

வில்வமா யிரங்கொண் டாயிர நாமம் விளம்பிநால் யாமமுஞ் சாத்த
னல்லவைந் தெழுத்தா லைந்தெழுத் துருவி னுதனுக் கருக்கியங் கொடுத்த
லெல்லையின் மூல மந்திரத் தாலு மேனைமந் திரங்களி னுலும்
வில்லழ லோம்பிப் பூரணு குதிசெய் தீறிலான் வேள்வியை முடித்தல்.

(இ-ள்.) ஓராயிர வில்வங்கொண்டு ஸஹஸ்ரநாமங் கூறி நான்கு சாமங்களி லும் அருச்சிக்கக்கடவர். நன்மை பயக்குந் திருவைந்தெழுத்தால் அந்தத் திருவைந் தெழுத்தே திருவுருவமாகக்கொண்ட சிவபெருமானுக்கு அருக்கியங் கொடுக்கக்கடவர். கணக்கில்லாத மூலமந்திரங்களினுலும், பிறமந்திரங்களினுலும் வில்வடிவமாகச்செய்த குண்டத்தில் யாகாக்கினி வளர்த்து, பூரணுகுதிசெய்து, ஈறில்லாத அச்சிவபெருமானு டைய சோமவாரவிரதத்தை முடிக்கக்கடவர். எ-று.

வில் அழல் ஓம்பி - என்பதற்கு விளங்குகின்ற அக்கினி காரியஞ் செய்து. எனக் கூறினும் பொருந்தும். ஏனைய மந்திரங்கள் என்றது திரியம்பக மந்திரம் கௌரி மந்திர முதலியன எனக்கொள்க. (௨௫)

புலர்ந்தபின் னித்த வினைமுடித் தரம்பைப் பொதுளும்பா சிலைபதின் மூன்றி
னலந்தரு தூவெள் ளரிசிபெய் தினிய நறியகாய் கறியொடு பரப்பி
யலந்தர வான்பா னிறைகுடம் பதின்மூன் றரிசிமேல் வைத்தர னடியிற்
கலந்தவன் பினராய்ச் சிவார்ச்சனைக் குரிய கடவுள்வே தியர்களை வரித்து.

(இ-ள்.) விடிந்தபிறகு (காலையிற் செய்யும்) நித்திய கன்மங்களை முடித்து வாழைமரத்தில் நெருங்கியுள்ள பசிய பதின்மூன்று இலைகளில் நன்மையைப்பயக்கும் பரிசுத்தமாகிய வெள்ளிய அரிசியை நிரப்பி, சுவை பொருந்திய நறுமணங் கமழுங் காய்கறிகளைப் பரப்பி (அவற்றிற்கு)ப்பொருந்த பசுவின்பால் நிறைந்த பதின்மூன்று குடங்களை (பதின்மூன்றிலைகளில் நிரப்பிய) அரிசியின்மேல் (ஒவ்வொன்ருக) வரிசை யாக வைத்து, சிவபெருமானுடைய திருவடியிற் சேர்ந்த அன்பினை யுடையவராய்ச் சிவார்ச்சனைக்குரிய தெய்வத்தன்மைபொருந்திய ஆதிசைவவேதியர்களை வரவழைத்து.

இதுமுதல் நான்குபாடல்கள் குளகம். (௨௬)

காதணி கலனுங் கையணி கலனுங் கவின்பெற வளித்தவ னுக
வாதரம் பெருக நினைந்தருச் சனைசெய் தரியதக் கிணையொடும் பாதப்
போதணி காப்பு விசிறிதண் கவிகை பூந்துகின் முதற்பல வுடனே
மேதகு தானஞ் செய்துபின் குருவைக் கற்புடை மின்னிடை யோடும்.

(இ-ள்.) செவியிலணிகின்ற குண்டலமும், கையிலணிகின்ற காப்பும், அழகுபெறத் தந்து, சிவபெருமானுக அன்புபெருக (அவர்களை)ச் சிந்தித்துப்பூசித்து, பெரிய தக்ஷிணையோடும், பாதமாகிய தாமரையில் அணிகின்ற பாதுகையும், விசிறியும் குளிர்ந்த நிழலைத்தருங் கொடையும், பொலிவு நிறைந்த பீதாம்பரமுமாகிய இவை முதலாகப் பலவாக விரைந்து, மேம்பட்ட தானங்கொடுத்து, பிறகு (தமது) குருவை அவரது கற்பினையுடைய மனைவியோடும் வருவித்து எ-று. (௨௭)

ஆசனத் திருத்திப் பொலந்துகில் காதுக் கணிகள்கைக் கணிகளு மணிந்து
வாசநன் மலரிட் டருச்சனை செய்து மலைமக டலைவனை வனைந்து
பூசனை செய்த படிமையோ டம்பொன் பூதலம் பதாதிகள் பிறவுந்
தூசலர் மாலை கோட்டணி பிணைந்த சுரபிமா தானமுஞ் செய்து.

(இ-ள்.) ஆசனத்தி லெழுந்தருளச்செய்து, பீதாம்பரம் (தரிப்பித்து) காதுக் காபரணங்களும், கைக்காபரணங்களும் பூணுவித்து, வாசம் பொருந்திய நல்ல மலர்க.

ளால் அருச்சித்து, உமாதேவியா ரிறைவராகிய சிவபெருமானைப் பூசித்த திருவுருவத்துடன் அழகிய பொன்னும், நிலமும், சேனையும், அவையொழிந்தனவும், வஸ்திரமும், மலர்மாலையும், கொம்பில் பூண் அணியைத் தரித்த பசுவுமாகிய பெரிய தானங்களையுஞ் செய்து. எ-று. (உஅ)

இனையவா றுத்தா பனமுத லாசா னேவலாற் சிவனடிக் கன்பர்
தனையரோ டொக்க லுடனமு தருந்த றகுதியிவ் விரதமுன் கண்ண
னனையதா மரையோ னிந்திரன் முதல்வா னுடவர் மூவறு கணத்தோ
ரனைவரு நோற்றார் மனிதரு மனுட்டித் தரும்பெறற் போகம்வீ டடைந்தார்.

(இ-ள்.) இவ்வாறாக உத்தாபனவிதியை முடித்து ஆசிரியன் கட்டளைப்படி சிவபெருமான் திருவடிகட்கு அன்புசெலுத்திய அடியாரோடும், புத்திரரோடும், உறவினரோடும், திருவமுது செய்தல் தக்கது. இந்தச் சோமவார விரதத்தை முற்காலத்தில், திருமாலும், குளிர்ச்சியையுடைய தாமரைமலரில்வசிக்கும் பிரமதேவரும், இந்திரன் முதலிய தேவரும், பதினெண்கணத்தோரும் யாவரும் அனுஷ்டித்தார்கள். (பிற்காலத்தில்) மனிதர்களும் அனுஷ்டித்து அடைதற்கரிய (இஷ்ட) போகத்தையும், மோக்ஷத்தையும் அடைந்தார்கள். எ-று. (உக)

ஈதுநோற் பவர்வெம் பகைமனத் துயர்நீத் தாயிரம் பிறவியி லியற்றுந்
தீதுசேர் வினைதீர்ந் தெடுத்தயாக் கையினிற் சிவகதி யடைவரிவ் விரத
மோதினோர் கேட்டோர் மனைவியர் மக்க ளொக்கலோ டினிதுவாழ்ந் தும்பர்
மேதகு பதினா றிந்திரன் பதத்தில் வீற்றினி திருப்பரென் றறைவோன்.

(இ-ள்.) இவ்விரதத்தை யாச்சிரயிப்பவர்கள் கொடியபகையும் மனத்துன்பமும் நீங்கி, ஆயிரஞ் சனனங்களிற் செய்த தீமைபொருந்திய பாவங்களொழிந்து, எடுத்த (இந்த) மானுடதேகத்தி னிறுதியிற் சிவகதி பெறுவார்கள். இச்சோமவார விரதத்தைச் சொன்னவர்களுங் கேட்டவர்களுந் தமதுபெண்டுபிள்ளைகள் உறவினர்களோடுஞ் சந்தோஷமாக உயிர்வாழ்ந்து, மேன்மைமிக்கபதினொன்கு தேவேந்திரபட்டம் வரையில் அவன் பதவியில் இனிது வாழ்ந்திருப்பார்கள். என்று அகத்தியமுனிவர்.

பதினொன்கு இந்திரபட்டம் கழிவது ஓர் பிரமகற்பமாம். பிரமாவினது ஆயிரஞ் சதுர்யுகங்கொண்ட பகல் கற்பாந்த வெள்ளம் வரும். அப்பொழுது பூமி அந்தர சொர்க்கமென்னும் மூவுலகமும் முழுகி அழிவுறும், நக்ஷத்திரங்களுஞ் சோமசூரியர்களும் அழிவர். மாறியபதினொன்கு மனுக்களும்இந்திரர்களும் மகலோகமடைவர். இதுவே பிரமகற்பம். இந்திரர் பதினல்வவராவர் விபச்சித்து-சுசாந்தி-சிவி-விபு-மனோசவன்-புரந்தரன்-மாவலி-அற்புதன்-சாந்தி-விருடன்-இருதராமன் - திவற்பதி - சுசி எனப்படுவர். (கூ0)

அறுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

சொல்லிய நெறியாற் சோம சுந்தரன் விரத நோற்பான்
வில்லிடு மணிப்பூண் வேந்தர் முனிவனை விடைகொண் டேகி
யல்லியங் கனக கஞ்சத் தாடியங் கயற்கண் வல்லி
புல்லிய பாகன் றன்னை வழிபடஇப் போற்றி நோற்றார்.

(இ-ள்.) (அகத்தியமுனிவர்) கூறியமுறைப்படி, சோமசுந்தரக்கடவுளுடைய சோமவார விரதத்தை, ஒளிவீசும் இரத்தின மழுத்திய ஆபரணம்பூண்ட சேரசோழபாண்டியர் அகத்தியமுனிவரிடத்து, விடையேற்றுச் சென்று (மதுராபதியை யடைந்து) அழகிய அகவிதழ்களையுடைய பொற்றாமரைத் தீர்த்தத்தில் ஸ்நானஞ் செய்து அங்கயற்கண்ணம்மையார் பொருந்திய வாமபாகத்தையுடைய சோமசுந்தரக்கடவுளை

(அங்கயற்கண்ணம்மையாருடன்) வழிபட்டுத் துதித்து, (அவ்விரதத்தை) அனுஷ்டித்தார்கள். எ-று. (௬௧)

சுந்தரன் றன்னைப் பூசைத் தொழில்செய்து வரம்பெற் றேகி
யந்தரத் தாறு செல்வா ரவ்தறிந் தமரர் வேந்தன்
வந்தவ ரிருக்க வேறு மடங்கன்மான் றவிசு மூன்று
தந்திடப் பணித்தா னிட்டார் தனதரி யணையிற் றாழ.

(இ-ள்.) சோமசுந்தரப்பெருமானைப் பூசித்து, வரம்பெற்றுச்சென்று ஆகாய மார்க்கமாகச் செல்வாராயினர். தேவராசனாகிய இந்திரன் (மூவேந்தர்களாகிய) அவர்கள் வருகையை யுணர்ந்து வந்தவர்கள் இருக்க, தனது சிங்காதனத்திற்குத் தாழ்வாக மூன்று சிங்காதனங்களிட ஏவினான். ஏவலாளர்கள் (அப்படியே)இட்டார்கள். எ-று.

அணையில் - அணைக்கு, வேற்றுமை மயக்கம். (௬௨)

வான்வழி வந்த மூன்று மன்னரும் பொன்னா டெய்தி
யூன்வழி குலிச வைவே லும்பர்கோன் மருங்கிற் புக்கார்
தேன்வழி போந்தின் கண்ணிச் சேரனு மார்த்தார் வேந்துங்
கான்வழி தாரு நாடன் காட்டிய தவிசின் வைக.

(இ-ள்.) ஆகாயமார்க்கமாக வந்த (சேர சோழ பாண்டியர்களாகிய) மூன்று மன்னவர்களும் பொன்னுலகத்தை யடைந்து (பகைவர்களது) ஊனைச் சிந்துங் கூர்மையுடைய வச்சிரவேலைத் தாங்கிய இந்திரனருகில் வந்து, (அவர்களில்) தேன் சொரியும்பனைமாலையை யணிந்த சேரனும், ஆத்திமாலையணிந்த சோழனும், வாசனை வீசுங் கற்பகநாட்டையுடைய இந்திரன் காட்டிய ஆதனத்தி லிருக்க. எ-று.

இதுமுதல் மூன்றுபாடல்கள் குளகம்.

புக்கார் என்பது முற்றெச்சம். (௬௩)

மைக்கடல் வறப்ப வென்ற வாகைவேற் செழியன் மௌலிச்
செக்கர்மா மணிவி ற காலத் தேவர்கோன் றவிசி லேறி
யொக்கவீற் றிருந்தா னாக வும்பர்கோ னழுக்கா றெய்திப்
பக்கமே யிருந்த வேனைப் பார்த்திபர் முகத்தைப் பாரா.

(இ-ள்.) கரிய கடல்சுவற வென்ற வெற்றிமாலையைத்தரித்த வேற்படை தாங்கிய உக்கிரகுமாரபாண்டியர் கிரீடத்தில் தரித்த செவந்த பருத்தமாணிக்கங்கள் ஒளிவீச, இந்திரனது ஆதனத்திலேறிச் சமமாகவீற்றிருக்க, இந்திரன் பொறாமை யடைந்து,தன்னருகிலிருந்த மற்றைச்சேரசோழர்கள் முகத்தைப்பார்த்து. எ-று. (௬௪)

முகமனன் கியம்பி நீவிர் வந்ததென் மொழிமி னென்ன
மகபதி யெங்க ணாட்டின் மழைமறுத் தடைந்தே மென்று
ரகமலர்ந் தனையார் நாட்டி னளவுமவான் சுரக்க நல்கி
நகைமணிக் கலன்பொன் னாடை நல்கிநீர் போமி னென்றான்.

(இ-ள்.) உபசாரவார்த்தையை மிகக்கூறி நீங்கள்வந்தது யாதுகாரணம்? என்று வினவ, (அவ்விருமன்னரும்) மகபதியே! எங்களுடைய நாட்டில் மழையில்லாமல் (வருந்தி) வந்தோம் என்று கூறினர். (அதுகேட்டு இந்திரன்) மனமகிழ்ச்சிகொண்டு அவ்விருவர் நாட்டெவளையிலும் மழைவளஞ்சுரக்க (வரம்) தந்து, பிரகாசிக்கின்ற இரத்தினாபரணங்களும் பீதாம்பரங்களுங் கொடுத்து, நீங்கள் போங்களென்று கூறி (அனுப்பி) னான். எ-று.

மகபதி என்றது இந்திரனுக்கோர் பரியாய நாமம். (௬௫)

அன்னவ ரகன்ற பின்னை யமரர்கோன் கன்னி நாடன்
றன்னரி யணைமே லொக்கத் தருக்கினோ டிருக்கு மாறும்
பின்னரு மாரி வேண்டாப் பெருமித வீறு நோக்கி
யின்னது புலப்ப டாமை யினையதோர் வினைய முன்னா.

(இ-ள்.) (சேரசோழர்களாகிய) அவ்வரசர்கள் நீங்கியபிறகு, தேவராசனாகிய இந்திரன் தனது சிங்காதனத்தின்பேரில், தன்னோடுகூட உக்கிரகுமாரபாண்டியர் இறுமாப்போடிருக்குமாறும், பின்பும், (தந்நாட்டிற்கு) மழையை வேண்டாமலிருக்கும் பெருமிதச்செருக்கும் பார்த்துச் செய்யத்தக்கது இதுவென்று வெளியாகாமல், இப்படிப்பட்டதோர் ஆலோசனை செய்து. எ-று.

இதுமுத லிரண்டுபாடல்கள் குளகம். (௬௬)

பொற்புற வரிசை செய்வான் போலஎ ணிறந்தோர் தாங்கி
வெற்புறழ் திணிதோ ளாற்றன் மெலிவதோ ராரந் தன்னை
யற்புற வளித்தான் வாங்கி யலர்மதுத் தார்போ லீசன்
கற்புடை யுமையாண் மைந்தன் கதுமெனக் கழுத்தி லிட்டான்.

(இ-ள்.) அழகுபொருந்த வரிசை செய்பவனைப்போல, எண்ணிறந்தோர் தாங்கி (வந்த) மலைபோலுந் திண்ணிய தோள்கள் மெலிவதற்குக் கருவியாகிய ஒரு முத்துமாலையை விருப்பமிகக் கொடுத்தான். சுந்தரபாண்டியருடைய கற்பின் கிழத்தியாராகிய தடாதகைப்பிராட்டியார் மைந்தராகிய உக்கிரகுமாரபாண்டியர் (அதனை) வாங்கி, மலர்ந்து தேன்சொரியும் மலர்மாலைபோல விரைவிற் கழுத்தில் தரித்தார்.

கண்டனன் கடவு ளாதன் கழியவு மிறும்பூ துள்ளங்
கொண்டன னின்று தொட்டுக் குரையளி துழாவு நிம்பத்
தண்டழை மார்ப வாரந் தாங்குபாண் டியனென் றுன்னை
மண்டல மதிக்க வென்றான் வானநா டுடைய மன்னன்.

(இ-ள்.) (அவ்வாறணிந்ததை) இந்திரன் கண்டு மிகுதியும் மனத்தில் வியப்புற்று, ஒலிக்கும் வண்டுகள் (மகரந்தத்தில்) அளைகின்ற வேப்பமலர்மாலையுந் தண்மையும் நிறைந்த மார்பையுடைய உக்கிரகுமாரபாண்டியனே! இன்றுமுதல் உன்னைஆரந் தாங்குபாண்டியன் என்று பூலோகத்தார் மதிக்கக்கடவர். என்று புகழ்ந்தான். எ-று.

வானநாடுடையமன்னன்—தேவலோகத்தைத் தனதாகவுடைய இந்திரன். கடவுளாதன் வானநாடுடையமன்னன் என்னுமிரண்டும் இந்திரனையே யுணர்த்தினவாகவின் கடவுளாதனாகிய மன்னன் எனக் கூட்டுக. (௬௮)

அன்னது சிறிது மெண்ணா தங்குநின் றிழிந்து தென்னன்
றன்னக ரடைந்தா னிப்பாற் சதமக னாணை யாலம்
மன்னவ ரிருவர் நாடு மழைவளம் பெருகப் பெய்த
தென்னவ னாடு பண்டைச் செயலதா யிருந்த தன்றே.

(இ-ள்.) (இந்திரன் கூறிய) அப்புகழ்ச்சியைச் சிறிதும் நினையாது, உக்கிரகுமாரபாண்டியர் அச்சிங்காதனத்தினின்றும் இறங்கி, தமது மதுராபுரியை யடைந்தனர். மேல் இந்திரனது ஆஞ்ஞையால், அச்சேரசோழர்களாகிய இருவர் நாடுகளிலும் வளப்பமிகும்படி மழைசொரிந்தன. பாண்டிநாடு பழையபடி மழையொழிந்திருந்தது.

சதமகன் - நூறு அசுவமேதஞ் செய்தவன். (௬௯)

ஆயதோர் வைகல் வேட்டை யாடுவா னண்ணல் விண்ணந்
தாயதோர் பொதியக் குன்றிற் சந்தனச் சார னண்ணி

மேயதோ லரிமா னேனம் வேங்கையெண் கிரலை யின்ன
தீயதோர் விலங்கு வேட்டஞ் செய்துயிர் செருக்கு மெல்லை.

(இ-ள்.) (அங்ஙனம் தமது நாடு) மழையொழிந்திருக்குங்காலையில், உக்கிர குமாரபாண்டியர் வேட்டையாட, ஆகாயமளாவிய ஒப்பில்லாத பொதியமலையில், சந்தனமரங்களையுடைய சாரலையடைந்து, (அங்கே) பொருந்திய யானையும், சிங்கமும், பன்றியும், புலியும், கரடியும், மானும், (ஆகிய) இவைபோன்ற கொடிய ஒப்பில்லாத மிருகங்களை வேட்டையாடி, (அவற்றின்) உயிர்களைக் கொல்லுங்காலத்தில், எ-று.

இதுமுதல் மூன்றுபாடல்கள் குளகம். (௪0)

பொன்றத்து மருவிக் குன்றிற் புட்கலா வருத்த மாதி
மின்றத்து மேக நான்கும் வீழ்ந்தன மேயக் கண்டு
குன்றத்தி னெடிய திண்டோட் கொற்றவ னவற்றைப் பற்றிக்
கன்றத்திண் களிறு போலக் கடுந்தளை சிக்க யாத்தான்.

(இ-ள்.) பொற்கட்டிகளை (வாரிக்கொண்டு) தாவும் அருவியையுடைய அப்பொதியமலையில், புஷ்கலாவருத்த முதலிய மின்னலை வீசும் மேகங்கள் நான்கும் படிந்து மேயப்பார்த்து, மலையைக்காட்டிலு முயர்ந்த வலிய தோள்களையுடைய உக்கிர குமாரபாண்டியர் அம்மேகங்களைப் பிடித்து, (அவைகள்) வருந்த, வலிய யானைகள் போலக் கொடிய விலங்குகளிலகப்படக் கட்டி. எ-று.

தளை சிக்க யாத்தான் என்பதற்கு விலங்கை விளைவாய்ப் பூட்டினர் எனினு மொக்கும்.

புட்கலாவருத்தமாதி மேக நான்கு என்றது, புஷ்கலாவர்த்தம்-சங்காரித்தம்-துரோணம்-காளமுகி. இவை பொழிவனமுறையே பொன்-பூ-மண்-கல் என்பர். (௪௧)

வேட்டத்திற் பட்ட செங்கண் வேழம்போற் கொண்டு போகிக்
கோட்டத்தி லிட்டா னுகக் குன்றிற கரிந்த வென்றி
நாட்டத்துப் படிவத் தண்ட நாடன்மற் றதனைக் கேட்டுக்
காட்டத்துக் கனல்போற் சீறிக் கடுஞ்சமர் குறித்துச் செல்வான்.

(இ-ள்.) வேட்டையாடுகையில் அகப்பட்ட செவந்த (கோபக்) கண்களை, யுடையயானைகள்போல (அம்மேகங்களை)க் கொண்டுபோய்ச் சிறைக்கூடத்தில் இட, இந்திரன் அதனைக் கேள்வியுற்று, விறகிற்பற்றிய நெருப்புப்போலக் கோபங்கொண்டு, கொடிய போர்செய்யக் கருதிச் செல்கின்றான். எ-று.

குன்றிறகரிந்தவென்றி நாட்டத்துப்படிவத்தண்ட நாடன் என்பதற்கு மலையின் சிறகுகளையரிந்த வெற்றிபொருந்திய கண்கள்நிறைந்த உடலையுடையவன் எனப் பொருள். மலையின் சிறகரிந்த ஆயிரங்கண்ணன் என்க. (௪௨)

வாங்குநீர் வறப்ப வேலை விடுத்ததும் வலிய வாரந்
தாங்கிய செருக்குங் காரைத் தளையிடு தருக்கு நோக்கி
யீங்கொரு மனித யாக்கைக் கித்துணை வலியா தென்னு
வீங்கிய மான மூக்க மீனவன் மதுரை சூழ்ந்தான்.

(இ-ள்.) (இந்திரன் தன் கட்டளையால்) வளைந்த கடல் சுவற வேற்படையை யெறிந்ததும், (தாங்கமுடியாத) வன்மையுடைய முத்தாரந் தாங்கிய இறுமாப்பும், (புஷ்கலாவருத்த முதலிய நான்கு) மேகங்களை விலங்கு பூட்டிய செருக்கும் நோக்கி இப்பூலோகத்தில் ஒருமனிததேகத்திற்கு இவ்வளவு வல்லமை வந்தது யாதுகாரணம்?

என்று, மேலெழுந்த மானமானது செலுத்த, உக்கிரகுமார பாண்டியருடைய மது ைாப்பதியை முற்றுகை செய்தான். எ-று. (சுங)

**கலிவிருத்தம்.**

ஓடின ரொற்றர்போய்ச் செழிய னுண்கழல்
சூடினர் நகர்ப்புறஞ் சுரர்கள் சேனைகண்
மூடின வென்னலு முனிவு மானமு
நீடின னரியணை யிருந்து நீங்குவான்.

(இ-ள்.) தூதுவர் ஓடிச்சென்று உக்கிரகுமாரபாண்டியருடைய ஒள்ளிய திருவடிகளை முடியிற் சூடி, தேவர்கள்சேனைகள் (நமது) நகரத்தின்புறத்து முற்றுகை செய்தனவென்று கூற, கோபமும் மானமும் மேலெழுந்தோங்கி, சிங்காதனத்திலிரு ந்து (போர்க்குச்செல்ல) நீங்கும் அவ்வுக்கிரகுமாரபாண்டியர். எ-று. (சுச)

பண்ணுக தேர்பரி பகடு வீரர்முன்
னண்ணுக கடிதென நடத்தி யாவரொன்
றெண்ணலன் மதமலை யெருத்த மேற்கொடு
கண்ணகன் கடிநகர் காப்பு நீங்குமுன்.

(இ-ள்.) இரதத்தையுந் துரகத்தையுங் கஜத்தையும் (போருக்கு) அலங்கரிக் கக்கடவீர். பதாதிவீரர் விரைந்து செல்லக்கடவர் என்று (நால்வகைச் சேனையையும்) முன்னே நடத்தி, (போருக்கு வந்தவர்) யாவரொன்று சிறிதுங் கருதாமல், (உக்கிர குமாரபாண்டியர்) மதத்தையுடைய யானையின்பிடரிமேலேறி, இடமகன்ற விளக்க முள்ளநகரத்தின் காவலாகிய மதிலைவிட்டு நீங்குமுன். எ-று.

காப்பு என்றது தொழிலாகுபெயராய் மதில்மேல் நின்றது. (சுரு)

அடுத்தனர் வானவ ரார்த்துப் பல்படை
யெடுத்தனர் வீசினர் சிலையி லெய்கணை
தொடுத்தன ரிறுதிநாட் சொரியு மாரிபோல்
விடுத்தனர் மதிக்குல வீரன் சேனைமேல்.

(இ-ள்.) தேவர்கள் அடுத்துக்கோஷித்து, பல ஆயுதங்களை யெடுத்துவீசி, சந்திரமரபிற் றோன்றிய உக்கிரகுமாரபாண்டியர் சேனையின்பேரில் ஊழிக்காலத்திற் (சத்தமேகங்களும் ஒன்றுகூடிப்பலகாலம்) சொரியும் மழைபோல வில்லிற் பிரயோ கித்தற்குரிய அம்புகளைத் தொடுத்துப் பிரயோகித்தார்கள். எ-று.

அடுத்தனர் - எடுத்தனர் - வீசினர் - தொடுத்தனர் என்னும் வினைமுற்று கள் வினையெச்சப்பொருளில் வந்தன. (சுசு)

ஆர்த்தனர் மலயவெற் பனையன் சேனையோர்
பார்த்தனர் வேறுபல் படைக்க லக்குவை
தூர்த்தனர் குனிசிலை தொடுத்து வாளியாற்
போர்த்தன ரமரர்மெய் புதைத்த வென்பவே.

(இ-ள்.) பொதியமலைக் கிறைவராகிய உக்கிரகுமாரபாண்டியருடையசேனு வீரர்கள் ஆரவாரித்து, பார்த்து வெவ்வேறு வகையினவாகிய பல ஆயுதக்கூட்டங் களை யெறிந்து, வளைந்தவில்லில் நாண் ஏறிட்டு, அஸ்திரவருஷத்தால் மறைத்தார்கள். (அவை) தேவர்கள் சரீரத்திற்றைத்தன. எ-று.

ஆர்த்தனர் - பார்த்தனர் - தூர்த்தனர் என்பன முற்றெச்சங்கள். (சுஎ)

தறிந்தன தாள்சிரந் தகர்ந்த தோள்கரம்
பறிந்தன குருதிநீர் கடலிற் பாய்ந்தன
செறிந்தன பாரிடஞ் சேனங் கூளிகண்
முறிந்தன வானவர் முதல்வன் சேனையே.

(இ-ள்.) (சிலர்க்குக்) கால்களொடிந்தன. (சிலர்க்குத்) தலைகளுடைபட்டன. (சிலர்க்கு) தோள்களுங் கைகளும்பறிபட்டன. உதிரநீர்சமுத்திரத்திற் சென்று பாய்ந்தன. பூதங்களும், கழுகுகளும், பசாசுகளும், யுத்தகளத்தில் நெருங்கின. தேவநாதனாகிய இந்திரனுடைய சேனைகள் (முதுகுகாட்டி) ஓடின. எ-று. (௬௮)

ஆடின குறைத்தலை யவிந்த போர்க்களம்
பாடின பாரிடம் விந்தைப் பாவைதாள்
சூடின கூளிகள் சோரி சோரப்பார்
மூடின பிணக்குவை யண்ட முட்டவே.

(இ-ள்.) கவந்தங்களாடின. போர்க்களத்தில் போர் ஒழிந்தன. பூதகணங்கள் (உக்கிரபாண்டியர் வீரத்தைப்புகழ்ந்து) பாடின. விஜயலக்ஷ்மியின் பாதங்களைப் பசாசுகள் (தலைமேல்) சூடின. உதிரஞ்சோரப் பிணக்குவியல்கள் அண்டமுகடுரிஞ்சப் பூமியை மூடின. எ-று. (௬௯)

வெஞ்சின வலாரிதன் வீரச் சேனைக
டுஞ்சின கண்டெரி சொரியுங் கண்ணனாய்ப்
பஞ்சின்முன் னெரியெனப் பதைத்துத் தெய்வத
வஞ்சினப் படைகளான் மலைவ துன்னினான்.

(இ-ள்.) கொடுங்கோபத்தையுடைய இந்திரன் வீரம்பொருந்திய தனது சேனாவீரர்கள் இறந்ததைக்கண்டு, கோபாக்கினிதருங் கண்களையுடையவனாய், பஞ்சின் முற்பட்டநெருப்பு (விரைந்து பற்றுதல்) போல, (கோபம் விரைந்துவரப்) பதைத்து, வஞ்சினத்துடன் தெய்வத்தன்மையுடைய ஆயுதங்களாற் போர்செய்யக் கருதினான். எ-று.

வஞ்சினம்—சத்துருக்களிடம் போர்புரிகையில் தமது வீரத்தைப்புகழ்தல்.

அறுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

வெங்கதிர்ப் படைவிட் டார்த்தான் விண்ணவ னதனைத் திங்கட்
பைங்கதிர்ப் படைதொட் டோச்சி யவித்தனன் பாராள் வேந்தன்
சிங்கவெம் படைவிட் டார்த்தான் றேவர்கோ னதனைச் சிம்புட்
புங்கவன் படைதொட் டோச்சி யடக்கினான் புணரி வென்றோன்.

(இ-ள்.) இந்திரன் சுடுகின்ற கிரணங்களையுடைய சூரியாஸ்திரஞ்செலுத்தி வீரகோஷஞ்செய்தான். அதனை நிலவுலகமன்னராகிய உக்கிரகுமாரபாண்டியர் இளங்கிரணங்களையுடைய சந்திராஸ்திரத்தைச் செலுத்தியழித்தனர். தேவர்கட்கிறைவனாகிய இந்திரன் வெவ்விய நரசிங்காஸ்திரத்தைப் பிரயோகஞ்செய்து வீரகோஷஞ் செய்தான். கடலை (சுவற வேல்விட்டு) வென்ற அவ்வுக்கிரகுமாரபாண்டியர் அந்த அஸ்திரத்தைப் பெருவலிமையையுடைய சரபாஸ்திரத்தைப் பிரயோகித்து (அதன் வலிமையை) அடக்கினார். எ-று. (௩௧)

தானவர் பகைவன் மோக சரந்தொடுத் தெறிந்தா னாக
மீனவ னதனை ஞான வாளியால் விழித்து மாய்ந்து

போனபின் மற்போ ராற்றப் புக்கனர் புக்கார் தம்மில்
வானவன் மண்ணி னுன்மேல் வச்சிரம்வீசி யார்த்தான்.

(இ-ள்.) அசுரர்கட்குப்பகைவனுகிய இந்திரன் மோகாஸ்திரத்தை (வில்லில் தொடுத்து)ச் செலுத்த மீனக்கொடியையுடைய உக்கிரகுமாரபாண்டியர் அதனை ஞானாஸ்திர (பிரயோக) த்தால் அழிக்க, (அந்த ஞானாஸ்திரம்) அழிந்துபோனபிறகு (இருவரும்) மல்யுத்தஞ்செய்யப் புகுந்தார்கள். அவ்வாறு புகுந்தவருள், இந்திரன் உக்கிரகுமாரபாண்டியர்பேரில் வச்சிராயுதத்தைவீசி வீரகோஷஞ்செய்தான். எ-று.

விளித்து - ஆற்றி - என்பன செயவெனெச்சத்திரிபுகள். (௰உ)

காய்சின மடங்க லன்னான் கைவளை சுழற்றி வல்லே
வீசினன் குலிசந் தன்னை வீழ்த்தது விடுத்தான் சென்னித்
தேசினன் மகுடந் தள்ளிச் சிதைத்தது சிதைத்த லோடுங்
கூசின னஞ்சிப் போனான் குன்றிற கரிந்த வீரன்.

(இ-ள்.) கொல்லுகின்ற கோபத்தையுடைய சிங்கம்போன்ற உக்கிரகுமாரபாண்டியர் கையிலேந்திய சக்கரத்தைச்சுழற்றி விரைவாய்வீச, (அது) வச்சிராயுதத்தைச்சிதைத்து, அவ்வச்சிராயுதத்தைச் செலுத்திய இந்திரனுடைய சிரசில் அணிந்த ஒளிபொருந்திய நல்லகிரீடத்தைத்தள்ளிச சிதைத்தது. (அவ்வாறு) சிதைக்க, மலைகளின் சிறகரிந்தவீரனுகிய இந்திரன் நாணி, அச்சமுற்று ஓடினன். எ-று.

இவ்வாறு இந்திரன் உக்கிரகுமாரபாண்டியரால் முடிசிதறுண்டது துருவாசமுனிவர் சாபானுக்கிரகத்தாலென்க இதனை, இந்நூலில்,

"சேட்டானை வானவநின் சென்னி செழியரிலோர்
வாட்டானை வீரன் வளையாற் சிதறுகநின்
கோட்டான நாற்கோட்ட வெண்ணிறத்த குஞ்சரமுங்
காட்டானை யாகவென விட்டான் கடுஞ்சாபம்"—என்றும்,

"சிந்தனை வாக்கிற் கெட்டாச் சிவனரு ளளித்த சேட
நிந்தனை பரிகா ரத்தா னீங்காது தலைமட் டாக
வந்தது முடிமட் டாக மத்தமா வனமா வாகி
யைந்திரு பஃதாண் டெல்லை யகன்றபின் பண்டைத் தாக"—என்றும்

வருவதனுனும், இதன் எஞ்சிய சரிதத்தை வெள்ளையானைச் சாபந்தீர்த்த படலத்தானுமுணர்க. (௰௩)

இந்திரன் டனைய கூர்ம்பல் லிருள்வரை நெஞ்சு போழ்ந்த
மைந்தனில் வலிய காளை வளைந்தெறி நேமி சென்னி
சிந்திடா தாகி நம்பொன் மணிமுடி சிதறச் சோம
சுந்தர நாதன் பூசைத் தொழிற்பய னளித்த தென்னு.

(இ-ள்.) இரண்டு பிறைமதிபோன்ற கூரியபற்களையும், கரிய மலைவடிவையும் உடைய கிரவுஞ்சனது மார்பைப் பிளந்த முருகக்கடவுள்போல, வன்மைபொருந்திய உக்கிரகுமாரபாண்டியன் கைகொண்டுவீசிய சக்கரமானது (நமது)தலையைச்சேதிக்காமல் அழகிய பொன்னுற்செய்த நவமணிகளிழைத்த முடியைச்சேதிக்க (காம்முற்காலத்தில்) சோமசுந்தரப்பெருமானை (பூசித்த) பூசைத்தொழிலின் பயன் (இப்போது நம்மைக்) காத்தது என்று கருதி. எ-று. (௰௪)

போரினுக் காற்று தோடிப் பொன்னகர் புகுந்த வென்றித்
தாரினுக் கிசைந்த கூர்வேற் சதமகன் பின்பு தன்னாட்
டூரினுக் கெல்லா மாரி யுதவுவே னிகள நீக்கிக்
காரினைத் தருக வென்னக் கவுரியற் கோலை விட்டான்.

(இ-ள்.) போர்செய்தற் காற்றாமல் (புறமுதுகிட்டு) ஓடித் தேவலோகத்திற் புகுந்த வெற்றிமாலைசூடிய கூர்மையாகிய வச்சிராயுதத்தைத்தாங்கிய இந்திரன், பிறகு உனது நாட்டிலுள்ள ஊர்களுக்கெல்லாம் மழைவளந்தருவேன். (புஷ்கலாவர்த்த முதலிய) மேகங்களை விலங்கினின்றும் நீக்கித்தரக்கடவீரென்று, உக்கிரகுமாரபாண்டியருக்குத் திருமுகமனுப்பினன். எ-று.

தாரினுக்கு என்பதில் கு-உருபுமயக்கம். நின்-தன் எனவந்தது வழுவமைதி.

முடங்கல்கொண் டணைந்த தூதன் முடிகெழு வேந்தன் பாதத்
தொடங்கிநின் றோலை நீட்ட வுழையுளா னொருவன் வாங்கி
மடங்கலே றனையான் முன்னர் வாசித்துக் காட்டக் கேட்டு
விடங்கலுழ் வேலான் விண்ணோர் வேந்துரை தேறா னாகி.

(இ-ள்.) திருமுகங் கொண்டுவந்த தேவதூதன் கிரீடமணிந்த உக்கிரகுமார பாண்டியருடைய பாதத்தின்கீ ழொடுங்கிநின்று,திருமுகத்தை நீட்ட, (அவர்) அருகி லுள்ள ஒருவன் (அத்திருமுகத்தைக் கையேற்று) வாங்கி, சிங்கவேறுபோன்ற அவ்வுக் கிரகுமாரபாண்டியர் சமுகத்திலே படித்துக்காட்ட, விஷத்தைச்சொரியும்வேற்படை யையுடைய அவ்வுக்கிரகுமாரபாண்டியர் கேட்டு, (திருமுகத்தி லடங்கிய) இந்திரன் மொழிகளை நம்பாமல். எ-று. (கசு)

இட்டவன் சிறையை நீக்கி யெழிலியை விடாது மாறு
பட்டசிந் தையனே யாகப் பாகசா தனனுக் கென்று
நட்டவ னொருவே ளாள னன்பினை யென்று தாழ்ந்தான்
மட்டவிழ்ந் தொழுகு நிம்ப மாலிகை மார்பி னானும்.

(இ-ள்.) (உக்கிரகுமாரபாண்டியர்) இட்ட வலிய சிறைக்களத்தை நீக்கி (புஷ்கலாவர்த்த முதலிய) மேகங்களை விடாமல், பகைகொண்ட மனத்தை யுடையவ ராகவே யிருக்க, இந்திரனுக்கு எந்நாளும் நண்பனாகிய ஒரு வேளாளன் நான் உத்தர வாதி யென்று வணங்கினான். விகசித்துத் தேன்சிந்தும் வேப்பமாலையணிந்த மார்பை யுடைய அவ்வுக்கிரகுமாரபாண்டியரும். எ-று. (கஎ)

இடுக்கண் வந் துயிர்க்கு மூற்ற மெய்தினும் வாய்மை காத்து
வடுக்களைந் தொழுகும் வேளாண் மரபினா னுரையை யாத்த
னெடுத்துரை மறைபோற் சூழ்ந்து சிறைக்களத் திட்ட யாப்பு
விடுத்தனன் பகடு போல மீண்டன மேக மெல்லாம்.

(இ-ள்.) வறுமை மேலிடலால் (உடலுக்கன்றி) உயிருக்குந் துன்பம் வரினும் (பிறர்க்குச் சொல்லிய) வாய்ச்சொல்லைக் காத்துக் குற்றங்களைந்து, நல்லொழுக்கத்திற் செல்லும் வேளாளனுடைய வாய்ச்சொல்லை, சிவபெருமான் விதந்து கூறிய வேதவாக்கியம்போலச் சிந்தித்து, சிறைக்களத்திற்பூட்டியவிலங்கினைத் தறித்துவிட்டனர் (உக்கிரகுமாரபாண்டியர்). அதனால் (புஷ்கலாவருத்தமுதலிய) மேகங்களெல்லாம் யானைகள் போலும் (அங்கு நின்றும்) திரும்பின. எ-று.

"வடுக்களைந் தொழுகு நாலா மரபினான்" எனவும் பாடம். வேளாளரைச் சூத்திரரென வழங்குதல் மரபாதலிற் கொள்க. "உத்தம குலத்து நாற்பெருங்குடி" என இந்நூலில் வருதலும் இக்கருத்து பற்றியே யென்க.

வாய்மைகாத்த லென்றது. இவ்வருணத்தினர் தமக்கு யாது இமை விளைவ தாயினும் அதனைக் கருதாது சத்தியத்தைப் பாதுகாக்கு மியல்புடைய ராதல்பற்றி யென்க. இதனை,

உமாபதி சிவாசாரியர்.

"மாறுகொடு பழயனூர் நீலிசெய்த வஞ்சனையால் வணிகனுயி ரிழப்பத் தாங்கள் கூறியசொல் பிழையாது துணிந்து செந்தீக் குழியிலெழு பதுபேரு முழுகிக் கங்கை யாறணிசெஞ்சடைத் திருவாலங் காட்டப்பரண்டமுற நிமிர்ந்தாடு மடியின்கீழ்மெய்ப் பேறுபெறும் வேளாளர் பெருமை யெம்மாற் பிரித்தளவிட் டிவளவெனப் பேசலாமோ"—என்பதனாலும், இதுபோன்ற பல பூர்வசரிதங்கள் புலப்படக்கூறிய திருக்கை வழக்கம் முதலிய நூல்களானும் நன்குணர்க. விரிவஞ்சி விடுத்தாம். (௫௮)

தேவர்கோ னேவ லாலே திங்கண்மும் மாரி பெய்து
வாவியுங் குளனும யாறு மடுக்களு மடுத்துக் கள்வாய்க்
காவிசூழ் வயலுஞ் செய்யுஞ் செந்நெலுங் கன்னற் காடும
பூவிரி பொழிலுங் காவும பொலிந்தது கன்னி நாடு.

(இ-ள்.) தேவேந்திரன கட்டளையினால், மாதந்தோறும் மூன்றுமழைபெய்து வர, வாவிகளுங் குளங்களும் ஆறுகளும மடுக்களும நிறைதலால், தேன்சிந்தும் வா யையுடைய நீலோற்பலங்கள் நெருங்கிய வயல்களிலும் பட்டங்களிலுமுள்ள செந் நெற்காடுகளாலும், கரும்பின்காடுகளாலும், மலர்கள் மலர்ந்த பூஞ்சோலைகளாலும், (பய ன்தருஞ்) சோலைகளாலும், பாண்டிநாடு (முழுவதும்) பொலிவுற்று ஓங்கியது. எ-று.

இந்திரன்முடிமேல் வளையெறிந்தபடலம்

முற்றிற்று

---

ஆ திருவிருத்தம் - ௧௧௩௧

---

பதினைந்தாவது,

# மேருவைச்செண்டாலடித்தபடலம்.

---

எழுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

அண்ட ரஞ்ச வமரு ழந்த வமரர் கோனை யரசர்கோன்
வண்ட லம்பு மௌலி சிந்த வளையெ றிந்து வெந்புறங்
கண்ட வண்ண மின்ன தன்ன கன்னி நாடன் மேருவிற்
செண்டெ றிந்து வைப்பெ டுத்த செயலு நன்கு செப்புவாம்.

(இ-ள்.) போர்புரிந்த இந்திரனைத் தேவர்கள் அஞ்சும்படி, உக்கிரகுமார பாண்டியர் வண்டுகளொலிக்கும் (மாலைவேய்ந்த) கிரீடஞ்சிதறச் சக்கரத்தையெறிந்து அவனைப்புறங்கண்ட திருவிளையாடல் இதுவாகும். அவ்வுக்கிரகுமார பாண்டியர் மகா மேருமலையின்மேல் செண்டாயுதமெறிந்து சேமநிதியை யெடுத்த திருவிளையாடலை யும் (இனி யாம்) நன்றாகக் கூறுவோம. எ-று.

இச்செய்யுள்களைக் கலிவிருத்தமென்பதுஞ் சில[illegible] (௧)



மேருவைச்செண்டாலடித்தபடலம்.

மன்ன வன்ற னக்கு முன்னர் மலய வெற்பின் முனிவர்கோன்
சொன்ன திங்கள் விரத மன்று தொட்டு நோற்று வரலுமந்
நன்ன லஞ்செய் பேறு போல நங்கை காந்தி மதிவயிற்
றுன்ன ருஞ்செ யங்கொ ளொண் மைந்த னொருவன் வந்து தோன்றினன்.

(இ-ள்.) உக்கிரகுமாரபாண்டியர் தமக்கு, முன்னே பொதிய மலையிலுள்ள முனிவர் பெருமானாகிய அகத்தியமுனிவர் கூறிய சோமவாரவிரதத்தை அன்றுமுதல் அனுஷ்டித்துவர, அவ்விரதம் அருளியபயன்போல, பெண்களிற் சிறந்தவராகிய காந்திமதிதேவியாரது திருவயிற்றில், எண்ணுதற்கரிய வெற்றிகொண்ட ஒருபுத்திரன் பிறந்தான். எ-று. (உ)

வயந்த னைப்ப யந்த தென்ன மைந்த னைப்ப யந்தபோ
தியந்து வைத்து நகர்க ளிப்ப வினிதி ருந்த புரவலன்
சயந்த னைத்த விந்தி ரன்ம யந்த னைப்ப யந்தநாள்
வியந்த கத்த டைந்த வின்பம் விளைம கிழ்ச்சி யெய்தினன்.

(இ-ள்.) மன்மதனை (திருமால்) பெற்றதுபோல, புதல்வனைப் பெற்றகாலத்து, வாத்தியங்கள் முழங்கவும், நகரிலுள்ளோர் மகிழ்வெய்தவும், சந்தோஷித்திருந்த உக்கிரகுமாரபாண்டியர் வெற்றிமிகுந்த இந்திரன் சயந்தனைப் பெற்றகாலத்து அதிசயித்து அவன்மனத்தில் விளைந்த சந்தோஷம்போல மிக்கமகிழ்ச்சியடைந்தனர். எ-று.

வயந்தனைப் பயந்தது என்ன என்பதற்கு வெற்றியைப்பெற்றது போன்று எனப்பொருள் கூறுதலுமொக்கும். (ஙு)

தென்ன ரேறு சாத காதி செய்து வீர பாண்டிய
னென்ன நாம விதிந டப்பி யெழுதொ ணாத கலைமுதற்
பன்னு கேள்வி கரிக டேர்கள் பரிப டைக்க லம்பயின்
றன்ன காத லான்வி ளங்க வகம கிழ்ச்சி யடையுநாள்.

(இ-ள்.) பாண்டியருள் ஆண்சிங்கம் போன்ற உக்கிரகுமார பாண்டியர் (பின்பு) சாதகன்ம முதலிய (செய்யவேண்டிய) கிரியைகளைச் செய்து வீரபாண்டியனென்று நாமகரணஞ் செய்துமுடித்து, எழுதப்படாத வேதமுதலிய கலைகளையும், கஜாரூடமும், இரதாரூடமும், அசுவாரூடமும், ஆயுதப்பயிற்சியும் (ஆகியஇவற்றை) பயிலச்செய்தலால், அப்புத்திரனது மேம்பாடுகண்டு, உக்கிரகுமாரபாண்டியர் மிக்க மனமகிழ்ந்திருந்தார். எ-று.

வேதம் அத்தியயனஞ்செய்து பழகற்பாலதன்றி, எழுதிப்பழகற்பாலதன்றாகலின் "எழுதொணாத கலை" என்றார்.

சாதகன்ம மாதியென்றது—உத்தாபனம் - அன்னப்பிராசனம் - பிரவாசம் முதலியவற்றை. (சா)

மல்கு மாறு கோடி ரிந்து மழைசு ருங்கி நதியுநீ
ரொல்கு மாறு பருவ மாறி யுணவு மாறி யுயிரெலா
மெல்கு மாறு பசியு ழந்து வேந்த னுக்கு விளைபொரு
ணல்கு மாறி லாமை யின்ன நலிய வந்த நாடெலாம்.

(இ-ள்.) (நன்மை) விளைக்கும் ஆறுகிரகங்களும், தத்தநிலைகளில் மாறுபடுதலால், மழைவளஞ்சுருங்கி, நதியும் நீர் நிலைகளும் வறப்பக் கார்ப்பருவமாறி, உணவுகளும்மாறி, உயிர்களெல்லாம் மெலியும்வகையாகப்பசியோடுவருந்தி, விளைந்தபொருள்களுள் அரசனுக்கு (ஆறுகூறுகளில்) ஒருகூறு கொடுக்கவுமில்லாமல், நாடுகள் அனைத்தினும் வறுமை (குடியேறி) வருத்தவந்தது. எ-று.

ஆறுகிரகங்கள்—சனி - செவ்வாய் - குரு - சூரியன் - இராகு - கேது என்பனவாம். (கு)

மழைவ றந்த தென்கொ லென்று வழுதி கூற முழுதுணர்ந்
தழிவி லாத பிரம கற்ப மளவு மெல்லை கண்டறா
ஓழுவர் கோள்க ளிரவி தன்னை யுற்று நோக்கி நிற்றலாற்
றழையு மாரி வருடி யாதொர் வருட மென்று சாற்றினர்.

(இ-ள்.) உக்கிரகுமாரபாண்டியர் மழைவளம்வறந்தது யாதுகாரணமென்று வினவ, காலவளவை தேர்ந்துணர்ந்த புலவர்கள், (சோதிடநூல்) முற்றுமுணர்ந்து, அழியாதபிரமகற்பமட்டும் ஏனைக்கிரகங்கள் சூரியனையடைந்துபார்த்து நிற்றலால், ஒருவருடவரையில் (ஊரைச்) செழிப்பிக்கும் மழைபொழியாதென்று சொன்னார்கள்.

பிரமகற்பம் - பிரமதேவருக்குரிய ஒருதினம் - அது பதினான்கு இந்திர பட்டமழியுங்காலம். இதைப்பற்றி முன்னெழுதப்பட்டுளது. (சு)

அறுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

மகவுறு நோயை நோக்கி வருந்துறு தாய்போன் மன்னன்
பகவுறு மதியஞ் சூடும் பரஞ்சுடர் முன்போய்த் தாழ்ந்து
மிகவுறு பசியால் வைய மெலிவதை யைய வென்னாத்
தகவுற விரங்கிக் கண்ணீர் ததும்பிநின் றிரந்து வேண்ட.

(இ-ள்.) பிள்ளையடைந்த பிணியைப்பார்த்து மனம்வருந்தும் பெற்றாளைப் போல, உக்கிரகுமாரபாண்டியர் பிளவுபட்ட சந்திரனையணிந்த சோமசுந்தரப்பெருமான் திருமுன்சென்றுபணிந்து, ஐயனே! மிக்கபசியால் உயிர்கள்வருந்துகின்றனவே யென்று மிகவும் இரங்கி, கண்ணீர்சிந்திக் குறைகூறிப் பிரார்த்திக்க எ-று.

இதுமுத லிரண்டுபாடல்கள் குளகம். (எ)

திரைக்கடல் விடஞ்சேர் கண்டர் காலத்தின் செவ்வி நோக்கி
யிரக்கமில் லவர்போல் வாளா விருத்தலு மருத்தார் மார்பன்
கரைக்கரி தாய துன்பக் கடலில்வீழ்ந் திருக்கை புக்கா
னரக்கர் போர்க் கடலி னீந்தி யருக்கனீர்க் கடலில் வீழ்ந்தான்.

(இ-ள்.) அலைகளையுடைய கடலிற்றோன்றிய விஷந்தங்கிய நீலகண்டத்தையுடைய சோமசுந்தரப் பெருமான், காலத்தின் பகுதியைத் (தமது) திருவுள்ளத்திற்கருதி, (உயிர்கள்மேல்) இரக்கமில்லாதவர்போலச் சும்மாவிருத்தலும், வாசனை பொருந்திய மாலையணிந்த மார்பையுடைய உக்கிரகுமாரபாண்டியர் கரைக்கு அடங்காத துன்பக்கடலில் அழுந்தி (தமது) கோயிலுக்குச் சென்றார். சூரியன் அரக்கர் செய்யும் போர்க்கடலினின்றுநீந்தி நீர்மயமாகிய கடலிலழுந்தினான். (சூரியன் அஸ்தமனமானான் என்றபடி.) எ-று.

புலத்தியன் முதலிய முனிவர்கள் வேதமோதவும், சுரதன் முதலியோர் தேர்வடமிழுக்கவும், கேதிமுதலிய அரக்கர் வாளேந்திமுன்வரவும், வாசுகி முதலிய பாம்புகள் தேரைச்சுமந்து செல்லவும், நாரதன் முதலோர் இசைபாடவும், திருத்தலை முதலிய தெய்வமாதர் நடிக்கவும், சூரியன்தோன்றி வருகையில் இடையே அறுபத்து நான்குகோடி அரக்கர்வந்து போர்புரிவர். இவர் வேதியர்கொடுக்கும் அருக்கிய நீரால் ஊதமாவர் என்பது சரிதமாதலின் "அரக்கர்போர்க்கடலினீந்தி" என்றார். (அ)

வள்ளறன் குடைக்கீழ்த் தங்கு முயிர்ப்பசி வருத்த மெல்லாங்
கொள்ளைகொண் டிருந்த நெஞ்சிற் குளிர்முகச் செவ்வி குன்றத்

தள்ளருந் துயரின் மூழ்கித் தனையிடைத் துயின்ற னாக
வெள்ளிமன் றுடையார் சித்த வேடராய்க் கனவில் வந்தார்.

(இ-ள்.) உக்கிரகுமாரபாண்டியர் தமது குடைநிழலிற் றங்கிய உயிர்களின் பசிவருத்தமுழுவதும், (ஒருசேர) கொள்ளைகொண்டு விளங்கிய மனத்தோடு குளிர்ந்த முகமலர்ச்சிகுறைய, நீக்கற்கரிய துன்பத்தில் மூழ்கித் தனையின்மேல் கிடந்து நித்திரைசெய்ய, வெள்ளியம்பலத்தையுடைய சோமசுந்தரப்பெருமான் சித்தவேடமூர்த்தியாய் (அவரது) கனவில் எழுந்தருளினர். எ-று. (௯)

அடற்கதிர் வேலோய் மாரி யரிதிப்போ ததனை வேண்டி
யிடர்ப்படல் வரைக்கு வேந்தா யிருக்கின்ற வெரிபொன் மேருத்
தடப்பெரு வரையின் மாடோர் தனிப்பெரு முழையி லிட்டுக்
கிடப்பதோ ரெல்லை யில்லாக் கேடிலாச் சேம வைப்பு.

(இ-ள்.) வலிமைதங்கிய ஒளி யமைந்த வேற்படையை யுடைய பாண்டியனே! இக்காலத்தில் மழைபெய்தலரிது. அதனை விரும்பி வருந்துதலொழிக. மலைகட்கரசாயிருக்கின்ற பிரகாசிக்கும் பொன்னாகிய மேருவென்னும் உயர்ந்தபெரிய மலையின்பக்கலில், ஒப்பற்ற ஒருபெருங்குகையில் அளவுகடந்த கெடுதலில்லாத ஒரு வைப்புநிதி சேமஞ்செய்துள்ளது. எ-று. (௧0)

கிடைத்துமற் றனைய மேரு கிரிச்செருக் கடங்கச் செண்டாற்
புடைத்துநின் னானைத் தாக்கிப் பொன்னறை பொதிந்த பாறை
துடைத்துநீ வேண்டுங் காறுந் தொட்டெடுத் ததனை மீள
வடைத்துநின் குறியிட் டைய வருதியென் றடிகள் கூற.

(இ-ள்.) ஐயனே! (நீயங்கு) அடைந்து, அந்த மேருகிரியின் செருக்கு உடையச் செண்டாலடித்து, (அம்மலையை) உன்னுக்கினை வழிப்படுத்தி, சேமநிதியிருக்கும் அறைமேல் மூடிய பாறையையெழுப்பி, நீ பொன்வேண்டுமெல்லையும் அள்ளியெடுத்து, அந்த அறையைமீண்டும் (அப்பாறையால்) மூடி நின்பெயரடையாளமிட்டு வருவாயென்று, சித்தமூர்த்திகள் கூறியருள. எ-று. (௧௧)

விழித்தன னெழுமான் றேரோன் விழிக்குமுன் கடன்க ளெல்லாங்
கழித்தனன் மீன நோக்கி கணவனை வலமாய்ப் போந்து
சுழித்தெறி கடல னீகத் தொகைப்புறஞ் சூழக் கொண்டல்
கிழித்தெழு வாயி னீங்கிக் கீழ்த்திசை நோக்கிச் செல்வான்.

(இ-ள்.) (உடனே உக்கிரகுமாரபாண்டியர்) விழித்து, எழுபுரவி பூட்டிய தேரையுடைய சூரியன்விழித்தற்குமுன் காலைக்கடன்களையெல்லாஞ் செய்துமுடித்து, அங்கயற்கண்ணம்மையார் நாயகராகிய சுந்தரேசப்பெருமானைப் பிரதக்ஷிணஞ்செய்து, சுழித்து அலைகள் வீசுங் கடல்போன்ற சேனைத்தொகுதி புறத்திற்சூழ, மேகமண்டலத்தைக் கிழித்து உயர்ந்த (கோட்டை) வாயிலினின்று நீங்கிக் கீழ்த்திசை குறித்துச் செல்வாராயினர். எ-று. (௧௨)

அதிர்ந்தன முரசஞ் சங்க மதிர்ந்தன வியங்க ளண்டம்
பிதிர்ந்தன வென்ன வார்ப்பப் பெயர்ந்துவெண் கவரி துள்ள
முதிர்ந்தநான் மறையோ ராசி மொழியநா வல்லோ ரேத்தப்
பதிர்ந்துபார் கிழியத் திண்டேர் பாகுமுன் செலுத்த வூர்ந்தான்.

(இ-ள்.) பேரிகை யொலிக்கவும், சங்கு முழங்கவும், அண்டங்கள் பிளவுபட்டன என்று சொல்லும்படி வாத்தியங்கள் இசைக்கவும், (அவ்விடம் விட்டு) பெய

ர்ந்து, வெள்ளிய சாமரைகள் துள்ளவும், நான்குவேதங்களை யுணர்ந்த வயதுமுதிர்ந்த வேதியர்கள் ஆசீர்வசனஞ்சொல்லவும், வித்துவான்கள் பாடவும், (உருள்) பதிதலாற் பூமிகிழியவும், வலிய இரதத்தைப் பாகன் முன்னே செலுத்த நடந்தார். எ-று. (கங)

பவளக்காற் பிச்சம் பொற்காற் பன்மணிக் கவிகை முத்தந்
தவளக்காற் பதாகைக் காடு தானவா னருவி தூங்குங்
கவளக்காற் பொருப்பும் பாய்மாக் கடலுமண் மடந்தை யாகந்
துவளக்கால் வயவர் மான்றேர்த் தொகுதியுஞ் சூழல் போக.

(இ-ள்.) பவளத்தாற் செய்த காம்பையுடைய பீலிக்குடையும், பொன்னாற் செய்த காம்பையுடைய பலமணிகளிழைத்த (ரத்தினக்) குடையும், வெள்ளிய முத்துக் கள்கோத்த காலையுடைய (விருதுக்) கொடிக்காடும், மதமாகிய பெரிய அருவியை ஒழுக்கும் அசைகின்ற காலையுடைய கவளமுண்ணும் மலைபோன்ற யானைகளும், பாய்ந்து செல்லுங் குதிரைவெள்ளமும், காலாள்கூட்டமும், குதிரைபூட்டிய தேர்க்கூட்டமும், பூமிதேவியின் உடல் வருந்தச் சூழ்ந்துவரவும். எ-று.

இதுமுதல் ஒன்பது பாடல்கள் குளகம்.

சூழல்போக என்பது ஒரு சொல். (கச)

கோழிணர் ஞாழ லன்ன கோட்டுகிர்ப் புலவுப் பேழ்வாய்த்
தாழ்சின வுழுவை யொற்றைத் தனிப்பெருங் கொடியுங் கூனற்
காழ்சிலைக் கொடியுஞ் சூழக் கயற்கொடி நிலந்து ழாங்கை
யேழுயர் வரைமேற் றோன்றி யிருவிசும் பகடு கீற.

(இ-ள்.) கொழுவிய பூங்கொத்துள்ள ஞாழலின் அரும்புபோன்ற வளைவினையுடைய நகத்தையும், புலால்நாற்றம்வீசும் பெரிய வாயையும், கடுங்கோபத்தையும் உடைய புலியெழுதிய ஒப்பற்ற பெரிய கொடியும், வளைவாகிய வலிய வில்லெழுதிய கொடியும், (தம்மை) சூழ்ந்துவர, மீனக்கொடியானது பூமியைத் துழாவுந் துதிக்கை முதலிய எழுறுப்புகள் உயர்ந்த மலைபோன்ற யானையின்மேல் தோன்றி, பெரிய ஆகாயத்தின் வயிற்றைக் கிழித்துச்செல்லவும். எ-று.

ஞாழல் - புலிநகக் கொன்றை.

எழுறுப்புகள்—கால் நான்கு-துதிக்கை-கோசம்-வால் என்பன. (கரு)

தென்கடல் வடபா னோக்கிச் செல்வது போலத் தென்னன்
றன்கட் லனிகங் கன்னித் தண்டமிழ் நாடு நீந்தி
வன்கட நெறிக்கொண் டேகி வளவர்கோ னெதிர்கொண் டாற்று
நன்கடன் முகம னேற்று நனிர்புன லுடு நீந்தி.

(இ-ள்.) தென்சமுத்திரமானது வடதிசையை நோக்கிப் போவதுபோல, உக்கிரகுமாரபாண்டியர் தமது சேனைசமுத்திரத்தினுடன் கன்னிநாடாகிய தண்ணிய தமிழ்நாட்டைத் தாண்டி, வலிய காட்டுவழியை மேற்கொண்டு சென்று, சோழராஜன் எதிர்கொண்டு செய்யும் நல்ல முறையாகிய உபசாரங்களை அங்கீகரித்து, குளிர்ந்த நீர்நாடாகிய அச்சோழநாட்டினின்று நீங்கி. எ-று.

வன்கடம் என்றது முரம்புங் கூர்ங்கல்லும் நெருங்கிய இடம். (கசு)

தண்டக நாடு தள்ளித் தெலுங்கநா டகன்று சாய்தாட்
கண்டகக் கைதை வேலிக் கருநடங் கடந்து காடுந்
தொண்டகந் துவைக்குங் குன்று நதிகளுந் துறந்து கள்வாய்
வுண்டக மலர்க்கா வேலி மாளவ தேச நண்ணி.

(இ-ள்.) தொண்டைநாட்டைக்கடந்து (திருவேங்கடத்துக்கப்பாற்பட்ட) தெலுங்கநாட்டினின்றகன்று, சாய்ந்த அடியையும் முள்ளையுமுடைய தாழைவேலி சூழ்ந்த கருநடநாட்டை நீங்கி, முல்லைநிலத்தையும், குறிஞ்சிநிலப்பறை ஒலிக்கும் மலைப்பூமியையும், நதிகளையுங் கடந்து, தேனை வாயிற்பொருந்திய வண்டுகளைத் தம இடத்துள்ள மலர்களெருங்கிய சோலைகளையே வேலியாகவுடைய மாளவதேசத்தைச் சேர்ந்து. எ-று. (கஎ)

அங்குநின் றெழுந்து தீவா யருஞ்சுர நெறிப்பட் டேகி
மங்குனின் றதிருஞ் செம்பொன் மாடநீள் விராட நண்ணிக்
கொங்குநின் றவிழுங் கானங் குன்றுரீஇ வாளை பாயத்
தெங்குநின் றிளநீர் சிந்து மத்திய தேயத் தெய்தி.

(இ-ள்.) அம்மாளவதேசத்தினின்று புறப்பட்டு, தீவாய்ந்த செல்லுதற்கரிய பாலைநிலத்தின் வழிப்பட்டுச் சென்று, மேகங்கள்நின்றுகர்ச்சிக்குஞ் செம்பொன்னாற் செய்த மாடங்கள் நெருங்கிய விராடதேசத்தை அடைந்து, மகரந்தப்பொடிகள் பிரகாசிக்கும்படி மலரும் (மலர்கள் நிறைந்த) முல்லைநிலத்தையும், குறிஞ்சிநிலத்தையுந் தாண்டி, வாளைகள் பாய்தலால் தென்னமரத்திலிருந்து இளநீர் சொரியும் மத்திய தேசத்தைச்சேர்ந்து. எ-று. (கஅ)

அங்நெடு நாடு நீங்கி யாடலே றுயர்த்த தோன்றல்
பொன்னெடுஞ் சடையிற் றூழ்ந்து புனிதமாந் தீர்த்தக் காசி
நன்னெடு நகர மெய்தி நளிர்புனற் கங்கை நீந்திக்
கன்னெடு நெறிய வேக காவதங் கடந்த பின்னர்.

(இ-ள்.) அந்தப் பெரியநாட்டினின்று நீங்கி, வெற்றிபொருந்திய இடபத்தை (க்கொடியாக) உயர்த்தியருளிய சிவபெருமானுடைய பொன்னிறம் பொருந்திய நெடிய சடையிற்றங்கி, புனிதமாகிய கங்கையையுடைய காசியென்னும் நல்ல நெடிய நகரத்தையடைந்து, குளிர்ந்த நீரையுடைய அக்கங்கையைத் தாண்டி, கற்கள் நெருங்கிய பெருவழியாகிய அனேக காததூரங் கடந்தபிறகு. எ-று. (கக)

மடங்கன்மா நாகம் யாளி வழங்கலான் மனிதர் செல்லா
விடங்கடந் தாக வைஞ்நூற் றிரட்டியோ சனைத்தா மெல்லைக்
கடங்கெழு குமரி கண்டங் கடந்துமற் றதுபோ லெட்டுத்
தடங்கெழு கண்டங் கொண்ட பாரத வருடந் தள்ளி.

(இ-ள்.) சிங்கமும், பெரிய யானைகளும், யாளிகளும் (இவைபோன்ற மிருகங்களும்) சஞ்சரித்தலால், மானுடர் செல்லக்கூடாத இடங்களைக்கடந்து, ஆக ஆயிரம்யோசனையாகிய அளவையுடைய அருநெறிகள் மிக்க குமரிகண்டத்தைக் கடந்து, அதுபோல விசாலமிக்க எட்டுக்கண்டங்கள்கொண்ட பாரதவருஷத்தினின்றும் நீங்கி.

பாரதவருடமென்பது - இமயமலைக்குத் தெற்கும் தென் சமுத்திரத்திற்கு வடக்குமாக இவ்விரண்டெல்லைக்கும் நடுவேயுள்ளது. சுவாயம்புமனுவின் புத்திரன் பிரியாவிரதன் சத்ததீவுகளையும் அரசுசெய்கையில், தன்புத்திரர் அங்கிதீரன்-மேதாதிவபுட்டு-சோதிட்டு-துதிமான்-அவ்வியன்-சவனனென்னும் எழுவர்க்கும் எழு தீவுகளையும் பாகித்துக்கொடுக்க, அவர்கள் அரசுசெய்கையில், அங்கிதீரன் தனது புத்திரர் பாரதன்-கிம்புருடன்-அரி-கேதுமாலன் - பத்திராசுவன்-இளாவிரதன்-இரவியன்-வமன்-குரு என்னும் ஒன்பதின்மருக்கும் நாவற்றீவை ஒன்பது கண்டமாக்கிப் பாகித்துக் கொடுத்தனன். அவருள், பாரதன் தனது குமரி என்னும் புத்திரனுடன் இந்திரன்-கசேருகன்-தாமிரபன்னன்-கபத்தி-நாகன்-சவுமியன்-காந்தர்வன்-வருண னென்னும்

எண்மர் புதல்வருக்கும் தனது கண்டத்தை ஒன்பது கண்டமாக்கித், தந்தமையால், பாரதவருடமெனப் பெயர் வந்தது. குமரித்தீவு முதலியன கண்டமெனப் பெயர் பெற்றன.

நவகண்டங்கள்—குமரிகண்டம்- இந்திரகண்டம் - சேருககண்டம் - தாமிர கண்டம்-கபத்திக்கண்டம்-நாககண்டம்-சவுமியகண்டம்- காந்திருவகண்டம் - வருண கண்டம் எனப்படும்.

இவற்றின் விரிவு முதலியவற்றைச் சிவதருமோத்தரம் - காந்தம் - கூர்மபுராணத்திலுங் கண்டுகொள்க.

குமரிகண்டம்போ லெட்டுக் கண்டங்கள் என்றதை,

சிவதருமோத்தரம் - கோபுரவியல்.

" இந்திரமே சேருகமே தாமிரமே யெழிற்கபத்தி
சந்துமலி நாகமதே சவுமியமே காந்திருவ
மந்தமலி வாருணமே யெனவெட்டு மதித்திடுக
இந்தவள வெனைநிலத்துங் கிரிவிரீயீ ராயிரமே"—என்பதனுனறிக. (௨௦)

யாவையு மீன்ற டன்னை யீன்றபொன் னியமந் தன்னைத்
தாவியப் புறம்போய்ப் போகந் ததும்புகிம் புருட கண்ட
மேவியங் கதுநீத் தேம வெற்படைந் ததுபின் னுக
வோவியப் புறத்துத் தோன்று மரிவரு டத்தை யுற்று.

(இ-ள்.) (உலகிலுள்ள) எல்லாப்பொருள்களையும் பெற்றருளிய உமாதேவியாரைப்பெற்ற பொன்பொருந்திய இமயமலையைத்தாண்டி அப்பாற் சென்று போகம் மிகுந்த கிம்புருஷ கண்டத்தையடுத்து, அதனைக் கடந்து, ஏமகிரியைச் சார்ந்து, அதுபிற்படக்கழித்து, அதற்கப்புறத்தில்விளங்கும் அரிவருஷகண்டத்தை யடைந்து.

இமயகிரிக்கு வடக்கு கிம்புருடகண்டமும் அதன்வடக்கு ஏமகிரியும் விளங்கும். ஏமகிரிக்கு வடக்கும் நிசதகிரிக்குத் தெற்கும் அரிவருடம் என்க. (௨௧)

உற்றது கழிந்தப் பாற்போய் நிடதவெற் பொழிந்த சம்புப்
பொற்றருக் கனிகால் யாறு போகிளா விரத கண்டத்
துற்றனன் கண்டான் மூன்றா றொருங்கடு ஞான்று கூனி
வெற்றிவெஞ் சிலையாய் நின்ற வெற்பினை மலய வெற்பன்.

(இ-ள்.) பொதியமலைக் கரசராகிய அவ்வுக்கிரகுமார பாண்டியர் (தாம்) பொருந்திய அரிவருடத்தைத்தாண்டி, அப்பாற்போய், நிடதமலையினின்று அகன்று, பொன்னிறமாகிய நாவல்மரத்தின் கனி சிந்துஞ்சாருகிய ஆறுசெல்லும் இளாவிரத கண்டத்தைச்சேர்ந்து, திரிபுரங்களை ஒருசேர எரித்தருளுங் காலத்தில் வளைந்து, வெற்றிபொருந்திய கொடிய வில்லாகநின்ற மகமேருவைக் கண்டனர். எ-று.

அரிவருடம் நிடதகிரிக்குத் தென்பாலுள்ளது. இளாவிரதகண்ட மென்றது மகமேருவின்சாரல். (௨௨)

வெம்படை மறவர் சேனை வெள்ளநீத் தேகித் தென்பாற்
சம்புவின் கனியின் சாறு வலம்படத் தழுவி யோடு
மம்பொனீ ராறு மாற்றி னருகுபொன் மயமாய் நிற்கும்
பைம்புனங் கான நோக்கி வளைந்துதென் பால்வந் தெய்தா.

(இ-ள்.) வெவ்விய ஆயுதங்களை யேந்திய வீரர் சேனுவெள்ளத்தினின்றும் பிரிந்து (தனித்துச்) சென்று, தென்புறத்தில் நின்ற நாவற்கனியின் சாறுனது வலப்

புறப்படத்தழுவி யோடாநின்ற அழகிய பொன்மயமாகிய நீர் நிறைந்த ஆற்றையும், அவ்வாற்றின் சமீபத்திற் பொன்மயமாய் நிற்கும் பசியகொல்லைகளையும், காடுகளையுங் கண்டு, சுற்றிச்சென்று, (அந்தச் சம்புநின்ற) தென்புறம் வந்துசேர்ந்து. எ-று.

இதுமுதல் மூன்றுபாடல்கள் குளகம்.

மேருமலையைச் சுற்றிக்கிழக்குமுதல் வடக்குவரையில் மந்தரம் - கந்தமாதனம் - விபுலம் - பாருசுவவத்திரி என்னும் மலைகள் அதற்கு உறுதியுண்டாக்கிநிற்கும் அவற்றில், முறையே கடம்பு - நாவல் - அரசு - ஆல் என்னும் நான்கு மரங்களும், அருணம் - மானதசரசு - சிதோதம் - மகாமடு என்னும் நான்கு தடாகங்களுமுள. அவற்றுள், கடம்பப்பழச் சாற்றினின்று ஆறுகள்புறப்பட்டுக் கீழ்த்திசை நோக்கியும், அரசமரத்தினின்று பால்முதலியன பஞ்சதாரைகளாகப் பெருக்கெடுத்து மேற்றிசை நோக்கியும், ஆலமரத்தின் கிளைகளினின்று உண்டாகும் பால், தயிர், நெய், தேன் முதலியன பெருகி வடதிசைநோக்கியும், நாவன்மரத்தின் பழச்சாறு பொன்மயமாய்ப் பெருக்கெடுத்து மேருவை வலமாகவந்து அம்மரத்தின் அடியிலுஞ் செல்லுதலால் "தென்பால் சம்புவின்கனி * * * அம்பொனீராறும்" என்றார். (௨௬)

அவ்வரை யரசை நோக்கி வரைகளுக் கரசே யெந்தை
கைவரி சிலையே பாரின் கனைகணே யளவில் வானந்
தைவரு சுடருங் கோளு நாள்களுந் தழுவிச் சூழுந்
தெய்வத வரையே மேலைத் தேவரா லயமே யென்னு.

(இ-ள்.) அந்த மகமேருவுக் கரசாகிய அதிதேவதையைப் பார்த்து, மலைகளுக்கு மன்னனே! என் தந்தையாகிய சிவபெருமான் கையிற்றாங்கிய கட்டமைந்த வில்லே! பூமிக்கோர் பற்றுக்கோடே! வானத்தில் தவழும் இருசுடரும், எண்ணில்லாத (மற்றைக்) கிரகங்களும், நக்ஷத்திரங்களும் தழுவிச்சூழ்ந்து வருந் தெய்வீகம் பொருந்திய மலையே! விண்ணுலகிலுள்ள தேவர்கள் வாசஸ்தலமே! என்று. எ-று.

எல்லாமலைகளிலுஞ் சிறந்த பொன்மலையாக விளங்கலின் "வரைகளுக் கரசே" என்றும், சிவபெருமான் திரிபுரதகனஞ் செய்கையில், இதனையே வில்லாகத் தாங்கினராகலின் "எந்தைகைவரிசிலையே" என்றும், பூமி நிலைதளராதிடை நின்று தாங்கலின் "பாரின்கனைகணே" என்றும், சூரியன் முதலிய நவக்கிரகங்களின் தேர்களைத் துருவன் காற்றென்னுங் கயிற்றிற்பிணித்து மேருமலையை வலம்வர இயக்குதலால் "தழுவித் தைவரு சுடருங் கோளு நாள்களுந் தழுவிச் சூழுந் தெய்வத வரையே" என்றும், இந்திராதி திக்குப்பாலகரும் பிரமாதி திரிமூர்த்திகளும் அதன் கொடுமுடிகளில் வசித்தலால் "மேலைத்தேவராலயமே" என்றுங்கூறினர்.

துருவசக்கரத்தின் சிறப்பை - காசிகண்டம்.

"காற்றெனுங் கயிற்றின் வீக்கியுள் ளொளிய கறங்கென விடையறு துழலு
மாற்றருஞ் சோதி சக்கரந் திரித்து வடவரை முகட்டினுன் றுயோ
டாற்றலி னிருத்தி கற்பமொன் றிறக்கு மமைதியு மியானுமற் றிதனை
யேற்றுயர் கொடியோ னருளினு லடைந்தே னீங்கிது நினக்களித் தனனால்"

என்பதனுனறிக.

மேலைத்தேவராலயம் என்பது, அம்மேருவின் கிழக்குமுதல் தென்கிழக்கிறுவாயுள்ள சற்றுக்கொடுமுடிகளில், இந்திரன்முதல் ஈசானனிறுவாயுள்ள திக்குப் பாலகரெண்மர் முறையே வசிக்கும் அமராவதி - தேஜோவதி - சம்யமனி - கிருஷ்ணங்காரவதி - சுத்தவதி - கெந்தவதி - மகோதயபுரி - எசோவதி என்னும் தேவநக

ரங்கள் எட்டும், அதன் நடுவில் பிரமதேவர் வசிக்கும் மனோவதியும், அதன்மேற்கில் விண்டுவசிக்கும் வைகுண்டமும், வடகிழக்கில் உருத்திரமூர்த்தி வசிக்கும் சோதிட்கமும் இருக்கும் என்பதாம். இதனை,

கந்தபுராணம் - அண்டகோசப்படலம்.

"மேருவரை யதற்குநடுப் பிரமன் மூதூர் மிக்கமனோ வதியதற்கு மேலைத் திக்கில் நாரணன்வாழ் வைகுந்தம் வடகீழ்பாலி ஞதனமர் சோதிட்கந் திசைக ளெட்டுஞ் சீரியவிந் திரன்முதலா மெண்மர் தேயம்" எனவருவதனுனறிக. (உச)

மாணிக்க மிமைக்கும் பூணான் விளித்தலும் வரைக்கு வேந்தன்
பாணித்து வரவு தாழ்ப்பப் பாகசா தனனை வென்ற
ஞணித்தன் சினமு மேரு நகைவரைச் செருக்கு மாறச்
சேணுற்ற சிகரந் தன்னிற் செண்டினு லடித்து நின்றான்.

(இ-ள்.) மாணிக்கங்கள் பிரகாசிக்கும் ஆபரணமணிந்த உக்கிரகுமாரபாண்டியர் அழைத்தலும், அம்மலைக்கதிபன் வருகை தாமதித்ததால், இந்திரனைச் செயித்த உக்கிரகுமாரபாண்டியர் வெட்கமுற்றுத் தமது கோபமும், விளங்கும் அம்மேருமலைக்கரசன் செருக்கும் ஒழியும்படி, ஆகாயத்தை அளாவிய (அம் மகமேருவின்) சிகரத்தைச் செண்டாயுதத்தால் அடித்து நின்றார். எ-று.

பாணித்தல் - பொழுது நீட்டித்தல். (உரு)

அடிந்தலு மசையா மேரு வசைந்துபொற் பந்து போலத்
துடித்தது சிகர பந்தி சுரர்பயில் மாடப் பந்தி
வெடித்தன தருண பானு மண்டலம் விண்டு தூளாய்ப்
படித்தலை தெறித்தா லென்னப் பன்மணி யுதிர்ந்த வன்றே.

(இ-ள்.) (உக்கிரபாண்டியர் செண்டாயுதத்தால்) அடிக்கவும், (எக்காலத்தும்) அசையாத மகமேரு அசைந்து, பொன்னாற் செய்த பந்துபோலத் துடித்தது; சிகரவரிசைகளும், தேவர்கள் வசிக்கும் மாடவரிசைகளுஞ் சிதறின. இளஞ்சூரியமண்டலஞ் சிதறித் தூளாய்ப் பூமியிற் சிந்தியதுபோலப் பல ரத்தினங்கள் சிந்தின. எ-று.

சிகரபந்தி யென்றது - ஆயிரங் கொடுமுடிகள். சுரர்பயில் மாடபந்தி என்றது அக்கொடுமுடிகள்தோறும் வசிக்குந் தேவருடைய நகரங்கள். (உசு)

புடைவரைக் குலங்க ளெட்டும் புறந்தழீஇக் கிடங்குஞ் செம்பொ
னடைகலோர் நான்கு நான்கு கிடங்கரு மலர்ந்த நான்கு
தடமலர்ப் பொழிலு நான்கு தருக்களுஞ் சலித்த வம்மா
வுடையவ னிடையூ றுற்று லடுத்தவர்க் குவகை யுண்டோ.

(இ-ள்.) (அம்மேருமலையின்) பக்கலிலுள்ள அஷ்டபர்வதங்களும் புரந்தழுவிக்கிடக்கும் நான்கு செம்பொன்னாகிய அடைகற்களும், நான்கு கிடங்குகளும், மலர்ந்த பூங்கொத்துக்களையுடைய நான்கு தடாகங்களும், (நான்கு) சோலைகளும், நான்கு விருக்ஷங்களும் அசைந்தன. எஜமானன் துன்பமடைந்தால் அவனை அடுத்தவர்களுக்கு (சிறிதும்) மகிழ்ச்சியுண்டாகுமோ (உண்டாவதில்லை.) எ-று.

மேருவின் புடையுள்ள எட்டு மலைகள்—நிசதம் - ஏமகூடம் - இமயம்-நீலம்-சுவேதம் - சிருங்கம் - கந்தமாதனம் - மாலியவான் என்னுங் கிரிகள். நான்குகிடங்கர்—கிழக்கே சயித்திரக்காமடுவில் தாமரை நிறைந்த தாகம் - மேற்கில் வைப்பிரசநடுவில் செந்தாமரைநிறைந்த விமலோதகம்-தெற்கில் விசித்திரைக்காநடுவில் குமுதோற்பலங்கள் நிறைந்த மானதசரசு - வடக்கில் திருதாக்கியநடுவில் நீலோற்பல நிறைந்த

மனோரதம் என்னும் ஓடைகள். நான்கு பொழில்கள்—கிழக்கில் சயித்திரம் - தெற்கில் விசித்திரா - மேற்கில் வைப்பிரசம்-வடக்கில் திருதாக்கியம் எனப்படும். ஏனைய அடைகள் நான்கு-தருநான்கு-தடம் நான்கு முன்வந்துள்ள விடத்திற்கண்டுகொள்க.

புடைத்தபின் மேருத் தெய்வம் புடைக்குல வரையெட் டென்னப்
படைத்தவெண் டோளு நான்கு முடியுமேற் படுவெண் சோதி
யுடைத்தனிக் குடையுங் கொண்ட வுருவினோ டெழுந்து நாணிக்
கிடைத்தது கருணை வேந்தன் கிளர்சினந் தணிந்து நோக்கா.

(இ-ள்.) அடித்தபிறகு மகமேருவின் அதிதேவதை (தனது) அயலிலுள்ள அஷ்டகுலபர்வதங்கள் போலக்கொண்ட எட்டுப்புயங்களையும், நான்கு சிரங்களையும், மேலே கவிக்கும் வெள்ளொளியுடைய ஒப்பில்லாத குடையையுங்கொண்டவுருவத்தோடெழுந்து நாணமுற்று எதிர்ப்பட்டது. கிருபைபொருந்திய உக்கிரகுமாரபாண்டியர் பொங்கியகோபம் ஆறிப்பார்த்து. எ-று. (உஅ)

இத்தனை வரவு தாழ்த்த தென்னென மேருத் தெய்வம்
வித்தக நம்பி கேட்டி மீனெடுங் கண்ணி யோடும்
பைத்தலை யரவம் பூண்ட பரனையிப் படிவங் கொண்டு
நித்தலும் போகிப் போகி வழிபடு நியமம் பூண்டேன்.

(இ-ள்.) இவ்வளவு பொழுது உன் வருகை தாமதித்தகாரணம் யாது? என வினவ, மேருவின் அதிதேவதை சதுரப்பாடுடைய பாண்டியனே! கேளாய், நெடிய அங்கயற்கண்ணம்மையோடும் படம்பொருந்திய தலையையுடைய சர்ப்பத்தை (ஆபரணமாகப்) பூண்ட சோமசுந்தரப்பெருமானை இவ்வடிவங்கொண்டு நாள்தோறுஞ் சென்று (தவறாமல்) வழிபடும் நியமத்தை மேற்கொண்டிருந்தேன். எ-று. (உகூ)

இன்றுகேட் டிலையோ வையா வேந்திழை யொருத்தி காமந்
துன்றுமா கடலின் மோகச் சுழித்தலைப் பட்டு வெள்ளி
மன்றுளா டியபொற் பாதம் வழிபடன் மறந்து தாழ்ந்து
நின்றுளே னினைய தீங்கி னிமித்தினு லடியும் பட்டேன்.

(இ-ள்.) இன்றையதினம் (நடந்த சங்கதியைக்) கேட்கவில்லையோ, ஐயனே! ஒரு மாதினுடைய காமமாகிய மிக்க பெருங்கடலிலுள்ள மோகமாகிய சுழியில் அகப்பட்டு, வெள்ளியம்பலத்தில் நிருத்தஞ்செய்யும் பொன்போன்ற திருவடிகளை வழிபட்டுப் பணிதல் மறந்து தாமதித்து நின்றேன். (எம்பெருமானது திருவடிக்குப் பிழைசெய்த) இந்தத் தீங்கின் காரணத்தால் (உம்முடைய செண்டாயுதத்தின்) அடியும் பட்டேன். எ-று. (௩0)

திருவடி பிழைத்த தீங்கு தீர்த்தனை யிதனி லையன்
றருவதோ ருறுதி தானுந் தக்கதோர் கைம்மா றென்னால்
வருவது முண்டாங் கொல்லோ மற்றது நிற்க மன்றற்
பருவரை மார்ப வந்த பரிசெண்கொல் பகர்தி யென்ன.

(இ-ள்.) (சோமசுந்தரப்பெருமானது) திருவடிகளுக்கு (அடியேன்) பிழைசெய்த தீங்கினை யொழித்தாய். ஐயனே! இதைக்காட்டிலும் நீ செய்யும் பிரயோசனமும் (அதற்கு) என்னால் பதிலாகச்செய்யத் தக்க ஓர் பிரதியுபகாரமும் பெறுதலுமுளதோ? (இல்லை.) அதுநிற்க. வாசம்பொருந்திய பருத்த மலைபோன்ற மார்பையுடைய பாண்டியனே! இங்கு வந்தகாரணம் யாது? சொல்வாயென்று வினவ. எ-று. (௩க)

மன்னவன் வெறுக்கை வேண்டி வந்தன னென்று ளைய
வுன்னது புலத்தோர்க் கேற்ப வுரைபடு மாற்ற தாய
பொன்னவிர் தேமா நீழற் புதைபடக் கிடக்குஞ் செம்பொ
னென்னவங் கையாற் சுட்டிக் காட்டிய தெரிபொற் குன்றம்.

(இ-ள்.) உக்கிரகுமாரபாண்டியர் பொருள் விரும்பி வந்தேன் என்று கூறினர். ஐயனே! உனது நாட்டிலுள்ளாருக்குத்தக, உரைக்கப்படும் (உயர்ந்த) மாற்றுடைய செம்பொன், பொன்போல விளங்கும் (தளிரையுடைய) மாமரநிழலில், (ஓரறையில் ஓர் பாறையால்) மூடப்பட்டு இருக்காநிற்குமென்று, பிரகாசிக்கின்ற பொன்மலையின் அதிதேவதை தனது அழகிய கைவிரலாற் சுட்டிக்காட்டிற்று. எ-று.

உன்னது புலத்துக்கேற்ப என்றது மாற்றநிகமுள்ள பொன்னும் அதனிடத்துளதாதலின் தென்னாட்டில் வழங்கும் மாற்று எலலையுடைய பொன்னைக்குறித்தது.

தேமா=தித்திப்புமாமரம். (கஉ)

மின்னகு வேலான் முந்நீர் வேலையை வணக்கங் கண்டோன்
பொன்னறை மருங்கிற் போகிப் பொத்திய பாறை நீக்கித்
தன்னவா வளவிற் றூய தமனிய முகந்து மூடிப்
பின்னது தன்ன தாகப் பெயரிலச் சினையுந் தீட்டா.

(இ-ள்.) மின்னல்போல ஒளிவீசும் வேற்படையினால், சமுத்திரத்துக்கிறை வனாகிய வருணனைத் தனது அடிக்கீழ்ப்படுத்திய உக்கிரகுமாரபாண்டியர் பொன் சேமித்துள்ள அறைக்கருகிற் சென்று, (அதனை) மறையவைத்த பாறையை விலக்கித் தமது ஆசையி னளவினதாகிய பொன்னை யெடுத்து, (மீண்டும் அப்பாறையை) மூடி, மிகுந்ததையுந் தம்முடைய பொருளாகத் தமது பெயர்முத்திரையையும் (அப்பாறை மேல்) எழுதி. எ-று.

இதுமுதல் மூன்று பாடல்கள் குளகம். (கக)

மின்றிகழ் மணிப்பூண் மார்பன் மீண்டுதன் றானை யோடுந
தென்றிசை நோக்கிப் பாகன் செலுத்தமான் றடந்தே ரூர்ந்து
பொன்றிகழ் வரையும் போக பூமியும் பிறவு நீத்து
நன்றிகொண் மனிதர் வைப்பி னண்ணுவா னண்ணு மெல்லை,

(இ-ள்.) மின்னலைவீசும் நவரத்தினங்களிழைத்த ஆபரணம்பூண்ட மார்பையுடைய உக்கிரகுமாரபாண்டியர், தமது சேனையோடும் (அவ்விடம்விட்டு) திரும்பித் தென்றிசையைநோக்கிப் பாகன் செலுத்த, குதிரை பூட்டிய பெரிய இரதத்திலேறி, பொன்மலையையும், (அதைச்சூழ்ந்த) போகபூமியையும் பிறநாடுகளையுந் தாண்டி, நன்மைபொருந்திய மானுடர் வசிக்கும் நாடுகளில் வரத்தொடங்கினர். (அப்படி) வரும் பொழுது. எ-று. (கச)

மாத்திமர் விராட மன்னர் மாளவர் தெலுங்க தேயப்
பார்த்திபர் பிறருந் தத்தம் பதிதொறும் வரவு நோக்கித்
தேர்த்திக ழனிகத் தோடுஞ் சென்றெதிர் முகமன் செய்யத்
தார்த்திரு மார்பன் கன்னித் தண்டமிழ் நாடு சார்ந்தான்.

(இ-ள்.) மாத்திமநாட்டரசரும், விராடநாட்டரசரும், மாளவநாட்டரசரும், தெலுங்கநாட்டரசரும், பிறநாட்டரசரும், தங்கள் தங்கள் நாடுகள்தோறும், (தமது) வரவை யெதிர்பார்த்து, தேரோடுகூடி விளங்குஞ் சேனையோடும், எதிர்கொண்டு (கண்டு) உபசாரஞ்செய்ய, (வேப்பமலர்) மாலையணிந்த அழகிய மார்பையுடைய உக்கிர

குமாரபாண்டியர் (அவரவர் உபசாரங்களைப் பெற்று) பாண்டிநாடாகிய தமிழ்நாட்டையடைந்தார். எ-று. (ருரு)

கன்னிப்பொன் னெயில்சூழ் செம்பொற் கடிநகர்க் கணிய னாகிப்
பொன்னிற்செய் திழைத்த நீள்கோ புரத்தினைக் கண்டு தாழ
வுன்னித்தே ரிழிந்தெட் டோடைந் துறுப்பினாற் பணிந்தெ ழுந்து
வன்னிச்செஞ் சுடர்க்க ணெற்றி மன்னவன் மதுரை சார்ந்தான்.

(இ-ள்.) அழியாத பொன்னாற்செய்த செம்பொனிறைந்த மதில்சூழ்ந்த காவல்பூண்ட மதுராபுரிக்குச் சமீபித்தவராகி, பொன்னாற் செய்து (இரத்தினங்கள்) இழைத்த நெடிய கோபுரத்தைத் தரிசித்துப் பணியக்கருதி, (தமது) தேரினின்றும் இழிந்து, அஷ்டாங்க பஞ்சாங்க நமஸ்காரங்கள் செய்தெழுந்து, சிவபெருமான் நெற்றியிலுள்ள அக்கினிக்கண்ணிற் சனித்த உக்கிரகுமாரபாண்டியர் மதுரைப்பதியினையடைந்தனர். எ-று.

நீள்கோபுரத்தினைக்கண்டுதொழ என்றது அது தூலலிங்கமாதலி னென்க.
அஷ்டாங்க பஞ்சாங்க நமஸ்காரங்கள் முன் விளக்கப்பட்டுள்ளன. (ருசு)

அறத்துறை யந்த ணாளர் துறந்தவ ரரன்றாள் பற்றிப்
புறத்துறை யகன்ற சைவ பூதியர் புனிதன் கோயிற்
றிறத்துறை யகத்துத் தொண்டர் திரண்டெதிர் கொள்ள முத்தி
னிறத்துறை வைகை நீத்து நெடுமதில் வாயில் புக்கான்.

(இ-ள்.) அறத்தாறு ஒழுகும் அந்தணர்களும், துறவிகளும், சிவபிரான் திருவடியைப் (புணையாக) பற்றி, புறச்சமயங்களாகிய கடலைக் கடந்த சைவச்செல்வர்களும், சோமசுந்தரப்பெருமான் திருக்கோயிலில் நிகழும் நித்தியநைமித்தியங்களை நடத்தும் அகத்தொண்டர்களாகிய ஆதிசைவர்களும், ஒருசேரத் திரண்டு எதிர்கொள்ள, விளக்கமாகிய முத்துகள்பொருந்திய நீர்த்துறையையுடைய வைகையாற்றைக்கடந்து, உயர்ந்துள்ள மதிலின்வாயிலிற் புகுந்தார். எ-று. (ருஎ)

கொங்கலர் கோதை மாதர் குங்குமம் பனிப்பச் சிந்து
மங்கல மறுகி னேகி மறைகள்சூழ் கோயி லெய்தித்
தங்கணா யகனைச் சூழ்ந்து தாழ்ந்தெழுந் தேத்திப் போந்து
திங்களூர் குடுமிச் செல்வத் திருமணிக் கோயில் புக்கான்.

(இ-ள்.) வாசம்பரந்த கூந்தலையுடைய மாதர்கள் குங்குமநீரைத் தண்மை செய்யத் தெளிக்கும் மங்கலகரமாகிய வீதியிற் சென்று, வேதகோஷம் புடைசூழ்ந்த திருக்கோயிலையடைந்து, தமது தலைவராகிய சோமசுந்தரப்பெருமானைப் பிரதக்ஷிணஞ் செய்து பணிந்து, எழுந்து துதித்துத் திரும்பி, சந்திரன்தவழுஞ் சிகரத்தையுடைய செல்வம் பொருந்திய அழகிய இரத்தினம்பதித்த (தமது) கோயிலையடைந்தனர். எ-று.

பொன்மலைக் கடவு ளீந்த புண்ணிய நிதியை யந்த
நன்மலை மானக் கூப்பி நல்கிப்பல் குடியு மோம்பித்
தென்மலைக் கிழவன் றெய்வந் தென்புல வாண ரொக்க
றன்மனை விருந்து காத்துத் தருக்கினா னிருக்கு நாளில்.

(இ-ள்.) பொதியமலைக்குரிய உக்கிரகுமாரபாண்டியர் மகமேருவின் அதிதேவதை கொடுத்த புண்ணியவடிவமாகிய பொருளை, அந்த நல்ல பொன்மலையைப் போலக் குவித்து, (யாசித்தவருக்கு) கொடுத்து பல குடிகளையும் பாதுகாத்துத் தெய்வத்தையும், தென்புலத்தாரையும், உறவினரையும், தமது மனைக்குவந்த விருந்தினரையும் ஓம்பி, மகிழ்ச்சியுற்றிருக்குங்காலத்தில். எ-று. (ருஅ)

ஐவினை நடத்து மீச னாணையா னடக்குங் கோளுஞ்
செய்வினைத் திரிவு மாறத் தென்னனா டெங்கு மாரி
பெய்வினை யுடைய தாகிப் பெருவளம் பகிர்ந்து நல்க
வுய்வினை யுடைய வாகி யுயிரெலாந் தழைத்த வன்றே.

(இ-ள்.) (ஆன்மாக்கள் காரணமாக) பஞ்சகிருத்தியங்களை யியற்றுஞ் சிவ பெருமானுடைய கட்டளையால் நடக்குங் கோள்களும், மழைவளங்குறையுஞ் செய்கையினின்று திரும்பப் பாண்டிநாடு முழுவதும், மழை பெய்யுந் தொழிலுடையதாகி, பெரிய வளங்களை (உயிர்களுக்கு)ப்பாகித்துக்கொடுக்க, எல்லா உயிர்களும் (வருந்தும் பசியை நீங்கி) பிழைக்குஞ்செயலை யுடையனவாகிப் பெருகின. எ-று. (௪0)

எழுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

புவனியிம் முறையாற் புரந்தளித் தாரம் பூண்டபாண் டியன்றிரு மகனுக்
கவனியே ழறிய வீரபாண் டியனென் றணிமுடி கவித்தர சளித்து
நவநிர திசய பூரண வின்ப ஞானநோக் கருளிய மதுரைச்
சிவனடி நிழலிற் பிளப்பறப் பழைய தேசொடு நிறைந்துவீற் றிருந்தான்.

(இ-ள்.) உக்கிரகுமாரபாண்டியர் பூலோகத்தை யிவ்வகையாகப் பாதுகாத்து, ஏழுலகத்தாரும் அறிய (தமது) செல்வப்புத்திரனுக்கு வீரபாண்டியனென்றுபெயரிட்டு, அழகிய முடிசூட்டி அரசுரிமை கொடுத்து, புதிய நிரதிசயமாகிய நிறைந்த ஆனந்தத்தைக் கொடுத்தருளும் ஞானநோக்கத்தை அடியார்களுக்கு அருள்புரியும் மதுராபுரியிலெழுந்தருளிய சோமசுந்தரப்பெருமானுடைய திருவடி நீழலில், வேறுபாடு நீங்க, பழமையாகிய தேசசோடு கலந்து, நிறைந்து வீற்றிருந்தனர். எ-று.

ஞானநோக்கருளிய என்பதற்கு, செந்தழனாட்டமீன்ற செல்வன் என முன் படலத்திற் கூறியிருத்தலால், ஞானநோக்குப்பாசத்தை யழிக்கும் ஒற்றுமைபற்றி எல்லாவற்றையும் அழிக்கும் நுதற்கண் எனப் பொருள்கொண்டு, நெற்றிக்கண்ணால் தம்மையருளிய எனினும் அமையும். (௪௧)

மேருவைச்செண்டாலடித்தபடல முற்றிற்று.

ஆ திருவிருத்தம் - ௧௧௫௨.

---

பதினாறுவது

# வேதத்துக்குப் பொருளருளிச்செய்த படலம்.

---

எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

உலம்பொரு தடந்தோ ளுக்கிரச் செழிய னுயரிய மேருமால் வரையைப், பொலம்புரி செண்டாற் புடைத்துவைப் பெடுத்துப் போந்திரு ளடைந்தவா புகன்றாம், வலம்படு திணிதோள் வீரபாண் டியன்கோல் வழங்குநாண் மதுரையெம் பெருமான், புலம்பொரு முனிவர் தேறநால் வேதப் பொருளுணர்த் தியதிறம் புகல்வாம்.

(இ-ள்.) கல்போன்ற பெரிய புயத்தையுடைய உக்கிரகுமார பாண்டியர் உயர்ந்த பெரிய மேருமலையை அழகிய செண்டாயுதத்தால் அடித்து, (சேம) நிதியை யெடுத்து (அங்கிருந்து) வந்து (சோமசுந்தரக்கடவுள்) திருவருளையடைந்த திருவிளை



வேதத்துக்குப்பொருளருளிச்செய்தபடலம்.

గు.వె.వెంగ్కలరాయరాజువ్రాశింది.

யாடலைக் கூறினோம். வெற்றிபொருந்திய திண்ணிய தோளையுடைய வீரபாண்டியன் செங்கோல்செலுத்துங்காலத்தில், மதுரையிலெழுந்தருளிய எமது சோமசுந்தரப்பெருமான் இந்திரியங்களை ஜெயித்த (கண்ணுவர் முதலிய) முனிவர்கள் தெளியும்படி நான்கு வேதங்களின் பொருள்களை (ஐயந்திரிபற) உணர்த்திய திருவிளையாடலை (யாம் இனி) யெடுத்துக்கூறுவோம். எ-று. (௧)

ஐம்பெரும் பூத நிலைதிரிந் திரோ ழடுக்கிய வுலகொடு மயன்மா
லும்பர்வான் பதமு முதித்தவா றொடுங்க வுருத்ததோ ரூழிவந் தெய்தச்
செம்பொருண் மறையு மொடுங்கிய வழிநாட் செஞ்சுடர்க் கடவுண்முன் மல
வம்பவிழ் கமல மெனவரன் றிருமுன் மலர்ந்ததா லகிலமு மாதோ. [ரும்

(இ-ள்.) பெரிய ஐம்பூதங்களுந் தத்தம் நிலைதிரிதலால், பதினான்குலோகங்களும், (அவற்றுளடங்கிய) பிரமதேவர் - திருமால் - இந்திரன் முதலிய (இவர்களது) பெரிய பதவிகளுந் தோன்றியபடியே லயமடைய, ஒரூழிக்காலங் கோபித்து வந்தடைய, வேதங்களும் ஒடுங்கின. பின்னாளில், செவ்விய கிரணங்களுடைய சூரியன் சந்நிதியில் மலரும் வாசனை பொருந்திய தாமரைமலர்போலச் சிவபெருமான் சந்நிதியில் ஒடுங்கிய யாவுந் தோன்றின. எ-று. (௨)

பண்டுபோற் பின்னு முத்தொழி னடத்தப் பராபரச் சுடர்திரு வுள்ளங்
கொண்டுபோர்த் திகிரி வலவனைத் தரவிக் குரிசிறன் னுபிமுண் டகத்தில்
வண்டுபோற் பிரம னுதித்துமூ வுலகும் வரன்முறை படைக்குநா ணஞ்ச
முண்டுபோற் றியவா னவர்க்குயி ரளித்த வும்பர்நா யகன்றிரு வாக்கில்.

(இ-ள்.) முன்போலப் பின்னரும் (சிருட்டி முதலிய) முத்தொழில்களையும் நடத்தச் சிவபெருமான் திருவுள்ளங்கொண்டு, போர்புரியுஞ் சக்கரப்படை தாங்கிய திருமாலைத்தர, அத்திருமாலினுடைய உந்திக்கமலத்தில், பிரமதேவர் வண்டுபோலத் தோன்றி, திரிலோகங்களையும் முறைப்படி சிருஷ்டிக்குங்காலத்தில், ஆலாலவிஷத்தையுண்டு (தம்மைத்) துதித்த தேவர்களுக்கு உயிர்கொடுத்தருளிய மஹா தேவரது திருவாக்கில். எ-று. (௩)

பிரணவ முதித்த ததனிடை வேதம் பிறந்தன நைமிசா ரணியத்
தருணிறை முனிவர் கண்ணுவர் கருக்க ராதியோ ரதிகரித் தவற்றின்
பொருணிலை தெரியா துள்ளமு முகமும் புலர்ந்தன ரிருப்பவப் போதத்
திருண்மல வலிவென் றவரர பத்த னென்றொரு வேதியன் வந்தான்.

(இ-ள்.) பிரணவம் பிறந்தது. அப்பிரணவத்தினிடத்தில் வேதங்கள் பிறந்தன. நைமிசாரணியத்தில் வசிக்கும் அருள் நிறைந்த முனிவர்களாகிய கண்ணுவர் - கருக்கர் முதலானவர்கள் நெருங்கி அவற்றின் (உட்கிடையாயுள்ள) பொருள்நிலையுணராமல், மனமும் முகமும் வாடினவர்களாயிருக்க, அப்பொழுது ஆணவமலத்தின் வலியை ஜெயித்த அரபத்தர் என்னும் பெயரையுடைய ஒரு முனிவர் வந்தார். எ-று.

வந்தவே தியனை யிருந்தவே தியர்கள் வரவெதிர்ந் திறைஞ்சிவே றிருக்கை
தந்தவே லையிலம் மறையவன் முனிவர் தமைமுக நோக்கியீ துரைப்பான்
பந்தவே தனைசா லவாவெறுப் பிகந்த பண்பின ராயினீர் நீவிர்
சிந்தைவே றாகி முகம்புலர்ந் திருக்குஞ் செய்தியா தெனவவர் சொல்வார்.

(இ-ள்.) வந்த முனிவரை அங்கிருந்த முனிவர்கள் அவர் வருகையை யெதிர்கொண்டு பணிந்து, வேறு ஆசனங் கொடுத்தகாலத்தில், அவ்வரபத்தர் மற்றைய முனிவர்கள் முகத்தைப் பார்த்து, இவ்வாறு சொல்லுகின்றார். நீங்கள் பாசபந்தத்தில் மிகுந்த விருப்பு வெறுப்புகளினின்று நீங்கிய தன்மையுடையவராயினீர். (இப்பொ

மூது) மனம் வேறுபட்டு, முகம் வாடியிருக்குங்காரணம் யாது? என வினவ, அம்முனி வர்கள் சொல்லுகின்றார்கள். எ-று. (௫)

மருட்படு மாயை கழிந்தவன் மொழிந்த மறைபயின் றுரைசெய்தே சிகனற்
றிருட்படு மனத்தே மிருத்துமா லைய யாதுசூ ழிதற்கெனக் கேட்ட
தெருட்படு மனத்தோன் செப்புவான் வேதஞ் செப்பிய சிவபரஞ் சுடரோ
யருட்படி வெடுத்துப் பொருளையு முணர்த்து மல்லது சூழ்ச்சியா தறைவீர்.

(இ-ள்.) ஐயனே! மயக்கம் பொருந்திய மாயாசம்பந்தத்தை இயற்கையாக வே நீங்கிய சிவபிரான் திருவாய்மலர்ந்தருளிய வேதங்களைப் பழகி, (அவற்றின்) உட் கிடையை உணர்த்தும் ஆசிரியர் கிடைக்காமல், அஞ்ஞானமிக்க மனமுடையோமா யிருக்கின்றோம். இதற்கு யாதுயோசனை? என்று வினவ (அதனை)க் கேட்ட ஞானம் பொருந்திய மனத்தையுடைய அரபத்தர் கூறுகின்றார். அவ்வேதங்களையருளிச்செய்த பரஞ்சுடராகிய அச்சிவபெருமானே அருள்வடிவேற்று வந்து, அவற்றின் உட்பொரு ளையும் உணர்த்துவான். (இதுவேயன்றி) வேறு யோசனை யாது சொல்வீர்? (என்று மேலுங் கூறுகின்றார்). எ-று. (௬)

பண்ணிய தவத்தா லன்றியா தானும் படுபொருள் பிறிதிலை தவமும்
புண்ணிய தலத்தி னல்லது பலியா புண்ணிய தலத்தினும் விழுப்ப
நண்ணிய சைவ தலத்தினி லியற்றி னல்குமச் சிவதலங் களினு
மெண்ணிய வதிக தலத்தினி லியற்றி னிருந்தவ மெளிதுடன் பயக்கும்.

(இ-ள்.) செய்யுந்தவத்தாலல்லாமல் வேறொன்றினாலுங் கைகூடும் பயன் வேறு இல்லை; அத்தவங்களும் புண்ணியக்ஷேத்திரங்களிற் செய்தாலன்றிக் கைவரா. அப்புண்ணியக்ஷேத்திரங்களிலும் மேன்மை பொருந்திய சிவக்ஷேத்திரங்களிற் செய் தால், அது (விரைவில்) கைகூடும். அந்தச் சிவக்ஷேத்திரங்களிலும் நன்கு மதிக்கப் பட்ட சிவக்ஷேத்திரத்திற் செய்தால் அப்பெரிய தவப்பயன் எளிதில் விரைவாகக் கைகூடும். எ-று. (எ)

அத்தகு தலமற் றியாதெனி னுலக மகிலமுந் தன்னுடம் பான
வித்தகன் சென்னிப் பன்னிரு விரன்மேல் விளங்கிய தலமது சீவன்
முத்தரா யெண்ணில் வானவர் முனிவோர் முயன்றுமா தவப்பய னடைந்து
சித்தமா சகன்று வதிவதென் றறநூல் செப்பிய மதுரையந் நகரில்.

(இ-ள்.) அந்த மேம்பட்ட சிவக்ஷேத்திரம் யாதென்று வினவில், எல்லாஉல கங்களுந் தனது தேகமாகவுள்ள விராட்புருடனுடைய சிரத்திற்குப் பன்னிரண்டங் குல அளவின்மேல் விளங்கிய தலமாயுள்ளது. என்றும் சீவன்முத்தராய்க் கணக்கில் லாத தேவர்களும் முனிவர்களும் பெருந்தவஞ் செய்து, அத் தவப்பயனைப் பெற்று மனக்குற்றமொழிந்து வசிப்பதாயுள்ளது என்று, தர்மநூல்கள் முறையிடும் மதுரைப் பதியாம். அம் மதுரைநகரத்தில். எ-று. (அ)

தெளிதரு விசும்பி னிழிந்ததோர் விமான சிகாமணி யருகுதென் மருங்கின்
முளிதரு பரானை வடநிழல் பிரியா முழுமுதல் வழிபடு மறவோர்க்
களிதரு கருணை முகமலர்ந் தளவா வருங்கலை யனைத்தையுந் தெளிவித்
தொளிதரு மனைய மூர்த்தியே நுங்கட் கோதிய மறைப்பொரு ளுணர்த்தும்.

(இ-ள்.) ஒளிமிக்க தேவலோகத்தினின்றும் இழிந்து வந்த ஒப்பில்லாத விமானங்களுக்கெல்லாஞ் சிகாமணியாகிய இந்திர விமானத்திற்கருகே தென்பக்க லில், உலர்ந்த (பொருக்குள்ள) பருத்த அரையையுடைய கல்லாலின் நீழலினின்று பிரியாதமுழுமுதற்பொருளாகிய தக்ஷிணமூர்த்தி, (தம்மை) வழிபாடு செய்யும் (ஜனகர்

முதலிய) முனிவர்களுக்கு அன்பும் அருளும் மிக்கமுகமலர்ச்சிசெய்து அளவில்லாத அருங்கலைகளெல்லாவற்றையுந் தெளியச்செய்து விளங்குவர். அந்த மூர்த்தியே (தாம்) திருவாய்மலர்ந்தருளிய வேதத்தின் உட்பொருளை யுங்களுக்குணர்த்துவார். எ-று. (க)

அங்கவன் றிருமு னருந்தவ விரத மாற்றுவான் செல்லுமி னெனவப்
புங்கவ னருள்போல் வந்தமா தவன்பின் புனிதமா முனிவரு மங்கை
பங்கவன் மதுரைப் பதிபுகுந் தம்பொற் பன்மணிக் கோயில்புக் காழிச்
சங்கவன் கைபோல் வளைசெறி செழும்பொற் றாமரைத் தடாகநீ ராடி.

(இ-ள்.) அம்மதுரைப்பதியில் (உள்ள) தக்ஷிணாமூர்த்தி சந்நிதியில், செய்தற்கரிய தவத்தைச் செய்யச்செல்லுங்கள் என்று கூற, அத்தக்ஷிணாமூர்த்தியின் திருவருள்போலவந்துதவிய அரபத்தமுனிவர் பின்பு, களங்கமில்லாத (கண்ணுவர் முதலிய) முனிசிரேஷ்டர்களும், அங்கயற்கண்ணம்மையாரை வாமபாகத்திலுடைய சோமசுந்தரப்பெருமான் வீற்றிருக்கும் மதுரைப்பதி யடைந்து அழகிய பொன்னாலாகிய பல ரத்தினங்களழுத்திய திருக்கோயிலுட்சென்று, சக்கரத்தையும் சங்கையுந் தாங்கிய திருமாலினுடைய கையைப்போலச் சங்கங்கள் வசிக்கின்ற அழகிய பொற்றாமரைத் தீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்து. எ-று.

கரைகடந் துள்ளங் கடந்தவன் புந்தக் கடிதுபோய் நான்கிரு வெள்ளி
வரைகடம் பிடரிற் கிடந்ததோர் மேரு வரைபுரை விமானமேற் காணு
வுரைகடம் பொருளைக் கண்களாற் கண்டாங் கும்பர்தம் பிரானைநேர் கண்டு
திரைகடந் திடும்பே ரின்பவா ரியினுஞ் சேணிலத் திலும்விழுந் தெழுந்தார்.

(இ-ள்.) அளவுகடந்து இதயத்தை விழுங்கியெழுந்த அன்பானது (தம்மை) செலுத்தவிரைவிற் சென்று, எட்டு வெள்ளிமலைகளின் பிடரின்மேலிருந்த ஒருமேருமலையையொத்த (எட்டு வெள்ளையானைகள் பிடரிற் சுமந்தபொன்) விமானத்தின்மேல் (தமது அகக்கண்களால்) கண்டறியாத வேதவாக்கியப் பொருளை (புறக்) கண்களாற் கண்டார்போல, தேவதேவராகிய சோமசுந்தரப்பெருமானை நேரோதரிசித்து, அலையொழிந்த பேரின்ப சாகரத்திலும், பரந்தபூமியிலும் விழுந்தெழுந்தார்கள். எ-று.

கடலுக்கும் பேரின்பக்கடலுக்கும் வேற்றுமை யுளதாகலின் "திரைகடந் திடும் பேரின்பவாரி" என அடைகொடுத்துக்கூறினர். (கக)

கைதலை முகிழ்த்துக் கரசர ணங்கள் கம்பிதஞ் செய்துகண் ணருவி
பெய்தலை வெள்ளத் தாழ்ந்துவாய் குழறிப் பிரமன்மா லின்னமுங் தேரு
மைதழை கண்ட வெள்ளிமன் றுடும் வானவர் நாயக வானோ
ருய்தர விடமுண் டமுதருள் புரிந்த வுத்தம போற்றியென் றேத்தா.

(இ-ள்.) கைகளைச் சிரமேற்குவித்து, அக்கைகளுங் கால்களுங் கம்பித்துக் கண்களில் ஆனந்தபாட்பஞ் சொரிந்து, அலைக்கும் (அவ்வானந்த) வெள்ளத்தில் அழுந்தி மொழிதமொறி, பிரமதேவருந் திருமாலும் இன்னமுங் கண்டறியாத கருமைமிகுந்த ஸ்ரீகண்டத்தையுடையவரோ! வெள்ளியம்பலத்தில்நிருத்தஞ்செய்யுந் தேவநாயகரோ! தேவர்கள் உஜ்ஜீவிக்க ஆலாலவிடத்தைப் புசித்து (அவர்களுக்கு) அமுதத்தை உதவியருளிய உத்தமரே! காத்தருளுக என்று துதித்து. எ-று. (கஉ)

மறைபொருள் காணு துள்ளமா ழுழந்து வாடிய வெமக்குநீ யேயந்
நிறைபொரு ளாகி நின்றனை யதற்கு நீயலாற் பொருள்பிறி தியாதென்
றிறைவனை யிறைவன் பங்கிலங் கயற்க ணிறைவியை யிம்முறை யேத்தி
முறைவலஞ் செய்து வடநிழ லமர்ந்த மூர்த்திமுன் னெய்தினர் முனிவோர்

(இ-ள்.) (கண்ணுவர் முதலிய) முனிவர்கள், வேதத்தின் பொருளை யுணராமல் மனமயங்கி வாடிய எங்களுக்குத் தேவரீரோ அம்மறைகளின் நிறைந்த பொருளாய் நின்றீர். அம்மறைகளுக்குத் தேவரீரையன்றிப் பொருள் பிறிது யாதுளது ? (இல்லை) என்று, இறைவராகியசோமசுந்தரப்பெருமானைத் (துதித்து,) அப்பெருமானதுவாமபாகத்திலமர்ந்த அங்கயற்கண்ணம்மையாகிய பெருமாட்டியையும் அம்முறையே துதித்து (பணிந்து) முறைப்படி பிரதக்ஷிணஞ் செய்து, கல்லாலவிருக்ஷத்தினீழலில் எழுந்தருளிய தக்ஷிணாமூர்த்தி சந்நிதியில் அடைந்தார்கள். எ-று. (௧௬)

சீதளப் பளிக்கு மேனியும் பளிக்குச் செழுமலை பதித்தநதுப் பன்ன
பாதமுஞ் செவ்வாய் மலருமுக் கண்ணும் பங்கயச் செங்கர நான்கும்
வேதபுத் தகமு மமுதகும் பமுந்தன் விழிமணி வடமுமெய்ஞ் ஞான [த்தா.
போதமுத் திரையுந் தரித்ததோர் தனிமைப் போதன்முன் றாழ்ந்தெழுந் தே

(இ-ள்.) தண்ணிய பளிங்கு (மலை) போன்ற (வெள்ளிய) திருமேனியையும், ஒளி நிறைந்த அப்பளிங்குமலையிற் பதித்த பவளம்போன்ற பாதங்களையும், செவந்த திருவாயாகிய தாமரையையும், திரிநேத்திரங்களையும், தாமரைமலர்போன்ற செவ்விய திருக்கரங்கள் நான்கையும், ஞானபுத்தகத்தையும், அமுதகலசத்தையும், தன் கண்மணியாகிய ருத்திராக்கவடத்தையும், உண்மைஞானப்பயனைத் விளக்கியருளுஞ் சின்முத்திரையையுந் தரித்தருளிய ஒப்பில்லாத தக்ஷிணாமூர்த்தியினுடைய சந்நிதியிலே வணங்கி யெழுந்து துதித்து. எ-று.

திருக்கரங்கள் நான்கில் வலப்பால் மேற்றிருக்கரத்தில் ருத்திராக்க மாலையுங் கீழ்த்திருக்கரத்திற் சின்முத்திரையும், இடப்பால் மேற்றிருக்கரத்தில் அமுர்தகலசமுங் கீழ்த்திருக்கரத்தில் வேதபுத்தகமுந் தாங்கியிருந்தனவென்க. சித் + முத்திரை =சின்முத்திரை. சித் - ஞானம். இது மூன்று விரல்களை அகற்றி இருவிரல்களைச் சேர நிறுத்துவது. இதனால் மும்மலங்களும் அற்றவிடத்து ஜீவத்துவமும் ஈசுரத்துவமுங் கலக்கு முறை காட்டிய குறி யென ஞானநூல்கள் கூறும். விழிமணிவடம் என்பது ருத்திராக்கம். அது சூரியன்வடிவான வலக்கண்பொழிந்த நீரில் பன்னிரண்டு ருத்திராக்ஷங்களும் சந்திரன்வடிவான இடக்கண் பொழிந்த நீரில் பதினாறு ருத்திராக்ஷங்களும் அக்கினிவடிவான நெற்றிக்கண் பொழிந்த நீரில் பத்து ருத்திராக்ஷங்களும் தோன்றினமைபற்றி "தன் விழி மணிவடம்" என்றார்.

அமிருதம் - மிருத்துவை யொழிப்பது. இது தேவர்களால் நரை திரை மூப் பொழியப் போற்றப்படுந் தேவாமிர்தம்போல ஆன்மாக்களின் பிறப்புக்களை நீக்கத் தாங்கிய ஞானாமிர்தகும்பம் என்ப. வேதபுத்தகமென்பதைச் சிவஞானபோதமென்க.

வடநிழ லமர்ந்த மறைமுதன் மேதா மனுவெழுத் திருபது மிரண்டுந்
திடமுற வரபத் தன்றனுற் றெளிந்து தேனிறை மதிமுத லடைவிற்
படுமதி யளவுந் தருப்பண மோமம் பார்ப்பன வுண்டிமுப் போது [ல்.
மடைவுற நுவன்று நோற்குமா தவர்மு னருமறைப் பொருள்வெளி வருமா

(இ-ள்.) கல்லால மரத்தின் நீழலில் எழுந்தருளிய வேத முதல்வராகிய தக்ஷிணாமூர்த்தியின் மேதா - என்னும் மந்திரமாகிய இருபத்திரண்டெழுத்தையும் அரபத்தமுனிவரால் உறுதிபடத்தேர்ந்துணர்ந்து கார்த்திகைமாச பூரணைமுதல் முறையேவரும் அக்கார்த்திகைமாத பூரணைவரையிலும் தர்ப்பணமும் ஓமமும் பிராமண போசனமும் (காலையுச்சிமாலையாகிய) மூன்றுகாலத்திலுங் கிரமப்படிசெய்து, அனுஷ்டித்து நோற்கும்(கண்ணுவர்முதலிய)முனிவர்கள்முன்பு அரிய வேதப்பொருளாக விளங்குந் தக்ஷிணாமூர்த்தி வெளிப்பட்டு வந்தருளுகின்றார். எ-று.

மேதா - என்பது தக்ஷிணாமூர்த்தியின் பிரசாதத்தை அடைதற்குரிய இருபத்திரண்டு எழுத்துகளாலாகிய ஒருமந்திரம். (கரு)

கலிவிருத்தம்.

மானமுனி வோரதி சயிப்பவட நீழன்
மோனவடி வாகிய முதற்குரவ னெண்ணான்
கூனமிலி லக்கண வுறுப்பகவை நாறுன்
கானவொரு காளைமறை யோன்வடிவ மாகி.

(இ-ள்.) பெருமையுடைய அம்முனிவர்கள் அதிசயிக்கும்படி கல்லால விருக்ஷத்தின் நீழலில் மவுனமூர்த்தியாய் எழுந்தருளிய முதற் குரவராகிய தக்ஷிணாமூர்த்தி குற்றமில்லாத முப்பத்திரண்டிலக்கணங்களையும் பொருந்திய அவயவங்களும் பதினாறுவயதுமுள்ள ஒப்பில்லாதகாளைப்பருவமுடையவேதியத்திருக்கோலம்பூண்டு.

முதற் குரவன் என்றது-சைவர்கட்கு உள்ள பல ஆசிரியர்களுக்குந் தொல்லாசிரிய ராதலின் என்க. இதனை,

"திருமாலிந் திரன்பிரம னுபமனியன் றபனனந்தி செவ்வே ளாதி
தருமமுது குரவருக்குந் தமதருளா லாசிரியத் தலைமை நல்கி
வருமெவர்க்கு முதற்குருவாய் மெய்ஞ்ஞான முத்திரைக்கைம் மலரும் வாய்ந்த
உருவழகுங் குறுநகையுங் காட்டியரு டருஞ்சிவனை யுளத்துள் வைப்பாம்"

என்பதனானறிக.

"ஊனமிலிலக்கண வுறுப்பு" என்றது, ஆசிரியன் அங்கஹீனனாகாது பேரழகுடையவனாயிருத்தல் அவனது உத்தமலக்ஷணங்களுள் ஒன்றாதல்பற்றி-இதன் விபரம் சைவசமய நெறியிற்காண்க.

இதுமுதல் எட்டுச் செய்யுள்கள் குளகம். இவற்றால் தக்ஷிணாமூர்த்தியின் வருகை கூறப்பட்டன. (கசு)

நீண்டதிரி புண்டமழ னெற்றிவிழி பொத்தக்
காண்டகைய கண்டிகைவ ளைந்தொழுகு காதிற்
பூண்டகுழை கௌவியபொ லன்செய்பல காசு
மீசண்டவழி ளங்கதிர்சி ரித்திருள்சி தைப்ப.

(இ-ள்.) நீண்ட திரிபுண்டரமானது அக்கினிவடிவாகிய நெற்றிக்கண்ணை மறைக்கவும், காணத்தக்க அழகினையுடைய (கழுத்திலிட்ட) கண்டிகையோடு வளைந்து நீண்ட திருச்செவியில் அணிந்த குண்டலத்தில் அழுத்திய அழகிய பல ரத்தினங்கள் ஆகாயத்திலே தவழும் இளஞ்சூரியனைக்காட்டிலும் ஒளி வீசி இருளைப் போக்கவும். எ-று. (கஎ)

உத்தரிய வெண்படம் வலம்பட வொதுங்க
முத்தவள நூலினொடு முத்தமிடை யிட்டு
வைத்தணியு மக்கவட மாலையெறி வாளாற்
பத்தரை மறைத்தமல பந்தவிருள் சிந்த.

(இ-ள்.) உத்தரியமாகிய வெள்ளிய வஸ்திரமானது வலப்புறமொதுங்கவும், வெள்ளிய முப்புரிநூலாகிய உபவீதத்துடன் முத்துக்களை இடையிட்டுக் கோவை செய்தணிந்த ருத்திராக்கமாலை வீசுங்கிரணத்தால் முனிவர்களை(அநாதியாய்)மறைத்த ஆணவவிருள் சிதறவும். எ-று.

உத்தரியவெண்படம் - பிராமணதேசிகர் தரிக்கவேண்டிய முத்திரைகளில் ஒன்று. உத்தரியம் - மேல் போர்வை. (கஅ)

கண்டிகைதொ டுத்திருக ரத்தினொடு வாகு
தண்டினிடு மாலைவிட வாளரவு தள்ள
வெண்டுகிலி னாவிரி கோவண மருங்கிற்
றண்டரிய பட்டிகைவ ளைந்தொளிதி ழைப்ப.

(இ-ள்.) கண்டிகையாகப் புனைந்து இரண்டு கைகளோடு தண்டினைப்போன்ற புயங்களிலணிந்த ருத்திராக்ஷமாலிகை விஷத்தையுடைய சர்ப்பமாலிகையைப் போக்கவும், வெள்ளிய வஸ்திரத்தாலாக்கிய கோவணத்தின் பக்கத்தில் நீங்குதலில்லாத பட்டிகை சூழ்ந்து விளங்கவும். எ-று. (௧௯)

வண்டுவரி பாடுவன போலமலர் பாத
புண்டரிக மேனுழல்சி லம்புகள்பு லம்பத்
தொண்டரக மாசிருடு ணித்துமுடி சூட்டு
முண்டகம லர்ப்புறம்வி றற்கழன்மு ழங்க.

(இ-ள்.) வண்டுகள் பண்பாடுவனபோலமர்ந்த பாததாமரைகளின்மீது சூழ்ந்துகிடக்குஞ் சிலம்புகளொலிக்கவும், அடியாருடைய மனக்குற்றம் ஆகிய ஆணவமலத்தைப் போக்கி அவர்கள் முடியிற் சூட்டுந் தாமரைமலர் போன்ற திருவடியின்மேல் வெற்றிபொருந்திய வீரககழல் முழங்கவும். எ-று.

தொண்டரகமாசிருள் துணித்துமுடிசூட்டு முண்டகம் என்றது,
"வீட்டின்ப—
வெள்ளத் தழுத்தி விடுந்தா ளினுமடியார்
உள்ளத்தி னும்பிரியா வொண்சிலம்பும்—கள்ளவினை
வென்று பிறப்பறுக்கச் சாத்தியவீ ரக்கழலும்" என்னும் போற்றிப் பஃறொடையால் அறியற்பாலது.

மனக்குற்றங்கள்—விகற்பம் - சங்கற்பம் - குரோதம் - மோகம் - கொலை - துன்பம் - அகங்காரம் - நகை என்பன. (௨0)

ஏதமில்ப வித்திரம்வ லக்கரனி மைகசுப்
போதம்வளை புத்தகமி டக்கையது பொற்ப
வோதியுண ராதலறி யோலமிடும வேதம்
பாதுகைக ளாகியிரு பாதமலர் சூட.

(இ-ள்.) குற்றமில்லாத பவித்திரம் வலக்கரத்து (விரலில்) விளங்கவும், சிவஞானபோதமெழுதிய புத்தகம் இடக்கரத்தில் விளங்கவும், எடுத்துக்கூறியும் அறியாது கதறிக்கதறி ஓலமிடுகின்ற வேதங்கள் பாதுகைகளாய் இரண்டு பாததாமரைகளைச் சூடவும். எ-று.

சிவஞானபோதம் என்பது போதம் எனத் தலைக்குறைந்து நின்றது. இச்சிவஞானபோதம் ஆதிகாலத்தில் தக்ஷிணாமூர்த்தியால் திருக்கயிலாயத்தில் கல்லாலவிருக்ஷநீழலில் திருநந்திதேவருக்கும், பின்னர் திருநந்திதேவரால் சனற்குமார முனிவருக்கும், சனற்குமாரமுனிவரால் சத்தியஞானதரிசனிகளுக்கும், சத்தியஞானதரிசனிகளால் பரஞ்சோதிமுனிவருக்கும், பின்பு அப்பரஞ்சோதிமுனிவரால் திருவெண்ணைநல்லூரில் மெய்கண்டசிவாசாரியர் என்னும் சுவேதவனப்பெருமாளுக்கும், அம்மெய்கண்டசிவாசாரியரால் திருத்துறையூரில் சகலாமபண்டிதர் என்னும் அருணந்திசிவாசாரியார் முதலானவர்களுக்கும், அவ்வருணந்திசிவாசாரியரால் சிதம்பரத்தில் மறைஞானசம்பந்தசிவாசாரியருக்கும், அம்மறைஞானசம்பந்தசிவாசாரியரால் தில்லை

வாழந்தணர்களில் ஒருவராகிய அத்தலத்தைச் சேர்ந்த உமாபதிசிவாசாரியருக்கும், அவ்வுமாபதிசிவாசாரியரால் அருணமச்சிவாயதேசிகருக்கும், அவ்வருணமச்சிவாயதேசிகரால் திருவாவடுதுறைச்சித்தர் சிவப்பிரகாசதேசிகருக்கும், அச்சித்தர் சிவப்பிரகாச தேசிகரால் நமச்சிவாயமூர்த்திகளுக்கும் உபதேசிக்கப்பட்டது. (உக)

கள்ளமுள ரிக்குண்முரல் காளையறு கால
புள்ளொலியி னுவுமித ழும்புடைபெ யர்ந்து
துள்ளவெழு வேதவொலி தொண்டர்செவி யாற்று
ளுள்ளவயல் புக்குவகை யொண்பயிர்வ ளர்ப்ப.

(இ-ள்.) தேனையுடைய தாமரைமலரில் வசித்து, ஒலிக்கும் ஆறுகால்களையுடைய ஆண்வண்டின் ஒலிபோல, நாவும் இதழும் புடைபெயர்ந்து துள்ள எழும் வேதவோசையானது (கண்ணுவர் முதலிய) முனிவர்களுடைய காதாகிய (கால்)வழியால் (அவர்களுடைய) உள்ளமாகிய கழனியிற்பாய்ந்து, மகிழ்ச்சியாகிய வொள்ளியபயிரை வளர்க்கவும். எ-று. (உஉ)

சீதமணி மூரறிரு வாய்சிறித ரும்ப
மாதவர்கள் காணவெளி வந்துவெளி நின்று
ஞாதமுடி வாயளவி னுண்மறையி னந்தப்
போதவடி வாகிநிறை பூரணபு ராணன்.

(இ-ள்.) நாததத்துவத்தின் இறுதியாய் எண்ணிறந்த (பதம் சாகை முதலியவை யமைந்த) நான்கு வேதங்களின் முடிவில் ஞானகுருவாய் நிறைந்த பழையராகிய தக்ஷிணாமூர்த்தி குளிர்ச்சிபொருந்திய திருவாயில் அழகிய புன்னகை சிறிது அரும்ப அம்முனிவர்கள் காணும்படி யெளிதாக வெளிவந்து நின்றருளினர். எ-று.

பூரணன்-நிறைந்துள்ளவன். புராணன்-பழையவன். எளி-எளிது. (உக)

அறுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

வட்டவாண் மதிகண் டார்க்கு முவாக்கடன் மான மாண்ட
சிட்டரா முனிவர் காளைத் தேசிக வடிவ நோக்கி
யொட்டறு வுவகை வெள்ள மேற்கொள வுருத்த கூற்றை
யட்டதா மரைதஞ் சென்னிக் கணிமல ராகத் தாழ்ந்தார்.

(இ-ள்.) வட்டமாகிய ஒளிபொருந்திய (பூரண) சந்திரனைப்பார்த்து, ஆர்ப்பரிக்கும் பௌர்ணமிக் கடல்போல, மாக்ஷிமைப்பட்ட பெரியோராகிய முனிவர்கள் காளைப்பருவத்தையுடைய தேசிகர் திருவுருவத்தைத் தரிசித்து நீங்கா மகிழ்ச்சியாகிய வெள்ளம் மேலெழுந்தோங்க, கோபித்த இயமனை (மார்க்கண்டேய முனிவருக்காக) உதைத்தருளிய, தாமரை (போன்ற திருவடி)களைத் தமது சிரத்துக்குச் சூடும்மலர்களாக(ச்சூடி)ப் பணிந்தார்கள். எ-று. (உச)

அளவறு கலைகட் கெல்லா முறைவிட மாகி வேத
விளைபொரு ளாகி நின்ற வேதிய சரண மென்ற
வளைவுறு மனத்தி னோைத் தேசிக வள்ள லோக்கிப்
பளகறு தவத்தீர் வேட்கை யாதெனப் பணிந்து சொல்வார்.

(இ-ள்.) எண்ணிறந்த நூல்களுக்கெல்லாம் இருப்பிடமாகியும், வேதங்களில் விளைகின்ற பொருளாகியும் நின்றருளிய வேதியரோ! (நீர் எமக்கு) அடைக்கலம் என்று கூறிய கோட்டம்பொருந்திய மனத்தையுடைய முனிவர்களை அருட்கொடையினராகிய ஆசிரியமூர்த்தமா யெழுந்தருளிய தக்ஷிணாமூர்த்தி திருக்கண்சாத்தி யருளி,

குற்றமற்ற தவத்தையுடைய முனிவர்களே! உங்கள் விருப்பம்யாது? என்றுவினவ, (முனிவர்கள்) பணிந்து விண்ணப்பஞ் செய்வார்கள். எ-று.

அளவறுகலைகட்கெல்லாம் உறைவிடம் - என்றது கலைகள் யாவும் அவரது அருட்சத்தியால் சுத்தமாயையில் தோன்றிய விந்து தத்துவத்தினின்றும் பிறந்தமை நோக்கியென்க.

சிவபெருமான் வேதியனென்றதை-பாராசரபுராணம்.

ப்ராஹ்மணோ பகவாந்ருத்ர: க்ஷத்ரியோ விஷ்ணுருச்யதே ।
ப்ரஹ்மா வைஶ்ய இதி ப்ரோக்தோ வ்ருஷபஸ்து ஶூத்ர: ।
ஸங்கராஸ்த்வித‌ரே தேவா: । என்பதனுனறிக. [தேவரில் உருத்திரன் பிராமணனும் திருமால் க்ஷத்திரியனும் பிரமன் வைசியனும் இந்திரன சூத்திரனும் பிறதேவர் ஸங்கர சாதியுமாவர். என்பது பொருள்.] (௨௫)

அடியரோ முய்பு மாறு முலகெலா மளிக்கு மாறும்
படியிலா வரத்த வேதப் பயனருள் செய்தி யெனனக்
கொடியமா பாசந் தீர்ப்பான் குரவனம் முனிவ ரோடு
முடிவிலா விலிங்க முன்போய் மறைப்பொருண் மொழிவதானுன்.

(இ-ள்.) அடியேங்கள் பிழைக்கும் வண்ணமும், உலகமுழுவதையும் ரக்ஷிக்கும் வண்ணமுமாக, ஒப்பில்லாத சிறப்புடைய வேதங்களின் பொருளை உபதேசித்தருளவேண்டுமென்று விண்ணப்பஞ்செய்ய, (அதற்கு அம்முனிவர்களின்) மிகக்கொடிய பாசங்களை ஒழிக்கக் குருமூர்த்தியாக வெழுந்தருளிய தக்ஷிணுமூர்த்தி அம்முனிவர்களோடும் தனக்கோர் இறுதியில்லாத சொக்கலிங்கப்பெருமான் திருச்சந்நிதிசேர்ந்து வேதங்களின் பொருளைத் திருவாய்மலர்ந்தருள்வாராயினர். எ-று. (௨௬)

அந்தணிர் கேண்மின் சால வருமறைப் பொருள்க ளெல்லா
மந்தணமாகு மிந்த மறைப்பொரு ளறித றுனே
நந்தலில் லாத போகப் பயனுக்கு நலியும் பாச
பந்தனை கழிக்கும் வீட்டின் பயனுக்குங் கருவி யாகும்.

(இ-ள்.) முனிவர்களே! கேளுங்கள், மிகவும் அருமையாகிய வேதங்களின் பொருள் முழுவதும் பெரிதும் ரகசியமாகும்; இந்த ரகசியப்பொருளை அறிதலினுலே, விருத்தியாகின்ற துன்பங்கள் முழுவதும் பொருந்தாது அகலும்; பாசபந்தத் தொடக்கினை (அடியோடு) ஒழிக்கும்; வீடு பேற்றின் பயனுக்கும் சாதனமாகும். எ-று.

சால அருமை - அதிதுல்லபம். அறிதல் என்பது சற்குருவின்பாற் கேட்டு அறிதல். வேதம் கருமகாண்டம் - ஞானகாண்டம் என இருவகைப்படும். கருமகாண்டத்தில் யாகாதிகிருத்தியங்களும், ஞானகாண்டத்தில் நின்மலசொரூபியாகிய சிவத்தினிலக்கணங்களுங் கூறப்படும். கருமகாண்டத்தால் போகமும், ஞானகாண்டத்தால் முத்தியுங் கைகூடும் ஆகலின், "நந்தலில்லாத போகப்பயனுக்கும் * * * வீட்டின் பயனுக்குங் கருவியாகும்" என்றூர். (௨௭)

உத்தம சயம்புக் குள்ளு முத்தம தரமாய் மேலாந்
தத்துவ மாகு மிந்தச் சுந்தர சயம்பு லிங்க
நித்தமாய் மறைகட் கெல்லா நிதானமாம் பொருளா யுண்மைச்
சுத்தவத் துவித மான சுயம்பிர காச மாகும்.

(இ-ள்.) உத்தமச்சுயம்புலிங்கங்களிலும் மேம்பட்ட உத்தம சுயம்புமூர்த்தியாய், மேலான தத்துவாத்துவாவின் வடிவமாகிய இச் சொக்கலிங்கசுயம்புமூர்த்தி

என்றும் அழியாததாய்,வேதங்களுக்கெல்லாம் ஆதிகாரணமாகிய பொருளாய்,உண்மை யாகிய சுத்தாத்துவித சுயம்பிரகாசமாக விளங்கும். எ-று.

மேலாந்தத்துவமாகும் என்றது நாதவிந்துக்களின் பொருளாய் விளங்குத லானும், ஞானமாம்பொருளாய் என்றது பிரணவசொரூபமாய் நிற்றலானும், சுத்த அத்துவிதம் என்றது கண்ணொளியும் சூரியவொளியும் ஒன்றுபட்டுக்காணுந்தன்மை யைப் பிரிக்கக்கூடாததுபோலச் சிவத்தையும் பிரபஞ்சத்தையும் பிரிக்கவொண்ணாது இரண்டற நிற்கும் அத்துவிதமாதலானும்-என்க. (உ௯)

நிறைபரா பரம்விஞ் ஞான நிராமய மென்று நூல்க
ளறைபரம் பிரம மாகு மிதனுரு வாகு மேக
மறையிதன் பொருளே யிந்தச் சுந்தர வடிவா யிங்ங
னுறைசிவ லிங்க மொன்றே யென்பர்நூ லுணர்ந்த நல்லோர்.

(இ-ள்.) (எவ்விடத்தும்) நிறைந்த பராபரமென்றும், விஞ்ஞானமென்றும், நிராமயமென்றும், நூல்கள்கூறும் பரப்பிரம்மமாகிய இந்தச்சிவலிங்கமூர்த்தியின் திரு வுருவமேயொன்றாயுள்ள வேதமாம். நூல்முற்றும் உணர்ந்தபெரியோர் அவ்வேதத் தின்பொருளே இந்தச்சொக்கலிங்கமூர்த்தியாய் இவ்விடத்து எழுந்தருளிய சிவலிங்க மூர்த்தி ஒன்றேயென்று கூறுவர். எ-று.

நிறை - பரிபூரணம். பராபரம் - மேலானதினுக்கும் மேலானது. இது பராற்பரமென்பதன் மரூஉ. விஞ்ஞானம் - பசுபாச ஞானங்களுக்கு மேற்பட்ட ஞானம். நிராமயம் - துன்ப மின்மை. பரம் - பிரமம்; மேலான வியாபகமுடையது. வேதப்பொருளே இச்சிவலிங்கமூர்த்தம் என்பது கருத்து. (௩௧)

ஆகையான் மறையு மொன்றே யருமறைப் பொருளு மொன்றே
சாகையா லனந்த மாகித் தழைத்ததச் சாகை யெல்லா
மோகையா லிவனை யேத்து முலகுத யாதிக் கிந்த
வேகனு ணையினன் மூன்று மூர்த்தியா யிருந்த தன்றே.

(இ-ள்.) ஆனபடியால் வேதமும் ஒன்றே; அவ்வரியவேதார்த்தமும் ஒன்றே; (அவ்வேதம்) சாகா பேதம்பற்றி அனந்தமாய்த் தழைத்துள்ளது; அவ்வேத சாகைக ளெல்லாம் விருப்போடு இம்மூர்த்தியையே துதியா நிற்கும். உலகத் தோற்றமுதலிய கிருத்தியங்களுக்கு இந்தச்சொக்கலிங்கமூர்த்தியே(தனது) அருட்சத்தியால்(பிரமாதி) மூன்று மூர்த்திகளாயிருந்தார். எ-று.

மறை - இது கீழ்வருணத்தவர்களுக்கு மறைவாகப் போற்றப் படுதலின் வந்த காரணப்பெயர். சாகை - கிளை. வேதம் - இவராக்கினையால் அனந்தமாதலை "பின்னிவனருளால் அளவிலவான" என்பதனாலறிக. உலகு உதயம் என்றது உலகத்தோற்றம். ஆதியென்றதனால் முறையே சிருட்டி திதிகளும் விளங்கின. உத யாதிக்கு என்பதிலுள்ள குவ்வுருபு - நிமித்தப்பொருளில்வந்தது. இவ்வுலகு காரண மாகவே அவர்க்கு ஈந்தமையாகலின் "உலகு உதயாதிக்கீந்த" என்றார். ஏகன்-தனக்கு முன்னும் பின்னுமொருவருமின்றித் தனித்து நிற்பவன். இது சிருட்டிக்கு முன்னும் சங்காரத்திற்குப் பின்னுமென்க. ஆணையென்றது அருட்சத்தியை. ஏகனென்பதில் தேற்றேகாரந் தொக்கி நின்றது. ஏகன் மூன்று மூர்த்தியாயிருந்தான் என்பதை,

"அரியாகிக் காப்பா னயனாய்ப் படைப்பான்
அரனா யழிப்பவனு மாவான்"—என்னுங் காரைக்காலம்மையார் அற்புதத்திருவந்தாதியானறிக. (௩௦)

மலர்மக ளுகி மூன்று வையமும் படைத்து மாலா
யலைவற நிறுத்தி முக்க ணுகியா யழித்தும் மூவர்
தலைவனுய்ப் பரமா காச சரீரியாய் முதலீ றின்றித்
தொலைவருஞ் சோதி யாமிச் சுந்தர விலிங்கந் தன்னில்.

(இ-ள்.) தாமரைமலரில் வீற்றிருக்கும் பிரமதேவராய்த் திரிலோகங்களையுஞ் சிருஷ்டித்து, திருமாலாய் (உயிர்களை) வருத்தமறத்தாங்கி (இரக்ஷித்து), திரிநேத்திரங்களையுடைய உருத்திரமூர்த்தியாய்ச்சங்கரித்து, அத்திரிமூர்த்திகளுக்கும் இறைவனுகி, சிதாகாசமே திருமேனியாகவுடையவனுய், ஆதி (மத்தி)யந்தமில்லாது என்றுங் கெடாத தேஜோமயமாகிய இந்தச் சிவலிங்கமூர்த்தத்தில். எ-று.

மூவர்தலைவனுயென்றது மகேசுவரனையென்றும், பரமாகாச சரீரியென்றது சாதாக்கியத் திருமேனியையுடைய சதாசிவமூர்த்தியை யென்றும், சிவலிங்கமூர்த்தம் சாதாக்கிய மூர்த்தமே யாதலின் ஒற்றுமை தோன்றக்கூறியதென்றுங் கொள்க. முதலீறு என்றதால் 'ஒருமொழியொழி தன்னினங்கொளற்குரித்தே' என்ற சூத்திரப்படி மத்தி என வருவிக்கப்பட்டது. சோமசூரியாதி ஒளிகளுக்கெல்லாம் ஒளிகொடுக்கும் பேரொளிப்பிழம்பாதல்பற்றித் "தொலைவருஞ் சோதி" என்ருர். (கூக)

எழுசீர்க்கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

ஆதியி லான்ம தத்துவ மான வலர்மகன் பாகமு நடுவி
னீதியில் விச்சா தத்துவ மானநெடியவன் பாகமு முடிவி
லோதிய சிவதத் துவமென லான வுருத்திர பாகமு முதிக்கும்
பேதியிம் மூன்றி லெண்ணிறத் துவங்கள் பிறக்குமிம் மூன்றினு முறையால்.

(இ-ள்.) முதலில் ஆன்ம தத்துவமாயுள்ள பிரமதேவர் பாகமும், மத்தியில் முறைப்படி வித்தியா தத்துவமாயுள்ள திருமாலின் பாகமும், முடிவில் கூறப்பட்ட சிவதத்துவமென்று சொல்வதாகிய உருத்திரபாகமுந் தோன்றும். இவ்வாறுபேதப்பட்ட இம்மூவகைத் தத்துவங்களில், கணக்கில்லாத தத்துவங்கள் பிறக்கும். இம் மூன்று தத்துவங்களிலும் முறையே. எ-று.

ஆன்மதத்துவம், பூதம் ஐந்தும், புலனைந்தும், ஞானேந்திரியமைந்தும், கன்மேந்திரியமைந்தும், அந்தக்கரண நான்கும் ஆக இருபத்துநான்கு. வித்தியாதத்துவம்—காலம்-நியதி-கலை-வித்தை-இராகம்-புருஷன்-மாயை ஆக ஏழு. சிவதத்துவம் - சுத்தவித்தை - ஈசுவரம் - சாதாக்கியம்-சத்தி-சிவம் ஆக ஐந்து. சிவலிங்கத்தின் திருவுருவில் விருத்தம்-உருத்திரபாகமென்றும், பீடத்தின் அதோபாகத்தின் அடியிலுள்ளமூலைகள்-பிரமபாகம் என்றும், நடுவிலுள்ளமூலைகள்-விஷ்ணுபாகமென்றுங்கொள்க. இவற்றுள் பிரமபாகம்-நபும்ஸகலிங்கமும், விஷ்ணுபாகம்-ஸ்த்ரீலிங்கமும், உருத்திரபாகம்-பும்லிங்கமுமாம். இதன்சோதியுருவமே மகார அகார உகாரமாயிருக்கும். அவற்றுள் அகாரம்-சிவம். உகாரம்-சத்தி. மகாரம்-எனவும், அகாரம்-நாதம், உகாரம்-விந்து, மகாரம்-கலை எனவும், அகாரம் - கண்டம், உகாரம்-கோமுகம், மகாரம் - வட்டம்-எனவும் கூறும்.

ஆன்மதத்துவம்-வித்தியாதத்துவம்-சிவதத்துவம் இம்மூன்றும் பிறக்குமிடமாதலானும், இம்மூன்றுக்கும்-அதிதேவர்களாயிருத்தல்பற்றியும் "மூவர்பாகமும்" என்ருர். இதனல் சர்வபாகமும் ஈசுரபாகமென்றது - யாவருந்தோன்றி லயமடைய வேண்டிய சாதாக்கியமூர்த்தியாகலின் கூறுமேயமையும். (கூஉ)

ஓதரு மகார முகாரமே மகார முதித்திடும் பிரணவம் விந்து
நாதமோ டுதிக்கும் வியத்ததா ரகத்தி னல்லகா யத்திரிமூன்று

பேதமாம் பதத்தாற் பிறக்குமிக் காயத் திரியிரு பேதமாம் பேதம்
யாதெனிற்சமட்டி வியட்டியென் றிரண்டு மேதுவாம் வேட்டவைக்கெல்லாம்.

(இ-ள்.) எடுத்துச் சொல்லுதற்கரிய (அம்மூவகைத் தத்துவத்தி னின்றும் முறையே) அகார - உகார-மகாரங்கள் பிறக்கும். (அவ்வக்கரங்களுடன்) பிரணவ மானது விந்து நாதங்களோடுஞ் சனிக்கும். விளங்குகின்ற (அந்தப்) பிரணவத்தின் (வியாக்கிருதிகளேழுடன்) நன்மைபயக்குங் காயத்திரிமூன்றுபேதமாகிய பதங்களால் தோன்றும். இந்தக்காயத்திரி இரண்டுபேதமாம். (அவற்றுள்) பேதம் யாதென்றால், சமட்டி வியட்டி என்று சொல்லப்பட்ட இவ்விரண்டும் ஆன்மாக்கள் விரும்பின வற்றைப் பெறுதற்குக்காரணங்களாம். எ-று.

"வியத்த தாரகத்தினல்ல காயத்திரிமூன்று பேதமாம் பதத்தாற் பிறக்கும்" என்றதால், இந்த அகாரமுதலிய மூன்றுங்கூடியது வியட்டிப் பிரணவமும், இவற்றுடன்நாதவிந்துக்கள்கூடியது சமஷ்டிப்பிரணவமுமாம். [பிரணவத்தை இடையில்வைத்ததும் இதுபற்றியென்க.] இனிப்பிரிவுற்ற அப்பிரணவத்தில் அகாராதி மூன்றினும் மூன்றுபாதமாகக் காயத்திரி யுதிக்கும் எனக்கொள்க. அம்மூன்றினும் அகாராதிகள் தோன்றப்பெற்ற பிரணவம் அவற்றின் சமூகத்துதித்த விந்து நாதங்களை யுட்கொண்டே பிறக்குமெனினும் பொருந்தும். வியாக்கிருதிகளேழு என்றது காயத்திரிக்குரிய அங்கங்கள். (௯௯)

இன்னவை யிரண்டு மிவனருள் வலியா லீன்றநான் மறையையந் நான்கும்
பின்னிவ னருளா லளவில வான பிரணவ மாதிமந் திரமு
மன்னவா றுன தாரகத் தகார மாதியக்க ரங்களு முதித்த
சொன்னவக் கரத்திற் சிவாகம நூலிச் சுரவர னடுமுகத் துதித்த.

(இ-ள்.) இக்காயத்திரி யிரண்டும் இச்சோமசுந்தரப்பெருமான் திருவருட் சத்தியால் நான்குவேதங்களையுந் தந்தன. பிறகு அந்நான்குவேதங்களும், இப்பெருமானது திருவருளால் அளவிலவாய்விரிந்த பிரணவமாதிய மந்திரங்களும், அவ்வாறு தோன்றிய அப்பிரணவத்தின் கூறுகிய அகாரமுதலிய அக்கரங்களும், இத்தேவாதிபனது ஈசானமுகத்து உதித்தன. கூறிய அம்முகத்திலேயே அவ்வக்கரங்களிலே சிவாகமநூலும் உதித்தன. எ-று.

மந்திரங்கள் எழுகோடி யென்றும், அக்கரங்கள் ஐம்பத்தொன்றென்றுங் கொள்க. தாரகம்=ஆதாரம். இதுவேதமுதலியன தோன்றுதற்கு ஆதாரமாய்நிற்றலின் அக்காரணம்பற்றிப் பிரணவத்தை யுணர்த்தியது.

"நான்மறையையீன்ற" எனப்பொதுப்படக் கூறினும், வியஷ்டி முப்பாதங்களிலிருந்து இருக்குவேத யசுர்வேத சாமவேதங்களும், சமஷ்டியில் அதர்வணவேதமுந் தோன்றினவென்க.

மூன்றும் நடுமுகத்து உதித்தனவெனினும், இவற்றின் மூலமாக வுதித்தன வென்பதுதோன்ற இவ்வாறு கூறினர்.

வேதம் என்பதற்கு ஞானத்தைத் தருவது என்று பொருள்.

ஆகமம் என்பதில் ஆ வென்பது ஞானமும், கவ் வென்பது மோக்ஷமும், மவ் வென்பது மல நாசமுமாம். ஆகவே ஆன்மாக்களுக்கு மலத்தை நாசம்பண்ணி ஞானத்தை உதிப்பித்து மோக்ஷத்தைக் கொடுக்க வல்லது எனப் பொருள்படும். அன்றியும், ஆ வென்பது பாசமும், கவ் வென்பது பசுவும், மவ் வென்பது பதியும்

எனப் பொருள்படுதலின் தன்னைப் பழகினோர்க்குத் திரிபதார்த்த லக்ஷணத்தை யுணர்த்தவல்லது எனவும் பொருள்படும்.

இனி ஆகமங்கள் காமிக முதல் வாதுளம் ஈறாக இருபத்தெட்டு. இவற்றுள் காமிக முதலிய பத்தும் பிரணவர் முதலிய பத்துச் சிவன்களுக்கு அருளிச்செய்யப்பட்டமையின் சிவபேதமென்றும், விசயமுதல் பதினெட்டும் அநாதிருத்திரர்முதலிய பதினெட்டு ருத்திரர்களுக்கு அருளிச்செய்யப்பட்டமையின் ருத்திரபேதமென்றும் சொல்லப்படும்.

சிவபெருமானுக்குக் காமிகம் திருவடிகளும், யோகசம் கணைக்கால்களும், சிந்தியம் திருவடிவிரல்களும், காரணம் கெண்டைக்கால்களும், அசிதம் முழந்தாள்களும், தீப்தம் தொடைகளும், சூக்குமம் குய்யமும், சகச்சிரம் கடிததானமும், அஞ்சுமான் முதுகும், சுப்பிரபேதம் கொப்பூழும், விசயம் உதரமும், நிச்சுவாசம் நாசியும், சுவாயம்புவம் முலைகளும், ஆக்கினேயம் கண்களும், வீரம் கழுத்தும், ரௌரவம் செவிகளும், மகுடம் திருமுடியும், விமலம் கைகளும், சந்திரஞானம் மார்பும், முகவிம்பம் திருமுகமும், புரோற்கீதம் திருநாக்கும், இலளிதம் கபோலங்களும், சித்தம் திருநெற்றியும், சந்தானம் குண்டலமும், சருவோத்தமம் உபவீதமும், பாரமேசுவரம் ஆரமும், கிரணம் இரத்தினாபரணங்களும், வாதுளம் திருபபரிவட்டமும், காலோத்தரம் திருமேற்பூச்சும், ஏனைய உபாகமங்களெல்லாம் பரிமளத்திரவியங்களும் புஷ்பங்களும், சைவசித்தாந்தம் நைவேத்தியமுமெனபர்.

இவ்வாகமங்கள் சித்தாந்தமெனவும், மாந்திரமெனவும், தந்திரமெனவும் பெயர்பெறும். இவ்வாகமங்கள் தனித்தனி ஞானபாதம் யோகபாதம் கிரியாபாதம் சரியாபாதமெனப்படும் நான்கு பாதங்க ளுடையனவாயிருக்கும். இப்பாதங்களுள் ளிற் கூறப்படும் விஷயங்களும் இவை ஒவ்வொன்றிற்குரிய கிரந்த சங்கியையும் இன்னும் இவற்றைப்பற்றிய பல விசேடங்களும் விரிக்கப்பரக்குமாதலின் அதனை யவாவுவோர் காமிகாகமம் தந்திராவதாரப்படலத்தும் பிற ஆகமங்களிலுங் கண்டுணர்க.

கீட்டிசை முகத்தொன் றடுத்தநா லேந்திற் கிளைத்ததா லிருக்கது தென்பா
லீட்டிய விரண்டாம் வேதநூ றாருவோ டெழுந்தது வடதிசை முகத்தி
னீட்டிய சாம மாயிர முகத்தா னிமிர்ந்தது குடதிசை முகத்தி
னூட்டிய வொன்ப துருவொடு கிளைத்து நடந்தது நான்கதா மறையே.

(இ-ள்.) கீழ்த்திசையிலுள்ள (தற்புருஷ) முகத்தில் இருபத்தொருசாகையுடன் இருக்குவேதந்தோன்றியது. தென்றிசையிலுள்ள (அகோர)முகத்தில் நெருங்கிய இரண்டாவது (ஆகிய யசுர்) வேதம் நூற்றொருசாகையுடன் தோன்றியது. வடதிசையிலுள்ள (வாமதேவ)முகத்தில் பெரிய சாமவேதம் ஆயிரஞ்சாகையுடன்தோன்றி யெழுந்தது. மேற்றிசையிலுள்ள (சத்தியோசாத) முகத்தில் (பொருளை) நிலைநிறுத்தி ஒன்பது சாகையுடன் விளங்கி நான்காவது (ஆகிய அதர்வ) வேதந்தோன்றி நடந்தது. எ-று.

"ஒன்றடுத்த" வென்பதனை "நூறுரு" என்ற விடத்துங் கூட்டுக.
இருக்கது நான்கது என்பவற்றில் அது பகுதிப்பொருள் விகுதி.

சதாசிவமூர்த்தியின் முகநிரூபணத்தை,

சைவசமயநெறி.

"ஈசான முச்சிமுக மீசதிசை நோக்கியுறுந்
தேசார் புருடங்கீழ்த் திக்கு.

தெற்கு வடக்குமேற் றிக்குமுறை யானொக்குந்
தக்கவகோ ராதிமுகந் தான்" என்பதனு லறிக.

வேதசிவாகமங்களின் தோற்றம் பலநூல்களிற் பலவாகக் கூறப்படுதல் சிருட்டிபேதமெனக்கொள்க. (௫௫)

அருமறை நால்வே றுகையால் வருண மாச்சிர மங்களு நான்காந்
தருமம்யா காதி கருமமு மறையின் றகைமையிற் றோன்றின மறையுங்
கருமநூன் ஞான நூலென விரண்டாங் கருமநூ லிவனருச் சனைக்கு
வரும்வினை யுணர்த்து ஞானநூ லிவன்றன் வடிவிலா வடிவினை யுணர்த்தும்.

(இ-ள்.) அரியவேதங்கள் நான்கு கூறுகையால் வருணமும் ஆச்சிரமங்களும் நந்நான்குவகைப்படும். தருமவடிவாகியயாகமுதலிய கருமங்களும் வேதத்தின் பொருளின் வழியிற்றோன்றின. வேதமும் கருமநூல் ஞானநூலென்று இருவகைப்படும். (அவற்றுள்) கருமநூலானது இவனருச்சனைக்குரிய தொழில்களை உணர்த்தும். ஞானநூலானது இப்பெருமானுடைய நின்மல சொரூபத்தை உணர்த்தும். எ-று.

கருமநூல், ஞானநூல் என்பவற்றில் நூல் என்றது காண்டத்தை.

வருணம் நான்கு-பிரம க்ஷத்திரிய வைசிய சூத்திரர் எனப்படும். ஆச்சிரமம் நான்கு - பிரமசரியம் கிருகஸ்தம் வானப்பிரஸ்தம் சந்நியாசமெனப்படும். கருமம் எல்லாத்தொழில்கட்கும் பொதுப்பட நின்ற தெனினும், சிவார்ச்சனை சிவத்தைப் பெறுகைக்குரிய தொழிலாகையால் "கருமநூலிவ னருச்சனைக்குவரும் வினையுணர்த்தும்" என்றும், வேதத்தின் பரார்த்தம் சிவத்தைப் பெறுதற்கு அப்பரசிவத்தின் சச்சிதானந்த சொரூபத்தை யுணர்த்துவதால் "ஞானநூலிவன்றன் வடிவிலா வடிவினை யுணர்த்தும்" என்றுங்கூறினர். (௫௬)

முதலுகர் நீராற் சினைகுழைத் தாங்கிம் முழுமுதற் கருத்துநல் லவியின்
பதமிவன் வடிவப் பண்ணவர் பிறர்க்குந் திருத்தியாம் பரனிவன் முகத்தின்
விதமுறு நித்த மாதிமு வினைக்கும் வேண்டியாங் குலகவர் போகங்
கதிபெற வியற்றுஞ் சிவார்ச்சனை வினைக்குங் காரண மிச்சிவ கோசம்.

(இ-ள்.) (மரத்தின்) வேர்நுகரும் நீரினாலே (அம்மரக்)கிளைகள் தளிர்த்தாற் போல, முழுமுதற் கடவுளாகிய இச்சிவலிங்கப் பெருமானுக்கு உண்பிக்கும் நல்ல அவியுணவு இம்மூர்த்தியின் திருவுருவமாகிய இதர தேவர்களுக்குந் திருத்தியாய் முடியும். (ஆதலால்) இறைவனாகிய இப்பெருமான் சந்நிதியில் (செய்யப்படும்) பலவகைப்பட்ட நித்தமுதலிய மூன்றுதொழில்களுக்கும், உலகத்தவர் முத்தியையும் போகத்தையும் பெறச்செய்யுஞ் சிவார்ச்சனைக்கும் இச்சிவலிங்கமூர்த்தியே காரணமாயுள்ளது.

நித்தமாதி மூவினை என்றது நித்தியம் நைமித்தியம் காமியம் எனப்படும். இச்செய்யுளில் ஆதலால் என்றது சொல்லெச்சம்.

வடநூலில் விதந்தோதிய அக்கினிஷ்டோமமுதல் பரிமேத மிறுதியாயுள்ளவையும் நித்தமாதியுளடங்கலின் அவற்றை விதவாது, சிவார்ச்சனையே யெவற்றினுஞ் சிறந்தமையின் அதனைவிதந்து கூறினர். இனி இதனைநோக்காது

"பண்ணவர் பிறர்க்குந் திருத்தியாப் பலன்றரு மிவனே
யிதபரிமேத விறுதிவேள் விகளு மெழின்மறை விரதமு நித்த
முதலிய மும்மை வினைகளு மிவன்றன் முன்செய்பூ சனைகளே யாகும்"

எனப் புத்தப்பாடங்கொண்டாரு முளர். (௫௭)

மறைபல முகங்கொண் டலறிவா யிளைத்து மயங்கவே றகண்டபூ ரணமாய்
நிறைபரம் பிரம மாகுமிக் குறியைக் கருமநன் னெறிவழாப் பூசை
முறையினு ஞான நெறியினிப் பொருளை யருளினுன் முயக்கற முயங்கு [ல்.
மறிவினுந் தெளிவ துமக்குநா முரைத்த வருமறைப் பொருள்பிறர்க் கரிதா

(இ-ள்.) வேதங்கள் பலமுகங்கொண்டு (தேடியு முணராமல்) அலறி வாய் சோர்ந்துமயங்க, (அவற்றிற்கு) வேறாகி அகண்ட பூரணமாய் அமர்ந்த சொரூப சிவம் அதிஷ்டித்துள்ள இந்தச் சிவலிங்கப்பெருமானை, நல்ல கருமகாண்டத்திற்கூறிய விதி வழுவாத பூசைக் கிரமத்தாலும், ஞானகாண்டத்திற் கூறியவழியினின்று இந்தச் சிவலிங்கப்பெருமானை (அவனது) திருவருளினால் இரண்டற வியாபக வியாப்பியமாய் நிற்கும் உணர்வினாலும் அறிதல் (முறையாம்.) உமக்குநாம் உரைத்த வேதத்தின் பொருள் பிறருக்கு (உணர்த்தல்) அரியது. எ-று.

மறை என்றது ஈண்டு வேதாந்தம். பலமுகம் - பலசாகைகள். [அலறுதலாவது—ஏகம் - பிரமம் - அத்துவிதீயம் - சச்சிதானந்தரூபம் - நிஷ்களம் - நிர்மலம் - சுத்தம் - சிவம் - சூக்ஷுமம் - நிரஞ்சனம் - தேவர்களுக்குஆதி - விச்வாதிகன் - பிரபு - சர்வஞ்ஞன் - சர்வகர்த்தா - சர்வகாரணம் - ஈஸ்வரன் - அநாதிநிதனவஸ்து - பராபரவிகினன் - பரமான்மரூபன் - பரஞ்சோதி - பராற்பரம் - நிஷ்டாப்பிராப்தம் - அப்பிரமேயம் - பரதத்துவம் - அநூபமம் - தத்துவமசியாதிவாக்கியப்பிரதிபாத்தியன் என இங்ஙனம் முறையிடல். இவற்றை வடநூலுட் காண்க.]

தெளிதல் என்றது கருமகாண்ட அனுஷ்டானப்பயன் முழுவதும் இச்சிவலிங்கக்குறியைப் பூசித்தலொன்றே தருமென்றும், ஞானகாண்ட அத்துவித உணர்வின் பயன்முழுவதும் இச்சிவலிங்கக்குறியின் சொரூபத்தைத் தியானித்தலொன்றே தருமென்றுந் தேர்தல் என்க. (௬௮)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

கருமத்தான் ஞான முண்டாங் கருமத்திற் சித்த சுத்தி
தருமத்தா லிகந்த சித்த சுத்தியிற் றரும நல்கு
மருமைத்தாந் தருமத் தாலே சாந்தியுண் டாகு மாண்ட
பெருமைத்தாஞ் சாந்தி யாலே பிறப்பதட் டாங்க யோகம்.

(இ-ள்.) (நித்திய) கருமத்தினாலே ஞானங்கைகூடும். (எவ்வாறெனில்) கருமத்தினாலே சித்தசுத்திவரும். அந்தக் கருமத்தாலோங்கிய சித்தசுத்தியால் தருமம் விருத்தியாகும், அருமையை யுடைத்தாகிய தருமத்தினால் சாந்தியுண்டாகும். மாட்சிமைப்பட்ட பெருமையையுடைய அச்சாந்தியினாலே அஷ்டாங்கயோகம் பிறக்கும்.

கருமமுதலியவை ஞானங்கமாதலின் "கருமத்தான் ஞானமுண்டாம்" எனப *பிரதிக்ஞையாகக்கூறினர். தருமம்என்றது பத்துவகைப்பட்டசிவபுண்ணியத்தை. அவை கொல்லாமை - பொறுமை - உண்மை கூறல் - பழிபாவங்களுக் கஞ்சுதல் - புண்ணிய விருப்பம் - மனமுதலியன வொடுக்கல் - கொடை - சிவார்ச்சனை தவம் - சதாசிவாதிமூர்த்தங்களைத் தியானித்தலாம். சாந்தி என்றது அகக்கரணமடக்கல். அகக்கரணமடக்கல் கூறவே புறக்கரணமடக்கலாகிய தாந்தி முதலியவும் அதனுள் அடங்குதல்பற்றி வேறுகூறிலர். அஷ்டாங்கயோகம்என்றது இயமம் - நியமம் - ஆசனம் - பிராணாயமம் - பிரத்தியாகாரம் - தாரணை - தியானம்-சமாதி யெனப்படும். இவற்றின் விரிவெல்லாம் யோகநூல்களிற் பரக்கக் காண்க. விரிவு கருதி விடுத்தாம்.

* பிரதிக்ஞை - ஒரு விஷயத்தை நாட்டி அதனை ஏதுக்களானிறுத்தல்.

சிவபுண்ணியம் பத்து என்றதை
சிவதருமோத்தரம்.

" அயிங்கிதை பொறையே மெய்ம்மை யறைதலே யறிய நாணே
உயர்ந்தவா தரவே யுள்ள மொடுக்கலே கொடுக்கை தானே
வியந்தவர்ச் சனையே மெய்யூன் வெறுத்துறு தவமே மேனி
நயந்தபா வனையே யென்னத் தசமிவை நன்றெந் நாளும்" என்பதனுனறிக

" கருமத்தான் ஞான முண்டாங் கருமத்தைச் சித்த சுத்தி - தருமத்தா லிக ந்த சித்த சுத்தியைத் தரும நல்கும்" எனப் பாடங்கொண்டால் இப்பொருட்கிணங்க வுரைகொள்க. (கூக)

கிரியையான் ஞானந் தன்னாற் கிளர்சிவ பத்தி பூசை
தரிசனஞ் சைவ லிங்க தாபனம் செய்த லீசற்
குரியமெய் யன்பர் பூசை யுருத்திர சின்னந் தாங்க
லரியதே சிகன்பாற் பத்தி யனைத்தையுந் தெரிய லாகும்

(இ-ள்.) கிரியையினாலும் ஞானத்தினாலும் விளங்குஞ் சிவபத்தியுஞ் சிவ பூசையுஞ் சிவதரிசனமும், சிவலிங்கதாபனஞ் செய்தலும், சிவபிரானுக்குரிய மெய்ய ன்பர் பூசையும், சிவவேடந் தரித்தலும், பெறுதற்கரிய ஞானாசிரியரிடத்து அன்புகொ ள்ளுவதும், (ஆகிய) இவை முற்றும் அறியலாகும். எ-று.

" கிரியையான் ஞானந் தன்னாற் கிளர்சிவ பக்தி * * * தெரியலாகும்" என் றது—சிவபக்தி முதலியவை ஞானங்கத்துள்ளே தெரியவேண்டுவனவாகச் சிறந்தன வென்பதும், இவற்றிற்கு ஞானமுங் கிரியையும் ஒன்றற்கொன் றேது வென்பதும், அவ்விரண்டுமில்லாதவழி இவைவிளங்காவென்பதும், உய்த்துணர வைத்தாராயிற்று.

மறைவழி மதங்கட் கெல்லா மறைபிர மாணம் பின்சென்
றறைதரு மிருதியெல்லா மவைக்கனு குணமா மின்ன
முறையினன் மார்த்த மென்று மொழிவதம் மார்த்தஞ் சேர்ந்த
துறைகள்வை திகமா மேலாச் சொல்வதிச் சுத்த மார்க்கம்.

(இ-ள்.) வேதத்தின் வழிப்பட்ட மதங்களுக்கெல்லாம் வேதமே (பரமப்) பிரமாணம். (அவ் வேதத்தின்வழி) பின் சென்று (அதற்கிணங்கக்) கூறும் ஸ்மிருதிக ளெல்லாம் அக்கொள்கைகளுக்கு அனுகுணப்பிரமாணமாகும். எக்காலத்தும் முறை ப்படி இந்த ஸ்மிருதிகள் கூறுவது ஸ்மார்த்தமாம். அந்த ஸ்மார்த்தஞ் சேர்ந்த மார்க்க ங்கள் வைதிகமாம். (எவற்றினும்) மேலாகச் சொல்வது இந்தச் சுத்தவைதிகமார்க் கமே. எ-று.

அனுகுணம்-இரண்டாவது. சுருதியிற் கூறுவது சிரௌதம் என்றாற்போல ஸ்மிருதியிற் கூறுவது ஸ்மார்த்தம் வேதத்திற் கூறுவது வைதிகம் என்க.

ஸ்மிருதி பதினெட்டு அவை ஆக்கினோர்பெயரால் வழங்கும். அவை—மனு- அத்திரி - ஔரிதம் - விட்டுணு - யாஞ்ஞுவற்கியம் - உசனம் - ஆங்கீரசம் - யமம் - ஆப த்தம்பம் - சமவர்த்தம் - காத்தியாயனம் - பிரகற்பதி - பராசரம் - வியாசம் - சங்கலி தம் - தக்கம் - கௌதமம் - சாதாதன்மம் - வசிட்டம் எனப்படும். (சக)

எழுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

தெருட்பெறு போகம் வீடெனா ரணமாய்ச் சிவமய மாமறைப் பொருளை
யிருட்கெட வுரைத்தே மிப்பொருட் கதிக மில்லையிப் பொருளெலா முமக்கு

மருட்கெடத் தெளிவ தாகென விளையு ளழிவுறா மாதவர் புறத்தை
யருட்கையாற் றடவி யிலிங்கத்திற் புகுந்தா னருள்பழுத் தன்னதே சிகனே.

(இ-ள்.) தெளிவுபெற்ற போக மோக்ஷங்கட்கு ஏதுவாகி, சிவமயமாகிய வேதப்பொருளை இருள் (ஆகிய மனமயக்கம்) கெடக் கூறினோம். (முனிவர்களே! நாம உமக்குக் கூறிய) இந்தப் பொருளுக்குச் சிறந்த பொருளில்லை. இப்பொருள்களெல்லாம் உங்கட்கு அறியாமைநீங்க நன்குவிளங்குகவென்று அருள் கனிந்தாற்போன்ற (திருவுருவங்கொண்ட) தேசிகமூர்த்தி (கூறிய) இம் மார்க்கத்தினின்றுந் தவறாத (கண்ணுவர் முதலிய) முனிவர்களுடைய முதுகைக் கிருபையுடன் தமது திருக்கரத்தால் தடவிச் சொக்கலிங்கப்பெருமானிடத்தில் அந்தர்த்தானமாயினர். எ-று. (சஉ)

வேதத்துக்குப் பொருளருளிச்செய்தபடலம்
முற்றிற்று.

---

ஆ திருவிருத்தம்-ககஙச.

---

## பதினேழாவது,
## மாணிக்கம் விற்றபடலம்.

---

கலிநிலைத்துறை.

சுகந்த வார்பொழின் மதுரையெம் பிரான்றன துணைத்தா
ளுகந்த வாவறு கண்ணுவ முனிமுத லோது
மகந்த வாதபே ரன்பருக் கருமறைப் பொருளைப்
பகர்ந்த வாறிது மாணிக்கம் பகர்ந்தவா பகர்வாம்.

(இ-ள்.) நறுமணங்கமழுஞ் சோலைசூழ்ந்த மதுராபுரியி லெழுந்தருளிய எமது சோமசுந்தரக்கடவுளுடைய உபய திருவடிகளை விரும்பி (மண் பெண் பொன முதலியவற்றில்) ஆசையொழிந்த கண்ணுவமுனிவர் முதலாகக் கூறும் மனத்தினினறும் விலகாத அன்பினையுடைய பெரிய முனிவர்களுக்கு அரிய வேதத்தின் உட்கிடைப் பொருளை அருளிச்செய்த திருவிளையாடல் இதுவாகும். மாணிக்கம்விற்ற திருவிளையாடலை (யாம் இனி)க் கூறுவாம். எ-று. (க)

அன்ன நாள்வயின் வீரபாண் டியற்கணங் கனைய
மின்ன னாருளம் போகமும் விளைநில மனைய
பொன்ன னார்பெறு காளைய ரைங்கணைப் புத்தே
ளன்ன வீறினார் வான்பயிர்க் கெழுகளை யென்ன.

(இ-ள்.) அப்படிப்பட்டகாலத்தில், வீரபாண்டியனுக்கு அரம்பாஸ்திரீகள் போன்ற மனைவிமாருள், ஐந்துபோகங்களும் விளைதற்குரிய நிலமாகிய காமக்கிழத்தியர் பெற்ற புதல்வர்கள் பஞ்சபாணங்களை யேந்திய மன்மதனைப்போலவும், சிறந்த பயிருக்கு (இடையூறாக) உண்டாகின்ற களையைப்போலவும் ஒக்கினார்கள். எ-று.

மின்னனார் - மின்னல்போன்றவர்கள். பொன்னனார் - திருமகள்போன்றவர்கள்.

ஐம்போகம் என்றது கண்டு கேட்டு உண்டு உயிர்த்துப் பரிசித்தலாகிய ஐம்புலன்களால் வருகும் போகங்கள். இதனை,

" கண்டுகேட் டுண்டுயிர்த் துற்றறியு மைம்புலனு
மொண்டொடி கண்ணே யுள"—என்னுந் திருக்குறளா னறிக. (உ)

பின்ன ரும்பெறற் குமரனைப் பெறுவது கருதி
மன்ன னுங்குலத் தேவியுங் கயற்கணி மணாளன்
றன்னை நோக்கியட் டமிசதுர்த் தசிமதி வார
மின்ன நோன்புநோற் றொழுகுவா ரிறைவனின் னருளால்.

(இ-ள்.) பிறகு, பெறுதற்கரிய புத்திரனைப் பெறக்கருதி, வீரபாண்டியனும் அவன் பட்டமகிஷியும் சேற்கெண்டைபோலும் விழிகளையுடைய மீனாக்ஷிதேவியார் தலைவராகிய சோமசுந்தரப்பெருமானை நோக்கி, அஷ்டமிநோன்பு சதுர்த்தசிநோன்பு சோமவாரநோன்பு ஆகிய இந்நோன்புகளை நோற்றுவருவாராயினர். அச்சோமசுந்தரக்கடவுளுடைய இனிய திருவருளால். எ-று.

"இறைவனின்னருளால்" என்றதை மேலைச்செய்யுளுடன் கூட்டுக. (௩)

சிறிது நாள்கழிந் தகன்றபின் கங்கையிற் சிறந்த
மறுவி லாவட மீன்புரை கற்பினாள் வயிற்றிற்
குறிய வாலவித் தங்குரம் போன்றொரு குமர
னிறைபு நீருல கருட்குடை நிழற்றவந் துதித்தான்.

(இ-ள்.) சில தினங்கள் சென்றொழிந்தபின்னர், கங்கையைக்காட்டிலும் புனிதமாகிய குற்றமில்லாத அருந்ததிபோன்ற கற்பினையுடைய அவ்வீரபாண்டியன் மனைவிவயிற்றில், சிறிய அளவினையுடைய ஆலவிதையினின்று தோன்றிய முளை (பல சாகைகளாகப் பரந்து பல பொருள்களுக்குத் தண்ணிய நிழல் தந்து நிற்பது) போல ஒரு புதல்வன் நிறைந்த நீர்மயமாகிய கடல்சூழ்ந்த உலகிற்கு (தனது) கிருபையே (வெண்கொற்றக்) குடையாக நிழல்செய்ய வந்து அவதரித்தான். எ-று.

வடமீன் - அருந்ததி. இஃது நக்ஷத்திரங்களுள் வடக்கிலிருப்பது காரணமாக வந்த பெயர். (௪)

அத்த னிச்சிறு குமரனுக் ககங்களி சிறப்ப
மெய்த்த நூன்முறை சாதக வினைமுதல் வினையும்
வைதத னன்பொலி வெய்துநாண் மன்னவ னூழ்வந்
தொத்த நாள்வர வேட்டைபுக் குழுவைகோட் பட்டான்.

(இ-ள்.) மனங்களிகூர, அந்த ஒப்பற்ற இளங்குமரனுக்கு, உண்மையாகிய வேதவிதிப்படி சாதகன்ம முதலிய கிரியைகளுஞ் செய்து முடிக்க, அப்புத்திரன் (நாளுக்குநாள்) வளர்ந்து வருகையில், வீரபாண்டியன் போகூழ்கூடி வருங் காலம் வர, வேட்டைமேற் சென்று புலியால் விழுங்கப்பட்டான். எ-று.

"ஊழ்வந்தொத்தநாள்வர" என்றதால், வேட்டையாடுகையில் வலியற்றுப் புலியால் விழுங்கப்பட்டா னல்லன் என விளக்கிநின்றொன்க. (௫)

வேங்கை வாய்படு மீனவன் விண்விருந் தாக
வாங்கு நூன்மருங் கிறக்கர மார்பெறிந் தாரந்
தாங்கு கொங்கைசாக் தழிந்திடத் தடங்கண்முத் திறைப்ப
வேங்க மாதர்போ னகருளார் யாவரு மிரங்க.

(இ-ள்.) புலியின்வாயி லகப்பட்ட வீரபாண்டியன் தேவலோகத்திற்கு (ஓர்) விருந்தாகச் செல்லுதலால், ஒசிகின்ற நூலிழைபோன்ற இடை முறியும்படி (தமது) கைகளால் மார்படித்து, முத்தாரமணிந்த தனங்களிற் றிமிர்ந்த கலவைச்சாந் தழிய, பரந்த கண்கள் நீரைச் சொரிய மனைவியார் எங்கவும், மதுரைத் திருநகரிலுள்ளோர் யாவரும் வருந்தவும். எ-று. (சு)

மற்ற வேலைகா மக்கிழத் தியர்பெறு மைந்த
ரற்ற நோக்கியீ தமையமென் றானைமா வாதி
யுற்ற பல்பிற பொருணிதி யொண்கல னோடுங்
கொற்ற மௌலியுங் கவர்ந்தனர் கொண்டுபோய் மறைந்தார்.

(இ-ள்.) (அவ்வாறு யாவரும் வருந்தும்) அந்தக்காலத்தில், சீமக்கிழத்தியர்கள் பெற்ற பிள்ளைகள் சமயம்பார்த்து, இதுதான் நல்லசமயமென்று, ஆனை - குதிரை முதலாகவுள்ள பலவேறுபொருள்களும் திரவியமும் ஒள்ளிய ஆபரணங்களும்,வெற்றியையுடையகிரீடமும்(ஆகிய இவற்றை) கொள்ளைகொண்டு சென்று ஒளித்தார்கள்.

கவர்ந்தனர் என்றது வினையெச்சப்பொருளில் வந்தது. (எ)

மன்ன னாணையா றொழுகிய மந்திரக் கிழவர்
மின்னு மேவ லிளங் குமரனைக் கொண்டுவிண் ணடைந்த
தென்னர் கோமகற் கிறுதியிற் செய்வினை நிரப்பி
யன்ன காவலர்க் கணிமுடி சூட்டுவா னமைந்தார்.

(இ-ள்.) வீரபாண்டியன் கட்டளைப்படி நடந்த மந்திரத்தலைவர்கள் மின்னலைக்கக்கும் வேற்படையேந்திய புத்திரனைக்கொண்டு, விண்ணுலகு சேர்ந்த வீரபாண்டிய ராசனுக்கு இறுதியிற் செய்யவேண்டிய (அந்தியேஷ்டிமுதலிய) கடன்களைச்செய்துமுடித்து, அப்புத்திரனுக்கு அழகிய மகுடஞ்சூட்ட எத்தனித்தார்கள்.

சூட்டுவான் என்றதில் வான் எதிர்கால வினையெச்சவிகுதி. (அ)

நாடிப் பொன்னறை புகுந்தனர் நவமணி மகுடந்
தேடிக் கண்டிலர் சிதிசில கண்டிலர் திகைத்து
வாடிச் சிந்தைநோ யுழந்திது மாற்றவர் கூட்டுண்
டோடிப் போயின தாகுமென் றுணர்ந்திது நினைவார்.

(இ-ள்.) பொக்கிஷத்திற்புகுந்து ஆராய்ந்து நவரத்தினங்களிழைத்த கிரீடத்தைத் தேடிக்காணாமல், (விலையேறப்பெற்ற) சில ஆபரணங்களையுங் காணாமல், மயங்கி வாடி மனம்வருந்தி, இவை பகைவர் கொள்ளையாடிக் கொண்டுபோயினவாகு மென்றாராய்ந்து, இதனை யாலோசிக்கின்றார்கள். எ-று.

செயப்படுபொருளை வினைமுதல்போல வைத்து வினைமுதல் வினையேற்றி "இவை போயினவாகும்" எனக்கூறினர். புகுந்தனர் கண்டிலர் என்னும் வினைமுற்றுகள் வினையெச்சப் பொருளில் வந்தன. (கூ)

வேறு மாமுடி செய்துமா லென்னினோ விலைமிக்
கேறு மாமணி யிலையர சிருக்கையின் றின்றேற்
றேறு நீருல கலையுமென் செய்வதிங் கென்னா
வாறு சேர்சடை யாரருள் காண்டுமென் றமைச்சர்.

(இ-ள்.) சிறந்த வேறுகிரீடத்தைச் செய்வோமென்று நினைத்தாலோ விலைமிகுந்தேறத்தக்க பெரிய இரத்தினங்கள் (நம்மிடத்தில்) இல்லை. (எப்பொழுது மகுடமில்லையோ அப்பொழுது) அரசிருக்கையில்லை. (அரசிருக்கை) இல்லையாயின்,தெளிந்த

கடல்சூழ்ந்த உலகுவருந்தும். இங்கு (சும்மாற்) செய்துமுடிப்பது யாது? எனக்கருதி, கங்கையையணிந்த சடையையுடைய இறைவர் திருவடியைக் காண்போமென்று மந்திரிமார்கள். எ-று. (௧௰)

கரைசெ யாப்பெருங் கவலைசூழ் மனத்தராய்க் கறங்கு
முரசு கண்படாக் கடிமனை முற்றநீத் தருமை
யரசி ளந்தனிக் கொழுந்தினைக் கொண்டுபோ யம்பொன்
வரைசெய் கோபுர வாயின்முன் வருகுவார் வருமுன்.

(இ-ள்.) அளவுபடுத்தற்கரிய பெருந்துன்ப நிறைந்த மனத்தையுடையவராய், ஒலிக்குமுரசங்கண்டுயிலாத காவல்பூண்ட இராசக்கிருகத்தின் முற்றத்தினின்றும் நீங்கி, அடைதற்கரிய வொப்பில்லாத அரசிளங்குமரனைக் கொண்டுசென்று, அழகிய பொன்மலையை (கோபுரமாகச்) செய்துவைத்தாற்போன்ற கோபுரவாயிலின் முன் வரத்தொடங்கினார்கள். (அவர்கள்) வருதற்குமுன்னே. எ-று. (௧௧)

எற்ற தும்புகோ வணவுடை யிடம்படப் பிறங்கத்
துற்ற பல்கதிர் மணிப்பொதி சுவன்மிசைத் தூங்க
மற்ற டம்புய வரைமிசை வரம்பிலா விலைகள்
பெற்ற வங்கதம் பரிதியிற் பேர்ந்துபேர்ந் திமைப்ப.

(இ-ள்.) ஒளிமிகுந்த கோவண ஆடையானது இடப்பாற்பட விளங்கவும், நெருங்கிய பலவகைப்பட்ட கிரணத்தையுடைய இரத்தினப்பொதியானது பிடரின்மேல் தொங்கியசையவும், மற்போர்புரியும் பெரியபுயமாகிய மலையின்பேரில் எல்லையில்லாத விலைபெற்ற அங்கதமானது சூரியன்போல விட்டுவிட்டு ஒளிவீசவும். எ-று.

அங்கதம்=வாகுவலயம். பேர்ந்துபேர்ந்து—மிகுதிப்பொருளில் வந்த அடுக்குத்தொடர். (௧௨)

மந்தி ரப்புரி நூலது வலம்படப் பிறழ
விந்தி ரத்திரு வில்லென வாரமார் பிலங்கச்
சுந்த ரக்குழை குண்டலந் தோள்புரண் டாடத்
தந்தி ரத்தரு மறைகளி தாணிலந் தோய.

(இ-ள்.) மந்திரவிதியமைந்த உபவீதமானது வலப்பாற்படப் புறளவும் பொலிவமைந்த இந்திரவில்லைப்போல இரத்தினமாலைகள் மார்பில் விளங்கவும், அழகுபொருந்திய (சங்க) குண்டலமணிந்த (காதிலணிந்த இரத்தின) குண்டலமானது தோளின்மேற் புரண்டாடவும், கலைகளமைந்த அரியவேதங்கள் (சுமந்து) களிக்கும் திருவடிகள் நிலவுலகிற்றோயவும். எ-று. (௧௩)

கலிவிருத்தம்.

பொன்னவிர்ந் திலங்குகோ புரமுன் போதுவார்
முன்னவர் துனிவுகூர் முன்ன நீக்கிய
தென்னவர் குலப்பெருந் தெய்வ மாகிய
மன்னவர் வணிகராய் வந்து தோன்றினார்.

(இ-ள்.) பொன்போலப் பிரகாசித்து விளங்குந் திருக்கோபுர வாயிலின் முன்வரும் மந்திரி முதலியோர்க்குமுன், அவர்களுடைய வருத்தமிக்க மனக்குறிப்பை நீக்க, பாண்டியர்குலத்திற்குப் பெருந்தெய்வமாகிய சோமசுந்தரபாண்டியர் வணிகராய் (திருக்கோலங்கொண்டு) வந்து தோன்றியருளினார். எ-று.

நீக்கிய - செய்யிய வென்னும் வாய்பாட்டு வினையெச்சம், நீக்கவென்பது பொருள். முன்னம்=எண்ணம். (கச)

வந்தவ ரெதிர்வரு வானை மம்மர்கொள்
சிந்தைய ராய்வரு செய்தி யாதென
முந்தையில் வினையெலா முறையிற் கூறினார்க்
கெந்தையாம் வணிகனீ தியம்பு மாலரோ.

(இ-ள்.) (வணிககுலதிலகராய்) வந்த சுந்தரேசப்பெருமான் தம்முன் வருகின்ற மந்திரி முதலானோரை (நோக்கியருளி) மயங்கின மனமுடையவராய் நீங்கள் வருஞ்செய்தி யென்ன? என்று வினவ, முன்னடந்த செய்திக ளெல்லாவற்றையும் இரமமாகத் (தொகுத்துக்) கூறிய மந்திரிமுதலானோர்க்கு, எமது தந்தையாகிய வணிகர் பெருமானார் கூறுகின்றார், எ-று.

உடல்வாடல் - முகங்கருகல் - தளர்நடைமுதலிய மெய்ப்பாட்டால் மனத்தளர்ச்சியை யறிந்தனராதலின் "மம்மர்கொள் சிந்தையராய் வருசெய்தியாது" என உசாவினார் என்க. (கரு)

என்பட ரெய்துகின் றீர்க ளென்வயி
னொன்பது மணிகளு முள்ள வாலவை
பொன்பதி னாயிர கோடி போனதென்
றன்புற மணியெலா மடைவிற் காட்டுவார்.

(இ-ள்.) (தகுதியான இரத்தினங்கள் இல்லையென்று) என் வருத்தப்படுகிறீர்கள்! என்னிடத்தில் நவரத்தினங்களு மிருக்கின்றன! அவ்விரத்தினங்கள் பதினாயிரங்கோடி பொன்விலைசென்றது என்று, (அவர்கள்பேரில்) அன்பு பொருந்த நவமணிகளை யெல்லாம் முறையாகக் காட்டத்தொடங்கினார். எ-று.

சிறுவிலைபெறுமணிகள் மகுடத்திற்கமையாவாகலின் "பொன்பதினாயிரகோடிபோனது" என்றார். (கசு)

இருந்தனர் கீழ்த்திசை நோக்கி யிட்டதோர்
கருந்துகி னடுவுமிந் திராதி காவல
ரருந்திசை யெட்டினு மடைவிற் செம்மணி
பெருந்தண்முத தாதியெண் மணியும் பெய்தரோ.

(இ-ள்.) கீழ்த்திசைநோக்கியிருந்து பரப்பிய ஒரு கரியகம்பளத்தின் மத்தியிலும், இந்திரன்முதலிய (அஷ்ட) திக்குப்பாலர்கள் வசிக்கும் செல்லுதற்கரிய அஷ்டதிக்குகளிலும் முறையாக, பதுமராகத்தையும், குளிர்ச்சிபொருந்திய பெரிய முத்து முதலிய (ஏனைய) எட்டுவகை இரத்தினங்களையும் வைத்து. எ-று.

இதுமுதல் நான்கு பாடல்கள் குளகம்,

கம்பளத்தின் நடுவில் பதுமராகமும் ஏனைய எட்டுத்திசைகளில் எண்வகை ரத்தினங்களையும் வைத்தனரெனக்கொள்க. நவமணிவிற்போர் கம்பலத்தைப்பரப்பிக் கீழ்த்திசைநோக்கியிருத்தல் மரபு. (கஎ)

இம்மணி வலனுடற் சின்ன மென்னவக்
கைம்மறி கரந்தவர் கூறக் கற்றநூற்
செம்மதி யமைச்சரச் செம்மல் யாரவன்
மெய்ம்மணி யாயதென் விளம்பு கென்னவே.

(இ-ள்.) இவ்விரத்தினங்கள் வலாசுரனுடைய உடம்பின் சின்னங்களென்று, கையிற்றாங்கிய மாணமறைத்து வந்த அவ்வணிகர் பெருமானார் கூறியருள, (மநுமுதலிய தரும) நூல்களைக் கற்றுணர்ந்த நுட்பபுத்தியையுடைய (சுமதி முதலிய) மந்திரிகள், அவ்வலன் என்பவன் யாவன்? அவனுடைய உடல் நவரத்தினங்களானவகை யாது? (அவற்றைக்) கூறக்கடவீர் என்று வினவ. எ-று. (௧௮)

மேவரும் வலனென னுமவுணன் மேலைநாண்
மூவரின் விளங்கிய முக்கண் மூர்த்திசெஞ்
சேவடி யருச்சனைத் தவத்தின் செய்கியால்
யாவது வேண்டுமென் றிறைவன் கூறலும்.

(இ-ள்.) (உலகமானது சிருட்டி திதி சங்காரங்களையடைதற் கேதுவாகிய) பிரம விஷ்ணு ருத்திரர்களில் மேம்பட்டு விளங்கிய திரிநேத்திரங்களையுடைய சிவபெருமானாருடைய செவ்விய திருவடியில், அடைதற்கரிய வலனென்னும் அசுரன், முற்காலத்திலே, அருச்சனையாகிய தவத்தைச் செய்துவந்தமையால், அச்சிவபெருமானார் (உனக்கு) யாது வேண்டும்? என்று (அவனை) வினவியருள. எ-று.

மூவரின் விளங்கிய என்றதற்கு மும்மூர்த்திகளின் வடிவாக விளங்கிய எனப் பொருள் கூறினும் பொருந்தும். (௧௯)

தாழ்ந்துநின் றியம்பும்பான் சமரில் யாரினும்
போழ்ந்திற வாவரம் புரிதி யூழ்வினை
சூழ்ந்திறந் தாலென்மெய் துறந்த மாந்தரும்
வீழ்ந்திட நவமணி யாதல் வேண்டுமால்.

(இ-ள்.) (வலாசுரன்) வணங்கி நின்று விண்ணப்பிக்கின்றான். யான் அவராலும் போரிற் பிளவுபட்டு இறக்காத வரமருள்வாய். போகூழ்வசத்தால் இறந்தாலும் என் உடலைச் சிதைத்த வீரரும் இச்சிக்க (என் உடலின் உறுப்புகள்) நவரத்தினங்களாக ஆதல் வேண்டும். எ-று.

"என்மெய் துறந்த மாந்தரும் வீழ்ந்திட நவமணி யாதல் வேண்டும்" என்றதால், என்னை வென்றோர் அடையும் பெருஞ்செல்வமாக என்னுறுப்புகள் பயன்பட வேண்டுமென வேண்டினனென் என்றுணர்க. (௨௦)

என்றுவேண் டலும்வா மீசனல்கின
னன்றுபோ யமர்குறித் தமரர் கோனொடு
மென்றுபோ ராற்றலுந் தேவர் கோனெதிர்
நின்றுபோ ராற்றல னீங்கிப் போயினான்.

(இ-ள்.) என்று (வலாசுரன்) வரம்வேண்ட, சிவபெருமான் (அவ்வண்ணமே) தந்தருளினர். அன்றையதினமே போர்மேற்கொண்டு போய், தேவராசனாகிய இந்திரனுடனெதிர்த்துப் போர்புரிய, அவ்விந்திரன் எதிரிலிருந்து செருச்செய்ய ஆற்றாதவனாகி, (புறங்கொடுத்துப் போர்க்களத்தை) நீங்கிப்போயினன். எ-று.

அன்று என்பதனிறுதியில் பிரிநிலை ஏகாரந் தொக்குநின்றது. (௨௧)

தோற்றவா னுடவன் மீண்டு சூழ்ந்தம
ராற்றினும் வெல்லரி தழிவி லாவர
மேற்றவ னாதலா லிவனைச் சூழ்ச்சியாற்
கூற்றினா ரேற்றுதல் குறிப்பென் றுன்னியே.

(இ-ள்.) (போர்செய்ய வன்மையின்றித்) தோல்வியடைந்த இந்திரன் மீளவும் ஆலோசித்து, கெடாதவரத்தை (சிவபெருமானிடம்) பெற்றவனாதலின், (இவனை

யெதிர்த்து) போர்செய்தாலும் (நம்மால்) செயித்தல் அருமை (ஆதலால்) இவ்வசுரனை விநயத்தால் இயமபுரியிற் குடியேற்றுதல் தகுந்ததென்று நினைத்து. எ-று.

இதுமுதல் நான்கு பாடல்கள் குளகம். (உஉ)

விடங்கலுழ் படைக்கல னின்றி விண்ணவ
ரடங்கலுந் தழீஇக்கொள வடுத்துத் தானவ
மடங்கலை வருகென நோக்கி வானவக்
கடங்கலுழ் யானைபோற் கனைந்து கூறுவான்

(இ-ள்.) விஷத்தைச் சொரியும் ஆயுதமில்லாது தேவர்களெல்லாருந் தன்னைப் புடைசூழ (போர்க்களத்தை)ச்சேர்ந்து, அசுரருள் ஆண்சிங்கத்தை யனைய வலாசுரனை வருகவென விளித்து (அவனை) ப்பார்த்து, மதத்தைச் சிந்தும் ஐராவதம்போல நெடுமொழி கூறத்தொடங்கி. எ-று.

நெடுமொழி - வீரன்றன்னைப் புகழ்ந்து கூறுங் கூற்று. கூறுவான் முற்றெச்சம். "யானைபோலடுத்து வருகெனக்கனைந்து நோக்கிக் கூறுவான்" எனமுடித்துக்கொள்க. (உங)

விசையநின் றோள்வலி வென்றி விக்கமெக்
திசையினும் பரந்ததச் சீர்த்தி நோக்கியுண்
ணசையறு மகிழ்ச்சியா னல்கு வேனுனக்
கிசையவேண் டியவரம் யாது கேளென.

(இ-ள்.) வெற்றியை யுடையானே! உன்னுடைய புயபராக்கிரமும், ஜெயப்பெருக்கும், எந்தத் திசையிலும் பரவின. அப்பிரதாபத்தைப் பார்த்து (என்னுடைய) மனத்திலெழுந்த அவா வடங்காத களிப்பினால், உனக்குப் பொருந்துவன வற்றைக் கொடுப்பேன். (உனக்கு என்னிடத்திற் பெற) வேண்டிய வரம் யாது? (அதனைக்) கேள் என்று கூற. எ-று. (உச)

கடிபடு கற்பக நாடு காவலோ
னெடியுரை செவித்தொளை நுழையத் தானவ
னெடியகை புடைத்துட னிமிர்ந்து கார்படு
மிடியென நகைத்திகழ்ந் தினைய கூறுவான்.

(இ-ள்.) விண்ணுலகைக் காவல்புரியும் இந்திரன் கூறியவார்த்தை (தனது) செவிகளின் தொளைகளிற்புக, வலாசுரன் (அதிசயித்துத் தன்) நீண்ட கைகளைக்கொட்டி, தேகம் (சோர்வின்றி) நிமிர்ந்து, மேகத்திலுண்டாகும் இடிபோல (அட்டகாசமாக) நகைத்து, அசதியாடி, இத்தன்மையாகச் சொல்கின்றான். எ-று.

தன்னுடன் போர்புரிய ஆற்றாதோடிய இந்திரன் வரந்தருவலெனக் கூறியது அவனுக்கு மனம்பொறாது பெருநாண் விளைத்தலின் "நெடியகை புடைத்துட னிமிர்ந்து கார்படு மிடியென நகைத்திகழ்ந் தினைய கூறுவான்" எனப்பட்டது. (உரு)

அறுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

நன்றிது மொழிந்தா யாரு நகைக்கநீ யெனைவெந் கண்ட
வென்றியு மதனாற் பெற்ற புகழுநின் வீறு பாடு
மின்றுநின் போரிற் காணப் பட்டவே யிசைபோ யெங்கு
நின்றதே யிதுபோ னின்கை வண்மையு நிற்ப தன்றே.

(இ-ள்.) நன்றாயிருந்தது. (ஆ! ஆ!) யாருஞ் சிரிக்க (மனநாணாது) இந்த வார்த்தை சொன்னாய்! நீ என்னைப் புறங்கண்ட வெற்றியும், அவ்வெற்றியால் வந்த

கீர்த்தியும், (இவற்றாலுளதாய) உன் இறுமாப்பும், இப்பொழுது (நீ யென்னுடனே புரிந்த) உன்போரிற் (பலராலுங்) காணப்பட்டன. உன் பிரதாபம் எவ்விடத்திலுஞ் சென்று நிலைத்தது. இதனைப்போலவே உன் ஈகையும் நிலைபெற்றுள்ளதல்லவா?

இச் செய்யுள் வலாசுரன் இந்திரனை எதிர்மறையிலக்கணையாற் பரிகாசித்த வகை யுணர்த்தியதாம். (உசு)

ஈறிலா னளித்த நல்ல வரமெனக் கிருக்க நின்பால்
வேறுநான் பெறுவ துண்டோ வேண்டுவ துனக்கியா தென்பாற்
கூறுநீ யதனை யின்னே கொடுக்கலே னாகி னின்போற்
பாறுவீழ் களத்திற் றோற்ற பழிப்புகழ் பெறுவ னென்றான்.

(இ-ள்.) அழிவில்லாதவனாகிய சிவபெருமான் எனக்கு அனுக்கிரகித்த நல்ல வரமானது இருக்கையில், உன்னிடத்தில் நான் பெறும்வரம் வேறு இருக்கின்றதோ? உனக்கு வேண்டிய வரம் யாது? என்னிடத்தில் நீ கூறுக. அதனை இப்பொழுதே (நான்) கொடாதொழிந்தேனாகில், உன்னைப்போலப் பருந்துகள் விரும்பி வீழும் யுத்த களத்தில் தோற்றோடிய நிந்தனையைப் பெறுவேனென்று கூறினன். எ-று.

திருமால் முதலிய பெருந்தேவர் பலரிறப்பினுந் தனக்கோர் கேடில்லாதவனாதலின் சிவபெருமானை "ஈறிலான்" என்றும், அவ்விறைவன தருட்கொடை யாவற்றிலுஞ் சர்வோத்தமாகலின் "அளித்த நல்லவர மெனக்கிருக்க" என்றும், தன்னுடன் போர்செய்ய முடியாதோடியவ னிடத்திற் பெறத்தக்கவர மில்லையாதலின் இந்திரனை நோக்கி "நின்பால் வேறு நான் பெறுவ துண்டோ" என்றும், உனக்கு வேண்டிய வரம் இருக்குமாகின், எம்மிறைவன்றந்த வரத்தின் பலத்தால் அதனையும் இப்பொழுதே கொடுப்பேன் என்பார் "வேண்டுவ துனக்கியா தென்பால் கூறுநி யதனை யின்னே" என்றும், நீ கேட்ட வரத்தைத் தடையின்றிக் கொடுப்பேன் அவ்வாறு கொடுக்க இயலாதவனாகிறபக்ஷத்தில், போரிற்றோற்றோடிய உன்னைப்போல நிந்தையை யடைவேன் என்பார் "கொடுக்கலே னாகி னின்போற் பாறுவீழ் களத்திற் பட்ட பழிப்புகழ் பெறுவன்" என்றுங் கூறினார். (உஎ)

மாதண்ட வவுணன் மாற்ற மகபதி கேட்டு வந்து
கோதண்ட மேருக் கோட்டிக் கொடும்புரம் பொடித்தான் வெள்ளி
வேதண்ட மெய்தி யாங்கோர் வேள்வியான் புரிவ னீயப்
போதண்டர்க் கூட்ட வாவாய்ப் போதுவாய் வல்லை யென்றான்.

(இ-ள்.) பெரிய தண்டாயுதத்தைத் தாங்கிய வலாசுரனுடைய வார்த்தையை இந்திரன் கேட்டு (தன் எண்ணம் பலித்ததென்று) களிகூர்ந்து, மகமேருவை வில்லாக வளைத்துக் கொடிய திரிபுரத்தைச் (சிரிப்பாற்) சாம்பலாக்கிய சிவபெருமான் (வீற்றிருக்கும்) வெள்ளிமலை (ஆகிய திருக்கைலாயகிரி)யை யடைந்து, அவ்விடத்தில் யான் ஓர் யாகஞ்செய்வேன். நீ அப்பொழுது தேவர்களுக்கு அவியூட்ட ஓர் பசுவாய் விரைந்து வாராய் என்று (இந்திரன்) கூறினன். எ-று. (உஅ)

அன்றொரு தவத்தோ னென்பு வச்சிர மொன்றே யாக
வொன்றிய கொடையாற் பெற்ற புகழுடம் பொன்றே யென்போல்
வென்றியி னாலும் வீயா மெய்யெலா மணிக ளாகப்
பொன்றிய கொடையி னாலும் புகழுடம் பிரண்டுண் டாமே.

(இ-ள்.) அக்காலத்திலே, ஒப்பற்ற தவசியாகிய ததீசிமுனிவருடைய முதுகந்தண்டெலும்பு (நவமணிகளுள்) ஒரு வைரமேயாக, மனமிசைந்து கொடுத்த (பூத வுடம்பின்) கொடையாற் பெற்ற புகழுடம்பு (அம்முனிவர்க்கு) ஒன்றே (அல்லாமல்)

(பிறர் வெல்லுதற்கரிய) வெற்றியினாலும் (பிற ஆயுதங்களால்) அழியாத எனதுடலுறுப் புகள் முழுதும் நவமணிகளாகப் பூதவுடம்பழிந்த கொடையினாலும் என்னைப்போலப் புகழுடம்பு (அவருக்கு) இரண்டுண்டாகுமா? (ஆகாது.) எ-று.

பொன்றும் எனற்பாலதைப் பொன்றிய எனத் தெளிவுபற்றி இறந்தகால மாகக் கூறினர். (உக)

மேலவ னல்லை நீயே நட்டவன் மேலை வானோர்
யாவரு மருந்து மாற்று லறம்புக ழெனக்கே யாக
வாவுரு வாதி யென்று யன்னதே செய்வே னென்று
னீவதே பெருமை யன்றி யிரக்கின்ற திழிபே யன்றே.

(இ-ள்.) (நீ யெனக்குப்) பகைவனல்லன். நீயே யெனக்கு நண்பன். விண்ணுலகிலுள்ள தேவர்கள் யாவரும் (என் பூதவுடம்பை அவியாக) புசிக்கும் வகையால், புண்ணியமும் (அதனால் வந்த) கீர்த்தியும் எனக்கு உளவாகப் பசுவின் வடிவாக வரக் கடவா யென்றாய். அதனையேசெய்வேனென்று (வலாசுரன்) சொன்னான். (ஒருவர் எற்றோர்க்கு) கொடுத்தலே பெருமையல்லாமல் (பிறரிடஞ் சென்று) யாசிப்பது இழி தொழிலல்லவா. எ-று. (கூ0)

அதற்கிசைந் தவுணர் வேந்த னமரர்வேந் தனைமுன் போக்கி
மதர்க்கடுங் குருதிச் செங்கண் மைந்தனுக் கிறைமை யீந்து
மூதற்பெருங் கலையாம் வேத மொழிமர பமைந்த வானாய்ப்
புதர்க்கடு வேள்விச் சாலைப் புறத்துகந் திறுத்து நின்றான்.

(இ-ள்.) அசுரேசனாகிய வலாசுரன் அவ் வேற்பாட்டிற் கிணங்கி, தேவராசனாகிய இந்திரனை முன்னே செலுத்தி, மதர்ப்பையுடைய கொடிய வுதிரம்போலச் செவந்த கண்களையுடைய தன் புத்திரனுக்கு அரசியலளித்து, (கலைகள் அறுபத்து நான்கிற்கும்) முதலாகிப் பெரிய கலையாயுள்ள வேதவாக்கியமுறையே (உத்தம) லக்ஷணமமைந்த பசுவின் வடிவாய் வந்து, தேவர்கட்கு (அவியுணவு)சமைக்கும் யாகசாலையின் புறத்து நிலை பெயராது நின்றான். எ-று.

விபுதர் - தேவர். இச்சொல்லுக்கு விசேட அறிவுடையோரொன்பது சப்தார்த்தம். விபுதரென்பது முதல் குறைந்து புதர் என நின்றது. (கூக)

வாய்மையான் மாண்ட நின்போல் வுள்ளல்யா ரென்று தேவர்
கோமகன் வியந்து கூறத் தருக்குமேற் கொண்டு மேரு
நேமியோ டிகலும் விந்த வரையென நிமிர்ந்து வேள்விக்
காமெனை யூபத் தோடும் யாமினென் றடுத்து நின்றான்.

(இ-ள்.) (சொல் தவறாத) சத்தியத்தினால் மாட்சிமைப்பட்ட உன்னைப் போல, வள்ளல் யாவருளர்? என்று இந்திரன் மனங்களித்துக்கூற, அகங்கரித்து மேருமலையுடன் பகைத்துயர்ந்த விந்தமலைபோல வோங்கியுயர்ந்து, (நீங்கள்செய்யும்) யாகத்திற்குப் பயன்படும் என்னை யூபஸ்தம்பத்தோடுங் கட்டுங்கள் என்று, (அதனை) சமீபித்து (இறுமாந்து) நின்றான். எ-று.

மேரு நேமியோடிகலும் விந்தவரை யென்றது.

நாரதமுனிவர் ஒருகாலத்திலே விந்தகிரியையடைய விந்தமன்னன் பணிதலால் ஆசீர்வதித்து, மேருமலை சிவபிரானுக்கு வில்லும், மலைகட்கரசனும், ஆயிரஞ்சிகரங்களுடையதும், சூரியன் முதலிய கோள்கள் சூழ்ந்து செல்லத்தக்கதும், தேவர் வாசஸ்தானமும், கைலாயம் வைகுந்தம் மனோவதிமுதலிய திரிமூர்த்திகள் வாசஸ்தலமும்

பொன்மலையும், தானே யென்று இறுமாந்திருக்கின்றது" எனக் கூறக்கேட்டு, விந்தமலை "நானும் ஆகாயமூடுருவவளர்ந்து சூரியசந்திரரைச் சூழ்ந்து செல்லச் செய்வேன்" என்று பேருருக்கொண்டது. அதனால் நாள்கள் காலகதிமாறித் தேவர் மானவர் யாவருந் துன்புற்றனர். அதுகண்ட பிரமதேவர் முதலிய தேவர்கள் அகத்திய முனிவரிடஞ் சென்று முறையிட்டு "அதன்வீறு குன்றும்படி செய்யவேண்டும்" என வேண்ட, அவர் அவ்வாறே சென்று "விந்தமே! வழிவிடுக" என, விந்தம் "சூரிய சந்திரர்கட்கும் வழிவிடாத நான் உன் சிறிய வுருவினுக்குப் பயந்து வழிவிடுவேனோ. சூழ்ந்துபோ" என, அகத்தியமுனிவர் தமது கையைப் பிரமபதம் வரையிலும் நீட்டி அவ் விந்தகிரியின் உச்சிமேல் தமது உள்ளங்கையை வைத்து ஊன்ற, அஃது பூமியில் தாழ்ந்து பிலத்தின்வழிப் புகுந்து ஆதிசேடன் முடிவரையி லிறங்கிவிட்டது. அகத்தியர் தென்றிசை சென்று பொதியமலையி லமர்ந்தனர் என்பதாம். இதனை,

கந்தபுராணம் - விந்தம் பிலம்புகு படலம்.

" எறிகதிர் மதியி னுக்கு மேகருந் திறத்தால் வான
நெறியினை யடைத்துத் தொல்லை நெடியமால் போன்று நின்றேன்
குறியநிற் கஞ்சி யாறு கொடுப்பனோ வெனது தோற்ற
மறிகிலை மீண்டு போகென் றவ்வரை மொழிந்த தன்றே.
அற்புத மமரர் கொள்ள வாற்றவுங் குறியோன் விந்த
வெற்பின தும்பர் தன்னின் மீயுயர் குடங்கை சேர்த்தி
வற்புற வூன்ற வல்லே மற்றது புவிக்கட் டாழ்ந்து
சொற்பிலம் புகுந்து சேடன் சென்னிலையுற்ற தன்றே." என்பதனுனறிக.

யாத்தனர் தருப்பைத் தாம்பா லூர்ணையால் யாத்த சிங்கப்
போத்தென நின்றான் வாயைப் புதைத்துயிர்ப் படங்க வீட்டி.
மாய்த்தனர் மாய்ந்த வள்ளல் வலனுமந் தார மாரி
தூர்த்திட விமான மேறித் தொல்விதி யுலகஞ் சேர்ந்தான்.

(இ-ள்.) (தேவர்கள்) தருப்பையாலாக்கிய கயிற்றால் (யூபஸ்தம்பத்திற்) கட்டினார்கள். (வலாசுரன்) சிலம்பிநூலினாற் கட்டப்பட்ட ஆண்சிங்கம்போல (கட்டப்பட்டு) நின்றான். (தேவர்கள் அப்பசுவின்) வாயை இறுகப்புதைத்துச் சுவாசம் உள்ளடங்கக் கொன்றார்கள். இறந்தவள்ளலாகிய வலாசுரனும்(தேவர்கள்)மந்தார புஷ்ப மாரி சொரியத் தெய்வவிமானத்திலேறிப் பிரமலோகத்தை யடைந்தான். எ-று.

தொல்விதி-பழையோனாகிய பிரமன். தேவர்கள் அவனைத் தருப்பைத்தாம்பாற் பிணித்தது அவன் வலிமைக்குத்தக்க பிணிப்பன்று அவன் கட்டுண்டு அடங்கி நின்றது வாய்மைவழியென்பார் " ஊர்ணையால் யாத்த சிங்கப்போத்தென நின்றான் " என்றார். ஊர்ண நாபி என்றது ஊர்ணை யெனத் திரிந்து ஆகுபெயராயிற்று. (௬௬)

மணித்தலை மலையின் பக்க மாய்த்தவன் வயிர வேலாற்
பிணித்துயிர் செகுத்த வள்ளற் பெருந்தகை யாவை வேதம்
பணித்திடும் வபையை வாங்கிப் படரொரி சுவைமுன் பார்க்கக்
குணித்தவா னடார்க் கூட்டிக் கோதிலா வேள்வி செய்தான்.

(இ-ள்.) இரத்தினங்கள் நிறைந்த சிகரத்தையுடைய மலையின் சிறகையறிந்த இந்திரன், தனதுவச்சிராயுதத்தால் (யூபஸ்தம்பத்திற்) கட்டி உயிர்மாய்க்கப்பட்ட பசுவிலிருந்து வேதம் விதித்த வபையினைவாங்கி, படர்ந்தெழுந்த வேள்வித்தீசுவையினை முன்புபார்க்க இட்டு (அவிர்ப்பாகத்திற்குவந்து) கூடியுள்ள அத்தேவர்களுக்கு உண்பித்துக் குற்றமில்லாத யாகத்தைச் செய்துமுடித்தான். எ-று.

தேவர்கள் வலனைக்கொன்றிருக்க இந்திரன் கொன்றதாக "வயிரவேலால் உயிர் செகுத்த" என்றது இவன் இறைவனுதல் பற்றி யென்க.

பெருந்தகையாவை-பசுவின் வடிவாய்வந்த பெருந்தகைமையுடைய வலாசுரனை. வபை-வயிற்றினுள்ளுக்குள் வெண்டுகில்போன்ற புளையாகிய நிணம்.

"வயிரவேலால் பெருந்தகையாவை வபையை வாங்கி" எனக்கூட்டினும் பொருந்தும். (சுஎ)

அத்தகை யாவின் சோரி மாணிக்க மாம்பன் முத்தம்
பித்தைவை ரிய மென்பு வச்சிரம் பித்தம் பச்சை
நெய்த்தவெண் ணிணங்கோ மேதந் தசைதுகிர் நெடுங்க ணீல
மெய்த்தவை புருட ராக மிவைநவ மணியின் றோற்றம்.

(இ-ள்.) அந்தப்பசுவின் உதிரம் மாணிக்கமாம். பல்முத்தாம். மயிர் வயிடூரியமாம். எலும்பு வைரமாம். பிச்சு பச்சையாம். நெய்ப்பசையையுடைய வெள்ளிய நிணம் கோமேதகமாம். மாமிசம் பவளமாம். பரந்தகண் நீலமாம். இளைத்தற்கேதுவாகிய கபம் புருடராகமாம். இவைகள் (வலாசுரன் உறுப்புகளிற்றோன்றிய) நவமணியின் உற்பத்தியாம். எ-று.

பித்தம் என்பதில் அம் பகுதிப்பொருள் விகுதி. மாணிக்கமாம் என்பதிலுள்ள ஆமென்றதை ஏனையிடங்களிலுங் கூட்டுக.

"பசுவென்பு வயிரம் பல்லு பனிமுத்தங் குருதி யோதில்
வசையறு கதிர்மா ணிக்கம் மயிர்வயி டூரி யங்கள்
தசைபவ ளங்க ணீலந் தரும்பிச்சுப் பச்சை மெச்சு
நிசகபம் புருட ராக நிணங்கோமே தகமென் றோதும்" என்னுஞ் செய்யுளினும் இப்பாடலின் கருத்து மாறுபடாது வருதல் காண்க. (சுஅ)

இவ்வடி வெடுத்துத் தோன்றி யிருள்முகம் பிளப்பக் காந்தி
தைவரு மணியோன் பானுஞ் சார்விட நிறங்கள் சாதி
தெய்வத மொளிமா செள்ளிச் சோதனை செய்து தேசு
மெய்வர வணிவோ ரெய்தும் பயனிவை விதியாற் கேண்மின்.

(இ-ள்.) இவ்வுருவேற்றுத்தோன்றி இருளானது ஒழிய ஒளிவீசும் நவரத்தினங்களுஞ் சார்ந்த இடமும், (அவற்றின்) நிறங்களும், சாதியும், அதிதேவதையும், ஒளியும், குற்றத்தைக்களைந்து பரிட்சித்து ஒளிவீசத் தேகத்திலணிவோர் பெறும்பலனும், (ஆகிய) இவற்றை முறைப்படிசொல்லக்கேளுங்கள். எ-று. (சுகூ)

மேற்படி வேறு.

வாளவிரு மாணிக்கங் கிரேதமுத லுகநான்கும் வழியே மக்கங்
காளபுரந் தும்புரஞ்சிங் களமிந்நான் கிடைப்படுமக் கமல ராக
மாளுநிற மொன்பதர விந்தமா துளம்பூவித் தழல்கல் லாரங்
கோளரிய கச்சோத நரந்தநறும் பலந்தீபங் கோப மென்ன.

(இ-ள்.) ஒளி விளங்குங் கமலராகம் கிரேதாயுகமுதலிய நான்கு உகங்களினும் முறையே மக்கம்-காளபுரம்-தும்புரம்-சிங்களம் (ஆகிய) இந்நான்கு தேயங்களில் தோன்றும். அக்கமலராகம் ஆளுகின்றநிறம் தாமரை மலர் மாதுளமலர் மாதுளம் விதை நெருப்பு செங்கழுநீர்மலர் குற்றமில்லாத மின்மினிப்பூச்சி நல்லநாரத்தம்பழம் விளக்கு இந்திரகோபம் (ஆகிய இவற்றைப்போல) ஒன்பதுவகை நிறங்களாம். எ-று.

திரேதாயுகத்திலே மக்கத்திலும், திரேதாயுகத்திலே காளபுரத்திலும்,துவாபரயுகத்திலே தும்புரத்திலும்,கலியுகத்திலே சிங்களத்திலும் தோன்றுமெனக்கொள்க.

இனி நாரத்தம்பழத்தை நீக்கிச் சூரியன் நக்ஷத்திரம்போது மிருக்குமெனப் பத்து வகைப்படுத்தி அதற்கியைய "ஆளுநிறம் பத்தாகு மனைமாது ளம்பூவித் தழல் கல்லாரங் - கோளரிய கச்சோத மாதித்த னுடுதீபங் கோப மென்ன" எனப் புதுப் பாடங் கொண்டாரு முளர்.

[இச்செய்யுள் முதலியவற்றிற் கூறப்படும் மணிகளின் நிறம் சிறிது வேறுபட்டிருத்தலும் சரு - ருஅ - ருக - சுஎ - சுகூ - எ௨ - என்னுஞ் செய்யுட்களிற் கூறுத குணங் குற்றமுதலியனவுஞ் சிலப்பதிகாரம் ஊர்காண்காதையில், கஅ௦ முதலிய அடிகளின் உரையிற் காண்க]

கல்லாடம்.

"கதிர்நிரை பரப்பு மணிமுடித் தேவர்கள் - கனவிலுங்காணுப் புனைவருந் திருவடி.-மாநிலந்தோய்ந்தோர் வணிகனுகி-யெழுகதிர் விரிக்குந் திருமணி யெடுத்து - வரையாக் கற்புட னென்கெனப் பெயர்பெற் - றுங்காங் காயிர கோடி சாகைகண் - மிடலொடு விரித்துச் சருக்கம் பாழி - வீயா வந்தம் பதநிரை நாத - மறைப்புப் புள்ளி மந்திர மொடுக்கமென் - றினையவை விரித்துப் பலபொருள் கூறும் - வேத முளைத்த வேதமில் வாக்காற் - குடுமிச் சேகரச் சமனொளி சூழ்ந்த - நிறைநதி நான்கி னிகழ்ந் தன குறியுங் - குருவிந் தஞ்சௌ கந்திகோ வாங்கு - சாதரங் கம்மெனுஞ் சாதிக ளென்குந் - தேக்கி னெருப்பிற் சேர்க்கி னங்கையிற் - றாக்கிற் றகட்டிற் சுடர்வாய் வெயிலிற் - குச்சையின் மத்தகக் குறியி னோரத்தி - னெய்த்துப் பார்வையி னேர்ந்து செவந்தாங் - கொத்த நற்குண முடையபன் னிரண்டுங் - கருகிநொய் தாதல் காற்று வெருளி - திருகன் முரணே செம்ம ணிறுகன்-மத்தகக் குழிவு காச மிலேச்சுமி - வெச்சம் பொரிவு புகைதல் புடாயஞ் - சந்தை நெய்ப் பிலியெனத் தருபதினறு - மூந் திய நூலின் மொழிந்தன குற்றமுஞ்-சாதகப் புட்கண் டாமரை கழுநீர் - கோப மின் மினி கொடுங் கதிர் விளக்கு - வன்னி மாதுளம் பூவிதை யென்னப் - பன்னுசா தரக்க வொளிக்குணம் பத்துஞ் - செம்பஞ் சரத்தந் திலக முலோத்திர - முயலின் சோரி சிந்துரங் குன்றி - கவிரல ரொன்னக் கவர்நிற மெட்டுங் - குருவிந் தத்திற் குறித்தன நிறமு - மசோகப் பல்லவ மலரிசெம் பஞ்சு - கோகிலக் கண்ணீ டிலவலர் செம்பெனத்-தருசௌ கந்தி தன்னிற மாறுஞ் - செங்கல் குராமலர் மஞ்சள் கோவை - குங்கும மஞ்சிற் கோவாங்கு நிறமுந் - திட்டை யேறு செவந்த விதாய - மொக்கல் பூற் றுங் குருதி தொழுனை - மணிகோ கனகங் கறங்க பாடி - மாங்கிச கந்தி வளர்காஞ் சுண்டையென் - றுங்கொரு பதின்மூன் றடைந்தன குற்றமு - மிவை யெனக்கூறிய நிறையருட் கடவுள் * * * *" எனவரும் அகவற்பாவிலுங் கூறப்பட்டிருப்பதுங் கண்டுகொள்க. (கஎ)

இந்நிறத்த பொதுவாய மாணிக்க மறையவர்முன் னியனுற் சாதி
தன்னியல்பாற் சாதரங்கங் குருவிந்தஞ் சௌகந்தி கங்கோ வாங்க
மென்னுமிவற் றூற்சிறந்து நான்காகு மிவ்வடைவே யிந்நான் கிற்குஞ் [மின்.
கொன்னவொளி பத்திருநான் கிருமூன்று நான்கவையுஞ் சொல்லக் கேண்

(இ-ள்.) பொதுவாயுள்ள இந்நிறங்களையுடைய கமலராகமானது பிராமணர் முதலிய நான்குசாதி வகைப்பட்டு வழங்கும் வழக்கால், சாதரங்கம் - குருவிந்தம் - சௌகந்திகம் - கோவாங்க மென்னும் இப்பெயர்களால் மேம்பட்டு நான்கு

வகைப்படும். இந்நான்கு சாதிகட்கும் கூறிய நிறமானது இவ்வகையே பத்தும், எட்டும், ஆறும், நான்குமாம். அவற்றையுஞ் சொல்லக்கேளுங்கள். எ-று.

சாதரங்கம் பிராமணசாதியும், குருவிந்தம் க்ஷத்திரிய சாதியும், சௌகந்திகம் வைசிய சாதியும், கோவாங்கம் சூத்திரசாதியு மெனக் கொள்க.

மேற்காட்டிய வகவலில் "குருவிந் தஞ்சௌ கந்திகோ வாங்கு - சாதரங்க மெனச் சாதிகணான்கும்" என நால்வகைச் சாதியாகப் பிரித்தல் காண்க. கோவாங்கம் என்பது கவாங்க மென்னும் வடசொற்றிரிபு. கோவாங்கத்தைச் சிலப்பதிகார வுரையிற் படிகமென்பர் அடியார்க்கு நல்லார். (௯௮)

சாதரங்க நிறங்கமலங் கருநெய்த விரவிபொளி தழல்கச் சோத
மாதுளம்பூ மாதுளம்வித் துக்கார்விளக்குக் கோபமெனா வகுத்த பத்து
மேதகைய குருவிந்த நிறங்குன்றி முயறகுருதி வெள்ளை லோத்தம்
போதுபலா சலர்திலகஞ் செவ்வரத்தம் விதாரமெரி பொன்போ லெட்டும்

(இ-ள்.) சாதரங்க நிறமானது தாமரைப்பூ - கருநெய்தற்பூ - சூரியவொளி - நெருப்பு - மின்மினிப்பூச்சி - மாதுளம்பூ - மாதுளம் விதை - மேகம் - தீபம் - இந்திர கோபம் எனப்பிரித்த பத்துநிறமாம். மேன்மைத்தன்மையுடைய குருவிந்தநிறமானது குன்றிமணி - முயலிரத்தம் - வெள்ளலோத்தம்பூ - முண்முருக்கம்பூ - மஞ்சாடிப்பூ - செவ்வரத்தம்பூ - வெள்ளிலவம்பூ - விளங்குகின்றபொன் (ஆகிய இவற்றைப்) போல எட்டு நிறமாம். எ-று.

இச்செய்யுளிற் கூறியவற்றை ஷை யகவல்

"சாதகப்புட்கண் டாமரை கழுநீர் - கோப மின்மினி கொடுங்கதிர் விளக்கு
வன்னி மாதுளம் பூவிதை யென்னப்-பன்னுசா தரங்க வொளிக்குணம் பத்தும்"-
என்றும்,

"தாமரைகழுநீர் சாதகப்புட்கண் - கோபமின்மினி கொடுங்கதிர் விளக்கு
மாதுளம் பூவிதை வன்னியீரைந்தும் - ஓது சாதரங்க வொளி யாகும்மே" என்றும்,

"செம்பஞ சரத்தந் திலக முலோத்திரம் - முயலின் சோரி சிந்தூரங் குன்றி
கவிரல னொன்னக் கவர்நிற மெட்டும்" என்றும்,

"குருவிந் தத்தின் குறித்தன நிறமும் - திலகம லோத்தஞ் செம்பருத்திப்பூ-
கவிர் மலர் குன்றி முயலுதி ரம்மே - சிந்தூரங் குகிற் கண்ணென வெட்டும்-
எண்ணிய குருவிந்த மண்ணிய நிறமே" என்றுஞ் சிறிது வேறுபடக் கூறுதலுங் காண்க.

வெள்ளலோத்த மென்றது ஓர்வகைத் துவர்மரம். (௯௯)

களிதருசௌ கந்திகத்தி னிறமிலவம் போதுகுயிற் கண்ண சோகந்
தளிரவிர்பொன் செம்பஞ்சி யைவண்ண மெனவாறு தகுகோ வாங்க
வொளிகுரவுகுசும்பைமலர்செங்கல்கொவ் வைக்கனியென் றொருநான்காந்த
மிளிர்பதும ராகத்தைப் பொதுமையினாற் சோதிக்க வேண்டு மெல்லை.

(இ-ள்.) களிப்பைத்தருஞ் சௌகந்திகத்தின் நிறமானது இலவம்பூ - குயிலின்கண் - அசோகந்தளிர் - விளங்கும் பொன்-செம்பஞ்சு-மருதோன்றி என்று ஆறு வகை. கோவாங்கத்தின் நிறமானது குராமலர் - குசும்பைமலர்-செங்காவிக்கல்-கொவ்வைப்பழம் என்று நான்குவகை. விளங்காநின்ற அந்தக்கமலராகத்தைப் பொது விலக்கணத்தால் ஆராய வேண்டுமளவில். எ-று.

இவற்றின் நிறவேறுபாடுகள் முறையே யெழுதப்புகின் அளவில்லாதலின், முக்கியமான இடங்களிற் காட்டுதும். (௱)

திண்ணியதாய் மேல்கீழ்சூழ் பக்கமுற வொளிவிடுதல் செய்தாற் செவ்வே
யண்ணியவுத் தமமுதன்மூன் றாமென்பர் சாதரங்க மணிவோர் விச்சை
புண்ணியவான் கன்னியறு சுவையன்ன முதலான புனித தானம்
பண்ணியதும் பரிமேத யாகமுதன் மகம்புரிந்த பயனுஞ் சேர்வர்.

(இ-ள்.) கனமுடையதாய் மேலுங் கீழும் (இவற்றைச்) சூழ்ந்த பக்கமும் (ஆகிய இடங்களில்)பொருந்த ஒளிவிட்டாற் கிரமமாகப் பொருந்திய உத்தமமுதலிய மூன்றுவகைப்படுமென்பார்கள். சாதரங்கத்தைத்தரிப்போர் கல்வியும் புண்ணிய வடிவாயுள்ளபசுவும், கன்னிகையும்,அறுசுவையுடைய அன்னமுமுதலாகியகுற்றமில்லாத தானங்களைச் செய்த பலனையும், அசுவமேத முதலிய யாகஞ்செய்த பலனையு மடைவார்கள். எ-று.

மேலே ஒளிவிட்டால் உத்தமமும், கீழே ஒளிவிட்டால் அதமமும், பக்கங்களில் ஒளிவிட்டால் மத்திமமு மென்க. (சுக)

குருவிந்தந் தரிப்பவர்பார் முழுதுமொரு குடைநிழலிற் குளிப்ப வாண்டு
திருவிந்தை யுடனிருப்பர் சௌகந்தி கந்தரிப்போர் செல்வங் கீர்த்தி
மருவிந்தப் பயனடைவர் கோவாங்கந் தரிப்போர்தம் மனையிற் பாலும்
பெருவிந்த மெனச்சாலி முதற்பண்ட முடன்செல்வப் பெருக்கு முண்டாம்.

(இ-ள்.) குருவிந்தத்தைத் தரிப்பவர்கள் உலகமுழுதும் அரசுபுரிந்து தனலக்ஷுமி வீரலக்ஷுமிகளுடன் கூடியிருப்பார்கள். சௌகந்திகத்தைத் தரிப்பவர்கள் பொருந்திய செல்வம் கீர்த்தி (ஆகிய) இந்தப் பயன்களை யடைவார்கள். கோவாங்கத்தைத் தரிப்பவர்களுடைய வீட்டில், பாலும் பெரிய விந்தமலைபோல நெல் முதலிய பல பொருட்குவியல்களுடன் செல்வப்பெருக்கும் உண்டாகும். எ-று. (சஉ)

எள்ளியிடு குற்றமெலா மிகந்துகுண னேற்றொளிவிட் டிருள்கால் சீத்துத்
தள்ளியவிச் செம்பதும ராகமது புனைதக்கோர் தம்பா லேனைத்
தெள்ளியமுத் துள்ளிட்ட பன்மணியும் வந்தோங்குஞ் செய்யா ளோடு
மொள்ளியநற் செல்வமதற் கொப்பநெடும் பாற்கடலி னோங்கு மாலோ.

(இ-ள்.) இலக்கப்பட்ட குற்றங்க ளெல்லாவற்றினும் நீங்கி, குணமிருந்து ஒளிவிட்டு இருளைச் சிதைத்தோட்டும் இந்தச் செவந்த கமலராகத்தை யணிந்த மேலோரிடத்தில், ஏனைய குணமிருந்த முத்து உள்ளிட்ட ஒன்பதுரத்தினங்களும் வந்து நிரம்பும். திருமகளுடன் புகழைத்தரும் நல்ல செல்வமும் அதற்குச் சமமாக நெடிய பாற்கடல்போல வளரும். எ-று.

"எள்ளியிடு குற்றமெலா மிகந்து குணனேற்று" எனப் பொதுப்படக் கூறினோேனும், குற்றங்கள் பதினறென்றும், குணங்கள் பன்னிரண்டென்றுங் கொள்க. அவற்றை,

கல்லாடம்.

"கருகிநொய் தாதல் காற்று வெகுளி-திருகன் முரணே செம்மணிறுகல்-மத்தகக்குழிவு காசமிலைச்சுமி - வெச்சம் பொரிவு புகைதல் புடாயம் - சந்தைநெய்ப் பிலியெனத் தருபதி னறு-முந்திய நூலின் மொழிந்தன குற்றமும்" என்பதனுனும்,

"தேய்க்கி னெருப்பிற் சேர்க்கி னங்கையிற் - றாக்கினற் றகட்டிற் சுடர்வாய் வெயிலிற் - குச்சையின் மத்தகக் குழியினே ரத்தில்-நெய்ப்பிற் பார்வையி னேர்ந்து செவந்தாங்-கொத்த நற்குண முடையபன் னிரண்டும்" என்பதனுனு முணர்க

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

பிறநிறச் சார்பு புள்ளி புள்ளடி பிறங்கு கீற்று
மறுவறு தராச மென்ன வருத்தவைங் குற்றந் தள்ளி
யறைதரு பண்பு சான்ற வரதன மணியும் வேந்தன்
செறுநர்வா ளூற்ற மின்றிச் செருமகட் கன்ப னுவான்.

(இ-ள்.) அன்னிய நிறம்பொருந்துதலும், புள்ளியும், (பறவையின் பாதவடிவாயுள்ள) புள்ளடியும், விளங்குகின்ற கீற்றும், குற்றம் பொருந்திய தராசமுமெனக் கூறிய ஐந்து குற்றங்களையு மொழித்து, (அவ்வவற்றிற் குரிமையாக நூல்கள்) கூறுங் குணமிக்க இரத்தினங்களை யணியும் மன்னவன் பகைவரேந்திய வாளால் இடையூறில்லாமல் வீரலக்ஷ்மிக்கு நண்பனுவான். எ-று.

இதுமுதல் ஒன்பது செய்யுள்களால் இரத்தினங்களின் பொதுவிலக்கணங் கூறப்பட்டது.

விந்து எனப் புள்ளியையும், காகபாதம் எனப் புள்ளடியையும், தாரை எனக் கீற்றையும், ஒளிசலித்தல் எனத் தராசத்தையுங் கூறுவது நவமணி யிலக்கணங் கூறு நூன்மரபு. (சச)

குறுநிலக் கிழவ னேனு மவன்பெருங் குடைக்கீழ்த் தங்கி
மறுகுநீர் ஞால மெல்லாம் வாழுமற் றவனைப் பாம்பு
செறுவிலங் கலகை பூதஞ் சிறுதெய்வம் வறுமை நோய்தீக்
கறுவுகொள் கூற்றச் சீற்றங் கலங்கிட வாதி யாவாம்.

(இ-ள்.) (உத்தம ரத்தினங்களை யணிபவன்) சிற்றரசனுயினும், அவனது பெரிய (வெண்கொற்றக்) குடைநிழலின்கீழ், அசைகின்ற கடல்சூழ்ந்த உலகமுழுதும் நிலைபெற்று வாழும். அவனைப் பாம்பும், கொல்லாநின்ற மிருகமும், பேயும், பூதமும், சிறு தெய்வங்களும், தரித்திரமும், நோயும், நெருப்பின் வெம்மைபோல வெம்மைவாய்ந்த கோபமிக்க யமனது கோபமும், நிலைகலங்க வருத்தஞ் செய்யமாட்டா.

நால்வருண ரத்தினங்கள் அணிவோர் பலன் பொதுமையாற் கூறினர். இன்னவருண ரத்தினமணியின் இன்னபலனென்பதை,

சிலப்பதிகாரம்.

"மறையோரணியின் மறையோ ராகிப் - பிறவி யேழும் பிறந்து வாழ்குவரே.
மன்னவர ணியின் மன்னவர் சூழ - இந்நில வேந்த ராவொழு பிறப்பும்.
வணிக ரணியின் மணிபொன் மலிந்து - தணிவற வடைந்து தரணியில் வாழ்வர்.
சூத்திர ரணியிற் றொகையில் கனகநெல்-வாய்ப்ப மன்னி மகிழ்ந்துவாழ் குவரே."
என வரும் உதாரணச்சூத்திரங்களானறிக. (சரு)

முன்னவ ரென்ப கற்றோர் வச்சிர முந்நீர் முத்த
மன்னவ ரென்ப துப்பு மாணிக்கம் வணிக ரென்ப
மின்னவிர் புருட ராகம் வயிரேயம் வெயிற்கோ மேதம்
பின்னவ ரென்ப நீல மரகதம் பெற்ற சாதி.

(இ-ள்.) கற்றுவல்லவர் வயிரத்தையுங் கடலிற்றோன்றிய முத்தையும் பிராமணரென்று சொல்லுவர். பவளத்தையும் மாணிக்கத்தையும் க்ஷத்திரியரென்று கூறுவர். ஒளிவிளங்கும் புருடராகத்தையும் வயிரேயத்தையும் பிரகாசிக்குங் கோமேதகத்தையும் வைசியரென்று சொல்லுவர். நீலத்தையும் மரகதத்தையுஞ் சூத்திரரென்று கூறுவர். (இவை இவ்விரத்தினங்கள்) பெற்ற சாதி (வகுப்புகள்,) எ-று.

" வயிரமுத் தந்த ளூன் மாணிக்கம் பவளம் வேந்தன்
நயமலி புட்ப ராக நல்லகோ மேத நீதி
வயவயி யே மூன்றும் வாழ்வுறு வணிக ருரும்
இயலுடை நீலம் பச்சை யிரண்டுஞ்சூத் திரனு மன்றே " என்றெடுத்துக் காட்டியசிலப்பதிகார உதாரணச் செய்யுளா னறிக. (சசு)

பார்த்திபர் மதிக்கு முத்தம் பளிங்கன்றிப் பச்சை தானுஞ்
சாத்திகந் துகிர்மா ணிக்கங் கோமேதந் தாமே யன்றி
மாத்திகழ் புருட ராகம் வயிடூயம் வயிரந் தாமு
மேத்திரா சதமா நீலந் தாமத மென்ப ராய்ந்தோர்.

(இ-ள்.) நூலாராய்ச்சியில் வல்லவர்கள், அரசர்கள்மதிக்கும் முத்தும்படிக மும் அன்றிப் பச்சையுஞ் சாத்துவிகமாம். பவளமும் மாணிக்கமும் கோமேதமும் அன்றி மிகவும் விளங்கும் புருடராகமும் வயிடூயமும் வயிரமும் (பலருந்) துதிக்கும் இராசதமாம். நீலம் தாமதமாம் என்பர். எ-று.

இவற்றுட் சில வேறுபடவும் ஒரு சாரார் கூறுவர். (சஎ)

இனையவை யளந்து கண்டு மதிக்குநா ளெழுமான் பொற்றேர்
முனைவனுண் முதலா மேழின் முறையினுற் பதும ராகங்
கனைகதிர் முத்தந் துப்புக் காருடம் புருட ராகம்
புனையொளி வயிர நீல மென்மனூர் புலமை சான்றோர்.

(இ-ள்.) இவ்விரத்தினங்களை அளவிட்டுச் சோதித்து ஆராயுங்காலம் எழு புரவிகட்டிய அழகிய தேரையுடையபானுவாரமுதலிய எழுகிழமைகளில்,முறையுடன் பதுமராகமும், மிக்க கிரணத்தையுடைய முத்தும், பவளமும், பச்சையும், புருடராக மும், பொருந்திய ஒளியையுடைய வயிரமும், நீலமுமென்று சொல்லுவர் அறிவின் மிக்க மேலோர். எ-று.

எனவே ஞாயிற்றுக்கிழமையில் பதுமராகமும், திங்கட்கிழமையில் முத்தும் செவ்வாய்க்கிழமையில் பவளமும், புதன்கிழமையில் பச்சையும், வியாழக்கிழமையில் புருடராகமும், வெள்ளிக்கிழமையில் வயிரமும், சனிக்கிழமையில் நீலமும் பரீக்ஷிக்க த்தக்கது என்க.

ஏனைய இண்டு மணிகட்கும் வருஞ் செய்யுளால் அவற்றைப் பரீக்ஷிக்குங் காலங் கூறப்படும். (சஅ)

வெய்யவன் கிழமை தானே மேதகு மணிக்கு மாகு
மையறு திங்க டானே வயிடூய மணிக்கு மாகு
மையற விவையொன் பானும் மாய்பவ ரகம்பு றம்பு
துய்யரா யறவோ ராய்முன் சொன்னநா ளடைவே யாய்வர்.

(இ-ள்.) ஞாயிற்றுக்கிழமையே கோமேதகமணிக்கும் (ஆராய்தற்கு) உரிய தினமாகும். குற்றமற்ற திங்கட்கிழமையே வைடூரியரத்தினத்திற்கும் (ஆராய்தற்குரிய தினம்) ஆகும். இந்நவரத்தினங்களையுஞ் சந்தேகமற அளந்தறிவோர் உள்ளும் புறம் பும் புனிதமுடையவராய்த் தருமமார்க்கத்தில்நடப்பவராய் முன்புகூறிய தினங்களில் முறையே ஆராயக்கடவர். எ-று.

மேலிரண்டு செய்யுள்களின் கருத்தை

" ஞாயிறு மாணிக் கங்கோ மேதகந் திங்கண் முத்தம்
வாய்வயி யேஞ் செவ்வாய்[illegible]ன்பவ ளங்க ளாகும்

மேயவன் புதனிற் பச்சை வியாழமே புட்ப ராகம்
காய்கதிர் வெள்ளி வச்ரங் கடுஞ்சனி நீல மாமே." என்னும் உதாரணச் செய்யுளா னறிக. (௫௯)

அல்லியம் பதுமஞ் சாதி யரத்தவா யாம்பல் கோடல்
வல்லிசேர் மௌவற் போது நூற்றிதழ் மரைகா லேய
மெல்லிதழ்க் கழுநீர் பேழ்வாய் வெள்ளைமந் தார மின்ன
சொல்லிய முறையால் வண்டு சூழத்தன் முடிமேற் சூடி.

(இ-ள்.) அகவிதழ்கள் பொருந்திய அழகிய தாமரைமலரும், சிறு சண்பக மலரும், செவந்த வாயையுடைய ஆம்பல் மலரும், செங்காந்தள் மலரும், கொடியாய்ப் படர்ந்த மல்லிகை மலரும், நூறு இதழ்கள் பொருந்திய தாமரை மலரும், மரமஞ்சண் மலரும், மெல்லிய இதழ்களையுடைய கருங்குவளை மலரும், பிளந்த வாயையுடைய வெள்ளை மந்தாரமலரும், (ஆகிய) இவை போல்வனவற்றை முறைப்படி வண்டுகள் சூழத் தமது தலைமேற் சாத்தி. எ-று.

இதுமுதல் மூன்றுபாடல்கள் குளகம்.

இம்மலர்களொன்பதும் முறையே மாணிக்க முதலிய மணிகளொன்பதுக்கும் அணியத்தக்கவை யென முறையே கொள்க. அன்றியும் இன்ன என்றதால் நீலத்திற்குக் கருங்குவளையன்றிக் கருவிளமலர்சூடுவதுமுண்டு. அதனையும் இச்செய்யுளின் கருத்தையும்,

"நவமணி யருச்சித் தற்கு நறுமலர் புனைதல் சொல்வாம்
தவறின்மா ணிக்கத் திற்குத் தாமரைப் பூத்த ரிக்க
உவகையா முத்துக் கோது மொண்சிறு சண்ப கப்பூ
கவைபடு பவளம் பார்க்கிற் கமழுஞ்செவ் வல்லிப் பூவே.

மரகதங் காந்தள் புட்ப ராகமல் லிகைப்பூ வச்ரம்
நுரைதரு நீரிற் பூத்த நூற்றிதழ்த் தாம ரைப்பூ
கருநீலங் கருவி ளங்கோ மேதகங் கமழுங் காவி
திரைவயி ரேரி யப்பூத் தேங்கமழ் வெண்மந்தாரை"—எனவருஞ்செய்யுள்களா னுணர்க. காலேயம்=மரமஞ்சள் மலர். (௬0)

தலத்தினைச் சுத்தி செய்து தவிசினை யிட்டுத் தூய
நலத்துகில் விரித்துத் தெய்வ மாணிக்க நடுவே வைத்துக்
குலத்தமுத் தாதி யெட்டுங் குணத்திசை முதலெண் டிக்கும்
வலப்பட முறையே பானு மண்டல மாக வைத்து.

(இ-ள்.) பூமியைச் சுத்திசெய்து பீடத்தையிட்டு (அதன்மேல்) புனிதமாகிய நல்ல வஸ்திரத்தை விரித்து, தெய்வத்தன்மையுடைய பதுமராகத்தை நடுவே வைத்து, நன்மைதரும் முத்து முதலிய எட்டையும், கீழ்த்திசை முதலிய எட்டுத் திசைகளிலும் முறையே வலமாகச் சூரியமண்டலம் போல, வட்டவடிவாக (சுற்றிலும்) வைத்து.

இரத்தினங்கள் வைக்குமுறைமையை,

"தூயநன் னிலத்தி லொத்த சுத்தபீ டத்தை வைத்து
மேயவப் பீட மீது வெண்படாம் விரித்து வைத்துப்
பாயவப் படத்து நாப்பண் பதுமரா கத்தை வைத்துச்
சேயவா தவனு திக்குந் திசைமுத நிறைசக டோறும்.

கோமேத நத்து முத்துக் குளிர்வயி ரேரி யஞ்செந்
தூமேவு பவளம் பச்சை சுந்தரப் புட்ப ராகம்
வாமேவு வயிரநீல மெண்டிசை வலஞ்சூழ் வைத்து—" என மாறுபடாது கூறுதலுங் காண்க. (௩க)

அன்புறு பதும ராக மாதியா மரத னங்க
ளொன்பதுங் கதிரோ னாதி யொன்பது கோளு மேற்றி
முன்புரை கமலப் போது முதலொன்பான் மலருஞ் சாத்தி
யின்புற நினைந்து பூசை யியன்முறை வழாது செய்தல்.

(இ-ள்.) அன்புடைய பதுமராகமுதலிய நவரத்தினங்களுஞ் சூரியன் முதலிய நவக்கிரகங்களாகக் கொண்டு, (அம்மணிகளில் அக்கோள்களை) ஆவாகனஞ் செய்து, முன்கூறிய தாமரைப்பூ முதலிய ஒன்பது மலர்களையும் (முறையே) சாத்தி, இன்பம்பொருந்த (நவக்கிரகங்களை) த்தியானித்துவிதிவழாது பூசைசெய்யக்கடவர். எ-று.

பதுமராகத்திற்குச் சூரியனும், முத்திற்குச் சந்திரனும், பவளத்திற்கு அங்காரகனும், பச்சைக்குப்புதனும்,புருடராகத்திற்குப் பிரகற்பதியும்,வயிரத்திற்குச் சுக்கிரனும், நீலத்திற்குச் சனியும், கோமேதத்திற்கு இராகுவும், வைரியத்திற்குக் கேதுவும் அதிதேவதைகளென்பர். இவ்வாறன்றிக் கோமேதத்திற்குச் சூரியனும், வைரியத்திற்குச் சந்திரனும் அதிதேவதை யென்பதுஞ் சிலர் கருத்து. (௩௨)

தக்கமுத் திரண்டு வேறு தலசமே சலச மென்ன
விக்கதிர் முத்தந் தோன்று மிடன்பதின் மூன்று சங்க
மைக்கரு முகில்வேய் பாம்பின் மத்தகம் பன்றிக் கோடு
மிக்கவெண் சாலி யிப்பி மீன்றலை வேழக் கன்னல்.

(இ-ள்.) தகுதியாகிய முத்துக்கள் தலசமெனவுஞ் சலசமெனவும் இருவகையாகும். ஒளிவிடும் இம்முத்துக்கள் ஜனிக்கும் இடங்கள் பதின்மூன்றும். சங்கும், கரியமேகமும், மூங்கிலும், பாம்பின்றலையும், பன்றிக்கொம்பும், மிக்க வெண்ணெல்லும், சிப்பியும், மீன்தலையும், கரும்பும். எ-று.

இதுமுதல் இரண்டு செய்யுள்கள் ஒரு தொடர்.

தலசம்-தல சம்பந்தமாகப் பிறப்பன. சலசம்-ஜலசம்பந்தமாகப் பிறப்பன. சங்கு - முகில் - இப்பி - மீன் இவற்றிற் சனிப்பன சலசமென்றும், ஏனையவை தலசமென்றுங் கொள்க. (௩௩)

வேழக்கன்னல் - இருபெயரொட்டுப் பண்புத்தொகை.

கரிமருப் பைவாய் மான்கை கற்புடை மடவார் கண்ட
மிருசிறைக் கொக்கின் கண்ட மெனக்கடை கிடந்த மூன்று
மரியன வாதிப் பத்து நிறங்களு மணங்குந் தங்கட்
குரியன நிறுத்த வாறே யெனவு முரைப்பக் கேண்மின்.

(இ-ள்.) யானைக்கோடும், சிங்கத்தின்கையும், கற்புடைய பெண்ணின் கழுத்தும், இரண்டு சிறகுகளுடைய கொக்கின் கழுத்தும் என (பதின்மூன்றும்.) கடைசியிற் கூறிய மூன்று முத்தங்களுங் கிடைத்தற்கரியன. முதலிற்கூறிய பத்து முத்தங்களின் நிறங்களும், தெய்வமும், அவற்றிற்குரிய நூல்களிற் கூறிய முறையே பிறவற்றையுஞ் சொல்லக்கேளுங்கள். எ-று.

ஐவாய்மான்-சிங்கம். இதற்குப் பஞ்சானனமென்றுங்கூறுப. முத்து இருபதிடங்களிற் றோன்றுமென்பதுஞ்சிலர் கொள்கை, அதனை,

" பனிமதி கதலி மேகம் பைந்தொடி கழுத்தா வின்பல்
தனியானை யேனக் கொம்பு தடங்கரா வுடும்பு கொக்கு
வினையராச் சலஞ்ச லம்நந் திப்பிமீன் மூங்கில் பூகம்
நினைசெந்நெல் கரும்பு கஞ்ச நிகழிரு பதின்முத் தாகும் "—எனவும்,

" தந்தி வராக மருப்பிப்பி பூகந் தனிக்கதலி
நந்து சலஞ்சல மீன்றலை கொக்கு நளினமின்னார்
கந்தரஞ் செந்நெல் கழைகன்ன வாவின்பல் கட்செவிகார்
இந்து வுடும்பு கராமுத்த மீனு மிருபதுமே" என்பதனானுமறிக. (௩௪)

மாடவெண் புறவின் முட்டை வடிவெனத் திரண்ட பேழ்வாய்க்
கோடுகான் முத்தம் வெள்ளை நிறத்தது கொண்மூ முத்த
நீடுசெம் பரிதி யன்ன நிறத்தது கிளைமுத் தாலி
பீடுசா னிறத்த ராவின் பெருமுத்த நீலத் தாமால்.

(இ-ள்.) வெள்ளிய மாடப்புறவின் முட்டையின் உருவம்போல வுருட்சி வாய்ந்த பிளந்த வாயையுடைய சங்கின்முத்து வெள்ளைநிறமுடையது. மேகத்தின் முத்து நெடிய செஞ்சூரியன்போன்ற நிறமுடையது. மூங்கிலின் முத்து கல்மழை போலப் பெருமையமைந்த நிறமுடையது. பாம்பின் பெரியமுத்து நீலரத்தின நிறமுடையதாம். எ-று.

கோடு - சங்கும் இப்பியும் எனக்கொள்க. (௩௫)

ஏனமா வாரஞ் சோரி யீர்ஞ்சுவைச் சாலி முத்த
மானது பசுமைத் தாகும் பாதிரி யனைய தாகு
மீனது தரளம் வேழ மிரண்டினும் விளையு முத்தந்
தானது பொன்னின் சோதி தெய்வதஞ் சாற்றக் கேண்மின்.

(இ-ள்.) பன்றிக் கொம்பின் முத்து உதிர நிறம் (உடையது) தண்ணிய சுவையுடைய வெண்ணெல்லின் முத்தானது பசுநிறமுடைத்தாகும். மீனின் முத்து பாதிரி மலர்போன்ற நிறமுடையது. வேழங்கள் இரண்டிலும் பிறக்கும் முத்து பொன்னின் நிறமுடையது. (அவ்வம்) முத்துக்குரிய அதிதேவதைகளைச் சொல்லக்கேளுங்கள். எ-று.

வேழம் இரண்டு என்றது யானையுங்கரும்பும் என்க. யானையென்றது ஈண்டு அதன் தந்தத்தை. (௩௬)

பான்முத்தம் வருணன் முத்தம் பகன்முத்தம் பகலோன் முத்த
மான்முத்த நீல முத்த மாசறு குருதி முத்தங்
கான்முத்தம் பசிய முத்தங் காலன்றன் முத்தந் தேவர்
கோன்முத்தம் பொன்போன் முத்தங் குணங்களும் பயனுஞ் சொல்வாம்.

(இ-ள்.) (மேற்கூறிய வற்றுள்) வெண்மை வாய்ந்த முத்துகள் வருணனுக்குரிய முத்துகளாம். சூரியன்போலும் ஒளிவீசும் முத்துகள் சூரியனுக்குரிய முத்துகள். நீலநிறம்பொருந்திய முத்துகள் திருமாலுக்குரிய முத்துகள். குற்றமற்ற உதிர நிற முத்துகள் வாயுவுக்குரிய முத்துகள். பச்சைநிறமுடைய முத்துகள் இயமனுக்கு உரிய முத்துகள். பொன்போல் ஒளிவிடும் முத்துகள் இந்திரனுக்குரிய முத்துகள். (இனி இம்முத்துகளின்) குணங்களையும் (அவற்றை யணிவோர் அடையும்) பலனையுஞ்சொல்லுவாம். எ-று. (௩௭)

உடுத்திர ளனைய காட்சி யுருட்சிமா சின்மை கையா
லெடுத்திடிற் றிண்மை பார்வைக் கின்புறல் புடிதமென்ன
வடுத்திடு குணமா றின்ன வணியின்மூ தணங்கோ டின்மை
விடுத்திடுந் திருவந் தெய்தும் விளைந்திடுஞ் செல்வம் வாழ்நாள்.

(இ-ள்.) நக்ஷத்திரத் தொகுதிபோன்ற தோற்றமும், உருட்சியும், குற்றமின்மையும், கையிலெடுத்தாற் கனமாயிருத்தலும், பார்த்தற்கு இன்பஞ்செய்தலும், காந்தி வீசுதலும், என்று சொல்லப்பட்ட அறுவகைக் குணங்க ளமைந்தனவாம். இத்தகைய முத்துகளை யணிந்தால், மூதேவியும் தரித்திரமும் நீங்கும்; திருமகள்வந்து சேருவள்; அயிசுவரியமும் (நீடித்த) ஆயுளும் வந்து சேரும். எ-று.

மாசு—காற்றேறு - மண்ணேறு - கல்லேறு-நீர்நிலை யென்னுங் குற்றங்கள்.

புடிதம்-காந்தி வீசுதல். சில நூலார் முத்திற்குக் குணம் ஆறு, குற்றம் பத்து என்பர். அவை சிறப்பு நூல்களிற்காண்க. (ருஅ)

மாசறு தவத்தோ னென்பும் வலாசுர னென்பும் வீழ்ந்த
கோசல மாதி நாட்டிற் பட்டது குணத்தான் மாண்ட
தேசதா யிலேச தாகித் தெள்ளிதா யளக்கி னெல்லை
வீசிய விலைய தாகி மேம்படு வயிரந் தன்னை.

(இ-ள்.) குற்றமற்ற தவசியாகிய ததீசி முனிவருடைய எலும்பும் வலாசுரனுடைய எலும்புஞ் சிந்திய கோசல முதலிய நாடுகளிற்றோன்றி, குணங்கள் மேம்பட்ட ஒளியுடையதாய் (கையிலெடுக்க) இலேசாய், சருச்சரை யகன்றதாய், (விலை) அளவிடில் அளவுகடந்த விலையையுடையதாகி, (இவ்வண்ணம்) மேம்பட்ட வயிரத்தை.

இதுமுதல் இரண்டுபாடல்கள் குளகம்.

[வைரம்—கோசலம் - கலிங்கம் - மதங்கம் - மாராட்டிரம் - சௌவீரம் - பௌண்டரம்-மகதமென்னும் நாடுகளிலும், இமயமலையிலு முதிப்ப தென்பர். இவை முறையே வாகைமலர்-மஞ்சள் மலர் - மல்லிகை மலர் - செம்மை - கருமை - நீலம் - பொன்-வெண்மை யென்னும் நிறத்தனவாம். இவற்றுள், வாழைமலர் - வாகைமலர் - மூங்கின்மலர் போன்றவற்றிற்குத் திருமாலும், வெண்ணிறம் - அறுகோண முள்ளவற்றிற்கு இந்திரனும், வண்டு - குவளைமலர் போன்றவற்றிற்கு இயமனும், இலவமலர் - பலாசமலர் போன்றவற்றிற்கு வாயுவும், கோங்க மலர்போன்றவற்றிற்கு வருணனும், நீர் நிறம்போன்றவற்றிற்குச் சந்திரனும், இந்திரகோபம் போன்றவற்றிற்குச் சூரியனும், தீப்போன்றவற்றிற்கு அக்கினியுந் தேவதையாம். படிகம் - முயற்கண் - வாழைக்குருத்து-கத்திபோல்வன முறையே அந்தணர் முதலிய நாற்சாதியவாய் அவ்வவ்வருணத்தாருக்கு உரிய வாகும். இவற்றை மகளிர் தந்தாலியினும் பதித்தணியலாகா. இன்னும் இவற்றின் குணம் குற்றம் பயன் முதலியவற்றை ஏனையவைபோலச் சிலப்பதிகாரம் ஊர்காண்காதையுட் காண்க.] (ருகூ)

குறுநிலத் தரசுந் தாங்கிற் குறைவுதீர் செல்வ மெய்தி
யுறுபகை யெறிந்து தங்கோன் முழுதுல கோச்சிக் காக்கும்
வறுமைநோய் விலங்கு சாரா வரைந்தநா ளின்றிச் செல்லுங்
கறுவுகொள் கூற்றம் பூதங் கணங்களு மணங்கு செய்யா.

(இ-ள்.) குறுநில மன்னனும் அணிந்தால், குறைவில்லாத செல்வமடைந்து, பொருந்திய பகைவரைச் செயித்து, தன் செங்கோல் உலகமுழுதுஞ் செலுத்திக்காப்

பான். (அவனை) தரித்திரமும் வியாதிகளும் அடையமாட்டா. வரையறுத்த நாளன்றி இடையில் வரும் அகாலமிருத்துவும் பூதங்களும் பசாசுகளுந் தீமை செய்யமாட்டா

மாமணி மரபுக் கெல்லாம் வயிரமே முதன்மைச் சாதி
யாமென வுரைப்பர் நூலோ ரதிகம்யா தென்னி லேனைக்
காமரு மணிகட் கெல்லாந் தமரிடு கருவி யாமத்
தூமணி தனக்குந் தானே தொளையிடுங் கருவியாகும்.

(இ-ள்.) பெரிய இரத்தினங்களின் மரபுகளுக்கெல்லாம் வயிரமே முதன்மைச் சாதியென்று, இரத்தின நூல் உணர்ந்தவர்கள் கூறுவார்கள். (அது) சிறந்தது என்ன காரணத்தாலென்றால், விருப்பஞ்செய்யும் பிறமணிகட்கெல்லாம் தொளையிடுங் கருவியாகும் அந்தப் பரிசுத்தமாகிய வயிரம் தனக்குந் தானே தொளையிடுங் கருவியாம் (ஆதல்பற்றி யெனக் கொள்க.) எ-று.

வைரம் முதன்மை என்றதை,

அகத்தியச்சூத்திரம்.

"வைர வூசியு மயன்வினை யிரும்புஞ்
செயிரறு பொன்னைச் செம்மைசெய் யாணியுந்
தமக்கமை கருவியுந் தாமா மவைபோ
லுரைத்திற முணர்த்தலு முரையது தொழிலே" என்பதனானுணர்க.

..தத் தோற்றங் கேண்மின் வலாசுரன் பித்தந் தன்னை
..ரைதமக் காகக் கௌவிப் பறந்தபுள் ளீர்ந்தண் டில்லித்
தரைதனிற் சிதற வீழ்ந்து தங்கிய தோற்ற மாகு
முறைதரு தோற்ற மின்னும் வேறுவே றுள்ள கேண்மின்.

(இ-ள்.) மரகதத்தின் தோற்றங் கேளுங்கள். வலாசுரனுடைய பிச்சினை, தனக்கு இரையாகக் கௌவிப்பறந்த கருடன் (நீர் வளப்பத்தால்) தட்பமமைந்த டில்லி நாட்டிற்சிதற, (அந்நிலத்தில்) வீழ்தலால், அங்கே பிறப்பனவாகும். இன்னமும் (நாம்) சொல்லும் மரகதத்தின் தோற்றங்கள் வெவ்வேறுள்ளன. (அவற்றையுங்) கேளுங்கள்.

வலாசுரன் பிச்சினைக் கருடன் கௌவிக் கைத்தல் கண்டு இமய முதலிய விடங்களி லுமிழ்ந்தமையால், மரகதத்திற்குக் கருடோற்கார மென்றோர் பெயர் வழங்கு மென்பர் அடியார்க்கு நல்லார். (௬௨)

விதிர்த்தவே லனைய வாட்கண் வினதைமா தருணச் செல்வ
னுதித்தவான் முட்டை யோட்டை யுவணவேற் றரையில் யாப்பக்
கதிர்த்தவோ டரையிற் றப்பி வீழ்ந்தொரு கடல்சூழ் வைப்பி
னுதித்தவா றுரு மின்னு மூண்டொரு வகையாற் றோற்றம்.

(இ-ள்.) அசைக்கின்ற வேலையும் வாளையும்போன்ற கண்களையுடைய வினதையென்பவள் அருணன்பிறந்த வெள்ளிய முட்டையின் ஓட்டைக்கருடனது அரையிற்கட்ட, விளங்கும் அம் முட்டையின் ஓடு அந்த அரையினின்றுந் தப்பிவிழுந்து கடல்சூழ்ந்த ஒருதீரத்தில் தோன்றியவண்ணம் ஒருவகையாம். இன்னும் ஒருவகையால் மரகதத் தோற்றமுள்ளது. எ-று.

வினதை தக்ஷப்பிரசாபதியின் குமாரத்திகளி லொருத்தியும், காசிபமுனிவர் மனைவியர் பதின்மூவருளொருத்தியுமாம். இவளே கருடனைப்பெற்றவள். (௬௩)

முள்ளரை முளரிக் கண்ணன் மோகினி யணங்கா யோட
வுள்ளரை மதியஞ் சூடி மந்தர வரைமட் டாகத்

துள்ளரி யேறு போலத் தொடர்ந்தொரு விளையாட் டாலே
யெள்ளரி தாய செந்தீ யிந்தியக் கலனுஞ் செய்தான்.

(இ-ள்.) தாமரைக்கண்ணராகிய திருமால் மோகினிவடிவாயோட, ஒள்ளிய அர்த்தசந்திரனைச் சூடிய சிவபெருமான் மந்தரமலையின் எல்லையளவாக ஒரு திரு விளையாட்டால், துள்ளிச்செல்லுஞ் சிங்கவேறுபோலப் பின்சென்று பழிப்பில்லாத செந்தீயாகிய இந்தியகலனுஞ் செய்தருளினர். எ-று.

முள் அரை முளரி என்றது முள்பொருந்திய தாளையுடைய தாமரை. (௬௪)

அப்பொழு தமல வித்தி லரியர குமரன் கான
வைப்புறை தெய்வத் தோடும் வந்தன னந்த விந்து
துப்புறு கருடன் கௌவிக் கடலினுந் துருக்க நாட்டும்
பப்புற விடுத்த வாறே பட்டது கலுழப் பச்சை.

(இ-ள்.) அந்தக்காலத்தில் தீயாகிய இந்தியத்தில், காட்டில் வசிக்கும் தெய்வப் பரிவாரங்களுடன் மகாசாத்தா வந்து தோன்றினர். அந்த விந்தினை வலியையுடைய கருடப்பறவை கௌவிக் கடலிலும், துருக்கநாட்டிலும் பரவவிடுத்த வழியே கருடப்பச்சை தோன்றியது. எ-று.

இதிற் கடல் என்றது கடற்கரையை. "விடுத்தவாறேபட்டது" எனவே, மந்தரமலையிலும் இந்தியஞ்சிந்திய விடமெல்லாம் மரகதம் உண்டாயிற்றென்பதும், உள்ளுரையாதலுணர்க.

திருமால் தலைவராயிருந்து தேவாசுரர்களைக் கூட்டிக்கொண்டு திருப்பாற் கடல் கடைந்து அதிற்றோன்றிய விஷத்திற்கஞ்சி, சிவபெருமானுக்கு முறையிட்டு அவரால் அதையுண்ணச்செய்து அவ்விறைவரருள்பெற்று மீட்டுங் கடைய அதில் அமுதம் பிறந்தது. தேவாசுரர்கள் அதுவிஷயமாக மாறுபட்டுப்போர்செய்யக்கருதிய வழி, திருமால் மோகினிவடிவேற்றுச்சூழ்ச்சியால் அசுரர்களெல்லாம் ஒருவரோடொருவர் போர்செய்திறக்கச்செய்து, தேவர்கட்கு அமிர்தம் பகிர்ந்தளித்து நிற்கையில் சிவபெருமான்கண்டு "ஸமஸ்தலோகவ்யாமோஹகாரி நாராயணீ ... ஹே ஸுந்தரி ... ... த்வம் மம சக்தி ..." என்றபடி எமதுசத்தியருள் நீயுமொரு சத்தியாதலின் எம்மைப் புணர்கவென்றுகூற, திருமால் நாணியோட, பெருமானும் பின்றொடர்ந்து சென்று புணர்ந்தனர். இவரிருவரிடமாக ஒரு புத்திரன் தோன்றினர். அவரே அரிகரனெனப்படுவர். இதனை,

கந்தபுராணம்-மகாசாத்தாப்படலம்.

"இந்த வண்ண மிருக்க முராரியும்
அந்தி வண்ணத் தமலனு மாகியே
முந்து கூடி முயங்கிய வெல்லையில்
வந்த னன்னெமை வாழ்விக்கு மையனே.

அத்த குந்திரு மைந்தற் கரிகர
புத்தி ரன்னெனு நாமம்பு னைந்துபின்
ஒத்த பான்மை யுருத்திரர் தம்மொடும்
வைத்து மிக்க வரம்பல நல்கியே" எ

## மேற்படி வேறு.

காடமே சுப்பிரமே காளமெனக் குணமூன்றாங் கருடப் பச்சைக்
கீடறுகி னிதழ்நிறத்த காடமது சாதியினா லிருவே றாகுஞ்
சாடரிய சகுணமெனச் சதோடமென வவையிரண்டிற் சகுணா மாறும்
பீடுபெறு காடமொடு முல்லசிதம் பேசலம்பித் தகமே முத்தம்.

(இ-ள்.) காடம்-சுப்பிரம்-காளம் எனக் கருடப்பச்சைக்குக் குணம் மூன்று. பெருமைவாய்ந்த அறுகின் இதழ்போலும் (பச்சை) நிறத்தையுடைய காடமானது கெடுதலற்ற சகுணமென்றுஞ் சதோடமென்றுஞ் சாதியினால் இருதிறப்படும். அவ் விருவகையில், பெருமைபெற்ற காடமோடும், உல்லசிதமென்றும், பேசலமென்றும், பித்தகமென்றும், முத்தமென்றும். எ-று.

இதுமுதல் இரண்டுபாடல்கள் குளகம்.

சகுணம் - குணசம்பந்தமுடையது. சதோடம் - தோஷசம்பந்தமுடையது.

"சகுணம் ஆறும்" என்பதைவருஞ் செய்யுளிற் கூட்டிக்கொள்க. (சுசு)

புல்லரிய பிதுகமென விவையாறிற் காடமது புல்லின் வண்ண
முல்லசித மெலிதாகும் பேசலமே குளச்செநெலொண் டாளம் போலு
மல்லடரும் பித்தகமே பசுங்கிளியின் சிறைநிறத்த தாகு முத்தங்
குல்லைநிறம் பிதுகமரை யிலையினிறஞ் சதோடத்தின் குணைந்தாகும்.

(இ-ள்.) அடைதற்கரிய பிதுகமென்றும் சகுணம் அறுவகைப்படும். இவை யாறனுள், காடமானது புல்லின் நிறமுடையதாம். உல்லசிதமானது மென்மைத் தன்மை யுடையதாகும். பேசலமானது குளநீரில் விளைந்த செந்நெற்பயிரிற் பிறந்த ஒள்ளிய முத்துப்போன்றதாம். இருளையோட்டும் (ஒளிமிக்க) பித்தகமானது பசிய கிளிச்சிறகு நிறமுடையதாம். முத்தமானது துளபநிறமுடையதாம். பிதுகமானது தாமரையிலைபோலும் நிறமுடையதாம். சதோடத்தின்குணம் (இப்படியே) ஐவகைப் படும். எ-று.

மெலிது - வழுவழுப்பு. [பேசலம் நெற்பயிரின் நுனிநிறத்த தென்பதே வடமொழியாயினும் அதன்தரளமும் பசுமைத்தாதல்பற்றித் தரளம்போலு மென் றனரென்க. அன்றித் தாளமெனப்பாடமோதி, செந்நெலின் ஒள்ளியதாளினழகை ஒக்குமென்னலும் ஒன்று.] (சுஎ)

தோடலே சாஞ்சிதமே துட்டமே தோடமூர்ச் சிதமே வெய்ய
தோடலே சத்திரெடு சூழ்மந்த தோடமெனத் தொகுத்த வைந்திற்
றோடலே சாஞ்சிதஞ்சம் பிரவிலையா மலரியிலை துட்ட நீலத்
தோடதாம் புல்லிநிறந் தோடமூர்ச் சிதமுளரி தோட லேசம்.

(இ-ள்.) தோடலே சாஞ்சிதமென்றும், துட்டமென்றும், தோடமூர்ச்சித மென்றும், கொடியதோடலேசமென்றும், நீங்காத மந்ததோடமென்றுந் தொகுத்துக் ...றிய(சதோடம்)ஐந்தனுள், தோடலேசாஞ்சிதமானது எலுமிச்சையிலை நிறமுடைய ... துட்டமானது அலரியிலை நிறமாம். தோட மூர்ச்சிதமானது கருங்குவளைப் புறவிதழ் நிறமுடையதாம். தோடலேசமானது தாமரையிலை(நிறமாம்.) எ-று.

"நீலத் தோடதாம் புல்லி நிறந்தோட மூர்ச்சிதம்" என்றதை, தோட ...வப்புல்லித்தோடு நிறமாம் என அன்வயங் கொள்க. தோடது என்றதில் ...ருள் விகுதி. தோடலேசாஞ்சிதம் என்றதைத் தோஷலேஸாங்வித ...ர். அஞ்சிதம்-அக்விதம் என்பன கூடியது என்னும் ஒரு பொரு (சுஅ)

மந்ததோ டங்கலப மயிலிறகி னிறமாமிவ் வகுத்த தோடஞ்
சிந்தவா னுதகுண மணியணிவோர் நாற்கருவிச் சேனை வாழ்நா
ளுந்தவாழ் வார்வலன்க ணீலமிரண் டரன்கண்டத் தொளிவிட் டோங்கு
மிந்திரநீ லந்தான்மா நீலமென வேறிரண்டுண் டின்னு நீலம்.

(இ-ள்.) மந்ததோடமானது தோகையுடைய மயிலிறகுபோல நிறமுடைய தாம். வகுத்துக் கூறிய இத்தோஷங்கள் நீங்க, (உத்தம) குணங்களினின்று நீங்காத மரகதரத்தினத்தை யணிபவர்கள் நால்வகைச் சேனையுடன் வாழ்நாளும் மேலோங்க (பேரரசராய்) வாழ்வார்கள். வலாசுரனுடைய இருகண்களாகிய நீலங்களும், சிவபெருமானுடைய நீலகண்டத்தைப்போல ஒளிவிட்டு விளங்கும். இன்னும் நீலமானது இந்திர நீலமென்றும், மகா நீலமென்றும் வேறே இரண்டுவகையாயுள்ளது. எ-று.

கருவிச்சேனை - இருபெயரொட்டுப் பண்புத்தொகை.

கண்டம் என்றது இருமடியாகு பெயராய், அரன்கண்டத்திலுள்ள நஞ்சத்தி லுதித்த மாநீலத்தை யுணர்த்தியது எனினும் அமையும். (௬௯)

முந்தியவிந் திரநீலம் விச்சுவரூ பனைமகவான் முடித்த நாளி
னந்தியடு பழிதவிர்ப்பான் புரியுமகப் பரிமகத்தி னறிய தூம
முந்தியரு மரியிமையா நாட்டநுழைந் தளிசேற்றி னொழுகும் பீளை
சிந்தியவா றிடைப்படுமொன் றிந்திரவின் னீலமெனத் திகழு நீலம்.

(இ-ள்.) முற்பட்ட இந்திர நீலமொன்று. விச்சுவ வுருவனை இந்திரன் (ஆசிரியனாகக்கொண்டு அவன் யாகத்திற்செய்த வஞ்சனைக்காக அவனைக்) கொன்றகாலத்தில்,மேம்பட்டுத் தன்னைத் துயரப்படுத்தும் பிரமஹத்தியை யொழிக்கச்செய்யும் பெரிய அசுவமேத யாகத்திலெழுந்த நறுமணங் கமழும் புகையானது மேலுற்றுப் பரவி அரிய இந்திரனுடைய இமையாத கண்களில் நுழைதலால், இளகிய சேறுபோல (அக் கண்களினின்று) ஒழுகிய பீளையானது சிந்தியவிடத்தில் தோன்றும். இந்த நீலம் இந்திரதனுசிலுள்ள (ஐவகை நிறங்களிலொன்றாகிய) நீலம்போல விளங்கும். எ-று.

இந்திரன் விச்சுவரூபனைக் கொன்று பிரமஹத்தியடைந்த சரிதத்தை இந்திரன் பழிதீர்த்த படலத்திற்காண்க.

மகத்+பரி-மகப்பரி என்று மரீஇயது. "அரும்பரி யிமையாநாட்டம்" என்றும் பாடமுண்டு. அப்பொழுது, குதிரைக்கண்ணினின்று தோன்றியதென் றுரைத்துக்கொள்க. (௭0)

சஞ்சையாம் பகற்கடவுண் மனைவியவன் கனலுடலந் தழுவ லாற்றா
தஞ்சுவா டன்னிழலைத் தன்னுருவா நிறுவிவன மடைந்து நோற்க
விஞ்சையா லறிந்திரவி பின்றொடர மாப்பரியா மின்னைத் தானுஞ்
செஞ்செவே வயப்பரியாய் மையல்பொறு திந்தியத்தைச் சிந்தி னானே.

(இ-ள்.) சஞ்சையென்னும் பெயருடைய சூரியன் மனைவியானவள், அவன் தீப்போன்ற தேகத்தைத் தழுவமுடியாது அஞ்சி, தன் சரீரசாயையைத் தன்வடிவமாக நிறுத்தி (அவனையணையத்தக்க வன்மைபெற) வனத்திற் சென்று தவஞ்செய்ய, சூரியன் தனது ஞானதிருஷ்டியாலறிந்து (அவ்விடஞ்சேர்ந்து) பின்தொடர, (அது கண்டு) பெண்குதிரை வடிவுடன் ஓடிய பெண்ணை அச்சூரியனு மிகச்செவ்விய ஆண் குதிரையாய்ப் பின்சென்று, காமமயக்கம் ஆற்றாமல் விந்துவைக் கலனஞ்செய்தான்.

சஞ்சை - ஸம்ஞா என்னும் வடமொழித் திரிபு.

சூரியன், தோஷ்டா வென்பவன் பெற்ற சஞ்ஞிகை யென்னுங் கன்னி கையை மணந்து அவளைக்கூடி வைவச்சுதமனு - இயமன், யமுனை யென்னும் பெண் இவர்களைப் பெற்றனன். அவள் சூரியனுடைய உடல் வெம்மைக் காற்றுமல் தன்னிழலை யோர் பெண்ணாகச் செய்து சாயையே! இவ்விருத்தாந்தத்தை வெளியி டாது இங்கிருக்கக்கடவாயென்று கூறித் தன்பிதாவை யடைந்து நடந்தவரலாற்றை ச்சொல்ல, அவன் சினந்து "உடனேகணவனிடஞ் செல்க" என, சஞ்ஞிகை மீண் டும் சூரியனிடம் போதற்கு அஞ்சி, உத்தரகுருவென்னுமிடத்தில் சருகுபக்ஷணஞ்செ ய்து அருந்தவத்திலிருந்தனள். சஞ்சை, இவள் சாயை யென்று கருதாது அவளைப் புணர, சாவணி யென்னும் எட்டாம் மனு - சனி, பத்திரை யென்னும் பெண் இவர் கள் பிறந்தனர். சாயை அதுமுதல் தன்மக்களைச் சீராட்டி மூத்தாள் மக்கள் மூவரை யும் சிறுமாறு செய்ய, இயமன் மனந்தாளாது அவளை உதைத்து "உதைத்தகால் புழு ச்சொரிக" எனச் சாபம் பெற்றுச் சூரியன்பால் முறையிட, சூரியன் "அவள் உன காலிற் புழுவாகிச் சிறிது தசை தின்று ஒழிவள்" என்று சாபானுக்கிரகங்கூறிச் சா யையையடைந்து "இஃதென்"என வினவ, அவள் ஒன்றுங்கூறாதிருக்க யோகதிருட் டியாலறிந்து தன் மாமனாகிய தொவ்ஷ்டாவிடஞ் சேர்ந்து "என்மனைவி யாண்டுளள்" என,தொவ்ஷ்டா"அவள்உன்உடல்வெம்மைக்காற்றுமல் உத்தரகுருவில் பெண்குதிரை வடிவாய்த் தவத்திலிருக்கின்றனள் அவளை யணைகையில் நின்வெம்மையை யடக்கவே ண்டும்" என்று விடுப்ப, சூரியன் அவள் தவஞ் செய்யுமிடத்தில் ஆண்குதிரைவடிவு டன் சென்று "தவஞ்செய்யும் நீயாவள்?" என, அவள்கணவனென்றறிந்து பயந்து தவத்தைவிட்டோடச் சூரியனும் பின்தொடர்ந் தோடினன். அப்பொழுது சூரியனு டைய இருமூக்குவழியும் வீரியம் ஒழுகியது. அதினின்று அசுவினிதேவர் பிறந்தனர். பிறகு அவளைத்தேற்றி அழைத்துக்கொண்டுசென்றனன் என்பது. இது காசிகண்டம் செவ்வாய் வியாழம் சனியுலகங்கண்ட அத்தியாயத்திற் கூறப்பட்டசரிதம். (எக)

அவைசிதறும் புலந்தோன்று நீலமா நீலமிவை யணிவோர் வானோர்
நவையறுசீர் மானவரிக் நகைநீலஞ் சாதியினா லுவே றந்தக்
கவலரிய வெள்ளைசிவப் பெரிபொன்மை கலந்திருக்கிற் கரிதாய் முற்றுந்
தவலரிதா யிருக்கிவிரு பிறப்பாளர் முதன்முதனாற் சாதிக் காகும்.

(இ-ள்.) அவ்விந்தியங்கள் சிந்திய இடங்களிற் றோன்றும் நீலங்கள் மகாநீலங்களாம். இவற்றைத் தரிப்போர் தேவரும் குற்றமற்ற மானுடருமாம். இந்த ஒளியையுடைய மாநீலம் சாதியால் நால்வகைப்படும். அழகு பற்றுதலில்லாத வெண் மை செம்மை விளங்குகின்றபொன்மை சிறிது கலந்திருக்கினும் முழுதுங்கரிதாயும் அழிதலில்லாததாயுமிருந்தால் பிராமணர் முதலாயுள்ள முதன்மைதங்கியநான்குவரு ணத்தாருக்கும் பயன்படும். எ-று.

"கவ்வல்" என்றது இடைக்குறையாய்க் கவல் என நின்றது. கவ்வல் என் றதை ஏனைய சிவப்பு எரி பொன்மையினுங் கூட்டுக."எரிபொன்" என்றது ஏடுத் துச் சுத்திசெய்யப்படாது எரியிலிடப்பட்டமாசுண்ட பொன் என்க. (எஉ)

இலங்கொளிய விந்நீல மெய்ப்படுப்போர் மங்கலஞ்சேர்ந் திருப்பா ரேனை
யலங்குகதிர் நீலத்திற் பெருவிலையா யிரப்பத்தி னளவைத் தாயுந்
துலங்குவதான் பாற்கடத்தி னூறுகுணச் சிறப்படைந்து தோற்றுஞ் சோதி
கலங்குகட லுடைவைப்பி லரிதிந்த விந்திரன்பேர்க் கரிய நீலம்.

(இ-ள்.) விளங்கும் ஒளியையுடைய இந்த இருவகை நீலத்தைத் தேகத்தி லணிவோர் மங்கலகரத்தையடைந்து வாழ்வார்கள். (இந்திரநீலமானது) பிரகாசிக்கி

ற இரண்டத்தையுடைய ஏனைநீலங்களிலும், பதினாயிரமடங்கு பெருவிலை யுடைத்தா யும், (மாநீலமானது) ஆவின்பால் நிறைந்த குடத்திலிட்டால் (அப்பாலின் நிறத்தை க்கீழ்ப்படுத்தி) நூறுமடங்கு நீலகுணம் மேம்பட்டுஞ் சோதிவிளக்கும். (இந்திரதனு சின் கருமைபோலக்) கருநிறம் பொருந்திய இந்தஇந்திரநீலம் (அலைமுதலியவற்றாற்) கலங்குங் கடல்சூழ்ந்த நிலவுலகிலரிது. எ-று.

மேல்வகுத்த முறையே இருவகை நீலத்தையும் இதிற்றொகுத்து அவற்றி னியல்பு விளக்கினர். (௭௩)

மைந்துறுசெம் மணிமுத்து வாள்வயிரம் பச்சையொளி வழங்கு நீல
மைந்திவைமேற் கோமேத முதற்பவள மீறாக வறைந்த நான்கு
நந்தொளிய வேனுமவை சிறுவேட்கை பயப்பவழ னருசெங் குஞ்சி
வெந்தறுகண் வலனிணங்கள் சிதறுமிடைப் படுவனகோ மேத மென்ப.

(இ-ள்.) வன்மைமிக்க மாணிக்கம் - முத்து - ஒள்ளிய வைரம் - மரகதம்- ஒளிவீசும் நீலம் என்னும் இவ்வைந்திற்குமேல், கோமேதமுதற் பவளமீறாகச் சொல் லும் நான்கு ரத்தினங்களும் பேரொளியுடையனவாயினும், (அவை) சிறிய விலை யுள்ளன. நெருப்புப்போல் விளங்குஞ் செவந்த சிகையையும், கொடிய கோபக்கண் ணையுமுடைய வலாசுரனுடைய நிணங்கள் சிந்திய விடங்களில் உண்டாகும் இரத்தி னங்கள் கோமேதமென்று சொல்லுவர். எ-று.

கோமேதமுதற்பவளமீறாக நான்கு—கோமேதம் - புருடராகம்-வைடூரியம் பவளம் எனப்படும். (௭௪)

உருக்குநறு நெய்த்துளிதேன் றுளிநல்லான் புண்ணியநீ ரொத்துச் சேந்து, செருக்குபசும் பொன்னிறமும் பெற்றுமெலி தாய்த்தூய்தாய்த் திண்ணி தாகி, யிருக்குமது தரிக்கினிருட் பாவம்போம் பரிசுத்தி யெய்தும் வென்றித், தருக்குவலன் கபம்விழுந்த விடைப்புருட ராகமொளி தழையத் தோன்றும்.

(இ-ள்.) உருக்கியவாசனையுடைய நெய்த்துளியும், தேன்றுளியும், நல்ல புண்ணியரூபமாகிய கோசலமும் (ஆகிய இவற்றை) ஒத்து, செவந்து உயர்ந்த பசிய பொன்னிறமும்பெற்று, வழுவழுப்புடையதாய்க் களங்கமில்லாததாய்க் கனமுடைய தாயிருக்குங் கோமேதத்தைத் தரித்தால், கருமையாகிய பாவம்போம். புனிதமுண் டாகும். வெற்றிச்செருக்குவாய்ந்த வலாசுரனுடைய கப்மானது விழுந்தவிடத்திற் புருடராகம் ஒளிபெருகத் தோன்றும். எ-று.

கோமூத்திரத்தைக் கங்கையாகக் கூறப்படுதலின் "ஆன்புண்ணியநீர்" என் றார். "செருக்குபசும்பொன்" என்றது இறுமாத்த பசும்பொன் எனினுமொக்கும். அப்பொழுது உடையவன் றொழிலை உடைமைமேலேற்றிக் கூறியதாகக் கொள்க.

தாழ்ந்தபிலத் திழிந்தெரிபொற் கண்ணவுண னுயிர்குடிக்குந் தறுகட் பன்றிப், போழ்ந்தமுழை வாய்திறந்து திசைசெவிடு படநகைத்துப் பொன் போற்கக்கி, வீழ்ந்தகபம் படுதீவிற் படுமுச்சி வட்டமாய் மெலிதாய்ப் பொ ன்போற், சூழ்ந்தொளிவிட் டவிர்தழல்போற் றெளிவெய்தி மனங்கவர்ந்து தோற்றஞ் செய்யும்.

(இ-ள்.) ஆழ்ந்துள்ள பாதலத்திற் (பூமியைச் சுருட்டிக்கொண்டு)போயொ ளித்த இரணியாக்ஷனுடைய உயிர் குடித்த அஞ்சாமையையுடைய வராகமானது பிள ந்த குகைபோன்ற வாயைத் திறந்து எட்டுத்திசைகளுஞ் செவிபட வீராட்டகாசஞ் செய்து கக்குதலால், பொன்போற் சிதறிவிழுந்த கபம்பொருந்திய தீபத்திலே [ஒரு

விதம்) தோன்றும். (அது) உச்சியில் வட்டமாய் மிருதுவாய், பொன்போலும் நெருப்புப்போலுஞ் சூழ ஒளிவீசி, சருச்சரையகன்று (கண்டோருடைய) மனதைக் கவர்ந்து விளங்கும். எ-று. (௭௬)

இந்தமணி பாரியாத் திரகிரியிற் கொடுமுடியா யிலங்குந் தெய்வ
மந்தரமால் வரைப்புறஞ்சூழ் மேகலையா மயனிந்த மணியி ஞலே
யந்தரநா டவனகரு மரசிருப்பு மண்டபமு மமைத்தா னிந்தச்
சந்தமணி தரிப்பவரோ தரியார்வெந் நிடவாகை தரிக்க வல்லார்.

(இ-ள்.) இவ்விரத்தினம் பாரியாத்திரகிரியின் சிகரமாகப் பிரகாசிக்கும். தெய்வத்தன்மை வாய்ந்த பெரிய மந்தரமலையின் புறத்திற் சூழ்ந்த மேகலையாகும். மயன் (என்னும் தச்சன்) இந்த ரத்தினத்திஞல் இந்திரனுடைய நகரத்தையும் அவன் கொலுவிருக்கைமண்டபத்தையும் நிருமித்தான். இந்த அழகிய புருடராகத்தை அணிபவர்களே பகைவர் புறங்கொடுக்க வெற்றிமாலையணியவல்லவராவர். எ-று.

மேகலை - புறமாயுள்ள ஓரிடம். இந்திரன் கொலுமண்டபத்தைச்சுதன்மை என்பர். பாரியாத்திரமென்றது குமரிகண்டத்திலுள்ள ஏழு கிரிகளிலொன்று. (௭௭)

வலன்மயிராம் வயிரேயே மிளாவிருத கண்டத்தில் வந்து தோன்றிப்
பலர்புகழுங் கோரக்க மகதஞ்சிங் களமலயம் பார சீக
மிலகுதிரி கூடாதி தேயங்கள் பிறதீப மெங்குந் தோற்று
மலைகடலும் படுமிறுதிக் காரிடிக்கும் போதுநிற மதற்கியா தென்னில்.

(இ-ள்.) வலாசுரன் மயிராகிய வயிரேயம் இளாவிரதகண்டத்தின் (மேற்குத்திசையில்) வந்து தோன்றி யாவரும் புகழும் கோரக்கம்-மகதம்-சிங்களம்-பொதியமலை-பாரசீகம்-பிரகாசிக்கின்ற திரிகூடமுதலிய தேசங்களிலும் பிறதீபங்களாகிய எவ்விடத்துந் தோன்றும். ஊழிக்காலத்தில் அலைகளையுடைய சமுத்திரமும் ஓசை குன்றும்படி மேகங்கள் இடிக்கும் இடியிலுந் தோன்றும். அவ்வைரேயத்துக்கு நிறம் யாதெனில். எ-று.

பொன்மலையின்மேற்பாகமுற்றும் உதித்தலின் எல்லைகுறியாது இளாவிருதகண்டத்திலென்ஞர். இது அக்கார் இடிக்கும்போது ரோகணபர்வதத்திலு முதிக்கும். "அலைகடலும் படுமிறுதிக்கார்"-இறுதி யலைகடலும் படுங்கார் என மாற்றுக. (௭௮)

கழையிலைகார் மயிலெருத்தம் வெருகின்கண் ணிறத்ததாய்க் கனத்த தாகி
விழைவுதரு தெளிதர்கித் திண்ணியதாய் மெலிதாகி விளங்கு மீதி
லழகுபெற வலமிடமேல் கீழொளிவிட் டனமுறையே யறவோ ராதிக்
குழைவுறுநாற் சாதிகளாந் தினமிதனைப் பூசித்துத் தரிக்க சான்ஞேர்.

(இ-ள்.) மூங்கிலிலை - கரியமயிலின்பிடர் - பூனைக்கண் (ஆகிய இவற்றின்) நிறமுடையதாய், கனமுடையதாய், இச்சிக்கத்தக்க சருச்சரையகன்றதாய், வன்மையுடையதாய், மிருதுத்தன்மையாய் விளங்கும் இவ்வைரேயத்தில் அழகுபெற வலம் இடம் மேல் கீழ் (ஆகிய இடங்களில்) ஒளிவிடுந்தன்மை யுடையவை பிராமணர் முதலாகத் தழைத்த நான்கு வருணங்களாம். அறிவுடையோர் இவ்வைரேயத்தைத் தினமும் பூசித்துத் தரிக்கக்கடவர். எ-று.

வலத்தில் ஒளிவிட்டால் பிராமணசாதியும், இடத்தில் ஒளிவிட்டால் க்ஷத்திரியசாதியும், மேலே ஒளிவிட்டால் வைசியசாதியும், கீழே ஒளிவிட்டால் சூத்திரசாதியுமென்பர். (௭௯)

வலத்தவுணன் றசைவீழ்ந்த வழிபடுதுப் பயன்சந்தி வடிவ மாத்தென்,
புலத்தவலா விதிக்குமிடத் தவனுடன்மா சிழி புலத்தும் புயல்போல் வுண்

ணன், வலத்துமது கைடவனைக் குறைகுருதி வழிநிலத்து மகவான் வெற் பின், குலத்தைபிற கரிசோரி சிதறிடத்தும் வந்துகுடி கொண்டு தோன் றும்.

(இ-ள்.) வெற்றியையுடைய வலாசுரன் மாமிசம் விழுந்தவிடத்திற் பவளம் தோன்றும். பிரமதேவர் சந்திவடிவமாகப் பிதிரர்களைச் சிருட்டிக்கும்பொழுது அப் பிரமதேவர் தம் உடற்களங்கம்நீக்கியவிடத்திலும், மேகம்போலும் (கரிய) நிறமுடைய திருமால் வன்மையுடைய மதுகைடவரைச் சேதித்த உதிரஞ் சிந்தியவிடத்திலும், இந்திரன் மலைகளைச் சிறகறுத்த செந்நீர் சிதறியவிடத்திலும், (ஒருவகையாக) வந்து தோன்றிக் குடியேறிவிளங்கும். எ-று.

சந்திவடிவமாகத் தென்புலத்தவரை விதித்தமையை.

**கூர்மபுராணம் பலவகைத் தோற்றமுரைத்த அத்தியாயம்.**

"எண்ணு மேல்வை யுயர்பிதிர்க்க டோன்ற வெடுத்த வுடல்விடுத்தா
னண்ணு முடல முயர்சந்தி யென்ப நவின்ற விராசதத்தி
னண்ண லுருவ மெடுப்ப மக்க ளுதித்தா ராண்டவ் வுடல் விடுப்பத்
தண்ணங் கதிர்வெண் ணிலவாய ததுவே புலரிச்சந்தியுமே"—என்பதனுனுணர்க.

திருமால் மதுகைடவரைச் சேதித்தது.

ஒருகாலத்தில், விஷ்ணுமூர்த்தி திருப்பாற்கடலில் யோகநித்திரையி லிருக் கையில், பிரமதேவர் அவருடைய உந்திக்கமலத்தி லிருந்தனர். அப்பொழுது திருமா லின் இருசெவிகளினின்றும் மதுகைடவர் தோன்றி அண்டங்கள் நடுங்க வலவீத் துயர் செய்வதுகண்ட பிரமதேவர் இவர்கள் யாவரெனத் திருமாலை வினவ, அஞ்சாதே என்று விட்டுணு சிட்டுணு என்னு மிருவரைச் சிருட்டித்து அவர்களைச் சங்கரித்தனர் என்பதாம். (௨0)

அவ்வழியிற் படுபவள முருக்கம்பூப் பசுங்கிளிமூக் கலர்ந்த செவ்விச்
செவ்வரத்த மலர்கொவ்வைக் கனிபோலுங் குணங்குற்றந் திருகிக் கோட
லெவ்வமுறப் புழுவரித்தன் முகமொடிதல் பெரும்பாலு மிப்பூ ணேந்தல்
பெய்வளையார் தமக்கேயாந் தரிக்கின்மகப் பேறுமுதற் பேறுண் டாகும்.

(இ-ள்.) அந்நான்கிடங்களிற் றோன்றிய பவளத்தின் நிறம் முருக்கம்பூ - பச்சைக்கிளியின்மூக்கு - மலர்ந்த அழகுவாய்ந்த செவ்வரத்தமலர் - கொவ்வைக்கனி (ஆகிய இவற்றின்) நிறம்போலும் உள்ளது. திருகிக்கோணுதல் - குற்றம் பொருந்தப் புழுவரித்தல்-முகமொடிதல் (ஆகிய இவை) குற்றங்களாம். பெரும்பான்மையும் இப் பவளத்தாலான ஆபரணத்தை யணிதல் மாதர்கட்கே யுரியதாம். (அவர்கள்) அணிந் தால், புத்திரப்பேறு முதலிய பலனுண்டாகும். எ-று. (௨௧)

இரவியெதி ரொரியிறைக்குங் கல்லுமதி யெதிர்செழுநீ ரிறைக்குங் கல் லு, மூனையிடுமொன் பதிலொன்றி னுட்கிடையாய்க் கிடக்குமெனவொன்பா ன் வேறு,மரபுரைத்த வணிகரோ ருகியவா னவரோறு வடபா லேக்கிப், பரவி யிருந் தருச்சித்து மணிகைக்கொண் டெதிர்மதுரைப் பரனை நோக்கா.

(இ-ள்.) சூரியனுக்கெதிரே தீயைச்சொரியும் (சூரியகாந்தக்) கல்லும், சந் திரனுக்கெதிரே நீரைச்சொரியும் (சந்திரகாந்தக்) கல்லும் (ஆகிய இவை) முன்கூறிய நவரத்தினங்களில் ஒரு ரத்தினத்தின் உட்கிடையாக அடங்கி யிருக்குமென்று, வணிக ருள் ஆண்சிங்கமாகிய தேவர்சிங்கம், வெவ்வேறாகிய ஒன்பது வகை இரத்தினங்க

வின் மரபுகளைக் கூறி, வடதிசை நோக்கி யிருந்து இரத்தினங்களைப் பணிந்து அர்ச்சனைசெய்து கையிற்றாங்கி, மதுராபதியில் எழுந்தருளிய சுந்தரேசப் பெருமானை யெதிர்நோக்கி யருளி. எ-று.

இதுமுதல் இரண்டுபாடல்கள் குளகம்.

விலைபகருகையில் இரத்தின வர்த்தகர் கீழ்த்திசை நோக்கி யிருத்தலும், கொடுக்கையில் வடதிசை நோக்கியிருத்தலும் மரபு என்பர்.

உரையிடும் - உரைக்கும்; இதில் இடுபகுதிப்பொருள் விகுதி. (அஉ)

அஞ்சலிசெய் தகநோக்கா லிக்குமரர்க் களவிறந்த வாயுள் செல்வம்
விஞ்சுகவென் றளித்தருள விறைமகனும் விண்ணிழிந்த விமான நோக்கிச்
செஞ்சரணம் பணிந்திருகைத் தாமரையும் விரித்தேற்றான் செல்வ நாய்கர்
மஞ்சனையும் புடைநின்ற வமைச்சரையு நோக்கிமுக மலர்ந்து சொல்வார்.

(இ-ள்.) கைகுவித்து, கிருபாநோக்கத்தால் இவ்வரச குமாரனுக்குக் கணக்கில்லாத ஆயுளுஞ் செல்வமும் ஓங்குகவென்று கொடுத்தருள, அவ்வரசகுமாரனும் வானுலகிலிருந்து இறங்கிய (இந்திர) விமானத்தைப்பார்த்துச் சோமசுந்தரப்பெருமானுடைய செவந்த திருவடியை நமஸ்கரித்துத் தனது கைகளாகிய இரண்டு தாமரைகளையும் மலர்த்தி வாங்கினான். செல்வமிக்க வணிகராகவந்த சோமசுந்தரக்கடவுள், அரசகுமாரனையும் அவனருகிலிருந்த மந்திரிகளையும் பார்த்து முகமலர்ச்சிகொண்டு திருவாய்மலர்ந்தருளுகின்றார். எ-று.

மைந்தன் - மஞ்சன் ; போலி (அங)

இம்மணியா லிழைத்துநவ முடிசூட்டி யிச்சிங்க விளவே றன்ன
செம்மறனை யபிடேக பாண்டியனென் றியம்புமெனச் செம்பொன் றூக்கிக்
கைம்மறியில் வணிகருக்கு விலைகொடுப்பான் வருவார்முன் கருணை நாட்ட
மம்மகன்மே னிரப்பியிள நகையரும்பி நின்றாரை யங்குக் காணார்.

(இ-ள்.) இந் நவரத்தினங்களாலிழைத்துக் கிரீடஞ்சூட்டி, இந்த இளஞ் சிங்கவேறுபோன்ற இச்சிறுவனுக்கு அபிடேகபாண்டியனென்று பெயர் கொடுங்களென்று கூறியருள (நவரத்தினங்கள் விலையறுதி யின்மையால்) (தமது) திருக்கரத்திலேந்திய மானைமறைத்துவந்த வணிகராகியசோமசுந்தரக்கடவுளுக்கு, செம்பொன்னைத்துலையாற்றூக்கி விலைகொடுக்கவரும் மந்திரிமார்முன்பு, தமது கிருபாநோக்கத்தை அவ்வரசச்சிறுவன்பேரில் பரப்பிப் புன்னகைபூத்துநின்ற வணிகேசர் (அவ்விடத்திற்) காணாராயினர். எ-று. (அச)

ஓருருவாய் நேர்நின்ற வணிகேசர் விடையின்மே லுமையா ளோடு
மீருருவாய் முக்கண்ணு நாற்கரமு மஞ்சமர ரிறவா வாறு
காருருவா யெழுமிடறுங் காட்டித்தங் கோயில்புகக் கண்டா ரின்று
பாருருவாய் நின்றவணி கேசரிவ ரெனவேபின் பற்றிப் போவார்.

(இ-ள்.) எதிரிலே ஒரு திருவுருவாய்நின்ற வைசிய சிரேஷ்டர் (ஆகாயத்திலே) இடபாரூடராய் உமாதேவியாருடன் இருதிருவுருவாய், திரிநேத்திரங்களும், சதுர்ப்புஜமும் அஞ்சுகின்ற தேவர்கள் மரியாவாறு (ஆலாலவிடபானஞ் செய்ததால்) நீலநிறமாய் எழுங்கண்டமுந் தரிசனமளித்து, தமது திருக்கோயிலில் புகுதலைக்கண்டு இப்பொழுது (இந்தப்) பூமியிலே வைசிய சிரேஷ்டவடிவராய் நின்றவர் இவரென்றே (நிர்மாணித்து அரசகுமாரனும் மந்திரிமுதலாயினரும்) பின்றொடர்ந்துபோவாராயினர்.

இச்செய்யுள் எண்ணலங்காரம். (அரு)

தேன்செய்த கொன்றைநெடுஞ் சடையார்முன் றாழ்ந்தெழுந்து செங் கை கூப்பி, யான்செய்யுங் கைம்மாறு மெம்பிரான் கொன்றுண்டோ யானு மென்ன, தூன்செயுட லும்பொருளு முயிருமெனி னவையாவு முனவே யை யா, வான்செய்யு நன்றிக்கு வையகத்தோர் செய்யுங்கைம் மாறென் றுண் டோ.

(இ-ள்.) தேன்நிறைந்த கொன்றைமலர்மாலையணிந்த நீண்ட சடைமுடியையுடைய சோமசுந்தரப்பெருமானுடைய திருமுன்னர் நமஸ்கரித்து எழுந்து செவந்தகைகளைக் குவித்து, ஐயனே! அடியேன் தேவரீருக்குச் செய்யும் பிரதியுபகாரமாய் ஒன்றுள்ளதோ? அடியேனும் அடியேனுடைய மாமிசம் பொதிந்த உடலும், பொருளும், உயிருமுளவெனின், அவையாவும் (அநாதியே) உன்னுடையனவே! மேகமானது செய்யும்உதவிக்கு உலகத்தார்செய்யும் பிரதியுபகாரமொன்றுஇருக்கின்றதோ? (இல்லை.) எ-று.

உன என்றது பொருளடியாகப்பிறந்த பலவின்பாற்படர்க்கைக்குறிப்பு வினைமுற்று. (அசு)

என்னுமுன் வழுத்தலுறும் விறன்மாறன் கோக்கொழுந்தை யிகல்வேல்விந்தை, மன்னுகு மிவற்குமன வாக்கிறந்த பூரணமா மதுரை நாதன், பொன்னுரு மணிமகுடஞ் சூடமணி நல்குதலாற் புவிய னேகம், பன்னாளு முறை புரியத் தக்கதென வாழ்த்தினர் பல்சான் றோரும்.

(இ-ள்.) என்றுகூறித் திருமுன்னின்று பணிந்து துதிக்கும் வெற்றிபொருந்திய வீரபாண்டியனுடைய இளங்குமரனும், போர்செய்யும் வேற்படை யேந்திய விசயலக்ஷுமியின் தலைவனுமாகிய இவ்வரசனுக்கு மனவாக்குகட் கதீதப்பட்ட பூரணமாகிய மதுராபுரியில் வீற்றிருக்கின்ற சோமசுந்தரக்கடவுள், பொன்னாற்செய்த (நவ) ரத்தினங்கள் பதித்த கிரீடஞ்சூட (நவ) ரத்தினங்களைத் தந்தருளினமையால், உலகமெல்லாம் எக்காலமும் மனுமுறைப்படி அரசுசெலுத்தக் கடவனென்று அறிவுமிக்க பல பெரியோர்களும் ஆசீர்வதித்தார்கள். எ-று. (அஎ)

ஏத்திவலங் கொண்டிருநான் கெட்பெர்தழுவப் பெற்றோங்கி யிருக்கு மட்ட, மூர்த்திவிடை யருள்பெற்று மூவாநன் மறையாசி முனிவர் கூறப், பார்த்திவன்றன் பொலன்மாட மனைபுகுந்தா னிறைமணிப்பண் பாயுங் கேள்விச், சாத்திரரு மந்திரரு மணிநோக்கி வியப்படைந்தார் சங்கை கூர்ந்தார்.

(இ-ள்.) தோத்திரஞ்செய்து பிரதக்ஷிணஞ்செய்து, எட்டியானைகள் சுமக்கப் பெற்ற (இந்திரவிமானத்தில் எழுந்தருளிய) அஷ்டமூர்த்தியாகிய சோமசுந்தரக்கடவுள் அருளும் விடையைப்பெற்று, அழியாத நல்லவேதங்களையுணர்ந்த முனிவர்கள் ஆசீர்வதிக்க, அரசிளங்குமரன் பொன்னாலாகிய (தனது) மேன்மாடம்பொருந்திய கோயிலுட்புகுந்தான். சிறந்த ரத்தின லக்ஷணங் கூறும் நூற்கேள்வியில் வல்லவரும் வேறுள்ள மந்திரிகளும் (கொண்டுவந்த) நவரத்தினங்களைக் கண்டு அதிசயித்தார்கள். (இவைமணிகளல்ல. சூரியன்முதலிய கோள்களோவென்று) சந்தேகப்பட்டார்கள்

### மேற்படி வேறு.

வேளென வந்த நாய்கர் சுந்தர விடங்க ராஞ
னாள்களுங் கோளும் பற்றி நவமணி யாக்கி னீரா
தாள்களுந் தோளு மார்புந் தரித்தநீ ணாக மீன்ற
வாள்விடு மணியோ வீந்தார் யாதென மதிக்கற் பாலேம்.

(இ-ள்.) முருகக்கடவுள்போல (அழகனாய்) வந்தருளிய வணிகர் சோமசுந்தரக்கடவுளேயாயின், நாள்களையுங் கோள்களையும் பற்றி நவரத்தினங்களாகச் செய்தனரோ? (தமது) திருவடிகளிலும் திருத்தோளிலும் திருமார்பிலும் (முறையே) அணியப்பெற்ற (சிலம்பும் வாகுவலயமும் மதாணியுமாகிய) நெடிய சர்ப்பங்கள் பெற்ற ஒளி சொரியும் இரத்தினங்களை ஈந்தருளினரோ? (இவற்றில்) யாதென்று அளவிட்டெக்கூறும் பகுதியுடையேம்! எ-று.

விடங்கர்-உளிநீக்க முடையவர். டங்கம்-உளி. நாள் என்றது அச்சுவினிமுதலிய இருபத்தேழு நக்ஷத்திரங்கள். கோள் என்றது சூரியன்முதலிய ஏழுகிரகங்கள்.

இச்செய்யுள் ஐயவணி (அக)

இந்திரக் கடவு ளூட்டு மிம்மணி யரிய வென்று
மந்திரக் கிழவர் நல்கி மயனினு மாண்ட கேள்வித்
தந்திரக் கனகக் கொல்லர்க் குவப்பன ததும்ப வீசிச்
செந்திரு மார்பி னூற்குத் திருமணி மகுடஞ் செய்தார்.

(இ-ள்.) இந்திரலோகத்திலும் இவ்விரத்தினங்கள் கிடைக்க வரியனவென்று மந்திரிகள்கொடுத்து, மயனைக்காட்டிலும் மாட்சிமைப்பட்ட சிற்பநூலில் வன்மையுடைய பொற்கொல்லர்க்கு வேண்டும் பொருள்களை அவாவறக்கொடுத்து, இலக்குமிவாழும் மார்பையுடைய அவ்வரசகுமாரனுக்குப் பொலிவமைந்த இரத்தினங்கள் இழைத்த கிரீடஞ் செய்வித்தார்கள். எ.று. (கூo)

மங்கல மரபான் மாலை மணிமுடி சூட்டி னூமஞ்
செங்கணை றுயர்த்த நாயகர் செப்பிய முறையால் வேத
புங்கவ ரிசைப்ப வீதி வலஞ்செய்து புனிதன் பாத
பங்கய மிறைஞ்சி வேந்தன் பன்மணிக் கோயி லெய்தா.

(இ-ள்.) (நூலிற்கூறிய) முறையால், நல்ல முகூர்த்தத்தில் மாலையணிந்த நவரத்தினங்களிழைத்த கிரீடத்தைச்சூட்டி அபிஷேக பாண்டியனென்று செவந்த கண்களையுடைய இடபக்கொடியை யுயர்த்திய வணிகேசராய்வந்த சோமசுந்தரப்பெருமான் திருவாய்மலர்ந்தருளிய முறைப்படி வேதமுணர்ந்த பிராமணர்கூற, (அரச) வீதியைப் பிரதக்ஷிணஞ்செய்து அச்சோமசுந்தரக்கடவுள் திருவடித்தாமரைகளைப் பணிந்து அவ்வபிடேகபாண்டியன் பலரத்தினங்கள் பதித்த (தனது) கோயிலினைச் சேர்ந்து. எ-று.

இதுமுதல் மூன்றுபாடல்கள் குளகம். (கூக)

போர்மகட் குறையு ளான புயத்தபி டேகத் தென்னன்
றேர்முதற் கருவித் தானைத் தெவ்வர்நீண் முடியெ லாந்தன்
வார்கழற் கமலஞ் சூட மனுமுறைப் பைங்கூழ் காக்கும்
காரெனக் கருணை பெய்து வையகங் காக்கு நாளில்.

(இ-ள்.) விஜயலக்ஷ்மிக்கு வாசஸ்தானமான தோள்களையுடைய அபிடேக பாண்டியன் இரதமுதலிய நால்வகைச்சேனையுமுடைய சத்துருக்களது நெடிய கிரீடங்களெல்லாந் தனது விளைந்த வீரக்கழலணிந்த பாததாமரைகளைச்சூட, மனுநூன்முறையே பசிய பயிரைக்காக்கும் மேகம்போல (உயிர்க்கூட்டத்தின்மேல்) கிருபைமாரி சொரிந்து உலகத்தைக் காத்துவருநாளில். எ-று. (கூஉ)

**எழுசீர்க்கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.**

தந்தைதன் காமக் கிழத்திய ரீன்ற தனயராய்த் தனக்குமுன் னவராய்,
முந்தைநா ளரசன் பொன்னறை முரித்து முடிமுதற் பொருள்கவர்ந் துட்